# ஆரணிய காண்டம்

(இரண்டாம் பகுதி)






அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

உ

கவிச்சக்கரவர்த்தி

# கம்பர்

இயற்றிய

# இராமாயணம்

## ஆரணிய காண்டம்

(இரண்டாம் பகுதி)




அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

1964

# உள்ளுறை

# கம்பராமாயணப் பதிப்பாசிரியர் குழு

---

தலைவர் :

பேராசிரியர், வித்துவான், திரு. கோ. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள், M.A., B.L.

உறுப்பினர்கள் :

பேராசிரியர், திரு. லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார் அவர்கள்

திருவாளர் பி. ஸ்ரீ. ஆச்சாரியார் அவர்கள்

" நீ. கந்தசாமிப் பிள்ளை அவர்கள்

" மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை அவர்கள்

" பு. ரா. புருஷோத்தம நாயுடு அவர்கள்

செயலாளர் :

திரு. கி. இராமாநுஜையங்கார் அவர்கள்

# FOREWORD

BY

DR. C. P. RAMASWAMI AIYER,
*Vice-Chancellor, Annamalai University*

---

The Annamalai University has undertaken the task of producing an authoritative edition of Kamba Ramayanam which is one of the peaks of the poetical achievement of the Tamil country. The volume under reference is the Second Part of the Aranya Kanda. Professor G. Subramania Pillai has contributed a prefatory note to the First Volume.

Following the practice established in previous issues, each Padalam is introduced by a short abstract of the contents including critical comments and appreciations. Every stanza is followed by a comprehensive commentary. As is well known, Dr. R. P. Setu Pillai did great service to the reading public by functioning as the General Editor until his lamented demise just before the appearance of the First Part of the Aranya Kanda. This University owes a great deal not only to Dr. Setu Pillai but to the Madura Tamil Sangam for giving access to precious manuscripts: and we are also indebted to the Tanjore Saraswathi Mahal Library authorities for similar assistance. The sympathetic patronage and financial assistance rendered by the University Grants Commission has placed the Tamil public under deep obligation to the Commission.

The present volume commences with the Padalam relating to Ravana's insistence on Maricha's decoying adventure which ended in his death. The differences in treatment between Valmiki Ramayana and Kamba Ramayana are pointed out not only in this Padalam but in all relevant places. It may be specifically noted that Lakshmana's offer to pursue Maricha is a special feature of Kamba Ramayana not contained in the Valmiki classic.

The next Padalam relates to Jatayu and his fatal fight with Ravana. This Padalam contains notable departures made by Kambar from Valmiki Ramayanam. It has been pointed out, for instance that Kambar discards the story of Ravana lifting up Sita bodily and suggests that Sita was never touched but that Ravana excavated the earth and bore Sita on the top of the mound thus made. Such a variation was, no doubt, due to sentiments of delicacy characteristic of a sophisticated and developed society. The Ayomukhi Padalam and the killing of Kabanda follow; and, in the latter, many descriptions illustrate the verbal mastery exhibited by Kambar, a Master of Tamil, who, here as elsewhere, demonstrates a marvellous faculty of uniting sense with sound.

A complete list of the manuscripts utilised in the preparation of the volume and an exhaustive catalogue of variant readings completes the volume which is a worthy companion to the earlier volumes issued by this University.

Professor G. Subramania Pillai has paid adequate and well-deserved tributes to Sri Ramanuja Aiyangar, Sri P. S. Ramanujachariar, Sri -Venkatrama Chettiar and Sri K. Ramachandran and others for their critical research and collation of several manuscripts; and, to them and to all others concerned in the publication of the Second Volume, it is the duty of the University, through me, to convey our sincere and appreciative thanks.

C. P. RAMASWAMI AIYER,

22—10—1964.

# பதிப்புரை

இதன்கண் மாரீசன் வதைப் படலத்துக்குத் திரு. தி. கி. இராமாநுஜையங்கார் அவர்களும், சடாயு வுயிர்நீத்த படலம், கவந்தன் வதைப் படலம் என்பவற்றுக்குத் திரு. செ. வேங்கடராமச் செட்டியார் அவர்களும், அயோமுகிப் படலத்துக்குத் திரு. க. வெள்ளை வாரணன் அவர்களும், சவரி பிறப்பு நீங்கு படலத்துக்குப் பேராசிரியர் திரு. கோ. சுப்பிரமணிய பிள்ளை அவர்களும் உரை வரைந்துள்ளார்கள்.

பதிப்பாசிரியர்.

ஸ்ரீ:

# 7. மாரீசன் வதைப் படலம்

இராமன் மாரீசனை வதைத்த செய்தி பேசுதலால் இது மாரீசன் வதைப் படலம் என்று பெயர் பெற்றது. 250–க்கும் மேற்பட்ட செய்யுள் கொண்டு நெடிது தொடர்ந்து செல்லும் இதனுள், படிப்போர்க்கு எளிதாக, நுவல் பொருள் கொண்டு, முதல் 22 செய்யுட்கள் இராவணன் அரசிருக்கைப் படலம் எனவும், 23 முதல் 82 வரையுள்ள பாடல்கள் அவைபுகு படலம் எனவும், 83 முதல் 172 வரையுள்ள கவிகள் மோகப் படலம் எனவும், 173 முதல் 253 முடியவுள்ள செய்யுட்கள் மாரீசன் வதைப் படலம் எனவும் சில பிரதிகளில் நான்கு தலைப்பிட்டு வரையப்பட்டுள்ளன. வேறு சில பிரதிகளில், இதன் முதல் 171 செய்யுட்கள் சூர்ப்பணகை சூழ்ச்சிப் படலம் எனவும், 172 முதல் 253 முடியவுள்ள செய்யுட்கள் மாரீசன் வதைப் படலம் எனவும் இரண்டு தலைப்பிட்டு வரையப்பட்டுள்ளன.

எனினும், நல்ல சுவடிகள் பலவற்றிலும், பழைய பதிப்புக்கள் பலவற்றிலும் உள்ளபடி 253 செய்யுட்களும் அடங்க மாரீசன் வதைப் படலம் என்ற ஒரு தலைப்பின்கீழ்ப் பதிக்கலாயிற்று.

மாரீசன் என்பான், சுந்தன் என்னும் இயக்கனுக்குத் தாடகை என்பாளிடம் பிறந்த புதல்வர் இருவருள் முன்னவன்; அகத்திய முனிவர் வெகுளியால் அரக்கனாகியவன்; இராவணனுக்கு மாமன் முறையினன்; மாயமும் ஆற்றலும் மிக்கவன். இவன் விசுவாமித்திர முனிவன் வேள்வியை அழிக்கப்புக்கு இராமனம்புகளுக்கு ஆற்றாமல் ஓடியுய்ந்த செய்தி பாலகாண்டத்துப் பேசப்பட்டது. பின், தன் தாய் தாடகையும் தம்பி சுபாகுவும் இராமனால் கொல்லப்பட்டமையால் சினந்து, இராமனைக் கொன்று தன் பழியினைத் தீர்த்துக் கொள்ள நினைந்து, துணைவர் இருவருடன் இராமன் வசிக்கும் தண்டக வனத்துள் மானுருவொடுபுக்கு, இராமனை முட்டிக்கொல்ல முயன்று, இராமனம்பால் துணைவர்பட்டுருளத் தான் மட்டும் உயிர்கொண்டோடிய செய்தி இக்காண்டத்தில் இராவணனிடம் இவன் கூறுதலால் புலனாகிறது. மூன்றும் முறை இவன் இராவணன் தூண்டுதலால் மாயமானுருவொடு இராமன்பால் வந்து மடிந்தமை இப்படலத்தால் பேசப்படுகிறது.

கரன் முதலியோர் இராமனால் மடிந்ததுகண்ட சூர்ப்பணகை, இராமன் மீது கொண்ட காதல் தணியாதவளாய் வருந்திச் சீதையைப்

பிரித்து இராமனை அடையும் நோக்குடன், சீதையின் அழகை இராவணனிடம் சொல்லி, அவனால் சீதையைப் பிரிவிக்க எண்ணி, இலங்கை அடைந்து, சீதையின் பேரழகை இராவணன்பால் விரித்துரைத்து, 'அவளை உனக்காக எடுத்துவர முயன்ற என்னை, அவள் கணவனாகிய இராமனும் அவன் தம்பி இலக்குவனும் என்பார் உறுப்பறையாக்கினர்' என்றும், 'என்னிலையறிந்து படையெடுத்துச் சென்ற கரன் முதலியோர் அவ்விராமனால் மாண்டொழிந்தனர்' என்றும் கூறுகிறாள்.

சூர்ப்பணகையால் சீதை தன்மை கேட்ட இராவணனுள்ளத்தில் காமம் மூள்கிறது. அந்நிலையில் இராவணன் தன் தங்கையான சூர்ப்பணகை உறுப்பறுப்புண்டதனையும், தம்பியரான கரன் முதலியோர் இறந்ததனையும் இராமன் பேராற்றலையும் மறந்து, சீதையை அடைய நினைகிறான். சீதையை வஞ்சனையால் கவர எண்ணிய இராவணன் மாரீசனை அடைந்து உதவி வேண்டுகிறான். மாரீசன், இராமனது தகைவரிய ஆற்றலையும், இராவணன் செயல் முறையன்றென்பதனையும், அதனால் அரக்கர்குல முழுதும் அழியும் கேடு விளையுமென்பதையும் விரித்துரைத்துச் சீதையைக் கவரும் நினைவை விடுமாறு கூறியும், இராவணன் இசையாது சினந்தமையால், அவன் இராவணன் வாளால் மடிதலினும் இராமனம்பால் முடிதல் நலமென்று நினைந்து, இராவணனுக்கு உதவி செய்ய இசைகிறான்; தன் மாய வித்தையால் பொன்மானாகி இராமனிருந்த சாலையை அணுகுகிறான். மலர் கொய்யச் சென்ற சானகி, பொன் மானைக் கண்டு வியந்து, இராமன்பாற் சென்று, தான் கண்ட மானின் இயல்புரைத்து, அதனைப் பற்றித் தருமாறு வேண்டுகிறாள்; சானகி சொற்கிசைந்து மானைப் பிடிக்கப் புறப்பட்ட இராமனிடம், இலக்குவன், 'இது மாயமான்; மாரீசனே இவ்வாறு வந்துள்ளான்; இதனைத் தொடர்தலால் ஏதம் விளையும்' என்று கூறித் தடுக்கிறான். இலக்குவன் கூறியதை உட்கொள்ளாமல் இராமன், 'யான் மானைப் பிடித்து வருகிறேன்; நீ சீதையைக் காத்திரு' என்று கூறி மானைத் தொடர்கிறான்; மாய மான் இராமன் கைக்கு அகப்படுவதுபோற் காட்டி, இராமனை நெடுந் தூரம் கொண்டு செல்லுகிறது. தன்னை இவ்வாறு பிரிவித்த அது மாயமானே என்று கண்ட இராமன் சினந்து அதன்மேல் வாளி ஏவுகிறான். வாளியால் தாக்குண்ட மாரீசன், சீதையைவிட்டு இலக்குவனையும் பிரிக்கும் நோக்குடன், இராமன் குரலால், 'ஆ! இலக்குமணா! ஆ சீதே' என்று நெடிது விளித்து வீழ்ந்து மடிகிறான். 'அக்குரல் கேட்ட சீதை வருந்துவாள்; அதனால் ஏதம் விளையுமுன் மீள்வது நலம்' என்று இராமன் தன் சாலையை நோக்கித் திரும்புகிறான் என்பது இப்படலத்தின் கதைச் சுருக்கம்.

இப்படலத்தின் முதலில் இராவணன் கொலுவிருந்த நிலை பேசப் படுகிறது. இது நாடகக் காட்சிபோல், அமைந்து, இராமனுக்குப் பகைவனாக வாய்த்த இராவணனுடைய ஒப்பாரை மிக்காரையில்லாத உயர்நிலை பலவற்றையும் படிப்போருள்ளத்திற் பதிவிக்கிறது.

அடுத்துள்ள, சூர்ப்பணகை வரவுகண்ட இலங்கை நகர மக்கள் நினைவும் பேச்சும் செயலும், அதிர்ச்சி தரும் நிகழ்ச்சி நேர்ந்த நிலையில் மக்கள் மனம் முதலியவை செயற்படும் இயல்பை விளக்குவனவாய்ச் சுவை விளைக்கின்றன.

அப்பால் உள்ளது, சூர்ப்பணகைக்கும் இராவணனுக்கும் இடையே நிகழ்ந்த உரையாடல். இதனுள் அமைந்த சூர்ப்பணகை பேச்சு, சொல்வன்மைக்கு ஓர் எடுத்துக் காட்டாகத் தக்கது. சூர்ப்பணகை பேச்சால் சீதையெழில் கேட்ட இராவணனுள்ளத்தே சீதையைப் பற்றி முளைத்தெழுந்த காதல், முற்றி முதிர்ந்து வேறு எதனாலும் தணியாமல் நீங்காமல் நின்று இராவணனைத் தன்னிலை மறந்து, அயலான் மனைவி என்று அறிந்தும் சீதையை வஞ்சனையால் கவரும்படி தூண்டியதென்றால், அது சூர்ப்பணகையின் சொல்வன்மையின் விளைவன்றோ!

இராவணன் காம நோயால் மெலிந்து வருந்தும் நிலையிலும், தேவர்களும் சந்திர சூரியர்களும் காலை மாலை முதலிய சிறு பொழுதுகளும் கார் முதலிய பருவங்களும் இராவணன் கட்டளைப்படி அவன் விரும்பியபொழுது தோன்றி நீங்கி அடங்கி ஒடுங்கி நடக்கும் நிலை இராவணன் பெருமையின் மேலெல்லையாய் அமைந்தது.

அப்பால், இராவணன் மாரீசன்பாற் சென்று உதவி வேண்டும் நிலையில் அவன் மறுத்துரைக்கும் உரைகளும், பொன்மான் வர, இராமன் சீதை விருப்பத்துக்கு இணங்கி, அதனைப் பிடிக்கப் புகுங்கால், இலக்குவன் இராமனிடம் கூறுவனவும் பின்விளைவறியும் பேரறிஞரும் நல்லமைச்சரும் பேசும் பேச்சாய்ப் பல அரிய நீதிகளை விளக்குவனவாய் உள்ளன.

எல்லாப் பெருமையும் உடையனாயினும் பிறன்மனை விழைந்து நெறி திறம்பிய இராவணன் நிலை,

> " எனைத்துணைய ராயினும் என்னாம்? தினைத்துணையுந்
> தேரான் பிறனில் புகல் " ,

என்னும் தமிழ் மறைக்கு எடுத்துக் காட்டாவது.

வான்மீகத்தில் மாரீசன் வதை, 31–ஆம் சருக்கம் முதல் 44-ஆம் சருக்கம் முடிய 14 சருக்கங்களில் 436 சுலோகங்களில் பேசப்பட்டது.

## வான்மீகத்தில் மட்டும் உள்ளவை

I. சூர்ப்பணகை, இலங்கைக்குச் சென்று, இராவணன்பால், தன் உறுப்பழிவும் கரன் முதலியோர்பட ஜனஸ்தானம் அழிந்ததும் கூறு முன், அகம்பனன் என்பான் ஓர் ஒற்றன் ஜனஸ்தானத்திலிருந்து சென்று, இராவணன்பால் ஜனஸ்தானத்தில் நிகழ்ந்தவற்றையெல் லாம் கூறக் கேட்ட இராவணன், சினந்து, இராமனைக் கொல்ல நினைந்து, புறப்பட, அகம்பனன், இராமலக்குவருடைய ஆற்றலை விரித்துரைத்து, 'யாவராலும் அவரைக் கொல்லல் இயலாது; ஆகவே அவர்பாற் போர்க்குச் செல்லல் ஆகாது' என்று தடுத்து, சீதாபிராட்டி யின் பேரழகினை எடுத்தியம்பி, 'வஞ்சனையால் இராமன் அறியாதவாறு அவளைக் கவர்ந்து வந்தால் அவள் பிரிவாற்றாது இராமன் இறந்து படுவன்' என, இராவணன் சீதையை வஞ்சனையால் கவர்தற்கு உதவிபுரியுமாறு வேண்டி மாரீசனை அடைய, இராவணன் கருத் தறிந்த மாரீசன் இராமலக்குவருடைய ஆண்மையினையும் நேர்மை யினையும் சீதாபிராட்டியின் கற்பின் மாண்பினையும் உரைத்து, 'இராம லக்குவருடன் பகை கொள்ளுதலும் சீதாபிராட்டியைக் கவர நினைத லும் நம் குலம் முழுவதும் அழியக் காரணமாகும். ஆதலால் இச் செயலைக் கைவிடுக' என, இராவணன் இலங்கைக்கு மீண்டமை.

II. இராவணன் வஞ்சனையால் சீதையைக் கவர்வதை அமைச்ச ரொடு சூழ்ந்து துணியாமல் தானே துணிந்தான் என்பது.

III. இராவணன், சூர்ப்பணகை முறையீட்டின் பின் மறுபடி மாரீசனை அடைதலும், அவன் சென்ற நெறியிடையுள்ள நாடு, நகர், மலை, ஆறு முதலிய விவரங்களும்.

IV. மாரீசன் தங்கித் தவம் புரிந்ததும் கடற்கரையில் உள்ளது மான சுபத்ரம் என்னும் ஆலமரத்தின் வரலாறு.

V. வாதாபி என்பான் அகத்தியரால் அழிந்தமை.

VI. மானைத் தொடரலுற்ற இராமன், சடாயுவையும் துணைக் கொண்டு சீதையைக் காத்திருக்கும்படி இலக்குவனிடம் கூறல்.

VII. மாயமானைக் கொன்ற பின் இராமன் வேறொரு மானைக் கொன்று அதன் இறைச்சியுடன் மீண்டமை.

இவை கம்பர் காவியத்தில் இல்லை.

மானைத் தொடரலுற்ற இராமன்பால் 'இது மாயமான்; மாரீசனே இவ்வாறு வந்துள்ளான்; இதனை ஆராயாது தொடரலாகாது. வேண்டுமேல் யானே இதனைத் தொடர்ந்து சென்று பற்றிக்கொண்டு வருவேன்; அன்றேல் கொன்று வருவேன்' என்று இலக்குவன் கூறுவதாகக் கம்பர் காவியத்திலுள்ளது, வான்மீகத்துள் இல்லை.

---

# 7. மாரீசன் வதைப் படலம்

சூர்ப்பணகை வந்தபொழுது இராவணன் இருந்த நிலை
3164-3186

3164. இரைத்தநெடும் படையரக்க ரிறந்ததனை
★ மறந்தனள்போ ரிராமன் றுங்க
வரைப்புயத்தி னிடைக்கிடந்த பேராசை
மனங்கவற்ற வாற்று ளாகித்
திரைப்பரவைப் பேரகழித் திருநகரிற்
கடிதோடிச் சீதை தன்மை
யுரைப்பெனெனச் சூர்ப்பணகை வரவிருந்தா
னிருந்தபரி சுரைத்து மன்னே.

இரைத்த நெடும் படை அரக்கர் இறந்ததனை
மறந்தனள், போர் இராமன் துங்க
வரைப் புயத்தினிடைக் கிடந்த பேர் ஆசை
மனம் கவற்ற, ஆற்றாள் ஆகித்
"திரைப் பரவைப் பேர் அகழித் திருநகரில்
கடிது ஓடிச் சீதை தன்மை
உரைப்பென்" எனச் சூர்ப்பணகை வர, இருந்தான்
இருந்த பரிசு உரைத்தும், மன், ஓ.

பொழிப்பு :—சூர்ப்பணகை, முழங்குகின்ற பெரிய படைகளையுடைய அரக்கர்கள் இறந்ததையும் நினைந்து வருந்தாதவளாய்ப் போரில் வல்ல இராமனுடைய உயர்ந்த மலைபோன்ற தோள்களிடத்துத் தான் கொண்ட மிக்க ஆசை மனத்தை வருத்தவும் அதனைத் தாங்காதவளாய், "அலைகளையுடைய கடலையே பெரிய அகழியாகக் கொண்ட இலங்கைக்கு விரைவில் ஓடிச்சென்று சீதையின் இயல்பை எடுத்துக் கூறுவேன்" என்று கருதி வருகையில் அங்குள்ளவனாகிய இராவணன் வீற்றிருந்த தன்மையைக் கூறுவோம்.

குறிப்பு :—அரக்கர் என்றது கரன் முதலியோரை. அவர் இறந்தமைக்கு வருந்தாதவளாய் என்பார், 'மறந்தனள்' என்றார். கரன் முதலியோருடன் போரிட்டதில் விளங்கிய இராமனது வீரம் மேலும் சூர்ப்பணகையின் ஆசையை வளர்த்தமையால், 'போரிராமன்' என்று குறிப்பிட்டார். இதனால் தனக்கு இடையூறாயிருந்த சீதைக்கு

எதிரான ஒரு சூழ்ச்சித் திட்டத்துடனேயே அரக்கி இலங்கைக்குச் சென்ருள் என்பது தெரியவரும். (1)

**3165.** நிலையிலா வுலகினிடை நிற்பனவு
நடப்பனவு நெறியி னீந்த
மலரின்மே னுன்முகற்கும் வகுப்பரிது
நுனிப்பதொரு வரம்பி லாற்ற
லுலைவிலா வகையுழந்த தருமமென
நினைந்தவெலா முதவுந் தச்சன்
புலனெலாந் தெரிப்பதொரு புனைமணிமண்
டபமதனிற் பொலிய மன்னே.

நிலை இலா உலகினிடை நிற்பனவும்
நடப்பனவும் நெறியின் ஈந்த
மலரின் மேல் நான்முகற்கும் வகுப்பு அரிது,
நுனிப்பது ஒரு வரம்பு இல் ஆற்றல்
உலைவு இலா வகை உழந்த தருமம் என,
நினைந்த எலாம் உதவும் தச்சன்
புலன் எலாம் தெரிப்பது, ஒரு புனை மணி
மண்டபம் அதனில் பொலிய, மன், ஓ.

பொ :—நிலையில்லாத உலகத்தில் அசையாப் பொருள்களையும் அசையும் பொருள்களையும் ஒழுங்காக உண்டுபண்ணிய, தாமரை மலரில் வீற்றிருப்பவனுகிய பிரமனுக்கும் படைக்க முடியாததும், நுட்ப மாகக் காணவல்ல ஒப்பில்லாத அளவற்ற வல்லமையால் தீங்கில்லாத விதத்தில் முயன்று செய்த தருமம்போல, நினைத்த பொருள்களையெல் லாம் நினைத்தபடியே உண்டாக்கவல்ல தெய்வத் தச்சனது அறிவு முழுவதையும் காட்டுவதுமான ஒப்பற்ற மணிகளால் அலங்கரிக்கப் பட்ட மண்டபத்தில், அது திகழ,

கு :—மண்டபமதனில் பொலிய, விளங்க, வயங்க, வயங்க, தோன்ற, குலவ, ஆர்ப்ப, துன்ன, சுற்ற, சேர, என, சூழ, ஏத்த, வார்க்க, சிந்த, துடைப்ப, ஈய, கூற, மாட்ட, நீட்ட, என்ன, வாழ்த்த, நோக்கி எனப் பின்வரும் செய்யுட்களோடு தொடர்ந்து 23-ஆம் செய் யுளில் இருந்தான் என்பது கொண்டு முடியும். (2)

இச் செய்யுளின் பின் 45, 52ஆம் சுவடிகளில் பின்வரும் மிகைச் செய்யுள் காணப்படுகிறது.

3165 (a) பரிக்குமண்டப் பரப்பெவைக்குந் தனியரசென்
றரன்கொடுத்த வரத்தின் பான்மை
உரைக்குவமை பெறக்குலிசத் தவன்முதலா
முலகிறைமைக் குரிய மேலோர்
இருக்குமரித் தவிசெவைக்கு நாயகமீ
தெனக்குறித்தங் கிமையோர் தச்சன்
அருக்கர்வெயில் பறித்தமைத்த வரிமுகத்தின்
மணிப்பீடத் தமர்ந்தான் மன்னே.

3166. புலியினத ளுடையானும் பொன்னுடை
புனைந்தானும் பூவி னானு
நலியும்வலத் தாரல்லர் தேவரினிங்
கியாவரினி நாட்ட லாவார்
மெலியுமிடை தடிக்குமுலை வேயிளந்தோட்
சேயரிக்கண் வென்றி மாதர்
வலியநெடும் புலவியினும் வணங்காத
மகுடநிரை வயங்க மன்னே.

புலியின் அதள் உடையானும், பொன் ஆடை
புனைந்தானும், பூவினனும்
நலியும் வலத்தார் அல்லர்; தேவரின் இங்கு
யாவர் இனி நாட்டல் ஆவார்?
மெலியும் இடை, தடிக்கும் முலை, வேய் இளந் தோள்,
சேய் அரிக்கண், வென்றி மாதர்
வலிய நெடும் புலவியினும் வணங்காத
மகுடநிரை வயங்க, மன், ஓ.

பொ :—புலித்தோலை உடையாகப் புனைந்த சிவபிரானும் பொன்னுடை புனைந்த திருமாலும் தாமரை மலரில் தோன்றிய பிரமனும் (இராவணனை) வருத்தும் ஆற்றலுடையரல்லர்; ஆதலால் ஒழிந்த தேவருள் எவர் அவ்வாற்றலுடையர் என்று சொல்லத்தக்கார்? (ஒருவரும் இல்லை. எனவே இராவணன் தேவரையும் மூவரையும் வணங்காமை பெறப்படும்.) மெலிந்த இடையினையும் பருத்த தனங்களையும் இளமூங்கில் போலும் தோளினையும் செவ்விய அரிபடர்ந்த கண்களையும் கொண்டு வென்றிகொள்ளும் மகளிருடைய வலிய பெரிய ஊடலிலும் வணங்காத (தலைகளிலுள்ள) கிரீட வரிசை விளங்கவும்.

கு :—அதள் - தோல். நலிதல் - வருத்துதல். வலம் - வலிமை. நாட்டுதல் - கூறுதல். மெலியும் இடை, தடிக்கும் முலை என்பவை முரண்டொடை. வேய் - மூங்கில். புலவி - ஊடல். நிரை - வரிசை· வயங்குதல் - விளங்குதல். இச்செய்யுள், இராவணன் வணங்கா முடியனாய் இருந்த பெருமித நிலையினை விளக்க எழுந்தது. வணக்கம் இருவகைப்படும். வீரம் முதலியவற்றால் மிக்கார் திறத்து அவற்றால் குறைவுடையார் மேற்கொள்வது ஒருவகை. ஒத்தநிலையினரான காதலனும் காதலியும் ஆகிய இருவருள் காதலி ஊடிய காலத்துக் காதலன் கூறும் நல்லுரை முதலியவற்றால் அவள் ஊடல் தணியாத போது, அவ்வூடலைத் தணிவிக்கக் காதலன் காதலியை வணங்கும் வணக்கம் மற்றொரு வகை. இவ்விருவகை வணக்கமும் இராவணன் பால் இல்லை என்றவாறு. இராவணன் தவஞ்செய்து வரங்கள் பெற்றுப் பேராற்றலுடையனாயினபின், தேவருள்ளும் தேவர் தேவ ரான மூவருள்ளும் அவனை வென்று வணங்குவிக்கும் ஆற்றலுடையார் இல்லை என்பது, ‘பொன்சென்றறியா வுவணத்தனிப் புள்ளினுக்கும், மின் சென்றறியா மழுவாளன் விடைக்கும் மேனாள், பின்சென்ற தல்லால் பெருகுஞ்சிறப் புற்ற ஞான்றும், முன்சென்றறியாதது மூவுல கத்தினுள்ளும்’ (யுத்த. நாகபாசப். 20), ‘இந்திரன் எனில் அவன் அரக்கர் ஏயின சிந்தையிற் சென்னியிற் கொள்ளும் செய்கையான்’ (அகத்தியப். 15) என வருவனவற்றாற் புலப்படும். எல்லாவகையானும் உயர்ந்த தேவருள்ளும் அவ்வாற்றலுடையார் ஒருவரும் இல்லை எனவே, அத்தேவரினும் தாழ்ந்த மற்றையோருள் அவ்வாற்றலுடை யார் ஒருவரும் இன்மை பெறப்படும். பின்னிரண்டடிகளுடன், ‘என் வாளினைத் தொழுவதல்லால் வணங்குதல் மகளிருடல் நாளினும் உளதோ?’ (யுத்த. இரணியன் வதைப். 146.) என்னும் இரணியன் கூற்றும் நோக்கத்தகும். இது சில சுவடிகளில் 4-ஆம் செய்யுளாகக் காணப்படினும், முடி, குண்டலம் தோளாரம் என்று நுவல்பொருள் முறைக்கிசைய 3-ஆம் செய்யுளாகக் கொள்ளலாயிற்று. (3)

**3167.** பண்டலங்கு திசைக்களிற்றின் பணைமருப்பி
னிணையொடியப் படர்ந்த பொற்றோள்
விண்டலங்க ளுறவீங்கி யோங்குதய
மால்வரையின் விளங்க மீதிற்
குண்டலங்கள் குலவரையை வலம்வருவா
னிரவிகொழுங் கதிர்சூழ் கற்றை
மண்டலங்கள் பன்னிரண்டு நாலைந்தாய்ப்
பொலிந்தவென வயங்க மன்னோ.

பண்டு அலங்கு திசைக் களிற்றின் பணைமருப்பின்
இணை ஒடியப் படர்ந்த பொன் தோள்
விண் தலங்கள் உற வீங்கி, ஓங்கு உதய
மால் வரையின் விளங்க, மீதில்
குண்டலங்கள், குல வரையை வலம் வருவான்
இரவி கொழுங் கதிர் சூழ் கற்றை
மண்டலங்கள் பன்னிரண்டும் நால் ஐந்து ஆய்ப்
பொலிந்த என வயங்க, மன், ஓ.

பொ :—திசையானைகளின் விளங்குகின்ற பருத்த இரண்டு கொம்பும் ஒடியும்படி பண்டு கிளைத்துப் பரவிய அழகிய தோள்கள், வானின் இடப்பரப்புக்களைப் பொருந்தப் பூரித்து ஓங்கிய உதயம் என்னும் பெயரையுடைய பெரிய மலைபோல விளங்க, அத்தோள்களின் மேல், மகாமேருவை வலம் வருகின்றவனை சூரியனுடைய சிறந்த கிரணங்களின் தொகுதி பரவிய பன்னிரண்டு மண்டலங்களும் இருபதாகி விளங்கினற்போலக் குண்டலங்கள் விளங்கவும்.

கு :—திசைக்களிற்றின் மருப்பு, அலங்கு மருப்பு, பணை மருப்பு, இணை மருப்பு என இயையும். மருப்பின் இணை ஒடியப் பண்டு படர்ந்த பொற்றோள் என்க. அலங்குதல் - விளங்குதல். குலவரை - சிறந்த மலை; மேரு. இராவணன் தோளுக்கு உதயகிரி உவமை. தோள்மேல் அசையும் காதணியான குண்டலங்களுக்குச் சூரிய மண்டலம் உவமை. குண்டலங்கள் இருபதாகலின், 'இரவிகொழுங் கதிர்சூழ்கற்றை மண்டலங்கள் பன்னிரண்டும் நாலைந்தாய்ப் பொலிந்த தென, வயங்க' என்றார். நாலைந்து - இருபது. வயங்குதல் - விளங் குதல். மன்னும் ஓவும் அசை. (4)

**3168.** வாளுலா முழுமணிகள் வயங்கொளியின்
றொகைவழங்க வயிரக் குன்றத்
தோளெலாம் படிசுமந்த விடவரவின்
படநிரையிற் றோன்ற வான்ற
நாளெலாம் புடைதயங்க நாமநீ
ரிலங்கையிற்றன் நலங்க விட்ட
கோளெலாங் கிடந்தநெடுஞ் சிறையன்ன
நிறையாரங் குலவ மன்னோ.

வாள் உலாம் முழு மணிகள் வயங்கு ஒளியின்
தொகை வழங்க, வயிரக் குன்றத்
தோள் எலாம் படி சுமந்த விட அரவின்
படம் நிரையின் தோன்ற, ஆன்ற
நாள் எலாம் புடை தயங்க, நாம நீர்
இலங்கையில் தான் நலங்க இட்ட
கோள் எலாம் கிடந்த நெடுஞ் சிறை அன்ன
நிறை ஆரம் குலவ, மன், ஓ.

பொ :—(தோளணிகளில் உள்ள) ஒளி தவழும் பெரிய மாணிக்க மணிகள் விளக்கம் மிக்க கிரணத் தொகுதிகளை வீசுதலால், வயிரமலை போலும் தோள்களெல்லாம் பூமியைத் தாங்கிய விடமுடைய ஆதிசேடனாகிய பாம்பின் பட வரிசைகளைப் போலத் தோன்றவும், நிறைந்த நட்சத்திரங்களெல்லாம் பக்கத்தே விளங்கும்படி தான் ஒரு சேரக் கொண்டுவைத்த கிரகங்களெல்லாம் கிடந்த அச்சந்தரும் கடலாற் சூழப்பட்ட இலங்கையிலுள்ள பெரிய சிறைக்கூடம் போலும் (சன்னவீரம் என்னும்) நிறைந்த இரத்தின மாலை விளங்கவும்.

கு :—வாள் - ஒளி. உலாவும் என்பது ஈற்றுமிசை உகரம் மெய் யொடுங் கெட்டு உலாம் என நின்றது. முழுமணி - பெரிய மணி - மாணிக்கம். தொகை - தொகுதி. படி - பூமி. விட அரவு என்றது ஆதிசேடனை. நிரை - வரிசை. ஆன்ற - நிறைந்த. நாள் - நட்சத் திரம். புடை - பக்கம். வயங்குதல் தயங்குதல் குலவுதல் என்பவை விளங்குதல் என்னும் ஒரு பொருளிற் பயின்றன. கோள் - கிரகம். நாமநீர் என்றது கடலை. வருந்திக் கொள்ளாது எளிதிற் கொண்டு என்பது பட 'வாரி' என்றார். கோள் - நவக்கிரகங்கள். சிறை - காவற் கூடம். தான் வாரியிட்ட கோள் எலாம் நாள் எலாம் புடை தயங்கக் கிடந்த இலங்கையில் நெடுஞ்சிறையன்ன ஆரம் என இயையும். 'வாளுடைத் தடக்கையன் வாரிவைத்தவெங் கோளுடைச்சிறையி னன்' (சடாயுவுயிர்நீத்த. 47) என்று பின்னும் கூறுவர். ஆரம் - சன்னவீரம் என்னும் வெற்றி மாலை. 'சன்னவீரத்த கோவை வெண் டரளம் ஊழியினிறுதியிற் றனித்த, பொன்னெடு வரையிற் றெத்திய கோளும் நாளுமொத் திடையிடை பொலிய' (சுந்தர. 314) என்பர் பின்னும். இராவணனுக்கு ஆதிசேடனும், அவன் தோள்களுக்கு ஆதிசேடனுடைய பட வரிசையும், அவன் தோளணிகளிலுள்ள மணிகளுக்கு ஆதிசேடனுடைய படவரிசைகளிலுள்ள மணிகளும், இராவணன் தோளிலணிந்த வெற்றி மாலையாகிய சன்னவீரத்துக்கு இலங்கையிலுள்ள சிறைக்கூடமும், அம்மாலையிலுள்ள நவமணிகளுக்கு இலங்கைச் சிறைக்கூடத்துக் காவலில் வைக்கப்பட்ட நவக்கிரகங் களும் உவமை. நான்காம் பாடலில் குண்டல வருணனையில்,

அதற்குறுப்பான தோளின் மேற்பகுதியும் பேசப்பட்டது. இச்செய்யுளில் சன்னவீரம் என்னும் வெற்றிமாலை வருணனையில் அம்மாலையணிந்த நீண்டதோளும் பேசப்பட்டது, என்று கொள்ளல் தகும். இராவணன் கோள்களை யெல்லாம் வென்று சிறையிட்டது, அவன் திக்குவிசயஞ் செய்த காலத்து நிகழ்ந்தது. (5)

இச்செய்யுளின் பின் 45, 52 ஆம் சுவடிகளில் காணப்படும் மிகைப் பாடல்கள் வருமாறு:—

3168 (a) பொருப்பினையுங் கடந்தபுயப் பரப்பினிடைப்
பொழிகதிரி னொளிகுலாவிப்
பரப்புமிருட் குறும்பெறிந்த பகலொளியுங்
கெடத்துரந்து பருவமேகத்
துருப்பயிலிந் திரநீலச் சோதிதனைத்
துலகமெலா முவந்து நோக்கத்
திருப்பயிலுத் தரிகமொடு செறிவாகு
வலயநிரை திகழ மன்னே.

3168 (b) இலங்குமர கதப்பொருப்பின் மருங்குதவ
ழிளங்கதிரின் வெயில்சூழ்ந் தென்ன
அலங்குசெம்பொ னிழைப்பயிலு மருந்துகிலிற்
பொலிந்தவரைத் தலத்தின் மீது
நலங்கொள்சுடர்த் தொகைபரப்பு நவமணிப்பத்
தியினிழைத்த நலமார் கச்சுத்
துலங்கவசைத் ததிற்சுரிகை யுடைவடிவாள்
மருங்கினிடைத் தொடர மன்னே.

3168 (c) வானுல களிக்கும் புரந்தரனாதி
மருவுமெண் டிசைப்படு நிருபர்
ஆனவர்தமது புகழெலா மொருங்கே
யன்னமென் புள்ளுருத் தாங்கித்
தானிடை விடாது தசமுகத்தரக்கன்
பதத்திடை தாழ்ந்துதாழ்ந் தெழல்போல்
பானிறக் கவரி மயிர்க்குலங்கோடி
பாங்கினிற் பயின்றிட மன்னே.

3168 (d) தேவகன்னியர்க ளியக்கர்தங் குலத்துத்
தெரிவையர் சித்தர்மங் கையர்கள்
மேவருந்திறல்சேர் நாகர் மெல்லியர்கள்
விளங்குகந் திருவர்மேல் விஞ்சைக்

காவலர்குலத்தில் தோன்று கன்னியர்க
ளாதியாய்க் கணிப்பில்பல் கோடிப்
பாவையரெவரும் பாங்குற நெருங்கிப்
பலாண்டிசை பரவிட மன்றே.

3169. ஆய்வரும் பெருவலி யரக்க ராதியோர்
★ நாயகர் நளிர்மணி மகுட நண்ணலாற்
றேய்வுறத் தேய்வுறப் பெயர்ந்து செஞ்சுட
ராய்மணிப் பொலன்கழ லடிநின் றார்ப்பவே.

ஆய்வு அரும் பெருவலி அரக்கர் ஆதியோர்
நாயகர் நளிர் மணி மகுடம் நண்ணலால்,
தேய்வு உறத் தேய்வு உறப் பெயர்ந்து, செஞ் சுடர்
ஆய் மணிப் பொலன் கழல் அடி நின்று ஆர்ப்பவே.

பொ :—சிவந்த ஒளியினையுடைய சிறந்த மணிகள் பதிக்கப்பட்ட பொன்னாற் செய்யப்பெற்ற வீரக்கழல், ஆராய்ந்து இவ்வளவிற்றென்று வரையறுத்தற்கரிய பேராற்றல் வாய்ந்த அரக்கர் முதலியோருடைய தலைவர்களின் பெருமை பொருந்திய மகுடங்கள் பொருந்துதலால் தேயத்தேய அசைந்து அடிகளில் நின்று ஒலிக்கவும்.

கு :—கழல், மகுடம் நண்ணலால் பெயர்ந்து அடிநின்று ஆர்ப்ப என இயையும். நண்ணுதல் - பொருந்துதல்=உராய்தல். நளிர் - பெருமை. பெயர்தல் - அசைதல். ஆர்த்தல் - ஒலித்தல். இராவணன் அரக்கனாதலின் அவனைக் காணவருவோருள் அரக்கரை முற்கூறினர். ஆதியோர் என்றதனால் அமரர் அசுரர் இயக்கர் கின்னரர் சித்தர் முதலியோர் குறிக்கப்பட்டனர். (6)

3170. மூவகை யுலகினு முதல்வர் முந்தையோ
ரோவல ருதவிய பரிசி னோங்கல்போற்
றேவரு மவுணரு முதலி னோர்திசை
தூவிய நறுமலர்க் குப்பை துன்னவே.

மூவகை உலகினும் முதல்வர் முந்தையோர்,
ஓவலர் உதவிய பரிசின் ஓங்கல் போல்,
தேவரும் அவுணரும் முதலினோர் திசை
தூவிய நறுமலர்க் குப்பை துன்னவே.

பொ :—மூன்று வகையான உலகங்களிலும் உள்ள தலைவர் (ஒருவரின் ஒருவர்) முற்பட்டவராய் ஒழியாது (நின்று) (கப்பமாகக்) கொடுத்த கொடைப் பொருளால் உயர்ந்த மலைகளைப்போலத் தேவர்களும் அசுரர்களும் முதலியோர் திசைதொறும் (நின்று) இவன்மேல் தூவிய நல்ல பூக்குவியல்கள் நெருங்கவும்.

கு :—மூவகையுலகென்றது மண் விண் பாதலம் என்பவற்றை. ஒவுதல்-ஒழிதல். உதவுதல்-கொடுத்தல். பரிசு - கொடைப்பொருள். ஓங்கல் - மலை. அவுணர் - அசுரர். துன்னுதல் - நெருங்குதல். மூவகையுலகிலுள்ள தலைவர்களும் முற்பட்டு வழங்கிய கொடைப் பொருளினால் (ஓங்கிய) மலைகள் போலத் தேவரும் அவுணரும் ஆதியோர் திசைதொறும் நின்று இராவணன்மேல் தூவிய நறுமணமலர்க் குவியல்கள் ஓங்கி உயர்ந்த தோற்றத்தனவாய் நெருங்கி நிறைந்தன என்றவாறு. (7)

45, 52 என்னும் சுவடிகளில் இச்செய்யுளின் பின் காணப்படும் மிகைப்பாடல்கள் வருமாறு:—

3170 (a) தண்கதிர் பொழியுமோர் தவள மாமதி
விண்பிரிந் திருநிலத் திருந்து வேறுவே
றெண்கடந் துருவெடுத் திருளை யோட்டல்போல்
வெண்குடைத் தொகைபல கோடி மேவவே.

3170 (b) ஏவலிற் புரிதொழி லெவையும் செய்து செய்
தோவிலர் துயர்க்கடற் கொழிவு காண்கிலர்
மேவரும் பெரும்பயம் பிடித்து விண்ணவர்
தாவினர் தலைத்தலைத் தாழ்ந்து நிற்கவே.

**3171.** இன்னபோ திவ்வழி நோக்கு மென்பதை
யுன்னலர் கரதலஞ் சுமந்த வுச்சியர்
மின்னவிர் மணிமுடி விஞ்சை வேந்தர்க
டுன்னினர் முறைமுறை துறையிற் சுற்றவே.

இன்ன போது இவ்வழி நோக்கும் என்பதை
உன்னலர், கரதலம் சுமந்த உச்சியர்,
மின் அவிர் மணி முடி விஞ்சை வேந்தர்கள்
துன்னினர் முறை முறை துறையில் சுற்றவே.

பொ :—மின்போல் விளங்குகின்ற மணிகள் பதித்த மகுடந்தரித்த வித்தியாதர அரசர்கள், (இராவணன்) இன்ன சமயத்தில் இந்தப்

பக்கம் நோக்குவான் என்று அறியாதவராகித் தலையில் (குவித்துத்) தாங்கிய கைகளையுடையராய் ஓலக்க மண்டபத்துள் (வகுத்த) தானங்களில் வரிசை வரிசையாக நெருங்கிச் சூழவும்,

கு :—விஞ்சை வேந்தர்கள் உன்னலர் உச்சியர் துன்னினர் சுற்ற என இயையும். விஞ்சை வேந்தர், தாங்கள் வணங்குங்கால் இராவணன் தங்களை நோக்குதலே தங்கள் பேருகக் கருதி, அவன் தங்களை எப்பொழுது நோக்குவான் என்பது தெரியாமையால் கரதலஞ்சுமந்த வுச்சியராயினர். கரதலம் சுமந்த உச்சி என்பதனை உச்சிச் சுமந்த கரதலம் என மாற்றுக; இது வணக்க நிலை குறிக்கும். உன்னல் - அறிதல். கரதலம் - கை. உச்சி - தலை. துன்னுதல் - நெருங்குதல். துறை-(அவரவர்க்கு) வகுத்ததானம். உன்னலர், உச்சியர், துன்னினர் என்பவை முற்றெச்சம். (8)

**3172.** மங்கையர் திறத்தொரு மாற்றங் கூறினுந்
தங்களை யாமெனத் தாழுஞ் சென்னிய
ரங்கையு முள்ளமுங் குவிந்த வாக்கையர்
சிங்கவே றெனத்திறற் சித்தர் சேரவே.

மங்கையர் திறத்து ஒரு மாற்றம் கூறினும்,
தங்களை ஆம் எனத் தாழும் சென்னியர்,
அங்கையும் உள்ளமும் குவிந்த ஆக்கையர்,
சிங்க ஏறு எனத் திறல் சித்தர் சேரவே.

பொ :—ஆண்சிங்கம் என்று சொல்லத்தக்க வலிமையுடையரான சித்த வேந்தர்கள், (இராவணன் குற்றேவல்) மகளிர்பால் (ஏதேனும்) ஒரு சொல்லைச் சொல்லினும், (அது) தங்களைக் குறித்துச் சொல்லியதாகுமென்று வணங்கும் தலையினராய், அழகிய கையும் மனமும் குவிந்த உடலுடையராய்த் திரளவும்.

கு :—சித்தர், சென்னியர், ஆக்கையர், சேர என இயையும். மாற்றம் - சொல். தாழ்த்தும் சென்னியர் என்னுது, தாழும் சென்னியர் என்றது அவர்கள் நினைத்துத் தாழ்த்தும் முன்பே, அவர் தலைகள் தாமாகவே தாழ்தலைக் குறித்தது. அங்கை குவிதல் - வணக்கங் குறித்தது; உள்ளங் குவிதல் அச்சங் குறித்தது. ஆக்கை - உடல். ஏறு - ஆண். திறல் - வலிமை. முன்பாட்டில் விஞ்சை வேந்தர் என்றதற்கு இசைய இங்கே சித்தர் என்பதற்குச் சித்த வேந்தர் என்று பொருள் கொள்ளலாயிற்று. பின்வரும் கின்னரர் உரகர் என்பவற்றுக்கும் இவ்வாறே கின்னர வேந்தர், உரகவேந்தர்

என்று பொருள் கொள்ளல் தகும். சித்தருடைய பண்டை நிலை கொண்டு சிங்கவேறு உவமை கூறப்பட்டது. (9)

3173. அன்னவ னமைச்சரை நோக்கி யாண்டொரு
நன்மொழி பகரினு நடுங்குஞ் சிந்தைய
ரென்னைகொல் பணியென விறைஞ்சு கின்றனர்
கின்னரர் பெரும்பயங் கிடந்த நெஞ்சினர்.

அன்னவன் அமைச்சரை நோக்கி, ஆண்டு ஒரு
நல் மொழி பகரினும் நடுங்கும் சிந்தையர்,
"என்னைகொல் பணி?" என இறைஞ்சுகின்றனர்
கின்னரர், பெரும் பயம் கிடந்த நெஞ்சினர்.

பொ :—மிக்க அச்சம் தங்கிய மனமுடைய கின்னர வேந்தர்கள், இராவணன் அங்கே அமைச்சரை நோக்கி ஒரு நல்ல சொல்லைச் சொன்னாலும், நிலைகெட்ட அறிவினராய், (அமைச்சரை நோக்கி வேந்தன் இடும்) கட்டளை யாது? என்று வணங்குகின்றவராய்(ச் சூழவும்)

கு :—கின்னரர், நெஞ்சினர், சிந்தையர், என்னைகொல் பணி? என இறைஞ்சுகின்றனர் (சேர) என இயைக்க. அன்னவன் என்றது இராவணனை. நடுங்குதல் - தடுமாறுதல். சிந்தை - அறிவு (சி. சி. பாயிரம். விநாயகர் துதி. சிவஞான.) முன்னும் பின்னும் உள்ள பாடல்கள் சேர, சூழ என எச்சவாய்பாட்டால் முற்றி நிற்க, இச்செய்யுள் இறைஞ்சுகின்றனர் என முற்றுச் சொல்லால் முற்றி நிற்பது பொருந்தாமையால், மேற்பாட்டிலிருந்து சேர என்னும் எச்சவாய்பாட்டுச் சொல் வருவித்துரைக்கலாயிற்று. இறைஞ்சுகின்றனர் என்பது இங்கு முற்றெச்சம். (10)

3174. பிரகர நெடுஞ்திசைப் பெருந்தண் டேந்திய
கரதலத் தண்ணலைக் கண்ணி னோக்கிய
நரகின ராமென நடுங்கு நாவின
ருரகர்க டம்மன முலைந்து சூழவே.

பிரகர நெடுந்திசைப் பெருந்தண்டு ஏந்திய
கரதலத்து அண்ணலைக் கண்ணின் நோக்கிய
நரகினர் ஆம் என நடுங்கும் நாவினர்,
உரகர்கள், தம் மனம் உலைந்து சூழவே.

பொ :—நாகராசர்கள், அடித்துத் தண்டித்தற்குரிய பெருந் திசையாகிய தெற்கிலுள்ள பெரிய தண்டம் என்னும் ஆயுதந் தாங்கிய கையினையுடைய பெரியோனான இயமனைக் கண்ணுற்கண்ட நரகலோக வாசிகளைப்போல மொழி குழறியவராய் மனவலிகெட்டுச் சூழ்ந்து நிற்கவும்.

கு :—பிரகரம் - அடி ; அது இங்கே தண்டித்தலை உணர்த்தியது. பாவிகளை ஒறுப்பவனாதலின் இயமனை 'பிரகர நெடுந்திசைப் பெருந் தண்டேந்திய கரதலத்து அண்ணல்' என்றார். ஆம் அசை, உரகர் - நாகர் ; பதினெண் கணங்களுள் ஒரு பிரிவினர். உரகர், நடுங்கும் நாவினராய் மனம் உலைந்து சூழ என்க. அச்சம் விளைத்தலால் இராவணனுக்கு இயமனும், அவன் அவைக்கு நரகமும் அஞ்சி, நாக்குழற நிற்றலால் உரகர்க்கு நரக வாசிகளும் உவமை. (11)

45, 52 என்னும் சுவடிகளில் இச்செய்யுளின் பின் காணப்படும் மிகைப் பாடல்கள் வருமாறு :—

3174 (a) வியக்குமுப் புவனமும் வெருண்டு மேலைநாள்
கயக்கிய கடுந்திறல் கருத்து ளேகிடந்
துயக்கிய பயத்தின ரவுண ரோடுமற்
றியக்கருந் திசைதிசை யிறைஞ்சி நிற்கவே.

3174 (b) பெருந்திசை யிரிந்திடப் பெயர்த்தும் வென்றநாள்
பருந்திறற் புயம்பிணிப் புண்டு பாசத்தால்
அருந்தளைப் படுந்துய ரதனுக் கஞ்சியே
புரந்தரன் களாஞ்சிகை யெடுத்துப் போற்றவே.

**3175.** திசையுறு கரிகளைச் செறுத்துத் தேவனும்
வசையுறக் கயிலையை மறித்து வானெலாம்
அசையுறப் புரந்தர னடர்த்த தோள்களின்
இசையினைத் தும்புரு விசையி னேத்தவே.

திசை உறு கரிகளைச் செறுத்துத் தேவனும்,
வசை உறக் கயிலையை மறித்து, வான் எலாம்
அசை உறப் புரந்தரன் அடர்த்த தோள்களின்
இசையினைத் தும்புரு இசையின் ஏத்தவே.

பொ :—திசையானைகளை வென்று, சிவபெருமானும் பழியுறும்படி கயிலாய மலையை மேல்கீழாகப் பெயர்த்துத் தேவர்களெல்லாரும் சோர்வுற இந்திரனை வென்ற தோள்களின் புகழைத் தும்புரு என்பான் இசைப் பாடலால் துதிக்கவும்.

கு :—செறுத்தல் - வெல்லுதல். தேவன் என்பது சிவபெருமானைக் குறித்தது. உம், உயர்வு சிறப்பு. மறித்தல் - மேல்கீழாகப் புரட்டுதல். வான் ஆகுபெயராய் வானவரை உணர்த்தியது. அசைதல் - சோர்வுறுதல். புரந்தரன் - இந்திரன். ஐயுருபுதொக்கது. தும்புரு இசைக்கலைவல்லானொரு கந்தருவன். இசை - இசைப்பாடல். ஏத்துதல் - துதித்தல். செறுத்து, மறித்து, அடர்த்த தோள் என இயையும். இராவணன் திசையானைகளை வென்றதும், கயிலாயத்தைப் பெயர்த்ததும், இந்திரனை அடர்த்ததும் அவன் திக்குவிசயஞ் செய்த காலத்து நிகழ்ந்தவை. இராவணன் குபேரனை வென்று அவனுடைய புஷ்பக விமானத்தைக் கவர்ந்து அதனை ஊர்ந்து இலங்கை நோக்கிச் செல்லுகையில், அவ்விமானம் கயிலைமலைமீது பறந்தபோது செல்லாது தடைப்பட்டு நிற்கக் கயிலை தடுத்ததென்று அதனைப் பெயர்த்தான் என்பது புராண கதை. (12)

3176. சேணுயர் நெறிமுறை திறம்ப லின்றியே
பாணிகள் பணிசெயப் பழுதில் பண்ணிடை
வீணையி னரம்பிடை விளைந்த தேமறை
வாணியி னாரதன் செவியின் வார்க்கவே.

சேண் உயர் நெறிமுறை திறம்பல் இன்றியே
பாணிகள் பணி செயப் பழுது இல் பண்ணிடை,
வீணையின் நரம்பிடை விளைந்த தேமறை,
வாணியின், நாரதன் செவியின் வார்க்கவே.

பொ :—தொன்று தொட்டு வந்த சிறந்த இசை நெறிக்குரிய முறைகளிற் பிறழாமல், தாளங்கள் அழகு செய்யக் குற்றமற்ற வாய்ப்பாட்டிலும், வீணையின் நரம்பிலும் உண்டாகிய இசை வேதத்தை நாவீறுடைய நாரதன், செவிகளில் வார்க்கவும்.

கு :—சேண் உயர்நெறி–தேவருலகிற் பயிலும் சிறந்த இசை நெறி எனினும் ஆம். திறம்புதல்-பிறழ்தல். பாணிகள்-தாளங்கள். பணி - அழகு. பழுது - குற்றம். பண் என்றது வாய்ப்பாட்டினை. தேம் மறை - இனிய இசை வேதம். வாணி - வாக்கு; அதாவது நாவீறு. (13)

3177. மேகமென் றுருத்தி கொண்டு
★ விண்ணவர் தருவும் விஞ்சை
நாகமுஞ் சுரந்த தீந்தே
னறும்புன லோட ளாவித்
தோகையர் துகிலிற் றோயு
மென்பதோர் துணுக்கத் தோடுஞ்
சீகர மகர வேலை
காவலன் சிந்த மன்னோ.

மேகம் என் துருத்தி கொண்டு,
விண்ணவர் தருவும் விஞ்சை
நாகமும் சுரந்த தீந்தேன்,
நறும் புனலோடு அளாவித்
தோகையர் துகிலில் தோயும்
என்பது ஓர் துணுக்கத்தோடும்,
சீகர மகர வேலை
காவலன் சிந்த, மன், ஓ.

பொ:—சுறுமீன்களையுடைய கடலுக்கு அரசனான வருணன், தேவர்க்குரிய கற்பக மலரினின்றும், விஞ்சையர்க்குரிய சுரபுன்னை மலரினின்றும் பெருக்கெடுத்த நல்ல வாசனை எண்ணெயை நன்னீரொடு கலந்து மேகமாகிய பீச்சாங்குழல் கொண்டு, மகளிர் துகிலில் படும் என்று நினைதலால் உளதாகும் நடுக்கத்தோடு, துளிகளாகத் தெளிக்கவும்,

கு:—துருத்தி - நீர்தூவுங்கருவி. மேகமென்றுருத்தி உருவகம். விண்ணவர்தரு - கற்பகம். விஞ்சை நாகம் - விஞ்சையர்க்குரிய சுரபுன்னை. விஞ்சை - வித்தியாதரர் உலகு; ஆகுபெயராய் அதில் வாழ்வாரைக் குறித்தது. தருவும் நாகமும் ஆகுபெயராய் மலர்களை உணர்த்தின. சுரத்தல் - பெருக்குதல். தேன் - வாசனையெண்ணெய். அளாவுதல் - கலத்தல். தோகையர் - தோகை போல்வார்; மகளிர். தோகை - மயில். ஓர்தல் - நினைதல். துணுக்கம் - நடுக்கம். சீகரம் - துளி. மகரம் - சுறுமீன். வேலை - கடல். மகரவேலை காவலன், தீந்தேன் புனலோடளாவித் துருத்திகொண்டு, துணுக்கத் தோடும் சீகரம் சிந்த என இயையும். மன் ஓ அசை. (14)

3178. நறைமலர்த் தாதுந் தேனு
நளிர்நெடு மகுட கோடி
முறைமுறை யிறைஞ்சச் சிந்தி
முரிந்துகு மணியு முத்தும்
தறையிடை யுகாத முன்னந்
தாங்கினன் றழுவி வாங்கித்
துறைதொறுந் தொடர்ந்து நின்று
சமீரணன் றுடைப்ப மன்னோ.

நறை மலர்த் தாதும், தேனும்
நளிர் நெடு மகுட கோடி
முறை முறை இறைஞ்சச் சிந்தி
முரிந்து உகும் மணியும், முத்தும்,
தறையிடை உகாத முன்னம்
தாங்கினன் தழுவி வாங்கித்
துறை தொறும் தொடர்ந்து நின்று
சமீரணன் துடைப்ப, மன், ஓ.

பொ :—(இராவணனைக் காண வந்த அரசருடைய) நறுமண மலர்மாலைகளினின்று சிந்தும் மகரந்தமும் தேனும், பெருமை வாய்ந்த கிரீட வரிசைகள் முறை முறையே வணங்குங்கால் (உராய்தலால்) சிதைந்து இற்று வீழும் மணிகளும் முத்துக்களும் ஆகியவை, நிலத்தில் விழும் முன்னமே இடந்தொறும் இடந்தொறும் அவ்வரசர்களைத் தொடர்ந்து சென்று கிட்டி நின்று தாங்கி எடுத்து வாயு தேவன் துடைக்கவும்.

கு :—நறை - நறுமணம். மலர் ஆகுபெயராய் மாலையை உணர்த்தியது. தாது - மகரந்தப்பொடி. நளிர் - பெருமை. மகுடகோடி - கிரீடவரிசை. உகுதல் - சிந்துதல். சமீரணன் - வாயுதேவன். (15)

இச்செய்யுளின் பின் 45, 52-ஆம் சுவடிகளில் பின்வரும் மிகைப் பாடல்கள் காணப்படுகின்றன.

3178 (a) கடிநக ரழித்துத்தன் காவல் மாற்றிய
கொடியவன் தனக்குளம் குலைந்து கூசியே
வடதிசைப் பரப்பினுக் கிறைவன் மாநெதி
இடுதிறை யளந்தன னிரந்து நிற்கவே.

3178 (b) நிகரறு புவனமூன் றென நிகழ்த்திய
தொகையினில் தொகுத்திடு மண்டச் சூழலின்

வகையினைக் குருமுறை மரபின் வஞ்சியாப்
புகரவன் விரித்தெடுத் தியம்பிப் போகவே.

3178 (c) மதியினிற் கருதுமுன் வந்து வேண்டின
எதுவிதப் பொருள்களு மிமைப்பி னல்கியே
திதிமுத லங்கமஞ் சவையுந் தெற்றென
விதிமுறை பெறத்தனி விளம்பிப் போகவே.

3179. மின்னுடை வேத்திரக் கையர் மெய்புகத்
★ துன்னெடுங் கஞ்சுகத் துகிலர் சோர்விலர்
பொன்னொடு வெள்ளியும் புரந்த ராதியர்க்
கின்னியன் முறைமுறை யிருக்கை யீயவே.

மின்னுடை வேத்திரக் கையர், மெய்புகத்
துன் நெடுங் கஞ்சுகத் துகிலர், சோர்வு இலர்,
பொன்னொடு வெள்ளியும் புரந்தராதியர்க்கு
இன் இயல் முறை முறை இருக்கை ஈயவே.

பொ :—வியாழனும் சுக்கிரனும், ஒளியுடைய பொற்பிரம்பேந்திய கையினராய், உடல் முழுதும் புகும்படி தைத்த நீண்ட ஆடையாலாகிய சட்டையை அணிந்தவராய்த் தளர்ச்சியற்றவராய் இந்திரன் முதலிய தேவர்களுக்கும் அசுரர்க்கும் அவரவர் தகுதிக்கேற்றவாறு ஆசனங்களை இனியதன்மையுடன் கொடுக்கவும்.

கு :—வேத்திரம் - பிரம்பு. மின்னுடை வேத்திரம் என்றமையால் பொற் பிரம்பு என்று கொள்ளலாயிற்று. துன்னல் - தைத்தல். கழுத்திலிருந்து பாதம் வரை மறைய அணிந்த சட்டையாதலின் நெடுங்கஞ்சுகம் என்றார். கஞ்சுகம் - சட்டை. பொன் - வியாழன். வெள்ளி - சுக்கிரன். புரந்தரன் - இந்திரன். இருக்கை - ஆசனம். பொன்னும் வெள்ளியும் முறையே தேவகுருவும் அசுரகுருவுமாக விளங்கியவராதலின் அவ்விருவரையும் தேவரும் அசுரரும் ஆகியோர் தகுதியறிந்து இருக்கையீயும் பணியில் இராவணன் ஈடுபடுத்தினன் போலும். (16)

3180. சூலமே முதலிய துறந்து சுற்றிய
சேலையாற் செறியவாய் புதைத்த செங்கையன்
ரேலுடை நெடும்பணை துவைக்குந் தோறெலாங்
காலன்வந் திசைக்குநாட் கடிகை கூறவே.

சூலமே முதலிய துறந்து, சுற்றிய
சேலையால், செறிய வாய் புதைத்த செங்கையன்,
தோல் உடை நெடும் பணை துவைக்குந்தோறு எலாம்,
காலன் வந்து இசைக்கும் நாள் கடிகை கூறவே.

பொ:—தோல் போர்த்த பெரிய (நாழிகை) முரசு முழங்கும் பொழுதெல்லாம், இயமன், சூலம் முதலிய ஆயுதங்களை நீக்கி, (இடுப்பிற்) சுற்றி(க் கட்டி)ய மேலாடையுடன், வாய்மறையும்படி மூடிய செவ்விய கையை யுடையவனாய் வந்து தான் சொல்ல வேண்டிய, நாளின் நாழிகையைக் கூறவும்.

கு:—சேலை - ஆடை. சேலையால் - சேலையோடு. சுற்றிய சேலை யால் எனவே போர்த்த மேலாடையின்றி என்றவாறு. செறிதல் - மறைதல். துவைத்தல் - முழங்குதல். காலன் - இயமன். இசைத் தல் - சொல்லுதல். நாட்கடிகை - நாளின் நாழிகை. பேரரசன்பால் பணி செய்வார் படைக்கலம் பூணுதவராய் மேலாடையை இடையிற் கட்டியும் வாய் புதைத்தும் ஒடுங்கி வணங்கி நின்று கூறவேண்டிய வற்றைக் கூறுவது மரபு. (17)

இச்செய்யுளின்பின் 45, 52-ஆம் சுவடிகளில் காணப்படும் மிகைப் பாடல் வருமாறு:—

3180 (a) உரியநுங் குலத்துளே ஒருவன் யானெனப்
பரிவுறும் பழமைகள் எடுத்துப் பன்னியே
விரைமலர் சிதறிமெய் யன்பு மீக்கொளா
நிருதியங் கடிமுறை காத்து நிற்கவே.

**3181.** நயங்கிளர் நானநெய் யளாவி நந்தலில்
வியன்கருப் பூரமென் பஞ்சி மீக்கொளீஇக்
கயங்களின் மரைமலர்க் காடு பூத்தென
வயங்கெரிக் கடவுளும் விளக்க மாட்டவே.

நயம் கிளர் நானம் நெய் அளாவி, நந்தல் இல்
வியன் கருப்பூரம் மென் பஞ்சி மீக் கொளீஇக்
கயங்களில் மரை மலர்க் காடு பூத்தென,
வயங்கு எரிக் கடவுளும் விளக்கம் மாட்டவே.

பொ:—நன்மை மிக்க புழுகுநெய்யே நெய்யாக (அகலில்) பெய்து, கெடாத பெருமை வாய்ந்த (பச்சைக்) கருப்பூரமாகிய பஞ்சி(த்திரியி)னை (நெய்யின்மீது) பொருந்த இட்டு, தடாகத்திலே

தாமரைக் காடுபூத்தாற்போல விளக்குக்களை அக்கினிதேவன் ஏற்றவும்.

கு :—நயம் - நன்மை. கிளர்தல்-மிகுதல். நானம் - புழுகுநெய். அளாவுதல் - பெய்தல். நந்தல் - கேடு. வியன் - பெருமை. நான மாகிய நெய், கருப்பூரமாகிய பஞ்சி என உருவக வாய்பாடுபட விரிக்க. மீ - மேலே. கொளீஇ - கொளுவி - இணைத்து. கயம் - தடாகம். மரை - தாமரை. விளக்குத் தகழிக்குத் தடாகமும் சுடர்க் குத் தாமரை மலரும் உவமை. 'தாமரை விளக்கம் தாங்க' (35) என்றார் முன்னும். எரிக் கடவுள் - அக்கினிதேவன். விளக்கம் – விளக்கு. விளக்கம் மாட்டுதல் - விளக்கேற்றுதல். (18)

3182. அதிசய மளிப்பதற் கருள றிந்துநற்
புதிதலர் கற்பகத் தருவும் பொய்யிலாக்
கதிர்நெடு மணிகளுங் கறவை யான்களு
நிதிகளு முறைமுறை நின்று நீட்டவே.

அதிசயம் அளிப்பதற்கு அருள் அறிந்து, நல்
புதிது அலர் கற்பகத் தருவும், பொய் இலாக்
கதிர்நெடு மணிகளும், கறவை ஆன்களும்,
நிதிகளும், முறை முறை நின்று, நீட்டவே.

பொ :—(இராவணன்பால் வருவார்க்கு) மிகுதியாகக் கொடுக் கும் பொருட்டு, நல்ல அப்பொழுதலர்ந்த பூக்களையுடைய கற்பகமும், தவறாத ஒளிக் கிரணங்களையுடைய பெரிய சிந்தாமணி முதலிய இரத் தினங்களும், பாற்பசுக்களான காமதேனுக்களும், சங்கநிதி பதுமநிதி களும் அவன் அருளின்திறம் அறிந்து, தத்தமக்கு வகுத்ததானத்தே முறையாக நின்று கொடுக்கவும்.

கு :—அதிசயம் - மிகுதி ; வியப்பும் ஆம். நல் கற்பகம், புதிதலர் கற்பகம் எனவும் பொய்யிலாமணி, கதிர்மணி, நெடுமணி எனவும் கொள்க. ஆன்-பசு; காமதேனு. நீட்டல்-கொடுத்தல். (19)

3183. குண்டல முதலிய குலங்கொள் பேரணி
மண்டிய பேரொளி வயங்க வீசலா
லுண்டுகொ லிரவினி யுலக மேழினு
மெண்டிசை மருங்கினு மிருளின் றென்னவே.

குண்டலம் முதலிய குலம் கொள் பேர் அணி
மண்டிய பேர் ஒளி வயங்க வீசலால்,
"உண்டுகொல் இரவு இனி உலகம் ஏழினும்?
எண் திசை மருங்கினும் இருள் இன்று" என்னவே.

பொ :—குண்டலம் முதலிய சிறப்புடைய பெரிய அணிகலங்கள், நெருங்கினவையாய் மிக்க ஒளி திகழ வீசுதலால் "ஏழுலகத்திலும் எட்டுத்திசையிடங்களிலும் இனி இரவு உண்டோ? (இல்லை) இருளும் இல்லை" என்னும் படியும்.

கு :—குலம் - சிறப்பு. மண்டுதல் - நெருங்குதல். அணி ஒளிவீச லால் உலகம் ஏழினும் எண் திசைமருங்கினும் இனி இரவு உண்டு கொல்? இருள் இன்று என்ன என இயையும். (20)

3184. கங்கையே முதலிய கடவுட் கன்னியர்
கொங்கைகள் சுமந்திடை கொடியி னொல்கிடச்
செங்கையி னரிசியு மலருஞ் சிந்தினர்
மங்கல முறைமுறை கூறி வாழ்த்தவே.

கங்கையே முதலிய கடவுள் கன்னியர்,
கொங்கைகள் சுமந்து, இடை கொடியின் ஒல்கிடச்
செங்கையின் அரிசியும் மலரும் சிந்தினர்,
மங்கலம் முறை முறை கூறி வாழ்த்தவே.

பொ :—கங்கை முதலான தெய்வமகளிர், தனங்களைத் தாங்குத லால் இடை கொடிபோல் அசைய நின்று, முறையாக முறையாகச் செய்ய கைகளால் அரிசியையும் மலரையும் தூவி, மங்கலப் பாடல் களைப் பாடி வாழ்த்தவும்.

கு :—ஒல்குதல் - அசைதல். அரிசி என்றது மஞ்சள் கலந்த மங்கல அட்சதையினை. (21)

3185. ஊருவிற் றோன்றிய வுயிர்பெய் யோவியங்
காரினிற் செருக்கிய கலாப மஞ்ஞைபோல்
வார்விசிக் கருவியோர் வகுத்த பாணியி
னரிய ரருநட நடிப்ப நோக்கியே.

ஊருவில் தோன்றிய உயிர்பெய் ஓவியம்,
காரினில் செருக்கிய கலாப மஞ்ஞை போல்,
வார்விசிக் கருவியோர் வகுத்த பாணியின்,
நாரியர், அரும் நடம் நடிப்ப நோக்கியே.

பொ :—(நாராயண முனிவருடைய) துடையில் பிறந்தவளும் உயிரூட்டிய சித்திரப்பாவை போல்பவளுமான ஊர்வசியும் மேனகை முதலிய மற்றைத் தேவமகளிரும் கார்ப்பருவத்தால் களிப்புறும் மயில் போலத் தோல்வாரால் இழுத்துக் கட்டப்பட்ட மத்தளக்காரர் வகுத்த தாளத்துக்கிசைய அருமையான நடனத்தை நடிப்ப நோக்கி.

கு :—ஊருவில் தோன்றிய வுயிர்பெய்யோவியம், நாரியர், கலாப மஞ்ஞைபோல், பாணியின் அருநடம் நடிப்ப நோக்கி என இயைக்க. ஊரு - துடை. ஊருவிற்ருேன்றினமையால் ஊர்வசி என்று பெயராயிற்று. ஊர்வசி - தேவருலக ஆடன்மகள். ஓவியம் - சித்திரப் பாவை. கலாபம்-தோகை. மஞ்ஞை-மயில். கரிய பெரியவுருவினனை இராவணனுக்கு மேகமும், அவன் தோற்றம் கண்டு மகிழ்ந்து நடிக்கும் அரம்பையர்க்கு மேகத்தின் தோற்றங்கண்டு மகிழ்ந்து ஆடும் மயிலும் உவமை. விசித்தல் - கட்டுதல். வார்விசிக் கருவி - மத்தளம். வார்விசிக் கருவியோர் - மத்தளக்காரர். பாணி - தாளம். நாரியர் - பெண்கள். நடம் - கூத்து. நடிப்ப நோக்கி இருந்தனன் என அடுத்துவரும் செய்யுளுடன் இணைந்து முடிவுறும். நர நாரணர் என்னும் முனிவரர் தவநிலை யழிக்கும்படி இந்திரனுல் ஏவப்பட்ட அரம்பையர், அம்முனிவரை அணுகித் தம் அழகு முதலியவற்ருல் அவரை மயக்க முயன்றபோது நாரண முனிவர் தம் துடையினின்று பேரழகுவாய்ந்த ஒரு பெண்ணைத் தோற்றுவிக்க, அவள் அழகுகண்ட அரம்பையர் நாணுற்று அவளுடன் விண்ணுலகு புகுந்தனர் என்பதும் நாரண முனிவர் துடையில் தோன்றியவளே ஊர்வசி என்பதும் புராண கதை. (22)

3186. இருந்தன னுலகங்க ளிரண்டு மொன்றுந்தன்
னருந்தவ முடைமையி னளவி லாற்றலிற்
பொருந்திய விராவணன் புருவக் கார்முகக்
கருந்தடங் கண்ணியர் கண்ணின் வெள்ளத்தே.

இருந்தனன், உலகங்கள் இரண்டும் ஒன்றும், தன்
அருந்தவம் உடைமையின், அளவு இல் ஆற்றலில்
பொருந்திய இராவணன், புருவக் கார்முகக்
கருந் தடங் கண்ணியர் கண்ணின் வெள்ளத்தே.

பொ :—செய்தற்கரிய தவவலிமையுடைமையாலும் எல்லையற்ற ஆற்றலுடைமையாலும் மூன்றுலகங்களையும் (ஆளும் உரிமையை) எய்திய இராவணன், புருவமாகிய வில்லையும் கரிய பெரிய கண்களையும் உடைய மகளிரின் நோக்கப் பெருக்கில் இருந்தான்.

கு :—தவம் - தவத்தால் விளைந்த வலிமை. ஆற்றலாவது, உடல்வலி, உளவலி, மதிவலி, படைவலி, துணைவலி முதலியவை. புருவக் கார்முகம், உருவகம். கார்முகம் - வில். கண்ணின் வெள்ளம் என்றது நோக்க மிகுதியை, மகளிரெல்லாம் விரும்பி நோக்க இருந் தனன் என்றவாறு. 'கண்ணின் வெள்ளம்' என்பது சூர்ப்பணகை வரவு இராவணன் அழிவுக்கு மூலம் என்பதை அறிவிக்கும் அமங்கலக் குறியாய், அவனல் காதலிக்கப்பட்டவர்களும் அவன்பாற் காத லுடையவர்களும் ஆன கருந்தடங் கண்ணியர் கண்ணீர் வெள்ளத்தே இருந்தான்: என வேறு ஒரு பொருளும் தருமாறு அமைந்தது. இவ்வாறு அமங்கலம்படப் பேசுதல், ஆசிரியர்க்கு இயல்பு என்பது, இந்நூலுள் ஆங்காங்குவரும் கவிக்கூற்றுக்களால் விளங்கும். இப் படலத்துள், பின், 'சீதையைப் பெற்ருய் நீயும் அந்தரம் பார்க்கில் நன்மை அவர்க்கு; இலை உனக்கே ஐயா' (75) 'வீர பெற்ருல் எங்ஙனம் வைத்து வாழ்தி' (76) என்று சூர்ப்பணகை கூற்ருக வரு வனவற்ருலும் அறியலாம். 'உலகங்களிரண்டும் ஒன்றும்............ பொருந்திய இராவணன்' என்பதனுடன் 'மூவுலகினுக்கும் ஒரு நாயகம் முடித்தேன்' (199) என்று பின் இராவணன் கூற்ருக வந்த தும் நோக்கத்தகும். 3165-ஆம் பாடல் முதல் இச்செய்யுள்வரை ஒரு தொடர். மண்டபமதனில், பொலிய, விளங்க, வயங்க, வயங்க, தோன்ற, குலவ, ஆர்ப்ப, துன்ன, சுற்ற, சேர, என, சூழ, ஏத்த, வார்க்க, சிந்த, துடைப்ப, ஈய, கூற, மாட்ட, நீட்ட, என்ன, வாழ்த்த, நோக்கி, இருந்தனன் என முடியும். (23)

## சூர்ப்பணகை இலங்கை நகரின் வடக்கு வாயிலை அடைதல்
## 3187-3188

**3187.** தங்கையு மவ்வழித் தலையிற் ருங்கிய
செங்கையள் சோரியின் ருரை சேர்ந்திழி
கொங்கையண் மூக்கினள் குழையில் காதினண்
மங்குலி னெலிபடத் திறந்த வாயினள்.

தங்கையும், அவ்வழித் தலையில் தாங்கிய
செங்கையள், சோரியின் தாரை சேர்ந்து இழி

கொங்கையள், மூக்கினள், குழை இல் காதினள்,
மங்குலின் ஒலிபடத் திறந்த வாயினள்.

பொ :—அப்பொழுது, அவ்விராவணன் தங்கையான சூர்ப் பணகையும், தலைமேல் தாங்கிய சிவந்த கைகளையும், இரத்த வொழுக்கு ஒன்றுபட்டுச் சிந்துகின்ற தனங்களையும், மூக்கினையும், குண்டலமற்ற காதுகளையும், மேகமுழக்கம் உண்டாகும்படி திறந்த வாயினையும் உடையளாய்.

கு :—தாரை - ஒழுக்கு. குழை - குண்டலம். காதும் அறுக்கப் பட்டமை குறிக்கக் குழையில் காதினள் என்றார். மங்குல் - மேகம். பட - உண்டாக. இதுவும் பின்வரும் செய்யுளும் ஒரு தொடர். அவ்வழி, தங்கையும், செங்கையள், கொங்கையள், மூக்கினள், காதினள், வாயினள், கூந்தலாள், காந்துவாள், முறையிட்டு, வட திசை வாயிலின் வந்து தோன்றினாள்' எனப் பின்வரும் பாடலுடன் இணைந்து முடிவுறும். (24)

3188. முடையுடை வாயினான் முறையிட் டார்த்தெழு
கடையுகக் கடலொலி காட்டக் காந்துவாள்
குடதிசைச் செக்கரிற் சேந்த கூந்தலாள்
வடதிசை வாயிலின் வந்து தோன்றினாள்.

முடையுடை வாயினால் முறையிட்டு, ஆர்த்து எழு
கடையுகக் கடல் ஒலி காட்டக் காந்துவாள்,
குடதிசைச் செக்கரின் சேந்த கூந்தலாள்,
வடதிசை வாயிலின் வந்து தோன்றினாள்.

பொ :—முடைநாற்றமுடைய வாயினால் ஊழியில் பொங்கி யெழு கின்ற கடலின் பேரொலி தோன்ற ஆரவாரித்து முறையிட்டுக் கொதிக்கின்றவளும் மேற்றிசைச் செவ்வானம் போலச் சிவந்த கூந்தலையுடையவளுமாய் இலங்கையின் வடக்கு வாயிலின்கண் வந்து தோன்றினாள்.

கு :—முடை - புலால்நாற்றம். உகக்கடை என மாறுக. உகக் கடை - உகமுடிவு; ஊழி. கடையுகக் கடலொலி காட்ட முடையுடை வாயினான் ஆர்த்து முறையிட்டுக் காந்துவாள் என இயையும். குட திசை - மேற்றிசை. செக்கர் - செவ்வானம். சேந்த - சிவந்த. வட திசைவாயில் என்பதற்கு இராவணனுடைய அரண்மனையின் வடக்கு வாயில் என்று பொருள்கூறுவாரும் உளர். பின் 'கரையறுதிருநகர்க் கருங்கண் நங்கைமார்' (35) 'அழுகுரல் பிறந்த தவ்விலங்கைக்கு'

(36) 'சிற்றிடையலமரத் தெருவு சேர்கின்றார்' (39) 'என்றினைய வன்றுயர் இலங்கைநகர் எய்த' (45) எனவருங் கவிகளும் பிறவும் சூர்ப்பணகை இலங்கையின் வடக்குவாயில்வழிநகருட் புகுந்தபோது கண்டவர் செயல் பேசுதலின், வடதிசை வாயில் என்பது இராவண னுடைய அரண்மனை வாயிலன்று; இலங்கை நகரின் வடக்கு வாயில் என்று கொள்வதே அமைவுடையதாகும். 'இலங்கை மாநகர் நொய்திற் சென்றெய்தினள்' (3163) என்றவர், இச் செய்யுளால் அவள் எய்தியவாறு கூறினர். (25)

## சூர்ப்பணகை தோற்றங்கண்டு இலங்கை நகரமக்கள் துயருறல் 3189-3207

3189. தோன்றலுந் தொன்னக ரரக்கர் தோகைய
ரேன்றெதிர் வயிறலைத் திரங்கி யேங்கினர்
மூன்றுல குடையவன் றங்கை மூக்கில
டான்றனி யவள்வரத் தரிக்க வல்லரோ.

தோன்றலும், தொல் நகர் அரக்கர் தோகையர்
ஏன்று எதிர், வயிறு அலைத்து, இரங்கி ஏங்கினர்;
மூன்று உலகு உடையவன் தங்கை மூக்கு இலள்,
தான் தனியவள் வரத் தரிக்க வல்லரோ?

பொ :—மூன்றுலகங்களுக்கும் தலைவனான இராவணனுடைய தங்கையாகிய, சூர்ப்பணகை மூக்கற்றவளாய் துணைவருவாரின்றி (அநாதையாய்)த் தனித்துவர (அதைக் கண்டு) பொறுத்திருக்கும் வன்மையுடையரோ? (இல்லை. ஆதலால்) அவள் தோன்றிய அளவில் பழமையான இலங்கை நகரில் உள்ள அரக்கர்மகளிர் அவளெதிர் சென்று வயிற்றிலடித்துக்கொண்டு மனம் உருகி அழுதார்கள்.

கு :—தொன்னகர் என்றது இலங்கையை. எதிர்ஏன்று - எதிர் சென்று. வயிறலைத்து - வயிற்றில் அடித்துக்கொண்டு. (26)

3190. பொருக்கென நோக்கினர் புகல்வ தோர்கில
ரரக்கரு மிரைத்தன ரசனி யாமெனக்
கரத்தொடு கரங்களைப் புடைத்துக் கண்களை
நெருப்பெழ விழித்துவாய் மடித்து நிற்கின்றார்.

பொருக்கென நோக்கினர், புகல்வது ஓர்கிலர்,
அரக்கரும் இரைத்தனர், அசனி ஆம் எனக்
கரத்தொடு கரங்களைப் புடைத்து, கண்களில்
நெருப்பு எழ விழித்து, வாய் மடித்து நிற்கின்றார்.

பொ :—(இலங்கையிலுள்ள) அரக்கரும், (சூர்ப்பணகையின் அலங்கோல நிலையை) விரைந்துபார்த்து, என்ன சொல்லுவதென்று அறியாதவராய், ஆரவாரித்து, இடி முழக்கம்போலக் கைகளை ஒன்றுடனொன்று தாக்கிக் கண்களில் நெருப்புத் தோன்றவிழித்து வாய்மடித்து நிற்கின்றவராயினர்.

கு :—பொருக்கெனல் விரைவுக் குறிப்பு. அரக்கரும், நோக்கினர், ஓர்கிலர், இரைத்தனர், புடைத்து, விழித்து, மடித்து நிற்கின்றார் என இயைந்து முடிவுறும். ஓர்தல் - அறிதல். இரைத்தல் - ஆரவாரித்தல். அசனி - இடி. கரம் - கை. நோக்கினர், ஓர்கிலர், இறைத்தனர், என்பவை முற்றெச்சம். நெருப்பெழவிழித்தலும் வாய்மடித்து நிற்றலும் அரக்கர் வெகுண்டமை யுணர்த்தின. (27)

3191. இந்திரன் மேலதோ வுலக மீன்றபே
ரந்தணன் மேலதோ வாழி யானதோ
சந்திர மவுலிபாற் றங்கு மேகொலோ
வந்தர மென்றுநின் றழல்கின் றார்சிலர்.

“ இந்திரன் மேலதோ? உலகம் ஈன்ற பேர்
அந்தணன் மேலதோ? ஆழியானதோ?
சந்திர மவுலிபால் தங்குமே கொலோ?
அந்தரம்” என்று நின்று அழல்கின்றார் சிலர்.

பொ :—“(இத்) தீமை, இந்திரன்பாற் சேர்வதோ? உலகத்தைப் படைத்த பெரியோனான பிரமன்பாற் சேர்வதோ? சக்கரப்படையுடைய திருமால்பாற் சேர்வதோ? பிறைச் சந்திரனைத் தரித்த முடியினையுடைய சிவபெருமான்பாற் சேர்வதோ?” என்று சிலர் கொதிப்பாராயினர்.

கு :—அந்தரம் - தீமை; அது, சூர்ப்பணகையை மூக்குங் காதும் நீக்கிப் போக்கிய செயல். உலகம் ஈன்றபேர் அந்தணன், ஆழியான், சந்திரமவுலி என்பவை அவரவர் ஆற்றலுணர நின்ற பெயர்கள். இவரையன்றி இது செய்யவல்லார் இல்லை என்றவாறு. (28)

3192. செப்புறற் குரியவர் தெவ்வர் யாருளர்
முப்புறத் துலகமு மடங்க மூடிய
விப்புறத் தண்டத்தோர்க் கியைவ தன்றிது
வப்புறத் தண்டத்தோ ராரென் ருர்சிலர்.

“செப்புறற்கு உரியவர் தெவ்வர் யார் உளர்?
முப்புறத்து உலகமும் அடங்க மூடிய
இப்புறத்து அண்டத்தோர்க்கு இயைவது அன்று இது;
அப்புறத்து அண்டத்தோர் ஆர்?'' என்ருர் சிலர்.

பொ:—“(இராவணன் முதலியோர்க்குப்) பகைவர் என்று சொல்லத்தக்கார் ஒருவருமில்லை. மூன்றுவகை யுலகமும் அடங்கக் கவிந்த இவ்வண்டத்தில் உள்ளார்க்கு இது பொருந்துவதன்று பகிரண்டத்தவருள்ளும் இது செய்தற்குரியார் ஆர்?” என்று சிலர்; கூறுவாராயினர்.

கு:—தெவ்வர் - பகைவர். யார் உளர்? என்னும் வினு ஒருவரும் இல்லை என்பது உணர்த்தியது. (29)

3193. என்னையே யிராவணன் றங்கை யென்றபி
னன்னையே யென்றடி வணங்க லன்றியே
யுன்னவே யொண்ணுமோ வொருவ ராலிவ
டன்னையே யரிந்தன டானென் ருர்சிலர்.

“என்னையே! ‘இராவணன் தங்கை’ என்ற பின்,
‘அன்னையே!’ என்று அடி வணங்கல் அன்றியே,
உன்னவே ஒண்ணுமோ ஒருவரால்? இவள்
தன்னையே அரிந்தனள் தான்” என்ருர் சிலர்.

பொ:—“(ஈது) என்ன வியப்பு! ‘இவள் இராவணன் தங்கை’ என்று அறிந்தபின், ‘தாயே!’ என்று இவள் அடிகளில் விழுந்து வணங்குவதல்லாமல் (இத்தீமையினை இவள்பால் இயற்றுவோம் என்று) ஒருவரால் நினைக்கவும் இயலாது; (ஆதலால்) இவள்தானே தன்னை (மூக்கு முதலியவற்றை) அரிந்து கொண்டவளாவள்” என்று சிலர் கூறுவாராயினர்.

கு:—உன்னுதல் - நினைதல். உன்னவே ஒண்ணுமோ எனவே, சொல்லலும் செய்தலும் இயலா என்பது பெறப்படும். (30)

3194. போரிலான் புரந்தர னேவல் பூண்டன
ஞருலா நேமியா ஞற்ற ரேற்றுப்போய்
நீரிஞ னெருப்பிஞன் பொருப்பி ஞனினி
யார்கொலா மீதென வறைகின் ருர்சிலர்.

"போர் இலான் புரந்தரன், ஏவல் பூண்டனன்;
ஆர் உலாம் நேமியான், ஆற்றல் தோற்றுப்போய்
நீரிஞன்; நெருப்பிஞன் பொருப்பிஞன்; இனி
ஆர்கொலாம் ஈது?" என அறைகின்ருர் சிலர்.

பொ:—இந்திரன் போரைக் கைவிட்டவஞய் (இராவணன்) கட்டளையைச் சென்னிமேற்கொண்டு செய்பவஞயிஞன்; கூர்மை வாய்ந்த சக்கரப் படையுடைய திருமாலும் வலிமையிழந்து சென்று கடலில் ஒளித்தான்; நெருப்பை ஏந்திய சிவபெருமானும் பொருப் பின்கண் ஒளித்து உறைபவஞஞன்; இனி இது செய்தவர் யார்? என்று சிலர் கூறினர்.

கு:—புரந்தரன் - இந்திரன். ஆர்-கூர்மை; 'அழல்வாய் நாகத் தாரெயிறு' (சிலப். 5-125) என்பதனுள் ஆர் - கூர்மை என்னும் பொருளிற் பயின்றமை காணலாம். 'மழுங்காதவைந் நுதிய சக்கரம்' (திருவாய்மொழி 3-1-9) என்பது அருளிச் செயல். ஆர் - ஆரக் காலும் ஆம். நேமி - சக்கரப்படை. பொருப்பு என்றது கயிலாய மலையை. ஈது என்பது இது செய்தார் என்பதுபட நின்றது. இரண்டு மூன்ரும் அடிகளுடன், "நீறு பூசியும் நேமியும் நீங்கிஞர் மாறுகுன்ருெடு வேலை மறைந்துளார்" (யுத்த. இராவணன் சோகப். 12.) என்று இராவணன் கூற்ருகப் பின்வருவதும் நோக்கத்தகும். (31)

3195. சொற்பிறந் தார்க்கிது துணிய வொண்ணுமே
யிற்பிறந் தார்தமக் கியைவ செய்திலள்
கற்பிறந் தாளெனக் கரன்கொ லாமிவள்
பொற்பிறந் தாக்கினன் புகன்றென் ருர்சிலர்.

"சொல் பிறந்தார்க்கு இது துணிய ஒண்ணுமே?
இல் பிறந்தார் தமக்கு இயைவ செய்திலள்,
கற்பு இறந்தாள் எனக் கரன் கொலாம் இவள்
பொற்பு இறந்த ஆக்கினன் புகன்று" என்ருர் சிலர்.

பொ :—'புகழ் உண்டாகப் பெற்ற மகளிர்க்கு இத்தீங்கு செய்யத் துணிய முடியுமோ ? (முடியாது); (இச்சூர்ப்பணகைக்குக் காவலனுக அனுப்பப்பட்ட) கரனே, இவள் குடிப்பிறந்தார்க்குரிய நற்செயல் களைச் செய்யவில்லை ; கற்பும் அழிந்தாள் : என்று சுடுசொற் சொல்லிச் சினந்து (இவள் மூக்கும் காதும் போக்கி) இவள் அழகு அழிந்ததாக்கினுன்' என்று கூறினர் சிலர்.

கு :—சொல் - புகழ். சொல் பிறந்தார் - புகழ் உண்டாகப் பெற்ற மகளிர். அவர், 'தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகை சான்ற சொற் காத்துச் சோர்விலாதவர். முன் செய்யுட் களால் தேவரும் பிறரும் இது செய்யத் துணியார் ; இது செய்தற்கு அவர்பால் ஆற்றலும் இல்லை ; என்று துணிந்து பின் இது செய்தவர் யாவர் என்று சிலர் வினவி நின்றனராக, வேறு சிலர், இவட்குக் காவலாகச் சென்ற கரனே இது செய்தனனென்று, அதற்குரிய ஏதுக்களுடன் கூறுவாராயினர் என்க. இல் பிறந்தார் - உயர்குடிப் பிறந்தவர். கற்பு இறந்தாள் - கற்பு அழிந்தவள். இறந்தது ஆக்கி னன் என்பது எதுகை நோக்கி இறந்தாக்கினன் எனச் சிதைந்து நின்றது. (32)

3196. தத்துறு சிந்தையர் தளருந் தேவரிப்
பித்துற வல்லரே பிழைப்பில் சூழ்ச்சியார்
முத்திறத் துலகையு முடிக்க வெண்ணுவா
ரித்திறம் புணர்த்தன ரென்கின் றூர்சிலர்.

'தத்து உறு சிந்தையர், தளரும் தேவர் இப்
பித்து உற வல்லரே? பிழைப்பு இல் சூழ்ச்சியார்,
முத்திறத்து உலகையும் முடிக்க எண்ணுவார்,
இத்திறம் புணர்த்தனர்' என்கின்றூர் சிலர்.

பொ :—"கலங்கிய மனத்தினராய்ச் சோர்வுறும் தேவர்கள், இந்தப் பைத்தியச் செயலைச் செய்ய வல்லரோ ? (வல்லவரல்லர்). தவறுபடாத சூழ்ச்சியினையுடையராய் மூன்று வகைப்பட்ட உலகங் களையும் அழிக்க நினைத்தவரே இவ்வாறு செய்துள்ளார்கள்" என்று சிலர் கூறுவாராயினர்.

கு :—தத்துறல் - கலங்குதல். தளர்தல் - சோர்வடைதல். பிழைத்தல் - தவறுபடுதல். திறம் - பாகுபாடு. முடித்தல் - அழித்தல். இத்திறம் - இவ்வாறு. புணர்த்தல் - செய்தல். இத்திறம் என்றது மூக்கும் காதும் நீக்கிய செயலை. (33)

3197. இனியொரு கற்பமுண் டென்னி னன்றியே
வனைகழல் வயங்குவாள் வீரர் வல்லரோ
பனிவரு கானிடைப் பழிப்பி னோன்புடை
முனிவரர் வெகுளியின் முடிபென் றூர்சிலர்.

"இனி ஒரு கற்பம் உண்டு என்னின் அன்றியே,
வனை கழல் வயங்கு வாள் வீரர் வல்லரோ?
பனி வரு கானிடைப் பழிப்பு இல் நோன்பு உடை
முனிவரர் வெகுளியின் முடிபு" என்றூர் சிலர்.

பொ:—"இனி வேறொரு கற்பத்தில் உண்டானாலல்லது, இக் கற்பத்தில் கட்டிய வீரக் கழலினையும் விளங்கும் வாளினையும் உடைய வீரர் இச்செயலைச் செய்ய வல்லமையுடையவராவரோ? (ஆகார்; எனவே இது,) நடுக்கம் விளைக்கின்ற காட்டில் வாழ்கின்ற குற்ற மற்ற விரதவொழுக்கமுடைய உயர்ந்த முனிவர்களுடைய சினத்தின் முடிவு" என்று சிலர் கூறுவாராயினர்.

கு:—கற்பம் - காலத்தின் பேரெல்லை. பிரமன் வாழ்நாளளவு. வனைதல் - அணிதல். பனி - நடுக்கம்; 'பனிபடர்கான்' (1212) என்றூர் முன்னும். முனிவரர் - முனிவருள் உயர்ந்தோர். வெகுளி - சினம். (34)

3198. கரையறு திருநகர்க் கருங்க ணங்கைமார்
நிரைவளைத் தளிர்களைநெரித்து நெக்கனர்,
பிரையுறு பாலென நிலையிற் பின்றிய
வுரையின ரொருவர்முன் னொருவர் முந்தினூர்.

கரை அறு திருநகர்க் கருங்கண் நங்கைமார்
நிரை வளைத் தளிர்களை நெரித்து நெக்கனர்,
பிரை உறு பால் என, நிலையில் பின்றிய
உரையினர், ஒருவர்முன் ஒருவர் முந்தினூர்.

பொ:—எல்லையற்ற செல்வத்தையுடைய இலங்கை நகரத்தி லுள்ள கரிய கண்களையுடைய மகளிர், வரிசையாக அணிந்த வளை களையுடைய தளிர்போலும் தம் கைகளை நெரித்து மனஞ்சிதைந்து பிரை ஊற்றப்பட்ட பால்போலத் தம் நிலையினின்றும் வேறுபட்ட பேச்சினையுடையராய், (அவளை நெருங்க) ஒருவர்முன் ஒருவர் முந்து வாராயினர்.

கு:—கரை - எல்லை. திரு - செல்வம். கைந்நெரித்தல் அஞ்சிய நிலையில் மகளிர்பால் நிகழ்வதொரு மெய்ப்பாடு. பின்றுதல் - பிறழ்தல்; வேறுபடுதல். (35)

3199. முழவினில் வீணையின் முரனல் யாழினிற்
றழுவிய குழலினிற் சங்கிற் றரையி
லெழுகுர லின்றியே யென்று மில்லதோ
ரழுகுரல் பிறந்ததவ் விலங்கைக் கன்றரோ.

முழவினில், வீணையில், முரல் நல் யாழினில்,
தழுவிய குழலினில், சங்கில், தாரையில்
எழு குரல் இன்றியே, என்றும் இல்லது ஓர்
அழு குரல் பிறந்தது அவ் இலங்கைக்கு அன்று, அரோ!

பொ:—மத்தளத்தினின்றும் வீணையினின்றும் இனிய ஓசையை எழுப்புகிற நல்ல யாழினின்றும் அவ்வியாழொடு கூடிய குழலினின்றும் சங்கினின்றும் எக்காளத்தினின்றும் எழும் ஒலியின்றி, ஒரு நாளும் இல்லாத ஒப்பற்ற அழுகையொலி அன்று அவ்விலங்கையில் தோன்றிற்று.

கு:—முழவு - மத்தளம். முரலுதல் - இனிதாக ஒலித்தல். குழல் என்றது வேய்ங்குழல் நாதசுரம் முதலியவற்றை. தாரை - எக்காளம். மங்கலத்துக்கே நிலைக்களமான இலங்கையிலும் சூர்ப்பணகை வரவால் அமங்கலம் தோன்றியது என்றவாறு. (36)

3200. கள்ளுடை வள்ளமுங் களித்த தும்பியு
முள்ளமு மொருவழிக் கிடக்க வோடினர்
வெள்ளமு நாணுற விரிந்த கண்ணினர்
தள்ளுறு மருங்கினர் தழீஇக்கொண் டேங்கினர்.

கள்ளுடை வள்ளமும், களித்த தும்பியும்,
உள்ளமும் ஒருவழிக் கிடக்க ஓடினர்,
வெள்ளமும் நாண் உற விரிந்த கண்ணினர்,
தள்ளுறும் மருங்கினர், தழீஇக் கொண்டு ஏங்கினர்.

பொ:—கடலும் (ஒப்பாகாமையால்) வெட்கும்படி விரிந்த (பெரிய) கண்களையும், ஒசியும் இடையினையும் உடைய மகளிர், கள்ளையுடைய கிண்ணங்களும் (கள்ளையுண்டு) செருக்குற்ற வண்டுகளும் தங்கள்

மனமும் ஒரிடத்தே கிடக்க ஓடிச் சூர்ப்பணகையைத் தழுவிக்கொண்டு அழுவாராயினர்.

கு :—வள்ளம்-கிண்ணம். வெள்ளம் - கடல். தள்ளூறல் - ஒசிதல். மருங்கு - இடை. தழீஇக்கொண்டு - தழுவிக்கொண்டு. ஏங்குதல் - அழுதல். வெள்ளமும் நாணுற விரிந்தகண் என்றது உயர்வு நவிற்சியணி தழுவியது. கள்ளுண்ணப்புக்க நிலையில், சூர்ப்பணகை கூக்குரல் கேட்டுத் தெருவிலிறங்கினராகலின், கள்ளுடை வள்ளமும் உள்ளமும் ஒரு வழி கிடக்க ஓடினர் என்றார். ஓடினர் - முற்றெச்சம். ஒருவர் துக்கத்தைத் தணிக்க வருவார் துக்கம் உற்றவரைத் தழுவி யழுது ஆறுதல் கூறுவது வழக்காதலின் தழீஇக்கொண்டேங்கினர் என்றார். (37)

**3201.** நாந்தக வுழவர்மே னாட்டுந் தண்டத்தர்
காந்திய மனத்தினர் புலவி கைம்மிகச்
சேந்தக ணதிகமுஞ் சிவந்து நீருக
வேந்தனுக் கிளையவ டாளின் வீழ்ந்தனர்.

நாந்தக உழவர்மேல் நாட்டும் தண்டத்தர்,
காந்திய மனத்தினர், புலவி கைம்மிகச்
சேந்த கண் அதிகமும் சிவந்து நீர் உக,
வேந்தனுக்கு இளையவள் தாளின் வீழ்ந்தனர்.

பொ :—ஊடல் எல்லை கடத்தலால், வாளுழவராகிய தங்கள் கொழுநர் திறந்து (அவர் பிழை காரணமாக) இடத்தக்க தண்டனையை உறுதிசெய்தவரும், அவர்மீது சினம் மிகும் மனத்தினரும் ஆன (சில) மகளிர், (தம் கணவர்பால் எழுந்த சினத்தினால்) சிவந்த கண்கள், (சூர்ப்பணகை துயர்நிலையால் உண்டான சினத்தினால்) மேலும் சிவந்து நீரை உகுக்க, இராவணன் தங்கையான சூர்ப்பணகையின் காலில் விழுவாராயினர்.

கு :—நாந்தகம் - வாள். நாந்தக வுழவர் - வாளால் உழுது வெற்றியாகிய பயனைக் கொள்வோர். புலவி கைம்மிக நாந்தகவுழவர் மேல் நாட்டும் தண்டத்தர், காந்திய மனத்தினர் கண் அதிகமும் சிவந்து நீருக, வேந்தனுக் கிளையவள் தாளின் வீழ்ந்தனர் என இயையும். புலவி - ஊடல். கைம்மிகல் - எல்லை கடத்தல். காந்துதல் - கொதித்தல். சேத்தல் - சிவத்தல். உக - சிந்த. வேந்தன் என்றது இராவணனை. (38)

3202. பொற்றலை மரகதப் பூக நேர்வுறச்
சுற்றிய மணிவடந் தூங்கு மூசலின்
முற்றிய வாடலின் முனிவுற் றேங்கினர்
சிற்றிடை யலமரத் தெருவு சேர்கின்றார்.

பொன் தலை மரகதப் பூகம் நேர்வுறச்
சுற்றிய மணிவடம் தூங்கும் ஊசலின்
முற்றிய ஆடலின் முனிவுற்று ஏங்கினர்,
சிற்றிடை அலமரத் தெருவு சேர்கின்றார்.

பொ :—வேறு சில மகளிர், சூர்ப்பணகையின் முறையீடு கேட்டு, அழகிய உச்சியினையும் பசுமை நிறத்தினையும் உடைய கமுகிலே பொருந்தக் கட்டிய, மணிகள் அழுத்திய வடங்களோடு தொங்குகின்ற வூசலின்கண் (மகிழ்ச்சி) நிரம்பிய ஆடலை வெறுத்து அஞ்சியவர்களாய்ச் சிறிய இடைவருந்தும்படி தெருவை அடைவாராயினர்.

கு :—பொன் - அழகு ; பொலிவும் ஆம். தலை - உச்சி. மரகதம் - பச்சை. பூகம் - கமுகு. நேர்வுற - பொருந்த. மணி - அழகுமாம். வடம் - ஊசலிலிணைத்த கயிறு. தூங்குதல் - தொங்குதல். முற்றிய - நிறைந்த. முனிவுற்று - வெறுத்து. ஏங்குதல் - அஞ்சுதல். அலம் வரல் - துன்பமடைதல். மகிழ்ச்சியால் ஊசலாடுபவராயிருந்தவர் அச்சத்தால் தெருவிடை ஓடுவாராயினர் என்றவாறு. (39)

3203. எழுவென மலையென வெழுந்த தோள்களைத்
தழுவிய வளைத்தளிர் நெகிழத் தாமரை
முழுமுகத் திருகயன் முத்தி னாலிகள்
பொழிதரச் சிலருளம் பொருமி விம்முவார்.

எழு என, மலை என எழுந்த தோள்களைத்
தழுவிய வளைத் தளிர் நெகிழத் தாமரை
முழு முகத்து இரு கயல் முத்தின் ஆலிகள்
பொழிதரச் சிலர் உளம் பொருமி விம்முவார்.

பொ :—சிலர், தூண் போலவும் மலை போலவும் (பூரித்து) ஓங்கிய தம் தம் நாயகர் தோள்களைத் தழுவி நின்றவர், (சூர்ப்பணகை முறையீடு கேட்டுத் தங்கள் நாயகர் தோள்களைத் தழுவி நின்ற) வளையணிந்த தளிர் (போலும் கைகள்) நெகிழத் தாமரை மலர் போலும் தங்கள் சிறந்த முகத்தின்கண் இரண்டு கயல் மீன்கள் போலும்

கண்களில் முத்துப் போலும் நீர்த் துளிகள் சிந்த அஞ்சி மனம் வருந்துவாராயினர்.

கு :—எழு - தூண். வளைத்தளிர் - வளையணிந்த தளிர்போலும் முன்கை. ஆலி - நீர்த்துளி. பொருமுதல் - அஞ்சுதல். விம்முதல் - வருந்துதல். (40)

3204. நெய்ந்நிலைய வேலரச னேருநரை யில்லா
★ னிந்நிலையு ணர்ந்தபொழு தெந்நிலைய னென்று
மைந்நிலைநெ டுங்கண்மழை வானிலைய தாகப்
பொய்ந்நிலைம ருங்கினர் புலம்பினர் புரண்டார்.

"நெய்ந் நிலைய வேல் அரசன், நேருநரை இல்லான்,
இந்நிலை உணர்ந்தபொழுது எந்நிலையன் ?" என்று,
மைந்நிலை நெடுங்கண் மழை வான் நிலையது ஆகப்
பொய்ந்நிலை மருங்கினர் புலம்பினர், புரண்டார்.

பொ :—இல்லையென்று சொல்லத் தக்க நிலையினையுடைய இடையினராகிய மகளிர் சிலர், "ஒப்பாரில்லாதவனுன நெய்பூசப்பட்ட வேற்படையுடைய நம் அரசன், சூர்ப்பணகை உற்ற இந்நிலையை அறிந்தபொழுது எந்நிலையனுவன் ?" என்று எண்ணி, மைநிலைத்த நெடிய கண்கள், வானத்துள்ள மழையின்றன்மையுடையதாய் நீரைப் பொழியும்படி அழுது புரண்டனர்.

கு :—வேல் முதலிய படைகளில் துருப்பற்ருதபடி நெய் பூசுதல் வழக்காதலின் நெய்ந்நிலைய வேல் என்ருர். பகைவருடலைத் துளைத்து நிணநெய்படிந்தவேல் எனினும் அமையும். அரசன் என்றது இராவணனை. நேருநரை யில்லான் என்பதற்கு எதிர் வோரை யில்லாதவன் என்று பொருள் கொள்ளலும் ஆம். நேருநர் - ஒப்பாவார், எதிர்வோர். இந்நிலை என்றது சூர்ப்பணகையின் உறுப்பற்ற நிலையினை. மைந்நிலை நெடுங்கண் என்றமையால் மங்கல மகளிர் என்பது பெறப்படும். புலம்புதல் - அழுதல். (41)

3205. மனந்தலை வருங்கனவி னின்சுவை மறந்தார்
கனந்தலை வருங்குழல் சரிந்துகலை சோர
நனந்தலைய கொங்கைக டதும்பிட நடந்தா
ரனந்தலிள மங்கைய ரழுங்கியயர் கின்ருர்.

மனம் தலைவரும் கனவின் இன் சுவை மறந்தார்,
கனம் தலைவரும் குழல் சரிந்து, கலை சோர,
நனம் தலைய கொங்கைகள் ததும்பிட, நடந்தார்,
அனந்தல் இள மங்கையர், அழுங்கி அயர்கின்றார்.

பொ :—உறங்கிக்கொண்டிருந்த இளமகளிர், சூர்ப்பணகை முறையீடு கேட்டு எழுந்து அந்நிலையில் தம் மனத்திலே தோன்றிய கனவின் மிக்க இன்பத்தை மறந்தவராய், தலையிலுள்ள பாரமான கூந்தல் அவிழ, உடை நெகிழ, அடிபரந்த தனங்கள் அசைய நடந்து, (சூர்ப்பணகையின் நிலைகண்டு) வருந்திச் சோர்வாராயினர்.

கு :—மங்கையர், மறந்தார், நடந்தார், அயர்கின்றார் என இயைந்து முடிவுறும். தலைவரல் - தோன்றுதல். கனவின் இன்சுவை என்றது, தம் கொழுநரோடு தாம் கூடியின்பம் நுகர்ந்ததாகக் கண்ட கனவினால் எய்திய அனுபவத்தை. கனம் - பாரம். குழல் - கூந்தல். சரிந்து என்னும் செய்தென் எச்சத்தைச் சரிய எனச் செயவென் எச்சமாகத் திரிக்க. கலை - உடை. சோர - நெகிழ. குழல் சரிய, கலை சோர, கொங்கைகள் ததும்பிட நடந்தார் என்க. மறந்தார் நடந்தார் என்பவை முற்றெச்சம். நனந்தலை - அகன்ற இடம். ததும்புதல் - அசைதல். அனந்தல் - உறக்கம். அழுங்கல் - வருந்தல். அயர்தல் - சோர்வுறுதல். (42)

3206. அங்கையி னரன்கயிலை
கொண்டதிற லையன்
றங்கைநிலை யிங்கிதுகொ
லென்றுதளர் கின்றார்
கொங்கையிணை செங்கையின்
மலைந்துகுலை கோதை
மங்கையர்க ணங்கையடி
வந்துவிழு கின்றார்.

“அங்கையின் அரன் கயிலை கொண்ட திறல் ஐயன்
தங்கை நிலை இங்கு இது கொல்?” என்று தளர்கின்றார்,
கொங்கை இணை செங்கையின் மலைந்து, குலை கோதை
மங்கையர்கள் நங்கை அடி வந்து விழுகின்றார்.

பொ :—கோலம் குலைந்த கூந்தலையுடைய அரக்கியர்கள், "சிவபிரானுடைய கயிலை மலையை உள்ளங்கையில் தாங்கிய ஆற்றல் வாய்ந்த தலைவனான இராவணனுடைய தங்கையின் நிலை இங்கே இத்திறமோ?" என்று சோர்கின்றவராய்த் தம்முடைய இரண்டு தனங்களையும் சிவந்த கைத்தலங்களால் தாக்கிக் கொண்டு வந்து சூர்ப்பணகையின் கால்களில் விழுவாராயினர்.

கு :—மங்கையர்கள் தளர்கின்றார், மலைந்து, வந்து விழுகின்றார் என முடிவுறும். அங்கை-அகங்கை; உள்ளங்கை. அரன் - சிவபிரான். திறல் - வலிமை. ஐயன் - தலைவன் (இராவணன்). இங்கு - இவ்விடத்தே. இங்கு அசையும் ஆம். இது என்பது உறுப்பறையான நிலையைச் சுட்டியது. மலைதல் - தாக்குதல். கோதை - கூந்தல். நங்கை என்றது சூர்ப்பணகையினை. (43)

**3207.** இலங்கையில் விலங்குமிவை
யெய்தலில வென்றும்
வலங்கையி லிலங்குமயின்
மன்னனுள னென்ன
நலங்கையி லகன்றதுகொ
னம்மினென நைந்தார்
கலங்கலில் கருங்கணிணை
வாரிகலுழ் கின்றார்.

"இலங்கையில் விலங்கும் இவை எய்தல் இல என்றும்,
வலம்கையில் இலங்கும் அயில் மன்னன் உளன் என்ன,
நலம் கையில் அகன்றதுகொல், நம்மின்?" என நைந்தார்,
கலங்கல் இல் கருங்கண் இணை வாரி கலுழ்கின்றார்.

பொ :—(வேறு சில மகளிர்) "வலக்கரத்தில் விளங்கும் வேற்படையையுடைய அரசன் (இராவணன்) உளன் என்ற காரணத்தால், இலங்கை நகரத்தில் உள்ள விலங்குகளும் இத்துன்பங்களை என்றும் அடைதலில்லை; (அப்படியிருக்கவும், சூர்ப்பணகைக்கு இத்துயர்நிலை நேர்ந்திருத்தலின்) நன்மை நம்மிடத்து நின்று நீங்கியதோ?" என்று வருந்தினவர்களாய்க் கலங்காத கரிய கண்களினின்று நீரொழுகுகின்றவராயினர்.

கு :—வேறு சில மகளிர் என்பது வருவித்துரைக்கலாயிற்று. இவை என்றது மூக்கறுதலும் காதறுதலுமாகியவற்றை. இலங்கையில் விலங்கும் என்றும் இவை எய்தல் இல என இயையும். விலங்கும்

எய்தாததெனவே சூர்ப்பணகை எய்திய துன்பமிகுதி பெறப்படும். வலங்கை - வலக்கை. அயில் - வேல். மன்னன் என்றது இராவணனை. இலங்கும் அயில் மன்னன் என்றதனால் அவன் மேற்கொள்ளும் காத்தற்றொழிற்கு உறுப்பான படையமைதி கூறியவாறு. அயிலைக் கூறவே வாள் முதலிய பிற படைக்கல வகைகளும் அடங்கும். நைதல் - வருந்துதல். கலங்கல் இல் கண், கருங்கண் என்க. களித்தலன்றிக் கலக்கம் அறியாத கண் என்றவாறு. வாரி - நீர். கலுழ்தல் - ஒழுகுதல். வாரி கலுழ்கின்றார் என்றது கண்ணீர் பெருக நின்று அழுவாராயினர் என்றவாறு. (44)

சூர்ப்பணகை இராவணனடிகளில் விழுந்து புரளுதல்

3208. என்றினைய வன்றுய ரிலங்கைநக ரெய்த
நின்றவ ரிருந்தவரொ டோடுநெறி தேடக்
குன்றினடி வந்து படி கொண்டலென மன்னன்
பொன்றிணி கருங்கழல் விழுந்தனள் புரண்டாள்.

என்று, இனைய வன் துயர் இலங்கை நகர் எய்த,
நின்றவர் இருந்தவரொடு ஓடும் நெறி தேடக்
குன்றின் அடி வந்துபடி கொண்டல் என, மன்னன்
பொன் திணி கருங்கழல் விழுந்தனள், புரண்டாள்.

பொ :—கூறப்பட்ட இத்தன்மையவான கொடிய துன்பத்தை இலங்கை நகரத்தார் அடைய, இராவணன் அவையில் அவனைக் காண வந்து நின்றவர்கள் இருந்தவர்களுடன் (இராவணன்பால் உண்டாகிய அச்சத்தால் அவையைவிட்டு) ஓடும் வழியைத் தேட, மலையின் அடிவாரத்தில் வந்து படியும் மேகம்போலச் சூர்ப்பணகை இராவணனுடைய பொன் செறிந்த பெரிய வீரக்கழலணிந்த அடிகளில் விழுந்து புரள்வாளாயினள்.

கு :—என்ற இனைய என்பது என்றினைய என்று ஆனது விகாரம். நகர் ஆகுபெயராய் நகரத்தாரை உணர்த்திநின்றது. ஓங்கி உயர்ந்த தோற்றத்தொடு பல தலைகளையும் உடைய இராவணனுக்கு அத் தோற்றத்தொடு பல சிகரங்களையும் உடைய மலையும், கரிய பெரிய உருவுடைமையால் சூர்ப்பணகைக்கு மேகமும் உவமை. கழல் ஆகுபெயராய் அடியை உணர்த்தியது. இனைய - இப்படிப்பட்ட. கொண்டல் - மேகம். மன்னன் என்றது இராவணனை. திணிதல் - செறிதல். கருங்கழல் - பெரிய கழல். (45)

## இராவணன் வெகுளியின் விளைவு 3209-3212

**3209.** மூடின திருட்படலை மூவுலகு முற்றச்
சேடனும் வெருக்கொடு சிரக்குவை நெளித்தா
ணூடின குலக்கிரி யருக்கனு மயிர்த்தா
ஞேடின திசைக்கரிக ளும்பரு மொளித்தார்.

மூடினது இருள் படலை மூவுலகும் முற்றச்
சேடனும் வெருக்கொடு சிரக் குவை நெளித்தான்,
ஆடின குலக் கிரி, அருக்கனும் அயிர்த்தான்,
ஓடின திசைக் கரிகள், உம்பரும் ஒளித்தார்.

பொ :—மூன்றுலகங்களிலும் முழுவதும் இருட்பரப்புக் கவிந்தது; ஆதிசேடனும் அஞ்சித் தன் பல தலைகளையும் நெளிப்பானாயினன்; குலமலைகள் அசைந்தன; சூரியனும் என்ன நேருமோ என்று ஐயுற வெய்தினன்; திசையானைகளும் நிலைவிட்டோடின; தேவரும் மறைவிடம் புக்கார்.

கு :—படலை - பரப்பு. மூவுலகும் முற்ற இருட்படலை மூடினது என மாறுக. வெரு - அச்சம். ஆதிசேஷனுக்கு ஆயிரம் தலையுண்மையால் சிரக்குவை என்றார். குலக்கிரி - குலமலை. குலமலைகள், இமயம் ஏமகூடம் கயிலை நிடதம் நீலகிரி மந்தரம் விந்தம் என ஏழு என்றும், அவை பூமியைத் தாங்கி நிற்பவை என்றும் கூறுவர். அருக்கன் - சூரியன். அயிர்த்தல் - ஐயுறல். திசைக்கரிகள் அயிராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புட்பதந்தம், சார்வபௌமம், சுப்பிரதீகம் என்பவை. (46)

**3210.** விரிந்தவல யங்கண்மிடை தோள்படர மீதிட்
டெரிந்தநய னங்களெயி றின்புற மெரிப்ப
நெரிந்தபுரு வங்கணெடு நெற்றியினை முற்றத்
திரிந்தபுவ னங்கள்வினை தேவரு மயர்த்தார்.

விரிந்த வலயங்கள் மிடை தோள் படர, மீதிட்டு
எரிந்த நயனங்கள் எயிறின் புறம் எரிப்ப,
நெரிந்த புருவங்கள் நெடு நெற்றியினை முற்றத்
திரிந்த புவனங்கள், வினை தேவரும் அயர்த்தார்.

பொ :—நெருங்கிய தோள்கள் (நரம்புகள் புடைத்துப்) பூரித்தலால் தோள்வளைகள் வாய்ப்பூட்டு நிமிர்ந்தன; பற்களின் புறத்தே

சுடும்படி கண்கள் மிக்கு எரிவனவாயின; புருவங்கள் நெடிய நெற்றி யின் எல்லையையடைய வளைந்தன; உலகங்கள் நிலை குலைந்தன; தேவரும் தம் தொழிலை மறந்தனர்.

கு:—மிடைதோள் படர வலயங்கள் விரிந்த; எயிறின்புறம் எரிப்ப நயனங்கள் மீதிட்டு எரிந்த; நெடு நெற்றியினை முற்றப் புருவங்கள் நெரிந்த; புவனங்கள் திரிந்த; தேவரும் வினை அயர்த்தார் என இயைந்து முடியும். மிடைதல் - நெருங்குதல். படர்தல் - பரவுதல்; பூரித்தல். வலயம் - தோள்வளை. விரிதல் - பூட்டுவாய் நெகிழ்தல். எயிறு - பல். எயிறின்புறம் என்றது மீசை முதலியவற்றை. எரிப்ப - சுட. நெரிதல் - வளைதல். அயர்த்தல் - மறத்தல். (47)

3211. தென்றிசை நமன்றனொடு தேவர்குல மெல்லா
மின்றிறுதி வந்தது நமக்கென விருந்த
நின்றுட னடுங்கவுயிர் விம்மிநிலை நில்லா
தொன்றுமுரை யாடலில ரும்பரினொ டிம்பர்.

தென் திசை நமன்தனொடு தேவர் குலம் எல்லாம்,
"இன்று இறுதி வந்தது நமக்கு" என இருந்த;
நின்று உடல் நடுங்க, உயிர் விம்மி நிலை நில்லாது,
ஒன்றும் உரையாடல் இலர் உம்பரினொடு இம்பர்.

பொ:—தெற்குத் திசைக்குத் தலைவனாகிய இயமனுடன் தேவர் கூட்டம் அத்தனையும் "இன்று நமக்கு முடிவு வந்துவிட்டது" என்று எண்ணி இராவணன் அவையுள் தத்தம் இடத்தே இருந்தன. (அங்கிருந்த) தேவரும் இவ்வுலகத்தாரும் உயிர் உடலிற் பொருந்தி நடுங்க, உடல் வருந்தி ஒரு நிலை நில்லாமல் ஒன்றும் பேசாராயினர்.

கு:—தேவர்குலம் என்றது தேவர்க்குத் தலைவராயுள்ள குழுவை. தேவர்குலம் என்றதற்கேற்ப இருந்த என அஃறிணை முடிவு கொடுக்கலாயிற்று. விரைவுபற்றி வந்தது என இறந்த காலத்தாற் கூறினர். குலம் – கூட்டம். இறுதி - முடிவு. எல்லார்க்கும் இறுதியை விளைப்பவனாகிய யமனும் இறுதி வந்ததென்று அஞ்சுவானாயினன் என்பதுபட அவனை முற்கூறினர். விம்மல் - வருந்தல். உம்பர் - மேலுலகத்தார்; தேவர். இம்பர் - இவ்வுலகத்தார்; மக்கள். (48)

### இராவணன் ‘இது செய்தார் யார்?’ என வினவுதல்

3212. மடித்தபில வாய்கடொறும் வந்துபுகை முந்தத்
துடித்ததொடர் மீசைகள் சுறுக்கொள வுயிர்ப்பக்
கடித்தகதிர் வாளெயிறு மின்கனல மேகத்
திடித்தவுரு மொத்துரறி யாவர்செய லென்ருன்.

மடித்த பில வாய்கள் தொறும் வந்து புகை முந்தத்
துடித்த தொடர் மீசைகள் சுறுக்கொள உயிர்ப்பக்
கடித்த கதிர் வாள் எயிறு மின் கனல, மேகத்து
இடித்த உருமு ஒத்து உரறி, “யாவர் செயல்?” என்ருன்.

பொ:—மடித்துள்ள குகைபோலும் வாய்தோறும் வெகுளித் தீயினல் புகை முற்பட்டுத்தோன்ற, துடித்த தொடர்ந்த மீசைகள் சுறுக்கொள்ளும்படி வெவ்வுயிர்ப்புத்தோன்ற, கடித்த ஒளிவாய்ந்த பற்களினின்று மின் சுடர்விட, மேகத்தினின்று முழங்கிய இடிபோலச் சினந்து அதட்டி, (இஃது) “எவர் செயல்” என்ருன்.

கு:—பிலம் - குகை. முந்துதல் - முற்படுதல். சுறுக்கொள்ளல் - சிகை முதலியன வெந்து தீயநாற்றம் எழுதல். கனலுதல் - சுடர் விடல். உருமு - இடி. உரறுதல் - அதட்டுதல். (49)

இச்செய்யுளின் பின் 45, 52-ஆம் பிரதிகளில் பின்வருமாறு ஒரு மிகைப்பாடல் காணப்படுகிறது.

3212 (a) என்றபொழு திற்கடி தெழுந்தலறி வாய்விட்
டன்றருகு நின்றபல தேவர்கண மஞ்சப்
புன்ரெழி லரக்கர்மன திற்புகை யெழும்பக்
கன்றிய மனத்தள் கழறுற்றிடுவ தானள்.

### சூர்ப்பணகை கூறுதல்

3213. கானிடை யடைந்துபுவி காவல்புரி கின்ருர்
மீனுடை நெடுங்கொடியி னேனையர் மேல்கீ
ழூனுடை யுடம்புடைமை யோருவமை யில்லார்
மானிடர் தடிந்தனர்கள் வாளுருவி யென்ருள்.

“கானிடை அடைந்து புவி காவல்புரிகின்ருர்,
மீன் உடை நெடுங்கொடியினேன் அனையர், மேல் கீழ்
ஊன் உடை உடம்பு உடைமையோர் உவமை இல்லார்,
மானிடர், தடிந்தனர்கள் வாள் உருவி;” என்ருள்.

பொ :—"காட்டிடை வந்து உலகு காவல் புரிகின்றவர்களும், மீனுருவமைந்த நீண்ட கொடியினையுடைய மன்மதனை ஒத்தவர்களும், வானுலகத்துள்ளும் மண்ணுலகத்துள்ளும் உள்ள தசையுடம்புடையோருள் ஒப்பாரை இல்லாதவர்களும் ஆகிய மானிடர், கத்தியை உருவிக் குறைத்தனர்'' என்று சொன்னாள்.

கு :—கான் என்றது தண்டகவனத்தை. கானிடை அடைந்து என்றது, உன்னால் யான் இருந்து வாழ்தற்கென்று வகுத்துத்தந்த தண்டகவனத்துள் வந்து என்றவாறு. கானிடையடைந்து புவி காவல் புரிகின்றார் என்றது, தமக்குரிய நாட்டிடையிருந்து அந்நாடு காவல்புரிவார் சிலர் உளர் ; இவர் அவர் போல்வாரல்லர்; காட்டிடை வந்து புகுந்து உலகு காவல் புரிகின்றவர்; இவர் வந்து புகுந்த காடும் இவர்க்குரியதன்று; நமக்குரியது. அங்கு வந்து காவல் புரிகின்றவர் என்றவாறு. காவல்புரிதலாவது தம்மை உற்றார்க்கு நல்லன புரிதலும் அவர் பகை தெறுதலும் ஆம். இது, 'தரையளித்த தனி நேமித் தயரதன்றன் புதல்வரியாம் தாய்சொற்றாங்கி, விரையளித்த கான்புகுந்தேம் வேதியரும் மாதவரும் வேண்ட நீண்டு, கரையளித்தற் கரியபடைக் கடலரக்கர் குலந்தொலைத்துக் கண்டாய்பண்டை, வரையளித்த குலமாட நகர்புகுவே மிது தெரிய மனக்கொள்' (சூர்ப்பணகைப். 136) என்று தன்பால் இராமன் கூறியதை நினைந்து சூர்ப்பணகை கூறியதாகும். மேல் - வானுலகு. கீழ் - மண்ணுலகு; பாதாளமும் ஆம். தடிதல்-குறைத்தல். மானிடர் வாள் உருவித் தடிந்தனர் என்க. கள் விகுதிமேல்விகுதி. (50)

## இராவணன் மீட்டும் வினவுதல்

**3214.** செய்தனர்கண் மானிட
 ரெனத்திசை யனைத்து
மெய்தநகை வந்தெரி
 சிந்தினக ணெல்லா
நொய்தவர் வலித்தொழி
 னுவன்றமொழி யொன்றோ
பொய்தவிர் பயத்தையொழி
 புக்கபுக லென்றான்.

"செய்தனர்கள் மானிடர்" எனத் திசை அனைத்தும்
எய்த நகைவந்தது; எரி சிந்தின கண் எல்லாம்;
"நொய்து அவர் வலித்தொழில்; நுவன்ற மொழி ஒன்றோ?
பொய் தவிர்; பயத்தை ஒழி; புக்க புகல்" என்றான்.

பொ: "மானிடர் செய்தனர்" என்று சூர்ப்பணகை சொல்ல (க் கேட்ட இராவணனுக்கு)த் திசைகளிலெல்லாம் ஒலியெழும்படி சிரிப்புத் தோன்றியது. அவன் கண்களெல்லாம் நெருப்பைச் சிந்தின; அவன், 'அந்த மானிடருடைய வல்லமைச் செயல் அற்ப மானது; நீ சொன்ன சொல் சத்தியமோ? (அன்று) பொய்; அப் பொய்யை விடு; அச்சத்தையும் நீக்கு; நிகழ்ந்தவற்றை (நிகழ்ந்த படி) சொல்' என்று கூறினன்.

கு:—மானிடர் செய்தனர் எனவும், கண் எல்லாம் எரி சிந்தின எனவும், அவர் வலித்தொழில் நொய்து எனவும் மாற்றி இயைக்க. செய்தனர்கள் என்பதனுள் கள் விகுதிமேல் விகுதி. செய்தனர்கள் மானிடர் என்பது, முன் பாட்டில், சூர்ப்பணகை கூற்ருகவந்த 'மானிடர் தடிந்தனர்கள் வாள் உருவி' என்பதைத் தழுவி அமைந்தது. நகை - சிரிப்பு. எரி - நெருப்பு. இருபது கண்களா தலின் கண் எல்லாம் என்றனர். நொய்து - அற்பம். ஒன்று - சத்தியம்; 'ஒன்றுரைத் துயிரினும் ஒழுக்கம் நன்று எனப் பொன்றிய புரவலன்' (அயோத்தியா, திருவடிசூட்டு. 24) என்பதனுள், ஒன்று சத்தியம் என்ற பொருளில் ஆசிரியரால் ஆளப்பட்டிருத்தலும் நோக்கத்தகும். ஒன்ரே என்பதனுள் ஓகாரம் எதிர்மறைப் பொரு ளுணர்த்திநின்றது. மானிடர் செய்தனர் என்று சொல்லக் கேட்ட இராவணன், அவமதிச் சிரிப்புச் சிரித்து, சூர்ப்பணகை உறுப்பழிந்தது கண்டு சீறி, 'மானிடர் இது செய்யும் ஆற்றலுடையரல்லர்; ஆதலால் உன் சொல் பொய்; யாது காரணத்தாலோ அச்சம் உற்றனே; பொய்யும் கூறுகிருய்; பொய் கூறுதலே விடு, அச்சத்தையும் அகற்று; நிகழ்ந்ததை நிகழ்ந்தபடி சொல்' என்றனன் என்றவாறு. (51)

இதன்பின் 45, 52-ஆம் பிரதிகளிற் காணப்படும் மிகைப்பாடல் வருமாறு.

3214 (a) என்பதை மனக்கொடிட ரேறிய கருத்தாள்
முன்பவுன் முகத்தினெதிர் பொய் மொழிய கில்லேன்
நின்பத நிஞேணயிது நீகருது வாயென்
றன்பினுரி யோர்நிலே யெடுத்தறைசெய் கிற்பாள்.

### சூர்ப்பணகை மீண்டும் கூறுதல் 3215-3220

**3215.** மன்மதனே யொப்பர்மணி மேனிவட மேருத்
தன்மத னழிப்பர்திர டோளின்வலி தன்ஞ
லென்னதனே யிப்பொழு திசைப்பதுல கேழி
னன்மத னழிப்பரொ ரிமைப்பினனி வில்லால்.

"மன்மதனை ஒப்பர் மணி மேனி; வட மேருத்
தன் மதன் அழிப்பர் திரள் தோளின் வலி தன்னால்;
என் அதனை இப்பொழுது இசைப்பது? உலகு ஏழின்
நல் மதன் அழிப்பர் ஓர் இமைப்பின் நனி வில்லால்."

பொ:—"அழகிய உடலால் மன்மதனை ஒப்பர்; திரண்ட தோளின்றிண்மையால் வடக்கிலுள்ள மேரு மலையின் அழகினையும் கெடுப்பர்; விற்றொழிலாற்றலால் ஓர் இமைப் பொழுதுள் ஏழுலகங் களின் வலிமையையும் மிக அழிப்பர்; அதனை இப்பொழுது சொல்லி என்ன பயன்?"

கு:—மணி - அழகு. மேனியால் என உருபு விரிக்க. மதன் என்பது அழகு வலிமை என்னும் இருபொருளும் தரும். மேருவுக்கு அழகாவது: ஓங்கியுயர்ந்த தோற்றப் பொலிவொடு திண்மையும் உடையதாதல். இராமலக்குவர் மேருமலையினும் ஓங்கியுயர்ந்த தோற்றப் பொலிவும் திண்மையும் வாய்ந்த தோளழகுடையர் என்ற வாறு. இச் செய்யுள்முதல் 3220-ஆம் செய்யுள்வரை இராமலக்குவ ரின் உருவும் திருவும் அறிவும் ஆற்றலும் முதலியவை பேசப்படு கின்றன. (52)

**3216.** வந்தனை முனித்தலைவர் பாலுடையர் வானத்
திந்துவின் முகத்தரெறி நீரிலெழு நாளக்
கந்தமல ரைப்பொருவு கண்ணர் கழல்கைய
ரந்தமிற வத்தொழில ராரவரை யொப்பார்.

"வந்தனை முனித்தலைவர்பால் உடையர்; வானத்து
இந்துவின் முகத்தர்; எறி நீரில் எழும் நாளக்
கந்த மலரைப் பொருவு கண்ணர், கழல், கையர்;
அந்தம் இல் தவத் தொழிலர்; ஆர் அவரை ஒப்பார்?"

பொ:—"முனித்தலைவர் பக்கல் வழிபாடு மேற்கொண்டவர்; வான மண்டலத்துள்ள நிறைமதி போலும் முகமுடையவர்; அலை மோதுகின்ற நீரிலே தோன்றும் தண்டுடைய நறுமணம் வாய்ந்த தாமரை மலரை ஒத்த கண்ணும் அடியும் கையும் உடையவர்; எல்லை யற்ற தவவொழுக்க முடையார், அவரை ஒப்பவர் ஆர் உளர்? (ஒருவரும் இல்லை)."

கு:—வந்தனை - வழிபாடு. முனித்தலைவர்பால் வந்தனையுடையர்: என்க. இந்து - சந்திரன். எறிதல் - அலைவீசுதல். எழுதல் - தோன்றுதல். நாளம் - தண்டு. கந்தம் - மணம். பொருவுதல் -

ஒத்தல். கழல் - அடி. அந்தம் - முடிவு. ‘கந்தமலரைப் பொருவு கண்ணார் கழல் கையர்’ என்பது, ‘கைவண்ணம் தாமரைவாய் கமலம் போலும் கண்ணிணையும் அரவிந்தம் அடியும் அஃதே’ (திவ்ய. திருநெடுந். 21) என்னும் அருளிச்செயலை அடியொற்றி யெழுந்தது. (53)

3217. வற்கலையர் வார்கழலர் மார்பினணி நூலர்
விற்கலையர் வேதமுறை நாவர்தளிர் மெய்ய
ருற்கலைய ருன்னையொர் துகட்டனையு முன்னுர்
சொற்கலை யெனத்தொலைவி றூணிகள் சுமந்தார்.

“வற்கலையர், வார்கழலர், மார்பின் அணி நூலர்,
வில் கலையர், வேதம் உறை நாவர், தளிர் மெய்யர்,
உற்கு அலையர், உன்னை ஓர் துகட்டனையும் உன்னுர்,
சொல் கலை எனத் தொலைவு இல் தூணிகள் சுமந்தார்.”

பொ :—“மரவுரியுடையர்; பெரிய கழல்களை யணிந்தவர்; மார்பி லணிந்த முந்நூலினையுடையர்; வில்வேதத்தை அறிந்தவர்; வேதங்கள் தங்கிய நாவினையுடையர்; தளிர்போலும் (மென்மை வாய்ந்த) மெய்யினையுடையார். உன்னல் வருந்துதலடையார்; உன்னை ஓர் அணுவளவும் மதியார்; கொள்ளக்கொள நயந்தரும் புகழ் வாய்ந்த நூல்போலக் கொள்ளக்கொள்ள (க் குறையாது) மிகுகின்ற தூணிகளைத் தாங்கியவர்.”

கு :—வற்கலை - மரவுரி. கழல் - வீரக்கழல். விற்கலை - வில் வேதம். உற்கு - உன்னல். அலையார் என்பது அலையர் என்றுனது விகாரம். துகள் - தூசி. தனை - அளவு. உன்னல் - நினைதல் = மதித்தல். சொல் - புகழ். கலை - நூல். தொலைதல் - குறைதல். தூணி - அம்புப்புட்டில். ‘பேடிப்போர் வல்லரக்கர் பெருங்குலத்தை யொருங்கவிப்பான் தேடிப்போந்தனம்’ (சூர்ப்ப. 123) ‘நின் அன்னை தன்னை நல்கும் தாடகையை யுயிர்கவர்ந்த சரம் இருந்தது’ (சூர்ப்ப. 135) ‘தரையளித்த தனிநேமித்......வேதியரும் மாதவரும் வேண்ட ......கடலரக்கர் குலம் தொலைத்து......நகர்புகுவேம்’ (சூர்ப்ப. 136) ‘வெறித்தாரை வேலரக்கர் விறலியக்கர் முதலினர் நீமிடலோரென்று, குறித்தாரை யாவரையும் கொணருதியேல் நின்னெதிரே கோறும்’ (சூர்ப்ப. 137) என்று இராமன்கூறக் கேட்டவளாதலின், ‘நின்னையொர் துகட்டனையும் உன்னுர்’ என்றுள். ‘ஒன்றும் நோக் கலருன்வலி’ (கரன்வதை. 5) என்று சூர்ப்பணகை கரனிடம் கூறு தலும் இங்கு நோக்கத்தகும். ‘சொற்கலை’ என்பதற்குச் ‘சொற்

களின் வடிவமாகவுள்ள சாத்திரம்' எனவும், 'சொல்லின்கலை என்னும் இலக்கண சாத்திரம் எனவும் உரைவரைந்தாரும் உண்டு. நூல்கள் படிக்கப் படிக்க நயங்களைத் தருதல்போல இராமலக்குவர் புயத்திற் பிணித்த தூணிகளும் எடுக்க எடுக்க அம்புகளைத் தந்து கொண்டேயிருக்கும் என்றவாறு. 'சொற்கலை முனிவன்' (பால. மிதிலைக். 5) 'தெய்வப்பாடற் சொற்கலை' (பால. பூக்கொய். 23) என்பவற்றுள்ளும் சொற்கலை ஆளப்பட்டமை காணலாம். (54)

3218. ஆறுமன மஞ்சின மரக்கரை யெனச்சென்
றேறுநெறி யந்தண ரியம்பவுல கெல்லாம்
வேறுமெனு நுங்கள்குலம் வேரொடு மடங்கக்
கோறுமென முந்தையொரு சூளுறவு கொண்டார்.

"'ஆறும் மனம் அஞ்சினம் அரக்கரை' எனச் சென்று
ஏறும் நெறி அந்தணர் இயம்ப, 'உலகு எல்லாம்
வேறும்' எனும் நுங்கள் குலம் 'வேரொடும் அடங்கக்
கோறும்' என முந்தை ஒரு சூளுறவு கொண்டார்."

பொ :—"சிறந்த ஒழுகலாறுடைய முனிவர்கள் சென்று, 'அமைதி யுற்ற மனம் அரக்கர் திறத்து அஞ்சும் நிலையினை அடைந்தோம், (அவ் வச்சத்தைப் போக்கியுதவுக)' என்று கூற, "உலகம் அனைத் தையும் வெல்வோம்' என்னும் செருக்குடைய உங்கள் குலம் முழு வதையும் வேரோடு அழிப்போம்" என்று முன்னமே ஒரு சபதம் கூறி உறுதி மேற்கொண்டவர்கள்."

கு :—ஆறுதல் - அமைதியடைதல். 'உலகெல்லாம் வேறும்' என்பது இராவணன் முதலியோர் உட்கோளை மேற்கொண்டு கூறியது. அரக்கர் குலத்தை நம்குலம் என்னாது நுங்கள் குலம் என்றாள் இராமன்மீது கொண்ட காதல் மிகுதியால். நுங்கள் குலம் அடங்க வேரொடு கோறும் என இயைக்க. முந்தை - முன்னே. சூளுறவு - சபதம். 'வேதியரும் மாதவரும் வேண்ட நீண்டு கரை யளித்தற்கரிய படைக் கடலரக்கர் குலம் தொலைத்துக் கண்டாய் பண்டை, வரையளித்த குலமாட நகர் புகுவேம்' (சூர்ப்பணகைப். 136) என்று இராமன் தன்பால் கூறியதை உட்கொண்டு, 'நுங்கள்குலம் வேரொடும் அடங்கக் கோறும் என முந்தை ஒரு சூளுறவு கொண் டார்' என்றாள். (55)

3219. மாரருள ரேயிருவ ரோருலகின் வாழ்வார்
வீரருள ரேயவரின் வில்லதனின் வல்லா
ராரொருவ ரன்னவரை யொப்பவர்க ளையா
வோரொருவ ரேயிறைவர் மூவரையு மொப்பார்.

"மாரர் உளரே இருவர் ஓர் உலகின் வாழ்வார்?
வீரர் உளரே அவரின் வில்லதனின் வல்லார்?
ஆர் ஒருவர் அன்னவரை ஒப்பவர்கள்? ஐயா!
ஓரொருவரே இறைவர் மூவரையும் ஒப்பார்."

பொ:—"ஐயா! மாரர் இருவர் ஒருலகில் (ஒருகாலத்தில்) வாழ்வார் உளரோ? (இல்லை); விற்றொழிலில் அவர்களைப்போல வல்லவரான வீரர் இருக்கின்றார்களா? (இல்லை). அவர்கள் ஒவ்வொருவரும் பெருந்தேவர் மூவரையும் ஒப்பர்; ஆதலால் அவர்களை ஒப்பவர் பிறர் ஒருவர் எவர் இருக்கிறார்கள்? (ஒருவரும் இல்லை)."

கு:—"ஐயா! மாரர் இருவர் ஓருலகின் வாழ்வார் உளரே? வில்லதனின் அவரின் வல்லார் வீரர் உளரே? (அவருள்) ஓரொருவரே இறைவர் மூவரையும் ஒப்பார், (ஆதலின்) ஆர் ஒருவர் அன்னவரை ஒப்பவர்கள்: என இயைத்துக் கொள்க. மாரன் - மன்மதன். வில் - விற்றொழில்; ஆகுபெயர். அவரினும் வல்லார் என்றுரைத்தலும் ஆம். அன்னவர் - அவர்கள். அவர், அன்னவர் என்பவை இராமலக்குவரைச் சுட்டிநின்றன. ஐயன் - தந்தை (பிங்கலம்). தமையன், தந்தையைப்போல மதிக்கத்தக்கவனாதலின், ஐயா! என்று விளித்தாள்; பின் 75-ஆம் செய்யுளில் ஐயா! எனவும், 80-ஆம் செய்யுளில் எந்தாய் எனவும், 63, 68, 70, 77-ஆம் செய்யுட்களில் ஐய! எனவும் விளித்தமையும் இங்கு நோக்கத்தகும். ஐ-வியப்பு; வியக்கத்தக்க அறிவாற்றல்களுடையவன் என்பதுபட ஐயா என்றாள் எனலும் ஆம். இறைவர் - முதற்கடவுளர். முன், மீனுடை நெடுங் கொடியினோன் அனையர்' (50) என்று கூறியவள், இவர் இருவர், அவன் ஒருவன், உருவிலி; ஆதலின் ஒவ்வான் என்பது தோன்ற, 'மாரருளரே யிருவரோருலகின் வாழ்வார்' என்றாள். கரன் முதலிய பெருவீரர்திரளை மூன்று நாழிகையுள் அழித்த வில்வலி கண்ணாற் கண்டவளாதலின், 'வீரருளரே யவரின் வில்லதனின் வல்லார்? என்றாள். இராமலக்குவரைப்போலப் பேரழகும் பேராற்றலும் ஒருங்கு வாய்ந்தார் பிறரில்லை; இவருள் ஓரொருவரே பேரழகும் பேராற்றலும் ஒருங்கு வாய்ந்த இறைவர் மூவரையும் ஒப்பர்; ஆதலால் இவரைத் தனித் தனி ஒப்பார் பிறர் ஒருவர் இல்லை என்றவாறு. ஓரொருவரே இறைவர் மூவரையும் ஒப்பார் என்றது, இவருள் ஒவ்வொருவரும் முப்பெருங் கடவுளரும் இயற்றும்

படைத்தல் காத்தல் அழித்தல் என்னும் முத்தொழிலும் ஆற்றவல்லார் என்பது குறித்தது. இது, 'கானிடையடைந்து' (50) என்று தொடங்கும் பாடலின் விளக்கமாய் அமைந்தது. (56)

**3220.** தராவலய நேமியுழ வன்றயர தப்பேர்ப்
பராவரு நலத்தொருவன் மைந்தர்பழி யில்லார்
விராவரு வனத்தவன் விளம்பவுறை கின்ரு
ரிராமனு மிலக்குவனு மென்பர்பெய ரென்ருள்.

"தரா வலய நேமி உழவன் தயரதப் பேர்ப்
பராவரு நலத்து ஒருவன் மைந்தர், பழியில்லார்,
விராவரு வனத்து அவ்ன் விளம்ப உறைகின்ருர்,
இராமனும் இலக்குவனும் என்பர் பெயர்" என்ருள்.

பொ :—"நிலவட்டத்தைத் தன் ஆணையாழியால் உழு(து திருத்து)ம் தயரதன் என்னும் பெயரையுடைய புகழ்தற்கரிய குணங்களால் ஒப்பற்ற சக்கரவர்த்தியின் புதல்வர்கள் ; குற்றமற்றவர்கள் ; அவன் கட்டளையால் புகுதற்கரிய வனத்துள் உறைகின்றனர் ; அவர் பெயர் இராமன் இலக்குவன் என்று கூறுவர்" என்ருள்.

கு :—தராவலயம் வடசொற்ருெடர். தரா - தரை. வலயம் - வட்டம். நேமி - சக்கரம். நேமியுழவன் என்பதனேடு, 'வாள் உழவன்' (1478) 'வரிசிலையுழவன்' (சரபங்கன். 38) 'ஆழியுழவன்' (அகத்தியப். 53) என முற்கூறியதும் நோக்கத்தகும். பராவுதல் - புகழ்தல். நலம் - குணம் ; 'பிறர் தீமை சொல்லா நலத்தது சால்பு' (984) என்னும் திருக்குறளுள், நலம் குணம் என்னும் பொருளிற் பயின்றமை காணலாம். 'அருமைசெய்குணத்தின் என்துணைவன்' (சடாயுகாண். 15) என்று சடாயு தயரதனைக் கூறுதலும் நோக்கத் தகும். தன்னை உறுப்பழித்தோட்டியதனல் சினமிக்க நிலையிலும், சூர்ப்பணகை இராமலக்குவரைப் பழியில்லார் என்பதனல், அவர்பால் பகைவரும் பாராட்டுமாறு அமைந்த நேர்மை புலனகும். விராவுதல் - கலத்தல் - புகுதல். அவன் என்றது தசரதனை. இராமனும் இலக்குவனும் என்ற தொடருள் உம் எண்ணுப் பொருளிற் பயின்றது. தன்னை உறுப்பறையாக்கியவர் பெயர் முதலிய விவரமும் அவர் வனத்தில் உறைதற்குக் காரணமும் இதனல் கூறியவாறு. (57)

45, 52-ஆம் பிரதிகளில் இச்செய்யுளின்பின் பின்வருமாறு ஒரு மிகைச் செய்யுள் காணப்படுகிறது.

3220 (a) ஈதவர்கள் தங்கள்செய லென்றவ ளுரைப்பக்
கோதுறு மனத்தெரி பிறந்துகுறை நாளின்
மோதுவட வைக்கனல் முகந்துலக மெல்லாங்
காதுறு சினத்தனித னக்கழறு கின்றுன்.

## இராவணன் நொந்து கூறுதல் 3221-3224

3221. மருந்தனைய தங்கைமணி
நாசிவடி வாளா
லரிந்தவரு மானிட
ரரிந்துமுயிர் வாழ்வார்
விருந்தனைய வாளொடும்
விழித்திறையும் வெள்கா
திருந்தன னிராவணனு
மின்னுயிர்கொ டின்னும்.

"மருந்து அனைய தங்கை மணி நாசி வடி வாளால்
அரிந்தவரும் மானிடர், அரிந்தும் உயிர்வாழ்வார் ;
விருந்து அனைய வாளொடும் விழித்து, இறையும் வெள்காது
இருந்தனன் இராவணனும் இன் உயிர்கொடு இன்னும் !"

பொ :—"அமுதுபோல் அரியளாகிய தங்கையின் அழகிய மூக்கினைக் கூரிய வாளால் அரிந்தவரும் மானிடர் ; அரிந்தும் அவர் உயிர்வாழ்ந்துகொண்டிருக்கிறுர்கள் ; இராவணனும் விருந்து போன்ற வாளுடன் கண்ணை அகல விழித்து, (தங்கை மூக்கிழந்த நிலையினைப்) பார்த்துக்கொண்டு சற்றும் வெட்கப்படாமல் உயிரைத் தாங்கிக்கொண்டு இன்னும் இருக்கின்றுன் !"

கு :—மருந்து - அமுதம். தன்னுல் அன்பு செய்யப்பட்ட ஒரே தங்கையாதலின் மருந்தனைய தங்கை என்றுன். மணி - அழகு. நாசி - மூக்கு. வடி - கூர்மை. அரிதல் - அறுத்தல். அரிந்தும் உயிர் வாழ்வார் என்றது, அரியப்புக்கபோதே அவர் கொல்லப்பட்டிருக்கவேண்டும் ; அங்ஙனமின்றி, அரிந்தபின்னும் அவர் வாழ்கின்றனர் என்றவாறு. இராவணனும் வாளொடும் இன்னுயிர் கொடு இன்னும் இருந்தனன் என இயைக்க. இதனுல், தன் தங்கையைத் தம் கைவாள்கொண்டு மூக்கரிந்தாரைத் தன் கைவாள் கொண்டு தடிந்தழியாமலும், அஃதியலாதேல் மானங் காக்க அவ்வாளால் தன்னை முடித்துக்கொள்ளுதல் செய்யாமலும் அவ் வீரவாளும் மாசுபடக் கைக்கொண்டு உயிரோம்பி யிருந்தான்

என்றவாறு. குடிப்பிறப்புடையார், மானம் அழியநேரின் உயிர் துறப்பர். 'மருந்தோமற் றூனோம்பும் வாழ்க்கை' பெருந்தகைமை பீடழிய வந்தவிடத்து', 'மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்னார், உயிர்நீப்பர் மானம் வரின்' (968, 969) என்பது பொய்யாமொழி. விருந்தனைய வாள் என்றது, விருந்தினரைப் போலப் பூசித்துப் போற்றிக் கொள்ளப்பட்ட வாள் என்றவாறு. இருந்தனன் இராவணனும் என்றது, இராவணன் தன்னைப் பிறன்போலக் கருதிப் பேசியது; தன்மையிடத்துப் படர்க்கை வந்த இடவழு வமைதி. இராவணனும் என்பதனுள் உம் உயர்வு சிறப்புணர நின்றது. (58)

3222. கொற்றமது முற்றிவலி யாலரசு கொண்டே
னுற்றபயன் மற்றிதுவொல் காவுரை யிறந்தேன்
முற்றவுல கத்துமுதல் வீரர்முடி யெல்லா
மற்றபொழு தத்திது பொருந்துமென லாமே.

"கொற்றமது முற்றி, வலியால் அரசு கொண்டேன்
உற்ற பயன் மற்று இது; ஒல்கா உரை இறந்தேன்;
முற்ற உலகத்து முதல் வீரர் முடியெல்லாம்
அற்றபொழுதத்து இது பொருந்தும் எனல் ஆமே?"

பொ:—"வெற்றி நிரம்பி ஆற்றலால் மூன்றுலகும் ஆளும் அரசுரிமையையும் அடைந்த யான் அடைந்த பயன் (என் தங்கையின் மூக்கறுதலாகிய) இது; (இதனால்) என்றும் அழியாத புகழையும் இழந்தேன். உலக முழுதும் உள்ள சிறந்த வீரர் தலையெல்லாம் அற்றபொழுதும், அறுந்த இவள் மூக்குப் (பழையபடி) பொருந்தும் என்று சொல்லல் ஆகுமே? (ஆகாது)."

கு:—கொற்றமாகிய அது என்க. கொற்றம் - வெற்றி. முற்று தல் - நிரம்புதல். வலி - ஆற்றல். அரசு ஆளும் இடம் சுட்டாமை யால் மூன்றுலகும் கொள்ளப்பட்டன. இது என்பது சூர்ப்பண கையின் மூக்கற்ற நிலையினைச் சுட்டிநின்றது. ஒல்கல் - அழிதல். உரை - புகழ். இறத்தல் - அழிதல். இறுதி ஏகாரம் எதிர்மறைப் பொருளிற் பயின்றது. ஒல்காவுரை என்பது, "ஒன்றா வுலகத் துயர்ந்த புகழல்லாற், பொன்றாது நிற்பதொன் றில்" (233) என்னும் பொய்யாமொழியைத் தழுவியமைந்தது. அரசும் கொண்டேன் எனவும், 'அற்ற பொழுதத்தும்' எனவும் உம்மை விரிக்க. (59)

3223. மூளுமுள தாயபழி யென்வயின் முடித்தோ
ராளுமுள வாமவர தாருயிரு முண்டாம்
வாளுமுள தோதவிட முண்டவன் வழங்கு
நாளுமுள தோளுமுள நானுமுளெ னன்றே.

"மூளும் உளதாய பழி என்வயின் முடித்தோர்
ஆளும் உளவாம், அவரது ஆர் உயிரும் உண்டாம்,
வாளும் உளது, ஓத விடம் உண்டவன் வழங்கும்
நாளும் உள, தோளும் உள, நானும் உளென் அன்றே?"

பொ :—"என் திறத்து மேலும் மேலும் கிளைக்கின்ற நிலைத்த பழியைச் செய்தவர்களுடைய ஆண்டன்மைகளும் உளவாம்; அவர்களுடைய அரிய உயிர்களும் உள்ளனவாம்; கடலில் தோன்றிய (ஆலகாலம் என்னும்) நஞ்சினை உண்ட சிவபிரான் வழங்கிய வாளும் (என் கையில்) உள்ளது; அப்பெருமான் வழங்கிய வாழ்நாட்களும் உள்ளன; இருபது தோள்களும் உள்ளன; நானும் இருக்கின்றேனன்றே?"

கு :—மூளுதல் - பல்கியெழுதல். உளதாதல் - என்றும் அழியாது நிலைத்தல். மூளும்பழி, உளதாய பழி என்க. முடித்தல் - செய்தல். ஆள் - ஆண் தன்மைகள். உளவாம் உண்டாம் என்பவற்றுள், ஆம் அவை உளவாதல் இராவணனுக்கு விருப்பமன்று என்பது குறித்தது. ஓதம்-கடல். நாள்-வாழ்நாள். ஓதவிடமுண்டவன் வழங்கும் என்பது இடைநிலை விளக்காய், ஓதவிடம் உண்டவன் வழங்கும் வாள் எனவும், ஓதவிடமுண்டவன் வழங்கும் நாள் எனவும் கொள்ள நின்றது. என் தங்கையை மூக்கரிந்து பழிவிளைத்தோர் வீரப்பாட்டிற் குறைபாடின்றி உயிர் வாழ்ந்து கொண்டிருக்க, நானும் வீரன் போலச் சிவபிரான் அளித்த வாளும் நாளும் தோளும் மாசுபட உயிர் வாழ்ந்து கொண்டிருக்கின்றேன் என்று தன்னை நொந்து கூறியவாறு. (60)

3224. புத்துற வுறப்பழி புகுந்ததென நாணித்
தத்துறுவ தென்னைமன னேதளர லம்மா
வெத்துய ருனக்குள தினிப்பழி சுமக்கப்
பத்துள தலைப்பகுதி தோள்கள் பலவன்றே.

"புத்துறவு உறப் பழி புகுந்தது என நாணித்
தத்துறுவது என்னை? மனனே! தளரல்; அம்மா!

எத்துயர் உனக்கு உளது? இனிப் பழி சுமக்கப்
பத்து உள தலைப் பகுதி; தோள்கள் பல அன்றோ!"

பொ :—"மனமே! பழி நம்மிடம் புதிய வுறவுகொண்டாட வந்து புகுந்தது என்று கவலை அடைவதேன்? சோர்வுறேல்; இனிப் பழியினைச் சுமக்கப் பத்துத் தலைகள் உள்ளன; தோள்களும் பல உள்ளன; உனக்கு எத்துன்பம் உள்ளது? (உனக்கு ஒரு துன்பமும் இல்லை)."

கு :—புத்துறவு - புதிய வுறவு. பழி புத்துறவுறப் புகுந்தது என இயைக்க; இதுகாறும் இல்லாதிருந்த பழி இப்பொழுது உண்டாகிய தென்றவாறு. தத்து - கவலை. மனன் - மனம். (61)

## இராவணன் மீட்டும் வினவல்

3225. என்றுரை செயாநகை செயாவெரி விழிப்பான்
வன்றுணை யிலாவிருவர் மானிடரை வாளாற்
கொன்றிலர்க ளாநெடிய குன்றுடைய கானி
னின்றகர னேமுதலி னோர்நிருத ரென்றான்.

என்று உரைசெயா, நகைசெயா, எரி விழிப்பான்,
"வன் துணை இலா இருவர் மானிடரை வாளால்
கொன்றிலர்களா, நெடிய குன்றுடைய கானில்
நின்ற கரனே முதலினோர் நிருதர்?" என்றான்.

பொ :—என்று சொல்லிச் சிரித்து நெருப்புப் பறக்க விழிப்பவனான இராவணன், (சூர்ப்பணகையை நோக்கி) "ஓங்கிய மலைகளையுடைய (தண்டக) வனத்தில் (உனக்கு வலிய துணையாய்) நின்ற கரன் முதலிய அரக்கர், தம் வாட்படையால் வலிய துணையில்லாத மானிடர் இருவரையும் கொல்லவில்லையா?" என்று வினவினான்.

கு :—என்று என்பது, முன் பாடல்களில் கூறியவற்றின் அநுவாதம். எரி விழித்தல் - எரி பறக்க விழித்தல்=உருத்து நோக்குதல். எரி - நெருப்பு. 'தீ விழித்து' (திருப்பாவை. 23) என்பது அருளிச் செயல். 'நீ உடன்று நோக்கும்வாய் எரிதவழ' (38) என்பது புறநானூறு. நகைத்தலும் எரிவிழித்தலும் வெகுளியால் நிகழ்ந்தன. இராமலக்குவரின் எளிமை தோன்ற, 'வன்றுணையிலா விருவர் மானிடர்' எனவும், கரன் முதலியோ ராற்றலும் துணைவலியும் படை வலிமிகுதியும் தோன்றக் 'கரனே முதலினோர் நிருதர்' எனவும் கூறினான். (62)

## சூர்ப்பணகை கரன் முதலியோர் இறந்தமை சொல்லல் 3226-3227

3226. அற்றவ னுரைத்த லோடு
★ மழுதிழி யருவிக் கண்ண
ளெற்றிய வயிற்றள் பாரி
னிடைவிழுந் தேங்கு கின்றாள்
சுற்றமுந் தொலைந்த தைய
நொய்தெனச் சுமந்த கைய
ளுற்றது தெரியும் வண்ண
மொருவகை யுரைக்க லுற்றாள்.

அற்று அவன் உரைத்தலோடும்,
அழுது இழி அருவிக் கண்ணள்,
எற்றிய வயிற்றள், பாரி
னிடை விழுந்து ஏங்குகின்றாள்,
"சுற்றமும் தொலைந்தது ஐய!
நொய்து" எனச் சுமந்த கையள்,
உற்றது தெரியும்வண்ணம்
ஒருவகை உரைக்கலுற்றாள்.

பொ :—இராவணன் அது சொல்லலும், அழுதலால் அருவி போல நீர் பெருகுகின்ற கண்ணையுடையவளும், வயிற்றிலடித்துக் கொண்டு நிலத்தில் விழுந்து தளர்பவளும் ஆன சூர்ப்பணகை, (இராவணனை நோக்கி) "ஐய! கரன் முதலிய சுற்றமும் எளிதின் அழிந்தது" எனத் தலைமிசைத் தாங்கிய கையளாய், நிகழ்ந்ததை (இராவணன்) அறியும்படி ஒருவாறு கூறுவாளாயினாள்.

கு :—அற்று என்றது, முன் பாட்டில் இராவணன், 'வன்துணை யிலா விருவர் மானுடரை வாளால் கொன்றிலர்களா நெடிய குன்றுடைய கானில் நின்ற கரனே முதலினோர் நிருதர்' என்று சூர்ப்பணகையிடம் வினவியதனைச் சுட்டியது. நொய்து - எளிது; விரைவும் ஆம். சுற்றமுந் தொலைந்தது என்பது முடிவு. தொலைந்த வாறு பின்வரும் பாடலால் கூறப்படும். சுற்றமும் என்பதனுள் உம்மை, என் மூக்கு முதலிய உறுப்புக்கள் தொலைந்ததோடு என முன் நிகழ்ச்சியையும் உணர்த்திநின்றது. (63)

3227. சொல்லென்றன் வாயிற் கேட்டார்
தொடர்ந்தெழு சேனை யோடுங்
கல்லென்ற வொலியிற் சென்றார்
கரன்முதற் காளை வீர
ரெல்லொன்று கமலச் செங்க
ணிராமனென் றிசைத்த வேந்தல்
வில்லொன்றிற் கடிகை மூன்றி
லேறினர் விண்ணி னென்றாள்.

“சொல் என்தன் வாயில் கேட்டார்,
தொடர்ந்து எழு சேனையோடும்
கல் என்ற ஒலியில் சென்றார்,
கரன் முதல் காளை வீரர்
எல் ஒன்று கமலச் செங்கண்
இராமன் என்று இசைத்த ஏந்தல்
வில் ஒன்றில் கடிகை மூன்றில்
ஏறினர் விண்ணின்” என்றாள்.

பொ :—“கரன் முதலிய காளைப் பருவம் உடைய வீரர், ‘என் வாயில் எழுந்த சொல்லைக் கேட்டுப் பின் தொடர்ந்தெழுந்த படையொடும் கல் என்றெழுந்த பேராரவாரத்தோடும் சென்று, சூரிய கிரணங்கள் படிந்த தாமரை மலர் போன்ற சிவந்த கண்களையுடைய இராமனென்று சொல்லப்பட்ட பெருமையான் மேம்பாடுடையானது ஒரே வில்லால் மூன்று நாழிகைப் பொழுதினுள் மேலுலகடைந்தனர்” என்று கூறினாள்.

கு :—என் வாயிற் சொல் கேட்டார் என இயைக்க. தன் சாரியை. சொல் என்றது, ‘இருவர் மானிடர்.........துண்ட மாக்கினர் மூக்கு’ எனச் சூர்ப்பணகை கரனிடம் கூறிய சொல்லை. கேட்டார் சென்றார் என்பவை, கேட்டு, சென்று என எச்சப் பொருளிற் பயின்றன. எல் - சூரியன். கமலச் செங்கண் இராமன் என்றமையால் சூர்ப்பணகை இராமன் கண்ணழகில் மிகவும் ஈடுபட்டமை புலனாகிறது. ‘நளின நாட்டத்தான்’ (சூர்ப்பணகைப். 18) என்றாள் முன்னும். ஏந்தல் - பெருமையிற் சிறந்தோன். கடிகை - நாழிகை. இராமன் கரன் முதலியோரை மூன்று நாழிகைப் பொழுதுள் கொன்றொழித்தமை, ‘இன்னலம்பர வேந்தற் கியற்றிய பன்னலம் பதினாலாயிரம் படை, கன்னல் மூன்றிற் களப்படக் கால்வளை, வின்னலம்’ (சுந்தர. 351) என்று பிராட்டி கூற்றுள்ளும் குறிக்கப்பட்டது. (64

## இராவணன் இரக்கமும் வெகுளியும் ஒருங்கெய்துதல்

3228. தாருடைத் தானை யோடுந்
தம்பியர் தமியன் செய்த
போரிடை மடிந்தா ரென்ற
வுரைசெவி புகாத முன்னங்
காரிடை யுருமின் மாரி
கனலொடு பிறக்கு மாபோ
னீரொடு நெருப்புக் கான்ற
நிறைநெடுங் கண்க ளெல்லாம்.

தார் உடைத் தானையோடும் தம்பியர், தமியன் செய்த
போரிடை மடிந்தார் என்ற உரை செவி புகாத முன்னம்,
காரிடை உருமின் மாரி கனலொடு பிறக்குமாபோல்,
நீரொடு நெருப்புக் கான்ற நிறைநெடுங் கண்கள் எல்லாம்.

பொ:—மாலை சூடிய படையொடு தம்பிமாரும், துணையில்லாத ஒருவன் செய்த போரில் இறந்துபட்டனர் என்று சூர்ப்பணகை கூறிய சொல் காதுகளில் நுழையுமுன், மேகத்தின்கண் இடியொடு கூடிய மழை நெருப்பொடு பிறத்தல் போல, இராவணனுடைய நிறைந்த நெடிய கண்கள் நீரையும் நெருப்பையும் சிந்துவவாயின.

கு:—தார் - அணிவகுப்புமாம். தம்பியர் என்றது கரதூடணரை. தமியன் என்றது இராமனை. காலுதல் - கக்குதல்; சிந்துதல். இராவணனுடைய கரிய பெரிய வுருவுக்கு மேகமும், அவனுடைய கண்களிலிருந்து நீரும் நெருப்பும் வெளிப்படற்கு மேகத்திலிருந்து மழையும் மின்னலும் பிறத்தலும் உவமை. தம்பியர் இறந்தமையால் கண்ணீர் பெருகிற்று. தம்பியரைத் தடிந்தான்மேல் வெகுளி யெழுதலால் கண்களிலிருந்து நெருப்புப் பொறிகள் சிந்தின. (65)

## இராவணன் சூர்ப்பணகையை நீ அவர்க்கு இழைத்த குற்றம் என்? என வினவுதல்

3229. ஆயிடை யெழுந்த சீற்றத்
தழுந்திய துன்ப மாழித்
தீயிடை யுகுக்கு நெய்யிற்
சீற்றத்திற் கூற்றஞ் செய்ய

நீயிடை யிழைத்த குற்ற
மென்னைகொ னின்னை யின்னே
வாயிடை யிதழு மூக்கும்
வலிந்தவர் கொய்ய வென்றான்.

ஆயிடை எழுந்த சீற்றத்து
அழுந்திய துன்பம் ஆழித்
தீயிடை உகுக்கும் நெய்யில்
சீற்றத்திற்கு ஊற்றம் செய்ய,
“நீ இடை இழைத்த குற்றம்
என்னை கொல்? நின்னை இன்னே
வாயிடை இதழும் மூக்கும்
வலிந்து அவர் கொய்ய?” என்றான்.

பொ:—அப்பொழுது (தம்பியரைக் கொன்றவன் மேல்) கிளர்ந்த வெகுளியால் அடங்கிய (தம்பியர் இறந்த) துன்பம், வடவைத் தீயிலே சொரிந்த நெய் (அத்தீயை மூளவிட்டால்) போல வெகுளியை மிகுவிக்க, “உன்னை அவர்கள் இவ்வாறு, வன்மை செய்து, வாயில் உதடும் மூக்கும் கொய்தற்கு நீ அவர்கள் திறத்துச் செய்த குற்றம் என்னை?” என்றான்.

கு:—ஆயிடை - அப்பொழுது. சீற்றம் - சினம். அழுந்துதல் - அடங்குதல். ஆழித்தீ - வடவை. உகுத்தல் - சொரிதல். ஊற்றம் - மிகுதி. இன்னே - இவ்வாறு. இதழ் - உதடு. சூர்ப்பணகை மூக்கொடு மேல்வாய் இதழும் அறுப்புண்டமை, ‘மேல்வாய் நீங்கிப் பல்லெலாம் உறத்தோன்றும் பகுவாயள்’ (சூர்ப்பணகைப். 138) என்பதனால் விளங்கும். வலிதல் - வன்மை செய்தல். கொய்தல் - அரிதல். ‘ஆயிடை யெழுந்த சீற்றத் தழுந்திய துன்பம் ஆழித் தீயிடை உகுக்கும் நெய்யிற் சீற்றத்திற்கு ஊற்றஞ் செய்ய’ என்றது, தம்பியரைக் கொன்றவர்மேல் எழுந்த வெகுளியால் அடங்கிய தங்கை மூக்கிழந்ததனாலும் தம்பியர் இறந்ததனாலும் மூண்ட துன்பம், நெருப்பிற் சொரிந்தநெய் அந்நெருப்பினுள் மறைந்தாலும் பின் அந்நெருப்புக் கிளர்ந்தெரியச் செய்வதுபோல மீட்டும் அவ் வெகுளியை மிகுவிப்பதாயிற்று என்றவாறு. (66)

சூர்ப்பணகை தன்பால் குற்றம் புகுந்தவாறு கூறுதல்

3230. என்வயி னுற்ற குற்றம்
யாவர்க்கு மெழுத வொண்ணுத்
தன்மைய னிராம னேடுந்
தாமரை தவிரப் போந்தாண்
மின்வயின் மருங்குல் கொண்டாள்
வேய்வயின் மென்றேள் கொண்டாள்
பொன்வயின் மேனி கொண்டாள்
பொருட்டினுற் புகுந்த தென்ருள்.

"என்வயின் உற்ற குற்றம்,
யாவர்க்கும் எழுத வொண்ணுத்
தன்மையன் இராமனேடும்
தாமரை தவிரப் போந்தாள்,
மின்வயின் மருங்குல் கொண்டாள்,
வேய்வயின் மென்தோள் கொண்டாள்,
பொன்வயின் மேனி கொண்டாள்,
பொருட்டினுல் புகுந்தது" என்ருள்.

பொ :—"தாமரை பெருமையினை யிழக்கும்படி (அதனை நீங்கி) யாவராலும் எழுதுதற்கரிய (திருமேனியினையுடைய) இராமனுடன் வந்தவளும் மின்னின்கண் இடையினைப் பெற்றவளும் மூங்கிலின் கண் மெல்லிய தோள்களைப் பெற்றவளும் பொன்னின்பால் மேனி நிறம் பெற்றவளும் ஆகிய ஒரு மகள் காரணமாக என்பால் பொருந்திய குற்றம் புகுவதாயிற்று." என்று கூறினுள்.

கு :—போந்தாள், கொண்டாள் பொருட்டினுல் என்வயின் உற்ற குற்றம் புகுந்தது என்ருள் என இயையும். யாவர்க்கும் - யாவராலும் ; உருபுமயக்கம். 'யாவர்க்கும் எழுதவொண்ணுத் தன்மையன்' என்பதனுடன், 'இருங்கடகக் கரதலத்திவ் வெழுதரிய திருமேனிக் கருங்கடல்' (740) என்பதும், 'ஓவியத் தெழுத வெண்ணு வுருவத்தாய்' (வாலிவதைப். 78) என்பதும் நோக்கத்தகும். தாமரை தவிரப் போந்தாள், இராமனேடு போந்தாள் என்க. 'சேயிதழ்த் தாமரைச் சேக்கை தீர்ந்து' (சடாயுவுயிர்நீத்த. 29) என்பது இராவணன் கூற்று. தாமரை தவிரப் போந்தாள் என்றது சீதை திருமகள்போல்வாள் என்றவாறு. 'திரு இங்கு வருவாள் கொல்லோ' (சூர்ப்பணகைப். 59) என்று இவளே முன்கருதினமையும் நோக்கத்தகும். மருங்குல் - இடை. வேய் - மூங்கில். மின்

போலும் இடையும் வேய் போலும் தோளும் பொன்போலும் மேனி நிறமும் உடையாள் என்றவாறு. 'மின்னைப்போ லிடையாள்' (சூர்ப்பணகைப். 62) என்ருள் முன்னும். (67)

## சூர்ப்பணகை இராவணனிடம் சீதையின் அழகினை விரித்துரைத்தல் 3231-3242

3231. ஆரவ ளென்ன லோடு
மரக்கியு மைய வாழ்ந்து
தேரவ டிரண்ட கொங்கை
செம்பொன்செய் குலிகச் செப்புப்
பாரவள் பாதந் தீண்டப்
பாக்கியம் படைத்த தம்மா
பேரவள் சீதை யென்று
வடிவெலாம் பேச லுற்ருள்.

"ஆர் அவள் ?" என்னலோடும்
அரக்கியும், "ஐய! ஆழ்ந்து
தேர் ; அவள் திரண்ட கொங்கை
செம்பொன் செய் குலிகச் செப்பு ;
பார் அவள் பாதம் தீண்டப்
பாக்கியம் படைத்தது, அம்மா!
பேர் அவள் சீதை" என்று
வடிவெலாம் பேசலுற்ருள்.

பொ :—"அவள் யார் ?" என்று இராவணன் வினவலும், சூர்ப்பணகையும், "ஐய! (யான் கூறுவதை) நன்கு சிந்தித்துத் தெளிவாயாக ; (யான் கூறிய) அப்பெண்ணின் திரண்ட தனங்கள், நல்ல (மாற்றுயர்ந்த) பொன்ஞல் (வரிக்கோலம்) செய்யப்பட்ட சாதிலிங்கச் செப்பினை ஒக்கும்; அவள் அடித்தலங்கள் தீண்ட நிலம் பாக்கியம் உடையதாயிற்று ; அவள் பெயர் சீதை" என்று அவள் உருவ(நல)ங்களை யெல்லாம் பேசுவாளாயினுள்.

கு :—அவள் ஆர் எனவும், அவள் பாதந் தீண்டப் பார் பாக்கியம் படைத்தது எனவும், அவள் பேர் சீதை எனவும் இயையும். அரக்கி என்றது சூர்ப்பணகையை. குலிகம் - இங்குலிகம்; சாதிலிங்கம். குலிகச்செப்பு தனத்துக்கு உவமை. 'குலிகச் செப்பன கொம்மை வரிமுலை' (641) என்பது சிந்தாமணி. பாக்கியம் - பேறு ;

நல்வினையும் ஆம்; 'பாக்கியம் எனக்குளதென நினைவுறும் பான்மை' (475) என்பதிலும் இப்பொருளிற் பயின்றது. இவள் திரண்ட கொங்கை செம்பொன் செய் செப்பு, குலிகம் செய் செப்பு எனக் கொண்டு இவள் கொங்கை பொன்னாற் செய்த செப்பும் குலிகத்தாற் செய்த செப்பும் ஒக்கும் என்று பொருள் கொள்ளலும் ஆம். 'கொமை யுற வீங்குகின்ற குலிகச் செப்பனைய கொங்கை' (1211), 'சில்லிய லோதி கொங்கைத் திரண் மணிக் கனகச் செப்பு' (1213) என்று முன் கூறப்படுதலும் நோக்கத்தகும். தெய்வ மகளிர் அடி தீண்டாத நிலம், தெய்வ மகளிரினும் சிறந்த சீதையின் அடிகள் தீண்டப் பெற்றமையால், 'பாரவள் பாதந் தீண்டப் பாக்கியம் படைத்தது' என்றாள். 'மலர்மேல் நின்றிம் மங்கையிவ் வையத் திடைவைக' (592) என்பதும் இங்கு நோக்கத்தகும். (68)

**3232.** காமர முரலும் பாடல்
கள்ளெனக் கனிந்த வின்சொற்
றேமலர் நிரந்த கூந்தற்
றேவர்க்கு மணங்கா மென்னத்
தாமரை யிருந்த தையல்
சேடியாந் தரமு மல்லள்
யாமுரை வழங்கு மென்ப
தேழைமைப் பால தன்றே.

"காமரம் முரலும் பாடல்,
கள் எனக் கனிந்த இன் சொல்,
தேம் மலர் நிரந்த கூந்தல்,
தேவர்க்கும் அணங்கு ஆம் என்னத்
தாமரை இருந்த தையல்
சேடி ஆம் தரமும் அல்லள்;
யாம் உரை வழங்கும் என்பது
ஏழைமைப்பாலது அன்று, ஓ."

பொ:—"காமரம் என்னும் பண்ணோடு இசைக்கும் பாடலும், தேனும் போல இனிமை மிக்க சொல்லினையும் நறுமண மலர்கள் நிறைந்த கூந்தலையும் உடைய தேவர் மகளிர்க்கும் தெய்வம் என்று சொல்லும்படி தாமரைப் பூவில் இருப்பவளான திருமகளும், (யான் சொல்லிய அச்சீதைக்குப்) பணிப் பெண்ணாந் தகுதியும் இல்லாதவளாவள்; (அவள் அழகை) 'யாம் விரித்துப் பேசுவோம்' என்பது அறியாமையின்பாற்படும்."

கு :—காமரம் - ஒரு பண். முரலுதல் - ஒலித்தல். கள் - தேன். கனிதல் - சுவை முதிர்தல். தேம் - நறுமணம்; தேனும் ஆம். நிரத்தல் - நிறைதல். இன் சொல் கூந்தல் தையல், தேவர்க்கும் அணங்காம் என்னத் தாமரை யிருந்த தையல் என்க. அணங்கு - தெய்வம். 'உமையாள் ஒக்கும் மங்கையர் உச்சிக்கரம் வைக்கும் கமையாள்' (588) என்பதும் இங்கு நோக்கத்தகும். தாமரை யிருந்த-தையல் - தாமரை மலரை வாழும் இடமாகக் கொண்டு தங்கிய திருமகள். சேடி - பணிப் பெண். தரம் - தகுதி. வழங்குதும் என்பது வழங்குமென விகாரமாயிற்று. எத்தகைச் சதுரப்பாடுடைய கவிகளுக்கும் சீதா பிராட்டியின் அழகைப் பேசுதல் அரிது என்பது படக் கவிகளுக்குரிய தனித் தன்மைப் பன்மையால் "'யாமுரை வழங்கும்' என்பது ஏழைமைப்பாலது" என்றாள். எனவே, அவளழகு என்னல் கூற இயலாது என்றவாறு. அன்றும் ஓவும் அசை. சீதையின் அழகு, சூர்ப்பணகை நினைக்க நினைக்க மேலும் மேலும் மிக்குத் தோன்றியது என்பது, அவள் முன் சீதையைக் கண்ணுற்றபோது, 'திரு இங்கு வருவாள் கொல்லோ' (சூர்ப்பணகைப். 59) என்று சீதையைத் திருமகளோடு ஒப்புமையுடையவளாகவும், 67-ஆம் பாடலில், 'தாமரை தவிரப் போந்தாள்' என்று திருமகளேயாகவும், இச் செய்யுளில், 'தாமரை யிருந்த தையல் சேடியாம் தரமுமல்லள்' என்று திருமகளினும் உயர்ந்தாளாகவும் கூறினமையால் விளங்கும். (69)

3233. மஞ்சொக்கு மளக வோதி
மழையொக்கும் வடித்த கூந்தல்
பஞ்சொக்கு மடிகள் செய்ய
பவளத்தை விரல்க ளொக்கு
மஞ்சொற்க ளமுதி லள்ளிக்
கொண்டவள் வதன மைய
கஞ்சத்தி னளவிற் றேனுங்
கடலினும் பெரிய கண்கள்.

"மஞ்சு ஒக்கும் அளக ஓதி; மழை ஒக்கும் வடித்த கூந்தல்;
பஞ்சு ஒக்கும் அடிகள், செய்ய பவளத்தை விரல்கள் ஒக்கும்;
அம் சொற்கள் அமுதில் அள்ளிக்கொண்டவள் வதனம், ஐய!
கஞ்சத்தின் அளவிற்றேனும், கடலினும் பெரிய கண்கள்."

பொ :—"ஐய! அமுதினின்றும் அழகிய சொற்களை அள்ளிக் கொண்ட அச்சீதையின் அளகமாகிய கூந்தல், மேகத்தை ஒக்கும்;

வாரிவிட்ட கூந்தல் மழைபெய்யக் காலிறங்கிய மேகத்தை ஒக்கும். அடிகள் பஞ்சினை ஒக்கும்; விரல்கள் பவளம் போலும்; முகம் தாமரையின் அளவினதாயினும், கண்கள் கடலினும் பெரியன.''

கு :—மஞ்சு - மேகம். மழை - பெய்யக் காலிறங்கிய மேகம். அளகம் - முன்னெற்றி மயிர். கூந்தல் - தலையின் பிற்பகுதியில் உள்ள குழல். முன்னெற்றி மயிர்க்கு மேகமும், வாரிப் பின்னே தொங்கவிட்ட கூந்தலுக்குப் பெய்யும்படி காலிறங்கிய மேகமும் உவமை. அளகமாகிய ஓதி என்க. ஓதி - குழல். வடித்தல்-வாருதல். சொல்லின் இனிமை புலப்பட 'அஞ்சொற்கள் அமுதின் அள்ளிக் கொண்டவள்' என்றார். முகம் தாமரையளவிற்றாயினும், அதிலுள்ள கண்கள் சென்றுலவ எண்டிசையும் போதாது என்பது தோன்றக் 'கடலினும் பெரிய கண்கள்' என்றார். இங்கு, 'வண்டிசைக்குங் கூந்தல் மதர் விழிகள் சென்றுலவ, எண்டிசையும் போதாதிடம்' என்ற பழம் பாடலும், 'கருதி மாதிர மனைத்தையும் அளக்கின்ற கண்ணாள்' (சுந்தர. 338) என்று பின்வரும் ஆசிரியர் கூற்றும் நோக்கத்தகும். (70)

3234. ஈசனார் கண்ணின் வெந்தா
னென்னுமி திழுதைச் சொல்லிவ்
வாசநா றோதி யாளைக்
கண்டனன் வவ்வ லாற்றான்
பேசலாந் தகைமைத் தல்லாப்
பெரும்பிணி பிணிப்ப நீண்ட
வாசையா லழிந்து தேய்ந்தா
னநங்கனவ் வுருவ மம்மா.

"ஈசனார் கண்ணின் வெந்தான்
என்னும் இது இழுதைச் சொல்; இவ்
வாசம் நாறு ஓதியாளைக்
கண்டனன், வவ்வலாற்றான்,
பேசலாம் தகைமைத் தல்லாப்
பெரும்பிணி பிணிப்ப, நீண்ட
ஆசையால், அழிந்து தேய்ந்தான்
அநங்கன் அவ்வுருவம் அம்மா!"

பொ :—"மன்மதன், நறுமணம் கமழும் கூந்தலையுடைய இச் சீதையைக் கண்டு, இவளைக் கவர்ந்துகொள்ள முடியாதவனாய்க்

கூறவொண்ணுத தன்மையினையுடைய பெரிய காமநோய் வருத்த, இவள் மேல் எழுந்த பெரிய ஆசையால் தன் பழையவுருவம் தேய்ந்தொழிந்தான் ; அவ்வாறிருக்கவும், அவன் சிவபெருமா னுடைய நெற்றிக் கண்ணுல் வெந்தழிந்தான் என்னும் இது அறியாதார் பேசும் பேச்சாகும்."

கு :—ஈசன் - சிவபெருமான். ஆர்விகுதி உயர்வு குறித்தது. கண் என்றது நெற்றிக் கண்ணை. இழுதை - அறியாமை. 'இழுதை நெஞ்சமி தென்படுகின்றதே' (திருமுறை. 5-90-8) என்னும் திரு நாவுக்கரசர் தேவாரத்தும், இழுதை, அறியாமை என்னும் பொரு ளில் பயின்றது. வவ்வுதல் - கவர்தல். கண்டனன் முற்றெச்சம். அநங்கன் - அங்கமில்லாதவன் ; மன்மதன். அங்கம் - உடம்பு. அம்மா வியப்பிடைச்சொல். தேய்ந்தழிந்தான் என்க. தேய்தல் - மெலிதல். (71)

3235. தெவ்வுல கத்துங் காண்டி
சிரத்தினிற் பணத்தி ஞேர்க
ளவ்வுல கத்துங் காண்டி
யலைகட லுலகிற் காண்டி
வெவ்வுலை யுற்ற வேலை
வாளினை வென்ற கண்ணு
ளெவ்வுல கத்தா ளங்கம்
யாவர்க்கு மெழுதொ ணுதாள்.

"தெவ்வுலகத்தும் காண்டி, சிரத்தினில் பணத்திஞேர்கள்
அவ்வுலகத்தும் காண்டி, அலைகடல் உலகில் காண்டி,
வெவ் உலை உற்ற வேலை, வாளினை வென்ற கண்ணுள்,
எவ்வுலகத்தாள் ? அங்கம் யாவர்க்கும் எழுதொணுதாள்."

பொ :—"வெவ்விய கொல்லனுலையிலுற்ற (தீட்டப்பட்ட) வேலி னையும் வாளினையும் வென்ற கண்களையுடைய இச்சீதை, யாவராலும் தீட்டுதற்கரிய வடிவழகுடையாள்; (இவளை ஒத்த அழகுடையாள் எவளேனும் இருக்கின்ருளா என்று) நமக்குப் பகைவராகிய தேவர்கள் வாழும் நாட்டில் (சென்று தேடிப்)பார்; தலையில் படமுள்ள நாகர்கள் வாழும் அவ்வுலக(மாகிய பாதாள)த்திலும் பார்; அலை (மோதுகின்ற) கடலாற் சூழப்பட்ட இந்நிலவுலகத்தும் பார்; (எங்கும் இப்படிப்பட்ட அழகுடையவள் இல்லையே !) இவள் எவ்வுலகத்தாள்!"

கு :—கண்ணுள் எழுதொணுதாள் ; மூன்றுலகத்தும் இவளைப் போன்ற அழகுடையவர் இல்லை. இவள் எவ்வுலகத்தாள் ! என்று வியந்தவாறு. தெவ் - பகை. அரக்கர்க்குத் தேவர் பகைவராதலால் 'தெவ்வுலகம்' என்ருள். சிரம் - தலை; பணம் - படம். சிரத்தினிற் பணத்திஞேர்கள் அவ்வுலகு - தலையிற் படமுடைய நாகர்கள் வாழும் அவ்வுலகம் ; அது, பாதாளம். காண்டி - பார். வெவ்வுலை - வெம்மையுள்ள கொல்லன் உலை. வெவ்வுலையுற்றவேல், வெவ்வுலையுற்ற வாள் எனத் தனித்தனி இயைக்க. கொல்லன் உலையிலே காய்ச்சிக் கோட்டந் தீர்த்துக் கூர்மையுறச் செய்த வேலும் வாளும் என்றவாறு. எதிர்ந்தார்மேற் பாய்ந்தழுந்துதலால் வேலும், அவருடலீர்தலால் வாளும் கண்களுக்கு உவமை. வென்ற என்பது உவமவுருபு. வேலினும் வாளினும் மேம்பட்ட என்று பொருளுரைத் தலும் ஆம். 'கொல்லும் வேலும் கூற்றமுமென்னும் இவையெல்லாம் வெல்லும் வெல்லும் என்ன மதர்க்கும் விழி' (595) என்பது கவிக் கூற்று. 'அங்கம் யாவர்க்கும் எழுதொணுதாள்' என்பதனுடன், 'ஆதரித் தமுதிற் கோல் தோய்த் தவயவ மமைக்குந் தன்மை யாதெனத் திகைக்குமல்லால் மதனற்கும் எழுதவொண்ணுச் சீதை' (568) என்று ஆசிரியர் முன்னே கூறியதும் நோக்கத்தகும். (72)

**3236.** தோளையே சொல்லு கேஞே
சுடர்முகத் துலவு கின்ற
வாளையே சொல்லு கேஞே
வல்லவை வழுத்து கேஞே
மீளவுந் திகைப்ப தல்லாற்
றனித்தனி விளம்ப லாற்றே
ஞளையே காண்டி யன்றே
நானுனக் குரைப்ப தென்ஞே.

"தோளையே சொல்லுகேஞே ?
சுடர் முகத்து உலவுகின்ற
வாளையே சொல்லுகேஞே ?
அல்லவை வழுத்துகேஞே ?
மீளவும் திகைப்ப தல்லால்
தனித்தனி விளம்பல் ஆற்றேன் ;
நாளையே காண்டி அன்றே ?
நான் உனக்கு உரைப்பது என்ஞே ?"

பொ :—“ அவளுடைய தோளழகைச் சொல்லுவேனே ? அல்லது ஒளி பொருந்திய முகத்தில் உலவுகின்ற வாள் போன்ற கண்களின் அழகினைச் சொல்லுவேனே ? அவையல்லாத பிறவுறுப்புக்களின் அழகைச் சொல்லுவேனே ? மீண்டும் எதைப் பேசுவது ? என்று திகைப்படைதலன்றி, (ஒவ்வோருறுப்பினையும்) தனித்தனி விரித் துரைக்கவல்லேனல்லேன். நீ நாளையே அவளைப் பார்ப்பாயன்றோ? (அப்படி நேராகப் பார்த்துத் தெரிந்துகொள்ளப்போகிற உனக்கு) அவளைப்பற்றி நான் சொல்வது யாது உளது ? (ஒன்றும் இல்லை)”

கு :—சுடர் - ஒளி. முகத்து உலவுகின்ற வாள் என்றது கண்களை. அல்லவை - தோளும் கண்ணும் அல்லாத பிறவுறுப்புக்கள். சூர்ப்ப ணகை, இராவணனிடம், ‘ சீதையினுடைய உறுப்புக்களின் அழகைக் கூறத் தொடங்குகையில் அவள் தோளழகு முற்படத் தோன்றுகின் றது; அதனைச் சொல்லப்புகும்போது அவள் கண்ணழகு தோன்று கின்றது; அதைச் சொல்லப் புக்கால் பிறவுறுப்புக்களின் அழகுகள் ஒவ்வொன்றாய்த் தோன்றுகின்றன. ஆதலால் எதைச் சொல்லுவது என்று தோன்றாமல் மீண்டும் மீண்டும் திகைப்பதன்றி, ஒவ்வோர் உறுப்பாகத் தனித்தனி சொல்ல வல்லேனல்லேன். அவள் அழகு நீயே பார்த்துத் தெரிந்துகொள்ளத் தக்கது ’ என்றாள் என்றவாறு. சூர்ப்பணகை சீதையின் அழகைத் தான் இவ்வளவு கூறிய மாத்திரத் தில் காமுகனான இராவணன் சீதையை நாடிச் செல்வான் என்ற நிச்சயத்தால், ‘நாளையே காண்டி ’ என்றாள். இது, சூர்ப்பணகை தன் சொல்வன்மையால் இராவணன் மனத்தில் எழுப்பிய காமம் உச்சநிலையடையலுற்ற தருணம் அறிந்து, அந்நிலையினை விரைவி லடையும்படி மிக்க திறமையோடு கூறியது. இனிச் சொல்லுவன அந்நிலையில் அவன் மனத்தை உறைப்பிப்பனவாம். (73)

3237. வில்லொக்கு நுதலென் றாலும்
வேலொக்கும் விழியென் றாலும்
பல்லொக்கு முத்தென் றாலும்
பவளத்தை யிதழென் றாலுஞ்
சொல்லொக்கும் பொருளொவ் வாவாற்
சொல்லலா முவமை யுண்டோ
நெல்லொக்கும் புல்லென் றாலும்
நேருரைத் தாக வற்றோ.

“ வில் ஒக்கும் நுதல் என்ருலும்,
வேல் ஒக்கும் விழி என்ருலும்,
பல் ஒக்கும் முத்து என்ருலும்,
பவளத்தை இதழ் என்ருலும்,
சொல் ஒக்கும் ; பொருள் ஒவ்வா ஆல் ;
சொல்லலாம் உவமை உண்டோ ?
நெல் ஒக்கும் புல் என்ருலும்,
நேர் உரைத்தாக வற்ருே ?

பொ :—“ நுதல் வில்லை ஒக்கும் என்று கூறினும், விழி வேலை ஒக்கும் என்று கூறினும், பல் முத்தை ஒக்கும் என்று கூறினுலும் இதழ் பவளத்தை ஒக்கும் என்று கூறினுலும் சொல்லளவில் பொருந்துமாயினும், பொருள்களின் அளவால் பொருந்தா. (பொருள்களின் அளவாலும் பொருந்துமாறு) சொல்லத்தக்க உவமை வேறு உண்டோ ? (இல்லை) ‘ புல் நெல்லை ஒக்கும் ’ என்று சொல்லினும், பொருந்துமாறு சொல்லியதாகுமோ ? (ஆகாது ; அதுபோல நுதல் வில் ஒக்கும் என்பது முதலியனவும் பொருந்துமாறு சொல்லியவாகா)”

கு :—நுதல் - புருவம் ; நெற்றியும் ஆம். நுதல் வில்லை ஒக்கும் என ஐயுருபுவிரித்து இயைக்க. பிறவும் அன்ன. இதழ் பவளத்தை ஒக்கும் என்க. இதழ் - உதடு. சொல் பொருள் என்பவை சொல்லளவு பொருளளவு என்ற பொருள்பட நின்றன. ஒக்கும் - பொருந்தும். ஒவ்வா - பொருந்தா. பொருள் என்றது, நுதல் வில், விழி வேல், பல் முத்து, இதழ் பவளம் என்று உவமேயமும் உவமானமுமாகக் கூறியவற்றை. பொருளளவாவது பொருள்களின் தரம். உவமை கூறுமிடத்து உவமேயப் பொருளினும் உவமானப்பொருள் தரத்தால் உயர்ந்ததாயிருக்க வேண்டுமென்பது மரபு. பிராட்டியின் நுதல் முதலிய உவமேயப் பொருள்களினும் வில் முதலிய உவமானப் பொருள்கட்கு எவ்வகையானும் சிறப்பின்மையின் அவை ஒவ்வாவாயின. நெல்லும் நெற்குக் களையாய் முளைக்கும் புல்லும் பயிராய் நின்ற நிலையில் இது நெல் இது புல் என்று வேற்றுமையறிவரியவாயினும், பயன்தரும் நிலையில் நெல் உயர்ந்து புல் தாழ்ந்திழிவதல்லது ஒப்புமையுடையவாகா ; ஆதலால் ‘ நெல் ஒக்கும் புல் என்ருலும் நேர் உரைத்தாகவற்ருே ’ என்ருள். உரைத்ததாகவற்ருே என்பது உரைத்தாகவற்ருே ? என நின்றது ; விகாரம்.

“ கூந்தல் (3232-3234) மூன்றிடங்களினும், கண் (3233, 3235-3237-ஆம் கவிகள்) நான்கிடங்களினும், தோள் (3230, 3236-ஆம் கவிகள்) இரண்டிடங்களினும் கூறப்பட்டிருக்கின்றன. இவ்வாறு கூறியது, ‘கூறியது கூறல்’ என்னும் குற்றத்தின்பாற்படாதோ ? எனின்,

இங்கே சீதையுருவ வருணனே, முறையே பாதாதிகேசமாகவாவது கேசாதிபாதமாகவாவது இல்லாமல், இராவணனுக்கு மோக மூட்டும் நோக்கத்தோடு கூறப்படுவதாயிருத்தலால், எந்த எந்தச் சமயத்தில் எந்த எந்த அவயவத்தைப் பற்றிக் கூறுதல் ஏற்றதோ அவ்வவ் வமையத்தில் அவ்வவ்வவயவத்தைப்பற்றிக் கூறியதாய் அமைந்தமையின் கூறியது கூறலாகாதென்க." (கம்பராமாயணசாரம்)

"இதற்கு முந்திய பாட்டில், 'நான் உனக்குரைப்பதென்னோ?' (சீதையின் அவயவங்களைப்பற்றி, உனக்கு நான் சொல்வானேன்?) என்று கூறியவள், இந்தப் பாட்டில் அவைகளைப்பற்றிச் சொல்லுதல் முன்னுக்குப் பின் முரண்பட மொழிதலன்றோ? எனின், அந்த முந்திய பாட்டில், 'நான் உனக்குரைப்பதென்னோ' என்னுமுன் 'நாளையே காண்டியன்றே' என்ற சூழ்ச்சியான சொற்களால் இராவணன் மோகத்தை உச்சநிலையுறச் செய்தாள்; செய்தவள், சீதையை அவன் காணுமளவும் பொறுத்திராமல், அதற்கு முன்னமேயே அவள் அங்க லக்கணங்களை அறிய இயற்கையாக அவனுக்கு எழுந்த அவாவைத் திருத்தி செய்வாளாய், உரைக்கவேண்டியதில்லை யென்ற உறுப்புக்களைப் பற்றி உரைக்கலாயினள் ஆதலின் முன்னுக்குப்பின் முரண்பட மொழிதலாகாதென்க" (கம்பராமாயண சாரம்) (74)

3238. இந்திரன் சசியைப் பெற்றா
னிருமூன்று வதனத் தோன்றன்
தந்தையு முமையைப் பெற்றான்
றாமரைச் செங்க ணானுஞ்
செந்திரு மகளைப் பெற்றான்
சீதையைப் பெற்றாய் நீயு
மந்தரம் பார்க்கி னன்மை
யவர்க்கிலை யுனக்கே யையா.

"இந்திரன் சசியைப் பெற்றான்;
இருமூன்று வதனத்தோன்தன்
தந்தையும் உமையைப் பெற்றான்;
தாமரைச் செங்கணானும்
செந்திரு மகளைப் பெற்றான்;
சீதையைப் பெற்றாய் நீயும்;
அந்தரம் பார்க்கின், நன்மை
அவர்க்கு இலை; உனக்கே ஐயா!"

பொ :—"ஐயா ! இந்திரன் சசியை (நாயகியாக) அடைந்தான்; ஆறு முகங்களையுடைய முருகவேளுக்குத் தந்தையான சிவபெருமானும் உமாதேவியை (நாயகியாக)ப் பெற்ருன் ; செந்தாமரை மலர் போன்ற கண்களையுடைய திருமாலும் அழகிய இலக்குமியை (நாயகியாக) அடைந்தான் ; நீயும் சீதையைப் பெற்ருய் ; அழகிய மகளிரை அடைந்த அவர்களையும் நின்னையும் நடுநிலே நின்று நோக்கின் அவர்க்கு நன்மையில்லை ; உனக்கே நன்மை உண்டு."

கு :—சசி - இந்திராணி. இரு மூன்று - இரண்டு மூன்று = ஆறு. வதனம் - முகம். இரு மூன்று வதனத்தோன் தந்தை - ஆறுமுகனுக்குத் தந்தையான சிவபெருமான். தன் அசைநிலை. தாமரைச் செங்கணுன் - செந்தாமரைக் கண்ணன் = திருமால். சீதையைப் பெறுவது உறுதி என்ற கருத்தால் பெற்ருய் என இறந்த காலத்தாற் கூறினுள். அந்தரம் - நடுநிலை ; 'அந்தரம் தீர்ந்து உலகளிக்கும் நீரிஞல்' (1555) என்பதனுள்ளும், அந்தரம் நடுநிலை என்ற பொருளில் பயின்றமை காணலாம். அந்தரம் என்பதற்குப் பேதம் என்று பொருள் கொண்டு இந்திரன் முதலிய அவரொடு நின்னிடை வேற்றுமை நோக்கின் என்று உரை கண்டாரும் உண்டு. பேரழகுடையரான சசி, உமாதேவி, திருமகள், சீதை என்னும் மகளிருள் முற்கூறிய தெய்வமகளிர் மூவரினும், பிற்கூறிய மானிடமகளான சீதை பெருஞ் சிறப்புடையள் ; சீதையை அடைந்த நீ அத்தெய்வ மகளிரை அடைந்த பெருந்தேவர் மூவரினும் சிறப்பு மிகவுடையை ; இவ்வாறு யான் கூறுவது, உன்பால் அன்பால் ஆராயாது கூறும் கூற்றன்று ; நடுநிலை நின்று நோக்கிக் கூறும் கூற்று என்றவாறு. 'நன்மை யவர்க்கிலை யுனக்கே' என்பது, 'அவர்க்கு நன்மை (உண்டு) ; உனக்கு (நன்மை) இல்லை' என்று வசைப் பொருள்படப் பிரித்துரைத்துக்கொள்ளும்படியும் அமைந்து நின்றது. பின்வரும் இரண்டு பாடல்களிலும் இவ்வாறு வசைபட அமைந்தநிலை காணலாம்.

"சூர்ப்பணகை, இதன்முன், 'நாளையே காண்டி' என்று இராவணன்பால் சீதையைக் காணும் ஆசையை எழுப்பியதுபோல, இப்போது, 'சீதையைப் பெற்ருய்' என்று, அவளை அடையும் ஆசையை மூட்டிய சூழ்ச்சி நோக்கற்பாலது." (கம்பராமாயணசாரம்). (75)

**3239.** பாகத்தி லொருவன் வைத்தான்
பங்கயத் திருந்த பொன்னை
யாகத்தி லொருவன் வைத்தா
னந்தண ஞவில் வைத்தான்

மேகத்திற் பிறந்த மின்னை
வென்றநுண் ணிடையை நீயும்
மாகத்தோள் வீர பெற்று
லெங்ஙனம் வைத்து வாழ்தி.

"பாகத்தில் ஒருவன் வைத்தான்;
பங்கயத்து இருந்த பொன்னை
ஆகத்தில் ஒருவன் வைத்தான்;
அந்தணன் நாவில் வைத்தான்;
மேகத்தில் பிறந்த மின்னை
வென்ற நுண் இடையை, நீயும்,
மாகத் தோள் வீர! பெற்றால்,
எங்ஙனம் வைத்து வாழ்தி?"

பொ:—"விசும்புற ஓங்கிய தோள்களையுடையவனே! ஒப்பற்ற சிவபிரான் உமையைத் தன் திருமேனியில் ஒரு பாதியில் தங்க வைத்துக்கொண்டு வாழ்வுற்றான்; மற்றொருவனான திருமால், தாமரை மலரில் தங்கிய திருமகளைத் தன் மார்பிலே தங்கவைத்துக் கொண்டு வாழ்வுற்றான்; அழகிய தண்ணளியுடையனான பிரமன் கலைமகளைத் தன் நாவின்கண் தங்கவைத்துக்கொண்டு வாழ்வுற்றான்; நீயும் மேகத்துள் தோன்றிய மின்னற்கொடியை வென்ற நுண்ணிய இடையையுடைய சீதையை அடைந்தால் எங்கே வைத்துக்கொண்டு வாழ்வாய்?"

கு:—பாகம் - பாதி. ஒருவன் என்பது சிவபெருமானையும் திருமாலையும் குறித்தது. ஒருவன் உமையைப் பாகத்தில் வைத்தான் என்க. பங்கயம் - தாமரை. பொன் - இலக்குமி. ஆகம் - மார்பு. உமை, கலைமகள் என்பவை வருவித்துரைக்கப்பட்டன. மாகம் - ஆகாயம். பெற்றால் என்பது பெறற்கருமை குறித்தது. ஙனம் என்பது தன்மையும் இடமும் உணர்த்தும். எங்ஙனம் வைத்து வாழ்தி என்றது, சிவபிரான் முதலியவர்களைப்போல் பாகத்தும் ஆகத்தும் நாவிலும் கொண்டு வாழாமல், சிறந்த உறுப்பாகிய தலை மேற்கொண்டு வாழ்வாயாக என்றவாறு, 'எங்ஙனம் வைத்து வாழ்தி' என்பது எவ்வாறு வைத்து வாழ்வாய்? (வாழமாட்டாய்) என வசைப்பொருளும்பட நின்றது. (76)

3240. பிள்ளைபோற் பேச்சி னாளைப்
பெற்றபின் பிழைக்க லாற்றாய்
கொள்ளைபோ கின்ற செல்வ
மவளுக்கே கொடுத்தி யைய
வள்ளலே யுனக்கு நல்லேன்
மற்றுநின் மனையில் வாழுங்
கிள்ளைபோன் மொழியார்க் கெல்லாங்
கேடுசூழ் கின்றே னன்றே.

"பிள்ளை போல் பேச்சினாளைப்
பெற்றபின் பிழைக்கலாற்றாய்,
கொள்ளை போகின்ற செல்வம்
அவளுக்கே கொடுத்தி; ஐய!
வள்ளலே! உனக்கு நல்லேன்,
மற்று நின் மனையில் வாழும்
கிள்ளை போல் மொழியார்க்கெல்லாம்
கேடு சூழ்கின்றேன். அன்று ஏ."

பொ:—"ஐய! வள்ளலே! இளங்குழவியின் மொழிபோலும் (இனிய மழலை) மொழியினையுடைய சீதையை நீ அடைந்தபின், (அவள் விருப்பத்தைப் பெறுதற்குரிய செயலிற்) பிழைபடாமல், உன்மனைவியர்பலராலும் மிகுதியாகக்கொண்டு துய்க்கப்படுகின்ற செல்வம் (முழுவதையும்) அச்சீதை (ஒருத்தி) க்கே கொடுப்பாய்; (இவ்வாறு செய்ய உன்னைத் தூண்டுதலால்) யான் உனக்கு நல்லவளாயினும், பிறிதோராற்றால் நின் மாளிகையில் வாழ்கின்ற கிளி மொழி போலும் இனிய பேச்சினையுடைய மகளிர்க்கெல்லாம் கேட்டினை ஆராய்ந்து செய்கின்றவளாகின்றேன்."

கு:—பிள்ளை - குழவி; இஃது ஆகுபெயராய்க் குழவியின் மொழியை உணர்த்தியது. கொள்ளை போகின்ற செல்வம் - வரையறையின்றி உன் மனைவியர் பலராலும் கொண்டு துய்க்கப்படும் செல்வம். அவள் என்றது சீதையை. கிள்ளை - கிளி. 'பிழைக்கலாற்றாய்', என்பது வசைப்பொருளும் தந்தது. மங்கலமகளிர்க்குத் தம் தம் கணவர் தங்களை மறந்து வேறு மகளிர் திறத்துக் காதல் கொள்ளுதலும், அக்கணவருயிர்க்கு இறுதி நேருதலும் கேடாகும். சூர்ப்பணகை சூழ்ச்சியால் இவ்விருவகைக் கேடும் இராவணன் மனைவியர்க்கு முறையே விளைதலின், 'நின்மனையில் வாழும் கிள்ளை போல் மொழியார்க்கெல்லாம் கேடு சூழ்கின்றேன்' என்றாள். அன்று ஏ அசை. (77)

3241. தேர்தந்த வல்குற் சீதை
தேவர்த முலகி னிம்பர்
வார்தந்த கொங்கை யார்தம்
வயிறுதந் தாளு மல்லள்
தார்தந்த கமலத் தாளைத்
தருக்கினர் கடையச் சங்க
நீர்தந்த ததனை வெல்வா
னிலந்தந்து நிரம்பிற் றன்றே.

"தேர் தந்த அல்குல் சீதை,
தேவர்தம் உலகின், இம்பர்,
வார் தந்த கொங்கையார்தம்
வயிறு தந்தாளும் அல்லள்;
தார் தந்த கமலத் தாளைத்
தருக்கினர் கடையச் சங்க
நீர் தந்தது, அதனை வெல்வான்
நிலம் தந்து, நிரம்பிற்று, அன்று, ஏ."

பொ :—"தேர்போலும் அல்குலினையுடைய சீதை தேவருலகத்தினும் இப்பூவுலகத்தினும் (நாகருலகத்தினும்) உள்ள கச்சணிந்த தனங்களையுடைய மகளிரால் தம் வயிற்றில் பெற்றுத் தரப்பட்டவளும் அல்லள்; சங்குகளையுடைய கடல், செருக்குடைய தேவர் கடைதலால், பூத்த தாமரை மலரில் உறைபவளாகிய திருமகளைத் தந்ததாக, (அத்திருமகளினும் சிறந்த பேரழகுடைய மகளைத் தந்து, அக்கடலை வெல்லும் பொருட்டு) இச் சீதையை, நிலம் தந்து பெருமை நிறைவுடையதாயிற்று."

கு :—தேர் என்றது தேர்த்தட்டினை. தேர்த்தட்டு மகளிர் அல்குலுக்கு உவமை. 1, 2, 3-ஆம் அடிகளில் பயின்ற தந்த என்பது, முறையே போன்ற, அணிந்த, பூத்த என்று பொருள்படுவது. இம்பர் - இவ்வுலகு=மண்ணுலகு. தேவருலகும் பூவுலகும் கூறவே, ஏனை நாகருலகும் கொள்ளத்தகும். வார் - கச்சு. தார் - பூ. கமலத்தாள் - இலக்குமி. தருக்கு - செருக்கு. சங்கநீர் - சங்குகளையுடைய நீர்; கடல். நிலம் நீர் என்று எண்ணப்படும் பூதங்களுள், நீர், தேவர் அமுதுவேண்டிக் கடைந்த காலத்துத் திருமகளைத் தந்ததாக, நிலம், நீர் தந்த திருமகளினும், சிறந்த பேரழகுடைய சீதையைத் தந்து நீரைவென்று நிரம்பிய பெருமையுடையதாயிற்று என்றவாறு. தருக்குடைய தேவரால் கடையப்பட்ட நீர் உதவிய திருமகளிலும் தருக்கற்ற உரமுடைய சனகன் வேள்விக்களனுக

உழுத நிலம் உதவிய சீதை பெருஞ்சிறப்புடையள் என்பது, 'எழுகின்ற தெள்ளமுதோ டெழுந்தவளு மிழிந்தொதுங்கித் தொழு கின்ற நன்னலத்துப் பெண்ணரசி' (766) என்பதனுலும் பெறப்படும். (78)

3242. மீன்கொண் டூடாடும் வேலை
மேகலை யுலக மேத்தத்
தேன்கொண் டூடாடுங் கூந்தற்
சிற்றிடைச் சீதை யென்னும்
மான்கொண் டூடாடு நீயுன்
வாள்வலி யுலகங் காண
யான்கொண் டூடாடும் வண்ண
மிராமனைத் தருதி யென்பால்.

"மீன்கொண்டு ஊடாடும் வேலை
மேகலை உலகம் ஏத்தத்
தேன்கொண்டு ஊடாடும் கூந்தல்,
சிற்றிடைச் சீதை என்னும்
மான்கொண்டு ஊடாடு நீ; உன்
வாள்வலி உலகம் காண,
யான்கொண்டு ஊடாடும் வண்ணம்,
இராமனைத் தருதி என்பால்."

பொ :—'மீன்கள் தமக்கிடமாகக் கொண்டு திரியும் கடலை மேகலை யாகவுடைய உலகம் கொண்டாடும்படி, வண்டுகள் தமக்கு இடமாகக் கொண்டு சுழலும் கூந்தலையும் சிறிய இடையினையும் உடைய சீதை யென்று சொல்லப்படும் மானை நீ அடைந்து, அவளொடு கலந்து பழகுக; உன் வாள்வலியினை உலகம் காண இராமனை வென்று யான் அடைந்து கலந்து பழகும்படி அவனை என்னிடம் தருக.'

கு :—ஊடாடுதல் என்பது, திரிதல், சுழலுதல், கலந்து பழகுதல் என்னும் பொருள்களிற் பயின்றது. மேகலை - இடையணி, கடலை நிலமகளுக்கு ஆடையாகவும் மேகலையாகவும் கூறுதல் கவி மரபு. சீதை என்னும் மான் என்பது உருவகம். இராமன்மீ தெழுந்த கரைகடந்த காதலால் நாணழிந்த சூர்ப்பணகை, இராவணனிடம் 'இராமனைத் தருக' என்று வேண்டுவாளாயினள் என்க. 'உன் வாள் வலி உலகம் காண யான் கொண்டூடாடும் வண்ணம் இராமனைத் தருதி என்பால்' என்பதற்கு, 'என்னை அவமதித்த இராமனை,

உன் வாள்வலியால் உலகங்காண வென்று, அவனை யான் அடிமை யாகப் பெற்று அவனொடு கலந்து பழகும்படி அவனை என்னிடம் தருக' என்று பொருள் கூறுவாரும் உளர். 3, 4, 47, 53-ஆம் சுவடி களில் இச்செய்யுள் இப்படலத்தின் 153ஆம் பாடலாக வரையப் பட்டுளது; எனினும் பல பழைய பதிப்புக்களிலும் பெரும்பான்மை யான நல்ல சுவடிகளிலும் உள்ளபடி இங்கே பதிக்கப்பட்டது. (79)

**3243.** தருவது விதியே யென்றாற்
றவம்பெரி துடைய ரேனும்
வருவது வருநா ளன்றி
வந்துகை கூட வற்றோ
வொருபது முகமுங் கண்ணு
முருவமு மார்புந் தோள்க
ளிருபதும் படைத்த செல்வ
மெய்துவ தினிநீ யெந்தாய்.

"தருவது விதியே என்றால்,
தவம் பெரிது உடையரேனும்,
வருவது வரும் நாள் அன்றி,
வந்து கைகூட வற்றோ?
ஒருபது முகமும், கண்ணும்,
உருவமும், மார்பும், தோள்கள்
இருபதும், படைத்த செல்வம்
எய்துவது, இனி நீ, எந்தாய்!"

பொ:—"என் ஐயனே! ஊழே யாவர்க்கும் பயனைக் கொடுக்க வல்லது என்று கூறுவது உறுதியாயின், மிக்க தவம் உடையரா யினும், வருவது அது வந்து சேர வேண்டிய காலத்திலல்லாமல், அதற்கு முன்னமே வந்து கிட்டவல்லதோ? பத்து முகமும் இருபது கண்களும் வடிவமும் மார்பும் இருபது தோள்களும் பெற்றதனால் எய்துஞ் சிறப்பை நீ அடைவது, (இவளை அடைந்த) பின்னரே."

கு:—விதி - ஊழ். உருவம் - வடிவம். நீ எவ்வளவு தவம் உடையையாயினும், ஊழ் இசையாமையால் இதுவரை இச்சீதையை அடைந்தாயில்லை; (இப்பொழுது காலம் வாய்த்தது) இவளை நீ அடைவாயாயின், பத்து முகமும் இருபது கண்களும் இருபது தோள் களும் பெற்றபயன் உற்றாயாவை என்றவாறு. (80)

**3244.** இன்னவ டன்னை யுன்பா
லுய்ப்பலென் றெடுக்க லுற்ற
வென்னையவ் விராமன் றம்பி
யிடைபுகுந் திலங்கு வாளான்
முன்னைமூக் கரிந்து விட்டான்
முடிந்ததென் வாழ்வு முன்னிற்
சொன்னபி னுயிரை நீப்பான்
றுணிந்தனெ னென்னச் சொன்னாள்.

" 'இன்னவள் தன்னை உன்பால்
உய்ப்பல்' என்று எடுக்கல் உற்ற
என்னை அவ் இராமன் தம்பி,
இடைபுகுந்து, இலங்கு வாளால்
முன்னை மூக்கு அரிந்து விட்டான் ;
முடிந்தது என் வாழ்வு ; முன் நின்
சொன்னபின் உயிரை நீப்பான்
துணிந்தனென்" என்னச் சொன்னாள்.

பொ :—" 'இத்தகைப் பெருஞ்சிறப்புடைய சீதையை உன்னிடம் சேர்ப்பேன்' என்று எடுக்கப் புக்க என்னை அவ்விராமனுடைய தம்பியாகிய இலக்குவன் இடையே வந்து புகுந்து, விளக்கம் மிக்க வாளால் என் மூக்கை முன்னே அரிந்தான் ; அதனால் என் வாழ்வு தொலைந்தது. நிகழ்ந்தவற்றை முன்னே நின்பால் சொன்னபின் என் உயிரைப் போக்கிவிட உறுதிகொண்டேன்" என்று கூறுவாளாயினள்.

கு :—உய்த்தல் - சேர்த்தல். அரிதல் - அறுத்தல். நீத்தல் - நீக்குதல். (81)

45, 52-என்னும் குறியீடுள்ள சுவடிகளில் இதன்பின் ஒருமிகைச் செய்யுள் காணப்படுகின்றது ; அது வருமாறு :—

3244 (a) இற்றெலா மரக்கி யாங்கே
யெடுத்தவ ளியம்பக் கேட்டக்
கொற்றவா ளரக்கன் முன்னே
கொண்டவெங் கோபத் தீயில்
சொற்றவா தரத்தின் வாய்மை
யெனும்புனல் சொரித லோடும்
அற்றதால் பின்பாங் கன்னோன்
கருத்தும்வே றுய தன்றே.

## சூர்ப்பணகை மாற்றம் கேட்ட இராவணனுக்குக் காமம் மிகுதல் 3245-3250

**3245.** கோபமு மறனு மானக்
கொதிப்புமென் றினைய வெல்லாம்
பாபநின் றிடத்து நில்லாப்
பெற்றிபோற் பற்று விட்ட
தீபமொன் ருென்றை யுற்ரு
லென்னலாஞ் செயலிற் புக்க
தாபமுங் காம நோயு
மாருயிர் கலந்த வன்றே.

கோபமும், மறனும், மானக்
கொதிப்பும், என்று இனைய எல்லாம்,
பாபம் நின்றிடத்து நில்லாப்
பெற்றிபோல் பற்றுவிட்ட;
தீபம் ஒன்று ஒன்றை உற்ரு
லென்னலாம் செயலில் புக்க
தாபமும் காம நோயும்
ஆர் உயிர் கலந்த. அன்று, ஏ.

பொ :—சினமும் வீரமும் மானத்தால் எழுந்த மனக்கொதிப்பும் என்று சொல்லப்படும் இவையெல்லாம், தீவினை நிலைபெற்ற இடத்தே நில்லாத நோன்புபோல (இராவணனை) விட்டு நீங்கின; ஒரு விளக்கைப் பொருந்தி மற்ருெரு விளக்குச் சுடர்விட்டொளிருஞ் செயல்போல (இராவணனுள்ளத்தே) புகுந்த காமநோயும் அதனல் உண்டாகிய வெம்மையும் அவனுடைய அரிய உயிரோடு கலந்தன.

கு :—கோபம் - சினம். மறன் - மறம்; வீரம். பாபம் - பாவம்; தீவினை; அது கொலைத்தொழில். பெற்றி - விரதம்; நோன்பு. 'பெறுகதிலம்மவிவ் வூருமோர் பெற்றி.' (சிலப். குன்றக் குரவை. வரி. 125.) என்பதனுள், பெற்றி என்பதற்கு விரதம் என்பது அரும் பதவுரை யாசிரியர் கொண்ட பொருள். தீபம் - விளக்கு. தாபம் - வெம்மை. காமநோயும் வெம்மையும் என இயைக்க. உலகியலான காமம் துன்பந் தருதலின் காமநோய் என்ருர். சூர்ப்பணகை சொல் லால் இராவணன் சீதைமேற் காமங்கொண்ட நிலையில், அவன் துயர்நிலை கண்டு அவன்பால் முன்பே எழுந்த சினமும் மறமும் மனக்கொதிப்பும், பாவம் நின்ற இடத்தே நோன்பு நில்லாது ஒழிதல்போலப் பற்றுவிட்டொழிந்தனவாக, ஒரு விளக்கினின்று

மற்றொரு விளக்குத் தோன்றிச் சுடர்விட்டெரிதல் போலக் காமமும் அதனால் தோன்றிய வெம்மையும் இராவணனுயிரைப் பற்றி எரிப்பனவாயின என்றவாறு. (82)

3246. கரனையு மறந்தான் றங்கை
மூக்கினைக் கடிந்து நின்று
னுரனையு மறந்தா னுற்ற
பழியையு மறந்தான் வெற்றி
யரனையுங் கொண்ட காம
னம்பினான் முன்னைப் பெற்ற
வரனையு மறந்தான் கேட்ட
மங்கையை மறந்தி லாதான்.

கரனையும் மறந்தான்; தங்கை
மூக்கினைக் கடிந்தும் நின்றான்
உரனையும் மறந்தான்; உற்ற
பழியையும் மறந்தான்; வெற்றி
அரனையும் கொண்ட காமன்
அம்பினால், முன்னைப் பெற்ற
வரனையும் மறந்தான். கேட்ட
மங்கையை மறந்திலாதான்.

பொ :—சிவபிரானையும் வெற்றிகொண்ட மன்மதனுடைய வாளிகளால், (சூர்ப்பணகை) சொல்ல அறிந்த சீதையை மறவாதவனான இராவணன், கர(ன் இறந்தத)னையும் மறந்தான்; தன் தங்கையான சூர்ப்பணகையின் மூக்கினை யறுத்தொழித்தும் (அழிந்தொழியாது) நின்ற இராமனுடைய வலிமையையும் மறந்தான்; (தங்கை மூக்கறுபட்டது கண்டும் செயலற்று நின்றமையால் தன் பால்) வந்தடைந்த வசையையும் மறந்தான்; திக்கு விசயம் முதலியவற்றால் தான் முன்பு பெற்ற மேன்மையையும் மறந்தான்.

கு :—காமனம்பினால் மங்கையை மறந்திலாதான், கரனையும் மறந்தான்; உரனையும் மறந்தான்; பழியையும் மறந்தான்; வரனையும் மறந்தான் என இயைக்க. உம்மைகள் உயர்வு சிறப்புணர்த்தி நின்றன. கடிதல் - போக்குதல். உரன் - உரம்=வலி. வரன் - வரம்=மேன்மை. இராவணன் உள்ளத்தே மூண்டெழுந்த

காமம், அவன் பெருமைக்கேலாத பழி அவன்பால் வந்திசைதலையும், அவனைச் சார்ந்தோர் உற்ற அவலநிலையையும் மறப்பித்துச் சீதையையே நினைவித்தது என்றவாறு. இது, பின்வருஞ் செய்யுளாலும் பேசப்படும். (83)

**3247.** சிற்றிடைச் சீதை யென்னு
நாமமுஞ் சிந்தை தானு
முற்றிரண் டொன்ருய் நின்ரு
லொன்ருெழித் தொன்றை யுன்ன
மற்ருெரு மனமு முண்டோ
மறக்கலாம் வழிமற் றியாதோ
கற்றனர் ஞான மின்றேற்
காமத்தைக் கடக்க லாமோ.

சிற்றிடைச் சீதை என்னும்
நாமமும் சிந்தை தானும்
உற்று, இரண்டு ஒன்ருய் நின்ருல்,
ஒன்று ஒழித்து ஒன்றை உன்ன
மற்ருெரு மனமும் உண்டோ?
மறக்கலாம் வழி மற்று யாதோ?
கற்றனர் ஞானம் இன்றேல்
காமத்தைக் கடக்க லாமோ?

பொ :—சிறிய இடையினையுடைய சீதை யென்று சொல்லப்படும் பெயரையுடைய பொருளும், இராவணன் மனமும் ஆகிய இரண்டும் பொருந்தி ஒன்ருய் நின்ருல், அம்மனத்தோடொன்றுபட்ட ஒரு பொருளாகிய சீதையை விட்டுப் பிறிதொரு பொருளை நினைக்க வேறு ஒரு மனமும் உண்டோ? (இல்லையே!) ஆதலால் அச்சீதையினை மறக்கும் நெறி எது? மெய்யறிவில்லையேல், கற்றவரும் காமத்தைக் கடக்க முடியுமோ? (முடியாது).

கு :—நாமம் என்பது நாமத்தாற் சுட்டப்படும் பொருளை உணர்த்தியது. சிந்தை - மனம். தான் அசை. இரண்டும் எனவும், கற்றனரும் எனவும் உம்மை விரிக்க. ஞானம் என்றது மெய்யறிவினை. ஞானம் இன்றேல் கற்றனரும் காமத்தைக் கடக்கலாமோ என இயையும். ‘மெய்யறிவில்லையேல், கற்றவரும் காமத்தைக் கடத்தல் இயலாது’ என்பது பொதுப் பொருள். இதுகொண்டு, ‘இராவணன்

ஆயிரம் வேதம் கற்றுவல்லனுயினும், மெய்யறிவு தலைப்படாமையின், காமத்தைக் கடக்கமாட்டாதவனுயினன்' என்னும் சிறப்புப் பொருள் துணிய நின்றமையின், இச்செய்யுள் வேற்றுப் பொருள் வைப்பு என்னும் அணி தழுவியதாகும். (84)

3248. மயிலுடைச் சாய லாளை
வஞ்சியா முன்ன நீண்ட
வெயிலுடை யிலங்கை நாத
னிதயமாஞ் சிறையில் வைத்தா
னயிலுடை யரக்க னுள்ள
மவ்வழி மெள்ள மெள்ள
வெயிலுடை நாளி லுற்ற
வெண்ணெய்போல் வெதும்பிற் றன்றே.

மயில் உடைச் சாயலாளை
வஞ்சியாமுன்னம், நீண்ட
எயில் உடை இலங்கை நாதன்,
இதயமாம் சிறையில் வைத்தான்;
அயில் உடை அரக்கன் உள்ளம்,
அவ்வழி மெள்ள மெள்ள
வெயில் உடை நாளில் உற்ற
வெண்ணெய்போல் வெதும்பிற்று. அன்று, ஏ.

பொ :—நீண்ட மதிலரண் உள்ள இலங்கையரசனுன இராவணன், மயிலின்சாயலுடைய சீதாபிராட்டியை, ஏமாற்றிக் கவரா முன்னமே, மனமாகிய சிறைக்கூடத்து வைத்தான்; வேற்படையுடைய அரக்கனுன அவ்விராவணன் மனம் அந்நிலையில் வெய்யிலையுடைய (பகற்)பொழுதில் (சூரியகிரணத்தின் எதிர்) உற்ற வெண்ணெய் போல வெப்பம் உற்று நெகிழ்ந்தது.

கு :—வஞ்சித்தல்-ஏமாற்றிக் கவர்தல். எயில் - மதில். அயில் - வேல். அரக்கன் என்பது இராவணனைச் சுட்டி நின்றது. இதயமாஞ் சிறை உருவகம்; 'மனச்சிறை' (யுத்த. இராவணன் வதை. 239) என்பர் பின்பும். வெயில்-சூரியகிரணம். வெதும்புதல் - வெப்பம் உறுதல் (85)

3249. விதியது வலியி னானு
மேலுள விளைவி னானும்
பதியுறு கேடு வந்து
குறுகிய பயத்தி னானுங்
கதியுறு பொறியின் வெய்ய
காமநோய் கல்வி நோக்கா
மதியிலி மறையச் செய்த
தீமைபோல் வளர்ந்த தன்றே.

விதியது வலியினானும்,
மேல் உள விளைவினானும்,
பதி உறு கேடு வந்து
குறுகிய பயத்தினானும்,
கதி உறு பொறியின் வெய்ய
காமநோய், கல்வி நோக்கா
மதி இலி மறையச் செய்த
தீமைபோல் வளர்ந்தது. அன்று, ஏ.

பொ:—ஊழின் ஆற்றலாலும், பண்டே உளதாகிய நிகழ்ச்சியாலும், இலங்கைநகர்க்குக் கேடாகிய பயன் விளையும் காலம் நெருங்கியதாலும், (சீதையைக் காணுதலில்) விரைவுடைய (இராவணன்) மனத்தில் எழுந்த காமநோயானது, கல்வியிற் கருத்துச் செலுத்தாத அறிவிலி பிறர் அறியாதவாறு செய்த தீமைபோல வளர்ந்தது.

கு:—விதி - ஊழ். வலி - ஆற்றல். விளைவு - நிகழ்ச்சி. ‘விளைவுரை யென்று விட்டார்’ (சுந்தர 1158) என்பதனுள்ளும் விளைவு நிகழ்ச்சி யென்னும் பொருளிற் பயின்றமை காணலாம். மேல் உள விளைவு என்றது, பண்டு இராவணாதியரால் துன்புற்ற தேவர் வேண்டுகோளும் திருமால் இசைவும், வேதவதி சாபமும், அநரணியன் சாபமும் முதலியவற்றை. பதியென்றது இலங்கையை. பயம் - பயன். பதியுறு கேடுவந்து குறுகிய பயத்தினானும் என்றது, இலங்கை வானரரால் அழியும் என்று நந்தி இட்ட சாபம் பயன்தருங் காலம் நெருங்கியமையாலும் என்றவாறு. கதி - விரைவு. பொறி - மனம்; ‘துள்ளும் பொறி’ (யுத்த. இரணியன் வதைப். 105) என்பர் பின்னும். பொறி என்பதற்கு இந்திரியம் என்று பொருள் கூறுவாரும் உண்டு. நான்காம் அடி, ‘கண்டவரில்லென வுலகத்து ளுணராதார், தங்காது தகைவின்றித் தாஞ்செய்யும் வினைகளுள், நெஞ்சறிந்த கொடியவை மறைப்பினும் மறையாவாம்’ (கலித். நெய்தல். 8) என்பதைத் தழுவியமைந்தது. விதிவலியாலும் மேலுளவிளைவாலும் பதியுறு......பயத்

திலும், இராவணன் மனத்தெழுந்த காமநோய், மதியிலி மறையச் செய்த தீமை (மறையாதெழுந்து பலரும் அறியப்) பரவுதல் போல (மறையாது) வளர்ந்து, புறத்தார்க்குப் புலனுகும் நிலையினை அடைந்தது என்றவாறு. (86)

3250. பொன்மய மான நங்கை
மனம்புகப் புன்மை பூண்ட
தன்மையோ வரக்கன் றன்னை
யயர்த்ததோர் தகைமை யாலோ
மன்மதன் வாளி தூவி
நலிவதோர் வலத்த ஞனன்
வன்மையை மாற்று மாற்றல்
காமத்தே வதிந்த தன்றே.

பொன் மயம் ஆன நங்கை
மனம் புகப் புன்மை பூண்ட
தன்மையோ, அரக்கன் தன்னை
அயர்த்தது ஓர் தகைமையாலோ,
மன்மதன் வாளி தூவி
நலிவது ஓர் வலத்தன் ஆனுன்?
வன்மையை மாற்றும் ஆற்றல்
காமத்தே வதிந்தது. அன்றே?

பொ:—இழிகுணங்களையே அணிகலன்களாகப் பூண்ட இயல்புடைய அரக்கஞன இராவணன், பொன்னிஞெளி வாய்ந்த சீதை தன் மனத்தே புகுந்தமையாலோ, (அவளையே நினைந்து) தன்னை மறந்த சிறுமையாலோ, அவனை, (உருவிலியான) மன்மதனும், (மெல்லிய மலர்களாகிய) அம்புகளைத் தூவி வருத்தும் பேராற்றலுடையனாயினுன்; வலிமையைப் போக்கும் ஆற்றல் காமத்தின்பால் நிலைத்ததன்ருே?

கு:—பொன்மயம் - பொன்னின்றன்மை=ஒளி. புக - புகுதலால். புன்மை - இழிகுணம். தன்மை - இயல்பு. அரக்கன் என்றது இராவணனை. அயர்த்தல் - மறத்தல். 'மன்மதனும்' என உம்மை விரிக்க. வாளி - அம்பு. தூவுதல் - மெத்தெனச் சொரிதல். நலிதல் - வருத்துதல். வலம் - வலிமை. வன்மை - ஆற்றல். மாற்றல் - போக்குதல். வதிதல் - தங்குதல். 'காமம் எத்தகைப் பேராற்றலையும் ஒறுக்கும் வன்மையுடையது' என்னும் பொதுப் பொருள்

கொண்டு, இராவணனும் அக்காமத்தால் தன் ஆற்றலழிந்து, காம னல் நலிவுறும் நிலையினையடைந்தான் என்னும் சிறப்புப் பொருளை நிறுவியமையின் இச்செய்யுள் வேற்றுப் பொருள் வைப்பணி தழுவியமைந்ததாகும். (87)

## இராவணன் தன் கோயில் அடைதல்

3251. எழுந்தன னிருக்கை நின்றாண்
டேழுல கத்து ளோரு
மொழிந்தன ராசி யோசை
முழங்கின சங்க மெங்கும்
பொழிந்தனர் பூவின் மாரி
போயினர் புறத்தோ ரெல்லா
மழிந்தழி சிந்தை யோடு
மாடகக் கோயில் புக்கான்.

எழுந்தனன் இருக்கை நின்று; ஆண்டு,
ஏழ் உலகத்துளோரும்
மொழிந்தனர் ஆசி ஓசை;
முழங்கின சங்கம் எங்கும்;
பொழிந்தனர் பூவின் மாரி
போயினர் புறத்தோர் எல்லாம்;
அழிந்தழி சிந்தையோடும்
ஆடகக் கோயில் புக்கான்.

பொ :—இராவணன் அரியணைவிட்டு எழுந்தான்; அப்பொழுது ஏழுலகத்துள்ளுமிருந்து வந்து கொலுமண்டபத்தில் நிறைந்திருந் தோர் யாவரும் வாழ்த்தும் கீர்த்தியும் கூறினர்; சங்கங்கள் எங்கும் முழங்கின; அயலிடத்து நின்று வந்தவரெல்லாம் (அவன் மீது) பூமாரி பெய்து (விடைகொண்டு) தத்தம் இடங்கட்குச் சென்றனர்; வலியழிந்து வருந்துகின்ற மனத்துடன் அவன், பொன்னாற் செய்யப் பட்ட தன் அரண்மனையுட் புகுந்தான்.

கு :—இராவணன் என்னும் எழுவாய் வருவித்து ‘இருக்கை நின்றும் எழுந்தனன்’ என முடிக்க. இருக்கை - தவிசு. ஆண்டு - அப்பொழுது. ஏழுலகத்துளோரும் ஆசியும் ஓசையும் மொழிந்தனர் என்க. ஆசி - வாழ்த்துரை. ஓசை - கீர்த்தி. ‘ஓசை கொள் மைந்த ரோடும்’ (வில்லிபாரதம். ஆதிபருவ. வேத்திர. 22) என்பதனுள்

ஓசை, கீர்த்தி என்னும் பொருளிற் பயின்றமை காணலாம். சங்கம் எங்கும் முழங்கின எனவும், புறத்தோரெல்லாம் பூவின்மாரி பொழிந்தனர் போயினர் எனவும் இயைக்க. பூவின்மாரி - பூமழை. ஆடகம் - பொன். (88)

## இராவணன் காமநோய் மேலும் முதிர்தல் 3252-3257

3252. பூவினுல் வேய்ந்து செய்த
 பொங்குபே ரமளிப் பாங்கர்த்
தேவிமார் குழூவு நீங்கிச்
 சேர்ந்தனன் சேர்த லோடு
நாவிநா ரோதி நவ்வி
 நயனமுங் குயமும் புக்குப்
பாவியாக் கொடுத்த வெம்மை
 பயப்பயப் பரந்த தன்றே.

பூவினுல் வேய்ந்து செய்த
 பொங்கு பேர் அமளிப் பாங்கர்த்
தேவிமார் குழுவும் நீங்கிச்
 சேர்ந்தனன்; சேர்தலோடும்
நாவி நாறு ஓதி நவ்வி,
 நயனமும் குயமும் புக்குப்
பாவியாக் கொடுத்த வெம்மை
 பயப்பயப் பரந்தது அன்றே.

பொ:—(தன் கோயிலுட்புக்க இராவணன்,) அழகிய மனைவியர் கூட்டத்தையும் நீங்கி, மாலை சரம் முதலியவற்ருல் மேற்கட்டியும் தொங்கலும் அணிந்து அலங்கரித்த உயர்ந்த பெரிய அணையில் சேர்ந்தான்; சேர்ந்த அளவில் புழுகுநெய் கமழும் கூந்தலையுடைய மான்போன்றவளான சீதையினுடைய கண்களும் தனமும் மனத்தில் எண்ணப்பட்டு அவை தந்த காமவெப்பம் மெல்ல மெல்ல அவன் உடல் முழுதும் பரவியது.

கு:—பூ என்றது மாலை சரம் முதலியவற்றையும் குறித்தது. வேய்தல் - அணிதல் (சீவக. 870). பொங்குதல் - உயர்தல்; விளங்குதலும் ஆம். அமளி - அணை = படுக்கை. நீங்காது நின்ற தேவிமார் குழுவையும் நீங்கினுன் என்பார், 'தேவிமார் குழுவும் நீங்கி' என்ருர். நாவி - புழுகுநெய். நாறுதல் - நறுமணம் வீசுதல். ஓதி - கூந்தல்.

நவ்வி - நவ்விபோல்வாள் = சீதை; உவமவாகு பெயர். வெம்மை - காதல் நோய். பையப் பைய என்பது பயப்பய எனத் திரிந்தது. 'ஆடகக் கோயில் புக்கான், பொற்பிற் றேவிமார் குழுவும் நீங்கி, பூவினல் வேய்ந்து செய்த பொங்கு பேரமளி சேர்ந்தனன்' என முற்பாட்டினின்று எழுவாய் கொண்டியைக்க. (89)

3253. நூக்க லாக லாத காத
✯ னூறு நூறு கோடியாய்ப்
பூக்க வாச வாடை வீசு
சீத நீர்பொ திந்தமென்
சேக்கை வீக ரிந்து திக்க
யங்க ளெட்டும் வென்றதோ
ளாக்கை தேய வுள்ள நைய
வாவி வேவ தாயினன்.

நூக்கல் ஆகலாத காதல் நூறு நூறு கோடியாய்ப்
பூக்க, வாச வாடை வீசு சீதநீர் பொதிந்த மென்
சேக்கை வீ கரிந்து, திக்கயங்கள் எட்டும் வென்ற தோள்,
ஆக்கை தேய, உள்ளம் நைய, ஆவி வேவது ஆயினன்.

பொ :—விலக்கல் இயலாத காதலானது கோடி கோடி மடங்காக மிக்குத் தோன்ற, நறுமணம் தோய்ந்த காற்றும் தெளித்த பனிநீரும் தன்கட் கொண்ட மெல்லிய படுக்கையில் பரப்பிய பூக்கள் கருக, திசை யானைகள் எட்டினையும் வென்ற தோளும் உடலும் மெலிய, மனம் வலியழிய, (இராவணன்) உயிரும் வெதும்புவானாயினன்.

கு :—இராவணன் என்னும் எழுவாய் வருவித்து, வேவதாயினன் என முடிக்க. நூக்கல் - விலகுதல். பூத்தல் - தோன்றுதல். வாசம் - நறுமணம். வாடை காற்று என்னும் அளவாய் நின்றது. சீதம் - குளிர்ச்சி. பொதிதல் - உட்கொள்ளல். சேக்கை - படுக்கை. வீ - பூ. கரிந்து என்னும் செய்தெனெச்சத்தைக் கரிய எனச் செயவெனெச்சமாகத் திரிக்க. கயம் - யானை. திக்கயம் வடநூன் முடிபு. தோளும் ஆக்கையும் தேய என்க. ஆவி-உயிர். ஆவியும் என உம்மை விரிக்க. (90)

**3254.** தாது கொண்ட சீத மேவு
சந்து சந்த மென்றளிர்
போது கொண்ட டுத்த போது
பொங்கு தீம ருந்தினல்
வேது கொண்ட தென்ன மேனி
வெந்து வெந்து விம்முதீ
யூது வன்று ருத்தி போலு
யிர்த்து யிர்த்து யங்கினன்.

தாது கொண்ட சீதம் மேவு சந்து, சந்த மென் தளிர், போது, கொண்டு அடுத்தபோது, பொங்கு தீ மருந்தினல் வேது கொண்டது என்ன, மேனி வெந்து வெந்து, விம்மு தீ ஊது வன் துருத்திபோல், உயிர்த்து உயிர்த்து, உயங்கினன்.

பொ :—வாசனைப் பொடிகள் கலக்கப் பெற்ற குளிர்ச்சி பொருந்திய சந்தனத்தையும் அழகிய மெல்லிய தளிர்களையும் பூக்களையும் கொண்டு சேர்த்தபொழுது மிகக் கொடிய மருந்தினல் வேதுகொண்டாற்போல உடல் வெந்து வெதும்பி, மிக்க தீயை ஊதியெழுப்புகின்ற வலியதுருத்திபோல நெடுமூச்சு விட்டு நெடுமூச்சு விட்டு (இராவணன்) வருந்துவானுயினன்.

கு :—தாது என்றது வாசனைப் பொடியினை. சந்து - சந்தனம். சந்தம் - அழகு. போது - பூ. அடுத்தல் - சேர்த்தல். இராவணன் வெம்மை தணியும்படி உழையர் சந்தும் தளிரும் போதும் கொண்டு சேர்த்தபோதும், அது தணியாமையால் அவன் வருந்தினன் என்றவாறு. பொங்குதல் - மிகுதல். வேதுகொள்ளுதல் - நோய் நீங்க மருந்துகளினின்றெழும் ஆவி முதலியன உடல் முழுதும் பரவும் படி செய்துகொள்ளுதல். ‘வேது கொள்வது போலும்’ (நெய்தல். 28. 25-26) என்பது கலித்தொகை, ‘அகிற்புகையின் மேவி உடம்பினை வேது செய்து’ (2667) என்பது சீவகசிந்தாமணி. விம்முதல் - மிகுதல். துருத்தி - கொல்லன் உலை மூக்கு. உயிர்த்தல் - நெடுமூச்செறிதல். உயங்குதல்- வருந்தல். (91)

**3255.** தாவி யாது தீதெ னது
தைய லாளை மெய்யுறப்
பாவி யாத போதி லாத
பாவி மாழை பானல்வேல்

காவி யான கண்ணி மேனி
காண மூளு மாசையா
லாவி சால நொந்து நொந்த
ழுங்கு வானு மாயினுன்.

தாவியாது, தீது எனுது, தையலாளை மெய் உறப்
பாவியாத போது இலாத பாவி, மாழை, பானல், வேல்,
காவி, ஆன கண்ணி மேனி காண மூளும் ஆசையால்,
ஆவி சால நொந்து நொந்து, அழுங்குவானும் ஆயினுன்.

பொ :—மனத்தை (நன்னெறியில்) நிலை நிறுத்தாமலும், (பிறன் மனை நயத்தல்) குற்றம் என்று நினையாமலும், சீதையையே உண்மையாக எப்பொழுதும் நினைத்துக் கொண்டிருக்கின்ற பாவியாகிய இராவணன், மாவடுவும் நீலமலரும் வேலும் காவியும் போன்ற கண்களையுடைய அச்சீதையின் உருவைக் காண மூண்ட ஆசையினுல் மிகவும் உயிர்வருந்தி அழிபவனுமானுன்.

கு :—தாவித்தல் - நிலைநிறுத்தல் ; 'சிவத்திடைத் தாவிக்கு மந்திரந்தாமறியாரே' (திருமந்திரம். 1842) என்பதனுள், தாவித்தல்- நிலைநிறுத்தல் என்னும் பொருளிற் பயின்றமை காணலாம். பாவித்தல் - நினைதல். போது - பொழுது = காலம். பாவியாதபோது இலாத என்றது, நினையாதபொழுதே யில்லாத (எப்பொழுதும் நினைத்துக்கொண்டே யிருக்கிற) என்றவாறு. பாவி என்றது, இராவணனை. மாழை - மாவடு. பானல் - நீலமலர். மாவடுவின் பிளவும் பானலும் வேலும் காவியும் ஆகிய ஒவ்வொன்றும் ஒரொரு தன்மையால் கண்களுக்கு உவமையாவன. கண்ணி என்றது, சீதையை. மூளுதல் - மிகுதல். ஆவி - உயிர். சால - மிக. அழுங்குதல் - அழிதல். (92)

3256. பரங்கி டந்த மாதி ரம்ப
ரித்த பாழி யானையின்
கரங்கி டந்த கொம்பொ டிந்த
டங்க வென்ற காவலன்
மரங்கு டைந்த தும்பி போல
நங்கன் வாளி வந்துவந்
துரங்கு டைந்து நொந்து நொந்து
ஊந்து ஊந்தொ டுங்கினுன்.

பரம் கிடந்த மாதிரம்
பரித்த பாழி யானையின்
கரம் கிடந்த கொம்பு ஒடிந்து
அடங்க வென்ற காவலன்,
மரம் குடைந்த தும்பிபோல்
அநங்கன் வாளி வந்து வந்து
உரம் குடைந்து நொந்து நொந்து
உளைந்து உளைந்து ஒடுங்கினான்.

பொ :—பாரம் தங்கிய பூமியைத் தாங்கிய பருத்த யானைகள், துதிக்கை தங்கிய கொம்புகள் ஒடிந்து அடங்கும்படி வென்ற இராவணன், மரத்தைக் குடையும் தும்பிபோல மன்மதன் அம்புகள் வந்து வந்து மார்பிற் குடைதலால் (உடல்) வருந்தி வருந்தி, (உளவலியும்) அழிந்தழிந்து சோர்ந்தான்,

கு :—பரம் - பாரம். கிடத்தல் - தங்குதல். மாதிரம் - பூமி; திசையும் ஆம். பரித்தல் - தாங்குதல். பாழி - பருத்த. யானையின் கரம் என்பதனுள் இன் அல்வழிச்சாரியை. துதிக்கையினைக் கொம்பின் மேல் வைத்துக்கொள்ளுதல் யானையின் இயல்பு; ஆதலின் 'யானையின் கரம்கிடந்த கொம்பு' என்றார். 'வலியுடைமருப்பினல்லால் வாரணம் தடக்கை வையாது' (2904) என்பது சீவகசிந்தாமணி. உரம் - மார்பு. குடைந்து என்பதனைக் குடைய எனத் திரிக்க; இராவணன் மார்புக்கு மரமும், மன்மதனம்புக்கு வண்டும் உவமை. ஒடுங்குதல் - சோர்தல், (93)

3257. கொன்றை துன்று கோதை யோடொர்
கொம்பு வந்தெ னெஞ்சிடை
நின்ற துண்டு கண்ட தென்ற
ழிந்த ழுங்கு நீர்மையான்
மன்ற றங்க லங்கன் மாரன்
வாளி போல மல்லிகைத்
தென்றல் வந்தெ திர்ந்த போது
சீறு வானு மாயினான்.

"கொன்றை துன்று கோதையோடு ஓர்
கொம்பு வந்து என் நெஞ்சிடை
நின்றது உண்டு கண்டது" என்று
அழிந்து அழுங்கும் நீர்மையான்,

மன்றல் தங்கு அலங்கல் மாரன்
வாளி போல, மல்லிகைத்
தென்றல் வந்து எதிர்ந்தபோது
சீறுவானும் ஆயினன்.

பொ :—"ஓர் கொம்பு கொன்றைப் பழம் போலும் கூந்தலுடன் வந்து என் மனத்தில் நின்றது கண்டது உண்டு'' என்று மனம் அழிந்து வருந்துந் தன்மையனான இராவணன், நறுமணம் பொருந்திய மாலையினையணிந்த மன்மதனுடைய அம்புகளைப்போல மல்லிகை மணங் கமழும் தென்றற் காற்று வந்து நேர்பட்டபோது அதனுக்கு ஆற்றாது சினங்கொள்பவனுமானான்.

கு :—கொன்றை - கொன்றைப்பழம்; கொன்றைப்பழம் மகளிர் குழலுக்கு உவமையாதல், 'கொன்றையம்பூங்குழலாள்' (ஆய்ச்சியர் குரவை) என்னும் சிலப்பதிகார அடியாலும், அதற்குக் 'கொன்றைப் பழம் போலும் குழலையுடைய இவள்' என்று அடியார்க்கு நல்லார் வரைந்த உரையாலும், 'கொன்றைப்பழக்குழற் கோதையர்' என்னும் வளையாபதி அடியாலும் புலனாகும். துன்றுதல் - பொருந்துதல். கோதை - கூந்தல். கொம்பு என்பது உவமையாகுபெயராய்(க் கொம்புபோல்வாளாகிய) சீதையைக் குறித்தது. அழிதல் - நிலை கெடுதல். மன்றல் - நறுமணம். அலங்கல் - மாலை. (94)

## இராவணன் மாளிகையினின்று நீங்கி ஒரு சோலையினை அடைதல்

3258. அன்ன காலை யங்கு நின்றெ
ழுந்த ழுங்கு சிந்தையா
னின்ன வாறு செய்வெ னென்றொ
ரெண்ணி லானி ரங்குவான்
பன்னு கோடி தீப மாலை
பாலை யாழ்ப ழித்தசொற்
பொன்ன னாரெ டுக்க வங்கொர்
சோலை யூடு போயினான்.

அன்னகாலை, அங்குநின்று
எழுந்து, அழுங்கு சிந்தையான்,
"இன்னஆறு செய்வென்'' என்று ஓர்
எண் இலான், இரங்குவான்,

பன்னு கோடி தீப மாலை,
பாலையாழ் பழித்த சொல்
பொன் அனார் எடுக்க, அங்கு, ஓர்
சோலையூடு போயினான்.

பொ :—(காமநோயால்) வருந்தும் மனத்தனான இராவணன், அப்பொழுது அப்பள்ளியறையைவிட்டெழுந்து, 'இவ்வாறு செய்வேன்' என்று ஓரெண்ணமும் இல்லாமல், கவலையுற்றவனாய்ப் பாலையாழினிசையை இகழ்ந்த இனிய சொல்லினையுடைய திருமகள்போல் வாரான மகளிர் மிகப் பலவான விளக்கு வரிசைகளைத் தாங்க, ஒரு சோலையினிடையே செல்வானாயினான்.

கு :—அழுங்குதல் - வருந்துதல். தீபமாலை - விளக்கு வரிசை. பாலையாழ் என்றது பாலையாழ் என்னும் பண்ணினை. பொன் - திருமகள். எடுத்தல் - தாங்கல். அங்கு அசை. (95)

## இராவணன் புக்க சோலையின் இயல்பு 3259-3260

**3259.** மாணிக்கம் பனசம் வாழை
✡ மரகதம் வயிரந் தேமா
வாணிப்பொன் வேங்கை கோங்க
மரவிந்த ராகம் பூகஞ்
சேணுற்ற நீலஞ் சாலங்
குருவிந்தந் தெங்கு வெள்ளி
பாணித்தண் பளிங்கு நாகம்
பாடலம் பவள மன்னே.

மாணிக்கம் பனசம்; வாழை
மரகதம்; வயிரம் தேமா;
ஆணிப்பொன் வேங்கை; கோங்கம்
அரவிந்த ராகம்; பூகம்
சேண் உற்ற நீலம்; சாலம்
குருவிந்தம்; தெங்கு வெள்ளி;
பாணித் தண் பளிங்கு நாகம்;
பாடலம் பவளம். மன், ஓ.

பொ :—(இராவணன் புக்க சோலையுள்) பலாமரம் மாணிக்கத்தாலும், வாழை மரகதத்தாலும், இனிய மாமரம் வயிரத்தாலும், வேங்கை ஆணிப்பொன்னாலும், கோங்கு பதுமராகத்தாலும், வான்

அளாவிய கமுகு நீலமணியாலும், ஆச்சாமரம் குருவிந்தமணியாலும், தென்னை வெள்ளியாலும், சுரபுன்னை நீரின் றண்மையினையுடைய பளிங்காலும், பாடலம் பவளத்தாலும் ஆக்கப்பட்டிருந்தன.

கு :—இராவணன் புக்க சோலையுள் என இடமும், மாணிக்கத் தாலும்.........பவளத்தாலும் என மூன்றும் வேற்றுமையுருபுகளும் உம்மையும், ஆக்கப்பட்டிருந்தன என வினையும் வருவித்து முடிக்க லாயிற்று. பனசம் - பலாமரம். தேமா - இனிய பழங்களைத் தரும் மாமரம். ஆணிப் பொன் என்றது மாற்றுயர்ந்த பொன்னை. வேங்கை - மரவகையுள் ஒன்று. கோங்கம் - கோங்கு என்னும் மரம். அரவிந்த ராகம் - பதுமராகம்; இது மாணிக்க வகையுள் ஒன்று. அரவிந்தம் - பதுமம். பூகம் - கமுகு. சேண் உற்ற பூகம் என மாறுக. சாலம் - ஆச்சாமரம். குருவிந்தம் என்பதும் மாணிக்கவகையுள் ஒன்று. தெங்கு - தென்னை, பாணி - நீர். இராவணன் மாளிகையை அடுத்துள்ள சோலையில் பலா முதலியவை பொன்னாலும் மணியாலும் ஆக்கப்பட்டிருந்தன என்பது, உயர்வுநவிற்சியன்று; இராவண னுடைய தவமும், தெய்வத் தச்சனுடைய பேராற்றலும், பிரமனளித்த வரமும் அவ்வாறமைய உதவின என்பதும், மரம் முதலியவற்றின் அடி, தளிர், இலை, பூ முதலிய வுறுப்புக்களும் அவ்வவற்றினுக்கு ஏற்ற மணிகளாலும் பொன்னாலும் இயற்றப்பட்டிருந்தனவெனினும் அவை தேனொழுக நின்று பழங்களையும் உதவுவனவாயிருந்தன என்பதும், இச்சோலையிலேயே இராவணன் சீதாபிராட்டியைச் சிறை வைத் திருந்தான் என்பதும், 'தெய்வத்தச்சனைப் புகழ்துமோ செங்கண் வாளரக்கன், மெய்வைத்தாற்றிய தவத்தையே வியத்துமோ? விரிஞ்சன் ஐயப்பாடிலா வரத்தையே மதித்துமோ' (சுந்தர. 113) எனவும், 'விரிதளிர் முகைபூக் கொம்படை முதல்வேர் பழமிவை மணிபொனால் வேய்ந்த தருவுயர் சோலை' (சுந்தர. 425) எனவும், 'வானும் நிலனும் பெறுமாறினி மற்றும் உண்டோ! கானும் பொழி லும் இவை செங்கனகத்தினாலும், ஏனை மணியாலும் இயற்றிய வேனும் யாவும், தேனும் மலரும் கனியும் தரச் செய்த செய்கை' (சுந்தர. 114) எனவும் ஆசிரியர் பின் கூறுவனவற்றால் அறியலாம். இவ்வாறு மரம் முதலியவை பொன்னும் மணியும் கொண்டியற்றப் படுவதுண்டென்பது, 'கோழரை மணிம்மடற் கூந்தனெற்றியேந்திய, மாழையந்திரள்கனி மாமணி மரகதம், சூழ்குலைப் பசுங்கமுகு சூலுபாளை வெண்பொனால், ஊழ்திரள் மணிக்கயிறு ஊசலாடவிட் டதே' (147) என்னும் சீவகசிந்தாமணிச் செய்யுளாலும் புல னாகும். (96)

## இராவணன் அச்சோலையுள் அமைந்த மண்டபத்துள்ள படுக்கையினை அடைதல்

3260. வானுற நிவந்த செங்கேழ்
மணிமரந் துவன்றி மாக
மீனொடு மலர்க டம்மில்
வேற்றுமை தெரித றேற்றாத்
தேனுகு சோலை நாப்பட்
செம்பொன்மண் டபத்து ளாண்டோர்
பானிற வமளி சேர்ந்தான்
பையுளுற் றுயங்கி நைவான்.

வான் உற நிவந்த செங்கேழ்
மணிமரம் துவன்றி, மாக
மீனொடு மலர்கள் தம்மில்
வேற்றுமை தெரிதல் தேற்றாத்
தேன் உகு சோலை நாப்பண்,
செம்பொன் மண்டபத்துள், ஆண்டு ஓர்
பால்நிற அமளி சேர்ந்தான்
பையுள் உற்று உயங்கி நைவான்.

பொ :—(ஆசை நோயால்) துன்புற்று மனமழிந்து மெலிபவனான இராவணன், வானளாவ ஓங்கிய நன்னிறம் வாய்ந்த மணிகளால் ஆன மரங்கள் நெருங்கி, வானிலுள்ள நட்சத்திரங்களோடு மரங்களிலுள்ள பூவும் வேற்றுமை தெரிவரிதாகிய, தேன் ஒழுகுகின்ற சோலையினிடையே செம்பொன்னாற் செய்த மண்டபத்துள் ஒரு பக்கத்தே அமைந்த படுக்கையை அடைந்தான்.

கு :—நிவத்தல் - ஓங்குதல். கேழ் - நிறம். துவன்றுதல் - நெருங்குதல். மாகம் - ஆகாயம். மாகமீன் - நட்சத்திரம். உகுதல் - சிந்துதல். நாப்பண் - நடு. அமளி - படுக்கை. பையுள் - துன்பம். உயங்குதல் - அழிதல். பையுள் உற்று உயங்கி நைவான் என்றது இராவணனை. நைவான் சேர்ந்தான் என இயைந்து முடிவுறும். (97)

அச்சோலை புள்ளொலி அற்றதாதல்

3261. கனிகளின் மலரின் வந்த
கள்ளுண்டு களிகொ ளன்னம்
வனிதையர் மழலை யின்சொற்
கிள்ளையுங் குயிலும் வண்டு
மினியன மிழற்று கின்ற
யாவையு மிலங்கை வேந்தன்
முனியுமென் றவிந்த வாய
மூங்கையர் போன்ற வன்றே.

கனிகளின், மலரின் வந்த
கள் உண்டு, களிகொள் அன்னம்,
வனிதையர் மழலை இன்சொல்
கிள்ளையும், குயிலும், வண்டும்,
இனியன மிழற்றுகின்ற
யாவையும், 'இலங்கை வேந்தன்
முனியும்' என்று அவிந்த வாய,
மூங்கையர் போன்ற அன்றே.

பொ :—(அச்சோலையுள்,) பழங்களிலிருந்தும் பூக்களிலிருந்தும் வந்த தேனை உண்டு மகிழ்ந்த அன்னமும், மகளிருடைய மழலை மொழி போலும் இனிய சொல்லினையுடைய கிளியும், குயிலும், வண்டுகளும், இனிய சொற்களைச் சொல்லுகின்ற மற்றும் உள்ள எல்லாப் பறவைகளும், இராவணன் வெகுள்வான் என்று பேச் சற்ற வாயையுடையனவாய் ஊமையர்களை ஒத்தனவாயின.

கு :—கள் - தேன். வனிதையர் - மகளிர். கிள்ளை - கிளி. மிழற்றுதல் - பேசுதல். அவிதல் - ஒலியடங்குதல். மூங்கையர் - ஊமையர். (98)

இராவணனுக்கு அஞ்சிப் பனிப்பருவம் நீங்க வேனில் வருதல்

3262. பருவத்தால் வாடை வந்த
பசும்பனி யநங்கன் வாளி
யுருவிப்புக் கொளித்த புண்ணிற்
குளித்தலு முளைந்து விம்மி

யிருதுத்தான் யாத டாவென்
நியம்பின னியம்ப லோடும்
வெருவிப் போய்ச் சிசிரநீங்கி
வேனில்வந் திறுத்த தன்றே.

பருவத்தால் வாடைவந்த
பசும்பனி, அநங்கன் வாளி
உருவிப் புக்கு ஒளித்த புண்ணில்
குளித்தலும், உளைந்து விம்மி,
"இருதுத்தான் யாது அடா?" என்று
இயம்பினன்; இயம்பலோடும்,
வெருவிப் போய்ச் சிசிரம் நீங்கி,
வேனில் வந்து இறுத்தது அன்றே.

பொ:—ஏற்றகாலத்தால் வாடையொடுவந்த குளிர்ந்த பனியானது, மன்மதன்வாளிகள் தைத்துருவி மறைந்த புண்ணிற் புகுந்தவளவில், இராவணன் நிலைகெட்டுக் கலங்கி, (உழையிருந்தானை நோக்கி), "அடா! இதுபோது நடக்கும் பருவம் எது?" என்று கூறினான்; கூறிய அளவில் பின்பனிப்பருவம் அஞ்சி அகலப்போக வேனில் வந்துசேர்ந்தது.

கு:—பருவம் - ஏற்ற காலம். வாடையொடு வந்த என்க. பசுமை - குளிர்ச்சி; புதுமையும் ஆம். அநங்கன் - உடலில்லாதவன், மன்மதன். உலைதல் - நிலைகெடுதல். விம்முதல் - கலங்குதல். இருது - பெரும்பொழுது. வெருவுதல் - அஞ்சுதல். சிசிரம் - பின்பனிக்காலம். நீங்கி என்பதனை நீங்க எனத் திரிக்க. (99)

## இராவணன் வேனிலால் வெதும்பல் 3263-3264

3263. வன்பனை மரமுந் தீய
மலைகளுங் குளிர வாழு
மென்பனி யெரிந்த தென்றல்
வேனிலை விளம்ப லாமோ
வன்பெனும் விடமுண் டாரை
யாற்றலா மருந்து முண்டோ
வின்பமுந் துன்பந் தானு
முள்ளத்தோ டியைந்த வன்றே.

வன் பணை மரமும் தீய,
　　மலைகளும் குளிர, ஆழும்
மென்பனி எரிந்தது என்ருல்,
　　வேனிலை விளம்பல் ஆமோ!
அன்பு எனும் விடம் உண்டாரை
　　ஆற்றல் ஆம் மருந்தும் உண்டோ,
இன்பமும் துன்பம்தானும்
　　உள்ளத்தோடு இயைந்த அன்றே?

பொ:—வலிய கிளைகளையுடைய மரங்களும் கருக, மலைகளும் குளிர்ச்சியடையத் துளைத்து உட்செல்லும் மென்மையினையுடைய பனியும், (இராவணனுக்கு) எரிவைத் தந்ததென்ருல் வேனில் எரிதலைச் சொல்லல் வேண்டுமோ! காமம் என்னும் விடத்தினை உண்டவர்க்கு அதனுல் விளைந்த நோயைத் தீர்க்கும் மருந்தும் உண்டோ? (இல்லையே). இன்பமும் துன்பமும் மனத்தொடு தொடர்புடையவையன்ருே?

கு:—பணை - பெருமை. ஆழ்தல் - துளைத்து உட்செல்லுதல். 'மாசிப்பனி மச்சைத்துளைக்கும்! என்னும் உலகவழக்கும் நோக்கத் தகும். வாழும் மென்பனி என்று கொண்டு 'தங்கிய மெல்லிய பனி' என்று பொருள் கூறுவாரும் உளர். முன்னைப் பனிப்பருவத்தினும் வேனிற் பருவத்தில் இராவணன் மிகவும் வருந்துவானுயின்; காமத்தால் விளைந்த வெம்மையைப் பனி வேனில் முதலிய பருவங்களால் ஒழித்தல் இயலாது; இன்பதுன்பங்கள் மனத்தொடு தொடர்புடையவை; மனம் நன்ருயின் இன்பமும், தீதாயின் துன்பமும் விளையும்; மனம் தீதான நிலையில் (தீய காமத்தால்) விளைந்த துன்பத்தை நீக்கும் மருந்து பிறிதில்லை என்றவாறு. மூன்ரும் அடியுடன், 'ஆசைநோய்க்கு மருந்து முண்டாங்கொலோ' (பால. 643) என்று ஆசிரியர் முன்னே கூறியதும் நோக்கத்தகும். காமநோய்க்கு மருந்தில்லை என்பது, 'ஊருள் எழுந்த உரு கெழு செந்தீக்கு, நீருட் குளித்தும் உயலாகும், —நீருட், குளிப்பினும் காமஞ் சுடுமே குன்றேறி, ஒளிப்பினும் காமம் சுடும்' (90) என்னும் நாலடிச் செய்யுளாலும் புலனுகும். (100)

**3264.** மாதிரத் திறுதி காறுந்
　　தன்மனத் தெழுந்த மையல்
வேதனை வெப்பஞ் செய்ய
　　வேனிலும் வெதுப்புங் காலை

யாதிதிங் கிதனின் முன்னைச்
சிசிரநன் றிதனை நீக்கிக்
கூதிராம் பருவந் தன்னைக்
கொணருதிர் விரைவி னென்றான்.

மாதிரத்து இறுதி காறும்,
தன் மனத்து எழுந்த மையல்
வேதனை வெப்பம் செய்ய,
வேனிலும் வெதுப்புங் காலை,
"யாது இது? இங்கு இதனின் முன்னைச்
சிசிரம் நன்று; இதனை நீக்கிக்
கூதிராம் பருவம் தன்னைக்
கொணருதிர் விரைவின்" என்றான்.

பொ:—(இராவணன்,) தன் மனத்துள் வளர்ந்த ஆசைநோய் திசைகளின் முடிவுவரை வெப்பத்தை விளைக்க, வேனிற்பருவமும் தகித்த அளவில், "இஃது என்ன பருவம்? இப்பருவத்தினும் முந்திய பின்பனிப்பருவமே நல்லது; இந்த வேனிற்பருவத்தை நீக்கிக் கூதிர்ப்பருவத்தை விரைந்து கொணர்மின்" என்றான்.

கு:—மாதிரம் - திசை. மையல்வேதனை – காமநோய். தன் மனத் தெழுந்த மையல் வேதனை மாதிரத்திறுதிகாறும் வெப்பஞ் செய்ய என இயைக்க. இராவணன் மனத்தெழுந்த ஆசை நோயால் அவன் உடலிலுண்டாகிய வெம்மை திசைகளின் எல்லை வரை பரவி வெதுப்ப என்றவாறு. சிசிரம் - பின்பனிப்பருவம். கூதிர் - ஐப்பசி கார்த்திகை மாதங்களாகிய பெரும்பொழுது. (101)

கூதிர்ப்பருவமும் வேதனைதர, இராவணன் பருவங்களை அகற்றக் கட்டளையிடுதல்

3265. கூதிர்வந் தடைந்த காலைக்
கொதித்தன குவவுத் திண்டோள்
சீதமுஞ் சுடுமோ முன்னைச்
சிசிரமே காணி தென்று
ஞதியா யஞ்சு மன்றே
யருளல தியற்ற வென்ன
யாதுமிங் கிருது வாகா
தியாவையு மகற்று கென்றான்.

கூதிர் வந்து அடைந்தகாலைக்
கொதித்தன குவவுத் திண் தோள்;
"சீதமும் சுடுமோ? முன்னைச்
சிசிரமே காண் இது" என்றான்;
"ஆதியாய்! அஞ்சு மன்றே
அருளலது இயற்ற" என்ன,
"யாதும் இங்கு இருது ஆகாது;
யாவையும் அகற்றுக" என்றான்.

பொ:—கூதிர்ப்பருவம் வந்து அடைந்த பொழுது (இராவணனுடைய திரண்ட திண்ணிய தோள்கள் கொதித்தனவாக, "கூதிர்ப் பருவமும் வெதுப்புமோ? (வெதுப்பாதன்றே!) வெதுப்புதலின் இது முன் வந்த சிசிரமே" என்று (அவன்) கூறினனாக, "தலைவனே! நின் கட்டளையில்லாததைச் செய்யச் சீதம் அஞ்சும்" என்று (உழையர்) கூற, "இப்போது இருது யாதும் உதவாது; ஆதலின் எல்லாப் பருவங்களையும் அகற்றுமின்" என்று அவன் கூறினான்.

கு:—குவவு - திரட்சி. சீதம் - குளிர்ச்சி. சீதமுடைய கூதிர்ப் பருவம் சீதமெனப்பட்டது. ஆதி - தலைவன். இங்கு இருது யாதும் ஆகாது என இயைக்க. (102)

பருவம் நீங்கிய நிலையில் உலகத் தோற்றம்

3266. என்னலு மிருது வெல்லா
மேகின யாவுந் தத்தம்
பன்னரும் பருவஞ் செய்யா
யோகிபோற் பற்று நீத்த
பின்னரு முலக மெல்லாம்
பிணிமுதற் பாசம் வீசித்
துன்னருந் தவத்தி னெய்துந்
துறக்கம்போற் றோன்றிற் றன்றே.

என்னலும், இருது வெல்லாம்
ஏகின; யாவும் தத்தம்
பன்னரும் பருவம் செய்யா,
யோகி போல் பற்று நீத்த;

பின்னரும் உலக மெல்லாம்
பிணிமுதல் பாசம் வீசித்
துன் அருந்தவத்தின் எய்தும்
துறக்கம்போல் தோன்றிற்று. அன்றே.

பொ :—என்று இராவணன் கூறலும், பருவங்களெல்லாம் சென்றன; (அவை நீங்கினமையால்) உயிர்வகைகளெல்லாம் சொல்லுதற்கரிய பருவங்களுக்குரிய தத்தம் செயல்களைச் செய்யாவாய் யோகியைப்போல உலகத்தொடர்பற்று நின்றன. மேலும் உலகம் முழுதும், கட்டுக்குக் காரணமாகிய பற்றை ஒழித்து அடைதற்கரிய தவத்தினுல் அடையப்படும் வீட்டுலகம் போலத் தோன்றிற்று.

கு :—இருது என்றது பெரும்பொழுதினை. பருவம் என்றது பருவத்துக்குரிய செயல்களை. முதல் - காரணம். பாசம் - பற்று. வீசுதல் - நீக்குதல். துன்னுதல் - அடைதல். துறக்கம் - வீட்டுலகு. பருவங்கள் நீங்கியமையாலும், அவ்வப்பருவங்களில் நிகழும் செயல்கள் நிகழாமையாலும், இலங்கை முதலிய இடவகைகள், வீட்டுலகம் போலக் காணப்பட்டன என்றவாறு. வீட்டுலகில் பருவ வேறுபாடு முதலியவை இல்லை என்பது, 'சிறுகாலையிலா நிலையோதிரியா........... மறுகா நெறி' (சரபங்கர். 20) என்பதனுல் புலனுகும். உலகம் எல்லாம் என்பதனுள் எல்லாம் என்பது, பொருட்பன்மை குறியாது உலகின் பல இடங்களைச் சுட்டி நின்றது; ஆதலால், தோன்றிற்று என ஒருமை முடிபேற்றது. மூன்றுலகும் இராவணன் ஆட்சிக்குட்பட்டமையின் உலகமெல்லாம் என்ருர். (103)

## பருவங்கள் நீங்கிய நிலையிலும் இராவணன் வருந்தல்

3267. கூலத்தா ருலக மெல்லாங்
குளிர்ப்பொடு வெதுப்பு நீங்க
நீலத்தா ரரக்கன் மேனி
நெய்யின்றி யெரிந்த தன்றே
காலத்தால் வருவ தொன்ருே
காமத்தாற் கனலும் வெந்தீச்
சீலத்தா லவிவ தன்றிச்
செய்யத்தா ளுவ துண்டோ?

கூலத்தார் உலகம் எல்லாம்
குளிர்ப்பொடு வெதுப்பும் நீங்க,
நீலத்து ஆர் அரக்கன் மேனி
நெய் இன்றி எரிந்தது; அன்றே
காலத்தால் வருவது ஒன்றோ ?
காமத்தால் கனலும் வெந்தீச்
சீலத்தால் அவிவது அன்றிச்
செய்யத்தான் ஆவது உண்டோ ?

பொ :—கடற்கரையொடு பொருந்திய உலகம் முழுதும் (பருவம் நீங்கியமையால்) குளிர்ச்சியும் வெம்மையும் ஒழியவும், நீலமணி போலும் நிறமமைந்த இராவணனுடைய உடல் நெய் சொரியா மலே எரியலுற்றது; இவ்வாறு எரிதல், காலத்தால் வந்த தொரு செயலோ ? (அன்று). காமத்தால் மூண்ட கொடிய நெருப்பு, சீலத்தால் அவிவதாகுமே யன்றிப் பிற செயல்களைச் செய்ய அவிவதாகாது.

கு :—கூலம்-கடற்கரை. காமம் தீயாதலின் நெய்யின்றி எரிந்தது என்ருர். கனலுதல் - மூளுதல். சீலம் - ஒழுக்கம். (104)

### உழையர் செய்த உபசாரங்களால் துயர்நீங்காத இராவணன் சந்திரனைக் கொணரும்படி கூறல்

**3268.** நாரமுண் டெழுந்த மேகந்
தாமரை வளைய நானச்
சாரமுண் டிருந்த சீதச்
சந்தனந் தளிர்மென் ருதோ
டாரமுண் டிருந்துஞ் சிந்தை
யயர்கின்ரு னயனின் ருரை
யீரமுண் டென்ப ரோடி
யிந்துவைக் கொணர்தி ரென்ருன்.

நாரம் உண்டு எழுந்த மேகம்
தாமரை வளையம் நானச்
சாரம் உண்டிருந்த சீதச்
சந்தனம் தளிர் மென் தாதோடு

ஆரம் உண்டிருந்தும் சிந்தை
அயர்கின்றான் அயல் நின்றாரை
"'ஈரம் உண்டு' என்பர்; ஓடி
இந்துவைக் கொணர்திர்'' என்றான்.

பொ:—நீரையுண்டு எழுந்த மேகமும், தாமரைவளையமும், கத்தூரியின் சாரம் கலக்கப்பட்ட குளிர்ந்த சந்தனமும், தளிர்களும், மென்மையுடைய மகரந்தப்பொடிகளும், முத்துக்களும் மெய்யில் சேர்க்கப்பட்டிருந்தும், (அவற்றால் வெம்மை தணியாமல்) மனம் சோர்கின்றவனான இராவணன், (உழையரை நோக்கி) 'மதியினிடத்துக் குளிர்ச்சியுண்டு என்று கூறுவர்; அதனை விரைந்து கொண்டுவாருங்கள்' என்று கட்டளையிட்டான்.

கு:—நாரம் - நீர். தாமரைவளையம் - விரகநோயுற்றார்க்கு வெப்பம் தணிய அவர்மார்பில் அணியும்படி குளிர்ந்த பூக்கள் கோக்கப்பட்ட தாமரைக் கொடிவளையம். இது, ''நீர் செய் காந்தமணி' (1671) என்று தொடங்கும் சீவகசிந்தாமணிப் பாடலாலும் அதற்கு நச்சினார்க்கினியர் வரைந்த உரையாலும் புலனாகும். நானம் - கத்தூரி. தாது - பூந்துகள்; ஆரம் - முத்து. ஈரம் - குளிர்ச்சி. இந்து - சந்திரன். தாமரைவளையம், சந்தனம், தளிர், பூந்தாது, முத்து முதலியவை விரகநோய் உற்றார்க்கு வெம்மை தணிய அணியப்படுவன என்பது மேற் குறித்த சிந்தாமணிச் செய்யுள் முதலியவற்றாலும் அறியலாம். (105)

## சந்திரன் தோன்றுதல் 3269-3271

3269. வெஞ்சினத் தரக்க னாண்ட
வியனகர் மீது போது
நெஞ்சில னொதுங்கு கின்ற
நிறைமதி யோனை நேடி
யஞ்சலை வருதி நின்னை
யழைத்தன னரச னென்னச்
சஞ்சலந் துறந்து தானச்
சந்திர னுதிக்க லுற்றான்.

வெம், சினத்து அரக்கன் ஆண்ட
வியன் நகர் மீது போதும்
நெஞ்சு இலன் ஒதுங்குகின்ற
நிறைமதியோனை நேடி,

'அஞ்சலை வருதி; நின்னை
அழைத்தனன் அரசன்' என்னச்
சஞ்சலம் துறந்து, தான் அச்
சந்திரன் உதிக்கலுற்ருன்.

பொ:—கொடிய வெகுளியுடைய இராவணனுல் ஆளப்பட்ட பெரிய நகரமாகிய இலங்கையின் மீது செல்லும் மனமில்லாமல் விலகிச் செல்லுகின்ற கலைநிறைந்த சந்திரனைப் பார்த்து 'உன்னை, அரசன் அழைத்தான்; அஞ்சாதே வருக' என்று இராவணன் அயல் நின்ருர் கூற அவன் மனக்கலக்கம் நீங்கித் தோன்றுவா ஞயினுன்.

கு:—இலங்கையின்மீது சந்திரன் இயங்காமை, 'இருசுடர் வழங்காப் பெருமூதிலங்கை' என்னும் ஆசிரியமாலைச் செய்யுளால் அறியலாம். ஒதுங்குதல் - விலகுதல். சஞ்சலம் - மனக்கலக்கம் (106)

3270. அயிருறக் கலந்த நன்னீ
ராழிநின் ருழி நீத்துச்
செயிருறக் கலந்த தாண்டோர்
தேய்வுவந் துற்ற போழ்தில்
வயிரமுற் றுடைந்து சென்ருேர்
வலியவற் செல்லு மாபோ
லுயிர்தெறக் கால னென்பா
ஞெத்தன னுதயஞ் செய்தான்.

அயிர் உறக் கலந்த நல் நீர்
ஆழி நின்று ஆழி நீத்துச்
செயிர் உறக் கலந்தது ஆண்டு ஓர்
தேய்வு வந்து உற்ற போழ்தில்
வயிரம் உற்று உடைந்து சென்ருேர்
வலியவற் செல்லுமா போல்
உயிர் தெறக் காலன் என்பான்
ஒத்தனன் உதயஞ் செய்தான்.

பொ:—முன்பு தோற்று ஓடியவர், சக்கரநெறியினைக் கைவிட் டமையால் குற்றம் மிகவும் கலந்ததாகிய ஒரு மெலிவு (தம்மை வென்ருேட்டிய வலிய அரசன்பால்) சேர்ந்த நிலையில் அவ்வலிய வனிடம் பகை கொண்டு மேற்செல்லுதல் போல, (சந்திரன்)

கருமணல் மிகவும் பொருந்திய நல்ல நீரையுடைய கடலினின்று இராவணனுடைய உயிரை வருத்தற்கு எமனை ஒத்தவனாய்த் தோன்றினன்.

கு:—உடைந்து சென்றோர், ஆழி நீத்துச் செயிர் உறக்கலந்தது ஓர் தேய்வு ஆண்டு வந்துற்ற போழ்தில் வயிரம் உற்று வலியவற் செல்லுமா போல், (சந்திரன், இராவணன்) உயிர்தெற, அயிர் உறக்கலந்த நன்னீராழி நின்று காலன் என்பான் ஒத்தனன் உதயம் செய்தான் என இயைந்து முடிவு கொள்ளும். அயிர் - கருமணல். உற - மிக. ஆழி முன்னது கடல்; பின்னது சக்கரம்; சக்கர நெறி. நீத்து என்னும் செய்தெனெச்சம் நீத்தமையால் எனக் காரணப் பொருள் தந்தது. நீத்தல் - விடுதல். செயிர் - குற்றம். தேய்வு - மெலிவு. வயிரம் - பகை. உடைதல் - வலியழிதல்=தோற்றல். செல்லுமாறு போல் என்பது செல்லுமாபோல் என்றானது விகாரம். தெறுதல் - வருத்துதல். காலன் - இயமன். ஒத்தனன் முற்றெச்சம். சந்திரன் என்னும் எழுவாய் முன் பாட்டிலிருந்து வருவிக்கப்பட்டது. அடுத்து வரும் பாட்டிலும் அவ்வாறே கொள்ளத்தகும். இராவணன்பால் தோற்ற சந்திரன் இப்பொழுது அவனிடம் வருதல், முன்பு வலிய அரசனோடு பொருது தோற்றோடிய மெலியவன், பின்பு தன்னை வென்ற வலியவன் ஒரு மெலிவுற்றபோது அவன்மேல் போர்க்குச் செல்வது போலவும், இராவணன் உயிரைவருத்த அவன்பால் இயமன் செல்வது போலவும் இருந்த தென்றவாறு. சூரியசந்திரர் கடலினின்று தோன்றுவதாகக் கூறும் கவிமரபு பற்றி ஆழி நின்று உதயஞ்செய் தான் என்றார். ஆழி நீத்துச் செயிர் உறக் கலந்தது ஓர் தேய்வு என்பது, 'சக்கர நெறியினைக் கைவிட்டுப் பெருங் குற்றமாகிய பிறன்மனை நயத்தலால் உண்டாகிய தொரு மெலிவு' என இராவணனுக்கும் கொள்ளுமாறு அமைந்தது. (107)

**3271.** பராவருங் கதிர்க ளெங்கும்
பரப்பிமீப் படர்ந்து வானில்
தராதலத் தெவரும் பேணு
வவனையே சலிக்கு நீரா
லராவணைத் துயிலு மண்ணல்
காலமோர்ந் தற்ற நோக்கி
யிராவண னுயிர்மே லுய்த்த
திகிரியு மென்ன லானான்.

பரா வரும் கதிர்கள் எங்கும்
பரப்பி மீப் படர்ந்து, வானில்
தராதலத்து எவரும் பேணு
அவனேயே சலிக்கும் நீரால்,
அரா அணைத் துயிலும் அண்ணல்,
காலம் ஓர்ந்து அற்றம் நோக்கி
இராவணன் உயிர்மேல் உய்த்த
திகிரியும் என்னல் ஆனுன்.

பொ :—(சந்திரன்), புகழ்தற்கரிய (சிறப்புடைய) கிரணங்களை எங்கும் பரப்பிக்கொண்டு வானமண்டலத்திலே சென்று, மேலுலகிலும் பூமியிலும் யாவரும் வெறுக்கும், அவ்விராவணனை மட்டும் நிலைகலங்கச் செய்யும் தன்மையால், பாம்பணையில் உறங்கும் பெருமையுடைய திருமால் இராவணன் அழிவை எண்ணி, அதற்கேற்ற காலத்தை அறிந்து, அவன் மேற் செலுத்திய சக்கரப்படை என்று சொல்லுதற்கும் தக்கவனுனுன்.

கு :—பராவுதல் - புகழ்தல். மீ - மேல் = வானம். படர்தல் - செல்லுதல். தராதலம் - பூமி. பேணுதல் - விரும்புதல். சலித்தல் - நிலைகலங்கச் செய்தல். நீர் - தன்மை. அரா - பாம்பு. ஓர்தல் - அறிதல். இராவணன் அற்றம் நோக்கி, அதற்கேற்ற காலம் ஓர்ந்து அவன்மேல் அமலன் உய்த்த திகிரி என இயைக்க. உய்த்தல் - செலுத்தல். திகிரி - சக்கராயுதம். திகிரியும் என்பதில் உள்ள உம்மையைப் பிரித்து என்னல் என்பதனெடு கூட்டி, திகிரி என்னலும் என இயைக்க. கதிர்களெங்கும் பரப்பி மீப்படர்தலும் எவரும் பேணு அவனையே சலித்தலும் சந்திரனுக்கும் சக்கரத்துக்கும் கொள்ள வைத்தமையால் இச்செய்யுள் செம்மொழிச்சிலேடை யுவமையணி தழுவியதாகும். திகிரி என்னலுமானுன் என்பதில் உம்மை இறந்தது தழீயது; முன் பாட்டிற் கூறியபடி சந்திரன் காலனென்பான் ஒத்ததேயன்றித் திகிரி என்னலுமானுன் என்று பொருள் கொள்ள நின்றமையின். (108)

## இராவணன் நிலவால் வருந்தல் 3272-3275

**3272.** அருகுறு பாலின் வேலை
யமுதெலா மளைந்து வாரிப்
பருகின பரந்து பாய்ந்த்
நிலாச்சுடர்ப் பனிமென் கற்றை

நெரியுறு புருவச் செங்க
ணரக்கற்கு நெருப்பி னுப்ப
னுருகிய வெள்ளி யள்ளி
வீசின லொத்த தன்றே.

அருகு உறு பாலின் வேலை
அமுது எலாம் அளைந்து வாரிப்
பருகின பரந்து பாய்ந்த
நிலாச் சுடர்ப் பனிமென் கற்றை,
நெரி உறு புருவச் செங்கண்
அரக்கற்கு நெருப்பின் நாப்பண்
உருகிய வெள்ளி அள்ளி
வீசினல் ஒத்தது. அன்றே.

பொ :—கிட்டுதற்கு அரிதாகிய பாற்கடலிற் பிறந்த அமுத முழுவதையும் துழாவி அள்ளிக் குடித்தனவாய்ப் பரவி விரிந்த நிலாவின் ஒளியும் குளிர்ச்சியும் மென்மையும் வாய்ந்த கிரணத் தொகுதி, (சினத்தால்) நெரிந்த புருவத்தினையும் சிவந்த கண்ணையும் உடைய இராவணனுக்கு நெருப்பினிடையே உருகிய வெள்ளிக் குழம்பை அள்ளி வீசினற் போலிருந்தது.

கு :—அருகுதல் - அரிதாதல். அருகுதல் என்பது அருகு என முதனிலையளவாய்நின்றது. பாலின் வேலை - பாற்கடல். அளைதல் - துழாவுதல். பருகுதல் - குடித்தல். பாய்தல் - விரிதல். நிலா - சந்திரன். சுடர் - ஒளி. பனி - குளிர்ச்சி. கற்றை - தொகுதி. நெரிதல் என்பது நெரியெனப் பகுதிமாத்திரையாய்நின்றது. புருவம் நெரிதலும் கண் சிவத்தலும் வெகுளியால் விளைந்தவை. நாப்பண் - நடு. நிலாக்கற்றை பரவி விரிதல், இராவணனுக்கு உருகிய வெள்ளிக் குழம்பை அள்ளி மேலே வீசினற்போல எரிவைத் தந்தது என்றவாறு. (109)

3273. மின்னிலந் திரிந்த தன்ன
விழுநிலா மிதிலை சூழ்ந்த
செந்நெலங் கழனி நாடன்
றிருமகள் செவ்வி கேளா

நன்னலந் தொலைந்து சோரு
மரக்கனை நாளுந் தோலாத்
துன்னல னொருவன் பெற்ற
புகழெனச் சுட்ட தன்றே.

மின் நிலம் திரிந்தது அன்ன விழு நிலா, மிதிலை சூழ்ந்த
செந்நெல் அம் கழனி நாடன் திருமகள் செவ்வி கேளா,
நல் நலம் தொலைந்து சோரும் அரக்கனை நாளும் தோலாத்
துன்னலன் ஒருவன் பெற்ற புகழ் எனச் சுட்டது அன்றே.

பொ :—மின்னல் நிலத்தில் உலாவினாற் போன்ற சிறந்த சந்திர கிரணம், மிதிலையைத் தன்னகத்துக் கொண்ட நல்ல நெல் விளையும் வயல்களையுடைய நாட்டையாளும் சனகன் மகளான சீதாபிராட்டியின் அழகை(ச் சூர்ப்பணகை சொல்ல)க் கேட்டு, அதனால் நல்ல செவ்வி கெட்டுத் தளர்பவனான இராவணனைத் தோல்வியடையாத பகைவன் ஒருவன் பெற்ற புகழ் சுடுதல்போல எப்பொழுதும் சுட்டது.

கு :—திரிதல் - உலாவுதல். விழுநிலா - சிறந்த சந்திரகிரணம். கழனி-வயல். மிதிலை - விதேக நாட்டின் தலைநகர். மிதிலை சூழ்ந்த செந்நெலங் கழனி நாடன் என்றது சனகனை. சனகன் திருமகள் - சீதாபிராட்டி. செவ்வி - அழகு. கேளா - கேட்டு. நலம் - செவ்வி. தொலைதல் - கெடுதல். தோலா - தோல்வியடையாத. துன்னலன் - பகைவன். நிலா, அரக்கனை துன்னலன் ஒருவன் பெற்ற புகழெனநாளும் சுட்டது என முடிக்க. (110)

3274. கருங்கழற் கால னஞ்சுங்
காவலன் கறுத்து நோக்கித்
தருங்கதிர்ச் சீத யாக்கைச்
சந்திரற் றருதி ரென்ன
முருங்கிய கனலின் மூரி
விடத்தினை முகக்குஞ் சீற்றத்
தருங்கதி ரருக்கன் றன்னை
யாரழைத் தீர்க ளென்றான்.

கருங்கழல் காலன் அஞ்சும் காவலன், கறுத்து நோக்கித்
தரும் கதிர்ச் ‘சீத யாக்கைச் சந்திரன் தருதிர்’ என்ன,

முருங்கிய கனலின் மூரி விடத்தினை முகக்கும் சீற்றத்து
அருங்கதிர் 'அருக்கன் தன்னை ஆர் அழைத்தீர்கள் ?' என்றான்.

பொ :—பெருமை வாய்ந்த வீரக் கழலையணிந்த இயமனும் அஞ்சும் (பெரு வீரனான) இராவணன், உழையரைச் சினந்து பார்த்து, 'குளிர்ந்த கிரணங்களைத் தரும் உடலையுடைய சந்திரனைக் கொண்டு வாருங்கள்' என்று யான் கூற, 'அழிக்கும் நெருப்புடன் அடங்காத நஞ்சினையும் கொண்ட சினத்தினையுடைய தாங்குதற்கரிய வெய்ய கிரணங்களையுடைய சூரியனை அழைத்து வந்தவர் யார் ?' என்று வெகுள்வானாயினான்.

கு :—கருமை - பெருமை. கழல் - வீரர் காலிலணியும் அணி. காலன் - இயமன். காலன் அஞ்சும் காவலன் என்றது இராவணனை. கறுத்தல் - வெகுளுதல். சீதம் - குளிர்ச்சி. யாக்கை - உடல். தருதல் - கொணர்தல். முருங்குதல் - அழித்தல். கனல் - நெருப்பு. மூரி - அடங்காமை. முகத்தல் - கொள்ளல். அருக்கன் - சூரியன். இதனால், சந்திரனுடைய சீதகிரணமும், விரக நோய் மிக்கமையால் சூரியகிரணம்போல இராவணனைச் சுடுவதாயிற்று என்றவாறு. (111)

**3275.** அவ்வழிச் சிலத ரஞ்சி
யாதியா யருளில் லாரை
யிவ்வழித் தருது மென்ப
தியம்பலா மியல்பிற் றன்றாற்
செவ்வழிக் கதிரோ னென்றுந்
தேரின்மே லன்றி வாரான்
வெவ்வழித் தெனினுந் திங்கள்
விமானத்தின் மேல தென்றார்.

அவ் வழிச் சிலதர் அஞ்சி, 'ஆதியாய் ! அருள் இல்லாரை
இவ்வழித் தருதும் என்பது இயம்பலாம் இயல்பிற்று அன்று; ஆல்,
செவ்வழிக் கதிரோன் என்றும் தேரின்மேல் அன்றி வாரான் ;
வெவ் வழித்து எனினும், திங்கள் விமானத்தின் மேலது' என்றார்.

பொ :—அப்பொழுது பணியாளர், அஞ்சி, இராவணனை நோக்கி, 'தலைவனே ! நின்னால் கட்டளையிடப்படாதவரை இங்கே அழைத்து வருவோம் என்பது சொல்லத்தகும் தன்மைத்தன்று. செந்நெறியுடைய சூரியன் எப்பொழுதும் தேரின்மேலன்றி வாரான். வெவ்விய தன்மையுடைய தென்றலும், சந்திரன் விமானத்தின்மேல் வருவது' என்றார்.

கு :—அவ்வழி - அப்பொழுது. சிலதர் - பணியாளர். ஆதியாய் ! - தலைவனே ! இவ்வழி - இவ்விடம். தருதல்-கொணர்தல். இயம்புதல் - சொல்லுதல். செவ்வழி - செந்நெறி. வெவ்வழி - வெவ்விய தன்மை. சூரியன் தேரில் வருதலும் சந்திரன் விமானத்தில் வருதலும் கொண்டு, அவருள் வேற்றுமை காட்டி, விமானத்தில் வந்திருத்தலால் இது சந்திரனே என்று தெளிவித்தவாறு. (112)

## இராவணன் சந்திரனோடு நொந்து கூறல் 3276-3278

**3276.** ☆
பணந்தா ழல்குற் பணிமொழியார்க்
கன்புபட்டார் படுங் காமக்
குணந்தான் முன்ன மறியாதான்
கொதியா நின்றான் மதியாலே
தணந்தா மரையின் தனிப்பகைஞ
னென்னுந் தன்மை யொருதானே
யுணர்ந்தா னுணர்வுற் றவன்மேலிட்
டுயிர்தந் துய்க்க வுரைசெய்வான்.

பணம் தாழ் அல்குல் பணிமொழியார்க்கு
அன்புபட்டார் படும் காமக்
குணம் தான் முன்னம் அறியாதான்,
கொதியா நின்றான், மதியாலே
தண் அம் தாமரையின் தனிப் பகைஞன்
என்னும் தன்மை ஒருதானே
உணர்ந்தான்; உணர்வுற்று, அவன்மேல் இட்டு
உயிர் தந்து உய்க்க உரைசெய்வான்.

பொ :—பாம்பின் படம் தாழ்வடையும் (சிறந்த அழகினையுடைய) அல்குலையும் வணங்கிய மொழியினையும் உடைய மகளிர்பால் ஆசை கொண்டோர் உறும் காமத்தின் இயல்பை முன்பு அறியாதவனான இராவணன், நிலவால் காமவெம்மை மீதூரப்பெற்றவனாய், (தன்னை வாட்டுபவன்) குளிர்ந்த அழகிய தாமரைக்கு ஒரு பகைவனான சந்திரனே என்னும் தன்மையைத் தனியிருந்த தானே அறிந்து, அயர்வு நீங்கித் தெளிவுற்று, தனக்கு உயிரைக் கொடுத்துக் காக்கும் படி அச்சந்திரன்பால் கூறுவதாக்கி உரைசெய்வானாயினன்.

கு :—பணம் - பாம்பின் படம். பணிமொழி - வணங்கிய மொழி. அவன் என்றது சந்திரனை. மதியால் வெதும்பித் தன்னை மறந்து கிடந்தவன் அயர்வு நீங்கித் தன்னிலையுணர்ந்து என்பார் உணர்வுற்று என்றார். (113)

3277. தேயா நின்றாய் மெய்வெளுத்தா
யுள்ளங் கறுத்தாய் நிலைதிரிந்து
காயா நின்று யொருநீயுங்
கண்டார் சொல்லக் கேட்டாயோ
பாயா நின்ற மலர்வாளி
பறியா நின்று ரின்மையா
லோயா நின்றே னுயிர்காத்தற்
குரியார் யாவ ருடுபதியே.

'தேயா நின்றாய், மெய் வெளுத்தாய்,
உள்ளம் கறுத்தாய், நிலைதிரிந்து
காயா நின்றாய், ஒரு நீயும்
கண்டார் சொல்லக் கேட்டாயோ ?
பாயாநின்ற மலர் வாளி
பறியாநின்றார் இன்மையால்,
ஓயா நின்றேன்; உயிர் காத்தற்கு
உரியார் யாவர்? உடுபதியே!'

பொ :—சந்திரனே! நீ உடல் மெலிந்து வெளிறினாய், மனமும் கறுத்தாய், தன்மை வேறுபட்டு வெதும்புகின்றாய், துணையாவார் இல்லாத நீயும் (ஒரு மங்கையின் அழகைக்) கண்டார் சொல்லக் கேட்டு, அம்மங்கைமீது காதல் கொண்டாயோ? என்மீது பாய்கின்ற மலரம்புகளைப் பறித்து நீக்குவார் இல்லாமையால் வலியழிந்து தளர்கின்றேன்; என் உயிரைக் காத்தற்குரியார் வேறு எவர்? யாரும் இல்லை.

கு :—கறுத்தல் - கருமையாதல்; 'கறுத்தாயுருவம்' (1751) என்பதனுள்ளும் கறுத்தல் இப்பொருளிற் பயின்றமை காணலாம். கறுத்தல் இங்கே காம வெம்மையால் மனம் கருகுதலைக் குறித்தது. நிலைதிரிதல் - சீதகிரணங்களால் குளிர்வியாது வெதுப்புதல். காய்தல் - சுடுதல். இராவணன் சீதையின் அழகைச் சூர்ப்பணகை சொல்லக் கேட்டுக் காமநோய் மிக, உடல் மெலிந்து, வெளுத்து, மனம் கருகி, நிலை வேறுபட்டுச் சினந்தவனாதலின், சந்திரனுடைய

இயல்பான தேய்வும் வெளுப்பும் அதனுட் களங்கமும் காம நோயுற்ருரை அவன் காய்தலும் அவனும் ஒரு பெண்ணின் அழகைக் கண்டார் சொல்லக் கேட்டுக் காமுற்றமையால் வந்தவெனக் கொண்டு, நீயும் கண்டார் சொல்லக் கேட்டாயோ என்ருன். ஒய்தல் - செயலறுதல். உடுபதி - நட்சத்திரங்களுக்கு நாயகன் = சந்திரன். (114)

3278. ஆற்ரு ராகிற் றம்மைக்கொண்
டடங்கா ரோவென் ஞருயிர்க்குக்
கூற்ருய் நின்ற குலச்சனகி
குவளை மலர்ந்த தாமரைக்குத்
தோற்ரு யதனு லகங்கரிந்தாய்
மெலிந்தாய் வெதும்பத் தொடங்கினுய்
மாற்ரூர் செல்வங் கண்டழிந்தால்
வெற்றி யாக வற்ருமோ

ஆற்ருர் ஆகில் தம்மைக் கொண்டு
அடங்காரோ ? என் ஆர் உயிர்க்குக்
கூற்ருய் நின்ற குலச் சனகி
குவளை மலர்ந்த தாமரைக்குத்
தோற்ருய்; அதனுல் அகம் கரிந்தாய்,
மெலிந்தாய், வெதும்பத் தொடங்கினுய் !
மாற்ருர் செல்வம் கண்டு அழிந்தால்,
வெற்றி ஆக வற்று ஆமோ ?

பொ :—மதியே ! (ஒருவர்) பகையினை வெல்ல வல்லராயின், தம்மைப் பாதுகாத்துக் கொண்டு அடங்கி வாழ்வரன்ருே ! உனக்கும் அது கடப்பாடாயிருக்க, நீ அவ்வாறு செய்யாமல், என் அரிய உயிர்க்கு எமனுன, பெருமையினையுடைய சானகியின் குவளைகளை மலர்ந்த தாமரைப் பூப்போலும் முகத்துக்குத் தோற்று, அதனுல் உள்ளம் கரிந்து, உடல் மெலிந்து, உள்ளமும் உடலும் வெதும்பு தலைப் பொருந்தினுய். பகைவருடைய செல்வங்கண்டு மனம் அழிந்தால் வெற்றி உண்டாகவல்லதாகுமோ ? ஆகாது.

கு :—ஆற்றுதல் - (பகை வெல்ல) வல்லராதல். தம்மைக் கொண்டு என்றது தம்மைப் பாதுகாத்துக் கொண்டு என்றவாறு. குலம் - பெருமை. சனகி - சனகன் மகள்; சீதை. சனகியை அடையா விடின் தான் இறந்துபடுவது உறுதி என்னும் நினைவினுதலால்,

'என்னுருயிர்க்குக் கூற்ருய் நின்ற குலச்சனகி' என்ருன். இது, பின் விளைவு முன்னே அவன் பேச்சில் அவசமாக வந்த அமங்கலமாகும். குவளை - நீலமலர். குவளை மலர் மகளிர் கண்களுக்கும் தாமரை மலர் மகளிர் ஆடவர் முகங்களுக்கும் உவமை கூறப்படும். குவளை மலர் போன்ற கண்களோடு மிளிரும் சனகியின் முகத்தைக் குவளை மலர்ந்த தாமரை யென்ருன். குவளை தாமரை என்பவை இங்கே உவமையாகு பெயராய் முறையே சனகியின் கண்களையும் முகத் தினையும் உணர்த்தின. குளத் தாமரையைக் குவியச் செய்யும் மதிக்குச் சனகியின் முகத்தாமரையைக் குவியச் செய்யும் ஆற்றல் இன்மையின், சனகி குவளை மலர்ந்த தாமரைக்குத் தோற்ருய் என்ருன். மாற்ருர் - பகைவர். உட்கறுப்பும், உடல் மெலிவும், காம நோயுற்ருரை வெதுப்புதலும், மதிக்கு இயல்பாய் அமைந்திருக்க, அவற்றைத் தோல்வியால் விளைந்தவை யென்று கற்பனை செய்து கொண்டு, பகைவர் செல்வம் கண்டு மனமழிவது வெற்றியாகாது என்று சந்திரனைப் பழித்தவாறு. 'சனகி குவளை மலர்ந்த தாமரை' என்ற தொடர், தூமலர்த் தாமரைப் பூவினங்கண், மாயிதழ்க் குவளை மலர்பிணைத்தன்ன, திருமுகத்தலமரும் பெருமதர் மழைக்கண்' (அகநானூறு. 361), 'இழையொளி பரந்த கோயி லினமலர்க் குவளைப் பொற்பூ, விழைதரு கமலவட்டத் திடைவிராய்ப் பூத்தவே போல், குழையொளி முகமும் கோலக் கொழுங்கயற் கண்ணுந் தோன்ற', 'தாமரைப் போதிற் பூத்த தண்ணறுங் குவளைப் பூப்போல், காமரு முகத்திற் பூத்த கருமழைத் தடங்கண்' (சீவகசிந்தாமணி 2130, 2133.) என்னும் பழம் பாடல்களைத் தழுவியமைந்தது. (115)

சந்திரனும் இரவும் மறையச் சூரியனும் பகலும் தோன்றுதல்

**3279.** என்னப் பன்னி யிடருழவா
விரவோ டிவனைக் கொண்டகற்றி
முன்னைப் பகலும் பகலோனும்
வருக வென்ருன் மொழியாமு
னுன்னற் கரிய வுடுபதியு
மிரவு மொளித்த வொருநொடியிற்
பன்னற் கரிய பகலவனும்
பகலும் வந்து பரந்தவால்.

என்னப் பன்னி, இடர் உழவா,
'இரவோடு இவனைக் கொண்டு அகற்றி,
முன்னைப் பகலும் பகலோனும்
வருக' என்ருன்; மொழியாமுன்,

உன்னற்கு அரிய உடுபதியும்
இரவும் ஒளித்த; ஒரு நொடியில்
பன்னற்கு அரிய பகலவனும்
பகலும் வந்து பரந்த; ஆல்.

பொ :—என்று சொல்லித் துன்புற்று, (இராவணன்) 'இரவையும் இவனையும் கொண்டு போய் விலக்கிவிட்டு, முந்திய பகலையும் சூரியனையும் வருவிக்க' என்று கூறினன். அவன் அவ்வாறு சொல்லு முன்னே நினைத்தளவிடற்கரிய பெருமையுடைய மதியும் இரவும் மறைந்தன; ஒரு நொடிப் பொழுதில் சொல்லுதற்கரிய சிறப்புடைய சூரியனும் பகலும் வந்து பரவின.

கு :—பன்னுதல் - அடுத்தடுத்துச் சொல்லுதல். இடருழவா - இடருழந்து - துன்புற்று. இடர் - துன்பம். இவன் என்றது சந்திரனை. பகலோன் - சூரியன். வருக என்னும் தன் வினை வருவிக்க என்னும் பிறவினைப் பொருளது. உன்னல் - நினைத்தல். பன்னல்-சொல்லுதல்.
(116)

விடியற்கால வருணனை. சூரியன் உதித்தலால்
தாமரை மலர்தலும், ஆம்பல் குவிதலும்

3280. இருக்கின் மொழியா ரெரிமுகத்தி
னீந்த நெய்யி னவிர்செம்பொ
னுருக்கி யனைய கதிர்பாய
வனல்போல் விரிந்த துயர்கமல
மருக்க னெய்த வமைந்தடங்கி
வாழா தடாத பொருளெய்திச்
செருக்கி யிடையே திருவிழந்த
சிறியோர் போன்ற சேதாம்பல்.

இருக்கின் மொழியார் எரிமுகத்தின்
ஈந்த நெய்யின் அவிர் செம்பொன்
உருக்கி யனைய கதிர் பாய
அனல்போல் விரிந்தது உயர் கமலம்;
அருக்கன் எய்த அமைந்து அடங்கி
வாழாது, அடாத பொருள் எய்திச்
செருக்கி, இடையே திரு இழந்த
சிறியோர் போன்ற சேதாம்பல்.

பொ :—வேதமந்திரங்களைச் சொல்லும் அந்தணர் வேள்வி யங்கியின்பாற் பெய்த நெய்யினுல் அந்த நெருப்பு வளர்தல் போல, விளக்கம் உள்ள மாற்றுயர்ந்த பொன்னை உருக்கி (ஓட) விட்டாற் போன்ற சூரிய கிரணங்கள் பரவுதலால் உயர்ந்த தாமரை மலராலுற்றது ; மனநிறைவுடையராய் அடங்கி வாழாது, தீநெறியால் வந்த செல்வத்தை யடைந்து செருக்குற்றுத் தம் வாழ்நாளிடையே அச்செல்வத்தை யிழந்த அற்பர்களைப்போலச் சேதாம்பல்கள் சூரியனுதித்ததும் செவ்வியழிந்து குவிந்தன.

கு :—இருக்கு இங்கே வேதமந்திரங்களைக் குறித்தது, இருக் கின் மொழியார் என்றது வேள்வியங்கியில் வேத மந்திரங்களைச் சொல்லி நெய்யைப் பெய்யும் அந்தணர்களாகிய ரித்விக்குகளை. எரிமுகத்தின் - நெருப்பில். முகம் இங்கு இடப் பொருளுணர்த்தி யது. நெய்யின் - நெய்யினுல். நெய்யினுல் அனல் (கிளர்ந்தெழுதல்) போல என இயையும். நெய்யினுல் அனல் கிளர்ந்தெழுதல் போல)ச் சூரிய கிரணங்கள் பரவுதலால்) தாமரை மலர்ந்தது என்க. அவிர்தல் - விளங்குதல். விரிதல் - மலர்தல். உருக்கிய பொற்குழம்பின் ஒழுக்கு மேனின்று கீழிறங்கிப் பரவும் சூரிய கிரணங்களுக்கு உவமை. அருக்கன் - சூரியன். அமைதல் - நிறை தல். அடாத பொருள் - தகாதசெல்வம் ; என்றது தீய நெறியால் வந்த செல்வத்தை. செருக்கு - கருவம். சேதாம்பல் - செவ்வாம்பல். முன், பகற் போதிலே இராவணன் கட்டளையால் இரவுவரச் சந்திரகிரணங்களால், செவ்வியொடு மலர்ந்து நின்ற ஆம்பல் மலர், பின் சூரியன் வரவால் செவ்வியழிந்து குவிந்தமைக்குச் சிறியோர் மனநிறைவுடையராய் அடங்கி வாழாது, தீ நெறியால் வந்த பொருளால் செருக்குற்று வாழ்ந்து இடையே திருவிழந்தமை உவமை. (117)

### சந்திரன் ஒளிமழுங்கி மறைதல்

**3281.** நாணி நின்ற வொளிமழுங்கி
நடுங்கா நின்ற வுடம்பினனுய்ச்
சேணி னின்று புறஞ்சாய்ந்து
கங்குற் ருரம் பின்செல்லப்
பூணின் வெய்யோ னுருதிசையே
புகுதப் போவான் புகழ்வேந்த
ராணை செல்ல நிலையழிந்த
வரசர் போன்று னல்லாண்டான்.

நாணி நின்ற ஒளி மழுங்கி,
நடுங்கா நின்ற உடம்பினன் ஆய்ச்
சேணில் நின்று புறம் சாய்ந்து,
கங்குல் தாரம் பின் செல்லப்
பூணின் வெய்யோன் ஒருதிசையே
புகுதப் போவான், புகழ்வேந்தர்
ஆணை செல்ல நிலை அழிந்த
அரசர் போன்றுன் அல் ஆண்டான்.

பொ :—உலகுக்கு அணிகலம்போல்பவனுன சூரியன் ஒப்பற்ற கீழ்த்திசையில் எழுதலும், இரவுக்கரசனுன சந்திரன், வெட்க முற்றுத் தன்பால் தங்கிய ஒளிமழுங்கலுற்று, நடுங்குகின்ற உடம்பை யுடையனுய், வான முகட்டினின்று ஒருபுறம் ஒதுங்கி, இரவாகிய மனைவி பின்பற்றிவரச் செல்வானுய்ப் புகழினையுடைய பேரரசர் ஆணை நடத்தலால் தம் நிலையழிந்த சிற்றரசரை ஒத்தான்.

கு :—நாணுதலும் ஒளி மழுங்குதலும் உடல் நடுங்குதலும் ஒரு புறம் ஒதுங்குதலும் மனைவி பின் தொடர நீங்குதலும் மதிக்கும் நிலையழிந்த மன்னர்க்கும் பொதுவான தன்மைகள். சேண் - உயர்வு; இங்கே வான முகட்டைக் குறித்தது. புறம் - பக்கம். கங்குல் - இரவு. தாரம் - மனையாள். பூண் - அணி. வெய்யோன் - சூரியன். அல் - இரவு. கிழக்கு மங்கலத்திசையாதலின் மற்றத் திசைகளினும் சிறந்தமை புலப்பட ஒரு திசை என்ருர். ஒரு திசை - ஒப்பற்ற திசை. சந்திரன் இரவுக்கு நாயகனுதலின் அவனை அல்லாண்டான் என்ருர். சூரியனுக்குப் புகழுடைய பேர ரசனும், சூரியோதயத்தால் ஒளி மழுங்கிய சந்திரனுக்குப் பேர ரசன் தோற்றத்தால் நிலையழிந்த சிற்றரசனும் உவமை. (118)

அகால சூரியோதயத்தில் மகளிர் நிலை 3282-3284

3282. மணந்தபே ரன்பரை மலரின் சேக்கையுட்
★ புணர்ந்தில ரிடையொரு வெகுளி பொங்கலாற்
கணங்குழை மகளிர்கள் கங்கு னீங்கிட
வுணர்ந்திலர் கனவினு மூட நீர்ந்திலர்.

மணந்த பேர் அன்பரை மலரின் சேக்கையுள்
புணர்ந்திலர் இடை ஒரு வெகுளி பொங்கலால்;
கணம் குழை மகளிர்கள், கங்குல் நீங்கிட,
உணர்ந்திலர்; கனவினும் ஊடல் தீர்ந்திலர்.

பொ :—திரண்ட குண்டலங்களையணிந்த அரக்கமகளிர் சிலர், இடையே, (தம் கணவர்மாட்டு) ஒரு சினம் மிகுதலால், மலர் பரப்பிய இனிய அணையில் தம்பால் வந்தடைந்த மிக்க காதலையுடைய அக்கொழுநரைக் கூடினாரில்லை; இரவு கழிந்ததாகவும் துயிலெழுந்திலர்; கனவிலும் ஊடல் நீங்கினாரில்லை.

கு :—மணத்தல் - சேர்தல். சேக்கை - அணை. வெகுளி - சினம். பொங்குதல் - மிகுதல். கங்குல் - இரவு. நீங்கிடவும் என உம்மை விரிக்க. மகளிர்கள், வெகுளி பொங்கலால் அன்பரைப் புணர்ந்திலர், உணர்ந்திலர், ஊடல் தீர்ந்திலர் என்க. (119)

3283. தள்ளூறு முயிரினர் தலைவர் நீங்கலா
னள்ளிர விடையுறு நடுக்க நீங்கலார்
கொள்ளையி னலர்கருங் குவளை நாண்மலர்
கள்ளுகு வனவெனக் கலுழுங் கண்ணினார்.

தள்ளூறும் உயிரினர், தலைவர் நீங்கலால்
நள் இரவிடை உறும் நடுக்கம் நீங்கலார்
கொள்ளையின் அலர் கருங்குவளை நாள் மலர்
கள் உகுவன எனக் கலுழும் கண்ணினார்.

பொ :—(மேலும் மகளிர் சிலர்), தங்கள் கொழுநர் (கடமையாற்றற்குத் தம்மை விட்டுப்) பிரிந்து சென்றமையால், குன்றிய உயிரினராய்த் தேனைச் சிந்துகின்ற விரிந்த அப்பொழுதலர்ந்த கருங்குவளை மலர்போல மிகுதியாக நீரைப் பொழியும் கண்ணினராய், இடையிரவிலுற்ற நடுக்கம் நீங்காராயினர்.

கு :—சிலர் என்னும் எழுவாய் பின்வரும்பாட்டிலிருந்து கொள்ளப்பட்டது. தள்ளுதல் - குன்றுதல். 'தள்ளா விளையுள்' (731) என்னும் குறட்பாவினுள், தள்ளுதல் குன்றுதல் என்னும் பொருளிற் பயின்றமை காணலாம். நள்ளிரவு - இடையிரா. கொள்ளை - மிகுதி. கள் - தேன். உகுதல் - சிந்துதல். கலுழ்தல் - அழுதல். மகளிர்சிலர், தலைவர் நீங்கலால், கலுழும் கண்ணினார், நடுக்கம் நீங்கலார் என்க. (120)

3284. அணைமலர்ச் சேக்கையு ளாட றீர்ந்தனர்
பணைகளைத் தழுவிய பவள வல்லிபோ
லிணைமலர்க் கைகளி னிறுக வின்னுயிர்த்
துணைவரைத் தழுவினர் துயில்கின் றார்சிலர்.

அணை மலர்ச் சேக்கையுள் ஆடல் தீர்ந்தனர்,
பணைகளைத் தழுவிய பவள வல்லி போல்,
இணை மலர்க் கைகளின் இறுக இன் உயிர்த்
துணைவரைத் தழுவினர், துயில்கின்றார் சிலர்.

பொ :—(மற்றும்) சிலர், கூடுதற்குரிய மலர்கள் பரப்பிய பாயலுள் கலவி விளையாட்டு முற்றியவராய், மரக்கிளைகளைத் தழுவிய பவளக் கொடிகள் போல, ஒன்றையொன்றொத்த மலர் போலுங் கைகளால் தம் இனிய உயிர்போலும் கொழுநரை இறுகத் தழுவியவராய்த் துயில்கின்றவராயினர்.

கு :—தீர்ந்தனர் தழுவினர் என்பவை முற்றெச்சம். பணைகள் - பெருங்கிளைகள். பணைகள் அரக்கர்க்கும் |பவளவல்லி அரக்கர் மகளிர்க்கும் உவமை. பணைகளைத்தழுவிய பவளவல்லி இல் பொருள். (121)

## யானைகளின் நிலை

3285. அளியினங் கடந்தொறு மார்ப்ப வாய்கதி
ரொளிபட வுணர்ந்தில வுறங்கு கின்றன
தெளிவில வின்றுயில் விளையுஞ் சேக்கையுட்
களிகளை நிகர்த்தன களிநல் யானையே.

அளி இனம் கடம் தொறும் ஆர்ப்ப, ஆய் கதிர்
ஒளி பட, உணர்ந்தில உறங்குகின்றன,
தெளிவு இல இன் துயில் விளையும் சேக்கையுள்
களிகளை நிகர்த்தன களிநல் யானையே.

பொ :—சிறந்த சூரியனொளி தம்மீது படவும் பொழுது புலர்ந்ததை அறியாதனவும், மயக்கம் நீங்காதனவும், வண்டின் கூட்டம் கதுப்புகள் தோறும் மொய்த்து ஆரவாரிக்கும்படி உறங்குகின்றனவுமான செருக்கு மிக்க நல்லிலக்கணம் அமைந்த யானைகள், இனிய துயில் விளையும் படுக்கையிற் (கிடந்துறங்கும்) களிகளை ஒத்தன.

கு :—அளி - வண்டு. இனம் - கூட்டம். கடம் - கதுப்பு. ஆர்த்தல் - ஒலித்தல். ஆய்கதிர் - சிறந்த (சூரிய) கிரணம். துயில் - உறக்கம். சேக்கை - படுக்கை, விலங்கு துயிலிடம். களிகள் - கட்குடியர். கதிரொளிபட உணராமையும், தெளிவின்மையும்,

கடந்தொறும் வண்டுகள் மொய்த்து ஆரவாரிக்கும்படி சேக்கையுட் கிடத்தலும் யானைக்கும் கட்குடியர்க்கும் பொதுவான தன்மைகள். (122)

## விளக்குகள் ஒளி மழுங்கினமை

**3286.** விரிந்துறை துறைதொறும் விளக்கம் யாவையு
மெரிந்திழு தஃகல வொளியி ழந்தன
வருந்துறை நிரம்பிய வுயிரி னன்பரைப்
பிரிந்துறை தருங்குலப் பேதை மாரினே.

விரிந்து உறை துறை தொறும் விளக்கம் யாவையும்,
எரிந்து இழுது அஃகல, ஒளி இழந்தன ;
அருந்துறை நிரம்பிய உயிரின் அன்பரைப்
பிரிந்து உறைதரும் குலப் பேதைமாரினே.

பொ :—விரிந்தனவான வசிக்கு மிடந்தோறும் உள்ள விளக்குகள் யாவையும், எரிந்து நெய் குறையாதனவாயிருந்தும், அறிதற்கரிய கலைத் துறையறிவு நிரம்பிய தம் உயிரனைய கொழுநரைப் பிரிந்து இல்லின்கண் தங்கிய குலமகளிரைப் போல ஒளியிழந்தன.

கு :—உறைதுறை - வசிக்குமிடம். விரிந்த உறை துறை என்பது விரிந்துறை துறை என விகாரப்பட்டு நின்றது. இழுது - நெய். அஃகுதல் - குறைதல். எண்ணெய் இருந்தும் காலவேறு பாட்டால் ஒளி மழுங்கிய விளக்குக்களுக்குக் கொழுநர் கடமை யாற்றச் சென்ற நிலையில் அவரைப்பிரிந்து மனையில் மகிழ்ச்சி யின்றியுறையும் மகளிர் உவமை. (123)

## காலையில் மலரும் மலர் மலராமை

**3287.** புனைந்தித ழுரிஞ்சுறு பொழுது புல்லியும்
வனைந்தில வைகறை மலரு மாமலர்
நனந்தலை யமளியிற் றுயிலு நங்கைமா
ரனந்தரி னெடுங்கணோ டொத்த வாமரோ

புனைந்து இதழ் உரிஞ்சுறு பொழுது புல்லியும்
வனைந்தில, வைகறை மலரும் மா மலர்,
நனந்தலை அமளியில் துயிலும் நங்கைமார்
அனந்தரின் நெடுங்கணோடு ஒத்தவாம் அரோ.

பொ:—அணி செய்து கொண்டு இதழ்களை உராய்கின்ற (கிரணங்களையுடைய) கதிரவன் தோன்றியும், விடியற்காலத்து மலரும் நல்ல பூக்கள், செவ்வி பெற்று மலராதனவாய், பெரிய படுக்கையில் உறங்குகின்ற மகளிரின் உறக்க மயக்கமுள்ள கண்களோடு ஒத்தனவாயின.

கு:—புனைதல் - கோலங் கொள்ளல். உரிஞ்சுதல் - உராய்தல். பொழுது என்றது சூரியனை. புல்லுதல் - சேர்தல். வனைதல் - செவ்விபெறல். வனைந்தில - வனைந்திலவாகி; முற்றெச்சம். வைகறை - விடியற்காலம். நனந்தலை - இடப்பரப்பு. அமளி-படுக்கை. அனந்தர் - உறக்கமயக்கம். இடையிரவில் இராவணனுணையால் பகல்வந்தமையால் உறக்க மயக்கத்திலுள்ள மகளிர் கண்களைப் போலக் காலைமலரும் பூக்களும் குவிந்திருந்தன என்றவாறு. (124)

### மக்கள் துயிலுணராமை

3288. இச்சையிற் றுயில்பவர் யாவர் கண்களு
நிச்சயம் பகலுந்த மிமைக ணீங்கல
பிச்சையு மிடுதுமென் றுணர்வு பேணலா
வச்சையர் நெடுமனை வாயின் மானவே.

இச்சையில் துயில்பவர் யாவர் கண்களும்,
நிச்சயம் பகலும் தம் இமைகள் நீங்கல,
பிச்சையும் இடுதும் என்று உணர்வு பேணலா
வச்சையர் நெடுமனை வாயில் மானவே.

பொ:—விருப்போடு உறங்குகின்ற எல்லாருடைய கண்களும், பிச்சையையும் இடுவோம் என்று விரும்பி நினையாத உலோபருடைய நெடிய வீட்டுவாயிலைப் போல மெய்யே பகலும் இணைந்த இமைகள் பிரியாதனவாயின.

கு:—இச்சை - விருப்பு. நிச்சயம் - மெய். பிச்சை - வறியோர்க் கீவது. பிச்சையும் என்பதனுள் உம்மை இழிவுசிறப்புணர நின்றது. உணர்வு பேணுதலாவது விரும்பி நினைதல். வச்சையர் - உலோபர். நெடுமனை என்றதனால் ஈதற்கேற்ற பொருள்வளம் உண்டமை பெறப்படும். கதவு அடைத்துள்ள உலோபர் வீட்டு வாயில், (பகல்வந்தும்) விழியாத மக்கள் கண்களுக்கு உவமை. (125)

### நேமிப்புள் பகல் வரவால் மகிழ்தல்

3289. நஞ்சுறு பிரிவின நாளி னீளமோர்
தஞ்சுற விடுவதோர் தயாவு தாங்கலால்
வெஞ்சிறை நீங்கிய வினையி னரென
நெஞ்சுறக் களித்தன நேமிப் புள்ளெலாம்.

நஞ்சு உறு பிரிவின நாளின் நீளம் ஓர்
தஞ்சு உற, விடுவது ஓர் தயாவு தாங்கலால்,
வெம் சிறை நீங்கிய வினையினர் என
நெஞ்சு உறக் களித்தன நேமிப்புள் எலாம்.

பொ :—நஞ்சு போலும் (துன்பத்தை விளைக்கும்) பிரிவையுடையனவான சக்கரவாகப் பறவைகளெல்லாம், விடியற்காலையிற் கூடு ஒரு புகலிடமாக, விடுவிப்பதாகிய அருளைப் பெற்றமையால் கொடிய சிறைச்சாலையினின்று நீங்கிய தீவினையாளரைப்போல மனம் மிகவும் களித்தன.

கு :—நஞ்சு - விடம். நஞ்சுறு பிரிவின நேமிப்புள் எலாம் களித்தன என இயையும். நாள் - விடியற்காலம். 'நாள் ஈண்டிய நல்லகவர்க்கு' (மதுரைக் காஞ்சி. 223) என்பதனுள் நாள் என்பது விடியற்காலம் என்ற பொருளிற் பயின்றமை காணலாம். நீளம் - பறவைக் கூடு. தஞ்சு - தஞ்சம்; புகலிடம். தயாவு - அருள். சிறை - சிறைச்சாலை. வினை - தீவினை ; பாவம். நேமிப்புள் - சக்கரவாகப் பறவை. இவை சூரிய கிரணங்களை உண்டு வாழும் இயல்புடையன வென்றும், இரவிற் பிரிந்து சென்று பகலிற் கூடி மகிழும் இயல்புடையன என்றும் கூறுவர். இரவுக்குச் சிறைக் கூடமும், இரவில் வருந்தியிருந்த நேமிப்புட்களுக்குச் சிறைக் கூடத்தில் வருந்தியிருந்த தீவினையாளரும், இடையிரவிற் பகல்வரக் காரணமான இராவணன் கட்டளைக்குத் தண்டனைக் காலம் முடியுமுன் சிறை நீங்கி வீடுபுக வுதவிய அரசினர் கட்டளையும் உவமை. சிறைவாசத் தண்டனையுற்றோர் இடையே எதிர்பாராத நிலையில் அரசினராணையால் சிறையினின்று விடுதலைபெற்றுத் தம் வீட்டையடைந்து மகிழ்தல்போல, இரவில் வருந்தியிருந்த நேமிப்புட்கள், இராவணனாணையால் இடையே இரவு நீங்கி விடியற் காலம் வரத் தம் கூட்டை அடைந்து மகிழ்ந்தன என்றவாறு. (126)

### மலர்கள் விரியாமையால் வண்டுகள் வருந்தல்

3290. நாண்மதிக் கல்லது நடுவ ணெய்திய
வாணையிற் றிறக்கிலா வலரிற் பாய்வன

மாண்வினைப் பயன்படா மாந்தர் வாயில்சேர்
பாணரிற் றளர்ந்தன பாடற் றும்பியே.

நாண்மதிக்கு அல்லது நடுவண் எய்திய
ஆணையில் திறக்கிலா அலரில் பாய்வன,
மாண்வினைப் பயன்படா மாந்தர் வாயில் சேர்
பாணரில் தளர்ந்தன பாடல் தும்பியே.

பொ :—உரிய காலத்தே தோன்றிய சந்திரனால் மலர்வதன்றி, இடையே வந்த இராவணன் கட்டளையால் விரியாத ஆம்பல் முதலிய பூக்களில் பாய்வனவான இசை முரலுகின்ற வண்டுகள், நல்வினைப் பயனான செல்வம் இல்லாத புல்லருடைய மனைவாயிலை யடைந்த பாணர்களைப் போலச் சோர்வுற்றன.

கு :—நாண்மதி - உரிய காலத்தில் தோன்றும் சந்திரன். நடுவண் - இடையே. நடுவண் எய்திய ஆணை என்றது, இடையிரவிலே பகலை வருவித்த இராவணன் கட்டளையை. திறத்தல்-விரிதல். திறக்கிலா அலர் - விரியாத (குவிந்த) ஆம்பல் முதலிய பூக்கள். மாண்வினை - நல்வினை ; அறம். மாண்வினைப் பயன் என்றது, நல்வினைப் பயனான செல்வத்தை. மாண்வினைப் பயன்படா மாந்தர் என்றது, நன்றியில் செல்வமுடைய புல்லரை. குவிந்துள்ள ஆம்பல் முதலிய பூக்களிற் பாய்ந்து அப்பூக்கள் விரியாமையால் அவற்றிலுள்ள தேனைப் பருகும் வாய்ப்பின்றித் தளரும் வண்டுகளுக்கு, நன்றியில் செல்வமுடைய புல்லர் மனைவாயிலை அடைந்து, அவரால் கதவடைக்கப்பட்டமையால் பரிசில் பெறாது தளரும் இசைவாணர் உவமை. (127)

மருளும் தெருளும் உற்ற மங்கையர் நிலை

3291. அருமணிச் சாளர மதனி னூடுபுக்
கெரிகதி ரின்றுயி லெழுப்பி யெய்தவு
மருளொடு தெருளுறு நிலையர் மங்கையர்
தெருளுற மெய்ப்பொரு டெளிந்தி லாரினே.

அரு மணிச் சாளரம் அதனின் ஊடு புக்கு
எரி கதிர், இன் துயில் எழுப்பி எய்தவும்,
மருளொடு தெருள் உறும் நிலையர்; மங்கையர்,
தெருள் உற மெய்ப்பொருள் தெளிந்திலாரினே.

பொ :—சூரியனுடைய வெய்ய கிரணங்கள், சிறந்த மணிகள் பதித்த சாளரத்தினூடு புகுந்து, இனிய உறக்கத்தினின்று எழுப்பிக் கொண்டு வரவும், அரக்க மகளிர், தெளிவாக உண்மைப் பொருளை யறியாதாரைப் போலக் கலக்கமும் தெளிவும் கலந்த நிலையர் ஆயினர்.

கு :—எரி கதிர் மணிச்சாளரத்தினூடுபுக்கு, துயிலெழுப்பி யெய்தவும், மங்கையர், மெய்ப்பொருள் தெருளுறத் தெளிந்திலாரின் மருளொடு தெருளுறும் நிலையர் என இயையும். சாளரம் - சாலகம். சாளரமதனின் என்பதனுள் அது பகுதிப் பொருளது. இயல்பான ஒளியுடைய சூரியகிரணம், புகும் சாளரத்தின் மணியமைதியால் மிக்க ஒளியுடையதாய் வரவும் என்றவாறு. தெளிந்திலார் - அறியாதார். இன் - உவமவுருபு. இராவணன் கட்டளையால் இடையிரவில் சூரியன் உதித்தமையால் கண்விழிப்பும் இரவுக்குரியபொழுது முழுதும் கழியாமையால் உறக்கமும் ஒருங்குடையரான அரக்க மகளிர் சிலர், ஐயமும் விபரீதமும் நீங்க உண்மைப்பொருளை யறியாதாரைப்போல மருளும் தெருளும் ஒருங்குடையராயினர் என்றவாறு. (128)

### யாமக்கணக்கரும் கோழியும் துயின்றமை

3292. ஏவலின் வன்மையை யெண்ண றேற்றலர்
நாவல ரியற்றிய நாளி ணுமநூல்
காவலி னுனித்துணர் கணித மாக்களுங்
கூவுறு கோழியுந் துயில்வு கொண்டவே.

ஏவலின் வன்மையை எண்ணல் தேற்றலர்
நாவலர் இயற்றிய நாளின் நாம நூல்
காவலின் நுனித்து உணர் கணிதமாக்களும்
கூவுறு கோழியும் துயில்வு கொண்டவே.

பொ :—சொல்வன்மையுள்ள புலவராலியற்றப்பட்ட காலவிகற்பங்களைக் கூறும் புகழ் வாய்ந்த நூல்களைப் பொறியடக்கத்தோடு கூர்ந்து நோக்கிக் கற்றறிந்த (சோதிடராகிய) காலக் கணக்கரும், இராவணனுடைய கட்டளையின் வலியை அறியாதவராயினர்; பொழுது புலருங் காலத்துக் கூவும் இயல்புடைய கோழிகளும் உறக்க மேற்கொண்டன.

கு :—ஏவல் - கட்டளை. ஏவலின் வன்மை யென்றது, இடையிரவிற் பகல் வருவித்த இராவணனுடைய கட்டளையின் ஆற்றலை. நாள் - காலம். நாமம் - புகழ். நாவலர் இயற்றிய நூல், நாளின்

நூல், நாம நூல் என்க. நாளின் நாம நூல் - கால விகற்பங்களை விரித்துக் கூறும் புகழ் வாய்ந்த நூல். காவலின் - காத்தலால். காத்தலாவது மனம் பொறிவழி செல்லாது அடக்குதல். நுனித்துணர்தல் - கூர்ந்து நோக்கி அறிதல். கணிதமாக்கள் - சோதிடர்; இங்கே காலக்கணக்கர். இடையிரவில் இராவணனுணையால் சூரியோதயம் ஆயிற்று. இதனையறியாமையால் இராவணன் மாளிகையில் இரவு முழுதும் விழித்திருந்து காலத்தை வரையறுத்துணர்த்தும் காலக் கணக்கரும் இடையிரவில் சூரியனுதித்தமைக்குக் காரணம் அறியாது திகைப்பாராயினர் ; பொழுது புலருங் காலத்துக் கூவும் இயல்புடைய கோழிகளும், இடையிரவிற் பொழுது புலர்ந்தமையால் (இரவுக்குரிய நேரம் முழுதும் கழிந்து உரியகாலத்துப் புலராமையால்) கூவாது உறங்குவனவாயின என்றவாறு. (129)

### பகற்பொழுதும் இராவணன் வருந்தி இது சூரியனன்று சந்திரனே யெனல்

3293. இனையன வுலகினி னிகழு மெல்லையிற்
கனைகழ லரக்கனுங் கண்ணி னோக்கினு
னினைவுறு மனத்தையு நெருப்பிற் றீய்க்குமா
லனையவத் திங்களே யாகு மாலென்றான்.

இனையன உலகினில் நிகழும் எல்லையில்,
கனை கழல் அரக்கனும் கண்ணின் நோக்கினன்,
நினைவுறும் மனத்தையும் நெருப்பில் தீய்க்குமால்
அனைய அத் திங்களே ஆகுமால் என்றான்.

பொ :—இவைபோலும் நிகழ்ச்சிகள் உலகில் நிகழ்ந்து கொண்டிருக்கும்போது, ஒலிக்கின்ற வீரக்கழலணிந்த இராவணன், (சூரியனைத்) தன் கண்ணால் நோக்கியவனாய், 'நினைக்கும் மனத்தையும் நெருப்பைப் போலச் சுடுகின்றது; (ஆதலால் இது சூரியனில்லை.) அவ்வெரிக்குந் தன்மையுள்ள முன்வந்த திங்களே' என்று கூறுவானாயினன்.

கு :—கனை - ஒலி. தீய்த்தல் - சுடுதல். (130)

### உழையர் சூரியனே எனல்

3294. திங்களோ வன்றிது செல்வ செங்கதிர்
பொங்குளைப் பச்சையம் புரவித் தேரதால்

வெங்கதிர் சுடுவதே யன்றி மெய்யுறத்
தங்குதண் கதிர்சுடத் தகாதென் ருர்சிலர்.

திங்களோ அன்று இது ; செல்வ ! செங்கதிர்;
பொங்கு உளைப் பச்சை அம் புரவித் தேரது ; ஆல்
வெம் கதிர் சுடுவதே ; அன்றி, மெய் உறத்
தங்கு தண் கதிர் சுடத்தகாது என்ருர் சிலர்.

பொ :—(உழையர் சிலர் இராவணனை நோக்கி) ‘செல்வ ! இது’ சந்திரனே? அன்று ; சூரியன் ; மிக்க பிடரிமயிரையுடைய பசுமை நிறம் வாய்ந்த அழகிய குதிரை பூண்ட தேரையுடையது; வெவ்விய கிரணங்களையுடைய சூரியனே சுடுவது; அன்றி, குளிர்ச்சி பொருந்திய கதிர்களையுடைய சந்திரன் சுடத்தக்கதாகாது ; இது மெய்’ என்று கூறுவாராயினர்.

கு :— காமத்தீயால் பகலிலும் வெதுப்புற்ற இராவணன் உழையரை நோக்கித் தன்னைச் சுட்டது சந்திரனே; சூரியன் அன்று; நான் சூரியனைக் கொணரச்சொல்ல, நீவிர் சந்திரனைக் கொணர்ந்தீர், என்று முன் பாட்டில் சினந்து கூறினுகை, அவன் உழையரிற் சிலர், ‘ஐய ! இது திங்கள் அன்று ; சூரியனே’ என்று கூறி, அதற்கு ஏதுவாகச் சூரியன் பச்சைக் குதிரை பூண்ட தேரினனுயிருத்தலையும் காட்டி, மேலும், ‘வெவ்விய கதிர்களையுடைய சூரியனே சுடும்; குளிர்ந்த கதிர்களையுடைய சந்திரன் சுடத்தக்கதாகாது’ என்று கூறித் தங்கள்பால் தவறின்மை காட்டியவாறு. ‘செவ்வழிக் கதிரோ னென்றுந் தேரின்மேலன்றி வாரான், வெவ்வழித் தெனினுந் திங்கள் விமானத்தின் மேலதென்ருர்’ (3275) என்னும் செய்யுளும் இங்கு நோக்கத்தகும். (131)

இராவணன் பிறைமதியை அழைக்கும்படி கூறுதல்

3295. நீலச் சிகரக் கிரியன்னவ
★ னின்ற வெய்யோ
னுலத்தினும் வெய்ய னகற்றி
யரற்று கின்ற
வேலைக் குரலைத் தவிர்கென்று
விலக்கி மேலை
மாலைப் பிறைப்பிள் ளையைக்கூவுதிர்
வல்லை யென்ருன்

நீலச் சிகரக் கிரி அன்னவன், ‘நின்ற வெய்யோன்
ஆலத்தினும் வெய்யன் ; அகற்றி, அரற்றுகின்ற
வேலைக் குரலைத் தவிர்கென்று விலக்கி, மேலை
மாலைப் பிறைப்பிள்ளையைக் கூவுதிர் வல்லை” என்றான்.

பொ :—சிகரங்களையுடைய நீலமலை போல்பவனான இராவணன், (இங்கே) ‘நின்ற சூரியன், விடத்தினும் கொடியன்; இவனைப் போக்கி, ஒலிக்கின்ற கடலின் முழக்கத்தை ‘ஒழிக’ என்று விலக்கி, மேலைத் திசையில் மாலைப் பொழுதில் தோன்றும் குழவித் திங்களை விரைந்து கூவுக’ என்று கூறினான்.

கு :—நீல நிறமும் பல தலைகளும் உடைய இராவணனுக்குப் பல சிகரங்களையுடைய நீலகிரி உவமை. வெய்யோன் - சூரியன். ஆலம் - விடம். வெய்யன் - கொடியன். அகற்றி - போக்கி. அரற்றுதல் - ஒலித்தல். வேலை - கடல். வல்லை - விரைவு. (132)

பிறைத்தோற்றம் (கவிக்கூற்று)

3296. சொன்னா னிருதர்க் கிறையம்மொழி
சொல்ல லோடு
மந்நாளி னிரம்பிய வம்மதி
யாண்டொர் வேலை
முந்நாளி னிளம்பிறை யாகி
முளைத்த தென்றா
லெந்நாளு மருந்தவ மன்றி
யியற்ற லாமோ.

சொன்னான் நிருதர்க்கு இறை, அம்மொழி சொல்லலோடும்,
அந்நாளின் நிரம்பிய அம்மதி, ஆண்டு ஓர் வேலை
முந்நாளின் இளம் பிறையாகி முளைத்தது, என்றால்,
எந்நாளும் அருந்தவம் அன்றி இயற்றல் ஆமோ ?

பொ :—அரக்கர்க்கு அரசனான இராவணன், அச்சொல்லைச் சொல்லிய அளவில், அன்று பதினாறு கலையும் நிறைந்த அச்சந்திரன், அவ்விடத்தே சிறிதுபொழுதுள் மூன்று நாள் நிரம்பிய இளம்பிறையாகித் தோன்றியது; எனின், எக்காலத்தும் அரியதவத்தையன்றி வேறு செய்யத் தகுமோ? (தகாது)

கு :—நிருதர்க்கு இறை அம்மொழி சொன்னான் என இயைக்க. அம்மொழி என்றது, முன்பாட்டில் 'மாலைப் பிறைப் பிள்ளையைக் கூவுதிர்' என்றதனை. ஆண்டு - அவ்விடத்தே. வேலை - பொழுது. ஓர் வேலை என்றது காலத்தின் ஒரு சிறு பகுதியை. இராவணன் தவத்தின் ஆற்றலால் அவன் கட்டளையிட்டபொழுதே நிறைமதி முந்நாட்பிறையாக மாறித் தோன்றியது, ஆதலால் என்றும் தவமே செய்யத் தகும் என்றவாறு. (133)

### பிறைவர இராவணன் வருந்தல் 3297—3299

**3297.** குடபாலின் முளைத்தது கண்ட
குணங்க டீயோன்
வடவாவன லன்றெனின் மண்பிடர்
வைத்த பாம்பின்
விடவாளெயி றன்றெனி னென்னை
வெகுண்டு மாலை
யடவா ளுருவிக் கொடுதோன்றிய
தாகு மன்றே.

குடபாலின் முளைத்தது கண்ட குணங்கள் தீயோன்,
வடவா அனல்; அன்று எனின், மண் பிடர் வைத்த பாம்பின்
விடவாள் எயிறு; அன்று எனின் என்னை வெகுண்டு, மாலை
அட, வாள் உருவிக்கொடு தோன்றியது ஆகும். அன்று ஏ.

பொ :—(இளம்பிறை) மேற்றிசையில் தோற்றியது கண்ட தீக்குணங்களையுடைய இராவணன், இது வடவைக்கனல்; அஃதன்று எனின், நிலத்தைத் தன் பிடரில் தாங்கும் ஆதிசேடனாகிய பாம்பின் கொடிய விடம் பொருந்திய பல்லாகும்; அதுவும் அன்றேல் மாலைப் பொழுதானது என்னைக் கொல்லும்படி சினந்து வாளை உருவிக் கொண்டு தோன்றியதாகும்.

கு :—இளம்பிறை என்பது முன்பாட்டிலிருந்து கொள்ளப்பட்டது. குடபால் - மேற்றிசை. குணங்கள் தீயோன் என்றது இராவணனை. கடலில் தோன்றலும் தகித்தலும் கொண்டு பிறையை வடவை என்றான். வளைந்த வடிவும், தீண்டி வருத்துஞ் செயலும் கொண்டு பாம்பின் பல் என்றான். வடிவும் ஈர்தலும் கொண்டு வாள் என்றனன். அன்று ஏ அசைகள். இச்செய்யுள் முதல் 3300-ஆம் செய்யுள் முடிய வுள்ளவை இராவணன் பிறையினை நிந்தித்துப் பேசுவதாய் அமைந்தவை; ஆதலின் இச்செய்யுளில் உள்ள தீயோன் என்னும்

எழுவாய்க்கு 3300 ஆம் செய்யுள் முடிவில், என்ருன் என்னும் பயனிலே வருவித்து முடித்துக் கொள்ளல் தகும். (134)

3298. தாதுண்சடி லத்தலே வைத்தது
தண்ட ரங்க
மோதுங்கட லிற்கிடை முந்து
பிறந்த போதே
யோதுங்கடு வைத்தன் மிடற்றி
ஞெளித்த தக்கோ
னீதுங்கடு வாமென வெண்ணிய
வெண்ண மன்ருே.

தாது உண் சடிலத் தலேவைத்தது, தண் தரங்கம்
மோதும் கடலிற்கு இடை முந்து பிறந்தபோதே
ஓதும் கடுவைத் தன் மிடற்றின் ஒளித்த தக்கோன்,
'ஈதும் கடுவாம்' என எண்ணிய எண்ணம் அன்ருே.

பொ :—குளிர்ந்த அலேமோதுகின்ற கடலிடை முன்பு பிறந்த போதே, கொடுமை மிக்கதென்று சொல்லப்படுகிற ஆலகால விடத்தைத் தன் கண்டத்தில் ஒளித்துவைத்துக் கொண்ட தக்கோனுகிய சிவபெருமான், (இப்பிறையை) மகரந்தங்களேக் கொண்ட தன் சடையில் வைத்துக்கொண்டது, இதுவும் நஞ்சே என்று எண்ணிய நினேவினுலன்ருே ?

கு :—தக்கோன் (பிறையைத்) தலேவைத்தது 'ஈதும் கடுவாம்' என எண்ணிய எண்ணமன்ருே என இயைந்து முடிவுறும். தாது - (கொன்றை மாலேயாகிய முடிக்கண்ணியினின்று உதிர்ந்த) மகரந்தம். சடிலம் - சடை. தலே ஏழனுருபு. தரங்கம் - அலே. கடு என்றது ஆலகால விடத்தை. மிடறு - கழுத்து. கடு - நஞ்சு. எண்ணத்தால் என மூன்றனுருபு விரிக்க. ஆலகாலமும் பிறையும் கடலிற்ருேன்றின மையால் ஒக்குமாயினும், ஆலகாலத்தையுண்டு கண்டத்துள் அடக்கி ஒடுக்கிவைத்துக் கொண்ட சிவபிரான், பிறையை உடலின் புறத்தே தலேயிற் சடைமீது தரித்துக் கொண்டமையால் இப்பிறையின் கொடுமை மிகுதி புலப்படுமென்றவாறு. (135)

3299. உருமொத்த வலத்துயிர் நுங்கிய
திங்க ளோடித்
திருமிச்சிறு மின்பிறை தீமை
குறைந்த தில்லை
கருமைக்கறை நெஞ்சினி னஞ்சு
கலந்த பாம்பின்
பெருமைச்சிறு மைக்கொரு பெற்றி
குறைந்த துண்டோ.

உரும் ஒத்த வலத்து உயிர் நுங்கிய திங்கள் ஓடித்
திருமு இச்சிறு மின் பிறை, தீமை குறைந்ததில்லை!
கருமைக் கறை நெஞ்சினின் நஞ்சு கலந்த பாம்பின்
பெருமைச் சிறுமைக்கு ஒரு பெற்றி குறைந்தது உண்டோ?

பொ:—கரிய கறை பொருந்திய நெஞ்சினையும் நஞ்சினையும் உடைய பாம்புகளில் பெரிய பாம்புக்குச் சிறிய பாம்பு கொல்லுந் தன்மையால் குறைந்ததுண்டோ? இல்லை; அதுபோல, இடியை ஒத்த வன்மையால் என் உயிரை உண்ட நிறைமதி ஓடி (மாறித்) திரும்பிய இந்தச் சிறிய மின்னுகின்ற பிறைமதி, தீமையால் குறைந்ததில்லை.

கு:—நஞ்சு கலந்த பாம்பின் பெருமைச் சிறுமைக்கு ஒரு பெற்றி குறைந்ததுண்டோ? இல்லை; அதுபோல, திங்கள் ஓடித் திருமு இச் சிறு மின் பிறை தீமை குறைந்ததில்லை என முடிவு கொள்ளும். உரும் - இடி. வலம் - வன்மை. நுங்குதல் - உண்ணல். திருமுதல் - திரும்பிவருதல். நெஞ்சு என்றது பாம்பினுடைய கழுத்தின் அடிப் பாகத்தை. கொடிய நச்சுப் பாம்புகளின் நெஞ்சு கரிய கறையுடைய தாய்க் காணப்படும். பெருமை சிறுமை என்பவை பெரிது சிறிது என்று பொருள்பட நின்றன. எதுகை நோக்கிப் பெருமைச் சிறுமை எனச் சகரம் மிக்கது. பெருமைச் சிறுமைக்கு என்பதனுள், குவ்வுருபினைப் பிரித்து முன்னதனோடு கூட்டிப் பெருமைக்குச் சிறுமை என்று கொள்ளலாயிற்று. பெற்றி - தன்மை. நிறைமதியினும் பிறைமதி தீமை குறைந்ததில்லை என்பதை, நச்சுப் பாம்புகளிற் பெரிய பாம்பினும் சிறிய பாம்பு கொல்லுந் தன்மையிற் குறைந்ததில்லை என்னும் எடுத்துக் காட்டுக் கொண்டு நிறுவுதலின், இச்செய்யுள் எடுத்துக் காட்டுவமையணி தழுவியதாகும். (136)

### இராவணன் பிறையை அகற்றி இருளைத் தருக எனல்

3300. கன்னக்கனி யும்மிரு டன்னையுங்
காண்டு மன்றே
முன்னைக்கதிர் நன்றி தகற்றுதிர்
முன்பு சான்ற
வென்னைச்சுடு மென்னினிவ் வேழுல
கத்தும் வாழ்வோர்
பின்னைச்சில ருய்வரென் றங்கொரு
பேச்சு முண்டோ.

'கன்னக் கனியும் இருள் தன்னையும் காண்டும்; அன்று, ஏ
முன்னைக் கதிர் நன்று; இது அகற்றுதிர்; முன்பு சான்ற
என்னைச் சுடும் என்னின், இவ் ஏழுலகத்தும் வாழ்வோர்
பின்னைச் சிலர் உய்வர் என்று அங்கு ஒரு பேச்சும் உண்டோ?'

பொ :—'முன்பு வந்த சூரியன் நல்லது; இப்பிறை வலிமை மிக்க என்னையே சுடுமென்றால், இந்த ஏழுலகத்தும் வாழ்வோருள் சிலர் (இதனாற் சுட்டெரிக்கப்படாது) பிழைப்பர் என்று ஒரு சொல் உண்டாகுமோ? (ஆகாது) ஆதலால் இதனைக் கொண்டு போய் நீக்குமின்; இனி நன்கு முதிர்ந்த இருளையும் பார்ப்போம்; (கொணர் மின்)' என்றான்.

கு :—முன்னைக் கதிர் நன்று; இது என்னைச் சுடுமென்னின், சிலர் உய்வர் என்று ஒரு பேச்சும் உண்டோ? (இதனை) அகற்றுதிர்; இருள் தன்னையும் காண்டும் என இயைக்க. கன்னக்கனிதல் - நன்கு முதிர்தல். காண்டும் - காண்போம். இது என்றது பிறை மதியினை. முன்பு - வலிமை. சாலுதல் - நிறைதல். உண்டோ என்பத னுள் ஓகாரம் எதிர்மறைப் பொருளுணர்த்தியது. இருள் தன்னையும் காண்டும் என்பதனுள் அதனைக் கொணர்க! என்னும் கட்டளையும் அடங்கும். இச்செய்யுளும் இதற்குமுன் மூன்று செய்யுட்களும் இராவ ணன் பிறையினை நிந்தித்துப் பேசுவதாய் அமைந்தமையின், என்றான் என்னும் முடிக்குஞ் சொல் வருவித்துரைக்கலாயிற்று. (137)

### இருள் வருணனை (கவிக் கூற்று) 3301—3302

3301. ஆண்டப்பிறை நீங்கலு மெய்திய தந்த காரந்
தீண்டற்கெளி தாய்ப்பல தேய்ப்பன தேய்க்க லாகி

வேண்டிற்கர பத்திரத் தீர்ந்து விழுத்த லாகிக்
காண்டற்கினி தாய்ப்பல கந்து திரட்ட லாகி.

ஆண்டு அப்பிறை நீங்கலும், எய்தியது அந்தகாரம்;
தீண்டற்கு எளிதாய்ப் பல தேய்ப்பன தேய்க்கல் ஆகி,
வேண்டில் கரபத்திரத்து ஈர்ந்து விழுத்தல் ஆகிக்
காண்டற்கு இனிது ஆய்ப் பல கந்து திரட்டல் ஆகி.

பொ :—இராவணன் கட்டளையிட்ட அப்பொழுதே அந்தப் பிறை மதி நீங்கிய அளவில், தொடுதற்கெளியதாய்ப் பூசத்தக்க பலவற்றினும் பூசத்தக்கதாய், விரும்பினுல் கைவாளால் வெட்டி வீழ்த்தத் தக்கதாய்க் காண்பதற்கினியதாய்ப் பல தூண்களாகத் திரட்டத்தக்கதாய் இருள் வந்தடைந்தது.

கு :—பிறை நீங்கலும், அந்தகாரம், எளிதாய், தேய்க்கலாகி, ஈர்ந்து விழுத்தலாகி, இனிதாய், திரட்டலாகி, எய்தியது என்க. அந்தகாரம் - இருள். கரபத்திரம் - வாள். ஈர்தல் - துண்டித்தல், கந்து - தூண். (138)

3302. முருடீர்ந் துருட்டற்
கெளிதென்ப தென் முற்று முற்றிப்
பொருடீங்கில் கேள்விச்
சுடர்புக்கு வழங்க லின்றிக்
குருடீங்கி தென்னக்
குறிக்கொண்டுகண் ணோட்டங் குன்றி
யருடீர்ந்த நெஞ்சிற்
கரிதென்பதவ் வந்த காரம்

முருடு ஈர்ந்து உருட்டற்கு எளிது என்பது என்? முற்றும் முற்றிப் பொருள் தீங்கு இல் கேள்விச் சுடர் புக்கு வழங்கல் இன்றிக் குருடு ஈங்கு இது என்னக் குறிக்கொண்டு, கண்ணோட்டம் குன்றி, அருள் தீர்ந்த நெஞ்சின் கரிது என்பது அவ் அந்தகாரம்.

பொ :—அவ்விருள், கரடுமுரடான பகுதிகளை அறுத்து (நீக்கித் தூணாக) உருட்டுதற்கு எளிதாயது என்று சொல்லுவது என்? நன்கு முதிர்ந்து, நூற் பொருளும் கேள்வியாகிய விளக்கும் புகுந்து நிலை பெறுதலின்றி, ‘இது குருடு’ என்று (உலகத்தாரால்) குறிக்கப்படுதலைப் பெற்றுக் கண்ணோட்டம் ஒழிந்து அருள்நீங்கிய (புல்லர்) மனம் போலக் கரியது என்று சொல்லத்தக்கது.

கு :—அவ்வந்தகாரம் அருள்தீர்ந்த நெஞ்சின் கரிது என இயையும். முன்செய்யுளில் இருளின் செறிவு (திண்மை) பேசப்பட்டது. இச்செய்யுளில் அதன் கருமை மிகுதி பேசப்படுகிறது. முதலடியால் முன்செய்யுளிற் கூறிய இருளின் திண்மை அனுவதிக்கப்பட்டது. இருள், நன்கு முதிர்ந்து, கல்வி கேள்விகள் புக்கு நிலைபெறுதலின்றி, கண்ணோட்டமும் அருளும் ஒழிந்த, புல்லர் மனம்போல மிகவும் கரிதாயிருந்தது என்றவாறு. 'தெருண்டறிவில்லவர் சிந்தையின் முந்தியிருண்டன' (அயோமுகிப். 36) என்று ஆசிரியர் பின்னே கூறுவதும் இங்கு நோக்கத்தகும். முருடு - கரடுமுரடான பகுதி. ஈர்தல் - அறுத்தல். பொருள் என்றது நூற்பொருளை. பொருளும் தீங்கில் கேள்விச் சுடரும் என உம்மை விரிக்க. பொருள் என்றதனுல் கல்வி குறிக்கப்பட்டது. கேள்விச் சுடர் - கேள்வியாகிய விளக்கு; உருவகம். வழங்கல் - நிலைபெறுதல் ; 'வானின்றுலகம் வழங்கி வருதலால்' (திருக்குறள். 11) என்பதனுள், வழங்குதல் நிலைபெறுதல் என்னும் பொருளிற் பயின்றமை காணலாம். குறிக்கொள்ளல் – குறிக்கப்படுதல். கண்ணோட்டமாவது தன்னொடு பயின்றாரைக் கண்டால் அவர் கூறியன மறுக்கமாட்டாமை என்பர் பரிமேலழகர். குன்றுதல், ஒழிதல் என்று கொள்ளநின்றது. தீர்தல் - நீங்குதல். இச்செய்யுள், 'கண்ணுடையரென்பவர் கற்றோர்' (393), 'கண்ணோட்டமில்லவர் கண்ணிலர்' (577) என்னும் திருக்குறள்களைத் தழுவியமைந்தது.

(139)

### இருளின் தோற்றங் கண்டு இராவணன் கூறுதல் 3303, 3304

**3303.** விள்ளாது செறிந்திடை
மேலுற வீங்கி யெங்கு
நள்ளா விருள்வந்
தகன்ஞாலம் விழுங்க லோடு
மெள்ளாவுல கியாவையும்
யாவரும் வீவ தென்ப
துள்ளா துமிழ்ந்தான்
விடமுண்ட வொருத்த னென்றான்.

விள்ளாது செறிந்து இடை மேல் உற வீங்கி, எங்கும் நள்ளா இருள் வந்து அகல் ஞாலம் விழுங்கலோடும், 'எள்ளா உலகு யாவையும் யாவரும் வீவது என்பது உள்ளாது, உமிழ்ந்தான் விடம் உண்ட ஒருத்தன்' என்றான்.

பொ :—எங்கும் (யாவராலும்) விரும்பப்படாத இருள், பிளவு படாமல் செறிந்து நிலத்தினும் விசும்பினும் மிக்குப் பரவி வந்து, விரிந்த உலக முழுவதையும் மறைத்த அளவில், (இராவணன்), ‘ ஆலகால விடத்தை உண்ட ஒப்பற்றவனான சிவபெருமான், இகழத் தகாத எல்லா வுலகமும் அவ்வுலகங்களில் வாழ்வோர் யாவரும் அழிதலை நினையாமல் உமிழ்ந்தனன்’ என்று கூறினான்.

கு :—கரிய இருளொடு கூடிய இரவு வர, அதனால் வருந்திய இராவணன், நிறமும் செயலும் கொண்டு அவ்விருளை ஆலகாலவிட மாகக் கருதி, அதனை உண்ட ‘சிவபெருமான், உலகங்களும் அவற்றில் வாழும் உயிர்களும் அழியும் என்பதை நினையாமல் அவ்விடத்தை உமிழ்ந்து விட்டான்’ என்று கூறி வருந்துவானாயி னான் என்றவாறு. எங்கும் நள்ளா இருள் என்க. இருள் செறிந்து வீங்கி ஞாலம் விழுங்கலோடும், விடம் உண்ட ஒருத்தன் உள்ளாது, உமிழ்ந்தான் என்றான் என இயையும். இடை - இடம்; நிலம். ‘இடை யிற் படுகிற்கிலம்’ (யுத்த. அதிகாயன். 73) என்பதனுள் இடை நிலம் என்னும் பொருளிற் பயின்றமை காணலாம். மேல் - விசும்பு. வீங்கி - பரவி. ஞாலம் - பூவுலகு. வீவது - அழிவது. உள்ளுதல் - நினைதல்.
(140)

3304. வேலைத்தலை வந்தொரு வன்வலி
யால்வி ழுங்கு
மாலத்தி னடங்குவ தன்றி
தறிந்து ணர்ந்தேன்
ஞாலத்தொடு விண்முதல் யாவையு
நாவி னக்குங்
காலக்கனல் கார்விட முண்டு
கறுத்த தன்றே.

வேலைத் தலை வந்து ஒருவன் வலியால் விழுங்கும்
ஆலத்தின் அடங்குவது அன்று இது; அறிந்து உணர்ந்தேன்.
ஞாலத்தொடு விண்முதல் யாவையும் நாவின் நக்கும்
காலக் கனல் கார்விடம் உண்டு கறுத்தது அன்று ஏ.

பொ :—கடலிற் பிறந்து ஒப்பற்ற சிவபிரான் ஆற்றலால் விழுங்கிய ஆலகாலவிடம்போல, இவ்விருள் (ஒருவரால் உண்ணப் பட்டு) அடங்குவதன்று; மண்ணுலகோடு விண்ணுலகு முதலிய எல்லா வுலகங்களையும் நாவினால் (எளிதாக) நக்கி உண்டழிக்கும்

ஊழித்தீ, கரியவிடத்தினை யுண்டு (தன் செந்நிறம் தீர்ந்து) கருமை நிறமுற்றது; இதனை அறிந்து தெரிந்துகொண்டேன். (என்றான்).

கு:—வேலை - கடல். தலை ஏழனுருபு. ஒருவன் என்றது சிவபிரானை. ஆலம் - விடம்; ஆலகாலம். இன் உவமவுருபு. ஆலம் போல அடங்குவதன்று என்க. முன்பாட்டில், கருநிறமும் வருத்தும் செயலும் கொண்டு இருளை ஆல்கால விடம் என்று எண்ணிய இராவணன், இச் செய்யுளால் ஆலகாலத்தினும் கொடிய ஊழித்தீ என்று துணிகின்றான். ஆலகாலவிடம் சிவ பிரானால் உண்ணப்பட்டு வலியழிந்து, அவன் கழுத்தளவில் அடங்கிநின்றது; இவ்விருளோ அங்ஙனம் அடங்காமல் நிலனும் விசும்பும் எங்கும் பரவி நின்று நலிகின்றது. ஆதலால், தான் ஒருவரால் உண்டு அடக்கப்படாமல், மண்ணுலகும் விண்ணுலகும் முதலிய எல்லாவற்றையும் தன் நாவினால் எளிதாக நக்கி யழிக்கும் ஊழித்தீயாகும் என்று துணிந்து, ஊழித்தீ செந்நிற முடைய தேனும் அது விடத்தினையுண்டு கறுத்தது என அது கருநிற முற்றதற்குக் காரணமும் கூறுவானாயினன் என்றவாறு. அன்று ஏ அசை. (141)

## சீதையின் உருவெளிப்பாடு கண்ட இராவணன் கூறுதல் 3305—3309

**3305.** அம்பும் மனலு
நுழையாக்கன வந்த காரத்
தும்பர் மழைகொண்
டயலொப்பரி தாய துப்பின்
கொம்பர் குரும்பைக்
குலங்கொண்டது திங்க டாங்கி
வெம்புந் தமியேன்முன்
விளக்கெனத் தோன்று மன்றே.

அம்பும் அனலும் நுழையாக் கன அந்தகாரத்து
உம்பர் மழை கொண்டு, அயல் ஒப்பு அரிது ஆய துப்பின்
கொம்பர், குரும்பைக் குலம் கொண்டது, திங்கள் தாங்கி,
வெம்பும் தமியேன்முன், விளக்கு எனத் தோன்றும் அன்று ஏ.

பொ:— அம்பும் நெருப்பும் ஊடுருவாத மிக்க இருளில், சிறந்த குரும்பைகளைப்போலும் தனங்களைத் தாங்கி, வேறு ஒப்பில்

லாத ஒரு பவளக் கொம்பு, மேலே மேகம் போலும் கூந்தலை யும், திங்கள்போலும் முகத்தையும் உடையதாய் (ஆசை நோயால்) வெதும்புகின்ற தமியேன்முன் விளக்குப் போலத் தோன்றும்.

கு :—மிகச் செறிந்து பரவிய இருளின் திண்மையை உணர்த்த அம்பும் அனலும் நுழையாக் கன அந்தகாரம் என்ருன். அந்தகாரம் - இருள். அந்தகாரத்துக் குரும்பைக் குலங் கொண்டது, ஒப்பரிதாயது ஓர் துப்பின்கொம்பர், உம்பர் மழை கொண்டு, திங்கள் தாங்கி, தமியேன்முன் விளக்கெனத் தோன்றும் என இயையும். உம்பர் - மேல். அயல் - வேறு. துப்பு - பவளம், கொம்பர் - கொம்பு; போலி. குரும்பை - தெங்கின் இளங்காய். கொம்பு, மழை, குரும்பை, திங்கள் என்பவை உவமையாகுபெய ராய் முறையே, இராவணன் உருவெளித் தோற்றத்திற்கண்ட உருவத்தையும், கூந்தலையும், தனங்களையும் முகத்தையும் உணர்த்தின. அன்று ஏ அசை. (142)

**3306.** மருளூடு வந்த மயக்கோமதி
மற்று முண்டோ
தெருளாதி தென்னே திணிமையிழைத்
தாலு மொவ்வா
விருளூடிரு குண்டலங் கொண்டு
மிருண்ட நீலச்
சுருளோடும் வந்தொர் சுடர்மாமதி
தோன்று மன்றே.

மருள் ஊடு வந்த மயக்கோ! மதி மற்றும் உண்டோ!
தெருளாது, இது என்னே? திணி மை இழைத்தாலும் ஒவ்வா
இருளூடு இரு குண்டலம் கொண்டும் இருண்ட நீலச்
சுருளோடும் வந்து ஓர் சுடர் மாமதி தோன்றும் அன்றே.

பொ :—செறிந்த மையினைக் குழைத்தாலும் ஒப்பாகாத இரு ளிடையே, இரண்டு குண்டலங்களை அணிந்துகொண்டும் இருண்ட நீலமணிபோலும் கூந்தலோடும் ஒளியையுடைய தொரு சிறந்த திங்கள் வந்து தோன்றுகின்றது. இது காம மோகத்தால் வந்த மதிமயக்கமோ? அல்லது (இத்தன்மை வாய்ந்த) வேறு ஒரு மதிதான் உண்டோ? ஐயமற அறியப் படாத இது யாது?

கு :—மருள் - மோகம். மயக்கம் - அறிவுமாறுபாடு. தெருளு தல் - தெளிதல். திணிதல் - செறிதல். இழைத்தல் - குழைத்தல்.

நீலச்சுருள் என்றது கூந்தலே. சுடர்மாமதி என்றது உருவெளிப் பாட்டிற் கண்ட சீதையின் முகத்தை. அன்று ஏ. அசை. (143)

3307. புடைகொண்டெழு கொங்கையு
மல்குலும் புல்கி நிற்கு
மிடைகண்டில மல்லதெல்
லாவுரு வுந்தெ ரிந்தாம்
விடநுங்கிய கண்ணுடை
யாரிவர் மெல்ல மெல்ல
மடமங்கைய ராயென்
மனத்தவ ராயி னரே.

புடைகொண்டு எழு கொங்கையும் அல்குலும் புல்கி நிற்கும்
இடை கண்டிலம்; அல்லது எல்லாவுருவும் தெரிந்தாம்;
விடம் நுங்கிய கண் உடையார் இவர் மெல்ல மெல்ல
மடம் மங்கையராய் என் மனத்தவர் ஆயினரே.

பொ :—பக்கங்களில் பரவிப் புடைத்த தனங்களையும், அல்குலையும் சார்ந்து நின்ற இடையென்னும் உறுப்பினைக் கண்டோமில்லை; அவ்விடையல்லாத எல்லாவுறுப்புக்களையும் கண்டோம்; விடத்தினை ஆற்றலழித்த கண்ணிணையுடையவராகிய இவர், மெல்ல மெல்ல மடப்பத்தையுடைய ஒரு மங்கையராய் என் மனத்தில் உள்ளவராயினர்.

கு :—புடை - பக்கம். எழுதல் - பூரித்தல். மிகவும் நுண்ணிது என்பதுபட இடை கண்டிலம் என்றான். கருமை நிறமுடைமையால் நஞ்சும் கண்ணும் ஒக்குமாயினும் நஞ்சு உண்டால் வருத்துவது. அது போலன்றிக் கண் நோக்கின அளவிலே வருத்துதலின் அதன் கொடுமை புலப்பட விடம் நுங்கிய கண் என்றான். இவர், மங்கையர் என்பவை, ஒருவரைச் சுட்டிவந்த பன்மையாய், இராவணன் உருவெளிப்பாட்டிற் கண்ட உருவை உணர்த்தின. மடம் - அழகு. (144)

3308. பண்டேயுல கேழினு முள்ள
படைக்க ணாரைக்
கண்டேனிது போல்வதோர் பெண்ணுருக்
கண்டி லேன

லுண்டேயெனின் வேறினி யெங்கை
யுணர்த்தி நின்ற
வண்டேறு கோதை மடவாளிவ
ளாகு மன்றே.

பண்டே உலகு ஏழினும் உள்ள படைக் கணாரைக்
கண்டேன்; இது போல்வது ஓர் பெண் உருக் கண்டிலேன் ஆல்;
உண்டே எனின் வேறு இனி எங்கை உணர்த்தி நின்ற
வண்டு ஏறு கோதை மடவாள் இவள் ஆகும் அன்று ஏ.

பொ :—யான் முன்னமே ஏழுலகங்களிலும் உள்ள வாள் போலும் கண்களையுடைய மகளிரைக் கண்டுள்ளேன்; இது போல்வதொரு மகளுருவைக் கண்டிலேன் ; இது போல்வதொரு பெண் உரு வேறு ஒன்று உண்டென்றால், இனி இவள், என் தங்கை கூறிய வண்டுகள் மொய்க்குங் கூந்தலையுடைய சீதையே ஆகும்.

கு :—படை - வாள். படைபோலும் கண் படைக்கண்; தொகையுவமை. வேறு உண்டே எனின் என இயைக்க. எங்கை - என் தங்கை. அன்று ஏ அசைகள். (145)

## இராவணன் சூர்ப்பணகையை அழைத்துவரக் கட்டளையிடுதல்

3309. பூண்டிப்பிணி யானுறு கின்றது
தான்பொ றுதா
டேண்டிக்கொடு வந்தனள் செய்வதொர்
மாறு முண்டோ
காண்டற்கினி யாளுருக் கண்டவட்
கேட்கு மாற்று
லீண்டிப்பொழு தேவிரைந் தெங்கையைக்
கூவு கென்றான்.

பூண்டு இப்பிணி யான் உறுகின்றது தான் பொறாதாள்,
தேண்டிக்கொடுவந்தனள்; செய்வது ஓர் மாறும் உண்டோ !
காண்டற்கு இனியாள் உருக் கண்டவட் கேட்கும் ஆற்றால்
ஈண்டு இப்பொழுதே விரைந்து எங்கையைக் கூவுக என்றான்.

பொ :—யான் (அவளை அடையாமையால்) இந்த நோயுற்று வருந்துதலைத் தான் பொறாமல் அவள் என்னைத் தேடிக்

கொண்டு வந்தாள்; அவளுக்கு யான் செய்யும் கைம்மாறும் உண்டோ? பார்ப்பதற்கு இனியவளான இவள் உருவை (முன்பு) கண்டு வந்தவளாகிய என் தங்கைக்குக் காட்டி, நீ கண்ட அவளுருவுதானு இவளுருவென்று அவளைக் கேட்கும்படி இவ்விடத்து, இப்போதே என் தங்கையை விரைந்து அழைக்க என்று இராவணன் கூறினான்.

கு:—இப்பிணி என்றது, இராவணன் உற்ற காமநோயை. தேண்டி - தேடி. மாறு - கைம்மாறு; முதற்குறை. காண்டற்கினியாள் என்றது சீதையை. கண்டவள் என்றது சீதையைப் பார்த் (துவந்) தவளாகிய சூர்ப்பணகையை. (146)

### சூர்ப்பணகை இராவணன்பால் வருதல்

3310. என்ரு னெனலுங் கடிதேகினர்
கூவு மெல்லை
வன்ரு ணிருதக் குலம்வேரற
மாய்த்தல் செய்வா
ளொன்ருத காமக் கனலுட்டெற
லோடு நாசி
பொன்ருழ்குழை தன்னெடும் போக்கினள்
போய்ப்பு குந்தாள்.

என்ருன்; எனலும், கடிது ஏகினர் கூவும் எல்லை,
வன் தாள் நிருதக் குலம் வேர் அற மாய்த்தல் செய்வாள்,
ஒன்ருத காமக்கனல் உள் தெறலோடும் நாசி
பொன் தாழ் குழைதன்னெடும் போக்கினள் போய்ப் புகுந்தாள்.

பொ:—(என் தங்கையைக் கூவுக என்று இராவணன்) கூறினன்; கூறலும், (பணியாளர்) விரைந்து சென்று அழைத்த அளவில், வலிய கால்களையுடைய அரக்கர்குலமாகிய காட்டை வேரறும்படி அழிக்கும் வினையைச் செய்பவளும், பொருந்தாக் காமமாகிய நெருப்பு மனத்தைச் சுட்ட அளவில் மூக்கினையும் பொற்பணி. அணிந்த காதினையும் போக்கிக் கொண்டவளும் ஆன சூர்ப்பணகை (இராவணன்பால்) சென்றடைந்தாள்.

கு:—என்ருன் என்றது, மேற்பாட்டில் கூறியதை அநுவதித்தவாறு. கடிது - விரைவு. தாள் - கால். ஒன்ருத காமம் - பொருந்தாக் காமம். காமக்கனல் - காமமாகிய நெருப்பு; உருவகம். உள் -

மனம். தெறல் - சுடுதல். நாசி - மூக்கு. பொன் என்றது பொன்னு லான (குண்டல முதலிய) பணியினை. தாழ்தல் - தங்குதல். குழை - காது. இரண்டாம் அடியுடன், 'கண்டனள் தன்கிளைக் கிறுதி காட்டுவாள்' (சூர்ப்பணகைப். 11) என்று முன்னே கூறினமையும் நோக்கத்தகும். (147)

## இராவணனுக்கும் சூர்ப்பணகைக்கும் இடையே நிகழ்ந்த உரையாடல் 3311—3316

### இராவணன் வினு

3311. பொய்ந்நின்ற நெஞ்சிற் கொடியாள்புகுந்
தாளை நோக்கி
நெய்ந்நின்ற கூர்வா ளவனேருற
நோக்கு நங்காய்
மைந்நின்ற வாட்கண் மயினின்றென
வந்தென் முன்ன
ரிந்நின்றவ ளாங்கொ லியம்பிய
சீதை யென்ருன்.

பொய் நின்ற நெஞ்சில் கொடியாள் புகுந்தாளை நோக்கி,
நெய் நின்ற கூர் வாளவன், நேர் உற நோக்கு நங்காய்!
மை நின்ற வாள் கண் மயில் நின்றென வந்து என் முன்னர்
இந்நின்றவள் ஆம் கொல் இயம்பிய சீதை? என்ருன்.

பொ:—பொய் நிலைபெற்ற நெஞ்சினையுடைய கொடிய சூர்ப்பணகையாகிய வந்தவளைப் பார்த்து, நெய் நீங்காத கூரிய வாட்படையினையுடைய இராவணன், 'நங்காய்! நன்ருகப்பார்; மை நிலை (யாகத் தீட்டப்) பெற்றதும் வாள் போன்றதுமான கண்ணினையுடைய மயில் நின்ருற்போல, என் எதிரே வந்து இங்குநின்றவளோ நீ சொல்லிய சீதை?' என்று வினவினன்.

கு:—கொடியாள் என்றது சூர்ப்பணகையை. வாளவன் என்றது இராவணனை. நின்றவளாங்கொல் என்பதனுள் ஆம் அசை. (148)

3312. செந்தாமரைக் கண்ணொடுஞ்
செங்கனி வாயி னோடுஞ்
சந்தார்தடந் தோளொடுந்
தாழ்தடக் கைக ளோடு
மந்தாரக லத்தொடு
மஞ்சனக் குன்ற மென்ன
வந்தானிவ னாகுமவ் வல்வி
லிராம னென்றாள்.

'செந்தாமரைக் கண்ணொடும் செங்கனி வாயினோடும்
சந்து ஆர் தடம் தோளொடும் தாழ் தடக் கைகளோடும்
அம் தார் அகலத்தொடும் அஞ்சனக் குன்றம் என்ன
வந்தான் இவன், ஆகும் அவ் வல் வில் இராமன்' என்றாள்.

பொ :—'செந்தாமரை மலர் போன்ற கண்களையும் சிவந்து கனிந்த வாயினையும் சந்தனம் அணிந்த பெரிய தோள்களையும் முழந்தாள் வரை தாழ்ந்த பெரிய கைகளையும் அழகிய மாலையணிந்த மார்பினையும் உடையனாய், நீலமலைபோல வந்தவனாகிய இவன் அந்த வலிய வில்லையுடைய இராமனாகும்' என்று (சூர்ப்பணகை) கூறினாள்.

கு :—வாய் என்றது இதழை. சந்து அழகும் ஆம். தாழ்தல் - முழங்கால்வரை நீண்டிருத்தல். கைகள் முழங்கால் வரை நீண்டிருத்தல் உத்தமபுருடரிலக்கணமாக நூல்கள் கூறும். அகலம் - மார்பு. வந்தான் அவ்வல்வில் இராமனாகும் என இயைக்க. இவன் என்றது, சூர்ப்பணகை தான் உருவெளிப்பாட்டிற் கண்ட இராமனை. (149)

3313. பெண்பாலுரு நானிது கண்டது
பேதை நீயீண்
டெண்பாலுமி லாததொ ராணுரு
வென்றி யென்னே
கண்பாலுறு மாயை கவற்றுதல்
கற்ற நம்மை
மண்பாலவ ரேகொல் விளைப்பவர்
மாயை யென்றான்.

பெண்பால் உரு நான் இது கண்டது; பேதை! நீ ஈண்டு
எண்பாலும் இலாதது ஓர் ஆண் உரு என்றி; என்னே!
கண்பால் உறும் மாயை கவற்றுதல் கற்ற நம்மை
மண்பாலவரேகொல்! விளைப்பவர் மாயை? என்றான்,

பொ :—அறிவில்லாதவளே! நான் கண்டது ஒரு பெண்ணின் உரு; இதனை, நீ இப்பொழுது நினைவிலும் இல்லாததான ஓர் ஆணுருவென்கிறாய்; இதென்ன புதுமை! கண்ணெதிரே (செய்யும்) மிக்க மாயச் செயலால் யாவரையும் வருத்துந் தொழிலையறிந்த நம்மிடம் மானுடரோ மாயை புரிபவர்? என்று இராவணன் கூறினான்.

கு :—பெண்ணுருவை ஆணுருவென்றாள் என்னும் கருத்தால் பேதை என்றான். பேதை! நான் கண்டது பெண்பாலுரு இது; நீ ஈண்டு ஆணுரு என்றி; என்னே! என இயைக்க. (150)

3314. ஊன்றும்முணர் வப்புற மொன்றினு
மோட லின்றி
யான்றும்முள தாநெடி தாசை
கனற்ற நின்றாய்க்
கேன்றுன்னெதி ரேவிழி நோக்கு
மிடங்க டோறுந்
தோன்றும்மனை யாளிது தொன்னெறித்
தாகு மென்றாள்.

'ஊன்றும் உணர்வு அப்புறம் ஒன்றினும் ஓடல் இன்றி,
ஆன்றும் உளதாம் நெடிது ஆசை கனற்ற நின்றாய்க்கு
ஏன்று உன் எதிரே விழி நோக்கும் இடங்கள் தோறும்
தோன்றும் அனையாள்; இது தொல்நெறித்து ஆகும்' என்றாள்.

பொ :—(சீதை பக்கல்) பதிந்த நினைவு பின் வேறு ஒன்றினும் செல்லாமல், நிறைந்துள்ளதாகிய காமமும் பெரிதும் எரிக்க நின்ற உனக்கு, உன் கண் பொருந்தி நோக்கும் இடந்தோறும், அவள் உரு உன் எதிர் தோன்றும்; இவ்வாறு தோன்றுதல் பண்டுதொட்டு வந்த முறைமையுடையதாகும் என்று (சூர்ப்பணகை) கூறினாள்.

கு :—ஊன்றுதல் - பதிதல். உணர்வு - நினைவு. ஓடுதல் - செல்லுதல். ஆன்று - நிறைந்து. கனற்றுதல் - சுடுதல். அனையாள் என்றது சீதையின் உருவினை. விழி ஏன்று நோக்கும்

இடங்கள் தோறும் அனையாள் உன் எதிர் தோன்றும் என்க. சீதைபாற் சென்ற நினைவு பிறிதொன்றினும் செல்லாமல், அவள்பால் மூண்ட காமநோயும் கனற்ற நின்ற நின்விழி நோக்குமிடங்கள் தோறும் அவள் உருப் புலப்படுகின்றது; இவ்வாறு தோன்றுவது புதுமையன்று; பண்டுதொட்டு வரு முறைமைத்து என்றவாறு. ஆன்றும் என்பதில் உள்ள உம்மையைப் பிரித்து ஆசை என்பதனோடு கூட்டி ஆன்று உளதாம் ஆசையும் நெடிது கனற்ற என இயைக்க. (151)

3315. அன்னாளது கூறவ ரக்கனு
மன்ன தாக
நின்னாலவி ராமனைக் காண்குறு
நீரெ னென்றா
னெந்நாளவ னென்னையித் தீர்வரு
மின்னல் செய்தா
னந்நாண்முதல் யானு மயர்த்தில
னாகு மென்றாள்.

அன்னாள் அது கூற,
அரக்கனும், 'அன்னது ஆக;
நின்னால் அவ் இராமனைக்
காண்குறும் நீர் என்?' என்றான்;
'எந்நாள் அவன் என்னைஇத்
தீர்வு அரும் இன்னல் செய்தான்,
அந்நாள் முதல் யானும்
அயர்த்திலன் ஆகும்' என்றாள்.

பொ:—சூர்ப்பணகை அது சொல்ல, இராவணனும், 'அவ், வாருகுக; நீ அவ் விராமனைக் காணும் தன்மை என்னை?' என்று வினவினாகை, சூர்ப்பணகை, 'அவ்விராமன் என்று எனக்கு நீங்காத இந்தத் துன்பத்தைச் செய்தானோ அன்று முதல் யானும் அவனை மறந்திலேன்' (ஆதலால் அவன் உரு என் விழிக்கெதிர் தோன்றுவதாயிற்று) என்று கூறினாள்.

கு:—அன்னாள் என்றது சூர்ப்பணகையை. அன்னது என்றது, மேற்பாட்டில் சூர்ப்பணகை கூறியதனை. நீர் - தன்மை. அவன் என்றது இராமனை. தீர்வரும் இவ் இன்னல் என்க. தீர்வு அரும் இன்னல் - தீர்தல் (நீங்குதல்) இல்லாத துன்பம். தீர்வரும்

இன்னல் என்பது, மூக்கு முதலிய உறுப்புக்கள் அறுப்புண்டமையால் உளதாய துன்பத்தினையும், சூர்ப்பணகை இராவணனிடம் கூறுது மறைத்த - இராமன்பால் தான்கொண்ட காதலால் விளைந்த துன்பத்தையும் அடக்கிநின்றது. (152)

3316. ஆமாம தடுக்குமெ னாக்கையொ
டாவி நைய
வேமால் வினையேற் கினியென்விடி
வாகு மென்னக்
கோமானுல குக்கொரு நீகுறை
கின்ற தென்னே
பூமாண்குழ லாடனை வவ்வுதி
போதி யென்றாள்.

'ஆம்! ஆம்! அது அடுக்கும்; என் ஆக்கையொடு ஆவி நைய
வேமால்; வினையேற்கு இனி என் விடிவாகும்?' என்னக்
'கோமான் உலகுக்கு ஒரு நீ குறைகின்றது என்னே?
பூ மாண் குழலாள்தனை வவ்வுதி போதி' என்றாள்.

பொ:—"ஆம். ஆம். நீ சொல்லிய அது பொருந்தும்; என் உடலும் உயிரும் மெலிய வெதும்புகின்றன; தீவினையாளனான எனக்கு இனி இது எவ்வாறு தீருமோ?" என்று (இராவணன்) கூற, 'உலகுக்கு ஒப்பற்ற பேரரசனான நீ சிறுமையுறுவது என்? பூவும் மாண்புறுகின்ற கூந்தலையுடைய சீதையைக் கவர்ந்து வருதி; போதி' என்று (சூர்ப்பணகை) கூறினாள்.

கு:—சூர்ப்பணகை கூறியதை உடம்பட்டமை தோன்ற ஆம் ஆம் என்றான். அது என்றது சூர்ப்பணகை கூறியதை. அடுக்கும் - பொருந்தும். உடனே சீதையை அடையாமையால் 'வினையேன்' எனத் தன்னை வெறுத்துக் கூறுவானாயினன். விடிவு என்பது தீர்தல் என்ற பொருள்பட நின்றது. உலகுக்கு ஒரு கோமான் என இயையும். குறைதல் - சிறுமையுறுதல். சூட்டிய பூவால் சிறப்புறும் மற்றை மகளிர் கூந்தல் போலன்றிச் சீதாபிராட்டியின் கூந்தல் அதன்கண் சூட்டிய பூவுக்கும் மணம் முதலிய சிறப்பினை நல்குவதாதலின், பூமாண் குழலாள் என்றாள். வவ்வுதல் - கவர்தல். (153)

### சூர்ப்பணகை நீங்க இராவணன் வருந்தல்

3317. என்றாளகன் றாளவ் வரக்கனு மீட ழிந்தா
னென்றானு முணர்ந்தில னாவி யுலைந்து சோர்ந்தா
னின்றாரு நடுங்கினர் நின்றுள நாளி னாலே
பொன்றாதுள னாயின னத்துணை போலு மன்றே.

என்றாள், அகன்றாள்; அவ் அரக்கனும் ஈடு அழிந்தான்;
ஒன்றானும் உணர்ந்திலன், ஆவி உலைந்து சோர்ந்தான்;
நின்றாரும் நடுங்கினர்; நின்று உள நாளினாலே
பொன்றாது உளன் ஆயினன் அத்துணை; போலும் அன்று ஏ.

பொ :—என்று கூறியவளாய் (ச்சூர்ப்பணகை) நீங்கினாள்; இராவணனும் வலியழிந்து, (உழையர் செய்த உபசாரம்) ஒன்றாலும் தெளியாதவனாய் உயிருலைந்து சோர்வுற்றான்; (அவனை அடுத்து) நின்றோரும் (அவன் நிலைகண்டு) அச்சமுற்றனர்; மேலும் ஆயுள் நாள்கள் இருத்தலால் அவன் இறந்தொழியாது (உயிர்) உள்ளவனாயினன்; அவ்வளவே.

கு :—ஈடு - வலிமை. நின்றுள நாள் என்றது இராவணன் ஆயுளில் சென்றது போக நின்ற நாட்களை. (154)

### இராவணன் சந்திரகாந்த மண்டபம் அமைக்கும்படி சொல்லல்

3318. இறந்தார்பிறந் தாரென
வின்னுயிர் பெற்ற மன்னன்
மறந்தானுணர்ந் தானவண்
மாடுநின் றாரை நோக்கிக்
கறந்தாலென நீர்தரு
சந்திர காந்தத் தாலே
சிறந்தார்மணி மண்டபஞ்
செய்கெனச் செப்பு கென்றான்.

இறந்தார் பிறந்தார் என
இன் உயிர் பெற்ற மன்னன்,
மறந்தான் உணர்ந்தான், அவண்
மாடு நின்றாரை நோக்கிக்

'"கறந்தால் என நீர்தரு
சந்திரகாந்தத்தாலே
சிறந்து ஆர் மணி மண்டபம்
செய்க" எனச் செப்புக' என்றான்.

பொ :—செத்தார் உயிர்பெற்றெழுந்தாற்போல, இனிய வுயிரைப் பெற்ற இராவணன், (மீட்டும் காமநோயால் தன்னை) மறந்து (சோர்ந்து) பின் தெளிந்து, அங்கே அடுத்து நின்ற உழையரை நோக்கி, '"கறந்தாற்போல நீரைச் சுரக்கின்ற சந்திரகாந்தக் கற்களால், சிறப்புடையதாய் எல்லாவளங்களும் நிறைந்த அழகிய மண்டபத்தைச் செய்க" என்று (விசுவ கருமன்பால்) சொல்லுமின்' என்றான்.

கு :—மறந்தான், உணர்ந்தான் என்பவை எச்சப்பொருள் பட நின்றன. அவண் - அங்கே. மாடு - பக்கம். சந்திரகாந்தம் - சந்திரன் ஒளியால் நீர்சுரக்கும் ஒருவகைக் கல். ஆர்தல் - நிறைதல். (155)

## தெய்வத்தச்சன் சந்திரகாந்த மண்டபம் அமைத்தல் 3319-3320

**3319.** வந்தானெடு வானுறை தச்சன்
மனத்து ணர்ந்தான்
சிந்தாவினை யன்றியுங் கைவினை
யாலுஞ் செய்தா
னந்தாம நெடுந்தறி யாயிரத்
தால மைந்த
சந்தார்மணி மண்டபந் தாமரை
யோனு நாண.

வந்தான் நெடு வான் உறை தச்சன் மனத்து உணர்ந்தான்,
சிந்தா வினை அன்றியும், கைவினையாலும் செய்தான்.
அம் தாம நெடுந்தறி ஆயிரத்தால் அமைந்த
சந்து ஆர் மணி மண்டபம் தாமரை யோனும் நாண.

பொ :—பெரிய வானுலகில் உறைபவனான (விசுவகருமன் என்னும் தெய்வத்) தச்சன் வந்து, (இராவணன் கட்டளைப்படி மண்டபம் அமைக்கும் முறையைத் தன்) மனத்தில் ஆராய்ந்து தேர்ந்து, தன் மனவினையாலன்றியும் கைவினையாலும், அழகிய விளக்கம் வாய்ந்த நெடிய ஆயிரம் தூண்கள் அமைந்த, அழகிய,

சந்திரகாந்தக் கற்கள் இழைத்த, மண்டபத்தைப் பிரமனும் நாணும்படி செய்தான்.

கு :—வானுறைதச்சன் - தேவர்தச்சனுன விசுவகருமன். வந்தான் உணர்ந்தான் என்பவை எச்சப் பொருள. சிந்தாவினை யானன்றியும் என ஆனுருபு விரிக்க. சிந்தாவினை - மனத்தால் நினைந்த மாத்திரத்தே தோற்றுவித்தல்; இதனைச் சங்கற்ப சிருட்டி என்பர். விசுவகருமன் தெய்வத்தன்மை வாய்ந்தவனுதலின் தான் நினைத்ததனை நினைத்தமாத்திரத்தே தோற்றுவிக்கும் ஆற்றலுடையனுவன். கைவினையாவது கையாலும் ஏனைப் புறக் கருவிகளாலும் முயன்று தோற்றுவிக்கும் செயல். தாமம் - ஒளி. தறி - தூண். சந்து - அழகு. மணி என்றது சந்திரகாந்தக்கற்களை. தாமரையோன் - பிரமன். விசுவகருமன் படைப்பு, நினைந்தமாத்திரத்தே உலகங்களோடு அவற்றில் வாழும் உயிர்களையும் படைக்கும் கடவுளாகிய பிரமன்படைப்பினும் விஞ்சியதாயிருந்தது என்பார் தாமரையோனும் நாணச் செய்தான் என்ருர். தாமரையோனும் என்பதனுள் உம்மை உயர்வுசிறப்பு. (156)

**3320.** காந்தம்மமு தின்றுளி கால்வன
காலமீனின்
வேந்தன்னொளி யன்றியு மேலொடு
கீழ்வி ரித்தான்
பூந்தென்றல் புகுந்துறை சாளர
மும்பு னைந்தா
னேந்தும்மணிக் கற்பகச் சீதளக்
காவி ழைத்தான்.

காந்தம் அமுதின் துளி கால்வன கால மீனின்
வேந்தன் ஒளி அன்றியும் மேலொடு கீழ் விரித்தான்,
பூந்தென்றல் புகுந்து உறை சாளரமும் புனைந்தான்,
ஏந்தும் மணிக் கற்பகச் சீதளக் கா இழைத்தான்.

பொ :—காலத்தையுணர்த்தும் விண்மீன்களுக்கு வேந்தனுகிய சந்திரனுடைய ஒளியில்லாமலும், நீர்த்துளிகளைச் சிந்துவனவான காந்தக்கற்களை மேலும் கீழும் பரப்பி, பூக்களின் மணத்தை அளைந்துவரும் தென்றல் புகுந்து உலவித் தங்கும் பலகணிகளையும அழகுற அமைத்து, மணிகளை (தளிரும் பூவும் அரும்பும்

மலரும் காயும். கனியும் முதலியன வாக)த் தாங்கிய குளிர்ந்த கற்பகச் சோலையையும் (அம்மண்டபத்தைச் சூழ) அமைத்தான்.

கு :—காந்தம் - சந்திரகாந்தக்கல். அமுது - நீர். காலுதல் - உமிழ்தல். அசுவினி முதலிய நாண்மீன்கள் இருபத்தேழும் காலத்தை உணர்த்தலின் அவற்றைக் காலமீன் என்றும் அவற்றுக்குச் சந்திரன் நாயகனுதலின் அவனைக் காலமீனின் வேந்தன் என்றும் கூறினர். காலமீனின் வேந்தன் ஒளியன்றியும் அமுதின்றுளி கால்வன காந்தம் மேலொடு கீழ்விரித்தான் என்க. மேலொடு கீழ் - மேலும் கீழும். விரித்தல் - பரப்புதல். சாளரம் - பலகணி. புனைதல் - செய்தல். மணியேந்தும் கா என்க. மணி ஏந்துதலாவது மணிகளைப் பதித்து அமைக்கப்பட்ட தளிர், இலை, பூ, அரும்பு, பிஞ்சு, காய், கனி முதலியவற்றைத் தாங்குதல். சீதளம் - குளிர்ச்சி. இழைத்தல் - செய்தல். முன்பாட்டில் விசுவகருமன், சிந்தாவினையாலும் கைவினையாலும் ஆயிரம் தூண்களுள்ளதொரு அழகிய மண்டபத்தைச் செய்தான் என்ற ஆசிரியர், இப்பாட்டால் அம்மண்டபத்தின் அடித்தளமும் மேல்தளமும் சாளரமும் அம்மண்டபத்தைச் சூழ மணிகள் இழைத்த கற்பகச்சோலையும் அமைத்தவாறும் கூறினர். இச் செய்யுள் சிலபிரதிகளில் இல்லை. (157)

## இராவணன் மண்டபங் காண வருதல்

3321. ஆணிக்கமை பொற்கை மணிச்சுட
ராய்வி ளக்கஞ்
சேணுற்றிருள் சீப்பன தெய்வ
மடந்தை மார்கள்
பூணிற்பொலி வார்புடை யேந்திடப்
பொங்கு தோளான்
மாணிக்கமா னத்திடை மண்டபங்
காண வந்தான்.

ஆணிக்கு அமை பொன் கை மணிச் சுடர் ஆய் விளக்கம்,
சேண் உற்று இருள் சீப்பன தெய்வ மடந்தைமார்கள்
பூணிற் பொலிவார் புடை ஏந்திடப் பொங்கு தோளான்,
மாணிக்க மானத்திடை மண்டபம் காண வந்தான்.

பொ :—உரையாணிக்கு அமைந்த பொன்னுலான அணிகலனணிந்த கைகளில், நெடுந்தூரம் பரவி இருட்டை ஓட்டும்

ஒளி பொருந்திய சிறந்த மணிவிளக்குகளைத் தெய்வமகளிர் பக்கத்தே ஏந்திவர, மிகப்பலவான தோள்களையுடைய இராவணன், (விசுவகருமன் அமைத்த) மண்டபத்தைக் காணும் பொருட்டு, மாணிக்கங்கள் அழுத்திச் செய்யப்பட்ட விமானத்தில் வந்தான்.

கு :—ஆணிக்கமைபொன் - உரையாணிக்குத் தாழாத பொன். ஆய்விளக்கம் - சிறந்த விளக்கு. சீத்தல் - போக்குதல். மானம் - விமானம் ; முதற்குறை. ஆணிக்கமை பொற்கை, சேணுற்று இருள் சீப்பன, மணிச்சுடர் ஆய்விளக்கம், பூணிற்பொலிவார் தெய்வ மடந்தைமார்கள் புடையேந்திட, பொங்கு தோளான் மண்டபங்காண மாணிக்க மானத்திடை வந்தான் என இயைக்க. (158)

## இருள் நீங்குதல் 3322-3323

**3322.** அல்லாயிர கோடி யடுக்கிய தொத்த தேனு
நல்லார்முக மாநளிர் வானில வீன்ற நாமப்
பல்லாயிர கோடி பனிச்சுட ரீன்ற திங்க
ளெல்லாமுட ணுயிரு ளோடி யிரிந்த தன்றே.

அல் ஆயிர கோடி அடுக்கியது ஒத்ததேனும்,
நல்லார் முகம் ஆம் நளிர் வால் நிலவு ஈன்ற நாமப்
பல் ஆயிர கோடி பனிச்சுடர் ஈன்ற ; திங்கள்
எல்லாம் உடன் ஆய் இருள் ஓடி இரிந்தது அன்று ஏ.

பொ :—(தெய்வ) மகளிருடைய முகங்களாகிய, புகழ்வாய்ந்த, குளிர்ந்த ஒளியைச் செய்கின்ற பல ஆயிரகோடி மதிகளெல்லாம் ஒருங்கு தொக்கு, குளிர்ந்த வெள்ளிய நிலவை உண்டாக்கின ; (அதனுல்), இருள் ஆயிர கோடியிரவை அடுக்கியது போலச் செறிந்ததாயிருந்த தெனினும், ஓடி அகன்றது.

கு :—நல்லார் முகமாம் நாமப் பனிச்சுடர் ஈன்ற பல்லாயிர கோடி திங்கள் எல்லாம் உடனுய், நளிர் வானிலவீன்ற ; (அதனுல்) இருள், ஆயிரகோடி அல் அடுக்கியதொத்ததேனும், ஓடி இரிந்தது என இயைக்க. அல் - இரவு. நல்லார் என்றது விளக்கேந்தி வந்த தெய்வமகளிரை. நளிர் - குளிர்ச்சி. வால் நிலவு - வெள்ளியநிலா. ஈன்ற என்னும் இரண்டுள் முன்னது முற்று ; பின்னது பெயரெச்சம். ஈனுதல் - உண்டாக்குதல். நாமம் - புகழ். பனி - குளிர்ச்சி. சுடர் - ஒளி. இரிதல் - நீங்குதல். அன்று. ஏ. அசைகள். (159)

3323. பொற்புற்றன மாமணி
யொன்பதும் பூவி னின்ற
கற்பத்தரு வின்கதிர்
நாணிழற் கற்றை நாற
வற்பற்றழி யப்பக
லாக்கிய தால ருக்க
னிற்பத்தெளி கின்றது
நீள்சுடர் மேன்மை யன்றே.

பொற்பு உற்றன மா மணி ஒன்பதும், பூவின் நின்ற
கற்பத்தருவின் கதிர் நாள் நிழல் கற்றை நாற,
அல் பற்று அழியப் பகல் ஆக்கியது; ஆல் ; அருக்கன்
நிற்பத் தெளிகின்றது நீள்சுடர் மேன்மையன்றே !

பொ :—அழகிய சிறந்த நவமணிகளும் பூக்களைப் போலப் பதிந்து, அக்கற்பகச் சோலை, இனிய விளக்கம் மிக்க புதிய ஒளிக்கற்றையைத் தோற்றுவிக்க, அதனால் இரவு தொடர்பு அற்றுக் கெடப் பகலை உண்டாக்கியது ; சூரியன் இல்லாத நிலையினும் (இருள் நீங்கி) விளங்குதல் அக் கற்பகச் சோலையின் மிக்க ஒளிச்சிறப்பன்றே !

கு :—பொற்பு - அழகு. கற்பத்தரு என்றது விசுவகருமன் செய்த மண்டபத்தைச் சூழ அமைத்த சோலையை. இச் சோலை பொன்னில் மணிகள் அழுத்திச் செய்யப்பட்ட தென்பது, ‘ கானும் பொழிலும் மிவை செங்கனகத்தினாலும் ஏனை மணியாலு மியற்றிய’ (சுந்தர. 114) என்று பின்னும் பேசுதலால் விளங்கும். நாள் நிழல் கற்றை - புதிய ஒளித்தொகுதி. நாறுதல் - தோன்றுதல். அருக்கன் - சூரியன். தெளிதல் - விளங்குதல். (160)

## இராவணன் மண்டபத்தை அடைதல்

3324. ஊறேசை முதற்பொறி யாவையு
மொன்றி னென்று
தேருநிலை யுற்றதோர் சிந்தையன்
செய்கை யோரான்
வேறாய பிறப்பிடை வேட்கை
விசித்த தீர்ப்ப
மாறேருடல் புக்கென மண்டபம்
வந்து புக்கான்.

ஊறு ஓசை முதல் பொறி யாவையும் ஒன்றின் ஒன்று
தேரு நிலை உற்றது ஓர் சிந்தையன், செய்கை ஓரான்,
வேறு ஆய பிறப்பிடை வேட்கை விசித்தது ஈர்ப்ப
மாறு ஓர் உடல் புக்கென மண்டபம் வந்து புக்கான்.

பொ :—ஊறும் ஓசையும் முதலாகிய புலன்களையெல்லாம் ஒன்றினின்று பிறிதொன்றைப் பிரித்தறிய மாட்டாது கலங்கிய நிலையினையடைந்த மனத்தையுடைய இராவணன், தான் செய்யத்தக்க செயலை அறியாதவனாகி, ஆசையானது கட்டியிழுக்க மற்றொரு பிறவியில் வேறோர் உடலிற் புகுந்தாற்போல,விசுவகருமன் அமைத்த மண்டபத்துள் வந்து புகுந்தான்.

கு :—காமநோயால் மரணாவத்தை யுற்ற இராவணன், புலன்களிற் செல்லாது ஒடுங்கிய மனத்தொடு செய்வதறியாதவனாய், ஆசை பற்றியிழுக்க, மரணாவத்தையுற்றுப் புலனுணர்ச்சியிழந்த உயிர், மறுபிறப்பில் வேறோருடலிற் புக்காற்போல விசுவகருமன் அமைத்த மண்டபத்துள் புகுந்தான் என்றவாறு. மனம் புலன்களிற் செல்லாது ஒடுங்குதலும், வேட்கை விசித்தீர்க்க நிற்றலும், உடலினீங்கும் உயிர்க்கும் இராவணனுக்கும் பொதுவான தன்மைகள். இராவணனுக்கு வேட்கை சந்திரகாந்த மண்டபத்தை அடைந்தால் தன் துன்பம் தணியும் என்ற நினைவு. பொறி என்றது இங்கே புலன்களை. தேறுதல் - அறிதல். சிந்தை - மனம். ஓர்தல் - அறிதல். வேட்கை - ஆசை. விசித்தல் - கட்டுதல். ஈர்த்தல் - இழுத்தல். மாறு ஓர் உடல் - மற்றோருடம்பு. ஆசை பிறவிக்கு வித்தென்பது, 'அவாவென்ப எல்லாவுயிர்க்கும் எஞ்ஞான்றும், தவாஅப் பிறப்பீனும் வித்து' (361) என்னும் திருக்குறளாலும் அதற்கு, "உடம்பு நீங்கிப் போங்காலத்து அடுத்த வினையும், அது காட்டும் கதிநிமித்தங்களும், அக்கதிக்கண் அவாவும், உயிரின்கண் முறையே வந்துதிப்ப, அறிவை மோகம் மறைப்ப, அவ்வுயிரை அவ்வவா அக்கதிக்கட் கொண்டு செல்லும்" என்று பரிமேலழகர் எழுதிய விளக்கவுரையாலும் புலனாகும். (161)

### இராவணன் மலர்ச்சேக்கை சேர்தல்

3325. தண்டலி றவஞ்செய் வோர்தாம்
★ வேண்டின தாயி னல்கு
மண்டல மகர வேலை
யமுதொடும் வந்த தென்னப்

பண்டரு சுரும்பு சேரும்
பசுமர முயிர்த்த பைம்பொற்
றண்டளிர் மலரிற் செய்த
சீதளச் சேக்கை சார்ந்தான்.

தண்டல் இல் தவம் செய்வோர்தாம்
வேண்டின தாயின் நல்கும்
மண்டல மகர வேலை,
அமுதொடும் வந்தது என்னப்
பண் தரு சுரும்பு சேரும்
பசு மரம் உயிர்த்த பைம்பொன்
தண் தளிர் மலரில் செய்த
சீதளச் சேக்கை சார்ந்தான்.

பொ :—தவறுபடாத தவத்தைச் செய்வோர் விரும்பியவற்றைத் தாய்போல் உதவும் துறக்கநாடு, மகரமீன்கள் வாழும் கடலின் கண் தோன்றிய அமுதத்தொடுவந்தது என்று சொல்லும்படி, பண்ணைத் தோற்றுவிக்கின்ற வண்டுகள் மொய்க்கின்ற பசிய மரங்களில் உண்டான இளைய அழகிய குளிர்ந்த தளிர்களாலும் மலர்களாலும் அமைக்கப்பட்ட குளிர்ந்த சேக்கையை அடைந்தான்.

கு :—சந்திர காந்தக் கற்களால் விசுவகருமன் செய்த மண்டபத்திற் புக்க இராவணன், அம்மண்டபத்துள் அமைந்த படுக்கையிற் சேர்ந்தான் என்க. இடப்பரப்புடையதாய்,இன்பம்விளைக்கும் பாயலுக்குத் துறக்கமும், அங்கு அமைந்த நுகர்பொருள்களுக்கு அமுதமும் உவமை. தண்டல் - தவறுதல். தவஞ்செய்வோர் என்றது தேவர்களை. தவஞ்செய்வோர்தாம் வேண்டிய தாயினல்கும் மண்டலம் என்றது துறக்க நாட்டினை. மண்டலம் - நாடு. வேலை என்றது பாற்கடலை. மகரம் - சுறுமீன். சுரும்பு - வண்டு. உயிர்த்தல் - உண்டாதல், சீதளம் - குளிர்ச்சி. சேக்கை - படுக்கை. (162)

## தென்றல் வருதல்

3326. நேரிழை மகளிர் கூந்த
னிறைநறை வாச நீந்தி
வேரியஞ் சரளச் சோலை
வேனிலான் விருந்து செய்ய

வார்கலி யமுழவந் தந்த
வமிழ்தென வொருவ ராவி
தீரினு முதவற் கொத்த
தென்றல்வந் திறுத்த தன்றே.

நேர் இழை மகளிர் கூந்தல் நிறை நறை வாசம் நீந்தி,
வேரி அம் சரளச் சோலை வேனிலான் விருந்து செய்ய,
ஆர்கலி அழுவம் தந்த அமிழ்து என, ஒருவர் ஆவி
தீரினும் உதவற்கு ஒத்த தென்றல், வந்து இறுத்தது அன்றுஏ.

பொ :—நிறைந்த ஒலியினையுடைய கடல்தந்த அமுதினைப்போல, ஒருவருயிர் உடலை விட்டு நீங்கினும் மீட்டும் உடலொடு பொருந்துவிக்கவல்ல தென்றலானது, நல்ல அணிகலங்களை யணிந்த மகளிர் குழலில் நிறைந்த நறும்புகை மணமும், பிற மணங்களுமாகிய வற்றில் நீந்திக்கொண்டு, நறுமணமும் அழகும் இனிமையும் வாய்ந்த சோலையின்கண் மன்மதனுக்கு விருந்தூட்ட வந்து தங்கிற்று.

கு :—தென்றல், வாசம், நீந்தி, சோலையின்கண் வேனிலானுக்கு விருந்து செய்ய வந்து, இறுத்தது என்க. மகளிர் கூந்தல், நிறைநறைவாசம் நீந்தி என்றது, மகளிர் கூந்தலின் இயற்கை மணமும் அக்கூந்தலுக்கு ஊட்டிய நறு நெய் மணமும் நறும்புகை மணமும் கத்தூரி முதலியவற்றின் மணமும், சூட்டிய மலர்களின் மணமும் ஆகியவற்றிற் படிந்து என்றவாறு. நறை - நறும்புகை. வாசம் - நறுமணம். வேரி - பரிமளம். தேனும் ஆம். சரளம் - இனிமை ; தேவதாருமரமும் ஆம். வேனிலான் - மன்மதன். ஆர்கலி - நிறைந்த ஒலி. அழுவம் - கடல். ஆவிதீரினும் உதவுதல், அமுதத்துக்கும் தென்றலுக்கும் பொதுவான தன்மை. தென்றல் உயிர் உதவவல்ல தென்பது திருக்குற்றாலத் தலபுராணத்து மந்தமாருதச் சருக்கத்தாலும் புலனாகும். இறுத்தல் - தங்குதல். (163)

இராவணன் தென்றலால் வருந்திக் கூறுதல் 3327-3330

3327. சாளரத் தூடு வந்து
தவழ்தலுந் தரித்த றேற்று
னீளரத் தங்கள் சிந்தி
நெருப்புக நோக்கு நீரான்

வாழ்மனைப் புகுந்த தாங்கோர்
மாசுணம் வரக்கண் டன்ன
கோளுறக் கொதித்து விம்மி
யுழையரைக் கூவிச் சொன்னான்.

சாளரத் தூடு வந்து தவழ்தலும், தரித்தல் தேற்றான்,
நீள் அரத்தங்கள் சிந்தி, நெருப்பு உக நோக்கும் நீரான்,
வாழ் மனைப் புகுந்தது ஆங்கு ஓர் மாசுணம் வரக் கண்டன்ன
கோள் உறக் கொதித்து விம்மி உழையரைக் கூவிச் சொன்னான்.

பொ :—தென்றல் பலகணியிடையே நுழைந்து வந்து தவழ்ந்த அளவில், தாங்கலாற்றாது, மிக்க உதிரத் துளிகளைச் சிந்தி, நெருப்புப்பொறி சிதறும்படி விழிக்கும் தன்மையனான இராவணன், வாழும் வீட்டில் ஒப்பற்ற (கொடிய) பாம்பு புகுந்துவரக் கண்டாற் போன்ற தீங்குறக் கொதித்து நெடுமூச் செறிந்து, அடுத்திருந்த பணியாளரை அழைத்துச் சொல்லுவானாயினன்.

கு :—தென்றல் சாரளத்தூடுவந்து தவழ்தலும் என்க. தென்றல் என்பது முன்பாட்டிலிருந்து கொள்ளத்தகும். சாளரம் - பலகணி. தரித்தல் - தாங்குதல். தேற்றான் - அறியாதவனாகி. தென்றல் அமுதுபோல் வந்ததெனினும், அது காமுகர்க்கு நோய் மிகுவிப்பதாகலின் இராவணன் தரித்தலாற்றானாயினன். அரத்தம் - உதிரம். மிகுதிதோன்ற நீள் அரத்தங்கள் என்றார். நெருப்பு - நெருப்புப் பொறி. ஆங்கு அசை. மாசுணம் - பாம்பு. கோள் - தீமை. விம்முதல் - நெடுமூச்செறிதல். உழையர் - அடுத்திருந்து பணி செய்வோர். (164)

3328. கூவலி னுயிர்த்த சின்னீ
ருலகினைக் குப்புற் றென்னத்
தேவரி னொருவ னென்னை
யின்னலுஞ் செயத்தக் கானோ
வேவலி னன்றித் தென்ற
லெவ்வழி யெய்திற் றென்னாக்
காவலி னுழையர் தம்மைக்
கொணருதிர் கடிதி னென்றான்.

‘கூவலின் உயிர்த்த சில் நீர் உலகினைக் குப்புற்று என்னத்
தேவரின் ஒருவன் என்னை இன்னலும் செயத் தக்கானோ?

ஏவலின் அன்றித் தென்றல் எவ்வழி எய்திற்று?' என்னுக்
காவலின் உழையர் தம்மைக் கொணருதிர் கடிதின் என்ருன்.

பொ :—'கிணற்றுள் ஊறிய சிறிதளவே யுள்ள நீர், பெரிய உலகமுழுவதையும் மூழ்குவித்தாற்போல, தேவருள் ஒருவனுன வாயு என்னைத் துன்புறுத்தவும் வல்லனே? என் கட்டளையில்லாமல் தென்றல் இங்கே எப்படி வந்தது?' என்று சினந்து, 'காத்தற்றெழிலை மேற்கொண்ட பணியாளரை விரைந்து கொண்டு வருக' என்று (இராவணன்) கூறினுன்.

கு :—கூவல் - கிணறு. உயிர்த்தல் - சுரத்தல். சின்னீர் - சிலவாகிய நீர்; சிறிதளவேயுள்ள நீர். கூவற்சின்னீர் தென்றலுக்கும், உலகு இராவணனுக்கும் உவமை. குப்புறுதல்-முழுகுவித்தல். (165)

3329. அவ்வழி யுழைய ரோடி
யாண்டவர்க் கொணர்த லோடும்
வெவ்வழி யமைந்த செங்கண்
வெருவுற நோக்கி வெய்யோன்
செவ்வழி தென்ற லாற்குத்
திருத்தினீர் நீர்கொ லென்ன
விவ்வழி யிருந்த காலைத்
தடையவற் கில்லை யென்ருர்.

அவ்வழி உழையர் ஓடி,
ஆண்டு அவர்க் கொணர்தலோடும்,
வெவ்வழி அமைந்த செங்கண்
வெரு உற நோக்கி, வெய்யோன்,
'செவ்வழி தென்றலாற்குத்
திருத்தினீர் நீர்கொல்?' என்ன,
'இவ் வழி இருந்த காலைத்
தடை அவற்கு இல்லை' என்ருர்.

பொ :—அப்பொழுதே பணியாளர் விரைந்து சென்று, அங்கே காவற்பணியாளரை அழைத்து வருதலும், கொடியவனுன இராவணன், கொடுமை நிறைந்த சிவந்த கண்களால் (அவர்) அஞ்சும்படி நோக்கித் 'தென்றலுக்கு நீவிரோ நேரான வழியைத் திறந்தீர்?' என்ன, அவர், 'இந்த மண்டபத்தே (தாங்கள்) தங்கியபோது அத்தென்றலுக்குத் தடையில்லை' என்று கூறினர்.

கு :—அவர் என்றது காவற்பணி செய்வோரை. அவற்குத் தடை இல்லை என்க. (166)

3330. வேண்டிய நினைந்து செய்வான்
விண்ணவர் வெருவா ரென்றான்
மாண்டது போலுங் கொள்கை
யானுடை வன்மை வல்லைத்
தேண்டினீர் திசைக டோறுஞ்
சேணுற விசையிற் செல்குற்
றீண்டிவன் றன்னைப் பற்றி
யிருஞ்சிறை யிடுதி ரென்றான்.

'வேண்டிய நினைந்து செய்வான்
விண்ணவர் வெருவார் என்றால்,
மாண்டது போலும் கொள்கை,
யான் உடை வன்மை; வல்லைத்
தேண்டினீர், திசைகள் தோறும்
சேண் உற விசையின் செல்குற்று,
ஈண்டு இவன் தன்னைப் பற்றி
இருஞ்சிறை இடுதிர்' என்றான்.

பொ :—'தேவர் தாம் விரும்பியவற்றை நினைந்து செய்ய அஞ்சார் என்றால், ஒழுங்கும் என்னுடைய ஆற்றலும் அழிந்துவிட்டன போலும்; விரைந்து திசைதொறும் நெடுந்தூரஞ் சென்று, தேடித் தென்றலாகிய இவனைக் கடிதிற்பற்றி இங்கே பெரிய சிறைக் கூடத்தில் வைத்திர்' என்று (இராவணன்) கூறினான்.

கு :—கொள்கை - ஒழுங்கு; நடைமுறை. அதாவது இராவண னிருக்குமிடத்து வருவோர் இன்னவாறு வரவேண்டுமென்ற முறை. கொள்கையும் வன்மையும் என உம்மை விரிக்க. வல்லை - விரைவு. தேண்டுதல் - தேடுதல். ஈண்டு என்றது இலங்கையை. இவன் என்றது தென்றலை. இவன்றன்னைப்பற்றி ஈண்டு இருஞ் சிறையிடுதிர் என இயைக்க. இச்செய்யுள் சில அச்சுப்புத்தகங் களில் இல்லை. ஆயினும் கிடைத்த ஓலைச் சுவடிகளிலெல்லாம் காணப்படுதலாலும், பின்வரும் செய்யுளில், 'காற்றினோன் றன்னை வாளா முனிதலிற் கண்டதில்லை' என்றதற் கேற்பத் தென்றலை முனிந்த செய்தி பேசப்படுதலாலும், மூலத்தோடு சேர்த்து உரை யும் வரையலாயிற்று. (167

இராவணன் அமைச்சரை அழைமின் எனல்

3331. காற்றினேன் றன்னை வாளா
முனிதலிற் கண்ட தில்லை
கூற்றும்வந் தென்னை யின்னே
குறுகுமாற் குறித்த வாற்றால்
வேற்றருங் கருங்கட் சீதை
மெய்யருள் புனையே னென்றா
லாற்றலா லடுத்த தெண்ணு
மமைச்சரைக் கொணர்தி ரென்றான்.

'காற்றினேன் தன்னை வாளா
முனிதலின், கண்டது இல்லை;
கூற்றும் வந்து என்னை இன்னே
குறுகும் ஆல்; குறித்த ஆற்றால்
வேல் தரும் கருங்கண் சீதை
மெய் அருள் புனையேன் என்றால்,
ஆற்றலால் அடுத்தது எண்ணும்
அமைச்சரைக் கொணர்திர்' என்றான்.

பொ:—'தென்றலை வீணே முனிதலால் அடைந்தபயன் ஒன்று மில்லை; வேலின்றன்மையையுடைய கரிய கண்களையுடைய சீதையின் உண்மையான அருளை எண்ணியவாறு அடையேனாயின் இயமனும் என்னை இப்பொழுதே வந்து அடைவான்; ஆதலால் தம் மதிவலியால் எனக்கு ஏற்றதை ஆராய்ந்து கூறும் அமைச்சரை அழைத்துவருக' என்று இராவணன் கூறினான்.

கு:—காற்றினேன் என்றது தென்றலை. சீதை மெய்யருள் குறித்தவாற்றால் புனையேன் என்றால் எனக் கூட்டுக. சீதை மெய்யருள் புனையேனென்றால் கூற்றும் (தான்) குறித்த வாற்றால் இன்னே என்னை வந்து குறுகும் என்று கூட்டுதலும் ஆம். குறித்தல் - எண்ணுதல். ஆற்றல் - இங்கே மதிவலி. அடுத்தது - பொருந்தியது. எண்ணுதல் - ஆராய்தல். (168)

அமைச்சர் வருதல்

3332. ஏவின சிலத ரோடி
யேயெனுந் துணையி லெங்குங்
கூவினர் கூவ லோடுங்
குறுகினர் கொடித்திண் டேர்மேன்
மாவினிற் சிவிகை தன்மேன்
மழைமதக் களிற்றின் வையத்
தேவரும் வானந் தன்னிற்
றேவருஞ் சிந்தை சிந்த.

ஏவின சிலதர் ஓடி ஏ எனும் துணையில், எங்கும் கூவினர்; கூவலோடும் குறுகினர், கொடித் திண் தேர்மேல் மாவினில் சிவிகைதன்மேல் மழைமதக் களிற்றின்; வையத் தேவரும் வானம் தன்னில் தேவரும் சிந்தை சிந்த.

பொ :—ஏவப்பட்ட பணியாளர் விரைவில் (அமைச்சர் உறையுமிடம்) எங்குஞ் சென்று அழைத்தனர்; அழைத்தலும், மண்ணுலகத்துள்ள முனிவர்களும் வானுலகத்துள்ள தேவர்களும் மனம் கலங்கும்படி (அவ் அமைச்சர் தம் தகுதிக் கேற்றவாறு) கொடிகள் கட்டிய வலிய தேரின் மேலும், குதிரை மேலும், சிவிகைமீதும், மழை போல மதநீரைப் பொழியும் யானைமீதும் (இராவணனை) அடைந்தனர்,

கு :—ஏவின - ஏவப்பட்ட. சிலதர் - பணியாளர். ஏயெனல் - விரைவுக்குறிப்பு. கூவலோடும் வையத்தேவரும் வானந்தன்னில் தேவரும் சிந்தை சிந்த (அவ்வமைச்சர்) தேர்மேல் மாவினில் சிவிகைமேல் களிற்றில் குறுகினர் என இயையும். வையத் தேவரும் வானிற்றேவரும், இராவணன் அமைச்சரை அழைத்தமையால் என்ன தீங்கு நேருமோ என்று அஞ்சினமையால் சிந்தை கலங்குவாராயினர். (169)

இராவணன் மாரீசனிருக்கையடைதல்

3333. வந்தமந் திரிய ரோடு
மாசற மனத்தி னெண்ணிச்
சிந்தையி னினைந்த செய்யுஞ்
செய்கையன் றெளிவி னெஞ்ச

னந்தரஞ் செல்வ தாண்டோர்
விமானத்தி லாரு மின்றி
யிந்திய மடக்கி நின்ற
மாரீச னிருக்கை சேர்ந்தான்.

வந்த மந்திரியரோடு
மாசு அற மனத்தின் எண்ணிச்
சிந்தையில் நினைந்த செய்யும்
செய்கையன், தெளிவு இல் நெஞ்சன்
அந்தரம் செல்வது ஆண்டு ஓர்
விமானத்தில், ஆரும் இன்றி,
இந்தியம் அடக்கி நின்ற
மாரீசன் இருக்கை சேர்ந்தான்.

பொ :—தன்மனதில் நினைந்தவற்றை நினைந்தவாறு செய்யும் செயலையுடையவனும் கலங்கிய மனமுடையவனுமான இராவணன், வந்து சேர்ந்த அமைச்சர்களுடன் குற்றம் அற மனத்தால் ஆராய்ந்து, அப்பொழுதே வான்வழிச் செல்லும் விமானத்தில் வேறு ஒருவரும் உடன் இன்றித் தனியனாய்ப் பொறிகளை யடக்கி. (தவநிலையில்) தங்கிய மாரீசனிருக்குமிடத்தை அடைந்தான்.

கு :—இந்தியம் - இந்திரியம்; பொறி. இருக்கை - இருப்பிடம், சிலசுவடிகளில், இச்செய்யுளுடன் 'சூர்ப்பணகை சூழ்ச்சிப் படலம் முற்றுப்பெற மேல் மாரீசன் வதைப்படலம் தொடங்குகிறது. (170)

### மாரீசன் இராவணனை உபசரித்து அவன் வந்த காரியம் வினவுதல் 3334-3335

3334. இருந்தமா ரீசன் வந்தவ்
விராவண னெய்த லோடும்
பொருந்திய பயத்தன் சிந்தை
பொருமுற்று வெருவு கின்றான்
கருந்தட மலையன் னானை
யெதிர்கொண்டு கடன்கள் யாவுந்
திருந்திடச் செய்து செவ்வித்
திருமுக நோக்கிச் செப்பும்.

இருந்த மாரீசன், வந்து அவ் இராவணன் எய்தலோடும்,
பொருந்திய பயத்தன், சிந்தை பொருமுற்று, வெருவுகின்றான்,
கருந்தட மலையன்னானை எதிர்கொண்டு, கடன்கள் யாவும்
திருந்திடச் செய்து, செவ்வித் திருமுகம் நோக்கிச் செப்பும்.

பொ :—அச்சம் பொருந்தியவனாயிருந்த மாரீசன், அவ்விராவணன் வந்து (தன் இருக்கை) அடைதலும், மனம் வருந்தி, (மேலும்) அச்சம் மிக்கவனாய்க் கரிய பெரிய மலைபோல்பவனான அவ்விராவணனை எதிர்கொண்டு சென்று, அவனுக்குச் செய்ய வேண்டிய கடமைகளாகிய உபசாரங்களையெல்லாம் செவ்வனே செய்து, அழகிய அவன் முகத்தை நோக்கிச் சொல்லுவானாயினன்.

கு :—பொருந்திய பயத்தன் இருந்த மாரீசன் எனக் கூட்டுக. பொருமுதல் - வருந்தல். கருந்தடமலையன்னான் என்றது இராவணனைச் சுட்டி நின்றது. (171)

3335. சந்த மலர்த்தண் கற்பக
★ நீழற் றலைவற்கு
மந்தக னுக்கு மஞ்ச
வடுக்கு மரசாள்வா
யிந்த வனத்தென் னின்ன
லிருக்கைக் கெளியோரின்
வந்த கருத்தென் சொல்லுதி
யென்றான் மருள்கின்றான்.

'சந்த மலர்த் தண் கற்பக நீழல் தலைவற்கும்
அந்தகனுக்கும் அஞ்ச அடுக்கும் அரசு ஆள்வாய்!
இந்த வனத்து என் இன்னல் இருக்கைக்கு எளியோரின்
வந்த கருத்து என்? சொல்லுதி' என்றான் மருள்கின்றான்.

பொ :—அஞ்சுகின்றவனான மாரீசன், (இராவணனை நோக்கி) 'அழகிய பூக்களையும் குளிர்ச்சியையும் உடைய கற்பகத்தருநிழலிலிருக்கும் இந்திரனுக்கும் இயமனுக்கும் அச்சம் தரும் அரசாட்சியுடையாய்! இந்தக்காட்டிலுள்ள, துன்பந்தருவதான என் இருப்பிடத்துக்கு வலியற்றவரைப்போல நீ வந்த கருத்து யாது? சொல்லுக' என்றான்.

கு :—மருளுதல் - அஞ்சுதல். மருள்கின்ருன், 'அரசாள்வாய்! இந்த வனத்து என் ;இருக்கைக்கு எளியோரின் வந்த கருத்து என்? சொல்லுதி' என்ருன் என இயையும். இராவணன் மாரீசனைத் தன்பால் அழைக்காமல் தான் அவனிருக்கை தேடிச் சென்றமையால், 'எளியோரின் வந்த கருத்தென்?' என்ருன். (172)

## இராவணன் மாரீசனிடம் தான் வந்த காரியம் கூறுதல் 3336-3339

**3336.** ஆன தனைத்து மாவி
தரித்தே னயர்கின்றேன்
போனது பொற்பு மேன்மையு
மற்றேன் புகழோடும்
யான துனக்கின் றெங்ங
னுரைக்கே னினியென்ளு
வான வருக்கு நாண
வடுக்கும் வசையம்மா.

ஆனது அனைத்தும்; ஆவிதரித்தேன், அயர்கின்றேன்;
போனது பொற்பும்; மேன்மையும் அற்றேன் புகழோடும்;
யான் அது உனக்கு இன்று எங்ஙன் உரைக்கேன்; இனி என்? ஆ.
வானவருக்கும் நாண அடுக்கும் வசை அம்மா.

பொ :—எல்லாம் நிகழ்ந்துவிட்டன; உயிர் தாங்கியிருந்து வருந்துகின்றேன்; அழகும் போயிற்று, பெருமையும் புகழும் ஒழிந்தேன்; இனி யாது (உளது)? ஆ! நமக்கு அஞ்சி ஒடுங்கிக் கிடந்த தேவர்களுக்கும் நாம் அஞ்சி நாணும்படி அமைந்தபழி உண்டாய்விட்டது; அதனை யான் உனக்கு இப்பொழுது எவ்வாறு சொல்வேன்?

கு :—ஆனது அனைத்தும; ஆவிதரித்தேன் அயர்கின்றேன்; போனது பொற்பும்; மேன்மையும் புகழும் அற்றேன்; இனி என்? ஆ! வானவருக்கும் நாண அடுக்கும் வசை; யான் அது உனக்கு இன்று எங்ஙன் உரைக்கேன்? என இயைக்க. அனைத்தும் என்றது சூர்ப்பணகை மூக்கறுப்புண்டது முதல் தான் அவனிடம் வந்தது வரை நிகழ்ந்த தீமைகளைத் தொகுத்துச் சுட்டியவாறு. ஆனது அனைத்தும் என்பது ஒருமை பன்மை மயக்கம். அயர்கின்றேன் என்பதுமுதல் வசை என்பதுவரை அத்தீமைகளால் விளைந்த

பயன் கூறியவாறு, வானவருக்கும் என்பதில் உம்மை இழிவு சிறப்புணர நின்றது. அம்மா வியப்பிடைச் சொல். ஆவிதரித்தேன் அயர்கின்றேன் என்றது இத்தீமை விளைந்தபின் யான் உயிர் தாங்கியிருத்தல் தகாது; வரத்தால் நீண்ட வாழ்நாள் பெற்ற மையால் என் உயிரைப் போக்கிக் கொள்ளவும் வழியில்லை; ஆதலால் உயிரும் எனக்குச் சுமையாயிற்று. அதனைத் தாங்கிக் கொண்டு வருந்துகின்றேன் என்றவாறு. இச்செய்யுள் பெருந்துன்பமும் துக்கமும் உற்றார் பேசும் முறையில் அமைந்தது. (173)

3337. வன்மை தரித்தோர் மானிடர்
மற்றங் கவர்வாளா
னின்மரு கிக்கு நாசி
யிழக்கு நிலைநேர்ந்தா
ரென்மர புக்கு நின்மர
புக்கு மிதன்மேலோர்
புன்மை தெரிப்பின் வேறினி
மற்றென் புகழ்வேலோய்.

வன்மை தரித்தோர்மானிடர் ; மற்று அங்கு அவர், வாளால்
நின் மருகிக்கும் நாசி இழக்கும் நிலை நேர்ந்தார் ;
என் மரபுக்கும் நின் மரபுக்கும் இதன்மேல் ஓர்
புன்மை தெரிப்பின் வேறு இனி மற்று என்? புகழ் வேலோய்.

பொ :—புகழ்வாய்ந்த வேற்படையுடையாய்! (இதுகாறும் நமக்கு இரையாயிருந்த) மானிடர், (இன்று நம்மினும்) வலியோராயினர்! அவர்கள் தம் வாட்படையால் உன்மருகி (யான சூர்ப்பணகை) க்கும் மூக்கிழக்கும் நிலையைச் செய்தனர்; ஆராய்ந்து சொல்லுமிடத்து என் மரபுக்கும் உன்மரபுக்கும் சூர்ப்பணகை மூக்கிழந்த இதனினும் மேலான ஒரு பழி இனி வேறு யாது?

கு :—இச்செய்யுளில் 'நின் மருகிக்கும் நாசியிழக்கும் நிலை நேர்ந்தார்' என்றதும், வருஞ் செய்யுளில் 'உன்மருகர் உலந்தார்' என்றதும், முன்செய்யுளில் 'ஆனதனைத்தும்' எனத் தொகுத்துச் சுட்டியதனை விரித்துக் கூறியவாறு. மற்று, அங்கு என்பவை அசை நிலைகள். புன்மை - இழிவு; பழி. புகழ்வேலோய் என்றது அவ்வேலும் பழிப்புண்டது என்றவாறு. (174)

3338. திருகு சினத்தார் முதிர
மலைந்தார் சிறியோர் நாள்
பருகின னென்றால் வென்றி
நலத்திற் பழியன்றோ
யிருகை சுமந்தா யினிதி
னிருந்தா யிகல்வேலுன்
மருக ருலந்தா ரொருவன்
மலைந்தான் வரிவில்லால்.

திருகு சினத்தார், முதிர மலைந்தார், சிறியோர் நாள்
பருகினன் என்றால் வென்றி நலத்தில் பழி அன்றோ ?
இருகை சுமந்தாய் ! இனிதின் இருந்தாய் ! இகல் வேல் உன்
மருகர் உலந்தார் ; ஒருவன் மலைந்தான் வரி வில்லால்.

பொ :—'(உடன்பிறந்தாள் மூக்கிழந்தமையால்) மூண்டெழுந்த சினமுடையவராய், முற்றும்படி போர் செய்த என் தம்பிமாராகிய கரன் முதலியோருடைய வாழ்நாளை, ஒரு மானிடன் கட்டமைந்த வில்லால் போர்செய்து, உண்டான் ; வலிய வேற்படையுடைய உன்மருகர் மாண்டனர் ; இதன்மேலும் நீ (உன் தோளாற்றல் பாழ்பட) வீணே இருகைகளையும் சுமந்தவனாய்ச் சுகமே இருந்தாய் என்றால், இதுகாறும் நாம் அடைந்த வெற்றிப் பெருமையிற் பழி புகுந்ததாகாதோ ?'

கு:—சினத்தார் மலைந்தார் (ஆகிய) சிறியோர் நாள், ஒருவன் வரிவில்லால் மலைந்தான் பருகினன் ; உன் மருகர் உலந்தார் ; (நீ) இருகை சுமந்தாய், இனிதின் இருந்தாய் என்றால், (நம்) வென்றி நலத்தில் பழியன்றோ ? என இயைக்க. பின், 'உன் மருகர்' என்றுதலின் முன் 'சிறுவர்' என்றது என் தம்பியர் என்றவாறு. திருகுதல் - மூண்டெழுதல். முதிர்தல் - முற்றுதல். சிறியோர் - இளையோர் தம்பியர். சிறியோர் மருகர் என்பவை கரன் முதலியோரைக் குறிக்கும். நாள் - ஆயுள். நலம் - பெருமை. இகல் - வலிமை. உலத்தல் - அழிதல் ; சாதல். (175)

3339. வெப்பழி யாதென் னெஞ்சு
முலந்தேன் விளிகின்றே
னெப்பழி வென்றே போர்செய
லொல்லே னுடன்வாழுந்

துப்பழி செவ்வாய் வஞ்சியை
வெளவத் துணைகொண்டிட்
டிப்பழி நின்றாற் றீரிய
வந்தே னிவணென்றான்.

'வெப்பு அழியாது என் நெஞ்சும்
உலந்தேன்; விளிகின்றேன்;
ஒப்பு அழிவு என்றே போர் செயல்
ஒல்லேன்; உடன் வாழும்
துப்பு அழி செவ்வாய் வஞ்சியை
வெளவத் துணை கொண்டிட்டு,
இப் பழி நின்றால் தீரிய
வந்தேன். இவண்' என்றான்.

பொ:—'(அம்மானிடன் மேல் எழுந்த) சினம் தணியாமையால் என் மனம் அழிந்தேன்; உடலும் மெலிகின்றேன்; தரக்குறை என்று அவனொடு போர் செய்தலை இசையேன்; ஆயினும், அவனுடன் வாழும், பவளமும் ஒப்பாகாமல் தோல்வியுறும் சிவந்த வாயினையுடைய வஞ்சிக் கொடிபோல்வாளாகிய சீதையைக் கவர்தற்கு உன்னைத் துணைகொண்டு, உன்னால் இப்பழியைப் போக்கிக் கொள்ள எண்ணி, இங்கே வந்தேன்' என்று (இராவணன்) கூறினான்.

கு:—வெப்பு - சினம். காமவெப்பம் என்று கொள்வாரும் உளர். உலத்தல் - அழிதல். விளிதல் - குறைதல்; மெலிதல். நெஞ்சும் உலந்தேன் என்றமையால் விளிகின்றேன் என்பதற்கு உடலும் மெலிந்தேன் என்று பொருள் கூறலாயிற்று. திக்குவிசயஞ் செய்து தேவரையும் யாவரையும் வென்ற தனக்கு எளிய மானிடன் ஒப்பாகான் என்னும் கருத்தால். 'ஒப்பழி வென்றே போர் செயலொல்லேன்' என்றான். என் உடன்பிறந்தாளை உறுப்பறையாக்கியவனை அவனுடன் வாழும் வஞ்சியைக் கவர்ந்து பழிதீர்த்துக் கொள்வேன் என்னும் கருத்தால், 'உடன் வாழும் வஞ்சியை வெளவத் துணைகொண்டிட்டு இப்பழி நின்றாற் றீரியவந்தேன்' என்றான். (176)

## இராவணன்பால் மாரீசன் கூறுதல் 3340-3351

3340. இச்சொ லனைத்துஞ் சொல்லி
யரக்க னெரிகின்ற
கிச்சி னுருக்கிட் டுய்த்தன
னென்னக் கிளராமுன்
சிச்சி யெனத்தன் மெய்ச்செவி
பொத்தித் தெருமந்தா
னச்ச மகற்றிச் செற்ற
மனத்தோ டறைகின்றான்.

இச் சொல் அனைத்தும் சொல்லி, அரக்கன் எரிகின்ற
கிச்சின் உருக்கு இட்டு உய்த்தனன் என்னக் கிளராமுன்,
சிச்சி எனத் தன் மெய்ச் செவி பொத்தித் தெருமந்தான்,
அச்சம் அகற்றிச் செற்ற மனத்தோடு அறைகின்றான்.

பொ :—இராவணன் எரிகின்ற நெருப்பின்கண் காய்ந்த நாராசத்தைக் காதில் வைத்துச் செருகினாற்போல இந்த மாற்றங்களையெல்லாம் சொல்லிச் சினமூண்டு எழு முன்பு, அஞ்சியவனான மாரீசன், சீசீ என்று தன் உடலிற் காதுகளைப் பொத்திக்கொண்டு அச்சத்தை நீக்கிச் சினங்கொண்ட மனத்தொடு கூறுகின்றான்.

கு :—அரக்கன், எரிகின்ற கிச்சின் உருக்கு இட்டு உய்த்தனன் என்ன, இச்சொல் அனைத்தும் சொல்லிக் கிளராமுன், தெருமந்தான், சிச்சி யெனத் தன் மெய்ச் செவி பொத்தி, அச்சம் அகற்றிச் செற்ற மனத்தோடு அறைகின்றான் என இயைந்து முடியும். இச்சொல் என்றது, முன்பாடல்களில் இராவணன் கூற்றாக வந்தவற்றை. அரக்கன் என்றது இராவணனை. கிச்சு - நெருப்பு. உருக்கு என்பது உருக்கு என்னும் உலோகத்தாலாகிய கம்பியை. கிளர்தல் - சினம் மூண்டு எழுதல். சீசீ என்பது எதுகை நோக்கிச் சிச்சி என நின்றது விகாரம். சீசீ என்னும் அடுக்கு அருவருப் புணர்த்தும். மாரீசன் சீசீ என்று அருவருத்ததும், செவிபொத்தியதும், கேட்கத்தகாததாகிய, துப்பழி செவ்வாய் வஞ்சியை வெளவத் துணை கொண்டிட் டிப்பழி நின்னால் தீரிய வந்தேன் ! (3339) என்று இராவணன் கூறியதனால் என்க. தெருமரல் - அச்சம் ; கலக்கமும் ஆம். தெருமந்தான் - அஞ்சியவனான மாரீசன். 'சிந்தை பொருமுற்று வெருவுகின்றான்' (3334) என்றார் முன்னும். செற்றம் - சினம்.

(177)

3341. மன்னு நீநின் வாழ்வை
முடித்தாய் மதியற்று
யுன்னு லன்றீ தூழ்வினை
யென்றே யுணர்கின்றே
னின்னு தேனும் யானி
துரைப்ப னிதமென்னச்
சொன்னு னன்றே யன்னவ
னுக்குத் துணிவெல்லாம்.

மன்னு! நீ நின் வாழ்வை முடித்தாய்! மதியற்றாய்,
உன்னால் அன்று ஈது ஊழ்வினை என்றே உணர்கின்றேன்;
இன்னாதேனும் யான் இது உரைப்பன் இதம் என்னச்
சொன்னான் அன்றே அன்னவனுக்குத் துணிவு எல்லாம்.

பொ:—'அரசனே! நீ அறிவற்றவனாய் உன் வாழ்வை அழித்து விட்டாய்! இந்நிலை உன்னால் நிகழ்ந்ததன்று; ஊழால் நிகழ்ந்த தென்றே அறிகின்றேன்; யான் கூறுவது உனக்குத் துன்பம் தருவதாகத் தோன்றினும், உனக்கு நன்மையாயினவற்றையே சொல்லுவேன்' என்று அப்பொழுதே அவ்விராவணனுக்கு உறுதி யாயினவற்றையெல்லாம் சொன்னான்.

கு:—வாழ்வு - செல்வம். இன்னா - துன்பம். இதம் - நன்மை. (178)

3342. அற்ற க்ரத்தோ டுன்றலை
நீயே யனன்முற்றிப்
பற்றினை யுய்த்தாய் பற்பல
காலம் பசிகூர
வுற்றுயி ருள்ளே தேய
வுலந்தாய் பினையன்றோ
பெற்றனை செல்வம் பின்ன
திழந்தாற் பெறலாமோ.

அற்ற கரத்தோடு உன் தலை நீயே அனல் முற்றிப்
பற்றினை உய்த்தாய், பற்பல காலம் பசி கூர
உற்று உயிர் உள்ளே தேய உலந்தாய், பினை அன்றோ
பெற்றனை செல்வம்; பின் அது இழந்தால் பெறலாமோ.

பொ :—அறுபட்ட உன் தலைகளையும் கரங்களையும் நீயே எரியினை வளர்த்து, அதில் இட்டாயாய், நெடுங்காலம் பசி மிக, உயிர் உள்ளே மெலிய, வருந்தி (நோற்ற)னை ; அதன்பின் அன்றோ செல்வத்தை அடைந்தாய் ; அச்செல்வத்தை நீ இழந்தால் பின்னும் பெறலாகுமோ ? (ஆகாது).

கு :—கரம் - கை. முற்றுதல் - வளர்த்தல். உய்த்தல் - இடுதல். உன்னுடைய கைகளையும் தலைகளையும் நீயே அரிந்து அனலிற் பெய்தும், நெடுங்காலம் உணவு துறந்து நோன்பு மேற்கொண்டும், பிறர் எய்தற்கரிய பெருஞ்செல்வமடைந்த நீ, பிறனில் விழைத லாகிய தீயசெயலால் அச்செல்வத்தை இழந்தால் மீட்டும் அது பெறலாகாது காண் என்றவாறு. செல்வம் இழத்தற்குக்காரணம் பிறனில்விழைதல் என்பது, 'உடன் வாழும் துப்பழி செவ்வாய் வஞ்சியை வெளவத் துணைகொண்டிட்டு இப்பழி நின்னால் தீரிய வந்தேன்' என்று இராவணன் கூறியதனால் புலனாகும். இரா வணன் தவத்திறம், 'ஓராயிரமாண் டுபவசித்துக் கழிந்தால் ஓரோர் தலையாகச், சீரார் சிரமொன்பதுந் தடிந்து செந்தீயிடையோ மம்புரிந்து, பேரா வுபவா சத்தினனாய்ப் பின்பும் ஓரா யிரத்தாண்டில், தாரார் மற்றைத் தலைதடிய லுற்றான் பற்றித் தசக்கிரிவன்' (உத்தர. இராவணன் பிறப்பு 26) என்னும் பாடலால் அறியத்தகும். (179)

3343. திறத்திற னாலே செய்தவ
முற்றித் திருவுற்றாய்
மறத்திற னாலே சொல்லுதி
சொல்லாய் மறைவல்லா
யறத்திற னாலே யெய்தினை
யன்றோ வதுநீயும்
புறத்திற னாலே பின்னு
மிழக்கப் புகுவாயோ.

திறத் திறனாலே செய் தவம் முற்றித் திரு உற்றாய் ;
மறத் திறனாலே சொல்லுதி ; சொல் ஆய் மறைவல்லாய்!
அறத் திறனாலே எய்தினையன்றோ அது; நீயும்
புறத் திறனாலே பின்னும் இழக்கப் புகுவாயோ ?

பொ :—சொற்களை ஆராய்ந்து காண்டற்குரிய வேதம் வல் லோனே! சிறந்த அறநெறியால் உயர்ந்த தவத்தை முடியச்

செய்து (அதன் பயனுகப் பிறர் எய்தற் கரிய) செல்வத்தை அடைந்தனே; (அவ்வாறடைந்த நீ) தீவினையின் வலியால் பேசுகின்றனே; அச்செல்வத்தை அறநெறியாலன்ரே நீ அடைந்தாய்; அவ்வாறடைந்த நீயும் அச்செல்வத்தை மறநெறியால் இழக்கப் புகுவாயோ? (இவ்வாறு இழக்கப் புகுவது தகாதுகாண்).

கு:—திறத்திறன் - சிறந்த அறநெறி. தவம் முற்றுதல் அரிது என்னும் கருத்தால், 'செய்தவம் முற்றி' என்ருன். சொல் ஆய் மறைவல்லாய்! திறத்திறனுலே செய்தவம் முற்றித் திருவுற்ருய், மறத்திறனுலே சொல்லுதி என இயைக்க. முதலடியால் இராவணன் செய்த சிறந்ததவமும், அதனல் அவன் அடைந்த உயர்ந்த பயனும் கூறியவாறு. மறைவல்லாய் என்பதனுல் அவனுடைய சீரிய நூலறிவு கூறியவாறு. 'துப்பழி செவ்வாய் வஞ்சியை வவ்வத் துணைகொண்டிட்டு, இப்பழி நின்ருற் றீரியவந்தேன்' (175) என்றது, அறிதற் கரிய மறைகளை ஓதி யுணர்ந்ததன்மேலும், அம்மறை நெறி யொழுக்கமும் உடையார் கூறும் கூற்றன்று என்பான், மறைவல்லாய்! திறத்தினுலே செய்தவம் முற்றித் திருவுற்ருய்; மறத்திறனுலே சொல்லுதி என்ருன். அது என்பது செல்வத்தைச் சுட்டியது. நீயும் என்பதனுள் உம்மை உயர்வுசிறப்புணர நின்றது. செய்தற்கரிய தவத்தைச் செய்து அதன் பயனுக அடைந்த எய்தற் கரிய பெருஞ்செல்வத்தை இழத்தலாகாது என்று வற்புறுத்துக் கூறியவாறு. புறத்திறன் அறத்துக்கு மாருன (மற) நெறி. (180)

3344. நாரங் கொண்டார் நாடு
கவர்ந்தார் நடையல்லா
வாரங் கொண்டார் மற்ரெரு
வற்காய் மனைவாழுந்
தாரங் கொண்டா ரென்றிவர்
தம்மைத் தருமந்தா
னீருங்கண்டாய் கண்டக
ருய்ந்தா ரெவரையா.

நாரம் கொண்டார் நாடு கவர்ந்தார், நடை அல்லா
வாரம் கொண்டார், மற்று ஒருவற்கு ஆய் மனை வாழும்
தாரம் கொண்டார் என்று இவர் தம்மைத் தருமம் தான்
ஈரும் கண்டாய்! கண்டகர் உய்ந்தார் எவர்? ஐயா!

பொ :—ஐயா! அன்பு பூண்டாருடைய நாட்டைக் கவர்ந்த வரும், முறையல்லாத இறைப்பொருளைப் பெற்றோரும், மற்றொருவனுக்கு உரியளாய் அவன் மனையில் வாழும் மனையாளைக் கவர்ந்த வரும் ஆகிய இவர் மூவரையும் அறக்கடவுள் அறுத்தொறுக்கும்; கொடியோருள் எவர் பிழைத்தார்? ஒருவரும் இல்லை.

கு :—நாரம் - அன்பு. நாரம் கொண்டார் நாடுகவர்தலாவது தம்மிடத்து அன்புடையராய்த் தம்மை நம்பியிருந்தாருடைய நாட்டை (நம்பிக்கை கெடுமாறு) கவர்தல். நடையல்லாவாரம் கொண்டார் என்றது, அறநூல்கள் விதித்த ஆறிலொரு கூறுக்கும் அதிகமான இறைப் பொருளைப் பெற்றோரை; இத்தொடர்க்கு ஒழுக்க நெறியொடு பொருந்தாத ஒருபக்கத்தே மிக்க அன்பு (பட்சபாதம்) கொண்டோர் என்று உரை கூறுவாரும் உளர். பிறனில் விழைவார் அறக்கடவுளால் ஒறுக்கப்படுவர் என்று கூறக் கருதியவன், பிறனில் விழைதலோ டொத்த பிறகுற்றங்களையும் உடன் கூறியது, ஒப்புமைக் கூட்டம் என்னும் அணியிலக்கண நெறியால் அமைவுடையதாகும். கண்டகர் - தீயோர். (181)

3345. அந்தர முற்று னகலிகை
பொற்பா லழிவுற்று
னிந்திர னொப்பா ரெத்தனை
யோர்தா மிழிபுற்றார்
செந்திரு வொப்பா ரெத்தனை
யோர்நின் றிருவுண்பார்
மந்திர மற்று ருற்ற
துரைத்தாய் மதியற்றாய்.

அந்தரம் உற்றான் அகலிகை பொற்பால் அழிவுற்றான்;
இந்திரன் ஒப்பார் எத்தனையோர் தாம் இழிபு உற்றார்?
செந்திரு ஒப்பார் எத்தனையோர் நின் திரு உண்பார்?
மந்திரம் அற்றார் உற்றது உரைத்தாய், மதி அற்றாய்.

பொ :—விண்ணுலகாட்சி பெற்றவனான இந்திரன் அகலிகையின் அழகினால் (மயங்கிக்) கெட்டான்; இந்திரனைப்போன்றோர் அளவிறந்தோர், (பிறன்மனைவிழைந்தமையால்) இழிவுற்றார்; திருமகளை ஒத்தவரான எத்தனைமகளிர் நின் செல்வத்தை நுகர்வார் (உளர்); அவ்வாறிருக்கவும், நீ அறிவுகேடனாய், ஆலோசனை கூறும் நல்லமைச்சரில்லர்தார் கூறுதற்குரியவற்றை உரைத்தனை.

கு :—அந்தரம் - சுவர்க்கம். முன் இரண்டடிகளால் பிறனில் விழைந்தார் கேடுற்றமை எடுத்துக்காட்டால் விளக்கியவாறு. இந்திரன் ஒப்பார் என்றது பிறனில் விழைந்து கேடுற்ற குபேரன் முதலியோரை. மூன்ருமடியால், உன்னல் மணந்துகொள்ளப் பட்டு உனக்குப் பெரும் போகமும் பெருமகிழ்ச்சியும் விளைப்பவராய் உன்னை எதிர்நோக்கியுள்ள மகளிர் பலர் இருக்க, நீ அவரை விட்டுப் பிறன்மனை நயத்தல் தகாது என்றவாறு. பிறன்மனைவிழை தலின் இராவணனை மதியற்ருய் என்ருன்; 'அறன்கடை நின்ருரு ளெல்லாம் பிறன்கடை நின்ருரிற் பேதையா ரில்' (145) என்பது திருக்குறள். மந்திரம் - அமைச்சர் குழு; 'நாயேன் மந்திரத்துள் ளேன்' (சுந்தர. 509) என்பதும் நோக்கத்தகும். நான்காம் அடியால், உன்பேச்சு, மதியில்லாதாரும் நல்லமைச்சரைத் துணைக்கொள்ளா தவரும் பேசும் பேச்சாயிருந்தது என்றவாறு. இந்திரன் அகலிகையை விரும்பி அழிவுற்றமை பாலகாண்டத்து அகலிகைப் படலத்தில் விரித்துரைக்கப்பட்டது. (182)

**3346.** செய்தா யேனுந் தீவினை
யோடும் பழியல்லா
லெய்தா தெய்தா தெய்தி
னிராம னுலகீன்ருன்
வைதா லன்ன வாளிகள்
கொண்டுன் வழியோடுங்
கொய்தா னன்றே கொற்ற
முடித்துன் குழுவெல்லாம்.

செய்தாயேனும், தீவினையோடும் பழி அல்லால்
எய்தாது எய்தாது; எய்தின், இராமன், உலகு ஈன்ருன்
வைதால் அன்ன வாளிகள் கொண்டு உன் வழியோடும்
கொய்தான் அன்றே கொற்றம் முடித்து உன் குழுவெல்லாம்.

பொ :—நீ சீதையைக் கவர(முயலுதல் தகாது;) முயற்சி செய் தாலும் பாவமும் பழியுமன்றி நன்மை கிட்டாது, கிட்டாது; (நீ சீதையைக் கவர இராமனிருக்குமிடம்) அடைந்தால், அவன், பிரமசாபம் போன்ற வாளிகளால் வெற்றி முற்றி, உன்மரபுடன் உன் வீரர் குழுவையும் அப்பொழுதே அழித்துவிடுவான்.

கு :—செய்தல் இயலாது என்பது தோன்றச் செய்தாயேனும் என்ருன். செய்தாயேனும்............எய்தாது எய்தாது என்றது,

நின் முயற்சியால் பழியும் பாவமும் அடைதலன்றி நீ நன்மையடைவதில்லை என்றவாறு. உலகீன்றான் - பிரமன். வைதல் - சபித்தல்; வெகுண்டு கூறுதல். உலகீன்றான் வைதாலன்ன வாளி என்க; பிரமசாபம் தவறுபடாது சென்று பிழை செய்தாரை ஒறுத்தல் போல, இராமனம்பும் தவறாமல் வந்து உன்னையும் உன் கிளைஞரையும், படைஞரையும் அழிக்கும் என்றபடி. உறுதி பற்றிக் 'கொய்தான்' என இறந்த காலத்தாற் கூறினான். கொற்றம் முடித்தல் - வெற்றியை முற்றுவித்தல்; வெற்றிமாலை சூடுதலுமாம். இச்செய்யுள், 'எளிதென வில்லிறப்பா னெய்தும் எஞ்ஞான்றும் விளியாது நிற்கும் பழி' (145) 'பகைபாவ மச்சம் பழியென நான்கும் இகவாவா மில்லிறப்பான் கண்' (146) என்னும் திருக்குறள்களைத் தழுவியமைந்தது. (183)

3347. என்றா னென்னே யெண்ணலை
யோநீ கரனென்பா
னின்றா னைக்கு மேலுள
னென்னு நிலையம்மா
தன்றா னைத்திண் டேரொடு
மாளத் தனுவொன்றாற்
கொன்றான் முற்றுங் கொல்ல
மனத்திற் குறிகொண்டான்.

என் தான் என்னே எண்ணலையோ? நீ; கரன் என்பான்
நின் தானைக்கு மேல் உளன் என்னும் நிலை அம்மா!
தன் தானைத் திண் தேரொடு மாளத் தனு ஒன்றால்
கொன்றான், முற்றும் கொல்ல மனத்தில் குறிகொண்டான்.

பொ:—உன்படைக்குத் தலைமைதாங்கும் நிலையுள்ளவன் என்னும் கரன் என்பவனைத் தன்வலிய தேர்ப்படையோடு மாளும்படி ஒரேவில்லால் கொன்றவனை இராமன், அரக்கர்குலம் முழுவதையும் அழிக்கக் கருதியவனாவன்; (இதனை) நீ ஏன் நினைக்கவில்லையோ? இது என்ன பேதைமை.

கு:—நின்தானைக்கு மேல் நிலை உளன் என்னும் கரன் என்பான் தன் திண் தேர்த்தானையொடு மாளத் தனு ஒன்றால் கொன்றான், முற்றும் கொல்ல மனத்திற் குறிகொண்டான்; என் தான் நீ எண்ணலையோ? என்னே! என இயைக்க. அம்மா வியப்பிடைச் சொல். பெருவீரனும் உன் படைக்குத் தலைவனும்

ஆன கரனை ஒரே வில்லாளியான இராமன், ஒரு முகூர்த்த காலத்துள் படையொடும் தூடணன் திரிசிரன் என்னும் துணைவரோடும் கொன்றான்; மேலும் உன்குலம் முழுவதையும் அழிக்கக் கருதியுள்ளான்; நீ ஏன் இதனை எண்ணவில்லையோ? இஃதென்ன அறியாமை? என்று மாரீசன் இரங்கிக் கூறியவாறு. (184)

3348. வெய்யோர் யாரே வீர
விராதன் றுணைவெய்யோ
ரையோ போனா னம்பொடு
மும்பர்க் கவனென்றா
லுய்வார் யாரே நம்மி
னெனக்கொண் டுணர்தோறு
நையா நின்றே னீயிது
ரைத்து நலிவாயோ.

வெய்யோர் யாரே வீர விராதன் துணை வெய்யோர்?
ஐயோ போனான் அம்பொடும் உம்பர்க்கு அவன்; என்றால்,
'உய்வார் யாரே? நம்மின்' எனக் கொண்டு, உணர்தோறும்
நையா நின்றேன்; நீ இது, உரைத்து நலிவாயோ?

பொ :—கொடியோருள், வீரப்பாடு உடைய விராதனளவு கொடியோர் யார் உளர்? (ஒருவருமில்லையன்றோ?) அவ்விராதனும் இராமன் அம்பினால் மேலுலகுபுக்கான் என்றால், ஐயோ! நம்முள் உய்வார் யார்? (ஒருவருமில்லை) என்று மனதிற்கொண்டு நினையுந்தோறும் மெலிவுறுகின்றேன்; (இந்நிலையில்) நீ இதனைச் சொல்லித் துன்புறுத்துவாயோ?

கு :—இராமனாற்றல் நினைந்து இனி நமக்கு உய்தியில்லை என்று மெலிகின்ற என்னை நின்சொல் மிகவருத்துகின்றது என்றவாறு. இது என்றது, 'உடன்வாழும் துப்பழி செவ்வாய் வஞ்சியை வெளவத் துணைகொண்டிட்டு இப்பழி நின்னாற் றீரியவந்தேன்' (3339) என்று இராவணன் கூறியதனை. இராமன் விராதனை அம்பினால் எய்தும் வாளால் தோள்களை வெட்டி வீழ்த்தியும் அழித்தானாகலின், இங்கே அம்பென்றது படைக்கலம் என்னுந் துணையாய் நின்றது. நலிதல் - வருத்துதல். (185)

3349. மாண்டார் மாண்டார் நீயினி
மாள்வார் தொழில்செய்ய
வேண்டா வேண்டா செய்திடி
னுய்வான் விதியுண்டோ
வாண்டா ராண்டா ரெத்தனை
யென்கே னறநோனா
ரீண்டா ரீண்டார் நின்றவ
ரெல்லா மிலரன்றே.

மாண்டார் மாண்டார்; நீ இனி மாள்வார் தொழில் செய்ய வேண்டா வேண்டா ; செய்திடின் உய்வான் விதி உண்டோ ? ஆண்டார் ஆண்டார் எத்தனை என்கேன்; அறம் நோனார் ஈண்டார் ஈண்டார் ; நின்றவரெல்லாம் இலர் அன்றே ?

பொ :—இறந்த கரன் முதலியவர் இறந்தவரே (அவரை உயிர்ப் பித்தல் இயலாது); நீ இனி இறப்போர் செய்தற்குரிய செயலைச் செய்யவேண்டா, செய்யவேண்டா ; செய்தியேல் அழிவினின்று நீங்குதற்குரிய ஊழ் இல்லை; ஒருவர்பின் ஒருவராய் உலகை ஆட்சி செய்தோர் எத்துணையர் என்கேன்? (அவரெல்லாம் இறந்து பட்டனர் அன்றே !) அறஞ்செய்யாதார் ஓங்கார், ஓங்கார் ; அறத் தைச் செய்யாது நின்றவரெல்லாம் இருந்தும் இல்லாதவரே யன்றே ?

கு :—அடுக்குக்கள் துணிவை விளக்கி நின்றன. ‘ அறம் நோனார் ’ என்பதனை நின்றவரெல்லா மிலரன்றே என்பதனோடும் ஒட்டுக. கரன் முதலியோர் இறந்ததுபற்றி வருந்திப் பயனில்லை ; அதற் குப் பழிதீர்த்துக்கொள்வதாக நீ சீதையைக் கவர்தலாகிய தீய செயலில் இறங்க வேண்டா ; இறங்கின் நீயும் இறந்துபடுவாய்; உலகத்தை வழிவழி ஆண்ட அரசருள் இறவாதவர் எவர்? அறநெறி நில்லாதார் ஓங்கார் ; அவர் உயிருடனிருந்தும் இல்லாத வரே (செத்தவரே) ஆவர். ஆதலால் நின்னாட்சி வழிவழி சிறந் தோங்கவும், இறவாத வாழ்வுபெறவும் நினைதியேல், சீதையைக் கவரும் நினைவொழிந்து அறநெறி நிற்றி என்றவாறு. மாண்டார் மாண்டார் என்பதற்கு நின்னினும் சிறந்த அரசரும் தீயசெயலால் இறந்தொழிந்தனர் என்றும் உரை கூறுவர். வேண்டா வேண்டா என்பதனை அடுக்காகக் கொள்ளாது, நீ இனி மாள்வார் தொழில் செய்யவேண்டா ; வேண்டா செய்திடின் உய்வான் விதி உண்டோ? என்று கொண்டு உரை கூறுவாரும் உளர். அறம் நோனார்

நின்றவர் எல்லாம் இலர் என்பதற்கு அறஞ் செய்யாது நின்றவர் உறுதிப் பொருள்களாகிய எல்லாம் இல்லாதவராவர் என்று உரை கூறலும் ஆம். (186)

3350. எம்பிக் கும்மென் னன்னை
தனக்கு மிறுதிக்கோ
ரம்புய்க் கும்போர் வில்லி
தனக்கு மயனிற்குந்
தம்பிக் கும்மென் ஞண்மை
தவிர்ந்தே தளர்கின்றேன்
கம்பிக் கும்மென் னெஞ்சவ
னென்றே கவல்கின்றேன்.

எம்பிக்கும் என் அன்னைதனக்கும் இறுதிக்கு ஓர்
அம்பு உய்க்கும் போர் வில்லிதனக்கும் அயல் நிற்கும்
தம்பிக்கும் என் ஆண்மை தவிர்ந்தே தளர்கின்றேன்;
கம்பிக்கும் என் நெஞ்சு; அவன் என்றே கவல்கின்றேன்.

பொ :—என்தம்பியாகிய சுபாகுவுக்கும் தாயாகிய தாடகைக்கும் இறுதியை விளைவித்தற்கு ஒரே அம்பைச் செலுத்திய போரில் வல்ல வில்வீரனான இராமனுக்கும் அவன் பக்கத்தே நீங்காது நிற்கும் தம்பியாகிய இலக்குவனுக்கும் என் ஆண்மை ஒழியச் சோர்வுறுகின்றேன். என்மனம் நடுங்குகின்றது; அவ்விராமனென்றே நினைந்து கவலையடைகின்றேன்.

கு :—தவிர்ந்து என்னும் செய்தெனெச்சத்தைத் தவிர எனச் செயவெனெச்சமாகத் திரிக்க. தவிர்தல் - ஒழிதல். நிற்றல் - நிலைத்தல். கம்பித்தல் - நடுங்குதல். கவலுதல் – கவலையடைதல். (187)

3351. நின்றுஞ் சென்றும் வாழ்வன
யாவு நிலையாவாய்ப்
பொன்றும் மென்னும் மெய்ம்மை
யுணர்ந்தாய் புலையாடற்
கொன்றும் முன்ன யென்னுரை
கொள்ளா யுயர்செல்வத்
தென்றும் மென்றும் வைகுதி
யையா வினியென்ருன்.

நின்றும் சென்றும் வாழ்வன யாவும் நிலையாவாய்ப்
பொன்றும் என்னும் மெய்ம்மை உணர்ந்தாய்! புலையாள்தற்கு
ஒன்றும் உன்னுய்; என் உரை கொள்ளாய்; உயர் செல்வத்து
'என்றும் என்றும் வைகுதி; ஐயா! இனி' என்ருன்.

பொ :—'ஐயா! நிலைத்திணையும் இயங்குதிணையுமாய் வாழ்வன வெல்லாம் நிலையாதனவாய் அழியும் என்னும் உண்மையை உணர்ந்தோனே! தீவினைசெய்தற்குச் சிறிதும் நினையற்க; என் உறுதியுரையை ஏற்றுக்கொள்க; இனி 'எந்நாளும் உயர்ந்த செல்வத்தே திளைத்து வாழுதி' என்று (மாரீசன் இராவணனிடம்) கூறினன்.

கு :—நின்று வாழ்வனவும் சென்றுவாழ்வனவும் என இயைக்க. நின்று வாழ்வன அசரம் (நிலைத்திணை) எனப்படும். சென்று வாழ்வன சரம் (இயங்குதிணை) எனப்படும். பொன்றுதல் - அழிதல். புலை - தீவினை; அது சீதையைக் கவர்தல். ஒன்றும் - சிறிதும். உன்னுதல் - நினைதல். என்றென்றும் என்பது என்றும் என்றும் என நின்றது. வைகுதல் - தங்குதல்; வாழ்தல். ஐயா! நிலையாமை யுணர்ந்த நீ, தீவினை தவிர்ந்து, என் உறுதியுரை கொண்டு அழியாத பெருஞ் செல்வத்தோடு என்றென்றும் இன்புற்றிரு என்று வாழ்த்தியவாறு. (188)

## இராவணன் மாரீசனை முனிந்து கூறுதல் 3352-3353

**3352.** கங்கைசடை வைத்தவனொ டுங்கயிலை வெற்போ
★ ரங்கையி னெடுத்தவென தாடெழின் மணித்தோ
ளிங்கொர்மனி தற்கெளிய வென்றனை யெனத்தன்
வெங்கணெரி யப்புருவ மீதுற விடைத்தான்.

'கங்கை சடை வைத்தவனொடும் கயிலைவெற்பு ஓர்
அங்கையின் எடுத்த எனது ஆடு எழில் மணித் தோள்,
இங்கு ஓர் மனிதற்கு எளிய என்றனை' எனத் தன்
வெம் கண் எரியப் புருவம் மீது உற விடைத்தான்.

பொ :—'கங்கை வெள்ளத்தைத் தன் சடையுள் அடங்கும்படி தடுத்து வைத்துக்கொண்ட சிவபெருமானொடு அவன் வீற்றிருந்த கயிலாயமலையினையும் ஒரே உள்ளங்கையினல் தாங்கிய என்னுடைய வெற்றிவாய்ந்த அழகிய மணியணி புனைந்த தோள்கள், இப்பொழுது ஒரு மானிடனுக்கும் எளியன என்று கூறினை' என்று

தன்னுடைய கொடிய கண்களில் நெருப்புப் பிறக்கப் புருவங்கள் நெற்றிமேல் ஏற வெகுள்வானுயினன்.

கு :—கங்கை என்றது கங்கை வெள்ளத்தை. சிவபிரானுடைய பேராற்றல் தோன்றக் கங்கை சடைவைத்தவன் என்ருன். மனிதற்கும் என இழிவுசிறப்பும்மை விரிக்க. விழியில் நெருப்புப் பிறத்தலும் புருவம் நெற்றிமிசை ஏறுதலும் வெகுளியால் நிகழும் மெய்ப்பாடுகள். விடைத்தல் - சினத்தல்; 'விடைத்துவருமிலங்கைக் கோன்' (150.10) என்பது தேவாரம். (189)

3353. நிகழ்ந்ததை நினைத்திலையெ
னெஞ்சினிலை யஞ்சா
திகழ்ந்தனை யெனக்கிளைய
நங்கைமுக மெங்கு
மகழ்ந்தவரை யொப்புற
வமைத்தவரை யையா
புகழ்ந்தனை தனிப்பிழை
பொறுத்தனெனி தென்ருன்.

'நிகழ்ந்ததை நினைத்திலை; என் நெஞ்சின் நிலை அஞ்சாது
இகழ்ந்தனை; எனக்கு இளைய நங்கை முகம் எங்கும்
அகழ்ந்த வரை ஒப்பு உற அமைத்தவரை ஐயா!
புகழ்ந்தனை; தனிப்பிழை; பொறுத்தனென் இது' என்ருன்.

பொ :—ஐயா! நடந்த செயல்களை எண்ணினையல்லை; மேலும், என் மனநிலையினைச் சிறிதும் அஞ்சாமல் நிந்தித்தாய்; எனக்கு இளையவளான சூர்ப்பணகையின் முகம் முழுவதும் தோண்டப் பட்ட மலைபோலத் தோன்றும்படி செய்தாரைப் புகழ்தலுஞ் செய்தாய்; நிகழ்ந்தது நினையாமையும், என் நெஞ்சினிலை இகழ்ந்ததும், என் தங்கை மூக்கரிந்தாரைப் புகழ்ந்ததுமாகிய இச்செய்கை ஒப்பற்ற பிழையாகும்; இதனைப் பொறுத்தேன் என்று (இராவணன் மாரீசனை நோக்கிக்) கூறினுன்.

கு :—சூர்ப்பணகை மூக்கிழந்ததனையும் கரன்முதலியோர் மாண்டதனையும் நிகழ்ந்தது என்ருன். (190)

## மாரீசன் இராவணனிடம் மீட்டும் கூறல் 3354-3360

**3354.** தன்னைமுனி வுற்றதறு
கட்டகவி லோனைப்
பின்னைமுனி வுற்றிடுமெ
னத்தவிர்தல் பேணு
னுன்னைமுனி வுற்றுன
குலத்தைமுனி வுற்ரு
யென்னைமுனி வுற்றிலையி
தென்னென விசைத்தான்.

தன்னை முனிவுற்ற தறுகண் தகவு இலோனைப்
பின்னை முனிவுற்றிடும் எனத் தவிர்தல் பேணுன்,
'உன்னை முனிவுற்று, உன குலத்தை முனிவுற்ருய்,
என்னை முனிவுற்றிலை; இது என்?' என இசைத்தான்.

பொ:—தன்னை வெகுண்ட வன்கண்மையுடைய நடுவுநிலையற்றவனுன இராவணனை நோக்கி, அவன் மேலும் முனிவான் என்று தவிராதவனுகி, 'நீ, என்னை முனிந்தாயல்லை; உன்னை முனிந்து உன் குலத்தினையும் முனிந்தாய்; இஃது என்னை?' என்று (மாரீசன்) கூறினுன்.

கு:—தறுகண் - வன்கண். தகவு - நடுவுநிலை. பின்னை - பின்.
(191)

**3355.** எடுத்தமலை யேநினையி னீசனிகல் வில்லாய்
வடித்தமலை நீயிதுவ லித்தியென வாரிப்
பிடித்தமலை நாணிடை பிணித்தொருவன் மேனு
ளொடித்தமலை யண்டமுக டுற்றமலை யன்ரே.

'எடுத்த மலையே நினையின், "ஈசன் இகல் வில்லாய்
வடித்த மலை, நீ இது வலித்தி" என வாரிப்
பிடித்து அமலை நாண் இடை பிணித்து, ஒருவன் மேல் நாள்
ஒடித்த மலை, அண்டமுகடு உற்ற மலையன்ரே?'

பொ:—நீ கயிலையை எடுத்ததனையே பெருமையாக நினையின், 'இது, சிவபிரான் வளைத்த மலைவில்லாகும். இதனை நீ வளைப்பாயாக' என்று சனகராசன் சொல்ல, முற்காலத்தே ஒப்பற்றவனுன இராமன் பற்றியெடுத்துப் பேரொலிசெய்யும் நாணினை அதன்கண்

இணைத்து, ஒடித்த வில்லாகிய மலை, அண்ட முகடு பொருந்த வளர்ந்த மகாமேருமலையல்லவோ !

கு :—'கங்கை சடைவைத்தவனெடுங் கயிலைவெற்போர், அங்கையி னெடுத்தவென தாடெழின் மணித்தோள், இங்கொர் மனிதற் கெளிய என்றனை' (3352) என்று சினந்தானாதலின், 'நீ கயிலை எடுத்ததனையே நினைந்து செருக்குறலாகாது. சிவபிரான் கொண்ட வில்லாகிய மேருமலை, இராமனால் எடுத்து வளைத் தொடிக்கப்பட்ட தனையும் நினைதி' என்கிறான். எடுத்தமலை என்றது கயிலாயத்தை. ஈசன் - சிவபிரான். வடித்தல் - வளைத்தல். வலித்தல் - வளைத்தல். அமலை - பேரொலி. ஒருவன் என்றது இராமனை. (192)

3356. யாதுமறி யாயுரைகொ ளாயிக லிராமன்
கோதைபுனை யாமுனுயிர் கொள்ளைபடு மன்றே
பேதைமதி யாலிஃதொர் பெண்ணுருவ மென்றாய்
சீதையுரு வோநிருதர் தீவினைய தன்றோ.

'யாதும் அறியாய்; உரைகொளாய்; இகல் இராமன்
கோதை புனையாமுன் உயிர் கொள்ளைபடும் அன்றே !
பேதை மதியால் "இஃது ஓர் பெண் உருவம்" என்றாய் !
சீதை உருவோ ? நிருதர் தீவினை அது அன்றோ ?

பொ :—இராமனாற்றலைச் சிறிதும் அறிந்தாயில்லை ; அறிந்த யான் கூறும் உரையினையும் கொள்வாயல்லை ; வலியுடைய இராமன் (போர்க்குரிய தும்பை) மாலை புனையுமுன் பகைவர் உயிர் மிகுதி யாகக் கவரப்படும் ; உன் மயக்க அறிவால், (சீதையை) 'இது ஒரு பெண்வடிவம்' என்று எண்ணினாய். அது சீதையின் உருவமோ ? அரக்கர் செய்த தீவினையின் உருவமன்றோ ?

கு :—பேதை மதி - மயக்க அறிவு. இஃது என்பது இராவணன் கூற்றுள் அமைந்த சுட்டு. அது என்பது மாரீசன் கூற்றுள் அமைந்த சுட்டு. இராமனாற்றலை நீ அறிகிலை ; அறிந்த யான் கூறும் உரையினையும் கொள்கிலை ; இராமன் போர்க்கு மாலைசூடி யெழுமுன் எதிர்ந்தார் உயிர் கொள்ளை கொள்ளப்படும் ; அஃதிருக்க ; நீ உன் மயக்கவறிவால் சீதையை ஒரு பெண்ணுரு என்று எண்ணு கிறாய் ; அது, சீதையுருவோ ? அன்று. அரக்கர் செய்த தீவினையின் உருவாகும். ஆதலால் அது நம்மை அழித்துவிடும் என்றவாறு. கோதை புனையாமுன் என்பதற்கு, வில்லின் நாணியைப் பூட்டாமுன் என்றும் கையுறை அணியாமுன் என்றும் பொருள் கொள்வாரும் உண்டு. (193)

3357. உஞ்சுபிழை யாயுறவி னேடுமென வுன்னு
நெஞ்சுபறை மோதுமது நீநினைய கில்லா
யஞ்சுமென தாருயி ரறிந்தருகு நின்றார்
நஞ்சுநுகர் வாரையிது நன்றெனலு நன்றோ.

'உஞ்சு பிழையாய் உறவினோடும் என உன்னு,
நெஞ்சு பறை மோதும்; அது நீ நினையகில்லாய்;
அஞ்சும் எனது ஆருயிர்; அறிந்து அருகு நின்றார்
நஞ்சு நுகர்வாரை "இது நன்று" எனலும் நன்றோ?'

பொ:—நீ சுற்றத்தாருடன் அழிவினின்று நீங்கி வாழமாட்டாய் என்று எண்ணுதலால், என் மனம் பறையடித்தாற்போலத் துடிக்கின்றது; அதனை நீ நினைக்கவில்லை; அதனால் என் அரிய உயிரும் நடுங்குகின்றது; நஞ்சு உண்பவர்களை அவர் பக்கத்து நின்றோர் அது கொல்லும் என்பதை அறிந்திருந்தும், தடுக்காமல், 'இது நல்லது' என்று கூறுதலும் நல்லதோ?

கு:—உன் தீய செய்கையால் வரவிருக்கும் கேட்டை நீ அறியவில்லை. அதனால் அரக்கர் குலத்தோடு நீயும் அழிவுறுவாய் என்பதை எண்ணும்போது என் நெஞ்சு துடிக்கின்றது; என் உயிரும் நடுங்குகிறது; இவ்வாறு கெடுமதியால் நீ தீய செயலில் தலைப்படுதலையும், அதன் விளைவாக நீயும் அரக்கர்குலமும் அடையும் அழிவையும் அறிந்துவைத்தும் நான் உன்னைத் தடுக்காமலிருப்பது முறையாகாது; ஆதலால். யான் உரைக்கும் உறுதியுரையினைக் கேட்டுக் கடைப்பிடிப்பாயாக என்றவாறு. (194)

3358. ஈசன்முதன் மற்றுமிமை யோருலகு மற்றைத்
தேசமுதன் முற்றுமொ ரிமைப்பினுயிர் தின்ப
கோசிக னளித்த கடவுட்படை கொதிப்போ
டாசில கணிப்பில இராமனரு ணிற்ப.

ஈசன் முதல் மற்றும் இமையோர் உலகும் மற்றைத்
தேசம் முதல் முற்றும் ஒர் இமைப்பின் உயிர் தின்ப,
கோசிகன் அளித்த கடவுட்படை, கொதிப்போடு
ஆசு இல, கணிப்பு இல, இராமன் அருள் நிற்ப.

பொ:—சிவபிரான் முதலாக மற்றுமுள்ள தேவருலகங்களும் மற்றை நாடுகளும் முதலிய எல்லாவற்றையும் ஒரு கணப்பொழுதில் அழிக்கும் ஆற்றலுடையனவும் ?குற்றமற்றனவும் அளவற்றனவும்

ஆன விசுவாமித்திரமுனிவன் தந்த தெய்வத்தன்மை வாய்ந்த படைக்கலங்கள் இராமன் கட்டளைப்படி நடப்பனவாயுள்ளன.

கு :—ஈசன் - சிவபெருமான். தேசம் - நாடு. கோசிகன் - விசுவாமித்திரன். ஆசு - குற்றம். கண்ணிப்பு - அளவு. இராமன் படைக்கலங்களின் ஆற்றலும், அவை இராமன் குறிப்பின்வழிநிற்றலும், 'ஆய்ந்தேற வுணரைய அயற்கேயும் அறிவரிய, காய்ந்தேவில் உலகனைத்தும் கடலோடும் மலையோடும், தீந்தேறச் சுடுகிற்கும் படைக்கலங்கள் செய்தவத்தால், ஈந்தேனும் மனம் உட்க இவற் கேவல் செய்குனவால்' (748) என்று விசுவாமித்திர முனிவனால் பாராட்டப் படுதலும் இங்கு நோக்கத்தகும், (195)

**3359.** ஆயிர மடற்கையுடை யானைமழு வாளா
லேயெனு முரைக்குளுயிர் செற்றவெதி ரில்லான்
மேயவிறன் முற்றும் வரி வெஞ்சிலையினோடுந்
தாயவன் வலித்தகைமை யாமுறு தகைத்தோ.

ஆயிரம் அடல் கை உடையானை மழுவாளால்
ஏ எனும் உரைக்குள் உயிர் செற்ற எதிரில்லான்
மேய விறல் முற்றும், வரி வெம் சிலையினோடும்
தாயவன் வலித்தகைமை யாம் உறு தகைத்தோ.

பொ :—வலிய ஆயிரம் கைகளையுடையனை கார்த்தவீரியனை ஏயென்பதற்குள் மழுப்படையால் உயிரைப் போக்கிய ஒப்பற்ற பரசுராமன் அடைந்த வெற்றி முழுவதையும், அவனுடைய கட்டமைந்த விற்படையுடன் கடந்தவனை இராமனுடைய ஆற்றலின் தன்மை நம்மால் அடையத்தக்கதாகுமோ? (ஆகாது)

கு :—நீ இருபது கையும் பேராற்றலும் உடைமை கொண்டு தருக்கலாகாது; உன்னையும் வென்ற பேராற்றலுடையவனும் ஆயிரங் கைகளுடையவனுமான கார்த்தவீரியனை நொடிக்குள் உயிர் கொண்ட பரசுராமனாற்றலையழித்து, அவன் வில்லையும் கொண்ட இராமன் தோளாற்றலின் முன் நாம் நிற்கவும் வல்லோமல்லோம் என்றவாறு. சந்திரவமிசத்தரசனும் வன்மை மிக்க ஆயிரந் தோள் களை யுடையவனும் இராவணனை வென்றவனுமான கார்த்தவீரியன் என்பான் சமதக்கினி முனிவருடைய பசுவைக் கவர்ந்தமையால், அம்முனியின் குமாரனாகிய பரசுராமன் சினந்து, அக்கார்த்தவீரியனுடைய ஆயிரந் தோளையும் வெட்டி வீழ்த்திக் கொன்றான் என்பது புராண வரலாறு. பரசுராமனை இராமன் வென்ற செய்தி பால

காண்டத் திருதியிற் பேசப்பட்டது. அடல் - வலிமை. ஆயிரம் கையுடையான் என்றது கார்த்தவீரியனை. மழுவாகிய வாள் என்க. ஏயெனல் விரைவுக்குறிப்பு. செற்றல் - அழித்தல். எதிர் - ஒப்பு. தாயவன் - கடந்தவன். (196)

3360. வேதனைசெய் காமவிட
மேலிடமெ லிந்தாய்
தீதுரைசெய் தாயினைய
செய்கைசிதை வன்றோ
மாதுலனு மாய்மரபின்
முந்தையுற வந்தே
னீதுரைசெய் தேனதனை
யெந்தைதவிர் கென்றான்.

வேதனை செய் காம விடம் மேலிட மெலிந்தாய்;
தீது உரை செய்தாய்; இனைய செய்கை சிதைவு அன்றோ ?
மாதுலனும் ஆய், மரபின் முந்தை உற வந்தேன்,
ஈது உரைசெய்தேன்; அதனை எந்தை ! தவிர்க என்றான்.

பொ :—'என் அப்பனே! துன்பத்தை விளைக்கும் காமமாகிய நஞ்சு மேம்பட்டமையால் மெலிந்தனை ; கொடியதைச் சொன்னாய்; இத்தன் மையதான செயல் நம் அழிவுக்குக் காரணமாகும் ; உனக்கு மாமனாய் உன் மரபில் மூத்தோனுமான யான், இந் நல்லுரைகளைக் கூறினேன் ; சீதையைக் கவர்தலாகிய அச்செயலை ஒழிக' என்று (மாரீசன்) கூறினான்.

கு :—இனைய செய்கை என்றது சீதையைக் கவர்தலை. சிதைவு - அழிவு. இங்கே சிதைவு என்றது அழிவுக்குக் காரணத்தை. மாதுலன் - மாமன். முந்தை - முன். ஈது என்றது மாரீசன் கூறிய உறுதியுரையை. அது என்றது சீதையைக் கவர்தலை. மாரீசன் இராவணனை நயந்து திருத்த முயல்கிறான் ஆதலின் எந்தை என்றான். (197)

இராவணன் மீட்டும் மாரீசனொடு சினந்து கூறுதல் 3361-3364

3361. என்னவுரை யித்தனையு
மெத்தனையு மெண்ணிச்
சொன்னவனை யேசின
வரக்கர்பதி சொன்னா
னன்னையுயிர் செற்றவனை
யஞ்சியுறை கின்றா
யுன்னையொரு வற்கொருவ
னென்றுணர்கை நன்றோ.

என்ன உரை அத்தனையும் எத்தனையும் எண்ணிச்
சொன்னவனை ஏசின அரக்கர்பதி சொன்னான்;
அன்னை உயிர் செற்றவனை அஞ்சி உறைகின்றாய்
உன்னை ஒருவற்கு ஒருவன் என்று உணர்கை நன்றோ.

பொ:—என்று இத்தனை உறுதியுரைகளையும் ஆராய்ந்து சொன்ன மாரீசனை நிந்தித்த அரக்கர் வேந்தனான இராவணன் சொல்லுவானாயினன். உன் தா(யான தாடகை)யின் உயிரைப் போக்கின இராமனை(ப் பழி தீர்த்துக் கொள்ளாமல்) அஞ்சி(த் தவவேடத்துள் மறைந்து) உறைகின்றவனான உன்னை ஒருவற்குப் பயன்படத்தக்க ஒருவன் என்று நினைகை நன்றன்று.

கு :—தாயைக் கொன்றானைக் கொல்லமாட்டாமல் அஞ்சித் தவத்துள் மறைந்து உயிர் வாழ்கின்ற நீ யார்க்கு என்ன உதவி செய்யும் ஆற்றலுடையை? உன்பால் யான் உதவி வேண்டி வந்தது தவறு என்றவாறு. ஒருவற்கு ஒருவன் என்பது, ஒருவனுக்கு உதவிபுரியத் தக்க ஒருவன் என்று பொருள்பட நின்றது. (198)

3362. திக்கயமொ ளிப்பநிலை தேவர்கெட வானம்
புக்கவரி ருக்கைபுகை வித்துலகம் யாவுஞ்
சக்கரந டத்துமெனை யோதயர தன்றன்
மக்கணலி கிற்பரிது நன்றுவலி யன்றோ.

திக்கயம் ஒளிப்ப, நிலை தேவர் கெட, வானம்
புக்கு, அவர் இருக்கை புகைவித்து, உலகம் யாவும்
சக்கரம் நடத்தும் எனையோ தயரதன்றன்
மக்கள் நலிகிற்பர்? இது, நன்று; வலியன்றோ?

பொ :—எட்டுத் திசையானைகளும் தோற்று ஒளிக்கத் தேவர்கள் தம் நிலைகெட்டழியும்படி வானுலகிற் புகுந்து அவ்வானவரூர்களை எரிமூட்டி அழிவித்து, எல்லா வுலகத்தும் ஆணை செலுத்தும் என்னைத் தயரதன் மக்கள் நலியுமாற்றல் படைத்தவரோ? உன்னுடைய இப்பேச்சு நன்று; ஆற்றலுடையதல்லவோ?

கு :—இருக்கை - ஊர். சக்கரம் நடத்தல் - ஆணை செலுத்தல். நலிதல் - வருத்துதல். இது என்றது மாரீசன் பேச்சைச் சுட்டி நின்றது. நன்று, வலி என்பவை எள்ளற் பொருள்பட நின்றன. (199)

3363. மூவுலகி னுக்குமொரு நாயகமு டித்தேன்
மேவலர் கிடைக்கினிதன் மேலினிய் துண்டோ
வேவல்செய கிற்றியென தாணைவழி யெண்ணிக்
காவல்செ யமைச்சர்கட னீகடவ துண்டோ.

மூவுலகினுக்கும் ஒரு நாயகம் முடித்தேன்;
மேவலர் கிடைக்கின் இதன்மேல் இனியது உண்டோ?
ஏவல் செயகிற்றி; எனது ஆணை வழி எண்ணிக்
காவல் செய் அமைச்சர் கடன் நீ கடவது உண்டோ?

பொ :—மூன்றுலகுக்கும் ஒரே தலைமை பூண்டேன்; (அத்தகைப் பெருமை வாய்ந்த எனக்குப்) பகைவர் கிடைத்தால் அதனினும் இனியது உண்டோ? என் கட்டளைப்படி பணி செய்தி; ஆராய்ந்து எனக்குக் காப்பாவனவற்றைச் செய்யும் அமைச்சர் கடமை நீ செய்யத்தக்கதில்லை.

கு :—பகைவென்று மூன்றுலகங்களையும் ஒரே நாயகனாய் ஆளும் எனக்குப் புதியதொரு பகை கிடைத்தால், அது நான் விரும்பி வரவேற்கத்தக்கதன்றோ! அது கிடக்க; நீ என் கட்டளைப்படி பணி செய்; எனக்கு உறுதியாவனவற்றை ஆராய்ந்து செய்வது அமைச்சர் கடமை; அதனைச் செய்ய உனக்கு உரிமை இல்லை என்றவாறு. மூவுலகு மண் விண் பாதலம் என்பன. மேவலர் - பகைவர். என்னைப் பகைத்துக் கொள்வார் ஒருவரும் இல்லை என்பது தோன்ற மேவலர் கிடைக்கின் என்றான். எனது ஆணைவழி ஏவல் செயகிற்றி எனக் கூட்டுக. கடவது - செய்யத்தக்கது. (200)

3364. மறுத்தனை யெனப்பெறினு
நின்னைவடி வாளா
லொறுத்துமன முற்றது
முடிப்பெனொழி கல்லேன்
வெறுப்பன கிளத்தலுறு
மித்தொழிலை விட்டென்
குறிப்பின்வழி நிற்றியுயிர்
கொண்டுழலி னென்றான்.

'மறுத்தனை எனப் பெறினும், நின்னை வடி வாளால்
ஒறுத்து, மனம் உற்றது முடிப்பென்; ஒழிகல்லேன்;
வெறுப்பன கிளத்தல் உறும் இத்தொழிலை விட்டு, என்
குறிப்பின் வழி நிற்றி, உயிர் கொண்டு உழலின்' என்றான்.

பொ:—'நான் ஏவியதை நீ செய்ய மறுத்தாலும், உன்னைக் கூரிய வாளால் கொன்று, நான் விரும்பியதை நிறைவேற்றுவேன்; தவறேன்; ஆதலால் நீ உயிரொடு திரிய விரும்பினல், வெறுக்கத் தக்கனவற்றைச் சொல்லும் இச்செயலை விட்டு, என் கருத்தின்படி நடப்பாயாக' என்று (மாரீசனை நோக்கி இராவணன்) கூறினன்.

கு:—ஒறுத்தல் - தண்டித்தல்; மனம் உற்றது - எண்ணியது. சீதையை வெளவுதல். சீதையைக் கவர்தல் உறுதி என்பது தோன்ற, மனமுற்றது முடிப்பென்; ஒழிகல்லேன் என்றான்; கிளத்தல் - சொல்லுதல். உழலுதல் - திரிதல். (201)

மீட்டும் மாரீசன் கூறல் 3365-3366

3365. அரக்கனஃ துரைத்த லோடு
★ மறிந்தன னடங்கி நெஞ்சந்
தருக்கினர் கெடுவ ரென்றல்
தத்துவ நிலையிற் றன்றோ
செருக்குநர்த் தீர்த்து மென்பார்
தம்மினுர் செருக்க ரென்னு
வுருக்கிய செம்பி னுற்ற
நீரென வுரைக்க லுற்றான்.

அரக்கன் அஃது உரைத்தலோடும்
அறிந்தனன், அடங்கி, 'நெஞ்சம்
தருக்கினர் கெடுவர்' என்றல்,
தத்துவநிலையிற்று, அன்றே
'செருக்குநர்த் தீர்த்தும் என்பார்
தம்மின் ஆர் செருக்கர்' என்ன
உருக்கிய செம்பின் உற்ற
நீரென உரைக்கல் உற்றான்.

பொ :—இராவணன் அதனைச் சொல்லுதலும், அவன் மனநிலை யறிந்தவனான மாரீசன், 'மனத்துச் செருக்குற்றார் கெடுவர்' என்பது உண்மைநிலையுடையதன்றோ ? "களிப்புடையானை அக்களிப்பினால் வரும் தீமை நீக்கிக் காப்போம் என்பவரைப்போல மயக்கவறிவுடையார் ஒருவருமில்லை, என்று நினைந்து, உருக்கிய செம்பிற் பட்ட நீர் தன் தன்மை கெட்டு அச் செப்புருக்கினுள் ஒடுங்குதல்போல் அடங்கினவனாய்ப் பேசத் தொடங்கினான்.

கு :—அரக்கன் என்றது இராவணனை. அஃது என்றது முன் மூன்று பாடல்களில் இராவணன் கூற்றாய் வந்தவற்றை. உருக்கிய செம்பின் உற்ற நீர் என அடங்கி உரைக்கலுற்றான் என இயைக்க. இராவணன் கூறியது கேட்ட மாரீசன், அவன் கருத்தறிந்து, 'செருக்குற்றார் அழிவர் என்பது உண்மை; இவனைத் திருத்த முயன்றது பேதைமை' என்று நினைந்து, அவன் வயத்தனாய் அடங்கிக் கூறுவானாயினன் என்றவாறு. செருக்கினிற்றீர்தும் என்பார் தம்மின் ஆர் செருக்கர்? என்று பாடங்கொண்டு களிப்பினால் அழிவோம் என்பாரினும் செருக்குடையார் எவர்? ஒருவரும் இல்லை என்று உரை கூறுவாரும், 'தம்மின் ஆர் செருக்கர் செருக்கினில் தீர்தும் என்பார்' என்று இயைத்து, 'தம்மிடம் நிறைந்த செருக்குடையார் அச்செருக்கினால் அழிவோம் என்று கூறுவர்' என்று உரை கூறுவாரும் உளர். தருக்கு-செருக்கு. தத்துவ நிலை-உண்மை நிலை. செருக்கு-களிப்பு. தீர்த்தும் - நீக்குவோம். (202)

3366. உன்வயி னுறுதி நோக்கி
யுண்மையி னுணர்த்தினேன் மற்
றென்வயி னிறுதி நோக்கி
யச்சத்தா லிசைத்தே னல்லே

னன்மையுந் தீமை யன்றே
நாசம்வந் துற்ற போது
புன்மையி னின்ற நீராய்
செய்வது புகறி யென்ருன்.

‘உன்வயின் உறுதி நோக்கி,
உண்மையின் உணர்த்தினேன்; மற்று
என்வயின் இறுதி நோக்கி
அச்சத்தால் இசைத்தேன் அல்லேன்;
நன்மையும் தீமை அன்றே
நாசம் வந்து உற்றபோது ;
புன்மையின் நின்ற நீராய்!
செய்வது புகல்தி என்ருன்.

பொ :—‘சிறுமையில் நிலைத்த இயல்புடையாய்! ஆராய்ந்து உன் திறத்து நன்மையாயினவற்றை உண்மையாகத் தெரிவித்தேன்; அன்றி, என் திறத்து (வரும்) அழிவு நோக்கி அச்சத்தால் பேசவில்லை; அழிவு வந்து நெருங்கியபோது நன்மையும் தீமையாகும்; யான் செய்யவேண்டியதைச் சொல்லுக’ என்று (மாரீசன்) கூறினன்.

கு :—மாரீசன் இராவணனை நோக்கி, யான் இதுவரை உனக்கு நலன் விளக்கக் கருதி உண்மை யுரைத்தேனேயன்றி, எனக்கு வரும் அழிவையெண்ணி அஞ்சிப் பேசவில்லை. யான் கூறிய நல்லனவும் தீயகாலம் நெருங்குதலால் உனக்குத் தீயனவாயின; யான் செய்யவேண்டியதைச் சொல்லுக என்ருன் என்க. புன்மை-சிறுமை. நிற்றல் - நிலைத்தல். நீர் - தன்மை. (203)

இராவணன் மாரீசனிடம் யான் சீதையை அடைய நீ உதவுக எனல்

3367. என்றலு மெழுந்து புல்லி
யேறிய வெகுளி நீங்கிக்
குன்றெனக் குவிந்த தோளாய்
மாரவேள் கொதிக்கு மம்பாற்
பொன்றலி னிராம னம்பாற்
பொன்றலே புகழுண்டன்ருே
தென்றலைப் பகைக்கச் செய்த
சீதையைத் தருதி யென்ருன்.

என்றலும் எழுந்து புல்லி,
ஏறிய வெகுளி நீங்கிக்
'குன்று எனக் குவிந்த தோளாய்!
மாரவேள் கொதிக்கும் அம்பால்
பொன்றலின், இராமன் அம்பால்
பொன்றலே புகழ் உண்டு அன்றோ;
தென்றலைப் பகைக்கச் செய்த
சீதையைத் தருதி' என்றான்.

பொ:—என்று மாரீசன் கூறுதலும், இராவணன் எழுந்து, அவனைத் தழுவிக்கொண்டு, ஓங்கிய சினம் நீங்கி, 'மலைபோலத் திரண்ட தோள்களையுடையோனே! மன்மதனுடைய சுடுகணையால் இறத்தலினும், இராமனம்பால் இறத்தலே புகழுடையதாகும் ஆதலால், யான் தென்றலைப் பகைக்கும்படி செய்த சீதையை எனக்குத் தருக' என்று கூறினான்.

கு:—தான் விரும்பிய செயலை மாரீசன் துணைகொண்டு முற்றுவிக்கும் கருத்தினனாதலின், அவனைப் புல்லி, 'தருதி' என ஒப்போன் கூற்றால் கூறினான் என்க. மாரவேள் - மன்மதன்; மாரனாகிய வேள்; இருபெயரொட்டு. பொன்றுதல் - இறத்தல். (204)

மாரீசன், வினவுதல்

3368. ஆண்டையா னனைய கூற
வரக்கரோ ரிருவ ரோடும்
பூண்டவென் மானந் தீரத்
தண்டகம் புக்க காலைத்
தூண்டிய சரங்கள் பாயத்
துணைவர்பட் டுருள வஞ்சி
மீண்டயான் சென்று செய்யும்
வினையென்கொல் விளம்பு கென்றான்.

ஆண்டையான் அனைய கூற,
'அரக்கர் ஓர் இருவரோடும்
பூண்ட என் மானம் தீரத்
தண்டகம் புக்க காலைத்

தூண்டிய சரங்கள் பாயத்
துணைவர் பட்டு உருள அஞ்சி,
மீண்ட யான், சென்று செய்யும்
வினை என் கொல்? விளம்புக' என்றான்.

பொ :—தலைவனான இராவணன், அவ்வார்த்தைகளைக் கூற, (மாரீசன்,) 'இராமனால் அடைந்த அவமானத்தைப் போக்கிக் கொள்ளும்படி (அவனை மாய்க்கக்கருதி) இரண்டரக்கரோடு தண்டக வனத்தை அடைந்த காலத்து இராமனேவிய அம்புகள் தைத்தலால், எனக்குத் துணையாக வந்த அரக்கர் இருவரும் மாண்டு உருள, அஞ்சிமீண்ட யான் அங்கே சென்று செய்யும் செயல் என்? விளம்புக' என்று கூறினான்.

கு :—ஆண்டையான் - தலைவன். அனைய என்றது முன்பாட்டில் இராவணன் கூறியவற்றை. மானம் - அவமானம்; இராமன், விசுவாமித்திரன் வேள்விகாக்க வருங்கால் தன் அன்னை தாடகையையும் வேள்வியில் தன் தம்பி சுபாகுவையும் கொன்றதனால் விளைந்தது. மானந்தீர்தலாவது, தன் தாயையும் தம்பியையும், இராமன் கொன்றமையால் தனக்கு உண்டான அவமானத்தை அவ்விராமனைத் தான் கொன்று போக்கிக்கொள்ளுதல். மாரீசன் விசுவாமித்திரன் வேள்வியை அழிக்கச் சித்தாச்சிரமத்துக்குச் சென்று, இராமனால் தம்பி சுபாகு மடியத் தான் ஒன்றும் செய்யலாற்றாது உயிர்கொண்டு மீண்டது முதல் நிகழ்ச்சி. இது பாலகாண்டத்து வேள்விப்படலத்துப் பேசப்பட்டது. தாயையும் தம்பியையும் கொன்ற இராமனைக் கொன்று தன் பழிதீர்த்துக் கொள்ள அரக்கர் இருவரோடு மானுருவங்கொண்டு தண்டகவனம் புக்கு இராமனை முட்டிக்கொல்ல முயன்று, இராமனால் தன்னுடன் வந்த அரக்கர் இருவரும் மாளத் தான் உயிர்கொண்டு மீண்டது இரண்டாவது நிகழ்ச்சி. இது வான்மீகத்துக் கூறப்படுகிறது. கம்பர் இதனைத் தனியே கூறவில்லை; எனினும் இங்கு மாரீசன் பேச்சால் பெறவைத்துள்ளார். இராவணன் வேண்ட மானுருவொடு செல்லுதல் மூன்றாவது நிகழ்ச்சி. 'அக்காலமும் வேள்வியில் அன்று தொடர்ந் தெக்காலும் நலிந்துமொரீறுபெறான், முக்காலின் முடிந்திடுவான் முயல்வான், புக்கானவ் விராகவன்வைகுபுனம்' (212) என்று பின் கூறுவது இங்கு நோக்கத் தகும். இவ்வாறு இதற்கு முன் யான் இராமனைக்கொன்று பழிதீர்த்துக்கொள்ள முயன்று என் உயிரோடு மீள்வதே பெரும்பாடாயிற்று. ஆதலால் இப்பொழுது அவ்விராமன்பால் யான் சென்று என் செய்யவல்லேன் என்று மாரீசன் கூறுவானாயினன். மாரீசன் கூறும் இது, 'அன்னை ய்யிர் செற்றவனை அஞ்சி யுறைகின்றாய்' (3363) என்னும் இராவணன் கூற்றுக்கு மறுமொழி கூறியதாகவும் அமைந்தமை காணலாம். (205)

இராவணன் சீதையை மாயையால் கவர்வோம் எனல்

3369. ஆயவ னனைய கூற
வரக்கர்கோ னைய நொய்துன்
றாயையா ருயிருண் டானை
யான்கொலச் சமைந்து நின்றேன்
போயையா புணர்ப்ப தென்னை
யென்பது பொருந்திற் றொன்றோ
மாயையால் வஞ்சித் தன்றோ
வெளவுத லவளை யென்றான்.

ஆயவன் அனைய கூற,
அரக்கர்கோன், 'ஐய! நொய்து உன்
தாயை ஆர் உயிர் உண்டானை
யான் கொலச் சமைந்து நின்றேன்;
"போய் ஐயா! புணர்ப்பது என்னை?"
என்பது பொருந்திற்று ஒன்றோ?
மாயையால் வஞ்சித்து அன்றோ
வெளவுதல் அவளை' என்றான்.

பொ:—மாரீசன் சொல்லலும், அரக்கர் வேந்தனை இராவணன், "ஐய! உன்தாயை அரிய உயிரை உண்ட இராமனை யான் விரைந்து கொல்ல அமைந்து நின்றேன்; ஐயா! போய்ச் செய்வது என்னை? என்பது பொருந்தியதொன்றன்று; மாயையினால் வஞ்சனை செய்தன்றோ அச்சீதையைக் கவர்வது என்று கூறினான்.

கு:—தாயைக் கொன்றானைக் கொன்று பழிதீர்த்துக் கொள்ளும் ஆற்றலற்ற யான் போய்ச் செய்வது என்னை? என்ற மாரீசனை நோக்கி, இராவணன், 'உன்தாயைக் கொன்றானை யான் விரைந்து கொல்வேன்; இராமனோடு போர்புரிந்து வென்று சீதையைக் கவர்வது நோக்கமன்று; மாயையால் வஞ்சித்து அவளைக்கவர்தலே கருதியது' என்றான் என்றவாறு. ஆயவன் - அவன்; என்றது மாரீசனை. நொய்து - விரைவு. ஐயா! போய்ப் புணர்ப்பது என்னை என இயைக்க. இது மாரீசன் கூற்றை இராவணன் கொண்டு கூறியது. (206)

### மாரீசன் சீதையை மறநெறியால் கவர்க எனல்

3370. புறத்தினி யுரைப்ப தென்னே
புரவலன் றேவி தன்னைத்
திறத்துழி யன்றி வஞ்சித்
தெய்துதல் சிறுமைத் தாகு
மறத்துள தொக்கு மன்றே
யமர்த்தலை வென்று கொண்டுன்
மறத்துறை வளர்த்தி மன்ன
வென்னமா ரீசன் சொன்னான்.

'புறத்து இனி உரைப்பது என்னே?
புரவலன் தேவி தன்னைத்
திறத்து உழி அன்றி வஞ்சித்து
எய்துதல் சிறுமைத்து ஆகும்;
அறத்து உளது ஒக்கும் அன்றே!
அமர்த்தலை வென்று கொண்டு, உன்
மறத்துறை வளர்த்தி மன்ன!'
என்ன மாரீசன் சொன்னான்.

பொ:—'அரசே! இனி அயலாக ஒன்று சொல்லுவது என்? இராமன் மனையாளான சீதையை நேரான வழியாலன்றி வஞ்சனை நெறியால் அடைதல் பழியுடைத்தாகும். போரில் இராமனை வென்று சீதையை அடைந்து உன் வீரத்துறை மேம்படச் செய்க; அவ்வாறு எய்துதல் அறத்தொடு பட்டதாகும்' என்று மாரீசன் கூறினான்.

கு:—புறம் - அயல். புரவலன் என்றது இராமனை. திறம் - நேர்மை. உழி - இடப்பொருளுணர நின்றது. சிறுமை - பழி. (207)

### இராவணன் சீதையை மாயையால் கவர்தலே தகும் எனல்

3371. ஆனவ னுரைக்க நக்க
வரக்கர்கோ னவரை வெல்லத்
தானையும் வேண்டு மோவென்
றடக்கைவா டக்க தன்றோ

வேனைய ரிறக்கிற் ருனுந்
தமியளா யிறக்கு மன்றே
மானவ ளாத லாலே
மாயையின் வலித்து மென்ருன்.

ஆனவன் உரைக்க, நக்க
அரக்கர்கோன், ‘அவரை வெல்லத்
தானையும் வேண்டுமோ? என்
தடக்கை வாள் தக்கது அன்ருே!
ஏனையர் இறக்கில், தானும்
தமியளாய், இறக்கும் அன்றே
மான் அவள்; ஆதலாலே
மாயையின் வலித்தும்’ என்ருன்.

பொ:—தன்வழிப்பட்டவனை மாரீசன் அவ்வாறு சொல்ல, (அது கேட்டு) நகை செய்த இராவணன், ‘அவ்விராமலக்குவரை யான் வெல்வதற்கு(த் துணையாக)ப் படையும் வேண்டுமோ? (வேண்டா) என்னுடைய பெரிய கையின்கண் உள்ள வாள் ஒன்றே தக்க தாகாதோ? என் வாளால் இராமலக்குவர் மாண்டொழியின், மான் போல்பவளாகிய சீதை துணையற்றவளாய்த் தானும் இறந்து படுவாள்; ஆதலால் மாயையால் வலிந்து கவர்வோம்’ என்ருன்.

கு:—ஆனவன் - இசைந்தவன்; மாரீசன். நகுதல் - (பரிகாச மாகச்) சிரித்தல். அவர், ஏனையர் என்றது இராமலக்குவரை. முன் பாட்டில், ‘வஞ்சியாது, போர் செய்து வென்று சீதையைக் கவர்தி’ என்று மாரீசன் கூறினுகலின், ‘அவரை வெல்லத் தானையும் வேண்டுமோ’ என்ருன். மான் அவள், ஏனையர் இறக்கின், தமிய ளாய்த் தானும் இறக்கும் ஆதலால் என இயைக்க. வலித்தல் - வலிந்து கவர்தல். (208)

மாரீசன் நினைதல்

3372. தேவியைத் தீண்டா முன்ன
மிவன்றலை சரத்திற் சிந்திப்
போம்வகை புணர்ப்ப னென்று
புந்தியாற் புகல்கின் றேற்கு

மாம்வகை யாயிற் றில்லை
யார்விதி விளைவை யோர்வா
ரேவிய செய்வ தல்லா
லில்லைவே றொன்றென் றெண்ணு.

" 'தேவியைத் தீண்டாமுன்னம், இவன் தலை சரத்தின் சிந்திப் போம் வகை புணர்ப்பன்' என்று புந்தியால் புகல்கின்றேற்கும், ஆம் வகை ஆயிற்றில்லை; ஆர் விதிவிளைவை ஓர்வார்? ஏவிய செய்வது அல்லால் இல்லை வேறு ஒன்று" என்று எண்ணு

பொ:—"சீதாபிராட்டியை இவன் தீண்டுமுன்னமே இவன் தலை சரத்தாற் சிதறிப் போம்படி செய்வேன்' என்று தந்திரமாகச் சொல்லுகின்ற எனக்கும் பொருந்தும் வழியால் முடிந்ததில்லை; எவரே ஊழின் விளைவை அறியவல்லார்? கட்டளையிட்டதனைச் செய்வதல்லது வேறு ஒன்று செய்யத்தக்கதில்லை" என்று நினைந்து.

கு:—எண்ணு என்றான் என வரும் பாடலின் முதலடியொடு முடியும். தேவி என்றது சீதையை. இவன் என்றது இராவணனை. புணர்த்தல் - செய்தல். 'தேவியைத்.........புணர்ப்பன்' என்றது மாரீசன் நினைவு. தேவியைத்.........ஆர் விதிவிளைவை ஓர்வார்? என்றது, இராமன் பேராற்றலை நன்குணர்ந்த மாரீசன், இராவணனால் தனக்கு நேரும் இடரினின்று தன்னைக் காத்துக்கொள்வதோடு, இராமன் வாளியால் இராவணனையும் மடிவிக்கும் கருத்துடன், மேற் பாட்டில், 'திறத்துழியன்றி வஞ்சித்தெய்துதல் சிறுமைத்தாகும்; அமர்த்தலை வென்றுகொண்டு உன் மறத்துறை வளர்த்தி; அறத் துளது ஒக்கும்' என்று கூறினனாக, இராவணன் அதற்கு இசையாமல், 'மாயையால் வலித்தும்' என்று உறுதியாய் உரைத்தமையால் மேல் விளைவு எண்ணி இரங்கியவாறு. ஓர்தல் - அறிதல். (209)

இராவணன் கூறியபடி செய்ய இசைந்து மாரீசன் போதல்

3373. என்னமா மாயம் யான்மற்
றியற்றுவ தியம்பு கென்றான்
பொன்னின்மா னாகிப் புக்கப்
பொன்னைமால் புணர்த்து கென்ன
வன்னது செய்வெ னென்னா
மாரீச னமைந்து போனான்
மின்னும்வே லரக்கர் கோனும்
வேறொரு நெறியிற் போனான்.

'என்ன மா மாயம் யான் மற்று
இயற்றுவது? இயம்புக' என்றான்;
'பொன்னின் மான் ஆகிப் புக்கு, அப்
பொன்னை மால் புணர்த்துக' என்ன,
'அன்னது செய்வென்' என்னா
மாரீசன் அமைந்து போனான்;
மின்னும் வேல் அரக்கர் கோனும்,
வேறு ஒரு நெறியில் போனான்.

பொ:—'யான் என்ன பெரிய மாயம் இயற்றுவது? சொல்லுக' என்று மாரீசன் கூறினானாக, இராவணன், 'பொன் மானாகிச் சென்று அந்தச் சீதையை மயக்குக' என்ன, மாரீசன், 'அது செய்வேன்' என்று இயைந்து சென்றான்; ஒளிர்கின்ற வேற்படையினையுடைய அரக்கர் வேந்தனாகிய இராவணனும் வேறொரு வழியாற் சென்றான்.

கு:—மற்று அசை. பொன்னின் மான் - பொன்மான்; இன் அல்வழிச்சாரியை. பொன் என்றது சீதையை. மால் புணர்த்தல் - மயக்குதல். அன்னது - அது. அமைதல் - இசைதல்; நெறி - வழி. மாரீசன் உறையுளினின்று தண்டகவனத்துள் இராம னுறையுள் வரை மாரீசனும் இராவணனும் ஒரு தேரில் உடன் சென்றனர் என்பது வான்மீகத்துக் கண்டது. (சருக். 42. சுலோ. 7-11).

45 என்னும் குறியீடுள்ள சுவடியில் பின்வருமாறு ஒரு மிகைச் செய்யுள் காணப்படுகிறது.

3373(a) மானினல் வடிவு கொண்டால் மன்னவ னிராமன் கொல்வான்
நானினி யேகே னென்றால் நீயெனைக் கொல்வாய் நாடில்
மானவன் வாளி பாய மறலியூர் புகுந்து மற்றுன்
சேனையோ டுனக்குந் தானந் தேடுவ னென்று சென்றான்.
(210)

கவிக் கூற்று

3374. மேனாளவர் வில்வலி கண்டமையாற்
☆ றானாக வமைந்து சமைந்திலனான்
மானாகுதி யென்றவன் வாள்வலியாற்
போனான்மன முஞ்செய லும்புகல்வாம்.

மேல் நாள் அவர் வில்வலி கண்டமையால்,
தானாக அமைந்து சமைந்திலன் ஆல்;

'மான் ஆகுதி' என்றவன் வாள் வலியால்
போனான் மனமும் செயலும் புகல்வாம்.

பொ :—மாரீசன், முன்பு அவ்விராமலக்குவரது விற்போராற்றலை அறிந்தமையால், தானே மாயைபுரிய இசைந்து ஆயத்தமாகவில்லை; 'மானா(கி மயக்)குதி' என்று கூறிய இராவணனுடைய வாளாற்ற(லை நினைந்து அஞ்சுத)லால் இசைந்து சென்றான்; அவனுடைய நினைவும் செய்கையும் சொல்லுவோம்.

கு :—மேனாள் என்றது, விசுவாமித்திரமுனிவன் வேள்வி நிகழ்ந்த காலத்தையும், மாரீசன் இராமனை முட்டிக் கொல்லும்படி மானுருவொடு தண்டகவனத்துப் புகுந்த காலத்தையும் குறித்தது. அவர் என்றது இராமலக்குவரை. சமைதல்-ஆயத்தமாதல். மாரீசன் இராவணன்கூற்றுக்கு இசைந்தது தன் விருப்பினாலன்று; இராவணன் வாள்வலிக்கு அஞ்சி என்றவாறு. (211)

## மாரீசன் மனநிலை

3375. வெஞ்சுற்ற நினைந்துகும் வீரரைவே
றஞ்சுற்று மறுக்குறு மாழ்குழிநீர்
நஞ்சுற்றுழி மீனி னடுக்குறுவா
னெஞ்சுற்ற தொர்பெற்றி நினைப்பரிதால்.

வெம் சுற்றம் நினைந்து உகும்; வீரரை வேறு
அஞ்சுற்று மறுக்குறும்; ஆழ் குழி நீர்
நஞ்சு உற்றுழி மீனின் நடுக்கு உறுவான்,
நெஞ்சு உற்றது ஓர் பெற்றி நினைப்பு அரிது ஆல்.

பொ:—விரும்பத்தக்க தன் உறவினரை எண்ணி மனம் அழிவான்; மேலும், வீரரான இராமலக்குவரை நினைந்து அஞ்சிக் கலங்குவான்; ஆழ்ந்த பள்ளத்திலுள்ள நீரின்கண் நஞ்சு கலந்த நிலையில் அந் நீரிலுள்ள மீன்போல நடுங்குபவனான அம் மாரீசனுடைய் மனம் அடைந்த தன்மை நினைக்கவும் அரிது.

கு :—வெம்மை - விருப்பம். இராமனம்பால் தான் முடிவது உறுதி என்று தெளிந்தானாதலின் இனி நம் சுற்றத்தாரைக் காணல் இயலாது என்று மாரீசன் மனமழிவானாயினன். வீரரை அஞ்சுதலாவது இராமலக்குவர் வாளியால் தனக்கு நேரும் ஊறு குறித்து அஞ்சுதலாம். மறுக்குறல் - கலங்குதல். பெற்றி - தன்மை. (212)

### மாரீசன் இராமனிருக்கும் வனத்தை அடைதல்

**3376.** அக்காலமும் வேள்வியி னன்றுதொடர்ந்
தெக்காலு நலிந்துமொ ரீறுபெருன்
முக்காலின் முடிந்திடு வான்முயல்வான்
புக்கானவ் விராகவன் வைகுபுனம்.

அக்காலமும் வேள்வியின் அன்று தொடர்ந்து
எக்காலும் நலிந்தும் ஓர் ஈறு பெருன்,
முக்காலின் முடிந்திடுவான் முயல்வான்
புக்கான் அவ் இராகவன் வைகு புனம்.

பொ :—விசுவாமித்திர முனிவன் வேள்வியில் அன்று பின் தொடர்ந்து, அக்காலத்தும் பின் எக்காலத்தும் (இராமனைத்) துன்புறுத்தியும் ஓழிவும் அடையாதவனுய் மூன்ரும் முறையில் முடிவையடையும்படி முயல்பவனுன மாரீசன், அவ்விராமன் தங்கிய தண்டகவனச் சூழலில் புகுந்தான்.

கு :—நலிதல் - துன்புறுத்தல். ஈறு - முடிவு; சாவு. புனம் - காடு; தண்டகவனம். (213)

### மாரீசன் மானுருவங்கொண்டு செல்லுதல்

**3377.** தன்மானமி லாதத யங்கொளிசான்
மின்மானமு மண்ணும் விளங்குவதோர்
பொன்மானுரு வங்கொடு போயினனு
னன்மானனை யாடனை நாடுறுவான்.

தன் மானம் இலாத தயங்கு ஒளி சால்
மின் மானமும் மண்ணும் விளங்குவது ஓர்
பொன்மான் உருவம் கொடு போயினன் ஆல்
நன் மான் அனையாள்தனை நாடுறுவான்.

பொ :—தன்னை ஒப்பதொன்றில்லாத, விளக்கம் மிக்க ஒளி நிறைந்த, மின்னலோடு கூடிய, வானினும் மண்ணினும் விளங்குகின்ற ஒரு பொன் மானுருவைக் கொண்டு, நல்ல மான் போல்பவளான சீதை தன்னைப் பார்க்கும்படி மாரீசன் சென்ருன்.

கு :—முன்னிரண்டடியால் பொன் மானின் உடல் விளக்கம் கூறப்பட்டது. மான் போன்றவள் கண்டு விரும்பும்படி மானுருவம்

கொண்டு சென்ருன் என்றவாறு. மானம் - சமானம்; ஒப்பு; முதற் குறை. தயங்குதல் - விளங்குதல். மானம் - விண்; ‘செம்மானத் தொளியன்ன மேனியான் காண்’ (6.24.1), ‘பொன்னே யொப்பாரித் தழலை வளாவிச் செம்மானஞ் செற்று’ (4.112.10) என்னும் தேவாரப் பாசுரங்களுள் மானம் என்பது விண் என்னும் பொருளிற் பயின்றமை காணலாம். (214)

## மாயமானைக் கலைமான் முதலியவை நெருங்குதல்

**3378.** கலைமான்முத லாயின கண்டவெலா
மலைமானுறு மாசையின் வந்தனவா
னிலைமாமன வஞ்சனை நேயமிலா
விலைமாதர்கண் யாரும் விழுந்தெனவே.

கலைமான் முதலாயின கண்ட எலாம்,
அலை மானுறும் ஆசையின் வந்தனவால்;
நிலை மா மன வஞ்சனை நேயம் இலா
விலைமாதர்கண் யாரும் விழுந்தெனவே.

பொ :—மாயமான பொன்மானைக் கண்ட கலைமான் முதலிய யாவும், கடல்போலும் (அளவிடலரிய) ஆசையால், நிலைத்த பெரிய மனவஞ்சனையும் அன்பின்மையும் மேவிய விலைமகளிர்பால் காமுகர் யாவரும் அடைந்தாற்போல வந்தடைந்தன.

கு :—உடலொளியுடைய மாயமானுக்கு மேனி மினுக்குள்ள விலைமகளிரும், மாயமானைக் கண்டு (அதன் வஞ்சம் அறியாது) தம் இனமென விரும்பியடையும் கலைமான் முதலியவற்றுக்குப் புறத்து நடிப்பே கொண்டு உள்ளன்பற்ற விலைமகளிர்பால் விரும்பியடையும் காமுகரும் உவமை. அலை-கடல்; ஆகுபெயர். மானுறுதல்-ஒத்தல். அலைமானுறும் ஆசை என்பதற்கு அலைபோல மேலும் மேலும் மோதி எழுகின்ற ஆசையென்று பொருள் கொள்ளலும் ஆம். மலை மானுறும் ஆசை என்று கொண்டு, மலை போன்ற (பெரிய) ஆசை என்று பொருள் கூறுவாரும் உண்டு. நிலை மா மன வஞ்சனை விலை மாதர், நேயமிலா விலைமாதர் என்க. விழுதல் என்ற வினைக்கேற்ப விலைமாதராகிய படுகுழியில் என்று உருவகவாய்பாடுபட விரித்துக் கொள்ளலும் அமையும். (215)

## மலர் கொய்து நின்ற சீதை மாயமானைக் கண்டு விரும்புதல் 3379-3381

**3379.** பொய்யாமென வோது புறஞ்சொலினு
னையாவிடை நோவ நடந்திடுவாள்
வைதேவிதன் வால்வளை முன்கையெனுங்
கொய்யாமல ரான்மலர் கொய்குறுவாள்.

பொய் ஆம் என ஓது புறஞ்சொலினுல்
நையா இடை நோவ நடந்திடுவாள்
வைதேவி தன் வால் வளை முன்கை எனும்
கொய்யா மலரால் மலர் கொய்குறுவாள்.

பொ :—சீதாபிராட்டி, இவட்கு இடை உண்டு என்பது பொய்யாகும் என்று அயலார் கூறும் கூற்ருல் தன் இடை வருந்தி, மேலும் துன்புறும்படி, நடந்தவளாய்த் தன்னுடைய வெள்ளிய வளையினை யணிந்த முன்கை என்னும் பறியாத தாமரை மலரால் பூக்கொய்கின்றவள்.

கு:—கொய்குறுவாள் கண்டனள் என அடுத்துவரும் பாடலோடு இயைந்து முடியும். புறஞ்சொல் - அயலார் கூறும் சொல். புறம் ஆகுபெயராய் அயலாரை உணர்த்தி நின்றது. புறஞ்சொலினுல் நையாத இடை வருந்த நடந்திடுவாளாய்' என்று பொருள் கொள்வாரும் உண்டு. வைதேவி - சீதை. கொய்தல் - பறித்தல். கொய்யா மலரால் மலர் கொய்குறுவாள் என்றது ஒருவகை நயம். (216)

**3380.** உண்டாகிய கேடுடை யார்துயில்வா
யெண்டானு மியைந்தியை யாவுருவங்
கண்டாரென லாம்வகை கண்டனளாற்
பண்டாரு முருவிடர் பாடுறுவாள்.

உண்டாகிய கேடு உடையார், துயில்வாய்
எண் தானும் இயைந்து இயையா உருவம்
கண்டார் எனல் ஆம் வகை கண்டனள் ஆல்;
பண்டு ஆரும் உரு இடர் பாடுறுவாள்.

பொ :—கேடு உண்டாகப்பெற்றவர், தாம் உறங்குங்கால் மனத்துப் பொருந்தியமையாத வுருவத்தைக் கண்டாற்போல, முன்பு

ஒருவரும் அடையாத துன்பம் அடுக்கப்பெற்றவளான சீதை, (அப் பொன்மானைக்) கண்டாள்.

கு :—உண்டாதல் - தோன்றுதல். தீங்கு நெருங்கும் நிலையுற்றோர், அத்தீங்கு நிகழப்போவதை முன்னே காட்டும் அறிகுறியாக, கனவில் தீய காட்சிகளைக் காண்டல்போல், பேரிடர் நெருங்கப் பெற்ற சீதாபிராட்டியும் அதற்கறிகுறியாக, மாய மானின் தோற்றத்தை நனவிலேயே கண்டாள் என்றவாறு. துயில் - உறக்கம். எண் - மனம். (217)

3381. காணுவிது கைதவ மென்றுணராள்
பேணுதந லங்கொடு பேணினளால்
வாணுளவ் விராவணன் மாளுதலால்
வீணுளி லறம்புவி மேவுதலால்.

காண இது கைதவம் என்று உணராள்,
பேணுத நலம் கொடு பேணினளால்;
வாணுள் அவ் இராவணன் மாளுதலால்
வீழ் நாளில் அறம் புவி மேவுதலால்.

பொ :—இராவணன் ஆயுள் முடிதலாலும், அவன் இறந்து வீழ்ந்த நாளில் அறம் நிலமிசைப் பரவி நிலைபெறவேண்டுமாதலாலும் சீதை, (பொய்ம்மானைக்) கண்டு இது வஞ்சனையாலாயது என்று அறியாளாய், விரும்பத்தகாத அம்மானின் அழகு (மட்டும்) கொண்டு அதனை விரும்பினுள்.

கு :—சீதை பொய்ம்மானிடத்துக் கொண்ட விருப்பமே அவள் சிறையிருப்புக்கும், இராவணன் அழிதற்கும், அறம் நிலைபெறற்கும் காரணமாயிற்று என்றவாறு. கைதவம் - வஞ்சனை. பேணுதல் - விரும்புதல். நலம் - அழகு. வாணுள் - வாழ்நாள்; ஆயுள். அவ் விராவணன் வாணுள் மாளுதலால் என இயைக்க. அவ்விராவணன் என்பதனை வீணுளில் என்பதனேடும் கூட்டிக்கொள்ளத்தகும். (218)

## சீதை இராமனை அடைதல்

3382. நெற்றிப்பிறை யாண்முன நின்றிடலு
முற்றிப்பொழி காதலின் முந்துறுவாள்
பற்றித்தரு கென்பெ னெனப்பதையா
வெற்றிச்சிலை வீரனை மேவினளால்.

நெற்றிப் பிறையாள், முனம் நின்றிடலும்,
முற்றிப் பொழி காதலின் முந்துறுவாள்,
பற்றித் தருக என்பென் எனப் பதையா
வெற்றிச் சிலை வீரனை மேவினள் ஆல்.

பொ :—பிறைமதிபோலும் நெற்றியினையுடைய சீதை, தன் முன்னே (மாயமான்) நின்ற அளவில், நிறைந்து பெருகிய ஆசை மிக்கவளாய், 'இதைப் பிடித்துத் தருக என்று வேண்டுவேன்' என்று விரைந்து வெற்றியையுடைய வில் வீரனான இராமனை அடைந்தாள்.

கு :—பிறை நெற்றியாள் என்க. (219)

### சீதை பொன் மானின் இயல்பை இராமனிடம் கூறல்

3383. ஆணிப்பொனி னாகிய தாய்கதிராற்
சேணிற்சுடர் கின்றது திண்செவிகான்
மாணிக்க மயத்தொரு மானுளதாற்
காணத்தகு மென்றனள் கைதொழுவாள்.

'ஆணிப் பொனின் ஆகியது, ஆய் கதிரால்
சேணில் சுடர்கின்றது, திண் செவி கால்
மாணிக்கமயத்து ஒரு மான் உளது ஆல்;
காணத்தகும்' என்றனள் கைதொழுவாள்.

பொ :—(அடைந்த சீதை) இராமனை வணங்குவாளாய், 'மாற்றுயர்ந்த பொன்னால் ஆகியதும், சிறந்த (உடல்) ஒளியால் நெடுந் தூரத்தும் விளங்குவதும், வலிய காதும் காலும் மாணிக்கமயமானது மான ஒரு மான் உளது; (அது) காணத்தகும்' என்று கூறினாள்.

கு :—கைதொழுவாளாய்க் காணத்தகும் என்றனள் என்க. (220)

### இராமன் பொன்மானைக் காண விரும்புதல்

3384. இம்மானி நிலத்தினி லில்லையெனா
வெம்மானி தெனச்சிறி தெண்ணல்செயான்
செம்மானவள் சொற்கொடு தேமலரோ
னம்மானு மருத்திய னாயினனால்.

இம்மான் இநிலத்தினில் இல்லை எனு,
எம்மான் இது? எனச் சிறிது எண்ணல் செயான்,
செம் மான் அவள் சொற்கொடு தேம் மலரோன்
அம்மானும் அருத்தியன் ஆயினன் ஆல்.

பொ:—தேன் பொருந்திய தாமரை மலரில் இருப்பவனுன பிரமனுக்கும் இறைவனுகிய திருமாலின் அமிசமாய்த் தோன்றிய இராமனும், 'இத்தன்மை வாய்ந்த மான் இவ்வுலகத்தில் இல்லை' என்றும், 'எத்தகைய மான் இது' என்றும், சிறிதும் எண்ணுனய், நல்ல மான் போன்றவளான சீதையின் சொல்லால் (அந்த மானின்பால்) பற்றுள்ளவனுனன்.

கு:—அம்மானும் என்பதனுள் உம்மை உயர்வு சிறப்புணர நின்றது. மலர் என்றது திருமாலின் உந்தித்தாமரையை. செம் மான்-நல்ல மான். மான் என்பது உவமையாகுபெயராய்ச் சீதையை உணர்த்தியது. மான் போன்ற மருண்ட நோக்குடையாளாதலின் மாயமானின் தன்மையறியும் ஆற்றல் இலளாயினள் என்றவாறு. அருத்தி - விருப்பம். (221)

## இலக்குவன் இராமனிடம் அது மாயமானென்றல் 3385-3386

3385. ஆண்டங்கிளை யோனுரை யாடினனுல்
வேண்டும்மென லாம்விளை வன்றிதெனுப்
பூண்டுஞ்சு பொலங்கொடி போயதுநாங்
காண்டும்மென வள்ளல் கருத்துணர்வான்.

ஆண்டு அங்கு இளையோன் உரையாடினன் ஆல்;
வேண்டும் எனல் ஆம் விளைவு அன்று இது எனுப்
'பூண் துஞ்சு பொலம் கொடி! போய், அது நாம்
காண்டும்' என, வள்ளல் கருத்து உணர்வான்.

பொ:—வள்ளலான இராமன், 'அணிகலன்கள் தங்கிய பொற்கொடி போன்றவளே! நாம் சென்று அந்த மானைக் காண்போம்' என்று கூற, அப்பொழுது இலக்குவன், 'இது விரும்பத்தக்க நிகழ்ச்சியன்று' என்று கருதி, அவ்விராமன் கருத்தை அறிய விரும்பியவனுய்ப் பேசுவானுயினன்.

கு:—வள்ளல், பொலங்கொடி! அது நாம் காண்டும் என, ஆண்டு இளையோன், இது வேண்டும் எனலாம் விளைவன்று எனு (வள்ளல்) கருத்துணர்வான் உரையாடினன் என இயைக்க

துஞ்சுதல் - தங்குதல்; 'புலிதுஞ்சுவியன்புலம்' (54) என்பது புறநானூறு. பொலம் - பொன். அது என்றது மாயமானை. 'இது வேண்டும் எனலாம் விளைவன்று' என்பது இலக்குவன் நினைவு. இது என்றது மாயமானைக் காணும் விழைவினை. விளைவு - நிகழ்ச்சி. 'விளைவுரையென்று விட்டார்' (1158 சுந்தர) என்பர் பின்னும். இலக்குவன் கூறியதனைப் பின்வரும் கவியில் காணலாம். (222)

3386. காயங்கன கம்மணி கால்செவிவால்
பாயும்முரு வோடிது பண்பெனலான்
மாயம்மென லன்றி மனக்கொளவே
யேயும்மிறை யையுற வென்றளவே.

காயம் கனகம்; மணி கால் செவி வால்;
பாயும் உருவோடு இது பண்பு எனலால்
மாயம் எனல் அன்றி மனக் கொளவே
ஏயும் இறை ஐயுறவு என்ற அளவே.

பொ:—உடல் பொன்மயமானது; காலும் காதும் வாலும் மணிமயமானவை; தாவும் உடலொடு நிறமும் இத்தன்மைத்து என்று சொல்லப்படுதலால், "இது பொய்ம்மான்" என்பதன்றி, இதனை நினைந்த அளவிலே சிறிது ஐயம் உண்டாகின்றது என்று இளையவன் கூறிய அளவில்.

கு:—'காயம் கனகம்.........இது பண்பு' என்றது, 'ஆணிப் பொனிழுகியது,.........மாணிக்க மயத்தொருமான் உளது' (3383) என்று சீதாபிராட்டி கூறியதனை அநுவதித்தவாறு. காயம் - உடல். கனகம் - பொன். செவி - காது. காலும் செவியும் வாலும் மணி என்க. பாய்தல் - தாவுதல். பாயும் உருவோடு பண்பு இது என இயையும். இரண்டாமடியால் முதலடியிற் கூறியதனையே வலியுறுத்தியவாறு. உரு - வடிவு. பண்பு - நிறம். இறை - சிறிது. இறை ஐயுறவு ஏயும் என்க. (223)

## இலக்குவன் கூறியதுகேட்டு, இராமன் இயம்பல் 3387-3389

3387. நில்லாவுல கின்னிலே நேர்மையினுல்
வல்லாரு முணர்ந்திலர் மன்னுயிர்தாம்
பல்லாயிர கோடி பரந்துளவா
லில்லாதன வில்லை யிளங்குமரா.

நில்லா உலகின் நிலை நேர்மையினால்
வல்லாரும் உணர்ந்திலர்; மன் உயிர்தாம்
பல் ஆயிர கோடி பரந்து உள ஆல்;
இல்லாதன இல்லை இளங்குமரா!

பொ :—இலக்குவ! நிலையாதவுலகின் நிலைமையை நூல்களைக் கற்று அறிவாற்றலுடையராயினாரும் முறையாக அறிந்திலர்; நிலை பெற்ற வுயிர்கள் பல ஆயிரகோடி என்னும் அளவுடையவாக மிக்குள்ளன; ஆதலால் (இம்மான் போன்றவை) இல்லாதன அல்ல.

கு :—உலகின் நிலை வல்லாரும் நேர்மையினால் உணர்ந்திலர் என இயைக்க. மன்னுயிர்கள் பல்லாயிர கோடியளவாக உள்ளன; அவற்றுள் இந்தமான்போல் அதிசயத்தை விளைக்கும் உயிர்களும் உண்டு என்பது 3, 4-ஆம் அடிக்கருத்து. இது பின்வரும் பாடலாலும் விளங்கும். (224)

3388. என்னென்று நினைந்த திழைத்துள நங்
கன்னங்களின் வேறுள காணுதுமாற்
பொன்னின்னொளி மேனிபொ ருந்தியவே
ழன்னங்கள் பிறந்த தறிந்திலையோ.

என் என்று நினைந்தது? இழைத்து உளம், நம்
கன்னங்களின் வேறு உள காணுதும் ஆல்;
பொன்னின் ஒளி மேனி பொருந்திய ஏழ்
அன்னங்கள் பிறந்தது அறிந்திலையோ!

பொ:—உன் உள்ளம் ஆராய்ந்து இதை யாதென்று எண்ணியது? நம் காதுகளால் இயற்கையொடு வேறுபட்ட பலஉயிர்கள் இருத்தலைக் கேட்டு அறிகிறோம்; பொன்போலும் ஒளிபொருந்திய உருவுடைய ஏழு அன்னப்புட்கள் தோன்றியதனை நீ அறியாயோ?

கு :—இழைத்தல் - ஆராய்தல். உன் உ(ள்)ளம் இழைத்து என் என்று நினைந்தது? என்க. கன்னம் - காது. கன்னங்களிற் காணுதும் என்பது ஒரு புலனுணர்ச்சியை மற்றொரு புலன்மேலேற்றிக் கூறியதாகும்; 'நாற்றங்கேட்டலும்' (405) என்றார் முன்னும்.

ஏழு அன்னங்களின் வரலாறு :—முன் ஒரு காலத்தில் பரத்துவாச முனிவனுடைய மைந்தர் எழுவர் மானச மடுவின் கரையில் தங்கி யோகம் முயலுகையில் ஒழுக்கக் குறைவினால் யோகம் முற்றுப் பெறாமல் இறந்தனர். அவர்கள், அடுத்த பிறப்பில் குருக்ஷேத்திரத்தில்

கௌசிக முனிவன் மக்களாய்த் தந்தை இறந்தபின் கார்க்க முனிவன் பால் மாணுக்கராய்க் கலைபயிலுகையில் ஒருநாள் கடும்பசியால் வருந்தி அம்முனிவனுடைய ஓமத்துக்கு நெய் முதலிய வுதவும் பசுவைக் கொன்று அதனையுண்டு பசிதணிக்கக் கருதினர். அப்போது அவருள் ஒருவன் கூறியபடி அப்பசுவின் இறைச்சியைக் கொண்டு தம் பிதிரர்க்குச் சிராத்தம் முடித்து, எஞ்சிய இறைச்சியை உண்டனர். அவருடைய தீவினைப்பயனுகச் சில இழிபிறப்பும் நல்வினைப்பயனுகச் சில உயர் பிறப்பும் அவர்களுக்கு உண்டாயின. முடிவில் அவர்கள் மானசமடுவில் ஏழு அன்னங்களாகியும் அதன்பின் காம்பிலிய தேசத்தில் ஏழு சிறந்த மனிதராகியும் யோகம் முற்றுப் பெற்று வீடுபேறெய்தினர் என்பதாம். (225)

### இராமலக்குவர் உரையாடலால் சீதை வருந்தல்

3389. முறையும்முடி வும்மில மொய்யுயிரென்
றிறைவன்னிளை யானொ டியம்பினனாற்
பறையுந்துணை யன்னது பன்னெறிபோய்
மறையும்மென வேழை வருந்தினளால்.

'முறையும் முடிவும் இல மொய் உயிர்' என்று
இறைவன் இளையானொடு இயம்பினன் ஆல்;
'பறையும் துணை, அன்னது பல் நெறி போய்
மறையும்' என, ஏழை வருந்தினள் ஆல்.

பொ :—தலைவனுன இராமன், 'நிறைந்த உயிர்கள், (வரையறைப்பட்ட) தன்மையும் எல்லையும் உடையவல்ல' என்று இலக்குவனொடு கூறினன்; அவ்வாறு கூறுமளவில், சீதை, 'அந்த மான், பல வழிகளிற் சென்று மறைந்திடும்' என்று வருந்தினுள்.

கு :—முறை - தன்மை; 'முத்தீப் பேணும் முறையெனக் கில்லென' (மணிமேகலை. 22.48) என்பதனுள் முறை தன்மை என்னும் பொருளிற் பயின்றமை காணலாம். முடிவு - எல்லை. மொய் உயிர், முறையும் முடிவும் இல என இயைக்க. மொய்த்தல் - மிகுதல். இறைவன் - தலைவன்; இராமன். பறைதல் - சொல்லுதல். பறையும்துணை என்பதற்கு 'நீங்கள் பேசுமளவில்' என்று சீதாபிராட்டி கூற்ருக்கலும் அமையும். அன்னது - அப்பொன்மான். நெறி - வழி. ஏழை என்றது சீதையை. பின்வரும் ஏதம் அறியாது மாயமானை விழைந்தமையின் ஏழை என்றார். (226)

இராமன் சீதையொடு சென்று மானைக் காணுதல்

3390. அனையவள் கருத்தை யுன்னா
★ வஞ்சனக் குன்ற மன்னான்
புனையிழை காட்ட தென்று
போயினான் பொருத சிந்தைக்
கனைகழற் றம்பி பின்பு
சென்றனன் கடக்க வொண்ணா
வினையென வந்து நின்ற
மானெதிர் விழித்த தன்றே.

அனையவள் கருத்தை உன்னா,
அஞ்சனக் குன்றம் அன்னான்,
'புனை இழை காட்டு அது' என்று
போயினான்; பொருத சிந்தைக்
கனை கழல் தம்பி பின்பு
சென்றனன்; கடக்க ஒண்ணா
வினை என வந்து நின்ற
மான், எதிர் விழித்தது அன்று ஏ.

பொ :—அஞ்சனமலைபோலும் இராமன், அச்சீதையின் கருத்தை நினைந்து, 'அழகிய அணிகலன்களையுடையாய்! அந்த மானைக் காட்டுதி' என்று சென்றான்; (அதுகண்டு) ஆற்றாத மனத்தினையும் விளக்கம் மிக்க கழலையும் உடைய இலக்குவன், அவர் பின்னே சென்றான்; கடக்கலாகாத வினைபோல வந்து நின்ற மான், அவர் எதிர் நோக்கிற்று.

கு :—இராமன் சிறிதும் ஆராயாது மானைக் காணச் சென்றமையால் இலக்குவன் பொறாத சிந்தையனாயினன். மாயமானால் விளையும் இடர் தவறாது என்பது குறிக்க அம் மானுக்கு வினை உவமை கூறப் பட்டது. (227)

இராமன் மானைக் கொண்டாடுதலும் அதற்குக் காரணமும்

3391. நோக்கிய மானை நோக்கி
நுதியுடை மதியி னான்றுந்
தூக்கில னன்றி தென்றா
னதன்பொருள் சொல்ல லாகுஞ்

சேக்கையி னரவு நீங்கிப்
பிறந்தது தேவர் செய்த
பாக்கிய முடைமை யன்றோ
வன்னது பழுது போமோ.

நோக்கிய மானை நோக்கி,
நுதி உடை மதியின் ஒன்றும்
தூக்கிலன், 'நன்று இது' என்றான்;
அதன் பொருள் சொல்லலாகும்;
சேக்கையின் அரவு நீங்கிப்
பிறந்தது, தேவர் செய்த
பாக்கியம் உடைமை அன்றோ!
அன்னது பழுதுபோமோ?

பொ :—இராமன் தன்னை நோக்கிய மானைப் பார்த்துத் தன் கூர்த்த மதியினால் சிறிதும் ஆராயாமல், 'இது நன்றாயிருக்கிறது' என்று கூறினான்; அவ்வாறு கூறியதன் பொருள் சொல்லத்தக்க தாகும். (திருமால் பாற்கடலில்) பாம்புப் படுக்கையினின்று நீங்கி (இராமனாக)த் தோன்றியது, தேவர்கள் செய்த நல்வினையுடைமையா லன்றோ! அது பழுதாகுமோ?

கு :—நுதி - கூர்மை. தூக்குதல் - ஆராய்தல். அரவுச்சேக்கை யின் நீங்கி என்க. அரவுச் சேக்கை - (ஆதிசேடனாகிய) பாம்புப் படுக்கை. பாக்கியம் - நல்வினை. அது என்றது நல்வினையை. பழுது போதல் - பிழைபடல். (228)

## இராமன் இலக்குவனிடம் மானின் இயல்பு பேசுதல் 3392-3393

3392. என்னைக்கு மென்ன லாகு
மிளையவ விதனை நோக்காய்
தன்னைக்கு மென்ப தல்லாற்
றனையொக்கு முவமை யுண்டோ
பன்னக்க தரள மொக்கும்
பசும்புன்மேற் படரு மென்னு
மின்னைக்குஞ் செம்பொன் மேனி
வெள்ளியின் விளங்கும் புள்ளி.

என் ஒக்கும் என்னல் ஆகும் இளையவ! இதனை நோக்காய்!
தன் ஒக்கும் என்பது அல்லால் தனை ஒக்கும் உவமை உண்டோ?
பல் நக்க தரளம் ஒக்கும்; பசும்புல் மேல் படரும் மெல் நா
மின் ஒக்கும்; செம்பொன் மேனி வெள்ளியின் விளங்கும் புள்ளி.

பொ :—இளையவனே! இந்த மானைப் பார்! இதற்கு எது ஒப்பாகு மென்று சொல்லலாம்; தன்னைத்தானே ஒக்கும் என்பதன்றித் தன்னொடு பொருந்தும் உவமை இல்லை; இதன்பல் விளங்குகின்ற முத்தினையொக்கும்; பசிய புல்லின்மேல் வளைந்து செல்லும் மெல்லிய நாக்கு மின்னலை ஒக்கும்; செய்ய பொன்போலும் அதன் மேனியின் கண் உள்ள புள்ளிகள் வெள்ளிபோல் விளங்கும்.

கு :—என் - யாது. நகுதல் - விளங்குதல். தரளம் - முத்து. படர்தல்-செல்லுதல். முன்னிரண்டடிகள் ஒப்பற்ற மானின் சிறப்பை விரிப்பன; பின் இரண்டடிகள் அம்மானின் உறுப்புக்களைத் தனித் தனி உவமை காட்டி விளக்குவன; ஆதலின், முரணுமை காணலாம். (229)

3393. வரிசிலை மறைவ லோனே
மானிதன் வடிவை யுற்ற
வரிவையர் மைந்தர் யாரே
யாதரங் கூர்கி லாதா
ருருகிய மனத்த வாகி
யூர்வன பறப்ப யாவும்
விரிசுடர் விளக்கங் கண்ட
விட்டிலின் வீழ்வ காணாய்.

வரி சிலை மறை வலோனே! மான் இதன் வடிவை உற்ற
அரிவையர் மைந்தர் யாரே ஆதரம் கூர்கிலாதார்?
உருகிய மனத்த ஆகி, ஊர்வன பறப்ப யாவும்
விரி சுடர் விளக்கம் கண்ட விட்டிலின் வீழ்வ காணாய்.

பொ :—கட்டமைந்த வில்லின் வேதம் வல்லோனே! இந்த மானின் அழகைக் கண்ட மகளிரும் மைந்தருமாகியவருள் எவர்தாம் இதனிடம் ஆசை கொள்ளாதார்? ஊர்வனவும் பறப்பனவுமாகிய உயிர்களெல்லாம் மனம் உருகியவையாய், ஒளிவிடுகின்ற விளக்கைக் கண்ட விட்டில்போல இதனிடம் வந்து மொய்த்தலைப் பார்.

கு :—வரி - கட்டு. சிலை மறை - வில்வேதம். வடிவு - அழகு. அரிவையர் - மகளிர். ஆதரம் - ஆசை. கூர்தல் - மிகுதல். எழு வகைப் பிறப்புள், மாயமான் என்பது தெரிந்த தேவரும், கட்புலனில் லாத தாவரமும் அருகில் இல்லாத நீர்வாழுயிர்களும் ஒழிய, மக்களும் பறவைகளும் ஊர்வனவும் மாயமானைக் கண்டு, அதன் அழகில் ஈடு பட்டு மகிழ்ந்தமை இதனுற் பேசப்பட்டது. விலங்குகள் கண்டு மகிழ்ந்தமை, 'கலைமான் முதலாயின கண்டவெலாம் அலைமானுறு மாசையின் வந்தனவால்' (3378) என்று முன்னே கூறப்பட்டது. (230)

## இலக்குவன், இராமன்பால், மானை விரும்பாது மீள்வதே நலம் எனல்;

3394. ஆரிய னனைய கூற
வன்னது தன்னை நோக்கிச்
சீரிய தன்றி தென்று
சிந்தையிற் றெளிந்த தம்பி
காரிய மென்னை யீண்டுக்
கண்டது கனக மானேல்
வேரியந் தெரியல் வீர
மீள்வதே மேன்மை யென்றான்.

ஆரியன் அனைய கூற, அன்னது தன்னை நோக்கிச்
'சீரியது அன்று இது' என்று, சிந்தையில் தெளிந்த தம்பி,
'காரியம் என்னை? ஈண்டுக் கண்டது கனகமானேல்,
வேரி அம் தெரியல் வீர! மீள்வதே மேன்மை' என்றான்.

பொ :—இராமன் அவ்வாறு சொல்ல, அந்த மானை நோக்கி, "இது நல்லதன்று' என்று மனத்துள் உணர்ந்த இலக்குவன், (இரா மனை நோக்கி) 'நறுமணம் வாய்ந்த அழகிய மாலையணிந்த வீர! இங்கே காணப்பட்டது பொன்மானாயின், நமக்கு (இங்கே) காரிய மில்லை; பன்னசாலைக்கு மீளுவதே நன்மை' என்றான்.

கு :—ஆரியன் - உயர்ந்தோன்; இராமன். 'ஈண்டுக் கண்டது கனகமானேல் இது வஞ்சனை மானாகும்; ஆதலால் இங்கே காரியம் இல்லை; மீள்வதே நலம்' என்று இலக்குவன் கூறினான் என்றவாறு. வேரி - நறுமணம். தெரியல் - மாலை. (231)

### சீதை மானைப் பிடித்துத் தரும்படி இராமனை வேண்டுதல்

3395. அற்றவன் பகரா முன்ன
மழகனை யழகி யாளுங்
கொற்றவன் மைந்த மற்றிக்
குழைவுடை யுழையை வல்லை
பற்றினை தருதி யாயிற்
பதியிடை யவதி யெய்தப்
பெற்றுழி யினிதுண் டாடப்
பெறற்கருந் தகைமைத் தென்றாள்.

அற்று அவன் பகராமுன்னம்,
அழகனை அழகியாளும்,
'கொற்றவன் மைந்த; மற்றிக்
குழைவு உடை உழையை, வல்லை
பற்றினை தருதி ஆயின்,
பதியிடை அவதி எய்தப்
பெற்றுழி இனிது உண்டாடப்
பெறற்கு அருந்தகைமைத்து' என்றாள்.

பொ :—அத்தகைய சொல்லை இலக்குவன் சொல்லுமுன்னே, சீதையும், இராமனை (நோக்கி), 'அரசகுமாரா! குழைவுடைய இந்த மானை விரைந்து பிடித்துக் கொடுப்பாயாயின், நாம் வனவாச காலம் முடிவுற்றபோது அயோத்தியில் மகிழ்ந்து விளையாடுதற்குப் பெறற்கரிய தன்மையுடையதாகும்' என்றாள்.

கு :—அவன் என்றது இலக்குவனை. வல்லை - விரைவு. பற்றுதல்- பிடித்தல். பதி என்றது அயோத்தியை. அவதி - எல்லை. உண்டாடல் - விளையாடுதல். (232)

### இலக்குவன் இது மாயமான் எனல்

3396. ஐயநுண் மருங்கு னங்கை
யஃதுரை செய்ய வையன்
செய்வெனென் றமைய நோக்கித்
தெளிவுடைச் செம்மல் செப்பும்

வெய்யவல் லரக்கர் வஞ்சம்
விரும்பினர் வினையிற் செய்த
கைதவ மானென் றண்ணல்
காணுதி கடையி னென்றான்

ஐய, நுண் மருங்குல் நங்கை
அஃது உரைசெய்ய, ஐயன்
'செய்வென்' என்று அமைய, நோக்கித்
தெளிவு உடைச் செம்மல் செப்பும்;
வெய்ய வல் அரக்கர் வஞ்சம்
விரும்பினர் வினையின் செய்த
கைதவ மான் என்று அண்ணல்!
காணுதி கடையின்' என்றான்.

பொ :—அழகிய நுண்ணிய இடையினையுடைய சீதை அதனைச் சொல்ல, இராமன், 'அவ்வாறு செய்வேன்' என்று இசைய, அது கண்டு, 'இது மாயமான்' என்னும் தெளிவினையுடைய இலக்குவன் சொல்வானாயினன்; 'அண்ணலே! கொடுமையும் வன்மையும் வாய்ந்த அரக்கர், நம்மை வஞ்சிக்க விரும்பியவராய்த் தந்திரமாகச் செய்த மாயமான் இது என்பதை முடிவிற் காண்பாய்' என்றான்.

கு :—ஐய நுண் மருங்குல் என்பதற்கு 'உண்டோ இல்லையோ என்று ஐயத்தை உண்டாக்குகின்ற நுண்ணிய இடை என்று பொருளுரைத்தலும் அமையும். ஐயன் என்றது இராமனை. அமைதல் - இசைதல். தெளிவு - மாயமான் என்னும் உறுதி. வினை - தந்திரம். கைதவம் - வஞ்சனை ; மாயம். கடை - முடிவு. (233)

இராமன் மானைப் பிடித்தல் தவறாகாது என்னுதல்

3397. மாயமேன் மடியு மன்றே
வாளியின் மடிந்த போது
காய்சினத் தவரைக் கொன்று
கடன்கழித் தோமு மாதுந்
தூயதேற் பற்றிக் கோடுஞ்
சொல்லிய விரண்டி னொன்று
தீயதே யுரைத்தி யென்றான்
றேவரை யிடுக்கண் டீர்ப்பான்.

'மாயமேல் மடியும் அன்றே வாளியின்; மடிந்த போது,
காய் சினத்தவரைக் கொன்று கடன் கழித்தோமும் ஆதும்;
தூயதேல் பற்றிக் கோடும்; சொல்லிய இரண்டின் ஒன்று
தீயதே? உரைத்தி' என்ருன் தேவரை இடுக்கண் தீர்ப்பான்.

பொ :—தேவரைத் துன்பந்தீர்ப்பவனை இராமன், (இலக்குவனை நோக்கி) 'இது மாயமானுயின் என் கணையினுல் இறந்தொழியும்; அவ்வாறு மடிந்தபொழுது, கொடிய வெகுளியுடைய அரக்கரைக் கொன்று நம் கடமையை நிறைவேற்றியவரும் ஆவோம்; நன் மானுயின், பிடித்துக் கொள்வோம்; கூறிய இரண்டில் ஒன்று குற்ற மாகுமோ? சொல்லுக' என்ருன்.

கு :—கடன் இங்கே தண்டகாரணிய முனிவரர்க்கு, 'ஆர் அறத்தினெ டன்றி நின்ருர் அவர் வேர் அறுப்பென் வெருவன்மின்' (2743) என்று அபயமளித்ததனைக் குறித்தது. இரண்டு என்றது மானைப் பற்றிக் கொள்ளுதலும் கொல்லுதலும் ஆகிய இரண்டினையும். (234)

### ஆராயாது வேட்டையாடுதல் தகாது என்று இலக்குவன் கூறுதல்

3398. பின்னின்ரு ரெனைய ரென்று
முணர்கிலம் பிடித்த மாய
மென்னென்றுந் தெளித றேற்ரும்
யாவதீ தென்று மோராம்
முன்னின்ற முறையி னின்ருர்
முனிந்துள வேட்ட முற்றல்
பொன்னின்ற வயிரத் தோளாய்
புகழுடைத் தரமன் றென்ருன்.

'பின் நின்ருர் எனையர் என்றும்
உணர்கிலம்; பிடித்த மாயம்
என் என்றும் தெளிதல் தேற்ரும்;
யாவது ஈது என்றும் ஓராம்;
முன் நின்ற முறையின் நின்ருர்
முனிந்துள வேட்டம் முற்றல்,
பொன் நின்ற வயிரத் தோளாய்!
புகழுடைத் தரம் அன்று' என்ருன்.

பொ :—(இலக்குவன், இராமன் கூறியது கேட்டு, அவனை நோக்கி), 'வீரத்திரு நிலைத்த வலிய தோளினையுடையாய்! (இந்த மானை முன்னே செல்லவிட்டு) இதன்பின் நின்றவர் எத்தன்மையர் என்றும் அறிந்தோமில்லை; அவர்கள்மேற் கொண்ட வஞ்சச்செயல் யாது என்றும் தெளிந்தோமில்லை; இந்த மானாகி வந்தது எது என்றும் அறியோம்; இந்நிலையில் நம் வமிச முதல்வர்களான நீதி நெறி நின்றோர் வெறுத்து விலக்கிய வேட்டையாடும் தொழிலை நிறைவேற்றுதல் புகழுடைய தக்க செயலாகாது' என்றான்.

கு :—எனையர் என்பதற்கு எவ்வளவினர் என்று பொருள் கொள்ளலும் ஆம். ஓர்தல் - அறிதல். பொன் - இலக்குமி; வீரத்திரு. நிற்றல் - நிலைத்தல். வயிரம் - வன்மை. வேட்டம் முற்றல் புகழுடையதன்று என்றது, தசரதச் சக்கரவர்த்தி வேட்டையாடச் சென்று சாபமுற்றதனையும் உட்கொண்டு நின்றது. கொடிய விலங்குகளால் மக்களுக்குத் துன்பம் நேராதவாறு அவ்விலங்குகளை வேட்டையாடி அகற்றுதல் அரசர் கடமையாயினும், மான்போன்ற சாதுவான விலங்குகளை வேட்டையாடுதல் குற்றம் என்று விலக்கப்பட்டதென்பர். மானாக வந்த இது இன்னது என்றும் அறியப்படாமையால் இதன்மேற் செல்லலும் நன்றன்று என்றவாறு. (235)

## இலக்குவன் கூறியதனை இராமன் மறுத்துரைத்தல்

3399. பகையுடை யரக்க ரென்றும்
பலரென்றும் பயிலு மாயம்
மிகையுடைத் தென்றும் பூண்ட
விரதத்தை விடுது மென்றா
னகையுடைத் தாகு மன்றே
யாதலி னன்றி தென்னாத்
தகையுடைத் தம்பிக் கந்நாட்
சதுமுகன் றாதை சொன்னான்.

பகை உடை அரக்கர் என்றும், பலர் என்றும், பயிலும் மாயம் மிகை உடைத்து என்றும், பூண்ட விரதத்தை விடுதும் என்றால், நகை உடைத்து ஆகும் அன்றே; ஆதலின், நன்று இது என்னாத் தகை உடைத் தம்பிக்கு அந்நாள் சதுமுகன் தாதை சொன்னான்.

பொ :—பிரமனுக்குத் தந்தையான திருமாலின் அமிசமாய்த் தோன்றிய இராமன், நற்பண்புகள் வாய்ந்த தம்பியாகிய இலக்குவனுக்கு, அன்று, 'பகைமை பூண்ட அரக்கர் என்றும், அவரும் பலராயுள்ளனர் என்றும், அவர்கள் பழகிய மாயம் அளவின் மிக்கதென்றும்,

மேற்கொண்ட விரதத்தைக் கைவிடுவோமாயின், அது, பிறா இகழ்ந்து சிரிக்கத்தக்க தன்மையுடையதாகும். ஆதலால் இதனைத் தொடர்ந்து செல்லும் இது நன்று' என்றான்.

கு :—மிகை - மிகுதி. 'பகையுடையரக்கரென்றும் பலரென்றும் பயிலுமாயம் மிகையுடைத்தென்றும்' என்றது, 'வெய்யவல்லரக்கர் வஞ்சம் விரும்பினர் வினையிற் செய்த கைதவமான்' (3396) என்றும், 'பின்னின்றார் எனையர் என்றும் உணர்கிலம் பிடித்தமாயம் என்னென் றும் தெளிதல் தேற்றாம், யாவதீதென்றும் ஓராம்' (3396) என்றும் முன் இலக்குவன் கூறியதனை உட்கொண்டு கூறியதாகும். பூண்ட விரதம் என்றது தண்டகாரணிய முனிவர்க்கு அபயமளித்ததனை.(236)

### இலக்குவன் யானே பிடித்து வருவேன் எனல்

3400. அடுத்தவு மெண்ணிச் செய்த
லண்ணலே யமைதி யன்றோ
விடுத்திதன் பின்னின் றார்கள்
பலருள ரெனினும் வில்லாற்
றொடுத்தவெம் பகழி தூவித்
தொடர்ந்தனென் விரைந்து சென்று
படுக்குவெ னதுவன் றாயிற்
பற்றினென் கொணர்வெ னென்றான்.

'அடுத்தவும் எண்ணிச் செய்தல்,
அண்ணலே! அமைதி அன்றோ;
விடுத்து இதன் பின் நின்றார்கள்
பலர் உளர் எனினும், வில்லால்
தொடுத்த வெம் பகழி தூவித்
தொடர்ந்தனென், விரைந்து சென்று
படுக்குவென்; அது அன்று ஆயின்,
பற்றினென் கொணர்வென்' என்றான்.

பொ :—(இராமன் கூறியது கேட்ட இலக்குவன், இராமனை நோக்கி,) 'தலைவ! பொருந்திய செயல்களையும் நன்கு ஆராய்ந்து செய்தல் அமைவுடையதாகும்; இதனை முன்னே செல்லவிட்டுப் பின்னே நின்றவர் அளவற்றவராயிருந்தாலும், வில்லினால் தொடுக் கப்பட்ட கொடிய அம்புகளைப் பொழிந்துகொண்டு விரைந்து தொடர்ந்து சென்று, இதனைக் கொல்வேன்; அங்ஙனம் மாயமானாக இல்லையேல் இதைப் பிடித்துக் கொணர்வேன்' என்றான்.

கு :—அடுத்த - பொருந்தியவை, அமைதி - நிறைவு. படுத்தல் - சொல்லுதல். (237)

## சீதை, இராமன்பால் நீயே பற்றி நல்கலை போலும் என்று சினந்து செல்லுதல்

3401. ஆயிடை யன்ன மன்னு
ளமுதுகுத் தனைய செய்ய
வாயிடை மழலை யின்சொற்
கிளியினிற் குழறி மாழ்கி
நாயக நீயே பற்றி
நல்கலை போலு மென்னுச்
சேயரிக் குவளை முத்தஞ்
சிந்துபு சீறிப் போனுள்.

ஆயிடை, அன்னம் அன்னுள், அமுது உகுத்தனைய செய்ய
வாயிடை மழலை இன்சொல் கிளியினில் குழறி மாழ்கி,
'நாயக! நீயே பற்றி நல்கலை போலும்' என்னுச்
சேய் அரிக் குவளை முத்தம் சிந்துபு, சீறிப் போனுள்.

பொ :—அன்னம்போல்பவளான சீதாபிராட்டி, (இலக்குவன் அவ்வாறு கூறிய) அப்பொழுது, தன் சிவந்த வாயினின்றும் அமுதத்தைச் சிந்தினுற்போன்ற இனிய மழலைச் சொற்களைக் கிளிபோலக் குழறிப்பேசி வருந்தியவளாய், 'நாயக! நீயே இதனைப் பிடித்து எனக்குத் தரமாட்டாய்போலும்' என்று கூறிச் சிவந்த வரிகளையுடைய குவளை மலர்போலும் கண்களிலிருந்து முத்துப்போலும் நீர்த்துளிகளைச் சிந்திச் சினந்து சென்ருள்.

கு :—உகுத்தல் - சிந்துதல். குழறுதல் - சொல்லின் வடிவம் புலப்படாதவாறு பேசுதல். மாழ்குதல் - வருந்துதல். சிந்துபு - சிந்தி. (238)

## இராமன் மானைப் பிடிக்கச் செல்லுதல்

3402. போனவள் புலவி நோக்கிப்
புரவலன் பொலன்கொ டாராய்
மானிது நானே பற்றி
வல்லையின் வருவெ னன்றே

கானியன் மயிலன் ஞளைக்
காத்தனை யிருத்தி யென்ஞ
வேனகு சரமும் வில்லும்
வாங்கினன் விரையலுற்ருன்.

போனவள் புலவி நோக்கிப்
புரவலன், 'பொலன் கொள் தாராய்!
மான் இது நானே பற்றி
வல்லையின் வருவெனன்றே;
கான் இயல் மயில் அன்ஞளைக்
காத்தனை இருத்தி' என்ஞ,
வேல் நகு சரமும் வில்லும்
வாங்கினன் விரையல் உற்ருன்.

பொ :—சென்ற சீதையின் முனிவைக் கண்டு, இராமன், (இலக்குவனை நோக்கி,) 'அழகிய மாலையினையணிந்தவனே! இந்த மானை நானே பிடித்துக்கொண்டு விரைந்து வருவேன்; நீ வனத்தில் உலவும் மயில்போல்பவளான சீதையைக் காத்துக் கொண்டிரு' என்று கூறி, (கொலைத் தொழிலில் தன்னின் இழிந்ததென்று) வேலைப் பரிகசிக்கும் அம்பினையும் வில்லையும் கைக்கொண்டு விரைந்து செல்லலானுன்.

கு :—புலவி - சினம். புரவலன் - காத்தற்ருெழிலில் ஆற்றலுடையான்; இராமன். பொலன் - அழகு. வல்லை - விரைவு. அன்று, ஏஅசை. கான் - வனம். இயலுதல் - சஞ்சரித்தல்; உலவுதல். காத்தனை - காத்து; முற்றெச்சம். நகுதல் - பரிகசித்தல். வேல் நகுசரம் என்பதற்கு வேல்போன்ற அம்பு என்று பொருள் கொள்வாரும் உளர். (239)

இலக்குவன் இராமனிடம் இது 'மாரீசன் மாயம்' என்று கூறி, சீதை புக்க சாலையைக் காத்துநிற்றல்

3403. முன்னமு மகவாய் வந்த
மூவரி லொருவன் போஞ
னன்னமா ரீச னென்றே
யயிர்த்தனெ னிதனை யையா

வின்னமுங் காண்டி வாழி
யேகென விருகை கூப்பிப்
பொன்னனுள் புக்க சாலே
காத்தனன் புறத்து நின்ருன்.

'முன்னமும் மகவாய் வந்த மூவரில் ஒருவன் போனுன்;
அன்ன மாரீசன் என்றே அயிர்த்தனென் இதனை; ஐயா!
இன்னமும் காண்டி; வாழி; ஏகு' என இருகை கூப்பிப்
பொன் அனுள் புக்க சாலே காத்தனன் புறத்து நின்ருன்.

பொ:—'ஐயா! முன்பும் விசுவாமித்திர முனிவர் வேள்வியில் (அழிக்க) வந்த மூவருள் ஒருவன் தப்பிப் போயினுன்; அந்த மாரீசனே என்று இந்த மாயமானை ஐயுற்றேன்; மேலும், இதனை நோக்குதி; வாழி; செல்லுக' என்று வணங்கித் திருமகள்போல்பவ ளான சீதை புகுந்த பன்னசாலையைக் காவல் புரிந்துகொண்டு அச் சாலையின் புறத்தே நிற்பானுயினன்.

கு:—முன்னமும் என்பதனுள் உம்மையால் பின்பு தண்டக வனத்தில் வந்த மூவருள் ஒருவனுன மாரீசன் தப்பிப் போனமையும் கொள்ளத்தகும். மகம் - வேள்வி. மகவாய் - வேள்வியில். மூவர் தாடகை, சுபாகு, மாரீசன் என்போர். வேள்வி தொடங்கச் செல்லும் நெறியிடையே தாடகையும், வேள்வி நிகழுங்கால் சுபாகுவும், மாண் டொழிய, மாரீசன் உய்ந்து போயினமையின், மகவாய் வந்த மூவரில் ஒருவன் போனுன் என்ருன். வாழி என்றது இடையூறுருது கருதியது முற்றுக என்றவாறு. வாழி அசையுமாம். காத்தனன் முற்றெச்சம். (240)

## இராமன் பொன்மானைத் தொடரல்

3404. மந்திரத் திளையோன் சொன்ன
வாய்மொழி மனத்துக் கொள்ளான்
சந்திரற் குவமை சான்ற
வதனத்தாள் சலத்தை நோக்கிச்
சிந்துரப் பவளச் செவ்வாய்
முறுவலன் சிகரச் செவ்விச்
சுந்தரத் தோளி னுனம்
மானினைத் தொடர லுற்ருன்.

மந்திரத்து இளையோன் சொன்ன
வாய்மொழி மனத்துக் கொள்ளான்,
சந்திரற்கு உவமை சான்ற
வதனத்தாள் சலத்தை நோக்கிச்
சிந்துரப் பவளச் செவ்வாய்
முறுவலன், சிகரச் செவ்விச்
சுந்தரத் தோளினன் அம்
மானினைத் தொடர லுற்றான்.

பொ :—மலைபோலும் இயல்புவாய்ந்த அழகிய தோள்களை யுடைய இராமன், ஆலோசனையுள்ள இலக்குவன் சொன்ன உண்மையுரைகளைச் சிந்தை செய்யாமல், மதிக்கும் உவமையாகத் தக்க முகத்தையுடைய சீதையின் சினத்தினை நோக்கிச் சிவந்த பவழம்போலும் அழகிய வாயில் (வெளிப்படும்) புன்னகையுடைய வனாய் (அந்த) மானைத் தொடரலானான்.

கு :—மந்திரம் - ஆலோசனை. வாய்மொழி - மெய்யுரை. சந்திரற் குவமைசான்ற வதனத்தாள் என்றது, உலகமகளிர் முகத்துக்கு உவமையாகும் மதிக்கும் உவமையாகும் சிறப்புடையது சீதை முகம் என்றவாறு. சலம் - சினம். சிந்துரம் - சிந்தூரம்; சிவப்பு. முறுவல் - புன்சிரிப்பு. சிகரம் - மலை ; மலையுச்சியுமாம். செவ்வி - இயல்பு. சுந்தரம் - அழகு. இலக்குமணன் கூறிய மெய்யுரைகளை யும் எண்ணாமல், சீதையின் முனிவுகண்டு முறுவலித்தவனாய் மானைத்தொடர்ந்து சென்றான் என்றவாறு. (241)

### மானின் விரைவு

3405. மிதித்தது மெல்ல மெல்ல
வெறித்தது வெருவி மீதிற்
குதித்தது செவியை நீட்டிக்
குரபத முரத்தைக் கூட்டி
யுதித்தெழு மூதை யுள்ள
மென்றிவை யுருவச் செல்லுங்
கதிக்கொரு கல்வி வேறே
காட்டுவ தொத்த தன்றே.

மிதித்தது மெல்ல மெல்ல,
வெறித்தது, வெருவி மீதில்
குதித்தது, செவியை நீட்டிக்
குரபதம் உரத்தைக் கூட்டி,
உதித்து எழும் ஊதை உள்ளம்
என்று இவை உருவச் செல்லும்
கதிக்கு ஒரு கல்வி வேறே
காட்டுவது ஒத்தது அன்றே.

பொ :—(அந்த மான்) மெல்ல மெல்ல அடிவைத்து, அஞ்சி வெருண்டு, காதுகளை நீட்டி, குளம்புடைய கால்களை மார்பிலே பொருந்தக் கூட்டி, மேலே துள்ளிக் குதித்து. எழுந்து பரவும் காற்றும் மனமும் என்னும் இவை தடையின்றிச் செல்லும் வேகத்துக்கு மற்றொருபாடம் கற்பிப்பது போன்றது.

கு :—மெல்ல மெல்ல மிதித்தது, வெருவி வெறித்தது, செவியை நீட்டிக் குரபதம் உரத்தைக் கூட்டி மீதிற் குதித்தது என இயைக்க. மிதித்தது, வெறித்தது, குதித்தது என்பவை முற்றெச்சங்கள். மிதித்தல் - அடிவைத்தல், வெறித்தல் - வெருளல். வெருவுதல் - அஞ்சுதல். செவி - காது. குரம் - குளம்பு. பதம் - கால். உரம் - மார்பு. ஊதை - காற்று. கதி - வேகம். முன்னிரண்டடிகளால் மானின் இயல்பு கூறப்பட்டது. விரைவுடையவற்றுள் காற்றும் மனமும் முன் எண்ணப்படும்; அவ்விரண்டுக்கும் வேறு ஒரு விரைவு கற்பிப்பதாய் அமைந்தது என்று மாயமானின் விரைவு பின்னிரண்டடிகளால் விளக்கியவாறு. (242)

## இராமன் விரைவு

3406. நீட்டினு னுலக மூன்று
நின்றெடுத் தளந்த பாத
மீட்டுந்தா ணீட்டற் கம்மா
வேறுமோ ரண்ட முண்டோ
வோட்டினுன் றொடர்ந்த தன்னை
யொழிவற நிறைந்த தன்மை
காட்டினு னன்றி யன்றக்
கடுப்பையார் கணிக்கற் பாலார்.

நீட்டினன் உலகம் மூன்றும்
நின்று எடுத்து அளந்த பாதம்;
மீட்டும் தாள் நீட்டற்கு அம்மா!
வேறும் ஓர் அண்டம் உண்டோ?
ஓட்டினன், தொடர்ந்த தன்னை
ஒழிவு அற நிறைந்த தன்மை
காட்டினன் அன்றி, அன்று அக்
கடுப்பை யார் கணிக்கற் பாலார்.

பொ:—மூன்றுலகங்களையும் திரிவிக்கிரமனாய் நின்று தூக்கி அளந்த பாதங்களை (மானைத் தொடரக்கருதி) நீட்டினன்; மீட்டும் அடி நீட்டிவைத்தற்கு மற்றும் ஓர் அண்டம் இல்லை; அந்த மானை ஓட்டித் தொடர்ந்த தன்பால் உள்ள எங்கும் நீக்கமற நிறைந்து நிற்கின்ற தன்மையைப் புலப்படுத்தினன்; அவ்வாறு காட்டிய அவனை யன்றி, அன்று அந்த மானைத் தொடர்ந்து சென்றவிரைவை எவர் அளவிடவல்லார்? (ஒருவரும் இல்லை.)

கு:—இராமன் மாயமானைத் தொடர்ந்து சென்ற விரைவைக் கூறத் தொடங்கியவர், 'தொடர்ந்தவனே பார்க்குமிடமெங்கும் ஒரு நீக்கமற நிறைந்த பரம்பொருளின் அமிசமானவன்; அவனடிகளோ உலகமுழுதும் நீண்டு அளந்தவை; ஊன்றியதாள் உலகெலாம் நீண்டு நின்றது; எடுத்த அடி வைத்தற்கு வேறோர் அண்டம் இல்லை; தொடர்ந்தோன் தன் விரைவால் எங்கும் நிறைந்து நிற்கும் தன் தன்மை காட்டினன்; அவனையன்றி அவன் விரைவை அளவிடவல்லார் இல்லை' என்று வியந்தவாறு. அம்மா வியப்பிடைச்சொல். உண்டோ என்பதனுள் ஓகாரம் எதிர்மறை. கடுப்பு - விரைவு. கணித்தல் - அளவிடல். (243)

### மான் அணுகியும் விலகியும் செல்லுதல்

3407. குன்றிடை யிவரு மேகக்
குழுவிடைக் குதிக்குங் கூடச்
சென்றிடி னகலுந் தாழிற்
றீண்டலாந் தகைமைத் தாகு
நின்றதே போல நீங்கு
நிதிவழி நேய நீட்டு
மன்றலங் கோதை மாதர்
மனமெனப் போயிற் றம்மா.

குன்றிடை இவரும்; மேகக்
குழுவிடைக் குதிக்கும்; கூடச்
சென்றிடின் அகலும்; தாழின்
தீண்டல் ஆம் தகைமைத்து ஆகும்;
நின்றதே போல நீங்கும்;
நிதிவழி நேயம் நீட்டும்
மன்றல் அம் கோதை மாதர்
மனம் எனப் போயிற்று அம்மா!

பொ:—(அந்த மான்) மலையின்மேல் ஏறும்; மேகக்கூட்டத்தினிடையே குதிக்கும்; அணுகச்செல்லின் விலகும்; தொடராது தாழ்த்தால், தொடலாந்தன்மைத்தாய் அணுகும்; எதிர் நின்றது போலக் காட்டி மறையும்; (இவ்வாறு) தாம்பெறும் பொருளளவால் அன்பு செய்யும் மணமுடைய மாலையணிந்த விலைமகளிர் மனம்போல ஒருவழி நில்லாது சென்றது.

கு:—இவர்தல் - ஏறுதல். நிதி - பொருள். நேயம் - அன்பு. நீட்டுதல் - தருதல்; செய்தல். மன்றல் - நறுமணம். அம் சாரியை; அழகும் ஆம். கோதை - மாலை; கூந்தலும் ஆம். (244)

### இராமன் மாயமான் என்று தெளிதல்

3408. காயம்வே ருகிச் செய்யுங்
கருமம்வே ருயிற் றன்றே
யேயுமே யென்னின் முன்ன
மெண்ணமே யிளவற் குண்டே
யாயுமே லுறுதல் செல்லா
தரக்கரா னவர்கள் செய்த
மாயமே யாயதே நான்
வருந்திய தென்ருன் வள்ளல்.

'காயம் வேறு ஆகிச் செய்யும்
கருமம் வேறு ஆயிற்று அன்றே;
ஏயுமே என்னின் முன்னம்
எண்ணமே இளவற்கு உண்டே;
ஆயுமேல் உறுதல் செல்லாது;
அரக்க ரானவர்கள் செய்த
மாயமே ஆயதே, நான்
வருந்தியது' என்ருன்; வள்ளல்.

பொ :—‘இந்த மான், உடலின்றன்மை வேருய், செய்யும் செயலின்றன்மை வேருயிற்று; (ஆதலால்) எனக்கு முன்னே தம்பிக்கு உண்டாகிய எண்ணமே பொருந்துவது; என்மனம் ஆராயுமானுல் மேலும் இதனைத் தொடராது; நான் இதனைத் தொடர்ந்து வருந்தியது, அரக்கர் செய்த மாயத்தாலே ஆயிற்று’ என்று இராமன் கூறினன்.

கு :—மான் உருவத்தால் நல்லதாகவும், அவ்வுருவத்தொடு பொருந்தாத செயலால் தீயதாகவும் காணப்படுதலின், ‘காயம் வேருகிச் செய்யும் கருமம் வேருயிற்று’ என்ருன். அன்று, ஏ அசைகள். என்னின் முன்னம் இளவற்கு உண்டு எண்ணமே ஏயும் என இயைக்க. இளவல் - தம்பி. இளவற்குண்டாகிய எண்ணமாவது இது மாயமான் என்பது. மாயமானின் பின்சென்று, தேவியையும் பிரிந்து, இடர்மேற்கொண்டு, தேவர்துயர்துடைக்க முயன்ருஞதலின் இராமனை வள்ளல் என்ருர். எண்ணமே மாயமே என்பவற்றுள் ஏகாரம் தேற்றப்பொருள் குறித்தது. ஏயுமே என்பதில் ஏகாரம் அசைநிலை, ஆயதே என்பதில் ஏகாரம் இரக்கப் பொருள் குறித்தது. (245)

### இராமன் நினைவறிந்து மாரீசன் தப்பியோட முயலுதல்

3409. பற்று வானினி யல்லன் பகழியாற்
★ செற்று வானிற் செலுத்தலுற் ருனென
மற்ற மாய வரக்கன் மனக்கொளா
வுற்ற வேகத்தி னும்பரி னேங்கினன்.

‘பற்றுவான் இனி அல்லன்; பகழியால்
செற்று வானில் செலுத்தல் உற்ருன்’ என
மற்று அ மாய அரக்கன் மனக்கொளா
உற்ற வேகத்தின் உம்பரின் ஓங்கினன்.

பொ :—மாயமானுன அந்த மாரீசன், (‘இராமன்,) இனி நம்மைப் பிடிக்க முயலான்; அம்பினுற் கொன்று மேலுலகில் செலுத்தலை மேற்கொண்டான்’ என்று எண்ணி, மிக்க விரைவொடு வான்மிசை எழும்பினன்.

கு :—இனி, பற்றுவானல்லன் என்க. பற்றுதல் பிடித்தல்- செற்று - கொன்று. மற்று அசை. உம்பர் - வானம். (246)

## இராமன் அம்பு தொடுத்தல்

3410. அக்க ணத்தினி லையனும் வெய்யதன்
சக்க ரத்திற் றகைவரி தாயதோர்
செக்கர் மேனிப் பகழி செலுத்தினன்
புக்க தேயம்புக் கின்னுயிர் போக்கென.

அக் கணத்தினில் ஐயனும், வெய்ய தன்
சக்கரத்தில் தகைவு அரிது ஆயது, ஓர்
செக்கர் மேனிப் பகழி செலுத்தினன்,
'புக்க தேயம் புக்கு, இன் உயிர் போக்கு' என.

பொ :—மாரீசன் விசும்பில் எழுந்த அந்தக்கணத்திலே, வியக்கத் தக்க குணமுடையனை இராமனும், கொடிய, பகைவரால் தடுத்தற் கரிய தன் சக்கரப்படைபோலும் செந்நிறம் வாய்ந்த உருவினை யுடைய ஒரு வாளியை, 'இவன் சென்றடையும் இடம் அடைந்து, இவனுடைய உயிரைப் போக்கு' என்று செலுத்தினன்.

கு :—ஐயன் என்றது இராமனை. தகைதல் - தடுத்தல். செக்கர் - செந்நிறம். பகழிக்குச் செந்நிறம் பகைவர் குருதிபடிந்த மையால் வந்தது. இராமன் திருமாலின் அமிசமாதலால், தன் சக்கரம் என்றார். 'புக்கதேயம் புக்கு இன்னுயிர்போக்கு' என்பது இராமன் தன் பகழிக்கு இட்ட கட்டளை. (247)

## மாரீசன் கதறி விழுந்து மடிதல்

3411. நெட்டி லைச்சரம் வஞ்சனை நெஞ்சுறப்
பட்ட தப்பொழு தேபகு வாயினு
லட்ட திக்கினு மப்புற மும்புக
விட்ட ழைத்தொரு குன்றென வீழ்ந்தனன்.

நெட்டிலைச் சரம், வஞ்சனை நெஞ்சு உறப்
பட்டது; அப்பொழுதே பகு வாயினல்
அட்ட திக்கினும் அப்புறமும் புக,
விட்டு அழைத்து, ஒரு குன்று என வீழ்ந்தனன்.

பொ :—நீண்ட இலைவடிவான அம்பு, வஞ்சகனாகிய மாரீசனை நெஞ்சின்கண் அழுந்தத் தாக்கிற்று; அப்பொழுதே அவன் தன் பிளந்தவாயினால் எட்டுத்திக்கிலும் அவற்றுக்கு அப்பாலும் சென்று

(ஒலி) புகும்படி (ஆ சீதே, ஆ இலக்குமணா என்று) நீட்டிவிளித்து ஒருமலைபோல வீழ்ந்தான்.

கு :—சரம் - அம்பு. பகுவாய் - பிளந்தவாய். விட்டு அழைத்தல்- நீட்டிவிளித்தல் ; பின், 'எடுத்தழைத்தது' (3414) என்றதும் இங்கே நோக்கத்தகும். 'விட்டழைத்து' என்பதற்குத் 'தன்குரல் விட்டு, இராமன் குரலால் விளித்து' என்றும் பொருள் உரைக்கலாம். மாரீசன் விழும்போது இராமன் குரலால் அழைத்தான் என்பது 'என் குரலால் எடுத்து அழைத்தது உண்டு' (3414) என்று இராமன் கூறுதலால் புலனாகும். இராமன் குரலால் அழைத்தது சீதையைத் காத்துநிற்கும் இலக்குவனையும் பிரித்தற்கு என்க. (248)

### இராமன் இலக்குவனைப் பாராட்டுதல்

3412 வெய்ய வன்றன் னுருவொடு வீழ்தலுஞ்
செய்ய தன்றெனச் செப்பிய தம்பியை
யையன் வல்லனென் னருயிர் வல்லனா
னுய்ய வந்தவன் வல்லனென் றுன்னினான்.

வெய்யவன் தன் உருவொடு வீழ்தலும்,
'செய்யது அன்று' எனச் செப்பிய தம்பியை
'ஐயன் வல்லன், என் ஆர் உயிர் வல்லன், நான்
உய்ய வந்தவன் வல்லன்' என்று உன்னினான்.

பொ :—கொடியோனான மாரீசன் தன் அரக்க வுருவொடு வீழ்ந்த அளவில், 'இது நன்மானன்று, (மாயமான்), என்று கூறிய தம்பியை, என் ஐயன் வல்லன் ; என் அரிய உயிர் போன்றவன் வல்லன் ; யான் (இடரகன்று) உய்யும்படி என்னுடன் வனத்துக்கு வந்தவன் வல்லன்' என்று இராமன் வியந்து நினைந்தான்.

கு :—வெய்யன் என்றது மாரீசனை. உன்னுதல் - நினைதல் (249)

### உயிர்நீங்கி விழுந்த உடலை நோக்கிய இராமன் மாரீசனென்று தெளிதல்

3413. ஆசை நீளத் தரற்றினன் வீழ்ந்தவந்
நீசன் மேனியை நின்றுற நோக்கினான்

மாசின் மாதவன் வேள்வியில் வந்தமா
ரீச னேயிவ னென்பதுந் தேறினன்.

ஆசை நீளத்து அரற்றினன், வீழ்ந்த அந்
நீசன் மேனியை நின்று உற நோக்கினன்,
மாசு இல் மாதவன் வேள்வியில் வந்த மா
ரீசனே இவன் என்பதும் தேறினன்.

பொ:—திசைகளின் எல்லைவரை சென்று ஒலிக்கும்படி கதறி விழுந்த அக்கீழ்மகனுருவை (அருகிற் சென்று) நின்று நன்கு நோக்கி, இவன், குற்றமற்ற பெரிய தவத்தினனை விசுவாமித்திர முனிவனுடைய வேள்வியில் (அதை அழிக்க) வந்த மாரீசனே என் பதையும் தெளிந்துகொண்டான்.

கு:—ஆசை - திசை. அரற்றுதல் - கதறியழுதல். அரற்றினன்- அரற்றி; முற்றெச்சம். நீசன் - கீழ்மகன். (250)

## மாரீசன் குரலால் சீதை வருந்துவாள் என்று இராமன் இரங்குதல்

3414. புழைத்த வாளி யுரம்புகப் புல்லியோ
னிழைத்த மாயையி னென்குர லாலெடுத்
தழைத்த துண்டது கேட்டயர் வெய்துமான்
மழைக்க ணேழையென் றுள்ளம் வருந்தினன்.

'புழைத்த வாளி உரம் புகப் புல்லியோன்,
இழைத்த மாயையின் என் குரலால் எடுத்து
அழைத்தது உண்டு; அது கேட்டு அயர் வெய்தும் ஆல்
மழைக் கண் ஏழை' என்று உள்ளம் வருந்தினன்.

பொ:—துளைத்த அம்பு மார்பிற் புகுதலால், அற்பனை மாரீசன், தான் பயின்று திரட்டிய மாயையினல் என்குரல் கொண்டு நீட்டிவிளித்ததுண்டு; அவ்வொலி கேட்டுக் கரிய கண்ணையுடைய சீதை (எனக்கு ஊறுநேர்ந்ததென்று) தளர்வாள் என்று மனம் வருந்தினன்.

கு:—புழைத்தல் - துளைத்தல், உரம் - மார்பு. புல்லியோன் என்றது மாரீசனை. இழைத்தல் - பயின்று திரட்டுதல். எடுத்தல்_

நீட்டல். மழைக்கண் - மழைபோலக் குளிர்ந்த கண் என்று உரைத்தலும் அமையும். மாயமானென அறியாது விரும்புதலால் ஏழை என்றான். (251)

## இலக்குவன் சீதையைத் தேற்றுவானென்று இராமன் ஆறுதலடைதல்

3415. மாற்ற மின்னது மாயமா ரீசனென்
றேற்ற முன்னுணர்ந் தானிருந் தானென
தாற்ற றேரு மறிவின னாதலாற்
றேற்று மாலிளை யோனெனத் தேறினான்.

'மாற்றம் இன்னது மாயம், மாரீசன் என்று
ஏற்றம் முன் உணர்ந்தான், இருந்தான்; எனது
ஆற்றல் தேரும் அறிவினன், ஆதலால்
தேற்றும் ஆல், இளையோன்' எனத் தேறினான்.

பொ:—'மாரீசன் என்று துணிவாக முன்னமே அறிந்தவனான இலக்குவன், (சீதைக்குக் காவலாக அங்கே) இருந்தான்; அவன் என் ஆற்றலை நன்கு தெளிந்த அறிவுடையவனாதலால், (என் குரலால் மாரீசன் எடுத்தழைத்த) இந்தச் சொல்லின் மாயத்தைச் சீதைக்குத் தெளிவித்து அவளைத் தேற்றுவான்' என்று இராமன் தேறினான்.

கு:—மாரீசனென்று ஏற்றம் முன் உணர்ந்தான் (ஆன) இளையோன், இருந்தான்; (அவன்) எனதாற்றல் தேரும் அறிவினன்; ஆதலால், இன்னது மாற்றம் மாயம் (என்பது) தேற்றும் என்று தேறினான் என இயைக்க. ஏற்றம் - துணிவு. மாற்றம் - சொல். இன்னது - இது. தேற்றுதல் - தெளிவித்தல். (252)

## இராமன் திரும்புதல்

3416. மாள்வ தேபொரு ளாகவந் தானலன்
சூழ்வ தோர்பொரு ளுண்டிவன் சொல்லினான்
மூள்வ தேத மதுமுடி யாமுன
மீள்வ தேநல னென்றவன் மீண்டனன்.

‘மாள்வதே பொருள் ஆக வந்தானலன்;
சூழ்வது ஓர் பொருள் உண்டு; இவன் சொல்லினுல்
மூள்வது ஏதம்; அது முடியாமுனம்
மீள்வதே நலன்’ என்று அவன் மீண்டனன்.

பொ :—‘இவன் இறத்தலே பயனுக நினைந்து வந்தவனல்லன்; எண்ணிச் செய்வதொரு காரியம் உண்டு; இவன் சொல்லால் தீங்கு விளையும்; அது விளையுமுன் திரும்புதலே நலம்’ என்று இராமன் தன் பன்னசாலை நோக்கி மீண்டனன்.

கு :—பொருள் - முன்னது பயன். பின்னது செயல்; காரியம். மூளுதல் - உண்டாதல். ஏதம் - குற்றம்; தீங்கு. முடிதல் - விளைதல். (253)

மாரீசன் வதைப் படலம் முற்றிற்று.

# 8. சடாயு உயிர்நீத்த படலம்

இராவணன் சீதையைக் கவர்ந்து செல்லும்போது, சடாயு அவனைத் தடுத்துப் போர்செய்து கலக்கிப் பின் தன் உயிரை விடுத்த செய்தியைக் கூறும் பகுதியாகலின், இது சடாயு உயிர் நீத்த படலம் என்று பெயர் பெறுகின்றது. இப்படலம் சில சுவடிகளில் சடாயு மோட்சப் படலம் என்றும், சிலவற்றில் சடாயு வதைப்படலம் என்றும் பெயர் பெற்றுள்ளது. சில சுவடிகளில் 1-86 வரை இராவணன் சூழ்ச்சிப்படலம் எனவும், அதற்கு மேலுள்ள பகுதி சடாயு உயிர்நீத்த படலம் எனவும் இரண்டாகப் பிரிந்து இப்படலம் பெயர் பெற்றும் உள்ளது. சில சுவடிகளில் முதற்பகுதி இராவணன் வஞ்சித்த படலம் என்ற பெயரோடும் காணப்படுகின்றது.

## படலக் கதைச் சுருக்கம்.

மாரீசன் இராமன் குரலால் கூவியதைக் கேட்டவுடன், இலக்குவன், இது அரக்கனின் வஞ்சனைக் குரலே என்பது உணர்ந்து வாளா இருக்கின்றான். உண்மை உணராத சீதை மனங்கலங்கி அழுது இராமனுக்குப் பேரிடர் வந்ததாகவே எண்ணி அவனுக்குத் துணையாக இலக்குவனைச் செல்லுமாறு சொல்ல, அவன் இராமன் ஆற்றலைப் புகழ்ந்து கூறி, உண்மை உணர்த்துகின்றான். அதை உணராமல் சீதை இலக்குவன்மேல் சினங்கொண்டு பழித்துக் கூறி, நீ ஏகாது நிற்பாயாயின், யான் எரியிடை வீழ்ந்திறப்பேன் எனக் காட்டுத் தீயை நோக்கிச் சென்றாளாக, இலக்குவன் அவளைத் தடுத்து, ‘யான் போகின்றேன்’ என விடைபெற்றுக் கொண்டு என்ன நேருமோ என்ற ஐயுறவோடு இராமனை நோக்கிச் செல்கின்றான்.

சீதை தனித்திருப்பதை உணர்ந்த இராவணன் தவவேடம் பூண்டு பன்னசாலையின் வாயிலை அடைகின்றான். சீதை, அவனைத் தவமுனிவன் என்றே எண்ணி வரவேற்று முகமன் செய்கிறாள். அவன், இது யாருடைய இருக்கை? நீர் யார்? என்று வினவச் சீதை தன்வரலாற்றைக் கூறி, இராமன் மனைவி என்பதைப் புலப் படுத்திப் பின் ‘முதுமையுள்ள தாங்கள் யாண்டிருந்து வருகின்றீர்’ என்று வினவுகின்றாள். இலங்கையில் இராவணனிடம் தங்கி யிருந்து வந்ததாகத் தவசி கூறுகின்றான். உடம்பும் மிகையென்று எண்ணுகின்ற தாங்கள் அரக்கர் ஊர் புகுந்திருந்தது எது பற்றியோ? அவ்வரக்கர்களையெல்லாம் என் கணவர் வேரோடு

அழிக்கப் போகின்ருர் என்று சீதை கூறுகின்ருள். இராவணனைப் புகழ்ந்து கூறுகின்ருன் வஞ்சவேடத்தன். சீதை இராவணனை இகழ்ந்து கூறுகின்ருள். அது கேட்டவுடன் அவன் பெருஞ்சினங் கொள்ள, மாயவேடம் கலைகின்றது ; உண்மை வடிவத்தோடு நின்று தன் காதலைச் சீதைக்கு உணர்த்தி அடிபணிகின்ருன். சீதை நடுநடுங்கி ஒதுங்குகின்ருள். தன்னை விரும்பாத பெண்டிரைத் தொட்டால் தலை சிதறும் என்ற சாபம் தனக்கிருத்தலை நினைந்து அவன் சீதையைத் தொடாது தரையோடு பெயர்த்துத் தேரில் வைத்துக்கொண்டு செல்கின்ருன். செல்லுங்கால் சீதை கூக்குரல் இட்டு அழுததைக் கேட்டுச் சடாயு விரைந்து சென்று இராவணனைத் தடுத்துப் பெரும்போர் செய்து அவன் கொடி, முடி, வில், கவசம், தேர், சாரதி, குதிரைகள், அம்பருத்தூணி என்பவற்றைச் சிதைத்துத் தள்ளுகின்ருன். முடிவில் இராவணன் எறிந்த சிவன் வாளால் சிறகற்றுத் தரையில் வீழ்கின்ருன். இராவணன் சீதையைக் கொண்டுபோய் இலங்கையில் அசோகவனத்தில் சிஞ்சுபமரத்தடியில் சிறைவைக்கிருன்.

மாரீசன் செய்த மாயக்குரலின் ஒலிகேட்டு, இலக்குவன் சீதையைத் தனியே விடுத்து வந்துவிடுவானே என்ற ஐயத்தோடு இராமன் விரைந்து வருகின்ருன்; தன்னை நாடிவரும் இலக்குவனைக் காண்கிருன். இலக்குவன் தான் வந்த காரணத்தைக் கூற, இருவரும் சீதைக்கு என்ன நேர்ந்ததோ என்ற எண்ணத்தோடு பன்னசாலைக்கு விரைகின்ருர்கள். அங்கே சீதையைக் காணுமையால் மனங்கலங்கி இராமன் நிற்கின்ருன். உலகமே சுழலுவதுபோலக் காணப்படுகின்றது. இலக்குவன் தரையை உற்றுநோக்கி அங்குத் தேர் சென்ற சுவட்டைக் காண்கிருன். பன்னசாலையைத் தரையோடு பெயர்த்து எடுத்துள்ளமையால், சீதை பிறனல் தொடப் படாத கற்பினளாகவே யிருக்கிருள். தேர் தென் திசைநோக்கிப் போயிருத்தலால் நாமும் தென்திசையில் விரைந்து சென்று பார்க்கலாம் என இலக்குவன் கூறுகின்ருன். இராமனும் உடன்பட, இருவரும் தேடிக்கொண்டு தென் திசை நோக்கிச் செல்கின்ருர்கள். வழியில் முறிந்து கிடந்த கொடி, வில், கவசம் முதலியவற்றைக் கண்டு, சடாயு எதிர்த்துப் போர்செய்துள்ளான் என்பதையும், எடுத்துச் சென்றவன் இராவணன் என்பதையும், இலக்குவன் உய்த்துணர்ந்து கூறுகின்ருன். மேலும் சென்று சடாயு விழுந்து கிடப்பதைக் காண்கிருர்கள். இராமன் சடாயுவின் துன்பநிலையைக் கண்டு கண்ணீர் விட்டுப் புலம்புகின்ருன். சடாயு சிறிது விழித்துப் பார்த்து, இருவரையும் வாழ்த்தி, நடந்தவற்றையெல்லாம் கூறுகின்ருன். இராமன் கொண்ட கடுங்கோபத்தைத் தணித்து, மேல் செய்ய வேண்டியதைச் சொல்லிவிட்டுச் சடாயு தன் உடம்பை

விடுத்து மேலாய பரமபதத்தை அடைகின்றான். சடாயுவின் உடம்பை யெடுத்து ஈமப்பள்ளியில் வைத்துத் தீமூட்டி இறுதிக்கடனை இராமன் முறைப்படி செய்து முடிக்கின்றான். அவ்வளவில் சூரி யனும் மறைகின்றது; என்பது இப்படலத்துக் கூறப்படும் கதை.

## கம்பர் வான்மீகத்தோடு வேறுபடும் இடங்கள்

1. இராமன் அம்பால் இறந்து வீழும் மாரீசன், இராமன் கூப்பிடுதல் போலச் 'சீதா! இலக்குவா!' எனக் கூப்பிட்ட குரலைக் கேட்ட சீதை, திடுக்கிட்டு, இராமன்பால் விரைந்துபோமாறு இலக்குவனுக்குப் பணித்தும், இலக்குவன் இராமனுடைய ஆற்றலைப் புகழ்ந்து கூறிக்கொண்டு, அவன்பால் விரைந்து போகாமல் இருப்பதைக் கண்டு வெகுண்டு பேசியது, வான்மீகத்தில்: 'இலக்குவா! எப்போதும் மறைமுகமாகத் தீங்கு செய்யும் தீயவர்களிடத்தில் கெட்ட எண்ணம் இருப்பது வியப்பன்று; மிகவும் கொடியவனான நீ ஆசை கொண்டு கள்ளவேடம் பூண்டோ, அல்லது பரதனால் கெட்ட எண்ணத்தோடு அனுப்பப் பட்டோ இராமரைத் தொடர்ந்து காட்டுக்கு வந்துள்ளாய். அந்தப் பரதன் எண்ணமோ, நின் எண்ணமோ நிறைவேறப் போவதில்லை. கருநெய்தல் போன்ற மேனியையும் செந்தாமரை மலர்போன்ற கண்களையும் உடைய என் கணவரைக் கைவிட்டு இழிந்த ஒருவனை எப்படி விரும்புவேன்?' என்று கூறியதாக உள்ளது.

கம்பர், இக்கருத்துக்களைக் கூறாமல் நாகரிகமாக மாற்றியுள் ளார். "கொதிக்கு முள்ளத்தள், நின்ற நின்னிலையிது நெறியிற் றன்றெனா, வன்றறு கண்ணினள் வலிந்து கூறுவாள்" என்பது அவர் வாக்கு. இங்கு வான்மீகியின் வாக்கிற்கும் கம்பர் கருத் திற்கும் உள்ள வேறுபாட்டை நன்கு உணரலாம். கேட்பதற்கு இன்னாததாய் — அருவருக்கத்தக்கதாய்ச் சீதைக்கு இழிவைத் தருவதாய் வெளிப்படையாக அமைந்த வான்மீகியின் சொற்களை மாற்றியதோடு, அவர் கருத்தும் உய்த்துணர்ச்சியால் மட்டும் தோன்றுமாறு அமைத்த கம்பர் புலமை பாராட்டுதற்கு உரியதாகும். மேலும், பரதனைக் கம்பர் இங்கு இலக்குவனோடு இணைக்கவும் இல்லை. கம்பரின் மாற்றத்தால் சீதையின் குணம் ஏற்றம் பெறு கின்றது என்பது யார்க்கும் தோற்றாமலிராது.

2. இராமனாற்றலைத் தேற்றிவிட்டு ஏகாதிருந்த இலக்குவனை நோக்கிச் சீதை, 'இலக்குவா! யான் இராமனைப் பிரிந்து உயிர் வாழேன்; கோதாவரியில் விழுந்துவிடுவேன்; அல்லது சுருக் கிட்டுக் கொள்வேன்; அல்லது, மலையிலேறி உருள்வேன்;

அல்லது, நஞ்சினையுண்பேன்; அல்லது நெருப்பில் வீழ்வேன்;" என்று இறத்தற்குரிய எல்லா வழிகளையும் கூறியதாக வான்மீகத்தில் உள்ளது. கம்பர் இவ்வழிகளையெல்லாம் விரிக்கவில்லை. காட்டுத்தீயில் பாய்ந்து உயிர்விடுவதாகச் சீதை ஓடத்தொடங்கினள் என்று கூறுகின்றார். வாய்ச்சொல் பலவற்றினும் செயலொன்றே சிறந்தது ஆதலும், இராமன் ஆணையை மீறியும் இலக்குவன் சீதையைப் பாதுகாவாமல் விட்டுச் செல்வதற்கு அவள் செயலே தக்ககாரணமாய் அமைதலும் நோக்கியே கம்பர் இவ்வாறு மாற்றி நயப்படுத்தியுள்ளார்.

3. தவசிபோலக் கள்ளவேடம் பூண்டு வந்த இராவணன் சீதையின் அழகைக் கண்டவுடன் சீதையை நேரே விளித்து, அவள் உறுப்பு நலன்களையெல்லாம் புகழ்ந்து பேசியதாக வான்மீகத்தில் உள்ளது. இராவணன் தன் மனதிற்குள் அவ்வாறு புகழ்ந்ததாகக் கம்பர் மாற்றியுள்ளார். தன்னை ஐயுறாமல் இருக்கும் பொருட்டுத் தவவேடத்தில் வந்த இராவணன் சீதையைக் கண்டவுடன் அவளை முன்னிலையாக்கி அவள் உறுப்பு நலன்களையும் தன் விருப்பு மிகுதியையும் கூறுவானாயின், அவன் மேற்கொண்ட தவவேடமே தேவையற்றதாகப் பயனற்றதாக முடியும். தவவேடத்தில் வந்த இராவணன் காமத்தால் வெதும்பித் தனக்குள் அவ்வாறு நினைத்ததாகக் கூறும் கம்பர் மாற்றம் போற்றுதற்குரிய ஏற்றமுடையதாதல் காணலாம். இது நாடக அமைப்பிற்கும் அழகுதருவதாக உள்ளது. மேலும், சீதை தன்னைக் காமுற்றுப் புகழ்ந்த கள்ள வேடத்தானைச் சிறிதும் ஐயுறாது உள்ளன்போடு வரவேற்று அவனுக்கு உபசாரமும் செய்தாள் என்பது பொருந்தா நிகழ்ச்சியாக இருத்தலும் காணலாம். சீதை, தன் கணவனோடு காடுபுகுந்த காரணத்தை இராவணனுக்கு விரிவாகக் கூறியதாக வான்மீகி அமைத்துள்ளார். கம்பர் அவ்வரலாற்றைச் சுருக்கிக் கூறியமை நாடக அமைப்பிற்கு அழகு தருகின்றது.

4. இராவணத் தவசியைப் பார்த்துச் சீதை, உங்கள் ஊரையும் பேரையும் குலத்தையும் உண்மையாகச் சொல்லுங்கள் என்று கேட்க, அவன், 'யான் அரக்கர்கணங்கட்கு அரசனான இராவணன்; இலங்கை யென்னும் எழில் மிகு நகரம் என் ஊராகும்; அப்பட்டினத்துள்ள எழில் மிக்க பொழிலில் என்னோடு விளையாடுவாய்; நின் அழகைக் கண்டதும் என்மனைவியர்பால் வைத்த காதலை விடுத்தேன்; எனக்கு நீ மனைவியாவாயானால் ஐயாயிரம் தோழியர் உனக்குப் பணிசெய்ய உன்னை உயர்ந்த நிலையில் வைத்துப் பாராட்டுவேன்! என்று கூறினனாகச் சீதை சினந்து, இராமனுடைய வீரத்தையும் வலிமையையும் அழகையும் விரித்துக்

கூறிச் "சிங்க ஏறு போன்ற இராமன் மனைவியாகிய யான், நரிபோன்ற நின்னால் தொடப்படுதற்கு உரியள் அல்லேன்; இராமன் பத்தினியாகிய என்னை விரும்புகின்ற நீ ஆலகால விடத்தையுண்டு நலம் பெற நினைப்பவனைப் போல்கின்றாய்; அழியுங்காலம் நினக்கு நெருங்கியுள்ளமையால் நீ இங்ஙனம் நினைக்கின்றாய்; பொன்னுக்கும் ஈயத்திற்கும் எவ்வளவு வேற்றுமையோ, மயிலுக்கும் நீர்க்காக்கைக்கும் எவ்வளவு வேற்றுமையோ, அன்னத்திற்கும் கழுகிற்கும் எவ்வளவு வேற்றுமையோ, யானைக்கும் பூனைக்கும் எவ்வளவு வேற்றுமையோ, அவ்வளவு வேற்றுமை இராமர்க்கும் உனக்கும் உண்டு. வலிமை மிக்க உன்னால் கவரப்பட்டாலும் இராமபிரான் வில்லும் அம்புமாய் வந்து என்னை மீட்பார்." என்று துணிவுடன் கூறிப் பெருங்காற்றால் தாக்குண்ட வாழை மரம்போல உடல் நடுக்க முற்றாள்: என்பது வான்மீகம்.

இராவணத் துறவியைப் பார்த்துச் சீதை நீங்கள் எங்கிருந்து வருகின்றீர்கள், என்று கேட்டபோது, அவன், இலங்கையின் சிறப்பையும் இராவணன் பெருமைகளையும் கூறி அவ்விராவணன்பால் தங்கியிருந்து அரிதிற் பிரிந்து வந்ததாகக் கூறினானாக, அது கேட்ட சீதை, 'உடம்பும் மிகையென்று எண்ணுகின்ற நீர், கள்ள அரக்கர் ஊர்புகக் காரணம் என்ன?' என்று வினவியதோடு, அவ்வரக்கர்களையெல்லாம் இராமன் கொல்லப்போவதையும் பெருமிதத்தோடு கூறினாள். அதைக் கேட்ட துறவி, 'மனிதரால் வெல்லத்தக்க எளிமையனல்லன் இராவணன்' என்றானாக, அவள், இராமனால் கரன் முதலிய அரக்கர் தொலைந்தமை எடுத்துக் காட்டியதோடு, இராவணனைச் சிறைசெய்த கார்த்த வீரியனைக் கொன்ற பரசிராமனையும் வென்ற இராமன் திறலை யெடுத்துக் காட்டி, அரக்கரை யிழித்துக் கூறினாளாக, இராவணனுக்குச் சினம் பொங்கியெழ, அப்போது அவன் மாய வேடம் தானே கலைந்ததாகக் கம்பர் கூறியுள்ளார்.

தவசியாக வேடம் பூண்டவனை ஊரும் பேரும் வினவியபோது தன் உண்மைப் பேரையும் ஊரையும் சொல்லிவிடுவானாயின், அவன் பூண்ட வேடத்தால் பயன் என்னை? அவன் தன் உண்மை வடிவத்தோடு வந்திருக்கலாமே! என்பன எண்ணியே கம்பர் அக்கருத்துக்களை மாற்றியுள்ளார். தவவேடத்தில் நின்றே இராவணன் பெருமைகளைப் பிறன்போலப் பேசுதலும், சீதையும் அவனைத் தவசியாகவே நினைந்து இராமன் பெருமையையும் இராவணன் இழிதகவுகளையும் விவரித்தலும், நாடகக் காப்பியத்திற்கு ஏற்ற நயமிக்கதாய்ச் சுவைநலம் கெழுமியதாய் விளங்குதல் காணலாம். இராவணன், தன்னைச் சீதை அயிராதிருக்கும்வண்ணம்

தவவேடம் பூண்டு வந்து, அவ்வேடத்திற் கேற்பவே பேசிப் பின் சினமிக்கவழி அம் மாயவேடம் தானே கலைந்துவிட, உண்மை வடிவத்தோடு நின்று, பின், தன் விருப்பத்தை நேரே கூறுவதாக அமைத்த அமைப்பு வனப்பு மிக்கதாதல் காண்க.

5. இராவணன் சீதையைத் தூக்குங்கால் அவள் தொடைகளுக்குக் கீழே கை கொடுத்துத் தூக்கித் தன் தேர்மேல் ஏற்றியதாகவும், சடாயுவால் தேர் அழிவுற்றபோது, அச்சீதையைத் தன் மடியில் வைத்துக்கொண்டு விண்வழிச் சென்றதாகவும் வான்மீகம் கூறும். கற்புமிக்க சீதையை இராவணன் தன் கைகளால் தொட்டுத் தூக்கினன் என்பது கம்பர் உள்ளத்திற்குப் பொருந்தியதாகத் தோன்ருமையின், அக்கருத்தை மாற்றி, இராவணன் அவ்வளைத் தொடுதற்கு அஞ்சி, நிலத்தோடு பெயர்த்து எடுத்துச் சென்ருன் எனக்கூறியதோடு, அவன் தொடாமைக்குக் காரணம் பிரமன் முதலியோர் சாபம் என்பதையும் கூறியுள்ளார். 'தான் நாட்டித் தனது நிறுப்பு' என்ற கொள்கையின்படி, இக்கருத்தினை இக்காப்பிய முழுவதிலும் கம்பர் நிறுவிக்காட்டியுள்ளார்.

6. இராவணன் கவர்ந்து செல்லும்போது சீதை, வழியில் சடாயு ஒரு மரத்தில் உறங்கிக் கொண்டிருந்ததைப் பார்த்து, 'பெருமை மிக்க சடாயுவே! வன்மை மிக்க இராவணனால் கவரப் பட்டுச் செல்லும் என்னை அருள்செய்து பாருங்கள்; இந்த அரக்கன் வலிமை மிக்கவனுய் ஆயுதங்களையுடையவனுய் இருத்தலின், உம்மால் அவனைத் தடுக்க முடியாது; ஆகையால், இக் கொடிய இராவணன் என்னைக் கவர்ந்து செல்வதை இராம இலக்குவர்க்குத் தெரிவிக்க வேண்டும்' என்று வேண்டிக் கொண்டதாகவும், உறக்கத்தில் இருந்த சடாயு சீதையின் குரலைக் கேட்டு விழித்துப் பார்த்து, இராவணன் சீதையைக் கவர்ந்து செல்வதையறிந்து, அவ்விராவணனுக்கு இதமாக அறிவுரை கூறியதாகவும் வான்மீகத்தில் உள்ளது.

சீதையின் அழுகுரலைக் கேட்டுச் சடாயு தானே விரைந்து பறந்து வந்து இராவணன் தீச் செயலையறிந்து அவனுக்கு அறிவுரை கூறியதாகக் கம்பர் கூறியுள்ளார். 'பார்ப்பைப் பார்க்கும் பறவையில் பார்க்கின்ருன்' எனச் சடாயு சீதை முதலியோரைக் காவல்செய்துகொண்டிருந்த நிலையை முன் விளக்கியதற் கேற்ப, இங்கும் அவன் காவல் செய் பொறுப்பில் தவருதவனுயிருந்து அவன் தானே அறிந்து வந்தான் என்ற கம்பர் மாற்றமே சிறப்பாக உள்ளது. சீதை தன்னை அழைத்தபின் சடாயு விழித்து உதவிசெய்ய வந்தான் என்பதினும், அவள் அழையாமலே தானே

அறிந்து உதவ வந்தான் என்பதே பொருத்தமாதலும் காணலாம்.

7. சடாயு தனக்கு அறுபதினாயிரம் ஆண்டு நிரம்பியதாகத் தானே இராவணனுக்குக் கூறித் தன் முதுமையை யுணர்த்தினன் என்கின்றது வான்மீகம். கம்பர், சடாயுவின் வாக்காக அதனைக் கூறவில்லை. இராவணனைத் தடுத்துப் போர் செய்யவந்த சடாயு, தன்னை வயது முதிர்ந்தவனாகச் சொல்லிக் கொள்வது போர் முறைக்கு ஏற்றதன்று ; அந்த எண்ணத்தால் பகைவனை வெல்ல வியலாமை நேர்தலும் கூடும் ; ஆதலின், அதனை மாற்றி, இராமன் சடாயுவின் முதுமையை நினைந்து இரங்கியதாகக் கம்பர் கூறி யுள்ளார்.

'அறத்தில் பற்றுள்ள இராமருடைய மனைவியாகிய யான், இராவணனால் கவரப்பட்டமையால், இப்பொழுது கைகேயி தன் எண்ணம் நிறைவேறி உறவினரோடு மகிழ்ச்சியடைவாள்' எனச் சீதை மனம் நொந்து கூறியதாக வான்மீகத்தில் உள்ளது. பெண்ணியல்பிற்கு இது ஏற்ற சொல்லேயாயினும், சீதையின் பெருந்தன்மைக்கு ஏலாமையின் கம்பர் இது பற்றிக் கூறவே யில்லை.

8. இராவணன் சீதையை இடதுபக்கத்தில் கெட்டியாய்ப் பிடித்துக் கொண்டு வலது கையால் சடாயுவை ஓங்கி அறைந் தானாக, சடாயு, அவ்விராவணனின் இடது கைகள் பத்தினையும் மூக்கினால் கடித்து எறிந்தான் என்றும், புற்றில் நின்று விரைந்து எழும் பாம்புகள் போலக் கைகள் அற்ற இடத்திலிருந்து புதிய கைகள் உடனே தோன்றின என்றும் வான்மீகம் கூறும். கம்பர் இந்நிகழ்ச்சியைக் கூறவேயில்லை. கதைப் போக்கிற்கு இந்நிகழ்ச்சி மிகையென்று கருதி விடுத்தார்போலும்.

9. சீதையைக் கவர்ந்துகொண்டு இலங்கை புகுந்த இரா வணன், அவளை முன்னர்த் தன் அரண்மனையில் தங்கச் செய் தான். சீதை அங்கு நாய்களால் சூழப்பட்ட மான்பிணை போன்று தலைகுனிந்து கண்ணீர் விட்டுக் கலங்கிக் கொண்டிருப்பதைக் கண்ட இராவணன், அச்சீதையை வலிதின் அழைத்துச் சென்று, பலவகையான மணிகளையழுத்திப் பொன்னாலும் வெள்ளியாலும் செய்யப் பெற்றுக் கண்ணையும் கருத்தையும் கவரத்தக்க ஒரு சிறந்த மாளிகையைக் காட்டி, அம்மாளிகையின் படிகளின்மேல் அவளை வலிதின் ஏற்றி, மேல் மாடியில் நிறுத்தினன்; தந்தத்தாலும் வெள்ளியாலும் இயன்ற அழகிய சன்னல் வழியாகத் தன் அரண் மனையில் முத்தும் மணியும் வைத்திழைத்துச் செய்துள்ள எழில்

மிக்க பகுதிகளையும் நடைவாவிகளையும் பொய்கைகளையும் பொழில் களையும் அச்சீதைக்குக் காட்டித் தன்மேல் காதல் கொள்ளுமாறு வேண்டினன்; "என் கோப் பெருந் தேவியரையும் பணிகொள்ளும் பெருந்தேவியாக நீ யிருக்கலாம். காவல் மிக்க இவ்விலங்கைக் குள் யாரும் நுழைய முடியாது. இராமன் மனத்தாலும் இங்கு வர எண்ண இயலாது; என் எண்ணத்தை நிறைவேற்று; இந்தப் பெரிய இராச்சியத்தை நீயே அரசாண்டுகொண்டிரு; உன் மெல்லிய பாதங்களை என் தலைக்கு அணியாக்குகிறேன்; விரைந்து எனக்கு அருள் செய்வாயாக; உன் சொல்வழி நிற்கும் அடிமை யாக யான் இருக்கின்றேன்;" என்று இராவணன் வேண்டவும், சீதை கோபமிக்கவளாய், ஒரு துரும்பைக் கிள்ளி யெதிரில் போட்டு விட்டு, 'ஏ இராவணத் துரும்பே! உன்னை என் கணவர் வெகுண்டு நோக்கின் நீ எரிந்து அழிவாய்; உன்னை விரும்பாமல் செயலற் றிருக்கின்ற இந்த உடம்பை நீ கட்டினாலும் தின்றாலும் அது பற்றிக் கவலையுறமாட்டேன்; உயிருக்காகப் பழிபூணேன்' என்று சினந்து கூறிவிட்டு அமைதியுற்றாள்.

இராவணன், அவள்சொல் கேட்டுச் சினந்து, அச்ச முண் டாக்கும் குரலில், 'சீதா! என் சொல்லைக் கேள். இன்னும் பன்னிரண்டு திங்கள் நின் உடன்பாட்டை எதிர்பார்த்துப் பொறுத்திருக்கிறேன். அதற்குள் என்னை விரும்பாயானால் என் காலைப் பொழுது உணவிற்காகச் சமையற்காரர் உன்னைத் துண்டு துண்டாய் அறுப்பார்கள்' என்று சொன்னான். பின் அரக்கியர் பலரை விளித்து, 'இந்தச் சீதையை அசோகவனத்திற்குக் கொண்டு சென்று அங்கு இவளைப் பிறர் அறியாமல் காப்பாற்ற வேண்டும்; இவளுடைய கர்வத்தை அடக்கி என்னைக் காதலிக்குமாறு செய்ய வேண்டும்' என்று கட்டளையிட்டான். அவ்வாறே அவர்கள் அசோகவனத்தில் சீதையை இருக்கச்செய்தார்கள். புலிகளால் சூழப்பட்ட மான்பிணைபோலச் சீதை அரக்கியர் சூழக் கலக்கமுற் றிருந்தாள்; கணவனைக் காணாமல் சோகமுற்று மயங்கிக் கிடந்தாள்; என்று வான்மீகம் கூறும்.

கம்பர், இந்த விரிவான செய்திகளைக் கூறாமல், "வஞ்சியை யரக்கனும் வல்லை கொண்டுபோய்ச் செஞ்சவே திருவுருத் தீண்ட அஞ்சுவான், நஞ்சிய லரக்கியர் நடுவண் ஆயிடைச், சிஞ்சுப மரத் தின்கீழ்ச் சிறைவைத்தானரோ" என்று சுருக்கமாகக் கூறி முடித்து விட்டார். இராவணன் தன் அரண்மனையில் முன்னர்ச் சீதையை இருக்கச் செய்ததைக் கூறவில்லை. அவட்கு ஆசைமொழி பல கூறியதையும் அச்சுறுத்தியதையும் கம்பர், இங்குக் கூறாமல் சுந்தர காண்டத்தில் நிந்தனைப்படலத்தில், அநுமான் காண நிகழும் நிகழ்ச்சியாக மாற்றி அமைத்துள்ளார்; சீதையின்கற்புச் சோதிக்கப்

பட்ட கற்பாதலை இராமன் சார்பாயுள்ள அநுமான் காணுமாறு அமைத்தது, நாடகக் காப்பிய நிலைக்கு ஏற்றதாய்ச் சிறந்து விளங்கு கின்றது.

10. மானாக வந்த மாரீசனைக் கொன்றுவிட்டுத் திரும்பிய இராமன், வழியில் இலக்குவன் வரக் கண்டு, சீதையைத் தனியே விடுத்து வந்தமைக்கு வெகுண்டு, சீதை அரக்கரால் தின்னப் பட்டோ, கவரப்பட்டோ இருப்பாள் என்ற எண்ணத்தால் அவள் பெருமையெல்லாம் பேசி இரங்குகின்றான். "சீதை ஆசிரமத்தில் இல்லாவிட்டால் யான் மாண்டுபோவேன்; இலக்குவா! நீ அயோத்திக்குச் சென்று சேர்ந்துவிடு; அந்தக் கைகேயி தன் எண்ணம் நிறைவேறி மகிழ்ச்சியாக இருப்பாள்; என் தாயாகிய கோசலை முன்னைய துன்பத்தோடு பிள்ளையையும் பறிகொடுத்து விட்டு, தன் பிள்ளையோடும் அரசாட்சியோடும் கூடி மகிழ்கின்ற கைகேயியை வணங்கிக்கொண்டு பணிவுடன் கிடப்பாளோ?" என்று எண்ணி வருந்தியதாக வான்மீகம் கூறும்.

இது மனித இயல்பிற்கு ஏற்றதே ஆயினும், திருமாலின் அவதாரமாய் அறத்தை நிலைநிறுத்த வந்த இராமன் இங்ஙனம் பேசியதாக அமைத்தல் தகுதியன்று என்ற கருத்தால் கம்பர் இக்கருத்தைக் கூறவேயில்லை.

11. சீதையைத் தனியே விடுத்து வந்தது தவறு என்று இராமன் வெகுண்டபோது, இலக்குவன், தான் வந்தமைக்குக் காரணம் சீதையின் கடுஞ்சொற்களே என்பதை விளக்குகின்றான். ' "இலக்குவா! நீ விரையாது இங்கு நிற்றலால் தமையன் மாண்டு விட என்னைக் கைப்பற்றுதற்காகவே நீ நினைக்கின்றாய்; அவ்வாறு என்னைக் கைப்பற்ற இயலாது; பரதரால் செய்யப் பெற்ற சங் கேதத்தின்படி இராமனைத் தொடர்ந்திருக்கின்றாய்; அவருடைய அழிவுக்குக் காலம்பார்த்துக்கொண்டு அங்குப் போகாமல் இருக் கின்றாய்?" என்று இத்தகைய கடுஞ்சொற்களைக் கூறிச் சீதை வெகுண்டமையால் யான் வந்தேன்' என்று இலக்குவன் கூறிய தாகவும், இதைக் கேட்ட பின்னரும், இராமன் வெகுண்டு, "சீதை யின் இந்தக் கோபமான சொல்லுக்காகவா புறப்பட்டுவந்து விட்டாய்? நின் சொல்லைக் கேட்டு யான் மகிழமாட்டேன்; சீதை யின் கோபத்திற்கு ஆளாகி என் ஆணையை அவமதித்தது எல்லா வகையாலும் உன் செருக்கினால்தான் என்று எண்ணுகின்றேன்" என்று கூறியதாக வான்மீகத்தில் உள்ளது.

கம்பர் இக்கருத்துக்களை நாகரிகமாக மாற்றியமைத்துள்ளார். "ஏகாது நிற்றியெனின், யான் நெருப்பினிடை வீழ்வென்" என்று

முடுகா மாகானகத்தினிடையோடலோடும் அஞ்சி இலக்குவன் வந்த தாகக் கூறுகின்றான். அது கேட்ட இராமனும், "வந்தாய் திறத்தின் உளதன்று குற்றம்; மடவாள் மறுக்கம் உறுவாள் சிந்தாகுலத்தின் உரைசெய்த செய்கையது தீது மன்று" என இருவர்பாலும் குற்றமில்லை யென்று அமைதியுடன் கூறித் தன் செயலால் விளைந்த ஏதமே இது: என்று தன் குற்றமாகவே ஏற்றுக் கொண்டதாக அமைத்துள்ளமை இராமனுடைய பெருந் தன்மையை விளக்குகின்றது.

12. பன்ன சாலையில் சீதையைக் காணப்பெறாத இராமன், அச்சீதையின் பிரிவைப் பொறாது கலங்கிப் பைத்தியம் பிடித்தவன் போல, மலைகளிலும் ஆறுகளிலும் ஓடித் திரிந்து, கடம்பு வில்வம் முதலிய மரங்களையும், மான் யானை போன்ற விலங்குகளையும் விளித்துச் சீதையிருக்குமிடத்தைக் காட்டுமாறு கேட்டுப் புலம்பு கின்றான். சீதையின் உறுப்புக்களைத் தனித்தனியே புகழ்ந்து கூறி அத்தகைய பேரழகி அரக்கர்களால் விழுங்கப்பட்டாளோ? என் றாற்போன்ற சொற்களைக் கூறிக்கொண்டு, புக முடியாத காடு களிலும் குகைகளிலும் ஓடித் தேடித் திரிகின்றான். (அவன் பட்ட அல்லல் வான்மீகத்தில் மிகவிரிவாகக் கூறப்பட்டுள்ளது.) இறுதியில் அங்குள்ள மான்களைப் பார்த்து, 'மான்காள்! சீதை எங்குச் சென்றாள்' என்று இராமன் மனங்கலங்கி வினவியபோது, அந்த மான்கள் கண்ணீர்விட்டுக்கொண்டு தென்திசை நோக்கிச் சிறிது தொலைவு ஓடி, விண்ணைப்பார்த்துப் பின் இராமனைப் பார்த்துத் தம் குறிப்பைத் தெரிவித்தன. அம்மான்களின் குறிப்பை இலக்குவன் உணர்ந்து, தென்திசை வழியாகச் சீதை எடுத்துச் செல்லப் பட்டுள்ளாள் என்பதை இராமனுக்குத் தெரிவித்து, 'நாம் தென் திசை நோக்கிச் செல்வோம்' என்றுகூற, இராமனும் துன்பத்தைத் தணித்துக்கொண்டு உடன் சென்றான். சிறிது தொலைவு சென்ற வுடன் சீதையின் கூந்தலில் அணிந்த மலர்களும் சில அணிகலன் களும் சிதறிக்கிடந்தமை கண்டு, இம்மலர்கள் யான் சீதைக்குச் சூட்டியமலர்களே என இராமன் கூறி ஏங்கினான். மேலும் செல்லச் செல்லச் சிறிது தொலைவில் பூமியில் ஓரரக்கனின் அடிச்சுவடுகளை யும் அவனுக்குப் பயந்து இங்கும் அங்குமாய் ஓடிய சீதையின் அடிச்சுவடுகளையும் கண்டு, இராமன் வெகுண்டு இலக்குவனுக்குக் காட்டினான். பின் சிறிது தொலைவில் நிலம் குருதித் துளிகளால் மறைக்கப்பட்டிருப்பதால் சீதையை அரக்கர் சிறிது சிறிதாகக் கிழித்து உண்டிருப்பார்களோ? என்று இராமன் எண்ணி வருந்தினான்.

பின்பு இலக்குவனை நோக்கி, "இலக்குவா! சீதையைக் கொண்டுபோவதில் அரக்கர் இருவர்க்குள் பகைமை தோன்றிப்

பெரிய போர் செய்திருக்கின்றார்கள். முத்துக்களை வைத்திழைத்துத் தங்கத்தால் அழகுசெய்யப் பெற்ற இப் பெரிய வில் யாருடையது? இளவெள ஞாயிறு போன்ற ஒளியுடன் வைடூரிய மணிகளைப் பதித்துச் செய்ததாய்ப் பொன்மயமானதாய்த் தரையில் சிதறிக்கிடக்கும் இக்கவசம் யாருடையது? காம்பு ஒடிந்த இக்குடை யாருடையது? மாண்டுகிடக்கின்ற கோவேறு கழுதைகளும், சிதைந்து கிடக்கும் தேரும், நுனி ஒடிந்து கிடக்கின்ற இவ்வம்புகளும் யாருடையவை? சாட்டையும் கடிவாளமும் பிடித்த கையுடனே இறந்து கிடக்கும் சாரதி யாரைச் சேர்ந்தவன்? என்று வினவிக்கொண்டு, 'சீதை அரக்கர்களால் கொல்லப் பட்டாளோ? அல்லது கவரப்பட்டாளோ? என்று ஐயுற்று, அவளை அறத்தெய்வமும் காப்பாற்றவில்லையே' என்றுகூறி ஏங்கினான்; 'சீதையைத் தேடிக் கொடாத இம்மூவுலகத்தையும் அழிக்கின்றேன்' என்று வெகுண்டான்.

இலக்குவன் அவ்விடங்களை உற்றுநோக்கி, 'இப்போர் யாருடையதோ? இவ்விடம் குதிரைக் குளம்புகளாலும் தேர்ச் சக்கரங்களாலும் மிதிக்கப்பட்டுக் குருதித் துளிகளால் நனைக்கப்பட்டு மிகவும் கோரமாய் உள்ளது. இது ஒருவனுடைய போரேயன்றி இருவர் போர் அன்று. சேனைகளின் அடிச்சுவடுகள் காணப்படவில்லை. ஒருவன் செய்த குற்றத்திற்காக நீங்கள் உலகத்தை அழிப்பது தக்கதன்று. அதனால் பயனுமின்று' என்று கூறி, இராமனை அமைதியுறச் செய்தான். பின் அக்காடு முழுதும் தேடித் திரிந்தபோது, ஓரிடத்தில் குருதி வெள்ளத்தில் வீழ்ந்து கிடக்கும் சடாயுவைக் கண்டார்கள். மலைக்கு நிகரான உடம்பையுடைய அக்கழுகைக் கண்டு இராமன், 'இந்தக் கழுகே சீதையைத் தின்றிருக்கின்றது. கழுகின் உருவில் இருப்பவன் அரக்கனேயாவன். அழகியதாய் அகன்ற கண்களையுடைய சீதையைத் தின்றுவிட்டு இன்பமாய் உட்கார்ந்திருக்கின்றது. ஆதலால் என் கூரிய அம்புகளால் கொல்லப்போகிறேன்' என்று அம்பைத் தொடுத்துக்கொண்டு, அக்கழுகின் எதிரே சென்ற இராமனைப் பார்த்தவுடன், சடாயு பேச முடியாமல் குருதியைக் கக்கிக்கொண்டு, பின் மெல்லிய குரலில், 'நெடிய ஆயுள் உள்ளவரே! சீதையையும் என் உயிரையும் இராவணன் கவர்ந்தான்; என்னைக் கொல்லாதீர், சீதையைக் காக்க யான் அவ்விராவணனை எதிர்த்தேன்; அவன் தேர் முதலியவற்றைத் தரையில் வீழ்த்தினேன். முரிந்து கிடக்கும் வில்லும் தேரும் அவனுடையவே. தேர்ப் பாகனும் அவனைச் சேர்ந்தவனே. யான் சிறிது இளைப்பாய் இருந்தபோது என் சிறகுகளை வாளால் வெட்டி வீழ்த்திவிட்டுச் சீதையை எடுத்துக் கொண்டு இராவணன் தென் திசை நோக்கிச் சென்றுவிட்டான். அவன் சீதையை

யெடுத்துச் சென்ற முகூர்த்தத்தைப் பார்க்கின்றபோது அவன் கவர்ந்த பொருள் விரைவில் உடையவனைச் சேரும் என்று தோன்று கின்றது. ஆதலால் நீர் துன்புருது சென்று அவ்விராவணனை வென்று கற்புடைய சீதையை மீட்பீர்களாக' என்று சொல்லிக் கொண்டு உயிர்ப்பு ஓய்ந்து சடாயு உயிர் நீங்கினன், என்று வான்மீகம் கூறுகின்றது.

கம்பர் இக்கருத்துக்களைச் சுருக்கியும் மாற்றியும் அமைத் துள்ளார். சீதையின் பிரிவுத்துயரால் இராமன் புலம்பிய புலம்பலை வான்மீகி விரிவாகப் பல சருக்கங்களால் கூறியதைக் கம்பர் மிகமிகச் சுருக்கிவிட்டார். "சுரிகுழலாடனைக் காணன், கூடுதன்னுடையது பிரிந்தாருயிர் குறியா, நேடிவந்தது கண்டிலதாமென நின்ருன்," "உய்த்து வாழ்தற்கு வேருெரு பொருளிலா னுதவ, வைத்த மாநிதி மண்ணொடு மறைந்தன வாங்கிப் பொய்த்துளோர் கொளத் திகைத்து நின்ருனையும் போன்ருன்" என்று உவமை கூறி, இரா மன் பட்ட அல்லலையெல்லாம் சில சொற்களால் கம்பர் விளங்க வைத்துள்ளார். மரங்களையும் மலைகளையும் விலங்குகளையும் நோக்கி, இராமன் பலவாருகச் சொல்லிப் புலம்புவதாகக் கூறுவது அவன் பெருந்தன்மைக்குப் பொருந்தாது எனக் கம்பர் அவற்றைக் கூறவில்லைபோலும்.

இராமன் மான்களை நோக்கிச் 'சீதையைக் கண்டீரோ?' என்று வினவியபோது அம்மான்கள் காட்டிய குறிப்புகளைப் பற்றியும் இலக் குவன் அக் குறிப்புணர்ந்து கூறியதைப் பற்றியும் கம்பர் கூற வில்லை. இராவணன் தேர் சென்ற சுவடு கண்டு தென் திசையில் சென்றதாக இலக்குவன் உய்த்துணர்ந்து கூறினன் என மாற்றிக் கூறியுள்ளார். விலங்கு முதலியவற்றை நோக்கி, இராமன் வினவி யதைக் கம்பர் கூருமையால் மான்கள்காட்டிய குறிப்பைக் கூறும் வாய்ப்பு, அவர்க் கில்லாதுபோயது. மான்கள் காட்டிய குறிப்பால், சீதை தென் திசையில் எடுத்துச்செல்லப்பட்டதை உய்த்துணர் வதினும், இராவணன் தேர் சென்ற சுவட்டால் அதை உய்த் துணர்தல் எளியதும் உறுதியானதுமாதலையுணர்ந்தே கம்பர் அங்ஙனம் மாற்றினராதல்வேண்டும்.

இராவணன் வீணைக்கொடி முரிந்து கிடந்ததைப் பற்றி வான்மீகி கூறவில்லையாயினும், இராவணன் தோல்விக்கு அறிகுறியாக, முதலில் அவன் கொடி இற்றுவீழ்ந்த செய்தியைப் புதுவதாகக் கம்பர் தாமே புனைந்து கூறியுள்ளார். வான்மீகி கூறிய இராவணனின் குடைவீழ்ச்சியைக் கம்பர் கூருது விடுத்தார். மேலும் கொடியின் முரிவை உற்றுநோக்கி, அது வாள் முதலிய கருவிகளால் வெட் டுண்டதன்று; பறவையின் மூக்கால் முரியுண்டதாகவே காண

படுகின்றது; அப்பறவை நம் தந்தை சடாயுவே யாவான். சடாயுவுக்கும் அரக்கர்க்கும் பெரும்போர் நடந்துள்ளது எனச் சடாயுவின் உதவியை முன்னமே உய்த்துணர்ந்து இராமன் கூறியதாகக் கம்பர் அமைத்த திறம் பாராட்டற் குரியதாகும். குற்றுயிரோடு குருதி கொப்புளித்துக்கொண்டிருக்கும் சடாயுவை நேரில் கண்டும், 'இப்பறவையே சீதையைத் தின்றது' என்று இராமன் அப்பறவையைக் கொல்ல, வில்லில் அம்பு தொடுத்தலும், சடாயு, 'என்னைக் கொல்லாதீர்; யான் சீதையைக் காக்க இராவணனோடு போர் செய்து இறகற்று வீழ்ந்துள்ளேன்' என்று கூறியபின் உண்மையுணர்ந்ததாகக் கூறுவதினும், கம்பர் மாற்றியமைத்தது இனிதாக உள்ளது. சடாயு, தன் உயிர்போகும் நிலையிலும் இராவணன் தென்திசை நோக்கிச் சீதையை எடுத்துச் சென்ற செய்தியைக் கூறியதோடு, அவன் எடுத்துச் சென்ற முகூர்த்தத்தை நோக்கின், அவன் கவர்ந்த பொருள் விரைவில் உடையானைச் சேரும்' எனச் சோதிடமும் கூறியதாக வான்மீகி கூறியிருக்கவும், கம்பர் அதனைக் கூருது விடுத்துள்ளார்.

இராவணன் வில்லும் கவசமும் தேரும் தரையில் சிதைந்து கிடப்பதைப் பார்த்து, இராமன், 'இவை யாருடையவை ?' என்று ஐயத்தோடு வினவியதாகவும், பின் சடாயுவே அவையாவும் இராவணனுடையவே, தன்னால் வீழ்த்தப்பட்டனவே: எனக் கூறியதாகவும் வான்மீகத்தில் உள்ளது. கம்பர் அக்கருத்தை மாற்றி இலக்குவனே தன் உய்த்துணர்ச்சியால் இராவணனுடையவை என உணர்ந்து கூறியதாக அமைத்துள்ளார். சடாயு தன் வீரச் செயலைத் தானே சொன்னதாகக் கூறுவதைக் காட்டிலும், அவன் வீரச் செயலை இலக்குவன் தன் உய்த்துணர்ச்சியால் முன்னமே உணர்ந்து, அச்சடாயுவைப் பாராட்டியதாகக் கூறியது சாலச் சிறப்புடையதாய், இலக்குவன் பெருமையை விளக்குவதாய், அமைந்துள்ளமை காணலாம். ஏனைப் பகுதிகள் பெரும்பாலும் இரு நூலுள்ளும் ஒத்த கருத்தினவாகவே உள்ளன.

## படலப் பொருட்சிறப்பு

### இலக்குவன் பெருமை

இப்படலத்தின் கதை நிகழ்ச்சிக்கு உறுப்பினர், இலக்குவனும், சீதையும், இராவணனும் சடாயுவும் இராமனும் ஆவர். அயோத்தியா காண்டத்தில் இராமனை அண்ணன் என்றும் பின் தந்தையென்றும் கருதித் தொண்டுசெய்துவந்த இலக்குவன், ஆரணிய காண்டத்தில் நிகழ்ந்த அற்புதச் செயல்களைக் கண்டும், சரபங்கர் போன்ற முனிவர்களின் செயல்களைக் கண்டும் இராமன் திருமாலின் அவதாரமே என்ற உண்மையை உணர்ந்துகொண்டான் என்ன

லாம். இலக்குவன் இராமனே எவ்வாறு மதித்துத் தொண்டு செய்கின்ருன் என்பதைப் புலப்படுத்த ஓர் அமயம் வாய்க்கின்றது.

இராமன் அழைப்பதுபோல மாரீசன் இலக்குவா! சீதே! என அழைத்து உயிர்விட, அக்குரலே இராமன் குரலாகவே யெண்ணிச் சீதை அழுகின்ருள்; விழுகின்ருள்; புரள்கின்ருள். இலக்குவனே, அக்குரல் அரக்கனுடையதே என்ற உண்மையுணர்ந்து துயருருது நிற்கின்ருன். சீதைக்குக் கோபம் பொங்குகின்றது. குற்றமற்ற என் கணவன் அரக்கன் செய்த மாயையால் இற்றுவீழ்ந்தனன் என்பதை அவன் குரலால் அறிந்தும், என் அயல் நிற்றியோ? இளேயோய்! என்று கடிந்து கூறுகின்ருள். அப்பொழுதுதான் இராமன் புகழை—ஆற்றலே விளக்கும் வாய்ப்பு இலக்குவனுக்குக் கிடைக்கின்றது. தான் இராமனே எவ்வாறு மதிக்கின்ருன் என்பதையும் இங்குப் புலப்படுத்திவிடுகின்ருன்.

எடுத்த எடுப்பில் இலக்குவன் என்ன சொல்லுகின்ருன்? 'உலகினில் இராமற்கு ஏற்றமோர் திண்மையார் உளர் என எண்மையார் செப்பற் பாலரோ?' என இராமன் ஈடும் எடுப்பும் அற்றவன் என்பதை விளக்கி விடுகின்ருன். அத்தகையோன் ஓரரக்கனுல் வீழ்ந்தான் என்று நம்பிய சீதையையும் இகழ்ந்து, "பெண்மையா லுரைசெயப் பெறுதிரால்" என்றும் கூறுகின்ருன். ஏழுலகத்திலும் இராமனுக்கு ஈடான வலிமையுள்ளவர்கள் இல்லே; ஐம்பெரும் பூதங்களும் அவன் முனிந்தால் நிலே குலேயும் எனின், அவனே வெல்பவரும் இவ்வுலகத்து உளரோ? என அவன் தெய்வத் தன்மையை விளக்கிவிட்டு, அவன் நிறத்தையும் கண்களேயும் கொண்டே அவன் இன்னவன் என்பதை உணரலாயிருக்க, இதுகாறும் பழகியும் அவ்வுண்மையை உணராதிருக்கின்றீரே என்பானுய்,

'காரெனக் கரியவக் கமலக் கண்ணனே
யாரெனக் கருதியிவ் விடரினுழ் கின்றீர்'

என்று வினவுகின்ருன். இறைவன் தன்னுள் கலந்திருந்தும் அவன் உண்மையியல்பை உணராத ஓரான்மாவிற்கு ஞானகுரு வந்து அவ்விறைவன் பெருமையை உணரச் செய்யும் நிகழ்ச்சியைப் போலத் தன்னேடு பிரியாதிருக்கும் இராமன் பெருமையை உணராது வருந்திய சீதைக்கு இலக்குவன் அவ்விராமன் பெருமையை உணர்த்தினுன் என்னலாம். உலகியலில் வைத்தும் அவன் பெருமையை உணர்த்துதற்காகச் சீதை முதன் முதலில் கண்ட நிகழ்ச்சியையே எடுத்துக் காட்டுகின்ருன். 'திரிபுர மெரித்த புங்கவன் ஏற்றி நின்று எய்தவில் இறுத்த எம்பிரான் ஆற்றலின் மேலுமோர் ஆற்றலுண்மையோ?' என்கின்ருன்.

அவ்வுரைகளாலும் தெளியாத சீதையைத் தெளிவிக்க எதிர் மறைமுகத்தானும் உணர்த்த எண்ணி, 'காவலன் ஈண்டு நீர் கருதிற்று எய்துமேல், மூவகை யுலகமும் முடியும்; முந்துள தேவரும் முனிவரும் முதல செவ்வியோர், ஏவரும் வீவர்; நல்லறமும் எஞ்சும்' எனக் கூறி உலக மூன்றும் முடி வெய்தாமையாலும், தேவரும் முனிவரும் வீயாமையாலும், அறத் தெய்வம் அழியாமை யாலும் இராமனுக்கு யாதொரு தீங்கும் நேரவில்லை: என்பதை யுணரலாம் என, அவன் மூவுலகுக்கும் ஆதாரமாய் நிற்கும் முதற் காரணன் என்பதை விளக்குகின்ருன். அங்ஙனம் கூறியும், தெளி யாத சீதைக்கு, 'நீர், கேட்ட குரலே இராமனுடைய குரலன்று; இராமன் அம்பு எய்யப் பட்டுத் தொலைகின்ற அரக்கன், வஞ்சனை யாக அக்குரலால் அவ்வாறு அரற்றினன், அதை இராமன் குரல் என்று எண்ணி இரக்கமுற்று வருந்தாதீர்கள்' எனறு சேய்மை யில் நடந்தது இன்னது என உய்த்துணர்ந்து உண்மைகூறி விளக்குகின்ருன்.

இராமன் பெருமையை — தெய்வத்தன்மையை — யாவர்க்கு மேலாம் அளவிலா ஆற்றலுடைமையை இலக்குவன் நன்கு தெளிந்து கூறியதாலும், சேய்மையில் மாரீசன் வஞ்சனையால் எழுப்பிய குரலை உய்த்துணர்ந்து கூறியதாலும், இலக்குவன் பெருமையைக் கம்பர் இப்படலத்தில் நன்கு தெளிவித்துள்ளார் எனலாம். அயோத்தியா காண்டத்தில், காட்டில் பரதன் சேனையுடன் வருதலை அறிந்தபோது, இலக்குவன், இத்தகைய உய்த்துணர்ச்சி யுடையவனுகக் காட்டப்படவில்லை.

"பரதன் இப்படைகொடு பார்கொண்டு ஆள் மறம்
கருதி உள் கிடந்ததோர் கறுவு காதலால்
விரதம் உற்று இருந்தவன் மேல்வந்தான்; இது
சரதம்; மற்று இலது"

என்கின்ருன். இந்த உய்த்துணர்ச்சி தவருனது என்பதை இராமன் இலக்குவனுக்குத் தெளிவிக்கின்ருன். "காதலின் வரும் என நினை கையும் மண்ணை யென்வயின் தரும் என நினைகையும் தவிரத் தானையால் பொருமென நினைகையும் புலமைப் பாலதோ?" என்ற இராமன் உய்த்துணர்ச்சியே அங்கு உண்மையாகின்றது. இலக் குவன் அறிவு அங்கு நன்கு செயற்படாமைக்குக் காரணம் இராமன்வாக்கினலேயே கம்பர் புலப்படுத்தியுள்ளார். "எனைத்துள மறையவை யியம்பற் பாலன, பனைத்திரள் கரக்கரிப் பரதன் செய்கையே...........அன்னது நினைத்திலை என்வயின் நேய நெஞ் சினல்" என்பது காண்க. இராமன்பால் வைத்த பேரன்பால்

இலக்குவன் அறிவு அங்கு மங்கியது. சீதை உண்மையுணராமல் வருந்துவது கண்ட அருள் நோக்கால் இங்குப் பொங்குகின்றது.

முன் அமரர் அவையில் மேற்கொண்ட திட்டமே ஊழாய் வந்து இராமன் அறிவை மறைக்கின்றது. அதனல் இராமன் குறைந்த அறிவினன் போலக் காணப்படுகிருன். மாயமான் என இலக்குவன் உணர்த்தவும் உணராதான்போல் அமைதி கூறி, அதன் பின் போனதும் அதனுலேயாம். மேலும் சீதையைத் தேடிச் செல்லும் வழியில் இராவணனுடைய முடிகள் பத்தும் குண்டலங்களும் தோளணிகளும் கிடப்பதைக் கண்டு இராமன், "தமியன் நம் தாதை; யாளிபோல்பவர் பலருளர் பொருதனர் இளையோய்" என்று கூற, இலக்குவன் அக்கருத்தை உடன் படாது, "தோள் பல தலைபல என்ருல், பொருது தாதையை யித்தனை நெறிக் கொடு போனுன், ஒருவனே; அவன் இராவணனும்" என உய்த்துணர்ந்து உண்மை கூறியதும் காணலாம். இங்கும் இராமனைவிட இலக்குவன் சிறந்த அறிவினனுகக் காட்டியுள்ளமை உணரலாம். எனவே சடாயு உயிர்நீத்த படலத்தில் இலக்குவன் பெருமையைக் காண்கின்ருேம்.

## சீதையின் பெருமை

இப் படலத்தில் சீதை பெரிய சோதனைக்குள்ளா கின்ருள். என்றும் காணுத பெருந்துயரம் அவட்கு அடுத்து அடுத்து நிகழ்கின்றது. மாரீசன் இராமன் விளிப்பது போன்று கூவி விழுந்த குரலைக் கேட்டவுடன், சீதை வயிறு அலைத்து வீழ்ந்து மயங்குகின்ருள். பின் சிறிது தெளிந்து 'பிடித்து நல்கிவ் வுழை யெனப் பேதையேன், முடித்தனென் முதல் வாழ்வு' என்று கூறிக் கொண்டு, நெருப்பில் வீழ்ந்த கொடிபோலவும், பாம்பு இடியொலி கேட்டு ஏங்குவது போலவும் தரையில் புரண்டு ஏங்குகின்ருள். 'குற்றம் வீந்த குணத்தின் எங் கோமகன் மற்றை வாளரக்கன் புரி மாயையால், இற்று வீழ்ந்தனன் என்னவும், என் அயல் நிற்றியோ? இளையோய்!' என்று இலக்குவனை நோக்கிச் சினந்து கூறுகின்ருள். சீதையின் துன்பத்தையும் சொல்லையும் நோக்கின், இராமன், அரக்கன் செய்த மாயையால் இற்று வீழ்ந்துவிட்டான் என்றே நம்பினுள் என்பது புலனுகின்றது. பின், இலக்குவன், 'காவல னீண்டு நீர் கருதிற்று எய்துமேல், மூவகை யுலகமும் முடியும்' என்புழிச் சீதை கூறியதைத் தன் வாயினுல் கூறவும் கூசி, 'நீர் கருதிற் றெய்துமேல்' என்று மட்டும் குறிப்பிடுகின்ருன். இலக்குவன் கூற்ருலும் சீதை கருதியது, இற்று வீழ்ந்தான் இராமன்; என்பதே எனப் புலனுகின்றது.

இவ்வாறு நம்புகின்ற சீதை, இராமன் வீழ்ந்த இடத்திற்கு நேரே ஓடியிருத்தல்வேண்டும். இல்லையேல் இலக்குவனை

அழைத்துக்கொண்டேனும் அங்குப் போயிருத்தல்வேண்டும். அவ்வாறு செய்யாமல் இலக்குவனைமட்டும்' 'நின்ற நின்னிலையிது நெறியிற்றன்று' என்றும், 'பெருமக னுலைவுறு பெற்றி கேட்டும் நீ வெருவலை நின்றனை' என்றும் கூறிப் போமாறு தூண்டுகின்ருள். அவன் போகாது நின்ருல் 'எரியிடை வீழ்ந்து இறப்பேன்' என் கின்ருள். குரல் கேட்டற்குரிய அண்மையான இடத்தில் இராமன் வீழ்ந்ததாக நம்புகின்ற சீதை, அவ்விடத்திற்குச் சென்று இராமனைக் காணவேண்டும் என்று விரையாமை வியப்பையே உண்டாக்கு கின்றது.

இலக்குவன்பால் இவ்வாறு கூறிய சீதை, இராவணன் தவ முனிவன் வேடத்தில் வந்தபோது, இராமனுக்கு நேர்ந்த பேரிட ரைப் பற்றி யாதும் கூருமைமட்டுமன்றி, அவன் ஆற்றலைப் புகழ்கின்ருள். 'அறந்தரு வள்ளல் ஈண்டு அருந்தவம் முயலும் நாளுள், மறந்தலை திரிந்த வாழ்க்கை அரக்கர் தம் வருக்கத்தோடும், இறந்தனர் முடிவர்' என்றும், 'வாளரி வள்ளல்; சொன்ன மான் கணம் நிருதர்; அன்னூர் கேளொடு முடியுமாறும் வானவர் கிளரு மாறும் நாளையே காண்டிர்' என்றும் கூறுகின்ருள். இலக்கு வனிடம் கூறிய சொல்லுக்கும் இராவணத் துறவிபால் கூறிய சொல்லுக்கும் உள்ள முரண்பாடு நன்கு தெளியலாம். இவ்விரு வகையான பேச்சில், ஒன்று பொய்யாதல் வேண்டும்; அது எது?

இலக்குவன் போனபின், அவன் கூறிய சொற்களைச் சிந்தித் துச் சீதை இராமன் ஆற்றலில் நம்பிக்கை கொண்டாள் என்றும், முன் தான் எண்ணியது தவறு என்பதைத் தெளிந்தாள் என்றும் கொண்டால், இம் முரண்பாட்டைப் போக்கலாம். இலக்குவன்பால் கூறியது தெளியாது கூறியது என்றும், இராவணத்துறவிபால் கூறியது தெளிந்து கூறியது என்றும் வேறுபடுத்திக் கொள்ள வேண்டும். ஆயினும், இராமன் இற்று வீழ்ந்ததாகவே எண்ணி யிருந்த நிலையில், சீதை இராமன் வீழ்ந்த இடத்திற்குப் போகாமல் இலக்குவனைமட்டும் போகச் செய்தது பொருந்துமா? என்ற கேள் விக்கு விடை காண்டல் வேண்டும். சீதையிருக்கும் பன்னசாலையும் காடுதான்; இராமன் வீழ்ந்ததாகக் கருதும் இடமும் காடுதான். காட்டில் வாழ்ந்து பழகிய சீதைக்குத் தன் கணவன் அலறி வீழ்ந்த இடத்திற்குப் போகத் துணிவில்லை என்று கூற இயலுமா? எத்துணையோ காடுகளையும் மலைகளையும் நடந்து கடந்து அல்லற் பட்ட சீதைக்குக் கூப்பீட்டுத் தொலைவில் வீழ்ந்து கிடக்கும் இராமனைக் காணச் செல்லுதல் அரிதாமா? இற்று வீழ்ந்த கணவனை இலக்குவன் சென்று உயிர்ப்பித்து அழைத்துவருவான் என்று நம்பியிருந்ததாகக் கொள்ளமுடியுமா? கணவன் இறந்தது

கேட்டதும், கண்ணகி, அரசன் ஆணைக்கு உட்பட்ட இடம் என்றும் அஞ்சாது, வேறு துணையும் நாடாது, கொலைக்களத்திற்குச் சென்று கோவலனுடம்பைத் தழுவியழுத கதையைக் கேட்டிருக்கின்றோமே! கற்புடைப் பெண்டிர் இயல்பு அத்தகையதுதானே? சீதைக்கு அத்தகைய துடிப்பும் விரைவும் உண்டாகாமைக்குக் காரணம் என்னையோ? என்ற கேள்விகள் எழுதல் இயல்பே.

இக் கேள்விகளுக் கெல்லாம் சீதை வாக்கினாலேயே விடை புலப்படுமாறு கம்பர் அமைத்துள்ள திறம் போற்றுதற் குரியதாகும். இராவணன் வாளால் சடாயு வீழ்ந்தது கண்டு சீதை புலம்பும்போது,

"பின்னவ னுரையினை மறுத்துப் பேதையேன்
அன்னவன் தனைக் கடிது அகற்றினேன்; பொரு
மன்னவன் சிறையற மயங்கினேன் விதி
இன்னமு மெவ்வினை யியற்றுமோ வென" (132)

என்று கூறுகின்றாள். இதனால், இலக்குவன் சொல்லைச் சீதை மறுத்தற்கும், தான் உடன் செல்லாமல் அவனைமட்டும் கடிது போமாறு அகற்றியதற்கும் விதியே காரணம் என்றும் தன்னைக் காக்கவந்த சடாயு சிறகற்று வீழ்தற்கும் அவ்விதி காரணமான தோடன்றி, மேலும் எத்தகைய விளைவுகளை விளைக்க இருக்கின்றதோ? என்று அஞ்சினாள் என்றும் புலனாதல் காணலாம். மேலும், இலக்குவனும், தன்னைச் சீதை சினந்து, அகற்றுதற்கு விதியே காரணம் என்றும், அவ்விதியை வெல்ல முடியாதென்றும், கருதிக் கூறியதைக் காணலாம். "இஞ்சிரு மடியனேன் ஏகுகின்றனன், வெஞ்சின விதியினை வெல்ல வல்லமோ?" என்றது காண்க. சீதையின் வெஞ்சினத்திற்குக் காரணமானது பற்றி விதியை வெஞ்சின விதி என்றதும் நினைக்க.

மேலும், இராமனும், தன்னை நோக்கி இலக்குவன் வருவது கண்டு வருந்தி, "என்னை விதியார் முடித்த" தென எண்ணி நின்றதாகக் கம்பர் கூறியுள்ளதும் காணலாம். இராமன் துன்ப நிலையைக் கண்ட சடாயுவும், 'அதிசயமொருவரால் அமைக்கலாகுமோ, துதியறு பிறவியி னின்ப துன்பந்தான், விதிவயம் என்பதை மேற்கொளாவிடின், மதிவலியால் விதி வெல்ல வல்லமோ?' எனச் சீதையின் பிரிவு விதிவயத்தால் நிகழ்ந்ததே என்பது கூறி அமைதியுண்டாக்குகின்றான். இங்ஙனம் சீதையும், இலக்குவனும், இராமனும், சடாயுவும் விதிவலியே இத்தகைய துன்ப நிகழ்ச்சிக்குக் காரணம் என்பதை விளக்கியுள்ளார்கள். எனவே விதிவலி சீதையின் மதிவலியை வென்று மேம்பட்டமையின் அவ் விதிவலிக்கு உட்பட்டதே சீதையின் செயல் என்பதை உணர்தல்வேண்டும்.

இதனுல் மேல் தோன்றிய ஐயங்கள் எல்லாம் பைய நீங்குவது காணலாம்.

அஃதொக்கும், மயர்வற மதிநலம் அருளுகின்ற உயர் வறவுயர்நலமுடைய இறைவன் அமிசமாய இராமனுக்கும் அவனைப் பிரியகில்லாத திருமகளின் அமிசமாய சீதைக்கும் விதியுண்டு என்பதும், அவ்விதிவலிக்கு அடங்கி அவர்கள் நடக்கின்ருர்கள் என்பதும் பொருந்துமா? என்று வினவுவார்க்கு விடைகூறுவது யாங்ஙனம்? எனின், கூறுவல். அவர்கட்கு விதியாவது இன்னது என்பதைச் சடாயுவே விளக்குகின்ருன்.

“ பிள்ளைச்சொற் கிளிய ளைப் பிரிவுற லுற்ற பெற்றி
தள்ளுற்ற அறமும் தேவர் துயரமும் தந்ததே யால் ”

என்றது காணலாம். ‘ அரக்கர்களால் அறம் தள்ளுற்றது ; அதனுல் தேவர் துயருற நேர்ந்தது ; இவ்விரு நிகழ்ச்சியுமே விதியாய் வந்து சீதையைப் பிரித்தது ’ என்பது அவ்வடிகளின் விளக்கமாகும். முன் கைகேயி, இராமன் முடிசூடும் நிகழ்ச்சி கேட்டு மகிழ்ச்சி கொண்டு, பின் மாறுபட்டதற்கும், கம்பர்,

“ அரக்கர் பாவமும் அல்லவ ரியற்றிய அறமும்
துரக்க நல்லருள் துறந்தனள் தூமொழி மடமான் ” (1573)

என இத்தகைய காரணத்தை கூறியிருத்தலும் இங்கு நினைதல் தக்கதாகும். இராமனும் சீதையும் முன்பிறப்பில் செய்த தீவினை காரணமாக வந்த விதியினுல் அவர்கட்கு இத்தகைய துயர் விளைந்தது என்றுகூற வழியில்லை ; என்னை ? அவர், முன் திருமாலும் திருமகளுமாய் நின்று எல்லோர் வினைகளையும் போக்கி ஆட்கொள்ளும் உயர்நிலையில் இருந்தமையால், அவர்கள் செய்த தீவினை இன்மை வெளிப்படை. எனவே தள்ளுற்ற அறமும் தேவர் துயரமுமாகிய இரண்டும் விதியாய்வந்து இவ்விளைவுகளை உண்டாக்கியது என்ற சடாயுவின் வாக்கே பொருத்தமானது என்பது தெளியலாம்.

இது பொருத்தமாகத் தோன்றினும், இதிலும் ஓரையம் தோன்ருமலில்லை. உலகத்து ஒருவர் செய்த நல்வினை தீவினைகள் செய்தார்க்கே விதியாய் நின்று பயனளிப்பதன்றி, ஒருவர் செய்த தீவினையோ அன்றி நல்வினையோ மற்றொருவர்க்கு விதியாய் நின்று பயனளிக்கும் என்பது எப்படிப் பொருந்தும்? அரக்கர் அறத்தைத் தள்ளிவிட்டுப் பாவத்தை மேற்கொண்டு செய்தாராயின் அப்பாவப் பயனை அவ்வரக்கர் அநுபவிப்பது தானே முறை? அப்பாவத்தால் சீதை பிரிவுற்ருள் எனல் பொருந்து

மாறில்லையே எனின் ? கூறுவல் ; அரக்கர்களால் அறம் தள்ளுற்றது ; அதனால் தேவர்கள் துன்புற்றார்கள். துன்பம் பொறாத தேவர்கள் திருமாலிடம் அரக்கர் செய்யும் அல்லலையும் தாங்கள்படும் துன்பத்தையும் சொல்லி முறையிட்டார்கள். திருமால், தேவர் துயர்தீர அரக்கரை அழிப்பதற்கு உடன்பட்டான். அந்தப் பெருஞ் செயலை எங்கு எங்கு எவ்வாறு எவ்வாறு செயற்படுத்த வேண்டும் என்பதைத் தேவசபையில் ஆராய்ந்து பெரியதோர் திட்டம் வகுக்கப் பெற்றது. அத்திட்டத்தின்படியே கைகேயியின் மனமாற்றம் முதலிய எல்லாம் நிகழ்ந்துவருகின்றன. முன் திருமால் வகுத்துக் கொண்ட திட்டமே இப்போது விதியாய் வந்து பயனளிக்கின்றது. இத்திட்டத்திற்கு அரக்கர்களால் தள்ளுற்ற அறமும் தேவர் துயரமும் நேரே காரணமாதல் தெளிவு. சீதையின் பிரிவிற்கு அவ்விரண்டும் பரம்பரையாற் காரணமாதல் பற்றியே, சடாயு, தள்ளுற்ற அறமும் தேவர் துயரமும் தந்ததாகக் கூறினான் என்பதை உய்த்துணரின் ஐயத்தின் நீங்கித் தெளிவு பெறலாம். இதுகாறும் ஆய்ந்தமையால், இராமனுக்கும் சீதைக்கும் விதிவலி என்றது, அவர்கள் முன் தேவ சபையில் செய்துகொண்ட திட்டமே என்பதும், அவர்கள் செய்த நல்வினை தீவினைகள் அல்ல என்பதும் தெளிந்தோம். இதனால், சீதை, இலக்குவனை மட்டும் விரைந்து போகச்செய்துவிட்டுத் தான் தனித்திருந்து இராவணனால் கவரப்படும் எளிமையளானதும் அவ்விதியானே என்பது நன்கு தெளிவாதல் காணலாம்.

சீதை, இராவணத்துறவியின்பால் செய்த உரையாடல்கள் அவள் அறிவின் திறத்தையும் மனத்தின் திண்மையையும் கற்பின் காவலையும் நன்கு வெளிப்படுத்துவனவாகும். இராவணனுடைய பொய்வேடத்தை மெய்யெனக் கொண்டு முகமன்செய்தாளாயினும், இலங்கையிலிருந்து வந்ததாகக் கூறிய அத் தவமுனிவன் சொல்லைக் கேட்டவுடன், சீதை, ‘அற நெறி நினைக்கிலாதவர் இனத்திடை வைகினீர் என்செய்தீர் ?’ எனவும், தீயவர்ச் சேர்தல் செய்தால் தூயரும் தீயரேயாவர் எனவும் உண்மையை உறுதியாகக் கூறும் தன்மை, அறத்தில் பழகிய அவள் திண்மையைப் புலப்படுத்துகின்றது. ‘அறந்தரு வள்ள லீண்டு இங்கு அருந்தவ முயலு நாளுள், மறந்தலை திரிந்த வாழ்க்கை யரக்கர்தம் வருக்கத்தோடும், இறந்தனர் முடிவர்’ என்று சீதை கூறியது, இராமனது வீரத்தோடு பழகிய பான்மையை விளக்குவதாகும்.

மானிடர் அரக்கர்தம்மை வெல்ல இயலாது என்று இராவணத் துறவி இகழ்ந்து கூறியபோது சீதை, ‘விராதன் வதையையும் கரன் முதலோர் வதையையும் கேட்டிலீர்போலும்’ என்று எடுத்துக் கூறியும், ‘நவையிலீ ருணர்கி லீரோ, மீளருந் தருமந்

தன்னை வெல்லுமோ பாவம்?' என்று நியதியை எடுத்துக் காட்டியும் அவன் சொல்லைப் பொய்யாக்கும் திறமை புகழ்தற்குரிய பெருமை யுடையதாகும். 'விராதன் போன்ற புல்லிய வலியுடையோரை மனிதன் கொன்றதை நீ யெடுத்துக் கூறினாய்; அவ்விராவண னுடைய இருபது திண்டோள் வாடை வீசியபோது, அம்மனிதன் பூளைப்பூப்போல அழிவதை நாளையே பார்ப்பாய்' என இராவணனைப் புகழ்ந்து அத் தவவேடத்தான் கூறியபோது சீதை, 'அரண்டரு திண்டோள் சால வுளவெனி னாற்ற லுண்டோ?' என்று எள்ளல் தோன்ற வினவி, அவ்விலங்கை வேந்தனைச் சிறைவைத்த கார்த்த வீரியனுடைய ஆயிரந் தோள்களாகிய காட்டையெல்லாம் சிறிய தோர் பருவந்தன்னில் இரண்டு தோளை யுடைய ஒரு மனிதன்தானே மழுவினால் எறிந்தான்?' என்று உண்மையை எடுத்துக்காட்டிய சொற்றிறன் அச்சாணி அன்னது: "சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொல் அச்சொல்லை, வெல்லுஞ் சொல் இன்மை யறிந்து" (குறள் - 645) என்ற தமிழ்மறைக்குச் சிறந்த எடுத்துக் காட்டாக அமைவது. அச் சொல்லை வெல்லும் சொல்லை இராவணன் சொல்லமாட்டாமையாலன்றோ சின மிகுந்து, தவவேடம் துறந்து, அரக்க வடிவைக் காட்டி வெருட்டியது? இராவணன் உண்மை உருவத்தோடு நின்று வெகுண்டு, பின் தணிந்து, தன்னைப் பணிந்து, அவன் காமக் குறிப்பைப் புலப்படுத்தியபோது, சீதை செவிகளைக் கைகளால் மூடிக்கொண்டு, "காகுத்தன் கற்பினேனை,.........பொங்கெரிப் புனித ரீயும் அவியை நாய்வேட்ட தென்ன என்சொனாய் அரக்க" 'இன்னுயிரிழத்தலஞ்சி யிற்பிறப் பழிதலுண்டோ?' என்று உரப்பி வினவியது, அச்சீதையின் கற்பின் திண்மையையும் அஞ்சாமையை யும் காட்டுகின்றது; கற்பிற்குத் தீங்கு விளையும் என்று தெரிந்தால் மென்மையிலும் வன்மை தோன்றும் என்பதை உணர்த்துகின்றது. இராவணன் தரையோடு பெயர்த்துத் தேரில் வைத்துக் கொண்டு சென்றபோது, சீதையின் வெகுளி அழுகையாக மாறுகின்றது. வழியில் கண்ட மேகத்தையும் பொழிலையும் ஆற்றையும் கண்டு அவள் கூறியவை கல் நெஞ்சையும் கரைக்கும் தன்மையவாகும். அறம் வெல்லும் பாவம் தோற்கும் என்று உறுதியாக நம்பி யிருந்த சீதை, தன்னைக் காக்க வந்த சடாயு இராவணனால் வீழ்ச்சியுற்றபோது, 'நல்லவன் தோற்பதோ? நரகன் வெல்வதோ? வெல்வதும் பாவமோ?' என இரக்கமும் மருட்சியும் தோன்றக் கூறுகின்றாள். வேறு துணையற்ற நிலையில், 'கற்பழியாமை என் கடமை; ஆயினும், பொற்பழியா வலம் பொருந்தும் போர்வலான், விற் பழியுண்டது; வினையினேன் வந்த இப்பழியுண்டது;' என்று இரங்கி ஏங்குதல், அவள் நிறைக் காவலின் திட்பத்தையும், கணவன்

பாலும் இற்பிறப்பின் கண்ணும் அவள் கொண்ட நன்மதிப்பையும் நன்கு விளக்குதல் காணலாம்.

### சடாயு

இப்படலத்தின் சிறந்த உறுப்பினன் சடாயுவே. அவன் சீதையைக் காக்கச் சென்று உயிர் கொடுத்துப் புகழ்கொண்ட உத்தம நிகழ்ச்சி இங்குச் சிறப்பாகப் பேசப்படுகின்றது. தன் மருகியை மக்களைச் சேக்கையில் பார்ப்பைப் பார்க்கும் தாய்ப் பறவையைப்போலப் பார்த்துக்கொண்டிருந்த சடாயு, இராவணனுல் கவரப்பட்டு அலறுகின்ற சீதையின் குரலைக் கேட்டு விரைந்து பறந்து வருகின்முன். இராவணன் சீதையைத் தொட அஞ்சித் தரையோடு பெயர்த்து எடுத்துச்செல்வதைக் கண்டு, அவனுக்கு நல்லுரை கூறிச் சீதையை மீட்கலாம் என எண்ணுகின்முன். தகவு இல்லாச் செயலைச் செய்த அரக்கனிடத்தும் பரிவு காட்டி, அறிவுரை கூறும் சடாயுவின் பொறுமை பெருமையுடையதாகும். தன் நண்பனுக்குக் கூறும் அறிவுரை போலச் சடாயு தன் பகைவனுகிய இராவணனுக்குக் கூறும் அறிவுரைகள் காணப்படுகின்றன.

பேதாய் பிழை செய்தனை பேருலகின்
மாதா அனையாளை மனக்கொடு நீ
யாதாக நினைந்தனை யெண்ணமிலாய்
ஆதாரம் நினக்கினி யாருளரோ?

என்று சடாயு இராவணனுக்குக் கூறும் சொற்களில் அன்புணர்ச்சியும் ஆழ்ந்த கருத்தும் அமைந்திருத்தல் காணலாம். உபாயம் நான்கில் இது சாமோபாயத்தால் கூறியதாகும். "கொடு வெங்கரி கொல்லிய வந்ததன்மேல், விடு முண்டை கடாவ விரும்பினையே" எனவும், "போர்விடையோனருளால் வரம் பெற்றவும் மற்றுள விஞ்சைகளும் உரம்பெற்றன ஆவன, உண்மையினேன், சரம் பற்றிய சாபம் விடுந்தனையே" எனவும், பேதோபாயத்தால் பேசி இராமன் ஆற்றலைப் புலப்படுத்துகின்முன். பின், 'நானே அவனுய்ப்பென் இந்நன்னுதலைப் போ நீ கடிது' என்று தானோபாயத்தால் கூறுகின்முன். இராமனுல் நிகழும் தீங்கு இராவணனுக்கு வாராமல் தான் இடையில் நின்று உதவுவதாகக் கூறியது தானோபாயமாதல் தெளிவு. இங்ஙனம் மூன்று உபாயத்தாலும் அறிவுரை கூறியும் இராவணன், கேளாமையால் தண்டோபாயத்தை மேற்கொண்டு அவனைத் தாக்குகின்முன். கழுகின் வேந்தன் என்ற தகுதிக் கேற்பவே, சடாயுவின் சொற்களும் செயல்களும் நால்வகை அரசியல் உபாயங்களாகவே அமைந்துள்ளமை காணலாம். சிறகுகளும் மூக்கும் கால் நகங்களுமன்றி வேறு படையில்லாத

சடாயு, படைகள் தாங்கிய இருபது கைகளையும் பத்துத் தலைகளையும் உடைய இராவணனைத் தாக்கி, அவன், கொடி, குண்டலம், கவசம், முதலியவற்றை வீழ்த்தியதோடு அவன் தேரையும் குதிரைகளையும் பாகனையும் முடிகளையும் வீழ்த்தி அவனைத் தலைசாய்ந்து அவசமுறச் செய்தான்; கற்பங்கள் பல கண்ட முதுமையுடைய சடாயுவின் இச் செயல் அவன் திறமை மிகுதியைக் காட்டுவதாகும். இறுதியில் சிவன் கொடுத்த தெய்வ வாளால் இராவணன் வெட்ட இறகுகள் இழந்து தரையில் வீழ்ந்தான். கொள் கொம்பு ஒடியக் கொடி துவள்வது போலத் துவண்டு அரற்றும் சீதையைத் தரையோடு தோள்மேல் வைத்துக்கொண்டு இராவணன் தெற்கு நோக்கிச் செல்வதைச் சிறிது தெளிந்த நிலையில் சடாயு பார்க்கின்றான். நம் மருகிக்கு எய்திய வெந்துயர் துடைத்தனம் என்னும் மெய்ப்புகழை விதியினர் நமக்குத் தரவில்லையே! தரும வேலியைச் சிந்தினரே! இனிச் செய் வது என்னை? என்று ஏங்குகின்றான். அவன் ஏக்கச் சொற்களில், சீதையைக் காத்துப் புகழ் கொள்ள வேண்டும் என்ற அவன் விருப் பத்தையும், சீதையைக் காக்க முயன்ற அவனை விதி சதிசெய்து விட்டது என்ற உண்மையையும் காண்கின்றோம். 'என் சிறை அற்றா லும் சீதை கற்பென்னும் இருஞ்சிறை அறாது' என்று கூறி, அமைதி யுறுகின்றான். இச்சொல் நினைதொறும் சுவை நல்கும் சொல்லாதலை உய்த்துணரலாம்.

சடாயு குருதிவெள்ளத்தில் வீழ்ந்து கிடப்பதைக் கண்ட இராம இலக்குவர், குளிர்புனல் தெளித்து உபசரித்தபோது, கண் திறந்து தம் மக்களைப் பார்த்ததும் அன்பினால் தழுவி, இராவணனை வாட்டிய மூக்கால் அவ்விருவரையும் முறைமுறையே உச்சி மோக்கின்ற அச் சடாயுவின் செயல் உருக்கமிக்கதாகவுள்ளது. சீதையைக் காணாமல் வருந்தும் அவர்கட்கு ஆறுதல் கூறும் முகத்தால் விதியின் வலிமை யைப் பலப்பல எடுத்துக் காட்டுகளால் விளக்கும் முறை சிறப்பாக அமைந்துளது. 'இந்திரன் சம்பரனால் உற்ற பழியை நும் தந்தை தயரதன் தன் திரண்ட தோள்வலியால் துடைத்தான்' என்று இறுதியாகக் கூறியது ஆழ்ந்த கருத்துடையதாகும். நும் தந்தை இந்திரனுற்ற பழியையும் துடைத்திருக்கும்போது அவனுடைய மக்க ளாகிய நீர் நுமக்கு நேர்ந்த பழியைத் துடைக்க இயலாது வருந்து தல் முறையன்று என்பதை அவன்கூற்று விளக்குதல் காணலாம். சம்பரனை வென்று தயரதன் இந்திரன் பழியைத் துடைத்த செய்தி, சடாயு கண்ணாரக் கண்ட நிகழ்ச்சியாதலை நினைதல் வேண்டும். அரக்கரால் தள்ளுற்ற அறமும் தேவர் துயரமும் சேர்ந்தே சீதையின் பிரிவை உண்டாக்கின என்ற உண்மையையும் விளக்கி, இராம இலக்குவர் துன்பத்தைத் தணித்தபின், இராவணன் சீதையைத் தரையோடு பெயர்த்துச் சென்றதையும், தன்னாற்றல் முழுதும்

கொண்டு அவனோடு போர் செய்து தடுத்ததையும், தெய்வ வாளால் தன்னை அவன் வீழ்த்தியதையும், சடாயு இறுதியில் கூறி முடிக்கும் திறம், சாலச் சிறப்புடையதாகும். இச்செய்தி கேட்டு, இராமன் சினமிக்கு இத்தீங்கினைக் கண்டுகொண்டிருந்த தேவர்களையும் உலகத்தையும் அழிக்கின்றேன் என்று தொடங்கியபோது சடாயு கூறும் அமைதி சாலச் சிறப்புடையதாகும். 'இராம! அரக்கரால் தமக்குண்டாகிய துன்பத்தை நின்னைக் கொண்டு தீர்க்கலாம் என்று நம்பியிருக்கின்ற தேவரும் முனிவரும் இராவணனை எந்த வலிமையைக் கொண்டு தடுப்பார்கள்? இராவணன் தோள்வலி எத்தகையது என்பதை யான் பட்ட நிலைமைகொண்டு அறியலாம். கமலத் தானே முதலினர் தலைபத்துள்ளாற்கு ஆட்செய்கின்றார்களன்று அறஞ் செய்கின்றார்கள் யாரே?' என்று அமைதி கூறிவிட்டு, 'சீதை வனத்தில் தனித்திருக்க விட்டு, நீங்கள் மானின்பின்போய்க் குலப் பழி கூட்டிக் கொண்டீர்; அது உம் பிழையே யன்றி உலகம் செய் பிழையும் உண்டோ?' என்று இராமன் மேல் குற்றம் காட்டி, அவன் சினத்தைத் தணித்தது, சடாயுவின் துணிவையும் உண்மை கூறும் அவன் உள்ளச் சிறப்பையும் உணர்த்துகின்றது.

இறுதியாக, இனிச் செய்ய வேண்டியது இன்னது என்பதை இராம இலக்குவர்க்குச் சடாயு கூறுகின்றான். அவன் கூற்று இராமனுடைய பரநிலையை உணர்ந்து கூறியது எனலாம். அருந்ததி அனைய கற்பிற் காதலாள் துயரம் நீக்கித் தேவர் தம் கருத்து முற்றி, வேதநூல் முறையின் யாவும் முறையுளி நிறுவி, வேறும் தீதுள துடைத்தி என்ற சொல்லோடு சடாயுவின் உயிர் பிரிகின்றது. இறுதியில் கூறிய சடாயுவின் சொற்கள் இராமாவதாரத்தின் நோக்கத்தையே விவரிப்பதாக அமைந்துள்ளமை காணலாம்.

## இராவணன்

இப்படலத்தில் இராவணனுடைய கொடுஞ்செயல் உச்சநிலை அடைகின்றது. இராவணன் பூண்ட தவவேடம் மிகச் சிறப்பாகப் பேசப்படுகின்றது. இமையா நாட்டமுடைய தேவர்களும், அவன் வேடத்தை உண்மையென்றே மயங்கி நம்பினார்களாம். அத்தகைய பெருமைவாய்ந்த வேடத்தில் இருக்கும் இராவணன், சீதையைக் கண்டவுடன் எண்ணும் எண்ணங்கள் முரண்பட்டனவாய், 'வலியினிலைமையான் வல்லுருவம், பெற்றம் புலியின்றோல் போர்த்து மேய்ந்தற்று' (குறள்-273) என்ற தமிழ் மறைக்குச் சிறந்த எடுத்துக் காட்டாய் அமைந்துள்ளன. காம மயக்கமுற்ற அவன் கண்ணுக்கும் சீதை, திருமகளாகவே காட்சியளிக்கும் உண்மைநிகழ்ச்சியைக் கம்பர் நமக்குக் காட்டுகின்றார். அவள் அழகைக் காண இருபது கண்கள் போதா என்றும், அவள் நலம் துய்க்கத் தவத்தால் பெற்ற

மூன்றரைக் கோடி ஆயுளும் போதாது என்றும், அவளை மூவுலகமும் முறையின் ஆளச் செய்து அவளுக்கு ஏவல் செய்யலாம் என்றும் எண்ணுகின்றான். சீதையின் துயரமிக்க முகத்திலும் ஒளிமிக்கிருத்தலைத் தனக்குள் வியக்கின்றான்.

எவ்விடத்திலிருந்து இங்கு வந்துற்றீர்? என்று சீதை கேட்டவுடன் இராவணன் தவவேடத்தில் மறைந்திருந்துகொண்டு தன் புகழைத் தானே விரித்தும் மிகுத்தும் பேசுகின்ற தன்மை கீழ் மக்களின் இயல்பை நன்கு புலப்படுத்துவதாகவுள்ளது. தம் புகழைக் கேட்டாலும் நாணித் தலைசாய்ந்துநிற்கும் சான்றோர் இயல்போடு வைத்து நோக்கின் இராவணனுடைய தற்புகழ்ச்சியின் இழிவு நன்கு புலப்படும். அங்ஙனம் புகழுங் காலும் இகழ்ச்சியையும் புகழ்ச்சியாகத் திரித்துக் கூறும் இயல்பில் இராவணன் சிறப்புடையவனாக விளங்குகின்றான். கயிலை மலையை இராவணன் எடுக்க முயன்ற காலை ஈசன் கால் விரலால் ஊன்ற அம்மலைக்கு அடியில் அகப்பட்டுக் கொண்டு அழுதான் என்பதே உண்மைநிகழ்ச்சியாகவும், அவ்விகழ்ச்சிக்கு உரிய செயலைத் திரித்து, "ஈசனுண்டிருந்த பேரிலங்கு மால் வரை, ஊசி வேரொடும் பறித்து உருட்டும் ஊற்றத்தான்" என்று தன் புகழ்ச்சிக்கு உரிய செயலாகக் கூறியிருத்தல் காணலாம். 'வெம்மை தீரொழுக்கினன் விரிந்த கேள்வியன்' என்பதும் "இறைவரே யெனும் மும்மையோர் பெருமையும் முற்றும் பெற்றியான்" என்பதும் அத்தகையனவேயாம்.

சடாயு இடையில் வந்து நால்வகை உபாயத்தாலும் நல்லுரை கூறியும் வலிகெடச் செய்தும் தான் கொண்டது விடாது, இராவணன் தன் செயலில் மாறுபாடற்றவனாகவே விளங்கி, 'மூர்க்கனும் முதலையும் கொண்டது விடா' என்ற உரையை மெய்ப்பிக்கின்றவனாகவே ஆனான். 'இரும்புண்ட நீர் மீள்கினும் என்னுழையில் கரும்புண்ட சொல் மீள்கிலள்' என்று கூறிச் சிவன் தந்த வாளால் சடாயுவின் சிறகுகளை வெட்டி வீழ்த்திவிட்டுச் சீதையைக் கொண்டுபோய் அசோக வனத்தில் சிறைவைத்தபின்தான் அமைதியடைகின்றான். காம மயக்கமுற்றவர்கள் மானமும் புகழும் குன்றுவதையோ, நெறி முறைகளையோ, தமக்கு அழிவு வருவதையோ எண்ணமாட்டார்கள் என்பதற்குச் சிறந்த எடுத்துக்காட்டாக இராவணன் விளங்குகின்றமை காணலாம்.

## இராமன்

இராமனுடைய துன்பம் இப்படலத்தில்தான் உச்ச நிலை எய்துகின்றது. மணிமுடி சூடி நாடாளத் தொடங்கும் நாளில், சடைமுடி சூடிக் காடாள நேர்ந்த போதும் கலங்காது மகிழ்ந்தேற்று,

அப்பொழுதலர்ந்த தாமரை மலரையும் வெல்லவல்ல முகத்தனாக இருந்த இராமன், இராவணன் வஞ்சனையால் சீதையைப் பிரிந்த போது அத்துணிவும் மகிழ்ச்சியும் மலர்ச்சியும் இலனாகின்றான். தன் அம்பால் வீழ்கின்ற மாரீசன் தன் குரல்போல் கூவிக்கொண்டு விழுந்தவுடன் இராமன் துன்பம் தொடங்கி விடுகின்றது. இக்குரலை மெய்க்குரலாக இலக்குவன் எண்ணிச் சீதையைத் தனியே விடுத்து வந்து விடுவனோ? என்று ஐயுற்று விரைகின்ற இராமன், தன்னை நோக்கி இலக்குவன் வருவதைக் கண்டு திடுக்கிடுகின்றான்; 'என்னை விதியார் முடித்தது' என எண்ணித் துன்புறுகின்றான். இலக்குவன் தான் வந்த காரணத்தை விளக்கியபோது, இராமன் நடுவுநின்ற நன்னெஞ்சனாய் ஆராய்ந்து, 'வந்தாய் திறத்தினுளதன்று குற்றம்' எனவும், 'மடவாள் மறுக்கமுறுவாள் சிந்தாகுலத்தொ டுரைசெய்த செய்கையது தீதுமன்று' எனவும் கூறி இருவர்பாலும் குற்றமின்மையை விளக்கி, 'வினையேன் முடித்த முடிவால் அந்தோ கெடுத்தது' எனத் தன் குற்றமே என ஏன்றுகொண்ட நிலைமை இராமனுடைய பெருந்தன்மையை விளக்குவதாகும்.

பன்னசாலையில் சீதை இல்லாததைக் கண்டு இராமன் பட்ட துன்ப நிலையையும் திகைப்பையும் கம்பர் உவமை முகத்தால் நன்கு விளக்கியுள்ளார். அவன் திகைப்பைக் கண்ட இலக்குவன், 'தேரினாழியும் தெரிந்தனம்; தீண்டுதலஞ்சிப் பாரினோடுங் கொண்டகன்றதும் பார்த்தனம்; உரனிலாதவர்போல் ஓரும் தன்மை பயன் இன்று; கவர்ந்தவன் தூரம் போவதன் முன் தொடர்தும்' என்று சொல்லித் தூண்டிய பின்னரே சிறிது நினைவு வந்து, இராமன் இலக்குவனோடு தொடர்பவனானான். தேர் சென்ற சுவடு இடையில் மறைந்தது கண்டு இராமன், மெய்யுற வெந்த புண்ணினூடுறு வேலென மனமிகப் புழுங்கி, 'இளவலே! நாமினிச் செய்வதென்?' என்று செய்வதறியாது திகைக்கும் நிலையைக் கம்பர் நமக்குக் காட்டுகின்றார். இராமன் தேவியைப் பிரிந்தபின் சிந்தை திகைத்தான் என்ற குறிப்பை மேல் பல இடங்களில் கம்பர் புலப்படுத்தியே செல்கின்றார். தென்திசை நோக்கிச் செல்கின்றபோது சடாயுவால் வீழ்த்தப்பட்ட இராவணன் கொடியும், கவசமும், குண்டலமும், முடியும் கண்டபோதும் இராமன் பேச்சுத் திகைப்புடையதாகவும் இலக்குவன் பேச்சே தெளிவுடையதாகவும் காட்டிச் செல்லுதல் காணலாம்.

குருதிக் கடலில் மலைபோல் வீழ்ந்து கிடந்த சடாயுவைக் கண்ட இராமன், வெள்ளி மலை மேல் அஞ்சன மலைபோல் வீழ்ந்து மயங்கி உயிர்ப்பற்றுக் கிடந்தவன், இலக்குவன் குளிர்புனல் கொணர்ந்து தெளிக்கத் தெளிந்து, எழுந்து அழுது கூறிய சொற்கள், கல் நெஞ்சையும் கரைக்கும் தன்மையன. சடாயு என்னும் பறவையின்

நன்றி மிக்க செயலை எண்ணி ஏங்கி, 'இம்மாமாயப் புன்பிறவி வேண்டேனே' என்று சொல்லும் சொல், அவ்விராமன் துன்பத்தின் வரம்பை நமக்கு அறிவிக்கின்றது. தன் தந்தையாகிய சடாயுவின் மரணத்திற்கும் தானே காரணம் என்று ஏன்றுகொண்டு வருந்தும் நிலை அவன் பெருந்தன்மையை விளக்குகின்றது. இராவணன் சீதையை மண்ணோடு பெயர்த்து எடுத்துச் சென்றதும், தான் தன்னாலியன்றமட்டும் எதிர்த்ததும், இறுதியில் அவன், வாளால் தன் சிறகை வெட்டி வீழ்த்தியதும், சடாயு கூறியபோது இராமன் சினம் பொங்குகின்றது. 'இராவணன் கொடுஞ் செயலைப் பார்த்துக் கொண்டிருந்த தேவர்களையும் உலகத்தையும் அழிக்கின்றேன்' என்று தொடங்குகின்றான். சடாயுவின் வேம்பும் கடுவும் போன்ற அறிவுரைகளால் இராமன் தான் கொண்ட கோபம் தணிகின்றான். முன் இராமனுக்குக் காடுபுகும் நிலை நேர்ந்தபோது இலக்குவன் சினந்து, 'மண்ணாட்டுநர், காட்டுநர், வீட்டுநர் வந்தபோதும், பெண்ணாட்ட மொட்டேன்' எனக் கூறிக்கொண்டு போர்க் கோலத்தோடு நிற்கக் கண்டு, ஆறாக் கனலாற்று மோரஞ்சன மேகமென்னச் சென்று, செல்லும் சொல் வல்லனாய், அவ்விலக்குவன் கோபத்தைக் காரணம் காட்டித் தணித்த இராமன், இங்குத் தன் கோபத்தைத் தானே தணித்துக்கொள்ளாமல் சடாயுவின் சொல்லால் தணிவதும் வியப்பாகவே யுள்ளது. இதுவும், தேவியைப் பிரிந்த திகைப்பால் விளைந்ததாகக் கொள்ளலாம். சடாயுவின் சொல்லைத் தயரதன் சொல்லாகவே மதித்துச் சீற்றம் தீர்ந்து, 'போயது அவ்வரக்கனெங்கே? புகல்' என்று கேட்டபோது, சடாயு விடை கூற இயலாது உயிர்நீங்கினனாகப் 'பெற்ற தாதை இறந்தனன் இருந்துளேன் யான், இளவலே துறந்தனன் தவஞ் செய்வேனோ? துறப்பனோ உயிரை? என் செய்வேன்' என்ற இரங்கல் அவ்விராமன் உள்ளத்துறு துயரம் முழுமையையும் நமக்குப் புலப்படுத்துகின்றது. இலக்குவன் கூறிய ஆறுதல்மொழியால் துன்பமாறித் தந்தையாகிய தயரதனுக்கு இறுதிக் கடன் செய்யாத குறை தீரச் சடாயுவாகிய தந்தையின் உடம்புக்குத் தன் கையால் இறுதிக் கடன் செய்து, துள்ளிசேர் வெள்ளக் கண்ணனாய் ஆற்றில் குளித்து நீர்க்கடன் அளித்த செயல் இராமன் அன்பின் பெருக்கை நன்கு காட்டுவதாகும்.

---

# 8. சடாயு உயிர் நீத்த படலம்

3417. சங்க டுத்த தனிக்கடன் மேனியாற்
கங்க டுத்த நிலைமை யறைந்தனங்
கொங்க டுத்த மலர்க்குழற் கொம்பனாட்
கிங்க டுத்த தகைமை யியம்புவாம்.

சங்கு அடுத்த தனிக் கடல் மேனியாற்கு
அங்கு அடுத்த நிலைமை அறைந்தனம்;
கொங்கு அடுத்த மலர்க் குழல் கொம்பு அனாட்கு
இங்கு அடுத்த தகைமை இயம்புவாம்.

பொ :—சங்குகள் பொருந்தியுள்ள ஒப்பற்ற கடல் போன்ற நீலமேனியனாகிய இராமனுக்கு அவ்விடத்தில் நேர்ந்த நிலைமையைச் சொன்னோம்; இனி, மகரந்தம் பொருந்திய மலர் சூடிய கூந்தலை யுடைய பூங்கொம்பு போன்ற சீதைக்கு இவ்விடத்தில் நேர்ந்த தன்மையைச் சொல்லுவோம்.

கு :—இச்செய்யுள் கவிக்கூற்று. கடலுக்குச் சங்கடுத்தல் இயல்பு. ஆதலின் தன்மையணிபடக் கூறியவாறு. இராமனுடைய சங்கேந்திய பழைய வடிவை மனத்துட் கொண்டு அதற்கேற்ற உவமையாக. 'சங்கடுத்த தனிக்கடல்' என்று கூறினர் எனினும் அமையும். "சங்குறை கரத்தொரு தனிச்சிலை தரித்தான்" (387) என முன்னர் இராமனைக் குறிப்பிட்டிருத்தல் காணலாம். இதனால் அங்கு அடுத்த நிலைமை, அவதாரத்திற்கேற்ப நடித்ததே என்று கொள்வதன்றிப் பொய்ம் மானை மெய்ம்மானாக மருண்டதாகக் கொள்ளலாகாது என்பதைக் குறிப்பால் அறிவித்தவாறு. கொங்கு - மகரந்தப்பொடி; தேனுமாம். 'மலர்க்குழற் கொம்பனாள்' என்றது, இல்பொருளுவமை. தேன் பொருந்திய மலர்க்கொம்பைச் சேய்மையிலுள்ள வண்டு விரும்பி வந்து கவர்தல் போலச் சீதையும் இலங்கையிலுள்ள இராவணனால் விரும்பிக் கவரப்படப் போகின்றாள் என்பதைக் குறிப்பால் தெரிவிக்கவே 'கொங்கடுத்த மலர்க்குழற் கொம்பனாள்' எனச் சீதையைச் சிறப்பித்தார். (1)

### சீதையின் துயர்நிலை 3418-3419

3418. எயிற லைத்து முழைதிறந் தேங்கிய
செயிர்த லைக்கொண்ட சொற்செவி சேர்தலும்

குயிற லத்திடை யுற்றதொர் கொள்கையாள்
வயிற லைத்து விழுந்து மயங்கினாள்.

எயிறு அலைத்து முழை திறந்து ஏங்கிய
செயிர் தலைக்கொண்ட சொல் செவி சேர்தலும்,
குயில் தலத்திடை உற்றது ஓர் கொள்கையாள்,
வயிறு அலைத்து விழுந்து மயங்கினாள்.

பொ :—(இராமன் குரலால் விளிக்க வேண்டி, மாரீசன்) பற்களை, அதுக்கிக்கொண்டு, குகை போன்ற தன் வாயைத் திறந்து, மரணத்தின் ஏக்கம் தோன்றக் கூறிய, வஞ்சகத்தைத் தன்பாற் கொண்ட (ஏ சீதே! இலக்குவா! என்ற) சொல், சீதையின் செவியில் பட்டவுடன், துணை இழந்த ஒரு குயில், தானிருந்த கிளையிலிருந்து தரையிடை வீழ்ந்த ஒரு தன்மை போன்றவளாய், வயிற்றின்மேல் அடித்துக்கொண்டு தரையில் விழுந்து மயக்கமுற்றாள்.

கு :—மாரீசன், தன் குரலை மாற்றி இராமன் குரலில் பேச மேற்கொண்ட முயற்சி தோன்ற, 'எயிறலைத்து முழைதிறந்தேங்கிய' என்றார். முழை உவமை ஆகுபெயராய் மாரீசன் வாயை உணர்த்தியது. ஏங்கிய சொல்; செயிர் தலைக்கொண்ட சொல் என இயையும். செயிர் - குற்றம்; இங்கு வஞ்சகத்தை யுணர்த்தியது. இராமன் அழைப்பதுபோல சீதே! இலக்குவா! என மாரீசன் அழைத்து, இலக்குவனையும் சீதையினிடமிருந்து பிரிக்கச் செய்தது வஞ்சனையாதல் காணலாம். சீதை மயங்கி வீழுங்கால் அழுதேங்கிய குரல், குயிலின் குரல் போன்றதாகலின், 'குயில் தலத்திடை யுற்றதொர் கொள்கையாள்' எனக் குயிலை உவமை கூறினர். அது சிறகடித்துக் கொண்டு வீழ்தலைச் சீதை வயிறலைத்து வீழ்தற்கு உவமையாக்கலுமாம்; துன்பம் நேர்ந்தபோது வயிற்றின்மேல் அடித்துக் கொள்ளுதல் மகளிர்க்கு இயல்பு ஆதலின். மயங்கினாள் என்றது, துன்ப மிகுதியால் மெய்ம்மறந்திருத்தலை யுணர்த்தியது. மாரீசனின் வஞ்சகச் சொல் செவியுற்றவுடன் சீதை குயிலென ஏங்கி அழுது, அக்குயில் சிறகடித்து வீழ்தல்போல் வயிற்றில் அடித்துக் கொண்டு தரையில் வீழ்ந்து மயக்கமுற்றாள் என்க. இதனால், சீதை இராமன் இறந்துபட்டதாக எண்ணித் துன்புற்றமை உணர்த்தியவாறு. இராமன் இறந்துபட்டதாக எண்ணித் துன்புறும் சீதைக்கு உவமையாகக் கூறப்பட்டமையால் குயில் துணையிழந்த குயில் என்பது பெறப்படும், (2)

3419. பிடித்து நல்கிவ் வுழையெனப் பேதையேன்
முடித்த னென்முதல் வாழ்வென மொய்யழல்

கொடிப்ப டிந்த தெனநெடுங் கோளரா
விடிக்கு டைந்த தெனப்புரண் டேங்கினுள்.

"'பிடித்து நல்கு, இவ் உழை' எனப் பேதையேன்
முடித்தனென் முதல் வாழ்வு" என, மொய் அழல்
கொடிப் படிந்தது என, நெடுங் கோள் அரா
இடிக்கு உடைந்தது எனப் புரண்டு ஏங்கினுள்.

பொ:—"'இந்த மானைப் பிடித்து எனக்குக் கொடு' என்று கூறிப் பேதையேனுகிய யான் என் வாழ்வுக்கு முதலாகிய கணவனையே முடித்துவிட்டேன்" என்று கூறிக்கொண்டு, நெருங்கிய நெருப்பில் கொடி படிந்தது போலவும், நீண்ட வலிய பாம்பு இடியொலி கேட்டு வலியிழந்து புரள்வது போலவும் தரையில் புரண்டு அழுது ஏங்கினுள்.

கு:—சீதை, தன்னைப் பேதையேன் என்றது, தன் தகுதிக்கு ஏலாத மானெடு விளையாடும் செயலில் காதல் கொண்டு தன் காதலனையே யிழந்த அறியாமை நினைந்து. "பேதைமையுளெல் லாம் பேதைமை காதன்மை கையல்லதன்கட் செயல்" (குறள்-832) என்றது நினைக்க. 'வாழ்வு முதல் முடித்தனென்' என மாற்றுக. சீதைக்கு வாழ் முதல் இராமன். வாழ்வு முதல் - வாழ்விற்குக் காரண மானவன். கற்புடையவளின் வாழ்வு கணவனைப் பின்பற்றியதே என்ற நியதி புலப்பட இராமனை, 'வாழ்வு முதல்' என்ருள். 'போற்றி யென் வாழ்முத லாகிய பொருளே' (திருவாசகம். திருப்பள்ளி யெழுச்சி. 1) என மணிவாசகர் தம் வாழ்விற்குக் காரணமாயிருக்கும் கடவுளைக் குறிப்பிடுதலும் காண்க. முடித்தல் ஈண்டுக் கொல்லுதலை யுணர்த்தியது. பெண்டிர்க்குக் கணவனேடு வாழ்தலாகிய வாழ்க்கையே முதன்மையானது (சிறப்புடையது) ஆதலின், அம்முதன்மை யான வாழ்வை யானே முடித்துவிட்டேன் என்ருளாகக் கொண்டு, முதல் வாழ்வு எனக் கிடந்தாங்கே கூறினும் அமையும். வஞ்சனைக் குரலால் துன்புற்றுப் புரளும் சீதைக்கு, இடிக்குரல் கேட்டு வருந்திப் புரளும் பாம்பு, பொருந்திய உவமையாதல் காணலாம், தீயில் வீழ்ந்த கொடி துவண்டு துடிப்பதுபோலச் சீதை துவண்டு துடிதுடித்தாள் என்க. (3)

### சீதை இலக்குவனைச் சினந்து கூறியது

3420. குற்றம் வீந்த குணத்தினெங் கோமகன்
மற்றை வாளரக் கன்புரி மாயையா

லிற்று வீழ்ந்தன னென்னவு மென்னய
னிற்றியோ விளையோ யொருநீ யென்றாள்.

"குற்றம் வீந்த குணத்தின் எம் கோமகன்,
மற்றை வாள் அரக்கன் புரி மாயையால்,
இற்று வீழ்ந்தனன் என்னவும், என் அயல்
நிற்றியோ? இளையோய்! ஒரு நீ?" என்றாள்.

பொ:—'இளவரசே! குற்றம் சிறிதும் இல்லாத குணக்கடலாகிய எம் தலைவன், பகையாக வந்த கொடிய அரக்கன் செய்த மாயையால் வலிமை கெட்டு வீழ்ந்தான் என்று (அவன் கூக்குரல்) அறிவிக்கவும், விரைந்து சென்று உதவி செய்யாது, ஒரு தமியனாகிய நீ என்பக்கத்தில் அமைதியாக நிற்கின்றாயோ?' என்று சினந்து கூறினாள்.

கு:—குணத்தின் தூய்மை புலப்பட, குற்றம் வீந்த குணம் என்றார். குற்றம் கலவாத குணம் என்றவாறு. 'குறைவிலா நிறைவே' (திருவாசகம் – 22–5) என்றதும் காண்க. இலக்குவனோடு மாறுபட்டுக் கூறுகின்றாள் ஆதலின் நம் கோமகன் என்னாது எங் கோமகன் என்றாள். அவனுக்கும் கோமகன் என்று கருதியிருப்பானாயின், 'இராமன்பால் விரைந்து ஓடியிருப்பான் அன்றே' என்பது சீதையின் கருத்து. உடன் பிறந்தவன் குற்றமே நிறைந்தவனாயினும், அவனுக்கு ஆபத்து நேர்ந்த போது தம்பி விரைந்து உதவுவதே உலகியல்பாகவும், குற்றம் வீந்த குணத்தினனாகிய அண்ணன் இற்று வீழ்ந்ததை அவன் குரலால் அறிந்தும், வருத்தம் சிறிதுமின்றி, விரையாது, அமைதியாக நிற்றல் வியப்பினும் வியப்பு என்றவாறு. மற்றை என்றது, பகை என்னும் கருத்தினது. வாள் - கொடுமை. இயல்பான உடல் வலிமையால் அரக்கன் இராமனைக் கொல்லல் இயலாது என்ற நம்பிக்கையால் சீதை அரக்கன் புரி மாயையால் இற்று வீழ்ந்தனன் என்றே கூறினாள். இற்று வீழ்ந்தவன் பக்கல் செல்லாது நலமுடனிருக்கும் தன் பக்கல் நிற்பதற்கு வேறு காரணம் இருத்தல் வேண்டும் என்ற கருத்தால் 'என்னயல் நிற்றியோ?' என்றாள். உலகியலுக்கு மாறுபட்ட தனித்தன்மையுடைய நீ என்பாள் 'ஒரு நீ' என்றாள் எனலுமாம். பகைவரை வெல்லுதலில் கூட்டொருவரையும் வேண்டாத கொற்றவனாகிய நீ, அண்ணனை அலறச் செய்தானை விரைந்து கொல்லாது இருத்தற்குரியையல்லை என்ற கருத்தும் இதில் புலப்படும். பெண்பாலான என் அயல் ஆடவனாகிய நீ தனியாக இருப்பது அறமன்று என்பது புலப்படுத்தினாளுமாம். "ஈன்றாள் மகள் தன்னுடன்பிறந்தா ளாயினுஞ், சான்றார் தமித்தா

வுறையற்க வைம்புலனுந், தாங்கற் கரிதாகலான்" (ஆசாரக் கோவை -65) என்ற விதியும் காண்க. (4)

## இலக்குவன் கூறும் அமைதி 3421-3427

3421. எண்மையா ருலகினி லிராமற் கேற்றமோர்
★ திண்மையா ருளரெனச் செப்பற் பாலரோ
பெண்மையா லுரைசெயப் பெறுதி ராலென
வுண்மையா னனையவட் குணரக் கூறினான்.

"எண்மையார், 'உலகினில் இராமற்கு ஏற்றம் ஓர்
திண்மையார் உளர்' எனச் செப்பற் பாலரோ?
பெண்மையால் உரைசெயப் பெறுதிரால்" என
உண்மையான் அனையவட்கு உணரக் கூறினான்.

பொ :—'அறிவுடையார், 'இவ்வுலகத்தில் இராமனைக்காட்டிலும் ஏற்றம் பெற்ற ஒப்பற்ற திண்மையுடைய ஒருவர் உளர்' என்று சொல்லுவார்களோ? (சொல்லாரன்றே! அங்ஙனமாகவும்) நீர் பெண்ணியல்பால் இவ்வாறு சொல்லுகின்றீர்' என்று அச்சீதைக்கு உண்மையுணர்ந்தவனாகிய இலக்குவன் உணருமாறு சொன்னான்.

கு :—இராமனுக்கு ஏற்றமான திண்மையார் இலராகவே, இராமன் அலறியதாகக் கேட்ட குரல் உண்மையானதன்று; என்று புலப்படுத்தியவாறு. எண்மையார் - அறிவுடையவர். எண் - அறிவு, "தொக்கிருந் தெண்ணினா னெண்ணப்படும்" (நான்மணிக். 77) என்புழியும் எண் அப்பொருட்டாதல் காணலாம். 'உரவோ ரெண்ணினு மடவோ ரெண்ணினும், பிறர்க்கு நீ வாயினல்லது நினக்குப், பிறருவமமாகா வொருபெருவேந்தே!' (பதிற்றுப்பத்து. 73) என்பது ஒப்பு நோக்கத் தகும். இராமனுடைய ஆண்மையைக்கண்டு பழகியும் சீதை இவ்வாறு சொல்ல நேர்ந்தது, அவள் பெண்ணியல் பால் ஆம் என்ற உண்மையை அஞ்சாது கூறினமை தோன்ற 'அனையவட்குணரக்கூறினான்' என்றார். "நுண்ணறிவுடையோர் நூலொடுபழகினும் பெண்ணறிவென்பது பெரும் பேதைமைத்தே" என்ற ஆன்றோர் உரையும் காண்க. பெரும்பேதைமையுடைய அவளும் உணரும் வண்ணம் கூறினான் என அவன் சொல் வன்மையைப் புலப்படுத்தியவாறு. இராமனும் சீதையும்போல் அரக்கர் மாயத்திற்கு மயங்காது உண்மை நிலையிலிருந்தவன் என்பார் இலக்குவனை 'உண்மையான்' என்றார். அவன் உணரக்கூறியவற்றை வருங்கவிகளில் காணலாம். (5)

3422. ஏழுமே கடலுல கேழு மேழுமே
சூழுமேழ் மலையவை தொடர்ந்த சூழல்வாய்
வாழுமே ழையர்சிறு வலிக்கு வாளமர்
தாழுமே யிராகவன் றனிமை தையலீர்.

"ஏழுமே கடல், உலகு ஏழும் ஏழுமே,
சூழும் ஏழ் மலை, அவை தொடர்ந்த சூழல்வாய்
வாழும் ஏழையர் சிறுவலிக்கு, வாள் அமர்,
தாழுமே இராகவன் தனிமை? தையலீர் !"

பொ :—"அம்மையீர்! கடல்கள் ஏழும், உலகம் பதினான்கும், உலகில் பரவியுள்ள ஏழு குலமலைகளும் ஆகியவற்றிலும் அவற்றைச் சார்ந்த இடங்களிலும் வாழ்கின்ற அற்பர்களின் சிறு வலிமைக்கு இராகவனுடைய தனிமை வாட்போரில் தாழ்ந்து விடுமோ? (தாழ்ந்து விடாது.)"

கு :—முதலடியில் ஏகாரம் இரண்டும் எண்ணுப்பொருளன. ஏழ்கடலும் ஏழுமலையும் பதினான்குலகங்களில் அடங்குமேனும் அவற்றின் சிறப்பியல்பு நோக்கி வேறு எண்ணினான். மலைசார்ந்த இடத்தையும் கடல் சார்ந்த இடத்தையும் தழுவ 'அவை தொடர்ந்த சூழல்வாய்' என்றான். இராமன் தனியாய்ச் சென்றமையால் இந் நிலை நேர்ந்தது என்று கருதும் சீதையின் குறிப்பறிந்து, இராகவன் தனிமை, ஏழுலகத்தும் வாழ்வோர் வலிமைக்குத் தாழ்ந்ததன்று; அவர் யாவரும் திரண்டுவரினும் அவரெல்லோரையும் அழிக்கும் ஆற்றல் இராமனுக்குண்டு என்று இலக்குவன் விளக்கியவாறு. வாள் அமர் என்புழி வாள் ஏனைப்படைக்கலங்களையும் உணர்த்தி நின்றது. வாளமர் - கொடிய போர் எனலும் ஆம். ஏழையர் - சிறியர். இராமன் வலிமை நோக்க உலகர் அனைவரும் சிறியரே என்றவாறு. தாழுமே என்புழி ஏகாரம் வினாப்பொருளது; தாழாது என்றவாறு. திக்கு விசயம் செய்த ரகுவின் மரபில் வந்தவன் என மரபாலும் பெருமையுடையவன் என்பது விளங்குமாறு 'இராகவன்' என்ற பெயரால் கூறினான். (6)

3423. பாரெனப் புனலெனப் பவனம் வான்கனல்
பேரென வவையவன் முனியிற் பேருமால்
காரெனக் கரியவக் கமலக் கண்ணனை
யாரெனக் கருதியிவ் விடரி னாழ்கின்றீர்.

"பார் எனப் புனல் எனப் பவனம் வான், கனல்
பேர் என அவை அவன் முனியில் பேருமால்;
கார் எனக் கரிய அக் கமலக் கண்ணனை
யார் எனக் கருதி, இவ் இடரின் ஆழ்கின்றீர் ?"

பொ :—"பூமியும் நீரும், காற்றும், ஆகாயமும், நெருப்பும் பெயர்வனவாக என அவன் கோபித்தால் நிலைபெயரும்; மேகம் போலும் கரிய நிறத்தினையுடைய அந்தத் தாமரைக் கண்ணனை, யார் என்று நினைத்துக் கொண்டு இத்தகைய துன்பக்கடலில் ஆழ்கின்றீர்கள் ?"

கு :—எண்ணுப் பொருளில் வந்த 'என' இடையிட்டுவந்து எண்பொருள் தோறும் இயைந்தன. பேர்தல் என்றது, நிலைகுலைதலை. ஐம்பெரும் பூதங்களே இராமன் கோபித்தால் நிலைகுலையும் என்றால் அப்பூதங்களின் பரிணாமமாகிய உடம்புகளைக் கொண்ட உயிர்கள் அவனை என்ன செய்ய இயலும்? என்றவாறு. இராமன் திருமாலின் அமிசமே என்பதை, அவன் கார் நிறத்தாலும் கமலக் கண்களாலும் தெளியலாயிருக்க, அங்ஙனந் தெளியாது எளிய மனிதனாகவே கருதி, அரக்கனால் கொல்லப்பட்டதாக நம்பி, இவ்வாறு துயர்க்கடலில் ஆழ்கின்றீர் என்பான், காரெனக் கரியவக் கமலக்கண்ணனை எனவும், யாரெனக்கருதி இவ்விடரினாழ்கின்றீர்? எனவும் கூறினான். அவன் திருமாலே என்பது தேறி இத்துயர் தணிக என்றவாறு. ஆழ்கின்றீர் என்ற வினையால் இடர்க்கடல் என்ற குறிப்புருவகம் வருவிக்கப்பட்டது. (7)

3424. இடைந்துபோய் நிசிசரற் கிராம னெவ்வம்வந்
தடைந்தபோ தழைக்குமே யழைக்கு மாமெனின்
மிடைந்தபே ரண்டங்கண் மேல கீழன
வுடைந்துபோ மயன்முத லுயிரும் வீயுமால்.

"இடைந்துபோய் நிசிசரற்கு, இராமன், எவ்வம் வந்து
அடைந்த போது அழைக்குமே? அழைக்குமாம் எனின்,
மிடைந்த பேர் அண்டங்கள், மேல, கீழன,
உடைந்துபோம்; அயன் முதல் உயிரும் வீயுமால்"

பொ :—"இராமன் ஓர் அரக்கனுக்குத் தோற்றுப் போய்த் துன்பம் அடைந்தபோது உதவிக்காக நம்மை அழைப்பானோ? (அழையான்.) அவ்வாறு அவன் துன்பத்தால் அழைப்பானாயின் இவ்வுலகிற்கு மேலும் கீழுமாய் நெருங்கியுள்ள பெரிய அண்டங்கள் எல்

லாம் உடைந்து அழிந்துபோகும்; பிரமன் முதலாகிய உயிர்களும் அழியும்."

கு :—இடைதல் - தோற்றல். நிசிசரன் - இரவில் இயங்குகின்றவன்; அரக்கன். எவ்வம் - துன்பம். அரக்கனுக்குத் தோற்றலும், துன்புறுதலும் உதவிக்குப் பிறரையழைத்தலும் இராமன்பாலுளவாகா என்பது கருத்து. எல்லா அண்டங்களுக்கும் ஆதாரமாய் எல்லா உயிர்கட்கும் உயிராய் இருப்பவன் இராமன் ஆதலின், அவன் அரக்கனுக்குத் தோற்றுத் துன்புற்ருன் எனின், அவ்வண்டங்கள் உடைந்துபோம்; பிரமன் முதலிய உயிர்களும் அழியும். அவைஅங்ஙனம் ஆகாமையால் இராமன் அரக்கனுக்குத் தோற்றுத் துன்புற்று நம்மை அழைக்கவில்லை என்பதை அநுமானத்தால் உணரலாம் என்றவாறு. பிரமனும் திருமாலின் உந்தியில் தோன்றியவனே ஆதலின் 'அயன் முதல் உயிரும்' என்று கூறினன். 'அண்டங்கள் மேல கீழன உடைந்துபோம்' என்பதற்கு அண்டங்கள் தலைகீழாய் மாறி உடைந்து போகும் எனலும் ஆம். (8)

**3425.** மாற்றமென் பகர்வது மண்ணும் வானமும்
போற்றவன் றிரிபுர மெரித்த புங்கவ
னேற்றிநின் றெய்தவில் லிற்ற தெம்பிரா
ணுற்றலி னமைவதோ ராற்ற லுண்மையோ.

"மாற்றம் என் பகர்வது? மண்ணும் வானமும்
போற்ற, வன் திரிபுரம் எரித்த புங்கவன்
ஏற்றி நின்று எய்த வில் இற்றது, எம்பிரான்
ஆற்றலின் அமைவது ஓர் ஆற்றல் உண்மையோ?"

பொ:—"(நீர், கண்டதை எடுத்துக்காட்டாது) சொல்லால் அவன் ஆற்றலைச் சொல்வது எதற்கு? மண்ணுலகும் வானுலகும் போற்றுமாறு வலிதாகிய திரிபுரத்தை எரித்த சிவன் நாண் ஏற்றி நின்று அம்பு எய்த வில், (நும் திருமணத்திற்காக வளைத்தபோது) ஒடிந்தது, எம்பிரான் ஆகிய இராமனுடைய ஆற்றலுக்கு ஏற்றவாறு அமையத்தக்கதோர் ஆற்றல் அதற்கு உண்மையாலோ? இல்லாமையாலன்றோ?''

கு :—சீதைக்குத்தெரிந்த செயலை எடுத்துக்காட்டப்போகின்றமையால் வெறுஞ்சொல் வேண்டா என்பான், 'மாற்றம் என்பகர்வது?' என்ருன். சிவன் வில்லின் ஆற்றல் தோன்ற, ''வன் திரிபுரம் எரித்த புங்கவன் ஏற்றிநின்று எய்தவில்'' என்ருன். இராமன் கையில் தங்குதற்கேற்ற ஆற்றல் அச்சிவதனுசுக்கு இல்லாமையினுல்தான்

இற்றது ஆதலின், அவன் ஆற்றலைப்பற்றி ஐயங்கொள்ள இட மில்லை என்றவாறு. "வேந்தர், அல்காக்கை கூகையைக் கண்டு அஞ்சினவாம் என அகன்றார்" (772) எனவும், "அன்று முதலின்றள வும் ஆருமந்தச் சிலையருகு, சென்று மிலர் போயொளித்தார் தேர் வேந்தர் திரிந்துமிலர்" (773) எனவும் அவ் வில்லின் ஆற்றலுக்குத் தோற்று இவ்வுலகத்து வேந்தர்களெல்லாம் ஒளித்த செய்தி கூறப் படுதல் காணலாம். இவ்வுலகத்து வேந்தர் யாரும் வளைக்க இய லாது ஒளித்தற்குக் காரணமான சிவன் வில்லை யொடித்த இராமனை வெல்லும் ஆற்றலுடையோர் இல்லை என்பதை இதனால் புலப்படுத் தினான் இலக்குவன். வில் இற்றது, ஆற்றல் இன்மையாலன்றோ? எனக் கருத்துப் பொருளால் முடிக்க. (9)

3426. காவல னீண்டுநீர் கருதிற் றெய்துமேன்
மூவகை யுலகமு முடியு முந்துள
தேவரு முனிவரு முதல செவ்வியோ
ரேவரும் வீவர்நல் லறமு மெஞ்சுமால்.

"காவலன், ஈண்டு நீர் கருதிற்று எய்துமேல்,
மூவகை உலகமும் முடியும்; முந்து உள
தேவரும் முனிவரும் முதல செவ்வியோர்
ஏவரும், வீவர்; நல் அறமும் எஞ்சுமால்."

பொ:—"உலகக் காவலனாகிய இராமன், நீர் கருதிய நிலையை அடைவானாயின், விண், மண், பாதலம் என்ற மூவகையுலகமும் அழி யும்; அதுவே யன்றி யாவர்க்கும் முற்பட்டுள்ள தேவரும் முனிவரும் முதலாகிய சிறப்புடையோர் யாவரும் அழிவர்; அதுவேயுமன்றி நல்ல தருமமும் சிதையும்."

கு:—காவலன் என்ற சொல், மன்னவன் என்ற பொருளோடு காத்தற்கடவுளின் அமிசமானவன் என்ற பொருளையும் உடனுணர்த் திற்று. காப்பவனே வீந்தால் காக்கப்படுவனவும் காக்கப்படுவோரும் வீதல் திண்ணம் என்பதுணர்த்தி மூவகையுலகம் முதலியன வீயாமை யின், காவலனாகிய இராமனும் வீந்திலன் என்பதை வலியுறுத்திய வாறு. 'கோமகன் இற்று வீழ்ந்தனன்' என்று சீதை கூறியதைத் தன் வாயால் கூறவும் கூசினவனாய் 'நீர் கருதிற்றெய்துமேல்' என்று கூறினான். சான்றோர்தம் வாயால் சொல்லக் கூசும் சொற் களை இவ்வாறு வேறொன்றால் கூறுவதுண்டு என்பதை: முத்தி நாதன் மெய்ப்பொருள் நாயனாரை வாளால் வெட்டினான் என்று கூறவேண்டிய இடத்தில் சேக்கிழார், "பத்திரம் வாங்கித் தான்

முன் நினைந்தவப்பரிசே செய்ய'' (மெய்ப்பொருள்-15) என்று கூறி யுள்ளமையாலும் தெளியலாம். உயிர்களுள் தேவரும் முனிவரும் முன்னே தோன்றினவர் என்ற கருத்தால் 'முந்துள தேவரும் முனிவரும்' என்றார். செவ்வியோர்-சிறந்தோர். எவ்வுயிரையும் காக்கும் அருளாளர்க்கு அல்லலுறுவதை அறக்கடவுள் கண்டு பொறுத்துக் கொண்டிராது என்பான், 'அறமும் எஞ்சுமால்' என்றான். 'அல்லல் அருளாள்வார்க்கில்லை வளிவழங்கும் மல்லல்மா ஞாலங் கரி'' (குறள். 245) என்பதும் காண்க. உம்மைகள் உயர்வு சிறப்போடு எண்ணுப் பொருளையும் உணர்த்தின. (10)

3427. பரக்கவென் பகர்வது பகழி பண்ணவன்
றுரக்கவங் கதுபடத் தொலைந்து சோர்கின்ற
வரக்கனவ் வுரையெடுத் தரற்றி னனதற்
கிரக்கமுற் றிரங்கலி ரிருத்தி ரீண்டென்றான்.

"பரக்க என் பகர்வது? பகழி, பண்ணவன்
துரக்க, அங்கு அது படத் தொலைந்து சோர்கின்ற
அரக்கன் அவ் வுரை எடுத்து அரற்றினன்; அதற்கு
இரக்கம் உற்று இரங்கலிர்; இருத்திர் ஈண்டு" என்றான்.

பொ :—''இராமன் ஆற்றலைப் பற்றி விரிவாகப் பேசுவது எதற்கு? தெய்வத்தன்மையுடைய இராமன் அம்பினை எய்ய, அவ்விடத்து அவ்வம்பு பட்டமையால் வலி தொலைந்து வீழ்கின்ற மான்வடிவாக வந்த அரக்கன், (இராமன் சொல்வதுபோன்று) அச்சொல்லை அக் குரலெடுத்துக் கூவினன்; அதற்காக இரக்கம் கொண்டு புலம்பாதீர் கள்; இங்கு அமைதியாக இருங்கள்'' என்றான்.

கு :—தெய்வத்தன்மை யுடையவன் இராமன் என்பது புலப்பட அவனைப் 'பண்ணவன்' என்றான். பண்ணவன் - தேவன். துரத் தல் - செலுத்தல். சோர்தல் - வீழ்தல். அரக்கன் என்றது மாரீசனை. அவ்வுரை என்பதில் சுட்டு, பண்டறிசுட்டு. உரை—சீதே! இலக்குவா! என்ற சொல். சேய்மையிலுள்ள சீதைக்குக் கேட்க வேண்டும் என்ற எண்ணத்தால் உரத்துக் கூவினமை தோன்ற 'எடுத்தரற்றினன்' என்றான். இரங்கல் - அழுதுபுலம்பல். தரையில் விழுந்து புரண்டு அழுகின்றநிலையினள் ஆதலின், 'இருத்திர் ஈண்டு' என்று கூறவேண் டியதாயிற்று. அழைத்த குரல் மாரீசனுடையதே ஆதலின் அதற்கு இரங்க வேண்டுவதின்று என்பது கருத்து. (11)

## சீதையின் கடுஞ்சொல் 3428, 3429

**3428.** என்றவ னியம்பலு மெடுத்த சீற்றத்தள்
கொன்றன வின்னலள் கொதிக்கு முள்ளத்த
ணின்றநின் னிலையிது நெறியிற் றன்றென
வன்றறு கண்ணினள் வயிர்த்துக் கூறுவாள்.

என்று அவன் இயம்பலும், எடுத்த சீற்றத்தள்,
கொன்றன இன்னலள், கொதிக்கும் உள்ளத்தள்,
“ நின்ற நின் நிலை இது, நெறியிற்று அன்று ” என,
வன் தறுகண்ணினள், வயிர்த்துக் கூறுவாள்.

பொ :—என்று இலக்குவன் சொல்லுதலும், பொங்கி யெழுந்த கோபத்தை யுடையளாய்த் தன்னைக் கொன்றாற்போன்ற துன்பத்தை யுடையவளாய்க் கொதிக்கின்ற மனமுடையவளாய், (அல்லலுற் றழைத்த இராமன்பக்கல் போகாது பெண்பாலாகிய) என் பக்கத்தில் நின்ற நினது நிலைமையாகிய இது, நல்ல நெறியிற் சேர்ந்த தன்று ” என்று கொடிய தறுகண்மை யுடையளாய்ப் பகைத்துச் சொல்லுவாளானாள்.

கு :—முன்னிரண்டடியில் இலக்குவன்சொல்லைக் கேட்டவுடன் சீதைக்கு உண்டான மனநிலையை விளக்கியவாறு. தன் கணவன் அல்லலுற்று அரற்றியதைக் கேட்டும் அங்குப் போகாது, தன்னையும் அமைதியாக இருக்கச் சொன்ன சொல், தன்னைக் கொல்வது போன்ற வருத்தத்தைச் சீதைக்குக் கொடுத்தது என்பார், ‘கொன்றன இன்னலள் ’ என்றார். அல்லலுற்றரற்றிய அண்ணன் பக்கல் போகாது, ஒரு பெண்ணின்பக்கல் நிற்பது அவன் வஞ்சனையால் தன்னை யடைவதற்கே என்ற குறிப்பினள் ஆதலின், ‘நின்ற நின் நிலையிது நெறியிற்று அன்று ’ என்றாள். வான்மீகத்தில் வெளிப்படையாகவே இது சொல்லப்படுகிறது. தறுகண் - அஞ்சாமை; இது கண்ணால் புலனாகத்தக்கது ஆகலின் அப்பெயர்த்தாயிற்று. வயிர் - செற்றம்; பகைமை. (12)

**3429.** ஒருபகல் பழகினா ருயிரை யீவரால்
பெருமக னுலைவுறு பெற்றி கேட்டுநீ
வெருவலை நின்றனை வேறென் யானினி
யெரியிடைக் கடிதுவீழ்ந் திறப்பெ னீண்டெனா.

"ஒருபகல் பழகினர் உயிரை ஈவரால்;
பெருமகன் உலைவுறு பெற்றி கேட்டும், நீ
வெருவலை நின்றனை; வேறு என்? யான் இனி,
எரியிடைக் கடிது வீழ்ந்து இறப்பென், ஈண்டு" என.

பொ:—"ஒருநாள் பழகினவர்களும் (அன்பருக்காக) உயிரையும் கொடுப்பார்கள்; அங்ஙனமிருக்க அண்ணன் இறந்துபடும் தன்மையை அவன் குரலால் கேட்டும், அவன் உடன் பிறந்து பல்லாண்டு பழகிய நீ. அஞ்சுதலும் செய்யாது, கவலையின்றி நிற்கின்றாய்; இனி, யான் கூறவேண்டியது வேறு என்னுளது? யான் இப்பொழுது இங்கு நெருப்பில் விரைந்து விழுந்து உயிர் விடுவேன்" என்று கூறி.

கு:—'காட்டெரி தொடர்கின்றுடனை' என அடுத்த செய்யுளில் முடியும். பழக்கத்தின் காலச்சிறுமைக்கு 'ஒரு பகல்' கூறியவாறு. ஒருபகல் என்பதற்கு அரைநாள் என்றும் பொருள் கூறலாம்; இரவும்பகலும் சேர்ந்ததே ஒரு நாள் எனப்படுதலின். பழகியகாலம் சிறிதாயினும், அன்பின் அகலத்தால், ஈதற்கரிய உயிரையும் ஈதல் உலகியலாகவும், உடன்பிறந்து பல்லாண்டு பழகியுள்ள நீ, அண்ணன் உலைவுறும் தன்மை கேட்டும் வெருவாது நிற்பது வியத்தற்குரிய கொடுமையது என்றவாறு. உயிரையும் என்ற உம்மை விகாரத்தால் தொக்கது. பெருமகன் என்றது, அண்ணனை. உடன்பிறந்த நீ அவன் இறக்கவும், வெருவாது இருக்கின்றாய், இடையில் வந்த யான், அவன் பிரிவு பொறேன்; எரியில் வீழ்ந்து இறப்பேன் என்றாள். பசைந்தாரிற் றீர்தலில் தீப்புகுதல் நன்று (நான்மணிக்கடிகை. 13) ஆகலின் அன்புறு கொழுநனைப்பிரிந்து வாழ்தலினும் எரியிடை வீழ்ந்து இறத்தல் நன்று என்பது கருத்து. (13)

## இலக்குவன் சீதையை விலக்கி வணங்குதல்

3430. தாமரை வனத்திடைத் தாவு மன்னம்போற்
றூமவெங் காட்டெரி தொடர்கின் றுடனைச்
சேமவிற் குமரனும் விலக்கிச் சீறடிப்
பூமுக நெடுநிலம் புல்லிச் சொல்லுமால்.

தாமரை வனத்திடைத் தாவும் அன்னம் போல்,
தூம வெம் காட்டு எரி தொடர்கின்றாள்தனைச்
சேம வில் குமரனும் விலக்கிச் சீறடிப்
பூ முக நெடு நிலம் புல்லிச் சொல்லுமால்.

பொ :—செந்தாமரைக் காட்டிடை நுழையத் தாவிச் செல்லும் அன்னப்பறவைபோலப் புகையையுடைய கொடிய காட்டுத்தீயினை நெருங்குகின்ற சீதையை, பாதுகாப்பதற்குரிய வில்லையுடைய இலக்குவனும் தடுத்து, அவள் சிறிய பாதமலர்களின் முன்னுள்ள நெடிய நிலத்தில் வீழ்ந்து வணங்கிச் சொல்லுவானானன்,

கு :—காட்டுத்தீக்குச் செந்தாமரை வனம் நிறத்தால் உவமை. இன்புறுத்தும் தாமரைவனத்திடைத் தாவும் அன்னம்போல் துன்புறுத்தும் காட்டுத்தீயிடைச் சீதை நெருங்கினாள் என்க. "எமக்கெம் பெருந்தோட்கணவன் மாய்ந்தென வரும்பற, வள்ளித ழவிழ்ந்த தாமரை, நள்ளிரும் பொய்கையும் தீயுமோரற்றே (புறநா. 246) என்றதும் காண்க. நடையாலும் மென்மைத்தன்மையாலும் அன்னம் சீதைக்கு உவமமாயிற்று. சேமம் - காவல். விலக்குதல் - தடுத்தல். பெண்டிர்க்கு அடி சிறுத்திருத்தலே அழகு ஆதலின் சீறடி எனச் சீதையின் அடியைச் சிறப்பித்தார். "நுதலடி நுசுப்பென மூவழிச் சிறுகி" (கலித் - 108) என்றார் நல்லுருத்திரனாரும். அடியைப் பூவாக வுருவகம் செய்தவாறு. முகம் என்றது, திருவடிக்கு முன்னுள்ள இடத்தை. (14)

## இலக்குவன் செல்ல உடன்படல்

3431. துஞ்சுவ தென்னைநீர் சொற்ற சொல்லையா
னஞ்சுவென் மறுக்கிலெ னவலந் தீர்ந்தினி
யிஞ்சிரு மடியனே னேகு கின்றனென்
வெஞ்சின விதியினை வெல்ல வல்லமோ.

"துஞ்சுவது என்னை? நீர் சொற்ற சொல்லை யான்
அஞ்சுவென்; மறுக்கிலென்; அவலம் தீர்ந்து இனி,
இஞ்சு இரும்; அடியனேன் ஏகுகின்றனென்;
வெஞ்சின விதியினை வெல்ல வல்லமோ?"

பொ :—"நீர் இறப்பது எதற்கு? நீர் சொன்ன சொல்லைக் கேட்டு அஞ்சுகின்றேன்; உம் கட்டளையை மறுக்கவில்லை; இனிக் கவலைதீர்ந்து இங்கு இருங்கள்; அடியேன் செல்லுகின்றேன்; கொடிய கோபத்தை யுடைய விதியை வெல்ல வல்லமையுடையோமே? (அல்லேம்)"

கு :—துஞ்சுதல் என்பது மங்கலவழக்கு; இறத்தல் என்பது பொருள். சொற்ற சொல் என்றது, இராமன் வீழ்ந்த இடத்திற்கு விரைந்துசெல்லவேண்டும் என்ற கருத்தினை. அச்சொல்லை ஏற்று நடந்தால் பின் தீங்கு வருமே என்று அஞ்சுகின்றேன் அன்றி,

மறுக்கவில்லை எனத் தன் எண்ணத்தைப் புலப்படுத்தியவாறு. சீதை அவலமுற்றது தான் செல்லாமையினு லன்றோ? இப்பொழுது செல்லுகின்றமையால் 'அவலம் தீர்ந்து இனி இஞ்சிரும்' என்றான் இங்கு என்பது எதுகை நோக்கி இஞ்சு என்று போலியாயிற்று. வெஞ்சின விதி என்றமையால் தீயூழ் என்பது பெறப்படும். அது பயன்தர வருங்கால் கொடிய கோபத்தோடு வரும் என்றவாறு" அவ்விதியின் வெஞ்சினமே சீதையையும் வெகுளச்செய்தது என்பது இலக்குவன் கருத்து. ஊழிற்பெருவலி யாவுள மற்றொன்று சூழினும் தான் முந்துறும்" (குறள் - 380) ஆதலின், வெல்ல வல்லமோ? என்றான். வரப்போகும் துன்பத்தில் தனக்கும் பங்குண்டு என்பது தோன்ற உளப்பாட்டுத்தன்மையால் வெல்லவல்லமோ? என்றான். (15)

## இலக்குவன் போதல்

3432. போகின்றே னடியனேன் பொருந்தி வந்துகே
டாகின்ற தரசன்ற னாணை நீர்மறுத்
தேகென்றீ ரிருக்கின்றீர் தமியி ரென்றுபின்
வேகின்ற சிந்தையான் விடைகொண் டேகினான்.

"போகின்றேன் அடியனேன்; பொருந்தி வந்து, கேடு
ஆகின்றது; அரசன்தன் ஆணை நீர் மறுத்து,
'ஏகு' என்றீர்; இருக்கின்றீர் தமியிர்" என்று, பின்
வேகின்ற சிந்தையான் விடைகொண்டு ஏகினான்.

பொ:—"அடியேன் போகின்றேன். போனதும், கேடு இங்கு வந்து பொருந்தி உண்டாகப்போகின்றது; உம்மைக் காத்துநிற்க வேண்டும் என்ற அரசனுடைய ஆணையை நீர் மறுத்துவிட்டு என்னைப் 'போ' என்கின்றீர்; தனியாக இருக்கின்றீரே;" என்று கூறிவிட்டுப் பின் வெதும்புகின்ற நெஞ்சத்தை யுடையவனாய் விடைபெற்றுச் சென்றான்.

கு:—கேடு வந்து பொருந்தி ஆகின்றது என இயையும். ஒளியின் செலவும் இருளின் வரவும் ஒருங்கு நிகழ்தல் போல இலக்குவன் செலவும் கேட்டின் வரவும் உடன் நிகழப் போகின்றது என்றவாறு. தெளிவும் விரைவும் தோன்ற, கேடு ஆகின்றது, என நிகழ்காலத்தால் கூறினான். இலக்குவன் சென்றதும், இராவணன் வஞ்சகத் தவ வேடத்தோடு வந்து பொருந்துதலும், பின் உண்மை உருவெடுத்துக் கவர்தலாகிய கேடு செய்தலும், இங்கு நினைப்பித்தவாறு. இராமன் ஆணையென்னாது, கடக்கமுடியாது என்பது புலப்படவேண்டி,

'அரசன்றன் ஆணை' என்றான். ஆணையாவது 'கானியல் மயிலன்னாளைக் காத்தனை இருத்தி'என்றது. 'நீர் மறுத்து ஏகு என்றீர்' என்றமையால் இராமனாணைவிடுத்து நும் ஆணையை மேற்கொண்டே செல்கின்றேன் என்றவாறு. 'இருக்கின்றீர் தமியிர் என்றமையால் சீதையின் தனிமையை நினைந்து வருந்தினமை புலப்படுத்தியவாறு. சீதையின் தனிமை நினைந்துவருந்தும் வருத்தமே சிந்தையை வெதுப்பும் நெருப்பாயிற்று என்றவாறு. இருக்கின்றீர் தமியிர் என்பதை வினாவாக்கி இவ்வாறு வினவிப் பின் வேகின்ற சிந்தையான் என இயைத்துக் கூறலுமாம். (16)

## இலக்குவன் தனக்குள் விம்முதல் 3433-3435

3433. இருப்பனே லெரியிடை யிறப்ப ராலிவர்
பொருப்பனை யானிடைப் போவெனே யெனி
னருப்பமில் கேடுவந் தடையு மாருயிர்
விருப்பனேற் கென்செய லென்று விம்மினான்.

"இருப்பனேல், எரியிடை இறப்பரால் இவர்;
பொருப்பு அனையானிடைப் போவெனே எனின்,
அருப்பம் இல் கேடு வந்து அடையும்; ஆருயிர்
விருப்பனேற்கு என் செயல்?" என்று விம்மினான்.

பொ:—"இங்கு இருப்பேனாயின் இவர் எரியும்நெருப்பில் விழுந்து இறப்பர்; மரகத மலைபோன்ற இராமனிடத்தில் செல்வேன் எனின், பெரிய கேடுவந்து சேரும்; (இங்ஙனமாயின் யான் இறத்தலே செய்யத்தக்கது) அதுசெய்யாது அரிய உயிர்மேல் விருப்பமுடைய எனக்குச் செய்யத்தக்க செயல் யாதுளது?" என்று எண்ணி ஏங்கினான்.

கு:—இருந்தாலும் ஒருதுன்பம் சென்றாலும் ஒருதுன்பம், ஆதலின் இலக்குவன் இருதலைக் கொள்ளியினுள்ளெறும்பு போல் செய்வதறியாது இங்ஙனம் கூறினான். துளக்கலாகா நிலையும் தோற்றமுமுடைமை பற்றி இராமனைப் பொருப்பனையான் என்றான். மலை போலப் பிறரால் துளக்கமுடியாத நிலையிலிருக்கும் இராமன்பால் போகவேண்டாவே என்ற கருத்தும் இதில் தோன்றுதல் காணலாம் இராமன் நிறத்திற்கு ஏற்புடைமைபற்றி மரகதமலை எனப் பொருள் கூறப்பட்டது. அருப்பம் - சிறிது; 'அருப்பமன்றிது' (அயோத்தி - பள்ளி 40) 'அருப்பமென்று பகையையும் இகழ்ந்தால்' (முதற்போர். 92) என முன்னும் பின்னும் வருதலும் காணலாம். அருப்பமில் கேடு

எனவே பெருங்கேடு என்பது பெறப்படும். ஆருயிரை வெறுத்து விட வேண்டியவன் என்பான், 'ஆருயிர் விருப்பினேற் கென்செயல்' என்றான். (17)

3434. அறந்தன லழிவில தாகி னாக்கலா
மிறந்துபா டிவர்க்குறு மிதனி னிவ்வழி
துறந்துபோ மிதனையே துணிவென் றொல்வினைப்
பிறந்துபோந் திதுபடும் பேதை யேனென.

"அறம்தனால் அழிவு இலது ஆகின் ஆக்கலாம்;
இறந்து பாடு இவர்க்கு உறும் இதனின், இவ்வழி
துறந்து போம் இதனையே துணிவென்; தொல்வினைப்
பிறந்து போந்து இதுபடும் பேதையேன்" என.

பொ:—"அறக்கடவுளால் இயலுமாயின் இனி வர இருக்கும் அழிவினின்றும் இவளை மீட்டு அழிவில்லாமல் செய்யலாம்; பழைய வினைவயத்தால் பிறந்துவந்து இத்தகைய துன்பத்தை அநுபவிக்கும் அறிவிலியாகிய யான், இவர்க்கு இறந்துபாடு நேர்தற்குக் காரணமாய் இங்கு இருக்கின்ற இதைக்காட்டிலும், அது நேராவண்ணம் இவ்விடத்தைவிட்டுப் போகின்ற இதனையே செய்யத் துணிவேன்" என்று கூறி,

கு:—அறந்தனால் ஆகின் அழிவிலது ஆக்கலாம் என இயையும். இதனின் - இங்கு இருக்கின்ற இதனைக்காட்டிலும் என வருவித்து முடிக்க. இவ்வழி துறந்து போதலாவது, இவ்விடத்தை விடுத்து இராமன் உள்வழிப் போதல். தனக்கு நேர்ந்துள்ள தருமசங்கடமான நிலை பழவினை வயத்தால் வந்தது என்ற கருத்தினனாகலின், இங்ஙனம் கூறினான். தொல்வினையாற் பிறந்து என மூன்றனுருபு விரிக்க. இத்துன்பம் தவிர்தற்குரிய நெறியறிய வாராமையின் இலக்குவன் தன்னைப் 'பேதையேன்' என்கின்றான் தான்போதலால் வரும் தீங்கை அறக்கடவுள் காப்பாற்றலாம்; தான் இருத்தலால் இறந்துபாடே நிகழும் ஆதலின், 'இவ்வழித் துறந்து போம் இதனையே துணிவென்' என்றான். செய்யத்துணிவேன் என ஒரு சொல் வருவித்து முடிக்க.

இவ்வாறு கூறிய இலக்குவன் சொல்லில், வேறும் ஒருண்மையும் இயல்பாகத் தோன்றுகிறது. 'இறந்துபாடு இவர்க்குறும் இதனின் இவ்வழி துறந்துபோம் இதனையே துணிவென் என்பது, இச்சீதைக்கு இறந்துபாடு வருவதைக் காட்டிலும், அவள் இவ்விடத்தைத் துறந்து

இராவணன் வயப்பட்டுப் போகின்ற இதனையே நன்றென்று துணிவேன் என வேறு மொரு பொருள் தோன்றல் காணலாம். இறந்தால், மீட்க முடியாது; பிறன்வயப்பட்டால் மீட்டுக்கொள்ளுதலும் கூடும்; ஆதலின் இறந்துபடுதலினும் துறந்துபோதல் நன்று என்றவாறு. இவ்வுண்மையே கடைமுறையில் நிகழ்தல் காணலாம். (18)

3435. போவது புரிவல்யான் புகுந்த துண்டெனிற்
காவல்செ யெருவையின் றலைவன் கண்ணுறு
மாவது காக்குமென் றறிவித் தவ்வழித்
தேவர்செய் தவத்தினாற் செம்ம லேகினான்.

"போவது புரிவல் யான்; புகுந்தது உண்டு எனின்,
காவல் செய் எருவையின் தலைவன் கண்ணுறும்;
ஆவது காக்கும்" என்று அறிவித்து, அவ்வழித்
தேவர் செய் தவத்தினால் செம்மல் ஏகினான்.

பொ :—"யான் போகின்றேன்; யான் போனபின் இடையூறு ஏதேனும் வருமாயின், நம்மைக் காவல்செய்துவருகின்ற கழுகின் வேந்தனாகிய சடாயு காண்பான்; தன்னால் இயன்ற அளவு காப்பாற்றுவான்" என்று கூறிவிட்டு இராமன் சென்ற அவ்வழியே இலக்குவன், தேவர் செய்த தவமுடைமையால் சென்றான்.

கு :—சீதையை விடுத்துச் சிறிது தொலைவு சென்ற இலக்குவன், திரும்பிப் பார்த்துச் சீதைக்கு இதை அறிவித்துவிட்டு ஏகினான் என்க. இனி, சீதையின் தனிமை கண்டு இரங்கும் தன்னெஞ்சிற்கு அறிவித்து ஏகினான் என்றுமாம். புகுவதுண்டு எனின் என்னாது, 'புகுந்ததுண்டெனின்' என இறந்த காலத்தால் கூறியது, கேடு புகுவது உறுதி என்னும் துணிவுபற்றியாகும். 'நீவிரும் நன்னுதல் தானுமிக், காட்டில் வைகுதிர் காக்குவென் யான் என்றான்' (சடாயு காண் படலம். 44) எனவும், 'பார்ப்பைப் பார்க்கும் பறவையில் பார்க்கின்றான்' (சடாயுகாண். 48) எனவும் கூறியவாறே சடாயு இவர்களைக் காத்து வருவதால், காவல்செய் எருவையின் தலைவன் என்றான். ஆவது - இயன்ற அளவு. இலக்குவன் சீதையை விட்டு நீங்குதலே பரம்பரையான் இராவணன் அழிவுக்கும் தேவர்கள் துயர் தீர்தற்கும் காரணமாதலின், தேவர்செய் தவத்தினால் ஏகினான் என்றார். செம்மல் - தலைமையுடையவன்; இலக்குவன். இவ்விடத்து இலக்குவன் அறிவு தெளிவுபெற்று இராமனைக் காட்டிலும் சிறந்தவன் என்று எண்ணும் வண்ணம் இருத்தல்பற்றி அவனை அப் பெயரால் கூறியது பொருத்தமாதல் காணலாம். (19)

## இராவணன் தவவேடம் தாங்கிச் செல்லுதல் 3436-3439

3436. இளையவ னேகலு மிறவு பார்க்கின்ற
வளையெயிற் றிராவணன் வஞ்ச முற்றுவான்
முளைவரித் தண்டொரு மூன்று முப்பகைத்
தளையரி தவத்தவர் வடிவுந் தாங்கினான்.

இளையவன் ஏகலும், இறவு பார்க்கின்ற
வளை எயிற்று இராவணன், வஞ்சம் முற்றுவான்,
முளை வரித் தண்டு ஒரு மூன்றும், முப்பகைத்
தளை அரி தவத்தவர் வடிவும் தாங்கினான்.

பொ :—இளையவனாகிய இலக்குவன் சென்றவுடன் அவன் நீக்கத்தை எதிர்பார்த்துக்கொண்டிருக்கும் வளைந்த கோரப்பற்களை யுடைய இராவணன், தன் வஞ்சனையை முற்றுப்பெறச் செய்யும் பொருட்டு, ஒன்றாகச் சேர்த்துக்கட்டிய மூங்கில் தண்டுகள் ஒரு மூன்றையும், காம வெகுளி மயக்கம் என்னும் மூன்று பகையாகிய பந்தங்களை அரிந்து தள்ளிய துறவிகளின் வேடத்தையும் தாங்கினான்.

கு :—இறவு - அற்றம்; நீக்கம். முளை - மூங்கில். வரிமுளைத் தண்டு என மாற்றுக. மூங்கிற் கோல்கள் மூன்றினை ஒன்றுசேர்த்துக் கட்டியதே திரிதண்டம் எனப்படும். இதனை முக்கோல் என்பர் தொல்காப்பியர். ‘நூலே கரகம் முக்கோல் மணையே’ (தொல்-மரபு. 70) என்பது காண்க. இன்றும் வைணவத்துறவிகள் இம் முக்கோலைத் தாங்கியிருத்தல் காணலாம். முக்கோலைத் தாங்கிய துறவியர் முக்கோற் பகவர் எனப்படுவர். “உறித்தாழ்ந்த கரகமும் உரைசான்ற முக்கோலும் நெறிப்படச் சுவலசைஇ” (கலி. 9) என்புழி முக்கோற் பகவர் இயல்பு கூறப்படுதல் காணலாம். துறவிகள் முக்கோல் பிடித்தல் அயன் அரி, அரன் என்ற முத்தேவரையும் ஒருவராகக் கருதும் தம் குறிப்புத் தோன்றுதற்கு என்பர். முப்பகையும் வென்றமைக்கு அறிகுறி என்பாரும் உளர். வடிவம் - என்றது வேடத்தை. கையில் திரிதண்டத்தையும் மெய்யில், தவவேடத்தையும் தாங்கினான் என்பது கருத்து. முப்பகைத்தளையை யரியாத இராவணன் அவற்றை அரிந்தவர்வேடம் தாங்கினான் ஐயமுறாமைப்பொருட்டு என்க. (20)

3437. ஊணில னுமென வுலர்ந்த மேனியன்
சேணெறி வந்ததோர் வருத்தச் செய்கையன்
பாணியி னளந்திசை படிக்கின் றானென
வீணையி னிசைபட வேதம் பாடுவான்.

ஊண் இலனும் என உலர்ந்த மேனியன்,
சேண் நெறி வந்தது ஓர் வருத்தச் செய்கையன்,
பாணியின் அளந்து இசை படிக்கின்றான் என,
வீணையின் இசைபட வேதம் பாடுவான்.

பொ:—உணவு உண்ணாதவன்போல வாடியமேனி யுடையவன், நெடுந்தொலைவு வழிநடந்தான் போன்ற வருத்தமான செய்கை யுடையவன், தாள அறுதியை அளந்து பாடுகின்ற இசைவாணனைப் போல வீணையின் ஒலி தோன்றுமாறு தன்குரலால் சாமவேதத்தைப் பாடுகின்றவன்.

கு:—மேனியனாய், செய்கையனாய், பாடுவானாய் நணுகினான் என இருபத்துமூன்றாவது பாடலில் முடியும். "என்பெழுந்தியங் கும் யாக்கையர், நன்பகல் பலவுடன் கழிந்த உண்டியர்" (திரு முருகாற்றுப். 130) எனத் தவத்தவர் வேடம் கூறப்படுதலின் வஞ்சக வேடந்தாங்கிய இராவணனும், ஊணிலனுமென உலர்ந்தமேனியன் ஆனான்; அயிராது நம்பவேண்டி. நெடுந்தொலைவு நடந்தோர் பெரு மூச்சுவிடுதலும், வாய்வழிக் காற்றுப் புலப்படச்செய்து வியர்வை போக் கிக்கொள்ளுதலும், சோர்வுறுதலும் போல்வனவற்றைச் செய்தல் போல, அண்மையில் மறைந்திருந்து புறப்பட்ட இராவணத் துறவி யும் செய்தான் என்பார், சேணெறிவந்ததோர் வருத்தச் செய்கை யன் என்றார். பாணி - தாளம். இராவணன் சாமவேதம் பாடுவதில் வல்லவனாதலின் இங்கு வேதம் என்றது அவ்வேதத்தையேயாம். இசைபாடுவான்போல இனிமையாக வேதத்தைப் பாடினான் என்பது கருத்து. வீணையின் இசைபட என்பதற்கு வீணை இசையோடு பொருந்த எனப் பொருள் கொண்டு, வீணை ஒலியும் வேத ஒலியும் எழுப்பினான் என்றலும் ஆம். இனி வீணையின் இசை கீழ்ப்படுமாறு இனிய குரலால் வேதம்பாடினான் எனலும் ஆம். தவவேடத்திற் கேற்ப வேதம் பயின்ற வாயனாகப் போனான் என்க. (21)

3438. பூப்பொதி யவிழ்ந்தன நடையன் பூதலந்
தீப்பொதிந் தாமென மிதிக்குஞ் செய்கையன்
காப்பரு நடுக்குறுங் காலன் கையினன்
மூப்பெனும் பருவமு முனிய முற்றினன்.

பூப் பொதி அவிழ்ந்தன நடையன்; பூதலம்
தீப் பொதிந்தாம் என மிதிக்கும் செய்கையன்;
காப்பு அரும் நடுக்கு உறும் காலன்; கையினன்;
மூப்பு எனும் பருவமும் முனிய முற்றினன்.

பொ:—மலரின் இதழ் விரியும் போது மெல்ல மெல்ல விரிதல் போல மெல்ல நடக்கும் நடையுடையவன்; தரையிடம் நெருப்பை யுள் வைத்து மூடியிருந்தால் மிதிப்பது போலக் குந்திமிதிக்கும் செய்கையுடையவன்; தடுக்க இயலாதபடி நடுக்கம் உற்ற கால்களை யும் கைகளையும் உடையவன்; முதுமை என்கின்ற பருவமும் வெறுக்கு மாறு மிக முதிர்ந்தவன்.

கு:—ஓரடியை ஊன்றி மற்றோரடியை எடுத்து வைப்பதற்குரிய காலத் தாழ்ச்சியை உணர்த்த, 'பூப்பொதி அவிழ்ந்தன' என உவமை கூறினர். அரும்பு கட்டவிழுங்கால் மெல்ல மெல்ல அவிழ் தல் போல அரிதின் அடியெடுத்து வைக்கின்றவன் என்பது கருத்து. 'பொதியவிழ்ந்த பூ அன நடையன்' என மாற்றிக் கட்டவிழ்ந்த தாமரைமலர் போன்ற மெல்லிய அடிகளையுடையவன் எனப் பொருள் கோடலுமாம். இப் பொருட்கு நடை என்பது தொழிலாகுபெயராய் அடியையுணர்த்தியதாகக் கொள்க. நிலத்தில் பட்டும் படாமலும் அடிவைத்து நடக்கும் இயல்புணர்த்த, "தீப்பொதிந்தாமென மிதிக் குஞ் செய்கையன்" என்றார். தீப்பொதிந்தது ஆம் என்பது விகா ரத்தால் தொக்கது. பூதலம் தீப்பொதிதலாவது, உள்ளே நெருப் பைக் கொட்டி மேலே மண்ணைப்பரப்பி மறைத்திருத்தல். இத்தகைய தரையில் நடக்க நேர்ந்தால் வெப்பம் பொருது அடியை மெல்லென வைத்து உடனே எடுத்தல் இயல்பு என்பது உய்த்துணர்ச்சியான் அறியலாம். இதனல் அவன் வேடத்திற்கேற்பக் குறுநடையும் குந்தி மிதித்தலும் உடையனாய் வந்தமை புலப்படுத்தியவாறு. காத் தல் - தடுத்தல். கைகால் நடுங்கலாகாது எனத் தடுப்பினும் தடுக்க வியலாது நடுங்கும் இயல்பின என்பார் காப்பரும் நடுக்கு உறும் காலன், என்றார். நடுக்குறுங்காலன் கையினன் என்றது எம னுடைய கைக்குச் செல்பவன் போன்ற மூப்பினன் என்றும் சீதை யை விரும்பிய செயலால் முன்தன்னைக் கண்டு நடுக்குறும் கால னுடைய கைக்குச் செல்லத்தக்கவன் என்றும் பொருள் தோன்றல் காணலாம். மூப்பு என்னும் பருவத்திற்கு உணர்விருக்குமாயின் அப்பருவமும் இவன் முதுமை கண்டு வெறுக்கும் என்றவாறு. இதனல் இராவணன் கொண்ட மூப்பு வடிவத்தின் முதிர்ச்சியுடைமை விளக்கியவாறு. (22)

**3439.** தாமரை மணிதொடர் தவத்தின் மாலைய
ளுமையி னிருக்கையன் வளைந்த வாக்கைய
னுமநூல் மார்பின னணுகி ளுனரோ
தூமனத் தருந்ததி யிருந்த சூழல்வாய்.

தாமரை மணிதொடர் தவத்தின் மாலையன்,
ஆமையின் இருக்கையன், வளைந்த ஆக்கையன்,
நாம நூல் மார்பினன், நணுகினுன் அரோ—
தூமனத்து அருந்ததி இருந்த சூழல்வாய்.

பொ :—(அந்தணர்க்குரிய) தாமரை மணிதொடுத்துச் செய்த தவத்திற்குரிய செபமாலையை யுடையவனாய், ஆமைவடிவாகச் செய்யப்பட்ட மணையினையுடையவனாய்க் கூனுகி வளைந்த உடம்பை யுடையவனாய்ப் பெருமை பொருந்திய முந்நூல் அணிந்த மார்பினை யுடையவனாய்த் தூய மனத்தையுடைய அருந்ததிபோன்ற கற்பினை யுடைய சீதை இருந்த இடத்தை அடைந்தான்.

கு :—இராவணன், வடிவம் தாங்கினனாய், மேனியனாய், செய்கையனாய், பாடுவானாய், நடையனாய், மிதிக்கும் செய்கையனாய், கையினனாய், முற்றினனாய், மாலையனாய், இருக்கையனாய் ஆக்கையனாய், மார்பினனாய், அருந்ததி இருந்த சூழல்வாய் நணுகினன் என இயையும்; முற்றெச்சங்கள். தவத்தின் மாலை யென்றது தவத்தினர்க்குரிய செபமாலையை. அது தாமரை மணியைக் கொண்டுசெய்தது. ஆமையினிருக்கை என்றது ஆமைமணையை. ஆமை, இடர் புகுதாமல் நான்குகால்களும் தலையும் ஆகிய ஐந்துறுப்புகளையும் அடக்கிக்கொள்ளுதல் போல ஐம்பொறிகளையும் அடக்குகின்றமைக்கு அறிகுறியாக அந்தணர் ஆமைவடிவாகச் செய்யப்பட்ட மணையில் அமர்ந்து யோகிருப்பது இயல்பு. "நூலே கரக முக்கோல் மணையே, ஆயுங்காலை அந்தணர்க்குரிய" (தொல். மரபியல். 70) என்புழி மணை என்பதற்கு ஆமைமணை என்று பேராசிரியர் உரை வரைந்திருத்தலும் நோக்குக. நினைத்த இடத்தில் யோகத்திருக்க வேண்டி ஆமை மணையும் உடன் கொண்டு செல்லுதல் அந்தணர்க்கு இயல்பு. முதுமைக்கேற்ப வளைந்த ஆக்கை கூறப்பட்டது. நாமம் - பெருமை. நூல் என்றது ஒன்பது கொண்ட மூன்றுபுரி நுண்ஞாணுகிய பூணூலை. தூயமனத்தவள் இருந்த இடத்திற்குத் தூய்மையற்ற வஞ்சகனும் தூயவர் வேடந்தாங்கியே செல்ல வேண்டியதாயிற்று என்ற குறிப்புத் தோன்றத் 'தூமனத்தருந்ததி இருந்த சூழல்' என்றார். அருந்ததி, உவமை ஆகுபெயராய்ச் சீதையை யுணர்த்தியது. பிறர் நெஞ்சு புகுதற்கு உரியவள் அல்லள் என்ற கருத்துத்தோன்றவேண்டி அப்பெயரால் கூறினர். இராவணன் விரும்பியது, அழியும் தீயூழால் என்க. சூழல் - இடம்; (23)

இராவணன் இப்பன்னசாலையில் இருப்பது யார் எனல்

3440. தோமறு சாலையின் வாயி றுன்னிஞ
ஞமுதற் குழறிட நடுங்கு சொல்லினன்
யாவிரிவ் விருக்கையு ளிருந்துளீ ரென்ருன்
றேவரு மருள்கொளத் தெரிந்த மேனியான்.

தோம் அறு சாலையின் வாயில் துன்னினன்,
நா முதல் குழறிட நடுங்கு சொல்லினன்,
"யாவிர் இவ்விருக்கையுள் இருந்துளீர்?" என்ருன்—
தேவரும் மருள் கொளத் தெரிந்த மேனியான்.

பொ :—தேவரும் மருட்சி கொள்ளுமாறு அமைந்து தோன்றும் வேடத்தையுடைய இராவணன், குற்றம் அற்ற பன்னசாலையின் வாயிலை நெருங்கி, நாக்கு அடியோடு குழறுதலால் நடுக்கமிக்க சொல்லால், "இந்தப் பன்னசாலையில் இருக்கின்றீர் யாவிர்?" என்று வினவினன்.

கு :—சீதை அவ்வேடங்கண்டு உண்மைவேடமாக மருண்டது வியப்பன்று என்பது தோன்றத் தேவரும் மருள் கொளத் தெரிந்த மேனியான் என்ருர். உம்மை உயர்வு சிறப்பு. இமையாநாட்டம் பெற்று உருத்தெரியாது திரிந்து உலக நிகழ்ச்சிகளைக் காணுதல் வல்ல தேவரும் மருள்வாராயின், கண்டதே கொண்டு நம்பும் சீதை மருளுதல் சொல்ல வேண்டுமோ? என்க. தோம் - குற்றம். குற்ற மற்றவர் வாழ்விடமாதலின் அச்சாலையும் தோமறுசாலை எனப்பட்டது. துன்னினன் முற்றெச்சம். அச்சத்தால் குழறி நடுங்கும் சொல்லே முதுமையால் குழறிப்பேசும் சொல்லாகவும் கொள்ள வாய்ப்பாயிற்று. முதல் - அடி. அடியோடு குழறிட என்க. குழறிடலால் நடுங்கும் எனக் காரணப்பொருளதாக்குக. 'சொல்லினன்...... என்ருன் என ஏதுப் பொருளதாக்குக. இனி, சொல்லினனுய் என்ருன் எனலும் ஒன்று. இருக்கை - இருப்பிடம்; பன்னசாலை. இருந்துளீர் என்பது விளியேற்ற முன்னிலை வினையாலணையும் பெயர். யாவிர்? முன்னிலை வினுப் பெயர். (24)

இச்செய்யுளின் பின் 24-ஆவது ஏட்டில் பின்வரும் மிகைப் பாடல் காணப்படுகின்றது;—

3440. (a) ஓவரு கவனமீ துற்றுச் சென்றுளான்
பூவரு சாலையுட் பொருந்த நோக்குரு
யாவரிவ் விருக்கையு ளிருந்த நீரென்ருன்
தேவரு மிடருறத் திரிந்த மேனியான்.

## சீதை வரவேற்றல்

3441. தோகையு மிவ்வழித் தோமில் சிந்தனைச்
சேகறு நோன்பின ரென்னுஞ் சிந்தையாள்
பாகியல் கிளவியோர் பவளக் கொம்பர்போன்
றேகுமி னீண்டென வெதிர்வந் தெய்தினள்.

தோகையும் "இவ்வழித் தோம் இல் சிந்தனைச்
சேகு அறு நோன்பினர்" என்னும் சிந்தையாள்,
பாகு இயல் கிளவி ஓர், பவளக் கொம்பர் போன்று,
"ஏகுமின் ஈண்டு" என, எதிர் வந்து எய்தினள்.

பொ :—சீதையும், இவ்வனத்தில் இருக்கும் குற்றம் அற்ற சிந்தனையையும் ஐயுறுதற்கில்லாத தவவிரதத்தையும் உடைய முனிவர் இவர் என்ற எண்ணமுடையளாய்ச் சர்க்கரைப் பாகு போன்ற சொல்லை உடைய ஒரு பவழக்கொடி நடந்துவருவது போன்று, 'இங்கு வாருங்கள்' என்று சொல்லிக்கொண்டே அவனெதிரில் வந்து அடைந்தாள்.

கு :—தோகை - மயில்; உவமையாகுபெயராய் மயில்போன்ற சாயலையுடைய சீதையைக் குறித்தது. பாலொடு கலந்த நீர் பால் போல் தோன்றினும், அதைப் பிரித்துண்ணும் அன்னம் போலாது, தோற்றத்தைக் கண்டவாறே கொள்ளும் இயல்புடைய மயில் வஞ்சக வேடத்தை யுண்மையாய்க் கொள்ளும் சீதைக்கு இங்கு ஏற்ற உவமையாயிற்று. தோம் - குற்றம். சேகு - ஐயம்; 'சேகறத் தெருட்டி' (கும்பகர்ணன் - 127) எனப் பின்னரும் இப்பொருளில் இச்சொல் வருதல் காணலாம். நோன்பு - தவவிரதம். தவமுடையர், ஐயுறுதற்குரியரல்லர் என்றவாறு. சேகு - குற்றம் எனலுமாம். உள்ளும் புறமும் குற்றமற்றவர் என்பது கருத்து. 'ஏகுமின் ஈண்டு' என்ற இனிய சொல்லைச் சொல்லிக்கொண்டே வந்தாள் சீதையாதலின், அவள் சொல்லிற்கும் அழகியவடிவிற்கும் உவமையாக வேண்டிப் 'பாகியல் கிளவியோர் பவளக்கொம்பர் போன்று' என இல்பொருளுவமை கூறினர். கொம்பர் என்றது இங்குக் கொடி என்னும் பொருளில் வந்தது. ஏகுமின் என்பது வம்மின் என்னும் பொருளது என்பதைப் பின்வந்த ஈண்டு என்ற சொல்லே புலப்படுத்தும். எதிர் வந்தது, பெரியோரை வரவேற்கும் முறைமைபற்றி. (25)

## சீதையைக் கண்ட இராவணன் மனநிலை 3442-3448

3442. வெற்பிடை மதமென வியர்க்கு மேனிய
னற்பினிற் றிரைபுர ளாசை வேலையன்

பொற்பினுக் கணியினைப் புகழின் சேக்கையைக்
கற்பினுக் கரசியைக் கண்ணி னோக்கினான்.

வெற்பிடை மதம் என வியர்க்கும் மேனியன்,
அற்பினின் திரை புரள் ஆசை வேலையன்,
பொற்பினுக்கு அணியினைப் புகழின் சேக்கையைக்
கற்பினுக்கு அரசியைக் கண்ணில் நோக்கினான்.

பொ :—யானையின்கண் மதநீர் பெருகுவது போன்று வேர்க்கும் உடம்பையுடையவனாய், அன்பாகிய அலைகள் புரண்டு வீசுகின்ற ஆசையாகிய கடலையுடையவனாய், அழகிற்கும் அணியாக விளங்குபவளைப் - புகழின் இருப்பிடமாக உள்ளவளைக் - கற்புக்கரசியாகிய சீதையைக் கண்களால் நோக்கினான்.

கு :— வெற்பு உவமையாகு பெயராய் யானையை உணர்த்தியது. யானை உடலில் பெருகும்மதம் உடம்பெல்லாம் பெருகும் வியர்வைக்கு உவமையாயது, பெருகுவது ஆகிய தொழில் பற்றியும் நாற்றத்தின் ஒற்றுமை பற்றியும் ஆம். வியர்த்தல் - வேர்த்தல். 'வெய்துண்ட வியர்ப்பல்லது செய்தொழிலால் வியர்ப்பறியாமை'(புறநா - 386) என்புழியும் இச்சொல் ஆளப்பட்டிருத்தல் காணலாம். காமம் உள்நின்று வெதுப்புதலால் உண்டான வியர்வையாதலின் யானையின் மதம் போன்ற நாற்றமுடைத்தாயிற்று. அன்பு அற்பு என வன்றொடரா யிற்று. அன்பாகிய திரை என்க. இன் அல்வழிச் சாரியை. ஆசையைக் கடலாக உருவகஞ்செய்ததற்கேற்ப அன்பினை அலையாக உருவகஞ்செய்தார். ஆசையென்றது காமத்தை. 'காதல்தானும் கடலினும் பெரிதே' (நற்றிணை - 166), 'என்னாசை எழுபரவை' (பெரிய புராணம் தடுத்தாட். 148.) என்பன இங்கு நினைவு கூர்தற்குரியன. காம இச்சையால் அவ்வப்போது தோன்றும் பற்றினை அன்பு என்றாராதலின் அவ்வன்பினை அலையாக உருவகஞ் செய்தார். இதனால் காமம் பேரளவினது என்பதும் அன்பு அவனுக்குச் சிறியஅளவினதே என்பதும் புலப்படுத்தியவாறு. பொற்பு - அழகு. அழகு என்று புகழப்படும் அணிகலன்களுக்கும் ஓர் அழகு தருவது சீதையின் அழகு ஆதலின், 'பொற்பினுக் கணியினை' என்றார். "இப்பாவை தோன்றலால் அழகெனு மவையுமோ ரழகுபெற்றவே" (597) என்று முன்னர்க் கூறப்பட்டிருத்தலும் காண்க. சேக்கை - தங்குமிடம். தகைசான்ற சொற்காத்துச் சோர்விலாள் சீதை என்பார், 'புகழின் சேக்கையை' என்றார். புகழாவது, வாழுமூர் கற்பால் தன்னைப் புகழ்தல். கற்புடை மகளிர்க் கெல்லாம் தலைமையானவள் என்பார், 'கற்பினுக்கரசியை' என்றார். இம் மூன்றுபெயரும் சீதையென்னும் ஒரு பொருள்மேல்வந்த பலபெயர்கள். முன் காதால் கேட்டும், உருவெளித்தோற்றத்திலும் கனவிலும் கண்டும், அறிந்ததனோடு

வேறுபாடு புலப்படக் 'கண்ணில் நோக்கினன்' என்றார். நோக்குதல் என்றது தனக்கு வேண்டும் என்ற அவாவுடன் பார்த்தலை உணர்த்திற்று. காதற்கண்ணால் நோக்கக்கூடாத கற்பினுக்கரசியை நோக்கினமையால் அழிவு திண்ணம் என்ற குறிப்பும் புலப்படுத்திய வாறு. சூர்ப்பணகை பார்த்தபோதும் 'அரக்கரென்னும் கான்சுட முளைத்த கற்பின் கனலியைக் கண்ணிற் கண்டாள்' எனக் கூறியுள்ளதும் காண்க. (26)

3443. தூங்கலில் குயில்கெழு சொல்லி னும்பரி
னோங்கிய வழகினா ளுருவங் காண்டலு
மேங்கினன் மனநிலை யாதென் றுன்னுவாம்
வீங்கின மெலிந்தன வீரத் தோள்களே.

தூங்கல் இல் குயில் கெழு சொல்லின், உம்பரின்
ஓங்கிய அழகினாள் உருவம் காண்டலும்,
ஏங்கினன் மனநிலை யாது என்று உன்னுவாம்?
வீங்கின; மெலிந்தன; வீரத் தோள்களே.

பொ :—சோம்புதல் இல்லாத குயிலின்குரல் போன்று அமைந்த சொல்லோடு தேவமாதரினும் உயர்ந்த அழகுடைய சீதையின் உருவத்தைக் கண்ட அளவில் ஏக்கம் கொண்ட இராவணனுடைய வீரத் தோள்கள் முன் பூரித்துப் பருத்தன; பின் மெலிந்து விட்டன; ஆதலின் அவன் மனநிலை மகிழ்ச்சிக்குறிப்பினதா? அல்லது துன்பக்குறிப்பினதா? யாது என்று முடிவுசெய்வோம்? (முடிவுசெய்ய இயலாது என்றவாறு.)

கு :—தூங்குதல் - சோம்புதல் 'தூங்குக தூங்கிச் செயற்பால' (குறள் - 672) என்றதும் காண்க. கூவுவதில் சோம்பலின்றி மகிழ்ச்சியுடன் கூவிக் கொண்டிருப்பது குயிலின் இயல்பு ஆதலின் அதனை விளக்கியவாறு. மற்ற உயிர்கள் உறங்கும்போதும் உறங்காது கூவும் இயல்புபற்றித் 'தூங்கலில் குயில்' என்றார் எனக் கொண்டு தூங்கல் உறங்கல் எனலுமாம். உம்பர் என்றது தேவமாதரை. ஏங்குதல் - ஆசையால் வருந்துதல். உள்ளத்து மகிழ்ச்சி பொங்குங்கால் தோள் பூரித்தலும் துன்பம் மிகுங்கால் தோள்மெலிதலும் இயல்பு. சீதையின் பேரழகைக்கண்ட மகிழ்ச்சியால் இராவணனுக்குத் தோள்வீங்குதலும் அவளை உடனே அநுபவிக்கப் பெறாத துன்பத்தால் மெலிதலும் அடுத்தடுத்து நிகழ்ந்தமை புலப்படுத்தியவாறு. உவகைக்கும் அழுகைக்குமுரிய மெய்ப்பாடு அடுத்தடுத்துத் தோற்றுதலின் அவன் மனநிலையறிதல் அரிது என்றவாறு. "நெடுங்கண்களுகுத்த

அப்பினனனைந் தருந்துய ருயிர்ப்புடையாக்கை வெப்பினுற் புலர்ந் தொருநிலையுருதமென் றுகிலாள்" (337) என்ற சுந்தரகாண்டத்துச் செய்யுள் இங்கு ஒப்புநோக்கத்தகும். (27)

3444. புனமயிற் சாயலி னெழிலிற் பூநறைச்
சுனைமடுத் துண்டிசை முரலுந் தும்பியி
னினமெனக் களித்துள தென்ப தென்னவன்
மனமெனக் களித்தது கண்ணின் மாலையே.

புன மயில் சாயலின் எழிலில், பூநறைச்
சுனை மடுத்து உண்டு இசை முரலும் தும்பியின்
இனம் எனக் களித்துளது என்பது என்? அவன்
மனம் எனக் களித்தது, கண்ணின் மாலையே.

பொ :—காட்டிலுள்ள மயில் போன்ற சாயலையுடைய சீதையின் மேனி அழகில் இராவணனுடைய கண்களின் வரிசை, பூவிலுள்ள தேன் நிறைந்துள்ள ஒருசுனையில் படிந்து அத்தேனை நிரம்பஉண்டு இசைபாடுகின்ற வண்டின் கூட்டம் களித்திருத்தல் போலப் படிந்து களித்தது; என்று வேறுவமைகொண்டு கூறுவதில் என்ன சிறப் புளது? அவன் மனம் அவள் அழகில் ஈடுபட்டுக் களிக்கின்றது போலவே அவன் கண்களின் வரிசையும் களித்தது என்பதே பொருத்தமாகும்.

கு :—மயில் போன்ற சாயலையுடைய சீதையைச் சாயல் என ஆகு பெயரால் கூறியவாறு. 'புனமயிற்சாயற்கும் புண்ணிய முதல்விக்கும்' (சிலப். 11-199) என்புழிக் கண்ணகியை இவ்வாறே குறிப்பிடுதல் காணலாம். வண்டும் கண்ணும் வடிவாலும் நிறத்தாலும் ஒற்றுமை யுடையவாகலின் சீதையின் அழகு வெள்ளத்தில் திளைத்துக்களித்த இராவணனுடைய இருபது கண்களுக்கும் தேனிறைந்த சுனையில் படிந்து அத்தேனை நிரம்பப் பருகிய வண்டின் கூட்டத்தை உவமை சொல்லக் கருதியவர், அவ்வுவமையினும் சிறந்ததொன்று கண்டு முன்னதை விடுத்து, அவன் மனமெனக் களித்தது எனப் பின்ன தைக்கூறியவாறு. 'தும்பியின் இனமெனக் களித்துளது என்பதென்' என்றமையின் மனமெனக் களித்தது என்றலே பொருத்தமுடைத்து என இசை யெச்சமாய் வேண்டுஞ்சொல் வருவித்து முடிக்க. வண்டு கள், பூத்தொறும் வாவிச் சென்று தினைத்தனை யுள்ள தேனைத் தேடி வருந்தாதபடி அம்மலர்த்தேன் ஒரு சுனை நிறைய இருக்குமாயின் அதில்படிந்து நிரம்ப உண்டு இசைபாடி மகிழ்தல்போல, இராவ ணன் கண்களும் பலமகளிரிடத்தில் தேடிக் காண்கின்ற அழகினைத்

தையும் சீதையின்பால் ஒருங்கே கண்டு களிப்புற்றன என்பது முதலுவமையின் விளக்கம். வண்டுகள் தேனையுண்டு களிப்பதினும் சீதையின் பேரழகைக் கண்டு இராவணன் மனம் மிகுதியாகக் களிக்கின்றமையால், அவன் கண்களின் களிப்புக்கு அவன் மனமே பொருந்திய உவமையாகும் என்றவாறு. 'அண்ணலாண்டிருந்தானழகருநற வென்னக் கண்ணுமுள்ளமும் வண்டெனக் களிப்புறக் கண்டான்' (1448) என இராமன் அழகைச் சுமந்திரன் கண்டபோது நறவருந்தும் வண்டினை அவன் கண்ணிற்கும் உள்ளத்திற்கும் உவமை கூறியுள்ளது இங்கு நினைத்தற்குரியது. கண்ணின் மாலை என ஒருமையாக்கி விட்டமையால் களித்தது என ஒருமையால் கூறினர். தவவேடத்தில் தலை பத்தும் கண்கள் இருபதும் இல்லையாயினும் உண்மை வடிவத்தில் இருத்தலின், மாயத்தால் அவளுக்குத் தெரியாவண்ணம் அவ்விருபது கண்களாலும் கண்டான் என்பது கருத்து. (28)

இப்பாட்டின் அமைப்பு,

நலங்கொள் மைந்தனைத் தழுவின னென்பதென் னளிநீர்
நிலங்க டாங்குறு நிலையினை நிலையிட நினைந்தான்
விலங்க லன்னதிண் டோளையு மெய்த்திரு விருக்கும்
அலங்கன் மார்பையும் தனதுதோள் மார்புகொண் டளந்தான்.

என்ற 1458-ஆம் பாடலை நினைவுறுத்தல் காணலாம்.

3445. சேயிதழ்த் தாமரைச் சேக்கை தீர்ந்திவண
மேயவண் மணிநிற மேனி காணுதற்
கேயுமே யிருபதிங் கிமைப்பி னாட்டங்க
ளாயிர மில்லையென் றல்ல லெய்தினான்.

"சேயிதழ்த் தாமரைச் சேக்கை தீர்ந்து இவண்
மேயவள் மணி நிற மேனி காணுதற்கு,
ஏயுமே இருபது? இங்கு இமைப்பு இல் நாட்டங்கள்
ஆயிரம் இல்லை!" என்று அல்லல் எய்தினான்.

பொ:—"சிவந்த இதழ்களையுடைய தாமரையாகிய இருப்பிடத்தை நீங்கி இங்குவந்தவளாகிய சீதையின் மாணிக்கமணிபோன்ற செந்நிறத்தையுடைய மேனி அழகைக் காண்பதற்கு என் இமைத்தலையுடைய இருபது கண்கள் போதுமோ? இமையாத கண்கள் ஆயிரம் இல்லையே" என்று துன்பமுற்றான்.

கு :—திருமகளே சீதையாக வந்துளாள் என்ற உண்மை இராவணனுக்கும் புலப்பட்டது என்பது இதனல் அறியலாம். சூர்ப்பணகையும் சீதையைக் கண்டு, "அரவிந்த மலருணீங்கி யடியிணை படியிற்ரேயத் திருவிங்கு வருவாள்கொல்லோ ?" (சூர்ப்பணகை. 59) என்று ஐயமுற்றதும் காண்க. சேக்கை - தங்குமிடம். தீர்தல் - நீங்குதல். 'போதினை வெறுத்தரசர் பொன்மனை புகுந்தாள்' (1236) என முன்கூறியதும் இங்கு நினைக்க. ஏயுமே என்ற வினு ஏயா, போதா என்று எதிர்மறைப் பொருளை யுணர்த்தியது. இங்கு என்பது தன்மையுணர்த்தியது. 'எனக்கு' என்பது போந்த பொருளாகக் கொள்க. சீதையின் பேரழகை முற்றிலும் காண்பதற்கு ஆயிர நயனம் வேண்டும்; அதுதானும் இமைப்பு இல்லாத நாட்டங்களாக இருக்க வேண்டும் என்பது இராவணன் ஆசை. "தாதுலாங் கமலச் செங்கண் சதமகன் உடலமெல்லாம் காதுளேனல்லேன் என்ருன் கண்ணுளான் கானங் கேட்டு" (திருவிளை - விறகுவிற்ற. 39) என இசைகேட்கும் ஆர்வத்தால் உடலெல்லாம் ஆயிரங் கண்களையுடைய இந்திரன், உடலமெல்லாம் ஆயிரம் காதுகளைப் பெறவில்லையே யென்று வருந்தியது இங்கு நினைவு கூர்தற்குரியது.

"உமையாளொக்கு மங்கைய ருச்சிக்கரம் வைக்கும், கமையாள் மேனி கண்டவர் காட்சிக் கரைகாணுர், இமையா நாட்டம் பெற்றிலம் என்ருர் இருகண்ணுல் அமையாதென்ருர், அந்தர வானத்தவர் எல்லாம்" (588) என்று முன்கூறியுள்ளமை காண்க. (29)

3446. அரைகடை யிட்டமுக் கோடி யாயுவும்
புரைதபு தவத்தின்யான் படைத்த போதுமே
நிரைவளை முன்கையிந் நின்ற நங்கையின்
கரையறு நன்னலக் கடற்கென் றுன்னினுன்.

"அரை கடை இட்ட முக்கோடி ஆயுவும்
புரை தபு தவத்தின் யான் படைத்த போதுமே?
நிரை வளை முன்கை இந் நின்ற நங்கையின்
கரை அறு நல் நலக் கடற்கு" என்று உன்னினுன்.

பொ:—"வரிசையான வளையல்களை யணிந்த முன்கையினையுடையளாய் இங்கு நின்ற நங்கையின் கரையில்லாத நல்ல அழகாகிய கடலை அநுபவிப்பதற்குக் குற்றமற்ற தவத்தினுல் யான்பெற்ற மூன்றரைக்கோடி ஆயுளும் போதுமோ ?" என்று எண்ணினுன்.

கு:—அரையை யிறுதியில் இட்ட முக்கோடி என்றது மூன்றரைக் கோடி ஆயுளை. "அரைகடையிட் டமைவுற்ற முக்கோடி ஆயுவும்" (யுத்த - இராவணன் வதைப். 243) எனப் பின்னும் மண்டோதரி யின் கூற்ருய் வருதல் காணலாம். 'புரைதபு தவம்' என்றது, இராவ ணன் கயிலேமலையெடுத்த ஞான்று சிவன் கால்விரலால் ஊன்ற மலையடியில் நசுக்குண்டு வருந்தியபோது அமைச்சரின் ஆலோசனை யின்படி ஒருகையையும் தலையையும் கொய்து யாழாக்கிக்கொண்டு சாமகீதம்பாடியதை. உற்றநோய் நோன்று இறைவனை நினைந்து பாடினமையால் அது புரைதபு தவம் எனக் கொள்ளத்தக்கதேயாம். "எடுத்தனன் எழிற்கயிலே இலங்கையர் மன்னன் தன்னை, அடுத் தொரு விரலா லூன்ற அலறிப்போ யவனும் வீழ்ந்து, விடுத்தனன் கைநரம்பால் வேதகீதங்கள் பாடக், கொடுத்தனர் கொற்றவாள், நாள், குறுக்கை வீரட்டனுரே" (தேவாரம். 4-49-10) என்ற திருநாவுக் கரசர் வாக்கும் நோக்குக. உத்தரகாண்டத்திலும் இவ்வாறு "அவ்வழியவனும்பாட வரன் மகிழ்ந் தழைத்துக்கொண்டு, முவ்வகை யுலகுமாள மூன்றரைக்கோடியாண்டும், எவ்வகைப் படையும் வெல் லும் சந்திரவாளும் ஈந்தான்" (வரையெடுத்தபடலம். 75.) என்று கூறியிருத்தல் காணலாம்.

இராவணன் இவ்வாறு மூன்றரைக்கோடி ஆயுளைப்பெற்றதை யறிந்த திருமால், அதனு லுலகர்க்குண்டாகும் தீங்கினை நினைந்து அவ்வாயுளைக் குறைக்கவேண்டி விருத்த வேதியனுய் இராவணன் முன் சென்று, அவன் ஆயுள்பெற்ற வரலாற்றைக் கூறக்கேட்டு, மூன்றரைக்கோடி ஒழிய மேலும் அரைக்கோடி ஆயுளைக் கேள் என்று கூற, இராவணனும் அவ்வாறே சிவன்பால் சென்று, 'முன்ன மூன்றரைக்கோடியு மொழிய இன்னமோரரைக்கோடி நாள் ஈந்தருள்' என்று கேட்க, ஈசன் சிரித்து, 'அன்னவாறரைக் கோடியே யளித் தனம்' என்றுகூறி அரைக்கோடி ஆயுள்மட்டுமே கொடுத்தசெய்தி உத்தரகாண்டத்தில் காணலாம். இதனுல் இராவணன் கருத்துப்படி நான்குகோடி ஆயுள் என்பதும், ஈசன் கருத்துப்படி அரைக்கோடி ஆயுளே இராவணனுக்குண்டு என்பதும் புலனும். நான்கு கோடியில் இராவணனுக்கு இப்பொழுது அரைக்கோடி ஆயுள் கழிந்துவிட்டமை யால் எஞ்சியுள்ள மூன்றரைக்கோடி ஆயுள் போதுமோ எனக்கூறிய தாகக் கொள்க.

மேல், காணக் கண்கள் போதா என்றவன் இங்குக் கண்டு அநு பவிக்கக் காலம் போதாமை யுணர்த்தினன். (30)

3447. தேவரு மவுணருந் தேவி மாரொடுங்
கூவல்செய் தொழிலினர் குடிமை செய்திட

மூவுல கமுமிவர் முறையி னுளயா
னேவல்செய் துய்குவ னினியென் றுன்னினன்.

"தேவரும், அவுணரும், தேவி மாரொடும்
கூவல் செய் தொழிலினர், குடிமை செய்திட,
மூவுலகமும் இவர் முறையின் ஆள, யான்
ஏவல் செய்து உய்குவன், இனி" என்று உன்னினன்.

பொ :—"தேவரும்,அவுணரும் தம் மனைவிமாரோடும், அழைத்துச் சொல்லப்படும் குற்றேவல்செய்யும் தொழிலையுடையராய்க் குடியடிமை செய்யாநிற்க, மூன்று உலகங்களையும் இந்நங்கையார் முறையோடு ஆட்சி செய்ய, இனி யான் அவர்க்கு ஏவல் தொழிலைச்செய்து ஈடேறு வேன்" என்று எண்ணினன்.

கு :—கூவல் - அழைத்தல். விரும்பிய பொழுதெல்லாம் அழைத்துச் சொல்லும் குற்றேவலைக் 'கூவல்' என்றார். குடிமை - குடிக்கு அடிமை. தனக்குக் குற்றேவல்புரியும் தேவரும் அவுணரும் முதலியோர் அவட்குக் குற்றேவல் செய்யும் தொழிலையுடைய அடிமைகளாக என்றவாறு. சீதையின் தெய்வத்தோற்றம் இராவணனையும் அடிமை கொள்ளத்தக்கதாகச் சிறந்துவிளங்கிற்று என்பது இதனால் அறியலாம். மூவுலகாட்சியும் செய்தற்குரியராகவே சீதையை இராவணனும் நினைத்தல் காணலாம். அந்நங்கைக்கு ஏவல்செய்து உய்தி பெறலாம் என்ற உண்மையான உயர்ந்த நோக்கமும் இருப்பது போல இங்குப் புலப்படுதல் காணலாம். இங்கு இராவணன் நினைத்த எண்ணங்களைப் பின் "தேவர் தேவியர் சேவடி கைதொழும், தாவின் மூவுலகின் றனிநாயகம், மேவுகின்றது நுன்கண்" (சுந்தர. 442) எனவும், "குடிமை மூன்றுலகுஞ்செயும் கொற்றத்தென், அடிமை கோடி யருளுதி" (சுந்தர. 443) எனவும் காட்சிப்படலத்தில் சொல்லால் சொல்லுதல் காணலாம். 'உலகமீரேழுமாளும் செல்வத்துளுறைதி' (68) எனப் பின் கூறுதலும் காணலாம். (31)

3448. உளைவுறு துயர்முகத்
தொளியி தாமெனின்
முளையெயி றிலங்கிடு
முறுவ லென்படுந்
தளையவிழ் குழலிவட்
கண்டு தந்தவென்
னிளையவட் களிப்பனென்
னரசென் றெண்ணினன்.

"உளைவுறு துயர் முகத்து ஒளி இது ஆம் எனின்,
முளை எயிறு இலங்கிடும் முறுவல் என்படும்?
தளை அவிழ் குழல் இவட் கண்டு தந்த என்
இளையவட்கு அளிப்பன் என் அரசு" என்று எண்ணினான்.

பொ :—"(தன் கொழுநன் இறந்திருக்கக்கூடும் என்ற எண்ணத்தால்) துன்புறுகின்ற துயர்மிக்க முகத்தின் ஒளியே இத்தன்மையது என்றால் (மகிழ்ச்சியால்) நாணலின் முளைபோன்ற பற்கள் புலப்படும் புன்சிரிப்புள்ள காலத்து அம்முகத்தின் ஒளி எத்துணை அழகாக இருக்கும்? கட்டவிழ்ந்த கூந்தலையுடைய இவளைக் கண்டு எனக்குக் காட்டிக்கொடுத்த என் தங்கைக்குப் பரிசாக என் அரசை அளிப்பேன்" என்று எண்ணினான்.

கு :—துன்புறுங்காலத்திலேயே ஒளிமிக்குவிளங்கும் முகம் இன்புறுங்காலத்து எத்தகையதாக விளங்கும்? என உய்த்துணர்ச்சியால் நினைந்து வியந்தவாறு. முறுவல் என்படும் என்றது முறுவல் செய்யுங்காலத்து முகத்தொளி என்படும் என்று இயைத்துக் கொள்க. முகத்தொளிபற்றியதே அவன் வியப்பாதல் காண்க. நாணலின் வெண்முளையை மகளிரின் பற்களுக்கு உவமை கூறுதலுண்டு. "கிளையரி நாணற் கிழங்கு மணற்கீன்ற, முளையோ ரன்ன முள்ளெயிற்றுத் துவர்வாய்" (அகநா. 212) என்றதும் காண்க. கணவனைப் பிரிந்த நிலையில் தரையிற்புரண்டு கட்டவிழ்ந்த கூந்தலினளாகச் சீதை இருந்தாள் ஆதலின் 'தளையவிழ் குழலிவள்' என்றான். குழலையுடைய இவள் என்க. தந்த என இறந்தகாலத்தாற் கூறியது சீதை தனக்குரியவளாவது திண்ணம் என்னும் துணிவுபற்றிய காலவழுவமைதி. முன் சீதைக்குக் கொடுப்பதாகக் கூறிய அரசை இப்பொழுது அச்சீதையைக் கண்டு தந்த சூர்ப்பணகைக்குக்கொடுப்பதாகக் கூறுகின்றான். அவ்வாறு கூறியதும் சீதையின் சிறப்பையே விளக்கும். இவ்வாறே இராம இலக்குவரைக் கண்ட மிதிலைமக்களும் "நம்பியைக் காண நங்கைக் காயிரம் நயனம் வேண்டும்.........தம்பியைக் காண்மின் என்பார் தவமுடைத் துலக மென்பார், இம்பரிந் நகரிற்றந்த முனிவனை இறைஞ்சுமென்பார்" (792) என இராம இலக்குவர் அழகினை வியக்கின்றவர்கள், அவ்விருவரையும் தாம் காணுமாறு அழைத்து வந்த முனிவன் உதவியை எண்ணி அவனை இறைஞ்சவேண்டும் என்று கூறுதலும் காணலாம். (32)

## சீதை இராவணனை வரவேற்று முகமன் செய்தல் 3449-3450

**3449.** ஆண்டையா னனையன வுன்னி யாசைமேன்
மூண்டெழு சிந்தனை முறையி லோன்றனைக்

காண்டலுங் கண்ணினீர் துடைத்த கற்பினு
ளீண்டெழுந் தருளுமென் றினிய கூறினாள்.

ஆண்டையான் அனையன உன்னி, ஆசை மேல்
மூண்டு எழு சிந்தனை, முறை இலோன்தனைக்
காண்டலும், கண்ணின் நீர் துடைத்த கற்பினாள்,
"ஈண்டு எழுந்தருளும்" என்று, இனிய கூறினாள்.

பொ :—பன்னசாலையின் வாயிலாகிய அவ்விடத்தில் நின்றவனும் அத்தன்மையானவற்றை எண்ணி, ஆசை மேலும் மேலும் பெருகி எழுகின்ற மனத்தையுடைய முறையற்ற இராவணத்துறவியைப்பார்த்ததும், தன் கண்ணீரைத் துடைத்துக்கொண்ட கற்பின்மிக்க சீதை, "பன்னசாலைக்குள் எழுந்தருளுமின்" என்று இனிய சொற்களைச் சொன்னாள்.

கு :—ஆண்டு என்றது இங்குப் பன்னசாலையின் வாயிலைச் சுட்டியது. ஈண்டு என்றது அச்சாலையின் உள்ளிடத்தைச் சுட்டியது. 'தோமறுசாலையின் வாயில் துன்னுன்' (3440) என முன் கூறியவாறு வாயிலிலிருந்தபடியே, 'யாவிரிவ்விருக்கையுளிருந்துளீர்' என்று வினவினுக அவ்வொலிகேட்ட சீதை பன்னசாலையுள் இருந்து, 'உள்ளே வாருங்கள்!' என்று சொல்லியவண்ணம் வாயிலருகே வந்தாளாக, அவளழகைக் கண்டு காமமிக்கவனுய்ப் பலநினைந்து, மேலும் மேலும் பெருகுகின்ற ஆசையுடையவனுகிய இராவணத்துறவியை அக்கற்புடைய சீதை அறவோர்க்களிக்கும் முறையில் உள்ளே வாருங்கள் என மீண்டும் கூறி ஏத்தினள் என்க. பிறன்மனை நச்சும் பேதையாதலின் 'முறையிலோன்றனை' என்றார். முறையிலோனை ஈண்டெழுந்தருளும் என்றது வேடம் நோக்கி. தன் கொழுநனுக்கு நேர்ந்த துன்ப நிலையை நினைந்து அழுது கொண்டிருந்தவளாகலின் விருந்தினரை வரவேற்க அக்கண்ணீரைத் துடைத்தனள். தன்துயர் காணுது தக்கவரை யுபசரிக்கும் அவள் கற்பின் கடமையுணர்ச்சியைப் புலப்படுத்த, 'கண்ணினீர் துடைத்த கற்பினள்' என்றார். (33)

3450. ஏத்தின ளெய்தலு மிருத்தி ரீண்டென
வேத்திரத் தாசனம் விதியி னல்கினாண்
மாத்திரி தண்டயல் வைத்த வஞ்சனும்
பூத்தொடர் சாலையி னிருந்த போழ்தினே.

ஏத்தினள்; எய்தலும், "இருத்திர் ஈண்டு" என,
வேத்திரத்து ஆசனம் விதியின் நல்கினாள்;

மாத் திரிதண்டு அயல் வைத்த வஞ்சனும்,
பூத் தொடர் சாலையின் இருந்த போழ்தினே.

பொ :—அவ்வாறு கூறி வணங்கினள்; (தன் வேண்டுகோளின் படி அத்துறவி) உள்வருதலும், 'இங்கு அமருங்கள்' என்று கூறிக் கொண்டே பிரம்பினாலாய ஆசனம் ஒன்றை முறைப்படி இட்டாள்; பெருமையுடைய திரிதண்டத்தைப் பக்கத்தில் வைத்தவனாகிய வஞ்சகனும் அவ்வாறே அழகுபொருந்திய பன்னசாலையில் அந்த ஆசனத்தில் இருந்தபோது.

கு :—இனிய கூறி ஏத்தினள் என மேற்செய்யுளோடு இயையும். எய்துதல் இராவணன் செயல். வேத்திரத்தாசனம் - பிரம்பினாலாகிய இருக்கை. விதி என்றது துறவிகளை ஆசனத்தில் அமரச் செய்தல் வேண்டும் முறையினை. அமருங்கால் இயல்பாக நிகழுஞ்செயலைக் குறிப்பிடுவாராய்த் திரிதண்டத்தை அயல்வைத்தமை கூறினர். நெஞ்சில் துறவாது துறந்தார்போல் வந்து வஞ்சிக்கின்றானாகலின் இராவணனை 'வஞ்சனும்' என்றார். பூ - அழகு; பூங்கொடிகள் தொடர்ந்து படர்ந்துள்ள பன்னசாலை எனலும் ஆம். அவ்வாசனத்தி லிருந்தபோழ்து என்று வருவிக்க. வஞ்சகமற்ற துறவி என்ற கருத்தால் நல்கிய ஆசனத்தில் வஞ்சனும் இருந்தான் என உம்மையை இழிவு சிறப்பாகவும் கொள்ளலாம். இச்செய்யுளும் குளகம். (34)

இராவணனை யறிந்து அஃறிணைப் பொருள்கள் அஞ்சுதல்

3451. நடுங்கின மலைகளு மரனு நாவவிந்
தடங்கின பறவையும் விலங்கு மஞ்சின
படங்குறைந் தொதுங்கின பாம்பும் பாதகக்
கடுந்தொழி லரக்கனைக் காணுங் கண்ணினே.

நடுங்கின மலைகளும் மரனும்; நா அவிந்து
அடங்கின பறவையும்; விலங்கும் அஞ்சின;
படம் குறைந்து ஒதுங்கின பாம்பும்; பாதகக்
கடுந் தொழில் அரக்கனைக் காணும் கண்ணினே.

பொ :—பிறன்மனைவியை விரும்பும் கடும் பாதகத்தொழிலையுடைய அரக்கனது உண்மையுருவைக் காணும் கண்ணுடைமையால் மலைகளும் மரங்களும் நடுங்கின; பறவைகளும் நாக்கு அடங்கிக் கூடுகளில் ஒடுங்கின; விலங்குகளும் அச்சம் அடைந்தன ; பாம்பும், படம் சுருங்கி ஒருபுறத்து ஒதுங்கிச்சென்றன.

கு :—சீதைபோல், வேடத்தைக் கண்டு நம்பாது, மலைமுதலி யன நடுங்குதலும் அடங்குதலு முதலிய செய்தற்குக் காரணங்கூறு வாராய், 'அரக்கனைக் காணுங் கண்ணினே' என்றார். தவத்தினர் வேடத்தில் வந்துள்ளவன் இராவணனே என்ற உண்மைநிலையை யுணர்ந்தமையால் அவை நடுங்கின என்க. காணுங்கண் என்றது அறியும் அறிவுடைமையை. ஒரறிவுயிராகிய மர முதலியவற்றிற்கும் ஐம்பொறிகள் நுண்ணியவாய் அமைந்துள்ளன என்பது சிவஞான முனிவர் போன்ற பண்டைத்தமிழ்ச் சான்றோர்க்கும் செகதீச சந்திர போசு போன்ற உயிர்நூல்வல்லோர்க்கும் கருத்தாதல் காணலாம். மலைகளுக்கு அதிதெய்வமுண்டாதலின் அத்தெய்வம் கண்டு நடுங் குங்கால் மலைகளும் நடுங்குதல் பற்றிக் காணுங் கண்ணின் மலை களும் நடுங்கின என்றார். இதனால் அரக்கனைக் காணுங் கண்ணினை யுடைமையால் மலைகளும் மரனும் நடுங்கின என்றலும் பொருந்து வதே என்பது புலனும். பறவை முதலியவற்றிற்குக் கண் உண்டு என்பது வெளிப்படை. உம்மைகள் யாவும் எண்ணுப் பொருளன. பாம்பும் என்புழி உம்மை எண்ணுப் பொருளினோடு இழிவுசிறப்புப் பொருளையும் தந்தது; கொடிய பாம்பும் இவன் கொடுமையைக் கண்டு படங்குறைந்து ஒதுங்கின என்று பொருள்தருதல் காண்க. இராவணன் மாயவேடம் மனிதர்கண்ணுக்கு மட்டுமே தோன்றியது; மற்றையுயிர்களின் கண்களுக்கு உண்மையுருவமே புலப்பட்டது என்க. (35)

## இராவணன் வினவும் சீதை விடையும் 3452-3453

**3452.** இருந்தவன் யாவதிவ் விருக்கை யிங்குறை
யிருந்தவன் யாவனீர் யாரை யென்றலும்
விருந்தின ரிவ்வழி விரகி லாரெனப்
பெருந்தடங் கண்ணவள் பேசன் மேயினள்.

இருந்தவன், "யாவது இவ் இருக்கை? இங்கு உறை
இருந்தவன் யாவன்? நீர் யாரை?" என்றலும்,
'' விருந்தினர்; இவ்வழி விரகு இலார்" எனப்
பெருந்தடங் கண்ணவள் பேசல் மேயினள்.

பொ :—ஆசனத்தில் இருந்த இராவணத்துறவி, "இந்த இருப் பிடத்தின் பெயர் யாது? இங்குத் தங்கியுள்ள பெரிய தவசி யாவன்? நீர் அத் தவசிக்கு எத்தகைய உறவுடையவர்?" என்று வினவு தலும், பெரியதாய் விரிந்த கண்ணையுடைய சீதை, புதிதின் வந்த இவர், இந்த இடத்தைப்பற்றிய அநுபவ அறிவு பெறாதவர் என்று எண்ணி விடை கூறத் தொடங்கினாள்.

கு :—இருந்தவன், வினையாலணையும் பெயர். யாவது இவ்விருக்கை என்றது, இந்த ஆசிரமத்தின் பெயர் யாது? என்று வினவியவாறு. அவ்வினவின் விளக்கமாகவே இரண்டாவது வின அமைந்துள்ளது. அங்குறைகின்ற தவசியின் பெயர் கூறவே அவ்விருக்கையின் பெயரும் கூறியதாக அமைதல் காணலாம். இருந்தவன் - பெரியதவத்தையுடையவன்; பண்புத்தொகை. இருந்தவன் யாவன்? என ஒருமையால் வினவியவன். 'நீர் யாரை?' எனப் பன்மையால் வினவிச் சீதைபால் தனக்குள்ள நன் மதிப்பைப் புலப்படுத்தினன். விருந்தினர் - புதியவர். விரகு - அறிவு. இவ்வழி விரகு இலர் என்றது, இவ்விடத்தைப் பற்றிய அநுபவமில்லாதவர் என்றவாறு. தண்டகவனத்து முனிவர்யாவரும் இராமனை நன்கறிவரன்றே. இம் முனிவர் வினவினல் அங்ஙன மறிந்தவராகக் காணப்படாமையின் இங்ஙனம் சீதை கருத நேர்ந்தது. விரகு என்பதற்கு வஞ்சகம் என்று பொருள் கூறுதல் சீதையின் கருத்திற்கு ஏற்றதாகாது. அவன் வின வியப்பூட்டின மையால் துன்பத்தால் இடுகிய கண்ணினளாகிய சீதை, தன்கண் களை அகலத்திறந்து பேசத் தொடங்கினள் என்ற குறிப்புப் புலப்படப் 'பெருந்தடங்கண்ணவள்' என அவளைக் குறிப்பிட்டார். (36)

3453. தயரதன் ஞெல்குலத் தலைவன் றம்பியோ
டுயர்குலத் தன்னைசொ லுச்சி யேந்தின
னயர்வில னிவ்வழி யுறையு மன்னவன்
பெயரினைத் தெரிகுதிர் பெருமையீ ரென்றாள்.

"தயரதன் தொல் குலத் தலைவன், தம்பியோடு
உயர் குலத்து அன்னை சொல் உச்சி ஏந்தினன்,
அயர்வு இலன், இவ்வழி உறையும்; அன்னவன்
பெயரினைத் தெரிகுதிர், பெருமையீர்!" என்றாள்.

பொ :—"பெருமை யுள்ளவரே! தயரதசக்கரவர்த்தியின் பழமையான குலத்திற்குத் தலைவனுயுள்ளவன்; உயர்குடிப் பிறந்த அன்னையின் கட்டளையைத் தலைமேற்கொண்டு, தன் தம்பியோடு துன்பம் இல்லாமல் பன்னசாலையில் தங்கியுள்ளான்; அவன் பெயரைத் தெரிந்திருப்பீர்." என்று கூறினள்.

கு :—தயரதன் குலம், சூரியன் முதலாகத் தொடர்கின்ற குலமாதலின் 'தொல் குலம்' எனப்பட்டது. தயரதனுக்குப் பின் அக் குலத்திற்குத் தலைவன் இராமனே ஆதலின் அவனைத்

தலைவன் என்றாள். கைகேயியின்பால் தனக்குள்ள நன்மதிப்புத் தோன்ற 'உயர்குலத்தன்னை' என்று சிறப்பித்தாள். நாடாளும் நல்வாழ்க்கை விடுத்துக் காடாளும் அல்லல் வாழ்க்கை யுறுதற்குக் காரணமாயிருந்தவளை இங்ஙனம் புகழ்ந்தமையால் இராமனைப் போலவே சீதையும் பெருந்தன்மையுடையவள் என்பது புலனும். "மன்னவன் பணியன்றாகில் நும்பணி மறுப்பனோ" (1693) என்ற இராமன் குறிப்பு அன்னைபணியே என்பதைப் புலப்படுத்தலாலும், "தாய்சொற்றாங்கி விரையளித்த கான்புகுந்தேம்" (சூர்ப்பணகைப். 136) எனச் சூர்ப்பணகையிடம் இராமன் கூறியதாலும், சீதையும் 'அன்னை சொல் உச்சியேந்தினன்' என்று கூறினாள். ஆயின், நாயகன் எனை நன்னெறியுய்ப்பதற் கேய துண்டொர் பணி" (1700) எனக் கோசலைக்கும், "எந்தையேவவாண் டேழொ டேழெனா, வந்த கால நான் வனத்துள் வைக நீ" (திருவடிசூட்டு - 116) எனப் பரதனுக்கும் கூறியது என்னை? எனின் அவர்களிடம் கைகேசியின் சொல்லால் வனம்புகுவதாகச் சொல்லின் அவர்கள் சினம் மிகுதியாகிப் பேரல்லலை விளைவிக்கும் ஆதலின், அங்கு அவ்வாறு கூறினான்; அங்கும் தந்தை ஏவலுக்கும் தாய்வரமே காரணம் என்ற உண்மையையும் புலப்படுத்தியிருத்தல் காணலாம். யாவதிவ்விருக்கை? இங்குறை இருந்தவன் யாவன்? என்ற இரண்டு வினாக்களுக்கும் விடையாக, 'தயரதன் தொல் குலத் தலைவன் ஏந்தினனைய் இவ்வழியுறையும்' என்று கூறினாள். கணவன் பெயர் சொல்லுதல் கற்புடையோர்க்குக் கூடாதாகலின் 'அன்னவன் பெயரினைத் தெரிகுதிர்' என்றாள். 'தயரதன் தொல் குலத் தலைவன்' என்றமையாற் புலனாக்கி, முனிவர்யாரும் இராமனை அறிவரே என்ற கருத்தால், 'தெரிகுதிர்' என்றாள். (37)

## இராவணன் விடையும் வினாவும்

**3454.** கேட்டனென் கண்டிலென் கெழுவு கங்கைநீர்
நாட்டிடை யொருமுறை நண்ணி னேன்மலர்
வாட்டடங் கண்ணினீர் யாவர் மாமகள்
காட்டிடை யரும்பகல் கழிக்கின்றீ ரென்றான்.

"கேட்டனென், கண்டிலென்; கெழுவு கங்கை நீர்
நாட்டிடை ஒருமுறை நண்ணினேன்; மலர்
வாள் தடங் கண்ணின் நீர் யாவர் மா மகள்?
காட்டிடை அரும் பகல் கழிக்கின்றீர்!" என்றான்.

பொ:—"தயரதன்மகனைப் பற்றிக் கேள்விப்பட்டுள்ளேன்; ஆனால், கண்டிலேன்; கங்கைநீர் பாயும் கோசல

நாட்டுக்கு ஒரு முறை சென்றுள்ளேன்; குவளைமலர் போன்ற மலர்ச்சியும், வாள்போன்ற கூர்மையும் உடைய பெரிய கண்ணினை யுடைய நீர் யாருடைய சிறந்த மகள்? கொடிய காட்டிற்கிடையில் அரிதாகிய நாட்களைக் கழிக்கின்றீரே!" என்று இரக்கத்துடன் வினவினான்.

கு:—இராமனைக் கேள்வியாலறிந்துள்ளேன்; கண்ணாற் கண்ட தில்லை என்றவாறு. சூர்ப்பணகை மூலம் கேள்விப்பட்டதை இங்குக் கூறியதாகக் கொள்வதினும் கோசல நாட்டையாண்ட அனரணியன் என்ற அரசன் சாபமொழியில் இராமன் பெயரைக் கேள்விப்பட்டதைக் கூறினான் என்றலே பொருத்த முடைத்து; என்னை? அடுத்துக் கங்கைநீர் நாட்டிடை ஒரு முறை நண்ணி யதைக் கூறியதனால் அப்பொழுது கேள்விப்பட்டதையே கூறினான் என்பது புலனாகும். இராவணன் திக்கு விசயம் செய்தபோது கோசலநாட்டை யாண்டுவந்த அனரணியன் என்பானோடு போர் செய்து வஞ்சத்தால் வென்று பின், தோற்ற அவ்வரசனை எள்ளிச் சிரித்தானாக, அவ்வரசன் மனம் புழுங்கி, "கொடுமனத்தோயவ மதித்தாயெனை யதனால், கோலத்தசரதராமன் என் குலத்தோன் கொடுங்கணையால், தாலக்குலை போல் நின்றலை தரைவீழ்கெனச் சபித்தான்." (உத்தர - திக்கு விசயப் - 41) என்ற வரலாறு இங்கு நினைக்கத்தகும். கோசலநாட்டைக் கங்கை நீர் நாடு என்றது, கங்கைக் கரைவரை அந்நாடு பரவியிருந்தமையாற் போலும். 'கங்கைக் கிறைவன்' என (1808) இலக்குவனைக் கூறியதும் காண்க. சீதையின் அழகைச் சிறப்பித்து, 'மலர் வாட்டடங் கண்ணினீர்' என்றான். 'நீர் யாரை' என்ற வினாவுக்குச் சீதை விடைகூறாமை யால் மீண்டும், 'யாவர் மாமகள்' என்று வினவினான். இத்த கைய அழகிய உருவம் பெற்றும் காட்டில் காலம் கழிக்கும் நிலை ஏற்பட்டதே என்று இரக்கம் காட்டுவான் போலக் கூறினான், சீதையின் அன்பைப் பெறும் நோக்கத்தால். இளமையினருமையை நினைந்து, 'அரும்பகல் கழிக்கின்றீர்' என்றான். "அரிதரோ சென்ற இளமைதரற்கு" (கலி - 18) என்பது காண்க. (38)

## சீதையின் விடை

**3455.** அனகமா நெறிபட ரடிக ளும்மலா
னினைவதோர் தெய்வம்வே றிலாத நெஞ்சினன்
சனகன்மா மகள்பெயர் சனகி காகுத்தன்
மனைவியா னென்றனண் மறுவில் கற்பினாள்.

"அனக மா நெறி படர் அடிகள்! நும் அலால்
நினைவது ஓர் தெய்வம் வேறு இலாத நெஞ்சினன்
சனகன் மா மகள்; பெயர் சனகி; காகுத்தன்
மனைவி யான்" என்றனள், மறு இல் கற்பினள்.

பொ:—குற்றம் அற்ற கற்பினையுடைய சீதை, "பாவமற்ற சிறந்த வழியில் செல்லுகின்ற அடிகளே! நும்மைப் போன்ற துறவிகளை யல்லாமல் நினைத்தற்குரிய ஒரு தெய்வம் வேறு இருப்பதாக நினையாத நெஞ்சினையுடையவனாகிய சனகனுடைய மூத்த மகள் யான்; என்பெயர் சனகி என்பதாகும்; ககுத்தன் மரபிலே தோன்றிய காகுத்தன் மனைவியாவேன்" என்று சொன்னாள்.

கு:—அனகம் - பாவமின்மை. மாநெறி - சிறந்த நெறி. சனகன் பெரிய ஞானியாகலின் துறவிகளையே தெய்வமாக நினைக்கின்றவனான். இராவணனை முனிவன் என்றே சீதை எண்ணினமையால், முனிவர்களையன்றித் தெய்வம் வேறிலாதவன் என்பாள், "அடிகள் நும்மலால் நினைவதோர் தெய்வம் வேறிலாத நெஞ்சினன்" என்றாள். துறவிகளைப் போற்றும் தூயமரபிற் பிறந்தமை கூறித் தனக்கும் அப்பண்புடைமை புலப்படுத்தி, வந்த துறவியை மகிழ்விக்க நினைத்தாள் சீதை. ஊர்மிளையை விலக்குதற்கு 'மாமகள்' என்றாள். மாமகள் - பெரியமகள். சனகி என்பது தந்தையின் பெயர்வழிப் பெற்ற பெயர். காகுத்தன் என்பது, ககுத்தன்மரபில் தோன்றியவன் என்னும் பொருளது. இந்திரன் விடையாகித் தன்னைத்தாங்க ஊர்ந்து தேவரைக் காக்கும் பொருட்டு அசுரரைக் கொன்றவன் ககுத்தன். அவன் மரபில் வந்தவன் என்ற பொருளுடைய பெயரால் காகுத்தன் என்று குறிப்பிட்டமையால், இராமனும் அவ்வாறே அரக்கரை அழிக்கவல்லவன், என்ற கருத்தும் புலப்படுதல் காணலாம். இராமன் எனத் தன்கணவன் பெயர் கூறாது மரபுப் பெயரால் கூறியவாறு. யாவர் மாமகள் என்ற வினவுக்குச் சனகன் மகள் என்ற விடையே போதுமே, 'காகுத்தன் மனைவி' என்றது, என்னை யெனின்? யாவர் மாமகள் என்ற வினா இருவகைப் பொருளுடையது. மகள் என்ற சொல், புதல்வியையும் மனைவியையும் குறிக்கும். 'மனக்கினியாற்கு நீ மகளாயதூஉம்' (மணிமேகலை : 21 - 30) என்புழி மகள் என்றது மனைவியைக் குறித்தல் காணலாம். எனவே இருவகையாகவும் பொருள் கொண்டு, இரண்டு விடை கூறினாள் என்க. 'மாமகள் யான்' என மேலும் இயைக்க. (39)

### சீதையின் வினு

**3456.** அவ்வழி யனையன வுரைத்த வாயிழை
வெவ்வழி வருந்தினிர் விளைந்த மூப்பினி
ரிவ்வழி யிருவினை கடக்க வெண்ணினி
ரெவ்வழி நின்றுமிங் கெய்தி னீரென்ருள்.

அவ்வழி அனையன உரைத்த ஆயிழை,
"வெவ்வழி வருந்தினிர், விளைந்த மூப்பினிர்,
இவ்வழி இரு வினை கடக்க எண்ணினிர்,
எவ் வழி நின்றும் இங்கு எய்தினீர்?" என்ருள்.

பொ:—அவ்விடத்து அத்தன்மையாகத் தன் வரலாற்றைச் சொன்ன சீதை, "இத் தவநெறியால் நல்வினை தீவினையென்ற இருவினையையும் வெல்ல நினைத்தவராகிய நீவிர், கொடியவழியில் வருந்தினீராய் முதிர்ந்த மூப்பினையுடையீராய் எவ்விடத்திலிருந்து இவ்விடத்திற்கு வந்தீர்?" என்று வினவினுள்.

கு:—'இவ்வழி' என அவன் மேற்கொண்டுள்ள தவவேடத்தைச் சுட்டித் தவநெறியைக் குறிப்பிட்டவாறு. நல்வினையும் பிறவிக்கு வித்தாகலின் பிறவாநெறி வேண்டுவோர் இருவினையும் கடத்தல் இன்றியமையாததாகும். முதிர்ந்த மூப்புப்பருவத்தில் கொடிய காட்டுவழியில் வந்தமையால் வழிவந்த வருத்தம் மிகுதிப் பட்டது என்றவாறு. தன் வரலாற்றை வினவிய முனிவனைச் சீதையும் வினவியவாறு. ஆயிழை - ஆய்ந்தெடுத்த அணிகலனை யுடையவள்; வினைத்தொகை நிலைக்களத்துப் பிறந்த அன்மொழித் தொகை. (40)

### இராவணத் துறவியின் சொல் 3457-3466

**3457.** இந்திரற் கிந்திர னெழுத லாகலாச்
சுந்தர னான்முகன் மரபிற் ரோன்றினு
னந்தரத் தோடுமெவ் வுலகு மாள்கின்ருன்
மந்திரத் தருமறை வைகு நாவினுன்.

"இந்திரற்கு இந்திரன்; எழுதல் ஆகலாச்
சுந்தரன்; நான்முகன் மரபில் தோன்றினுன்;
அந்தரத்தோடும் எவ் உலகும் ஆள்கின்ருன்;
மந்திரத்து அருமறை வைகும் நாவினுன்."

பொ :—“தேவர்கள் தலைவனாகிய இந்திரனுக்கும் தலைவன்; ஓவியத்து எழுதமுடியாத அழகுடையவன்; பிரமன் மரபில் பிறந்தவன்; விண்ணுலகத்தோடும் எல்லாவுலகங்களையும் ஆள்கின்றவன்; மந்திரங்களோடுங்கூடிய அரிய வேதம் பயிலும் நாவினை யுடையவன்”

கு :—செல்வமும், வனப்பும், உயர்குடிப் பிறப்பும், அதிகாரமும் கல்வியும் முறையே கூறப்பட்டன. பெண்டிர் உள்ளத்தைக் கவரத்தக்க சிறப்புடைமையின் செல்வமும் வனப்பும் முதற்கண் கூறப்பட்டன. அரக்கன் என்று வெருதிருக்கவேண்டி, ‘நான்முகன் மரபிற்றோன்றினான்’ என மரபும், காட்டில் திரிந்து வருந்தும் கணவனிடம் வெறுப்புக் கொள்ள வேண்டி எவ்வுலகுமாளும் அவன் ஆட்சியின் பெருமையும், அவள் பிறந்த குடிக்கு ஏற்றவன் என்று எண்ண வேண்டி, வேதமோதும் நாவுடைமையும் கூறியவாறு. அந்தரம் ஆகுபெயராய் வானத்திலுள்ள உலகத்தை யுணர்த்தியது. பிரமன் மகனான புலத்தியனுக்கு மகன் விச்சிரவசு; விச்சிரவசுவின் மகன் இராவணன் என்ற முறைமைபற்றி ‘நான்முகன் மரபிற்றோன்றினான்’ என்று கூறினான். சூர்ப்பணகையும், தன் குடிப்பிறப்பைக் கூறும் போது, ‘பூவிலோன் புதல்வன் மைந்தன் புதல்வி’ என்று கூறியுள்ளதும் காண்க. (41)

3458. ஈசனாண் டிருந்தபே ரிலங்கு மால்வரை
யூசிவே ரொடும்பறித் தெடுக்கு மூற்றத்தா
னாசைகள் சுமந்தபே ராற்ற லானைகள்
பூசல்செய் மருப்பினைப் பொடிசெய் தோளினான்.

“ஈசன் ஆண்டு இருந்த பேர் இலங்கு மால்வரை
ஊசிவேரொடும் பறித்து எடுக்கும் ஊற்றத்தான்;
ஆசைகள் சுமந்த பேர் ஆற்றல் ஆனைகள்
பூசல் செய் மருப்பினைப் பொடிசெய் தோளினான்.”

பொ :—“சிவன் ஆட்சிகொண்டிருந்த புகழையுடைய விளக்கமிக்க பெரிய கயிலைமலையை ஆணிவேரோடும் பறித்து எடுக்கும் வலிமையுடையவன்; திக்குகளைச் சுமந்த பேராற்றல் வாய்ந்த திசையானைகளின் போர்செய்யும் கொம்புகளைப் பொடிபடச் செய்த தோள்வலிமையை யுடையவன்.”

கு :—வெள்ளிமலையைப் பெயர்க்கப்போய் அம்மலையின்கீழ் அகப்பட்டு அல்லலுற்று அரற்றினான் என்பது வரலாறு; ஆயினும், மலையகழ்க்கும் பெருமுயற்சியும் ஆற்றலும் பிறர்பாற் காணாதனவாகலின் “கானமுயலெய்த வம்பினில் யானை பிழைத்தவேல் ஏந்த லினிது.”

(குறள். 772) என்றவாறு பாராட்டத்தக்கனவேயாம். அதனை உயர்வு நவிற்சியாகப் ‘பறித்தெடுக்கு மூற்றத்தான்’ என்றான். ஆசை - திசை. பேர் - புகழ்; பெருமை. பூசல் - போர். திசையானையின் மருப்புகளை ஒடித்தது அவன் மார்பேயாயினும், அம்மார்போடு தொடர்புடைய தோளின்மேலேற்றிப் ‘பொடிசெய் தோளினன்’ என்றான்; தோளாற்றலால் செய்த செயலாதலின். பொடிசெய்ததாகக் கூறியது உயர்வுநவிற்சி. இப்பாடலால் இராவணன் வெற்றிச்செயல்கள் இரண்டு கூறப்பட்டன. (42)

3459. நிற்பவர் கடைத்தலை நிறைந்து தேவரே
சொற்படு மற்றவன் பெருமை சொல்லுங்கால்
கற்பக முதலிய நிதியங் கையன
பொற்பக மானநீ ரிலங்கைப் பொன்னகர்.

“ நிற்பவர், கடைத்தலை நிறைந்து தேவரே ;
சொல் படும் மற்றவன் பெருமை சொல்லுங்கால்;
கற்பகம் முதலிய நிதியம் கையன;
பொற்பு அகம், மான நீர் இலங்கைப் பொன்நகர்.”

பொ :—“வாயிலின்கண் வணங்குதற்கு நிறைந்து நிற்பவர் தேவர்களே ஆவர்; அவன் பெருமையை உள்ளவாறு சொல்லத் தொடங்கின் சொற்கள் போதாமல் குறையும்; கற்பகத்தரு முதலிய செல்வங்கள் அவன் கையிலுள்ளன; அவன் அழகிய இருப்பிடம், பெரிய கடல் நீரினிடையிலுள்ள இலங்கையென்னும் பொன்மயமான நகரம்.”

கு :—வணங்குதற்கு வாயிலில் நிற்போர் தேவரே என்றமையால் தேவரினும் அவன் சிறந்தவன் என்பதும், அவன் பெருமை சொல்லுங்கால் சொற்படும் என்றமையின், சொல்லுக்கடங்காத புகழினன் என்பதும் புலனும். சங்கநிதி, பதுமநிதி, சிந்தாமணி, காமதேனு என்ற செல்வங்களைத் தழுவக் ‘கற்பக முதலிய நிதியம்’ என்றான். இவை கையன எனவே அவன் பொருளால் குறைவிலாதவன் என்பது புலப்படுத்தியவாறு. பொற்பு அகம் - அழகான இருப்பிடம். மானநீர் - பெரியநீர்; கடல் நீர்; தென்கடலில் வீழ்ந்த மேருமலையின் ஒரு குவட்டின்மேலது இலங்கைமாநகர் ஆதலின், அதனைப் பொன்னகர் என்றான். அப் பொன்னகரமும் கடல்நீரிடையிருப்பதால் மேலும் எழில் நிறைந்ததாயிற்று. அவன் கடைத்தலைநிற்பவர், அவன் கையன, அவன் பொற்பகம் என அவன் என்பது முன்னும் பின்னும் இயைந்து பொருள் தரும்; இடைநிலைவிளக்கு. மற்று அசைநிலை.

இந்திரற்கு இந்திரன், சுந்தரன், தோன்றினன், ஆள்கின்றான், நாவினன், ஊற்றத்தான், தோளினன் ஆகிய அவன் என இயையும். இராவணன் என்ற இயற்பெயர் கூறின், அவள் அறிந்து வெறுப் பாள் என்ற எண்ணத்தால் சுட்டுப்பெயரால் கூறினன். இலங்கைப் பொன்னகர் என்று ஊர்ப்பெயர் மட்டும் கூறியது, அதற்குரியவன் இராவணன் என்ற உண்மை பெண்பாலாகிய சீதைக்குப் புலப் படாது என்ற கருத்தாற் போலும். (43)

3460. மேனகை திலோத்தமை முதல வேழையர்
வானகந் துறந்துவந் தவன்றன் மாட்சியா
லூனமி லடைப்பைகால் வருட லொண்செருப்
பானவை முதற்றொழி லவர தாகுமே.

"மேனகை திலோத்தமை முதல ஏழையர்,
வானகம் துறந்து வந்து, அவன்தன் மாட்சியால்,
ஊனம் இல் அடைப்பை, கால் வருடல், ஒண் செருப்பு
ஆனவை முதல் தொழில் அவரது ஆகுமே."

பொ:—"அவனுடைய ஆட்சியின் மாட்சியால் தமது விண் ணுலகத்தை விடுத்து இலங்கைக்கு வந்து, குற்றம் இல்லாத அடைப்பை தாங்கலும் அடிவருடுதலும், ஒளிமிக்க செருப்பை அடியில் செறித்தலும் முதலிய அடிமைத் தொழில் மேனகை திலோத்தமை முதலிய அரம்பையர்களாகிய அவர்கள் உரிமையாக ஏற்றுக்கொள்ளு தற்குரியதாயிற்று."

கு:—இச்செய்யுளும் அடுத்த செய்யுளும் பல ஏடுகளில் காணப் படவில்லை. மேலும் கம்பர் வாக்காகவும் புலப்படவில்லை. பல அச் சுப்புத்தகங்களில் இவை சேர்க்கப்பட்டிருத்தலால் இங்கு இடம் பெறுகின்றன. இலங்கைப் பொன்னகரைப் பற்றிப் பேசினவன் அந் நகரத்தின் சிறப்பைக் கூறுவதே பொருத்தமன்றி இடையில் மேனகைமுதலிய அரம்பையர் பணிப்பெண்டிராதல் முதலியன பற் றிக் கூறுதல் இயைபின்று என்பது நோக்கத் தகும். (44)

3461. சந்திர னிரவியென் பவர்க டாமவன்
சிந்தனை வழிநிலை திரிவர் தேசுடை
யிந்திரன் முதலிய வமர ரீண்டவன்
கந்தடு கோயிலின் காவ லாளரே.

"சந்திரன், இரவி என்பவர்கள்தாம், அவன்
சிந்தனைவழி நிலை திரிவர்; தேசு உடை
இந்திரன் முதலிய அமரர், ஈண்டு அவன்
கம் தடு கோயிலின் காவலாளரே."

பொ:—"சந்திரன், சூரியன் என்ற இருகோள்களும் அவன் கருத்தின்படியே நிலைதிரிவார்கள்; அழகுடைய இந்திரன் முதலிய தேவர்கள் இவ்வுலகத்தில் அவனுடைய மேகத்தையும் தடுக்கும் மிக உயர்ந்த அரண்மனையின் காவலாளராவர்."

கு:—கம் - மேகம். கோயிலின் உயர்ச்சி உணர்த்த, கம் தடு கோயில் என்றார். (45)

3462. பொன்னக ரத்தினும் பொலங்கொ ணாகர்தந்
தொன்னக ரத்தினுந் தொடர்ந்த மாநிலத்
தெந்நக ரத்தினு மினிய வீண்டவன்
நன்னக ரத்தன நவையி லாதன.

"பொன் நகரத்தினும்; பொலம் கொள் நாகர்தம்
தொல் நகரத்தினும், தொடர்ந்த மாநிலத்து
எந் நகரத்தினும் இனிய, ஈண்டு அவன்
நல் நகரத்தன நவை இலாதன."

பொ:—"பொன்னகரமாகிய அமராவதியிலும், அழகுடைய நாகர்களின் பழமையான போகவதி என்னும் நகரத்திலும், பெரிய பூவுலகத்தில் தொடர்ந்துள்ள எல்லா நகரங்களிலும் உள்ள குற்றமற்றனவாய இனிய பொருள்கள் எல்லாம் இப்பொழுது அவனுடைய நல்ல நகரத்தில் இருக்கின்றன."

கு:—மூவுலகத்திலுமுள்ள இனிய பொருள்கள்யாவும் இப்பொழுது இலங்கையில் இடம்பெற்றுள்ளன என்றவாறு. நவையிலாதன, இனிய, அவன் நல் நகரத்தன என இயையும். "உலக மூன்றில் தெட்புறுபொருள்களெல்லா மிதனுழைச் செறிந்த" (சுந்தர - 95) என்பர் பின்னர். மூவுலகத்தினும் உள்ள இனிய பொருள்கள் எல்லாம் இலங்கையில் இடம் பெற்றுள்ளன என்றமையால் இனிய உருவினையுடைய சீதையும் இலங்கையில் இருத்தற்கு உரியவளே என்ற குறிப்பும் புலப்படுத்தியவாறு. 'ஈண்டு' என்பது காலப் பொருளில் வந்தது; இப்பொழுது என்பது பொருள். (46)

3463. தாளுடை மலருளான்
றந்த வந்தமி
ஞளுடை வாழ்க்கைய
ஞரி பாகத்தன்
வாளுடைத் தடக்கையன்
வாரி வைத்தவெங்
கோளுடைச் சிறையினன்
குணங்கண் மேன்மையான்.

" தாள் உடை மலர் உளான் தந்த, அந்தம் இல்
நாள் உடை வாழ்க்கையன்; நாரி பாகத்தன்
வாள் உடைத் தடக்கையன்; வாரி வைத்த வெங்
கோள் உடைச் சிறையினன்; குணங்கள் மேன்மையான்."

பொ :—" நாளத்தை யுடைய தாமரைமலரில் இருக்கும் பிரமன் கொடுத்த அழிவில்லாத ஆயுளையுடைமையால் என்றும் வாழ்கின்ற நிலையான வாழ்வையுடையவன்; பெண்ணை ஒரு பாகத்தில் வைத்துள்ள சிவன் கொடுத்த சந்திரகாசம் என்னும் வாளையுடைய பெரிய கையையுடையவன்; கைகளால் எளிதாக வாரியிட்ட கொடியகோள்களையுடைய சிறைச்சாலையையுடையவன் ; குணங்களால் மேன்மையுடையவன்".

கு :—தாள் - மலரின் நாளம். இராவணன் பிரமனை நோக்கித் தவவேள்விகள் செய்து, எளிய மனிதர் நீங்கலாக மற்றை உயிர்களால் தனக்கு மரணம் நேரலாகாது என வரம் பெற்றனன் என்ற செய்தியை உளங்கொண்டு, " மலருளான்றந்த அந்தமில் நாளுடை வாழ்க்கையன் " என்ருன். எனவே அழிவில்லாத நிலைபேறுடையவன் என்பது புலப்படுத்தி, இதனுலும் அவள் உள்ளத்தைக் கவர, எண்ணினுன் என்க.

நாரி - பெண்; பார்வதி. வெஞ்சிறை என இயைப்பினுமாம். மக்களுக்கு நன்மை தீமைகளைத் தம் மாட்சியால் உண்டாக்குகின்ற கோள்களையே சிறைவைத்த சிறப்பினன் ஆதலின், அவனைத் துன்புறுத்துவார் பிறர் இலர் என்பதும் புலப்படுத்தியபடி. நினைத்ததைச் செய்யத்தக்க ஆற்றலையுடையனுயினும் குணங்கள் நிறைந்தவன் என அவன் பெருமையை மிகுதிப்படுத்தியவாறு. (47)

3464. வெம்மைதீ ரொழுக்கினன் விரிந்த கேள்வியன்
செம்மையோன் மன்மதன் திகைக்குஞ் செவ்விய

னெம்மையோ ரனைவரு மிறைவ ரென்றெணு
மும்மையோர் பெருமையு முற்றும் பெற்றியான்.

"வெம்மை தீர் ஒழுக்கினன்; விரிந்த கேள்வியன்;
செம்மையோன்; மன்மதன் திகைக்கும் செவ்வியன்;
எம்மையோர் அனைவரும் 'இறைவர்' என்று எணும்
மும்மையோர் பெருமையும் முற்றும் பெற்றியான்."

பொ:—"கொடுமை இல்லாதநல்லொழுக்கமுடையவன்; விரிவான நூற்கேள்வியுடையவன்; நேர்மைத் தன்மையுடையவன்; மன்மதனும் திகைக்கத்தக்க உடல் அழகுடையவன்; எல்லாவுலகத்தோரும் இறைவர் என்று மதிக்கும் அயன், அரி, அரன் என்ற மும்மூர்த்திகளின் பெருமையும் தன்பால் நிறைவுறப்பெற்ற தன்மையன்."

கு:—வெம்மை தீரொழுக்கினன் ஆதற்குக் காரணம் புலப்படுத்துவானாய் 'விரிந்த கேள்வியன்' என்றான். செம்மையோன்—நேர்மையோன். செவ்வியன் - அழகுடையவன். எம்மையோர் - எல்லாவுலகத்தோரும். இறைவர் - கடவுளர். மும்மை என்றது எண்ணின்கண் நின்றது; "தெரிமாண்டமிழ் மும்மைத் தென்னம் பொருப்பன்" என்புழிப்போல. மும்மையோர் - மும் மூர்த்திகள். மும்மூர்த்திகளின் பெருமையும் இராவணனுக்கு உண்டு என்று புகழ்ந்தவாறு. "உற்றெதிர்ந்தார் அரனேயோ? அரியேயோ? அயனேயோ? எனுமாற்றல் கரனேயோ! யான்பட்ட கையறவு காணாயோ" (சூர்ப்பணகைப் - 107) எனச் சூர்ப்பணகையும் இவ்வாறே இராவணனை மும்மூர்த்தியர் போன்ற ஆற்றலுடையவன் என்பதைக் கூறியிருத்தல் காணலாம். முற்றுதல் - நிறைதல். பெற்றி - தன்மை. இதனால் இராவணனுடைய ஒழுக்கமும் கேள்வியும் நேர்மையும் அழகும் பெருமையும் புலப்படுத்தியவாறு. (48)

3465. அனைத்துல கினுமழ கமைந்த நங்கைய
ரெனைப்பல ரவன்றன தருளி னிச்சையோர்
நினைத்தவ ருருகவு முதவ நேர்கிலன்
மனக்கினி யாளொரு மாதர் நாடுவான்.

"அனைத்து உலகினும் அழகு அமைந்த நங்கையர்
எனைப் பலர், அவன் தனது அருளின் இச்சையோர்;
நினைத்து அவர் உருகவும், உதவ நேர்கிலன்;
மனக்கு இனியாள் ஒரு மாதர் நாடுவான்."

பொ :—“எல்லாவுலகங்களினும் உள்ள அழகுபொருந்திய பெண்டிர் எத்துணையோ பலர் (அங்குவந்து) அவனுடைய அருளைப் பெறுவதில் ஆசையுடையரா யுள்ளனர்; அவர்கள் யாவரும் அவனை நினைந்து எப்பொழுதும் உருகிக் கொண்டிருப் பதை அறிந்திருந்தும் அவர்கட்குத் தன்னருளை யுதவ உடன் படாத அத்தகையோன், தன்மனத்திற்கு இனிய ஒரு மங்கையைத் தேடிக்கொண்டிருக்கின்ருன்.”

கு :—அளவிடற்கரியர் என்பான், ‘எனைப்பலர்’ என்ருன். அருளின் இச்சையோர் என முன் வந்தமையின் உதவ என்பதற் குச் செயப்படு பொருள் ‘அருள்’ என்பது பெறப்படும். நங் கையர் இல்லாத குறை யவனுக்கில்லை என்பான், ‘எனைப்பலர்... உருகவும் உதவநேர்கிலன்’ என்ருன். பலரால் விரும்பப்படு கின்ற சிறப்புகள் எல்லாம் அமைந்த அவன், தன் மனதுக்கு இனிய ஒரு நங்கையைத் தேடுகின்ருன் என்றது, அவன் தூய காதலின் அருமையும் காதலிக்கப்பட்டவளின் பெருமையும் புலப் படுத்திற்று. சூர்ப்பணகையும், ஏகு என்று தன்னை வெறுத்துக் கூறிய இராமனிடம், “பூவிற் புனலினிற் பொருப்பில் வாழும் அற் புடையுள்ளத்தாரும் அநங்கனும் அமரர் மற்றும் எற்பெறத் தவஞ் செய்கின்ருர் என்னை நீ யிகழ்வதென்னே” (சூர்ப்பணகைப் - 68) என்று தன்னழகை மும்மூர்த்திகளும் மன்மதனும் விரும்பித் தவஞ் செய்கின்றதாகக் கூறியுள்ளமை இங்கு ஒப்புநோக்குதற் குரியது. மாதர், ஒருமையில் வந்தது; ‘மாதர் முகம்போல் ஒளிவிடவல்லை யேல்’ (குறள் - 1118) என்புழிப்போல. (49)

3466. ஆண்டையா னரசுவீற் றிருந்த வந்நகர்
வேண்டியான் சில்பக லுறைதன் மேயினே
னீண்டனெ னிருந்தவற் பிரியும் நெஞ்சிலேன்
மீண்டனெ னென்றனன் வினைய முன்னுவான்.

“ஆண்டையான் அரசு வீற்றிருந்த் அந்நகர்,
வேண்டி, யான் சில் பகல் உறைதல் மேயினேன்;
நீண்டனென் இருந்து, அவற் பிரியும் நெஞ்சு இலேன்,
மீண்டனென்” என்றனன், வினையம் உன்னுவான்.

பொ :—“அத்தன்மையனுகிய அவன் அரசுபுரிந்துகொண்டு சிறப்புடன் இருக்கின்ற அந்த இலங்கை நகரை விரும்பி யான் சில நாள் அங்குத் தங்குதலை மேற்கொண்டேன்; (பின் அந்நகரின் இனிமையிலீடுபட்டு) நீண்டகாலம் அங்கு இருந்துவிட்டு அவனைப்

பிரிய மனம் இல்லாதேனய் இங்கு மீண்டு வந்தேன்" என்று கூறினன், சீதையைக் கவரும் சூழ்ச்சியை நினைந்துகொண்டிருக்கின்ற இராவணத் துறவி.

கு:—ஆண்டையான் என்ற இடமுணர்த்தும் சொல் அங்ஙனம் போல இங்குத் தன்மையுணர்த்தியது. 'ஆண்டை, யான் அரசு வீற்றிருந்த' என்று தன் உண்மைநிலையும் தோன்றுமாறு இச்சொற்ருெடர் அமைந்துள்ளமை காண்க. சிலபகல் உறைதல் மேயினவன், நீண்டு இருத்தற்கு அந்நகரின் இனிமையில் ஈடுபாடே காரணமாகும் என்பது புலப்படுத்தியவாறு. மீண்டனென் என்றமையால், தண்டகவனத்து முனிவரில் ஒருவனே என்பது புலப்படுத்தியவாறு. வினையம் - சூழ்ச்சி. (50)

## சீதையின் வினு 3467-3468

3467. வேதமும் வேதிய ரருளும் வெஃகலாச்
சேதனை மன்னுயிர் தின்னும் தீவினைப்
பாதக வரக்கர்தம் பதியின் வைகுதற்
கேதுவென் னுடலமு மிகையென் றெண்ணுவீர்.

"வேதமும், வேதியர் அருளும் வெஃகலாச்
சேதனை மன் உயிர் தின்னும் தீவினைப்
பாதக அரக்கர்தம் பதியின் வைகுதற்கு
ஏது என்? உடலமும் மிகை என்று எண்ணுவீர்!"

பொ:—"வேதங்களையும் அவற்றை ஓதும் வேதியரின் அருள் ஒழுக்கத்தையும் விரும்பாது, அறிவுள்ள நிலைபெற்ற உயிர்களையும் கொன்று தின்னுகின்ற தீவினையைச் செய்கின்ற, பாதகர்களாகிய அரக்கரின் நகரில் உடம்பையும் மிகை என்று எண்ணுகின்ற துறவியாகிய தாங்கள் தங்குதற்குக் காரணம் என்ன?"

கு:—அருள் என்றது, அருள் ஒழுக்கத்தை; தவத்தை. வேதங்களை விரும்பாமையேயன்றி வேதத்தில் ஓதியுள்ளபடி ஒழுகும் தவ ஒழுக்கத்தையும் விரும்பாமல் வெறுப்பவர் அரக்கர். 'வெஃகலா' என்றது ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்சம். பெயரெச்சமாகக் கொண்டு வெஃகலா அரக்கர் என்று இயைப்பினும் ஆம். சேதனை - அறிவு. அறிவுகுறைந்த உயிர்களையேயன்றி அறிவு நிறைந்த மக்களையும் தின்னும் இயல்பினர் அரக்கர் என்றவாறு. இழிவு சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. மன்னுயிர் தின்னுதலாகிய தீவினை என்க. "அருளல்லதியாதெனிற் கொல்லாமை

கோறல், பொருளல்ல தவ்வூன் றினல்" (குறள் - 254) என்புழி ஊனைத்தின்கை பாவம் என விளக்கந் தந்திருத்தல் காணலாம். பாதகம் - பெரும்பாவம்; "பாதகமே சோறுபற்றியவா தோணோக்கம்" (திருவாசகம். - திருத்தோணோக்கம் - 7) என்புழியும் அச்சொல் அப் பொருளில் ஆளப்பட்டிருத்தல் காணலாம். நல்வினையை விரும் பாமையோடு தீவினைகளையும் நயந்து செய்கின்ற கொடுமை பற்றிப் பாதக அரக்கர் என இழித்துக் கூறியவாறு. உயிரின் வேறல்லாததாய் ஒற்றுமைப்பட்ட உடம்புதானும் பிறப்பறுக்கும் நோக்கமுடையவர்க்கு மிகையாகும்; இதனை வள்ளுவரும், "மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்க லுற்றார்க் குடம்பு மிகை" (குறள் - 345) என்று கூறுதல் காணலாம். 'இவ்வுடம்புகளால் துன்பம் இடையறாது வருதலை யுணர்ந்து இவற்றானாய கட்டினை இறைப்பொழுதும் பொறாது வீட்டின்கண்ணே விரைதலின், உடம்பு மிகை என்றார்' என்ற பரிமேலழகர் விளக்கமும் காண்க. உடம்பு மிகையென்று எண்ணுகின்ற துறவிக்கும், உடம்பை மெய் யென்றெண்ணுவதோடன்றி அவ்வுடம்பைப் பெருக்கற்குப் பிற உயிரை நீக்கி உடம்பைத்தின்று மகிழ்கின்ற அரக்கர்க்கும், ஒளியும் இருளும் போன்ற வேறுபாடுண்மையின், 'அரக்கர்தம் பதியின் வைகுதற்கு ஏது என்?' என்று வினவினாள். (51)

3468. வனத்திடை மாதவர் மருங்கு வைகலிர்
புனற்றிரு நாட்டிடைப் புனித ரூர்புக
நினைத்திலி ரறநெறி நினைக்கி லாதவ
ரினத்திடை வைகினி ரென்செய் தீரென்றாள்.

"வனத்திடை மாதவர் மருங்கு வைகலிர்;
புனல் திருநாட்டிடைப் புனிதர் ஊர்புக
நினைத்திலிர்; அறநெறி நினைக்கிலாதவர்
இனத்திடை வைகினிர்; என் செய்தீர்!'' என்றாள்.

பொ :—"கானகத்தில் பெரிய தவமுனிவரின் பக்கலிலும் தங்கி னீரில்லை; (அதுதான் இல்லை யெனினும்,) நீர்வளமுடைய அழகிய நாட்டிடையிலுள்ள புனிதர்களின் ஊரில் புகவும் நினைத்தீரில்லை; தருமவழி ஒன்று உண்டென்று நினைத்தலும் செய்யாத அரக்கர் கூட்டத்திடையில் தங்கியிருந்திருக்கிறீர்; என்ன பாவம் செய்துவிட் டீர்கள்!'' என்றாள்.

கு :—வீடுபெற விழைகின்ற ஞானியர், ஞானியர்கட்கு இடையில் இருப்பதே அந்நிலைவைத் தடுமாற்றமின்றி உறுதிபெறச் செய்

தற்கு வழியாதலின் அதைச் செய்கிலீரே என்பாள், 'மாதவர் மருங்கு வைகலிர்' என்ருள். 'அடியேனுன்னடியார் நடுவுள் இருக்கும் அருளைப்புரியாய்' (திருவாசகம் - கோயில் - 1) என மணி வாசகர் இறைவனை வேண்டுதலும் நினைக்க. "மறப்பித்துத் தம்மை மலங்களின் வீழ்க்கும் சிறப்பிலார் தம் திறத்துச் சேர்வை - யறப் பித்துப், பத்தரினத்தாய்ப் பரனுணர்வி ஞலுணரும் மெய்த்தவரை மேவா வினை'' (சிவஞானபோதம் - வெண் - 75) என்பதால், சிறப் பிலார் தம்திறத்துச் சேர்வை அறச்செய்தலே ஞானிகளின் கடமை என்பது உணரலாம். தவத்தினர் வனத்தில் உறைதல் வேண்டும்; அதைவிடுத்து நாட்டிடை நண்ண எண்ணினும் தூய ஒழுக்கமுடையோரின் ஊர்க்கேனும் செல்லுதல் வேண்டும்; அதைச் செயற்படுத்தாததுமட்டும் அன்றி நினைத்தலும் செய்திலிர் என்பாள், 'புனிதரூர் புக நினைத்திலிர்' என்ருள். அறநெறியை நினையாத வரை நினைத்தலும் தவத்தினர்க்கு இழுக்காகவும் அவர் கூட்டத்திற் கிடையில் தங்கினீர் ஆகலின், பாவம் செய்தவரே யாவீர் என்பாள், 'என்செய்தீர் ?' என்ருள். (52)

இராவணத் துறவி நிருதரே நல்லவர் எனல்

3469. மங்கையஃ துரைத்தல் கேட்ட
★ வரம்பிலான் மறுவிற் றீர்ந்தார்
வெங்கண்வா ளரக்க ரென்ன
வெருவல மெய்ம்மை நோக்கிற்
றிங்கள்வாண் முகத்தி ஞயத்
தேவரிற் றீய ரல்ல
ரெங்கள்போ லியர்க்கு நல்லார்
நிருதரே போலு மென்ருன்.

மங்கை அஃது உரைத்தல் கேட்ட
வரம்பு இலான், "மறுவில் தீர்ந்தார்,
வெங்கண் வாள் அரக்கர் என்ன
வெருவலம்; மெய்ம்மை நோக்கின்,
திங்கள் வாள் முகத்தினுய்! அத்
தேவரில் தீயர் அல்லர்;
எங்கள் போலியர்க்கு நல்லார்
நிருதரே போலும்'' என்ருன்.

பொ :—சீதை அவ்வாறு சொல்லக் கேட்ட வரம்புகடந்தவ ஞகிய இராவணத்துறவி, "தறுகண்மையுடைய வாளேந்திய

அரக்கர்கள், குற்றம் தீர்ந்தவர்களே என்ற எண்ணத்தால் யாம் அஞ்சுவதில்லே ; உண்மையாகப் பார்த்தால் ; சந்திரனைப் போன்ற ஒளியுள்ள முகத்தையுடையாய் ! அந்தத் தேவர்களைக் காட்டிலும் இவர்கள் தீயவர்கள் அல்லர் ; எம்மைப் போன்றவர்கட்கு நல்ல வர்கள் அரக்கரே " என்ருன்.

கு :—இளம் பருவத்தினர் கூறவியலாத முடிவைக்கூறினுள் என்பது புலப்பட, 'மங்கை அஃது உரைத்தலோடும்' என்ருர். பிறர் மனைவியை விரும்புதல் கூடாது என்ற வரம்பும், துறவு வேடத்தி லிருந்து கொண்டு அவ்வேடத்திற் கேலாதன செய்தல் தகாது என்ற வரம்பும் அற்றுச் சீதையைக் கவரவந்துள்ளான் ஆதலின், இராவணனை வரம்பிலான் என்ருர். வெருவுதற்குக் காரணமாகிய தறுகணும் வாளும் உடையரேனும், அரக்கர் மறுவில் தீர்ந்தவர் ஆதலின், 'வெருவலம்' என்றவாறு. தன்போன்ருரையும் உளப் படுத்தித் தன்மைப் பன்மையால் கூறினன். என்று சொல்ல வெருவலம் எனினுமாம். திங்களைப்போல ஒளிதிகழும் முகத்தினுய்! என்ற விளியில், அத்திங்கள் இராகு என்னும் பாம்பால் பற்றப் படுதல் போல நீயும் என்னுல் கவரப்படப் போகிருய் என்ற குறிப்பும் இருத்தல் காணலாம். அத் தேவர் என்றது, பண்டறி சுட்டு. தேவரில் என்புழி இல் உறழ்ச்சிப் பொருளில் வந்தது; ஒப்புப் பொருளது எனலும் ஆம். தேவர்கள் தீய ராதல் போல் அரக்கர் தீயவர் அல்லர் என்பதே கருத்து. சீதையின் கருத்துக்கும் மதிப்புத்தரவேண்டி, 'எங்கள் போலியர்க்கு நல்லார் நிருதரே!' என்ருன். உங்களுக்குக் கெட்டவர்களாக இருக்கலாம் என்பது குறிப்பு. ஏகாரம் பிரிநிலை. போலும், ஒப்பில்போலி. (53)

சீதை தீயரைச் சேரின் நல்லவரும் தீயராவர் எனல்

3470. சேயிழை யன்ன சொல்லத்
தீயவர்ச் சேர்தல் செய்தாற்
றூயவ ரல்லர் சொல்லிற்
றென்னெறி தொடர்ந்தோ ரென்ருண்
மாயவல் லரக்கர் வல்லர்
வேண்டுரு வரிக்க வென்ப
தாயவ ளறித றேற்ரு
ளாகலி னயலொன் றெண்ணுள்.

சேயிழை, அன்ன சொல்லத்
" தீயவர்ச் சேர்தல் செய்தால்

தூயவர் அல்லர், சொல்லின்,
தொல் நெறி தொடர்ந்தோர்" என்றுள்;
மாய வல் அரக்கர் வல்லர்,
வேண்டு உரு வரிக்க என்பது,
ஆயவள் அறிதல் தேற்றுள்,
ஆகலின் அயல் ஒன்று எண்ணுள்.

பொ:—இராவணன் அச்சொல்லேச் சொல்ல, செம்மையான அணிகலன்களே யணிந்த சீதை, மாயத்தில் வல்ல அரக்கர்கள் வேண்டிய உருவைத்தாங்க வல்லவர் என்பதை அறியாள் ஆதலின், வேறு ஒன்றும் எண்ணுதவளாய், "தீயவரைச் சேர்ந்தால் புகழினேயுடைய, பழமையான நல்ல நெறியில் தொடர்ந்து செல்லுவோரும், தூயவராகமாட்டார்கள் (தீயவர்களே)" என்று கூறினுள்.

கு:—சேயிழை, பண்புத்தொகை நிலேக்களத்துப் பிறந்த அன்மொழித்தொகை. அவன் கொண்ட வேடத்தை உண்மையாக நினேத்தே அவ்வாறு கூறினுள் என்பது கருத்து. சேர்தல் செய்தால் தொன்னெறி தொடர்ந்தோரும் தூயவர் அல்லர் என இயையும். தீயவரைச் சேர்ந்தமையால் தொன்னெறி தொடர்ந்த தூயவரும் தீயவரின் நெறியையே பின்பற்றித் தீயரே ஆவர் என்றபடி. வரிக்கவல்லர் என்று இயையும். அயல் - வேறு. அவன் வேடத்தில் ஐயங்கொள்ளவில்லே; சேர்ந்த இடத்தால் அவன் ஒழுக்கத்தில் மட்டுமே ஐயங்கொண்டாள் என்பது கருத்து. "இனத்தானும், இன்னுனெனப்படுஞ் சொல்" (குறள். 453) என்பது இங்கு நினேவுகூர்தற் குரியது. (54)

## இராவணன் வல்லோன் வழியது உலகம் எனல்

3471. அயிர்த்தன ளாகு மென்ருே
ரையுற வகத்துக் கொண்டான்
பெயர்த்தது துடைக்க வெண்ணிப்
பிறிதுறப் பேச லுற்ருன்
மயக்கறு முலக மூன்றின்
வாழ்பவர்க் கனேய வல்லோ
ரியற்கையி னிற்ப தல்லா
லியற்றலா நெறியென் னென்ருன்.

அயிர்த்தனள் ஆகும் என்று, ஓர்
ஐயுறவு அகத்துக் கொண்டான்;

பெயர்த்து, அது துடைக்க எண்ணிப்
பிறிதுறப் பேசலுற்ருன்;
"மயக்கு அறும் உலகம் மூன்றின்
வாழ்பவர்க்கு, அனைய வல்லோர்
இயற்கையின் நிற்பது அல்லால்,
இயற்றலாம் நெறி என்?" என்ருன்.

பொ:—(இராவணன் சீதையின் சொல்லால்), அவள் தன்னைப் பற்றி ஐயமுற்ருளாவள்! என்ற ஒரு சந்தேகத்தை மனத்தில் கொண்டு, மீட்டும் அவள் சந்தேகத்தைப் போக்க எண்ணி, வேறு வகையாகப் பேசத் தொடங்கினன்; "மயக்க உணர்ச்சியில்லாத (தெளிவுடைய) மூன்று உலகங்களிலும் வாழ்கின்ற எல்லோர்க்கும் வலியவர்களாகிய அவ்வரக்கர்களின் இயற்கையோடு தழுவி நடத்தலன்றி அதனின் வேருக மேற்கொண்டு செய்யத்தக்கவழி யாதுளது?" என்று கூறினன்.

கு:—அயிர்த்தல் - சந்தேகப்படுதல், "எங்கள் போலியர்க்கு நல்லார் நிருதரே" என முன் கூறியவன், இங்கு அவள் ஐயமுற்ருள் என்ற காரணத்தால் அப்போக்கை மாற்றிக்கொண்டு, மூவுலகுளோர்க்கும் வலியராய்த் தலைமை பூண்டுள்ள அரக்கரைத் தழுவி நடப்பதல்லாமல் அவர் ஆட்சியில் உள்ள அம்மூவுலகத்தோர்க்கும் தப்பும் வழி வேறில்லை என அதற்கு அமைதி கூறுபவனுனன். திரிதல், நடத்தலை யுணர்த்திற்று. தன்னியல்புணர்ந்து சீதையும் தன்பின் திரியவேண்டியவளே என்ற குறிப்பும் இங்குத் தோன்றும்; வல்லான் வகுத்ததே வாய்க்கால் என்ற பழமொழியும் காண்க. பேசலுற்ருன், முற்றெச்சம். மயக்கறுதல் வாழ்பவர்க்கு அடை. அறிவின் தெளிவுபெற்றவர்களும் வலியோரைப் பின்பற்றியே நடக்கவேண்டியுளது என்றவாறு. (55)

சீதை இராமனல் அரக்கர் அழிவர் எனல்

3472. திறந்தெரி வஞ்ச னச்சொற்
செப்பலுஞ் செப்ப மிக்கா
ளறந்தரு வள்ள லீண்டிங்
கருந்தவ முயலு நாளு
ளறந்தலை திரிந்த வாழ்க்கை
யரக்கர்தம் வருக்கத் தோடு
மிறந்தனர் முடிவர் பின்ன
ரிடரிலை யுலக மென்ருள்.

திறம் தெரி வஞ்சன், அச்சொல்
செப்பலும், செப்பம் மிக்காள்,
"அறம் தரு வள்ளல், ஈண்டு இங்கு
அருந்தவம் முயலும் நாளுள்,
அறம் தலைதிரிந்த வாழ்க்கை
அரக்கர் தம் வருக்கத் தோடும்
இறந்தனர் முடிவர்; பின்னர்
இடர் இலை உலகம்" என்ருள்.

பொ:—சீதையின் மனத்திறத்தைத் தெரிந்துகொண்ட வஞ்சகளுகிய இராவணத்துறவி அந்தச் சொல்லைச் சொல்லுதலும், செம்மைக்குணம் மிக்கவளாகிய அச்சீதை, "தருமத்தை வளர்க்கும் வள்ளல் (இராமபிரான்) இவ்வனத்தில் அரியதவத்தைச் செய்கின்ற நாட்களுக்குள், தருமத்தில் நின்றும் மாறுபட்ட வாழ்க்கையையுடைய அரக்கர்கள், தங்கள் குலத்தோடும் இறந்து ஒழிவார்கள்; பின்னர் இவ்வுலகத்திற்குத் துன்பம் இல்லை" என்று கூறினுள்.

கு:—உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுகின்ற அவன் நிலைமை புலப்பட அவனை 'வஞ்சன்' என்ருர். பிறருள்ளத்து நினைக்கின்ற நினைவின் கூறுபாடுகளை இங்குத் 'திறம்' என்ருர். செப்பம் - செம்மை; கருத்தும் சொல்லும் செயலும் தம்முள் மாருகாமை (குறள். 951 உரை.) வஞ்சனையின்றி, நினைந்ததைக் கூறுகின்ற சீதையைச் 'செப்பமிக்காள்' என்ற சொல்லால் குறித்தது சாலச் சிறப்புடையதாகும். அறந்தருதல் என்றது தருமத்தை இடையூறுநீக்கி வளர்த்தலை. "ஆரறத்திஞெடை ன்றி நின்ருரவர், வேரறுப்பென்" (அகத்தியப். 22) எனத் தண்டகவனத்து முனிவர்களுக்குக் கூறியதை நினைந்து இராமனை அறந்தருவள்ளல் என்ருள். ஈண்டு இங்கு, என்பன மீமிசைச் சொல். உற்ற நோய் நோன்று செய்யத்தக்க அருமையுடைத் தாகலின் தவம் 'அருந்தவம்' எனப்பட்டது. இராமன் முற்றத்துறந்துவிடாமல் மனைவியொடு நின்று தவம் முயலுகின்றமை புலப்பட 'அருந்தவம் முயலுநாளுள் என்ருள். "இயல்பிஞ னில்வாழ்க்கை வாழ்பவ னென்பான் முயல்வாருளெல்லாந்தலை" (குறள். 47) என்புழிப் பரிமேலழகர், "முற்றத்துறந்தவர் விட்டமையின் 'முயல்வார்' என்றது மூன்ரும் நிலையினின்ருரை" என்று விளக்கம் கூறியிருத்தல் காண்க. முயலுநாளுள் என்று சீதைகருதியது பதினுன்காண்டில் எஞ்சியிருக்கும் நாட்களை. அறந்தலை திரிந்த வாழ்க்கை யென்றது தருமம் செய்யாது பாவமே செய்து வாழும் வாழ்க்கையை. அறந்தருவள்ளலால் அறந்தலைதிரிந்த வாழ்க்கையரக்கர் இறந்தனர் முடிவர் என்ற நியதி பொருத்தமாதல் காண்க. வருக்கம் - குலம். இறந்தனர் முடிவர்: முற்றெச்சம். இறந்தொழிவர்

என்பது கருத்து. உலகுக்கு இடரில்லை என்க. ‘வல்லோர் இயற்கையின் நிற்பதல்லால் இயற்றலாநெறியென்?’ என்ற அவன் வினை இயலாமையினால் எழுந்ததாக எண்ணிச் சீதை இதைக் கூறினாள். (56)

## இராவணன் மனிதர் அரக்கரை வெல்லார் எனல்

3473. மானவ ளுரைத்த லோடு
மானிட ரரக்கர் தம்மை
மீனென மிளிருங் கண்ணாய்
வேரற வெல்வ ரென்னின்
யானையி னினத்தை யெல்லா
மிளமுயல் கொல்லும் பின்னுங்
கூனுகிர் மடங்க லேற்றைக்
குருளைமான் கொல்லு மென்றான்.

மானவள் உரைத்தலோடும்,
“மானிடர் அரக்கர் தம்மை,
மீன் என மிளிரும் கண்ணாய்!
வேர் அற வெல்வர் என்னின்,
யானையின் இனத்தை எல்லாம்
இள முயல் கொல்லும்; பின்னும்,
கூன் உகிர் மடங்கல் ஏற்றைக்
குருளை மான் கொல்லும்” என்றான்.

பொ:—பெருமையுடைய சீதை அவ்வாறு சொல்லுதலும் (இராவணத்துறவி) “மீன்போலப் பிறழும் கண்ணையுடையவளே! மானிடர் அரக்கர்களை அடியோடு அற்றுப்போகுமாறு வெல்வார்கள் என்றால், யானையின் கூட்டத்தையெல்லாம் ஓர் இளையமுயல் கொன்றுவிடும்; மேலும், வளைந்தநகங்களையுடைய சிங்க ஏற்றினை ஒருமான்குட்டி கொன்றுவிடும்” என்றான்.

கு:—மானவள் - பெருமையுடைவள்; மானவன் என்ற சொல்லிற்குப் பெண்பாற்சொல். “மானவமற்றுங் கேளாய்” (பால-1380.) என இராமனை ‘மானவ’ என விளித்திருத்தல் நோக்குக. ‘மானவளாதலாலே’ (மாரீசன்வதைப் - 207) என முன்னும் சீதையை இச்சொல்லால் குறித்திருத்தல் காணலாம். மிளிர்தல் - பிறழ்தல்; புரளுதல். சீதையின் கண்ணழகில் ஈடுபாடு மிக்கவனாய் இவ்வாறு விளித்தான். மானிடர் அரக்கர்தம்மை வெல்வ ரென்னின் யானை

யின் இனத்தையெல்லாம் இளமுயல் கொல்லும் என்றது கூடாமை யுணர்த்திற்று. "குன்றகல் நன்னுடன் வாய்மையிற் பொய்தோன் றின், திங்களுள் தீத்தோன்றி யற்று" (கலி. 41) என்ற கூடா வுவமை இங்கு ஒப்பு நோக்கத்தகும். உருவிற்பெரிய யானையை உரு விற்சிறிய முயல் கொல்லுதல் இயலாமைபோல, உருவிலும் வலி யிலும் சிறியராய மானிடர், அவற்றில் பெரியராய அரக்கரைக்கொல் லுதல் இயலாது என்பது புலப்படுத்தியவாறு. அரக்கர் சேனையை மானிடர் கொல்ல இயலாமைக்கு யானையின் இனத்தை இளமுயல் கொல்ல இயலாமையும், இராவணனைக் கொல்ல இயலாமைக்குக் கூனுகிர் மடங்கலேற்றைக் குருளைமான் கொல்ல இயலாமையும் உவமையாம். கூன் - வளைவு. குருளை - குட்டி. (57)

அழிந்த அரக்கர்களைக் கூறி இராமன் ஆற்றலைப் புகழ்தல்
3474-3475

**3474.** மின்றிரண் டனைய பங்கி
விராதனும் வெகுளி பொங்கக்
கன்றிய மனத்து வென்றிக்
கரன்முதற் கணக்கி லோரும்
பொன்றிய பூச லொன்றுங்
கேட்டிலிர் போலு மென்ரு
ளன்றவர்க் கடுத்த துன்னி
மழைக்கணீ ரருவி சோர்வாள்.

"மின் திரண்டனைய பங்கி
விராதனும், வெகுளி பொங்கக்
கன்றிய மனத்து வென்றிக்
கரன் முதல் கணக்கிலோரும்
பொன்றிய பூசல் ஒன்றும்
கேட்டிலிர் போலும்" என்ருள்,
அன்று அவர்க்கு அடுத்தது உன்னி,
மழைக்கண் நீர் அருவி சோர்வாள்.

பொ :—'மின்னல் திரண்டாற்போன்ற செம்பட்டை மயிராகிய குடுமியையுடைய விராதனும், கோபம் பொங்குதலால் கன்றிய மனத்தையும் வெற்றியையுமுடைய கரன்முதலாகிய அளவில்லாத அரக்கர்களும் இறந்த போரினைப் பற்றிச் சிறிதும் நீர் கேட்கவில்லை போலும்' என்று கூறினுள்; அக்காலத்து அவ்வரக்கர்களுக்கு

நேர்ந்த துன்பநிலையை நினைந்து மழை அருவிபோலக் கண்ணீராகிய அருவியைச் சொரிபவளான சீதை.

கு :—பங்கி-செம்பட்டைமயிர்க்குடுமி. விராதனுக்கு அடை; அஃது அரக்கன் என்பதை அறிவிக்கும் அடையாளம். கன்றுதல் - வெகுளியால் வெதும்புதல். பலரையும் வென்ற வென்றியராயினும் கரன் முதலோர், இராமன் ஆற்றலுக்கு ஆற்ருது பொன்றினர் என இராமன் வலிமையைப் புலப்படுத்தியவாறு. கணக்கு - அளவு. பொன்றிய - அழிந்த. பூசல் - போர். ஒன்றும் - சிறிதும். அன்று என்றது கரனிடம் போர்நடந்த அற்றை நாளை யுணர்த்தியது. அவர்க்கு - கரன் முதலாய அரக்கர்க்கு. சீதை, தன் பகைவர்பட்ட துன்பத்தை நினைந்து கண்ணீர்விடுதல் பொருந்துமோ எனின் ? பொருந்தும்; இராமன் கணையால் அவர்கள் பட்ட அல்லலின் மிகுதியைப் புலப்படுத்தவேண்டி அங்ஙனம் கூறினர். அவர்களோடு மாறுபாடு கொண்டுள்ள சீதையும் அவர்க்கடுத்த தன்மையை நினைந்து கண்ணீர் சொரிந்தாள் எனின் அவ்வரக்கர்பட்ட அல்லல் எத்தகைய தாகும்? என உய்த்துணரலாம்; போர்க்களத்தில் உயிர்களையுண்பதில் பெருவிருப்புடைய கூற்றுவனும் தலை அரிபடுதல் கண்டு கண்ணேடிய நிகழ்ச்சியை, “மாற்றருஞ்சிறப்பின் மணிமுடிக் கருந்தலைக் கூற்றுக் கண்ணேடவரிந்து களங் கொண்டோர்” (சிலப், 27-40) என்ற அடிகளில் இளங்கோவடிகளும் கூறியுள்ளமை காணலாம். உயிருண்ணும் கூற்றுவனே கண்ணேடினன் எனின், பெண்பாலாகிய சீதை அரக்கர்பட்ட அல்லலை நினைந்து கண்ணீர்விடுதல் கூறவேண்டுமோ என்க. அருவி சோர்வாள், கேட்டிலிர் போலும் என்ருள்என்றியையும். சோர்வாள், வினைப்பெயர். இனி அவர்க்கு என்ற சுட்டு இராம இலக்குவரைச் சுட்டியதாகக் கொண்டு பெரும்படையரக்கரைத் தாக்கிக் கடும்போர்செய்ய நேர்ந்ததை நினைந்து கண்ணீர்விட்டாள் என்றலுமாம். (58)

3475. வாளரி வள்ளல் சொன்ன
மான்கண நிருத ரன்னேர்
கேளொடு மடியு மாறும்
வானவர் கிளரு மாறும்
நாளையே காண்டி ரன்றே
நவையிலி ருணர்கி லீரோ
மீளருந் தருமந் தன்னை
வெல்லுமோ பாவ மென்ருள்.

"வாள் அரி வள்ளல், சொன்ன
மான் கணம் நிருதர்; அன்னோர்,
கேளொடு மடியு மாறும்,
வானவர் கிளரு மாறும்,
நாளையே காண்டிர் அன்றே;
நவை இலிர், உணர்கிலீரோ?
மீளரும் தருமம் தன்னை
வெல்லுமோ பாவம்?" என்றாள்.

பொ :—"கொடிய சிங்கம், இராமனாகிய வள்ளல்; முன்சொன்ன மான்கூட்டம், அரக்கர்களே; அவர்கள் உறவினரோடு மடியும் தன்மையையும் அவர்கட்குப் பகைவரான தேவர்கள் மகிழும் தன்மையையும் நாளைக்கே பார்க்கப் போகின்றீர் அன்றோ! நீங்குதற்கரிய தருமத்தைப் பாவம் வெல்லுமோ? குற்றமற்றவராகிய நீவிர் அறியீரோ?" என்றாள்.

கு :—வாளரி வள்ளல், மான்கணம் நிருதர் என்பன உவமைத் தொகை. மேல், 'கூனுகிர் மடங்கலேற்றைக் குருளை மான் கொல்லும்' எனக் கூடாச் செயலாக இராவணத்துறவி சொன்னதையே வேறுவகையாக மாற்றிச் சீதை இனி நிகழ இருக்கின்ற உண்மை நிகழ்ச்சி யிது வென விளக்கியவாறு. கிளர்தல் - மகிழ்தல். 'நாளையே' என்றது அண்மைக் காலத்தை யுணர்த்தியது. உணர்கிலீரோ? வெல்லுமோ? என்ற வினாக்கள் உணர்வீர் என்றும் வெல்லாது என்றும் பொருள் தந்து நின்றன. மீளல் - நீக்குதல். 'தொண்டர் வருத்தம் மீட்பாராய்' (பெரியபுரா-திருநா-304) என்புழியும் இப்பொருளில் இச்சொல் வந்துளது காண்க. "அனையதே முடிந்ததைய! அறம் வெல்லும் பாவந் தோற்கும்" (சுந்தர - ஊர்தேடு - 95) எனப் பின்னரும் சீதை இக்கருத்தையே அனுமானுக்கும் இயம்பல் காணலாம். தருமத்தைப் பாவம் வெல்லாது என்ற உண்மையைக் குற்றமே புரிவோராயின் உணரார்; நீர் குற்றம் அற்றவராதலின் அவ்வுண்மையை உணர்ந்தேயிருப்பீர் என்றவாறு. நவை - குற்றம். (59)

## இராவணன் சீற்றமும் மாயவேடங் கலைதலும் 3476–3480

**3476.** தேனிடை யமுத ளாய
வன்னமென் சிலசொன் மாலை
தானுடைச் செவிக ளூடு
தவழுறத் தளிர்த்து வீங்கும்

ஊனுடை யுடம்பி ஞனு
முருகெழு மான மூன்ற
மானிடர் வலிய ரென்ற
மாற்றத்தாற் சீற்றம் வைத்தான்

தேனிடை அமுது அளாய
அன்ன மென் சில சொல் மாலே,
தானுடைச் செவிக ளூடு
தவழுறத் தளிர்த்து வீங்கும்
ஊனுடை உடம்பினனும்,
உருகெழு மானம் ஊன்ற,
'மானிடர், வலியர்' என்ற
மாற்றத்தால் சீற்றம் வைத்தான்.

பொ :—தேனில் அமிழ்தத்தைக் கலந்தாற் போன்ற மெல்லிய சிலவாகிய அச் சொல்லின் வரிசை, தன்னுடைய இருபது செவிகளினுள்ளும் தவழா நிற்றலால் தளிர்த்துப் பூரிக்கின்ற ஊனே யுடைய உடம்பினனுகிய இராவணனும், 'மானிடர் வலியர்' என்ற ஒரு சொல்லால் அச்சம் உண்டாக்கும் மான உணர்ச்சி மனத்தில் பதிந்ததால் கோபங்கொண்டான்.

கு :—அமுது - பால். சொல்லின் இனிமை மிகுதிக்குத் தேனெடு கலந்தபால் உவமையாயிற்று. "தேனும் பாலும் போல்வன சொல்லி" (யா. க. வி. எடுத்துக்காட்டு.) என்றதும் காண்க. அமுது, தேவாமிர்தம் எனலும் ஆம். 'அஞ்சொற்கள் அமுதில் அள்ளிக் கொண்டவள்' (மாரீசன் வதைப் - 70) எனச் சூர்ப்பணகை புகழ்தலும் நினைக்க. மென்மை என்றது மெல்லோசையை. மென்மையும் இனிமையுமுடைய சில சொற்களை முறைப்படுத்திப் பேசினுளாதலின். 'சில சொன்மாலே' என்ருர்; மாலே - வரிசை. "நிரந்தினிது சொல்லுதல் வல்லார்ப் பெறின்" (குறள் - 648) என்புழியும் நிரல்படச் சொல்லுதல் வற்புறுத்தப்படுதல் காணலாம். தானுடைச் செவிகள் என்றது இராவணனுடைய இருபது செவிகளையும். முன், "ஏயுமே யிருபதிங் கிமைப்பில் நாட்டங்கள் ஆயிர மில்லே" (3445) என இவனே தனக்கு இருபது கண்களுடைமை குறிப்பிடுதல் காணலாம். மாயவடிவத்திலும் பழைய உறுப்புகள் மறைந்தே இருந்தன என்க. 'தானுடை' என முதல் குறுக வேண்டிய இடத்துக் குறுகாது வந்தது; எதுகை நோக்கி. கேட்டற்கினிதாதல் பற்றிச் செவிகளூடுதவழ்தல் கூறினர். அவள் இனிய சொற்களைக் கேட்டு மகிழ்ச்சியால் இராவணன் உடம்பு தளிர்த்துப் பூரித்தது என்க. உடம்பு பூரிக்கின்ற நிலே நிகழும்

பொழுதே ஒரு மாற்றத்தால் அவன் உள்ளத்தில் சீற்றமுண்டா யிற்று என்றது, கேள்விக் கினியதாய் அவன் உடம்பை வீங்கச் செய்த அவள் சொல்லே அவன் கருத்திற்கு இன்னுததாய்ச் சினத்தை ஓங்கச் செய்தது என்பதைப் புலப்படுத்தியவாறு. மானம் உயிரையும் பொருட்படுத்தாது ஆதலின் 'உருகெழுமானம்' என்றுர். உரு - உட்கு; அச்சம். ஊன்றல், இடங்கொள்ளுதல். காம உணர்ச்சியால் உடம்பு பூரிக்கும் நிலேயிலேயே மான உணர்ச்சி யால் உள்ளத்தில் கோப மூண்டது என உவகைச் சுவையை அடக்கி வெகுளிச் சுவை மேற்பட்டமை விளக்கியவாறு. (60)

**3477.** சீறின னுரைசெய் வானச்
சிறுவலிப் புல்லி யோர்கட்
கீறொரு மனிதன் செய்தா
னென்றெடுத் தியம்பி ஞயேற்
றேறுதி நாளே யேயவ்
விருபது திண்டோள் வாடை
வீறிய பொழுது பூளே
வீயென வீவ னன்றே.

சீறினன், உரை செய்வான், அச்
"சிறு வலிப் புல்லியோர்கட்கு
ஈறு, ஒரு மனிதன் செய்தான்,
என்று எடுத்து இயம்பினுயேல்,
தேறுதி நாளேயே; அவ்
இருபது திண்தோள் வாடை
வீறிய பொழுது, பூளே
வீ என வீவன் அன்றே?"

பொ :—அவ்வாறு கோபங்கொண்ட இராவணன் சொல்வான், "அந்தச் சிறிய வலிமையுடைய அற்பராகிய விராதன் முதலியவர் கட்கு இறுதிவருமாறு ஒரு மனிதன் (இராமன்) செய்தான் என்று நீ அதைச் சிறப்பாக எடுத்துச் சொல்வாயானுல், அம்மனிதன் வலியின்மையை நாளேக்கே தெளியப் போகின்ருய்; அவ் விராவணனின் இருபது திண்ணிய தோள்களின் காற்றுச் சிறிது வீசிய அளவில், (காற்றுக்குமுன் பூளேப்பூப்போல) அம்மனிதன் அழிவான் அன்ருே?"

கு :—சீறினன் வினைப்பெயர். விராதன் கரன் முதலிய அரக்கர் இராமனால் கொல்லப்பட்டதற்குக் காரணம் சிறுவலியே என்றவாறு. ஈறு செய்தலாவது, கொல்லுதல். வலிமை இல்லாதவரைக் கொன்றது வீரமாகாது என்பது கருத்து. ‘நாளையே காண்டி ரன்றே’ எனச் சீதை சொன்னமையால் அவனும் ‘தேறுதி நாளையே’ என்று கால அணிமையைக் குறித்தான். இராவணன் இராமனோடு இருபது தோள்களைக் கொண்டு வருந்திப் போர் செய்தல் வேண்டா; அத்தோள்களின் வாடை வீசினமாத்திரை யிலேயே அவ்விராமன் அழிவான் என்றவாறு. வாடை, காற்று என்னும் பொதுப் பொருளில் வந்தது. வீறுதல் - வீசுதல்; அடித் தல். “தெய்வவாள் வீறப் பொன்றினன்”. (கிட்கிந்தா - சம்பாதிப் 24) என்புழியும் இப்பொருளில் இச்சொல் ஆளப்படுதல் காணலாம். பூளை என்பது ஒருவகைச் செடி; பூளைப்பூ வெண்மையாய்ப் பஞ்சுபோன்று மென்மையாக இருக்கும். காற்று அடித்தால் செடியி லிருந்து உதிர்ந்துபடும் இயல்பினது ஆதலின் அப்பூவினை, இராவண னுடைய இருபது தோள்களின் வாடைவீசிய அளவில் இராமன் வீவான் என்பதற்கு உவமையாக்கினான். இவ்வாறு கூறிய இராவ ணன் முதல்நாட்போரில் படைமுதலியன தொலைந்து தனித்து நின்றபோது இராமனும், “ஆளையாவுனக்கமைந்தன மாருதமறைந்த பூளையாயின கண்டனை” (யுத்த - முதற்போர். 256) என இவ்வுவ மையையே யெடுத்தாளுதல் காணலாம். “காற்றிடைப் பூளை கரந் தென அரந்தையுறக் கடலரக்கர்தம் சேனை” (பெரியதிருமொழி. 4-10-6) என்பதும் இங்கு நினைக்கத்தகும். (61)

**3478.** மேருவைப் பறிக்க வேண்டின்
விண்ணினை யிடிக்க வேண்டி
னீரினைக் கலக்க வேண்டி
னெருப்பினை யவிக்க வேண்டிற்
பாரினை யெடுக்க வேண்டிற்
பலவினைச் சிலசொல் லேழாய்
யாரெனக் கருதிச் சொன்னா
யிராவணற் கரிதென் னென்றான்.

“மேருவைப் பறிக்க வேண்டின்,
விண்ணினை இடிக்க வேண்டின்,
நீரினைக் கலக்க வேண்டின்,
நெருப்பினை அவிக்க வேண்டின்,

பாரினை எடுக்க வேண்டின்
பல வினைச் சில சொல் ஏழாய்!
யார் எனக் கருதிச் சொன்னாய்!
இராவணற்கு அரிது என்?" என்றான்.

பொ :—"சில சொற்களையே பேசுகின்ற பெண்ணே! (இராவணனை) யார் என்று எண்ணி இவ்வளவு எளிமையாகக் கூறிவிட்டாய்! மேருமலையைப் பெயர்த்தெடுக்க விரும்பினாலும், விண்ணுலகத்தை இடித்துத்தள்ள விரும்பினாலும், கடல் நீரைச் சேருகுமாறு கலக்க விரும்பினாலும், அக்கடலிலுள்ள வடவைக்கனலை அவிக்க விரும்பினாலும் இப்பல தொழில்களுள் இராவணனுக்கு அரிய செயல் யாதுளது?" என்றான்.

கு :—இராவணன் பெருமையறியாதவள் என்ற பொருளும் தோன்றுமாறு, ஏழாய்! என்று விளித்தான். ஏழை - பெண். சொல்லும் சொல் சிலவே யாதலின் 'சில சொல் ஏழாய்!' என்றான். சீதையின் இனிமைமிக்க சொற்கள் பலவற்றைக் கேட்க இயலவில்லையே என்ற இராவணன் வருத்தத்தைப் புலப்படுத்துவதாகச் சில சொல்லேழாய் என விளி அமைந்திருத்தல் காணலாம். ஐம்பூதங்களையும் நிலைகுலையச் செய்யும் ஆற்றல் மிக்க இராவணனுக்கு அப் பூதங்களின் கலப்பாலாகிய உடம்பைத் தாங்கிய இராமன் என்னும் மனிதனை வெல்லுதல் அரிதாமோ என்றவாறு. காற்றினை மாற்ற வேண்டின் மாற்றும் ஆற்றலன் என்பது இனம் பற்றிக் கொள்ளப்படும். கரிகால்வளவன் ஆற்றல் மிகுதியைப் புலப்படுத்த "மலையகழ்க்குவனே கடறூர்க்குவனே வான் வீழ்க்குவனே, வளி மாற்றுவனெனத் தான் முன்னிய துறைபோகலின்" (பட்டினப் 271-273) என மலையகழ்தல் முதலியன கூறப்படுதல் காணலாம். இவ்வடிகளைப் பின்பற்றிக் கூறும் கம்பர் 'மலை' என்றதை மேருமலையாக ஆக்கியுள்ளார்; கயிலைமலையையெடுத்த அவன் ஆற்றலுக்கேற்ப என்க. கடியலூர் உருத்திரங்கண்ணனார் கூறாது இனம்பற்றிக் கொள்ளவைத்த 'நெருப்பினையவித்தலை' கம்பர் எடுத்துக் கூறி வளிமாற்றுவன் என்றதை இனம்பற்றிக்கொள்ள வைத்தார். 'பாரினையெடுக்க வேண்டின்' எனப் புதுவதாகக் கம்பர் கூறியது, பின் சீதையைப் பூமியொடு பெயர்த்தெடுக்கப் போகின்றமையை முன்னரே குறிப்பாலுணர்த்தவேண்டி. விண் என்றது ஆகுபெயராய் விண்ணுலகத்தை யுணர்த்தியது. 'கலக்கினுந்தண்கடல் சேறாகாதே' என்பது பொய்யாகுமாறு, கடல்நீரினைக் கலக்க நினைத்தாலும் சேருகக் கலக்கிவிடுவான் என்பது கருத்து. நீர் என்றது கடல் நீரை.

இராவணன் பிறரால் செயற்கரியனவற்றையும் எளிதிற் செய்வான் ஆதலின் அவனுக்குச் செயற்கு அரிய செயல் என்பது ஒன்றில்லை என்றவாறு. (62)

3479. அரண்டரு திரடோள் சால
வுளவெனி னூற்ற லுண்டோ
கரண்டநீ ரிலங்கை வேந்தைச்
சிறைவைத்த கழற்கால் வீரன்
றிரண்டதோள் வனத்தை யெல்லாஞ்
சிறியதோர் பருவந் தன்னி
லிரண்டுதோ ளொருவ னன்றோ
மழுவினு லெறிந்தா னென்றாள்.

“அரண் தரு திரள் தோள் சால
உள எனின், ஆற்றல் உண்டோ?
கரண்ட நீர் இலங்கை வேந்தைச்
சிறை வைத்த கழல் கால் வீரன்
திரண்ட தோள் வனத்தை எல்லாம்,
சிறியது ஓர் பருவம் தன்னில்,
இரண்டு தோள் ஒருவன் அன்றோ
மழுவினால் எறிந்தான்?” என்றாள்.

பொ :—“பாதுகாவலைச் செய்கின்ற திரண்ட தோள்கள் மிகுதியாக இருப்பதனால் மட்டும் ஆற்றல் உண்டாய் விடுமோ? நீர்க்காக்கைகளையுடைய கடல் நீரால் சூழப்பட்ட இலங்கைக்கு வேந்தனாகிய இராவணனைச் சிறைவைத்தவனாகிய கழலணிந்த காலையுடைய கார்த்தவீரியார்ச்சுனனின் திரட்சியுடைய தோள்களாகிய காட்டையெல்லாம் சிறுவனாயுள்ள பருவத்திலேயே இரண்டுதோள்களையேயுடைய பரசுராமன் என்கிற ஒருவன் அல்லவோ மழுவாயுதத்தால் வெட்டினான்?” என்றாள்.

கு :—உடம்பின்கண் ஏதும் ஊறுவாராமல் முன்சென்று காக்கும் தன்மை தோள்களுக்குண்மையின் ‘அரண்டரு திரள்தோள்’ என்றாள். “மெய்சென்று தாக்கும் வியன்கோலடி தன்மேற், கைசென்று தாங்குங் கடிது” (நன்னெறி. 31) என்பதும் காண்க. அரண் - பாதுகாப்பு. இரண்டு தோள்களையுடைய சிறுவன், கார்த்தவீரியனுடைய ஆயிரந்தோள்களை வெட்டினான் என்ற வரலாறு காட்டித் ‘திரள் தோள்சால உளவெனின் ஆற்றலுண்டோ? இல்லை, என்பதை நிறு

வியவாறு. அவ்வாறு நிறுவுமுகத்தானே இராவணனுக்கும் ஓர் இழிவு காட்ட இலங்கைவேந்தைச் சிறைவைத்த கழற்கால் வீரன் என்றாள். வீரன் என்றது கார்த்த வீரியனை. தோள்களின் மிகுதி புலப்பட, 'தோள்வனம்' என்றார். இக்கருத்தையே பின் 'மானுயர் இவரென மனக்கொண்டாயெனின், கானுயர் வரை நிகர் கார்த்த வீரியன், தானொரு மனிதனால் தளர்ந்துளானெனில், தேனுயர் தெரியலான் தன்மை தேர்தியால்" (சுந்தர. 456.) எனச் சீதை கூறுவதும் காண்க. சிறியதோர் பருவம் என்றது இளம்பருவத்தை. சிறியதோர் பருவந் தன்னில் இரண்டு தோளொருவன் ஆயிரங்கைகளையுடைய கார்த்த வீரியனை வென்றான் என்பது உறுப்புக்குறை விசேடம் என்னும் அணியின்பாற்படும். இதனால் இராவணனை இராமன் வெல்லுதல் எளிது என்பது புலப்படுத்தியவாறு.

இராவணன் திக்கு விசயம் செய்து வரும்போது கார்த்தவீரியார்ச்சுனனோடு போர்செய்யச் சென்று அவன் நருமதையாற்றில் நீராடுவதை யறிந்து, அங்குத் தானும் நீராடிக் கரையில் மணலால் சிவலிங்கத்தை யமைத்துப் பூசனைசெய்யும் போது அவ்வாற்றின் மேற்கே நீராடும் கார்த்த வீரியன் அவ்வாற்று நீர் போதாதென்று தன் ஐந்நூறுகைகளால் அந்நீரைத்தடுத்து நீரைமிகுவித்து அந் நீரில் விளையாடாநிற்க, அவன் தடுத்ததால் எதிர்வெள்ளமாகப் பொங்கிவருகிற தண்ணீர் இராவணன் பூசிக்கும் சிவலிங்கத்தை நிலைகுலையச் செய்ய, அதனால் கோபம் கொண்டு, தன் சேனையோடு சென்று அக்கார்த்தவீரியனோடு போர்செய்ய, அவன் ஆயிரங் கைகளால் இராவணனைப்பற்றிச் சிறைவைத்தான் என்பதும் பின் புலத்தியன் சென்று அவனுக்கு இராவணஜித் என்ற பட்டத்தைக் கொடுத்து, வேண்டி இராவணனை மீட்டான் என்பதும், ஜமதக்கினி முனிவர் ஆசிரமத்திலிருந்த ஓமதேனுவைக் கவர்ந்த கார்த்த வீரியனைப் பரசுராமன் கொன்றான் என்பதும் புராணவரலாறு. (63)

3480. என்றவ னுரைத்த லோடு
மெரிந்தன நயனந் திக்கிற்
சென்றன திரடோள் வானந்
தீண்டின மகுடந் திண்கை
யொன்றொடொன் றடித்த மேகத்
துருமென வெயிற்றி னொளி
மென்றன வெகுளி பொங்க
விட்டது மாய வேடம்.

என்று அவள் உரைத்தலோடும்,
எரிந்தன நயனம்; திக்கில்
சென்றன திரள் தோள்; வானம்
தீண்டின மகுடம்; திண்கை
ஒன்றொடு ஒன்று அடித்த; மேகத்து
உரும் என எயிற்றின் ஒளி
மென்றன; வெகுளி பொங்க,
விட்டது மாய வேடம்.

பொ:—என்று சீதை சொன்னவுடன் இராவணனுடைய கண்களில் கோபத்தால் தீப்பொறிபறந்து எரிந்தன; திரண்ட தோள்கள் இருபதும் திசைகளை அளாவி வளர்ந்து சென்றன; மகுடங்கள் பத்தும் வானத்தைத் தீண்டின; திண்ணிய கைகள் ஒன்றோடு ஒன்று அறைந்தன; மேகத்தில் உண்டாகும் இடியொலிபோலப் பல்வரிசைகள் கடித்தன; இவ்வாறு கோபம் பொங்குதலால் அவன் மாயவேடம் அவனைவிட்டு நீங்கிற்று.

கு:—வெகுளிமெய்ப்பாட்டினை விளக்கியவாறு. நயனம் எரிந்தன என்றது கோபத்தால் தீப்பொறிபறத்தலை. போர்க்குறிப்பால் தோள்கள் வீங்கின என்பார், 'திக்கிற் சென்றன' என்றார். கோபத்தால் கைகள் வீசியநிலையை உணர்த்திற்று என்றலும் ஆம். ஒளி - வரிசை. பற்கள் கடிப்பதாலுளதாய ஒலிக்கு மேகத்து இடி ஒலி உவமை. மேகம்போன்ற கரிய உருவத்தில் மின்னலைப்போன்ற பல்லொளியோடு அவை மெல்லும் ஒலி மேகத்தின் எழும் இடியோசை போன்றது என்றது பொருத்தமான உவமையாதல் காணலாம். மாயவேடம் தாங்கினர் உணர்ச்சி வயப்படாமல் இருப்பின் வேடம் நீடித்திருக்கும்; கோப உணர்ச்சி மேலிட்டதால் இராவணன் மாய வேடம் நீங்கியது; உண்மை வடிவோடு நின்றான். (64)

சீதையின் ஐயமும் இராவணன் வடிவமும்

3481. இருவினை துறந்த மேலோ
ரல்லன்கொ லிவனென் றெண்ணி
யரிவையு மைய மெய்தா
வாரிவன் றானென் றென்றுந்

தெரிவரு நிலைய ளாகத்
தீவிடத் தரவந் தானே
யுருகெழு சீற்றம் பொங்கிப்
பணம்விரித் துயர்ந்த தொத்தான்.

“இருவினை துறந்த மேலோர்
அல்லன் கொல் இவன் ?” என்று எண்ணி,
அரிவையும் ஐயம் எய்தா,
“ஆர் இவன்தான் ?” என்று ஒன்றும்,
தெரிவு அரு நிலையளாகத்
தீ விடத்து அரவம் தானே
உரு கெழு சீற்றம் பொங்கிப்
பணம் விரித்து உயர்ந்தது ஒத்தான்.

பொ :—“இவன் நல்வினை தீவினை என்கின்ற இருவினையும் நீங்கிய தவமுனிவர் அல்லன் போலும்?” என்று எண்ணிச் சீதையும் ஐயமுற்று, ‘இவன்தான் யாராக இருக்கலாம்’ என்று ஒன்றும் தெளிவுபெறாதநிலையினளாக, கொடிய நஞ்சுடைய நாகம் அச்சம் பொருந்துதற்குக் காரணமான கோபம் பொங்கிப் படத்தை விரித்துக் கொண்டு மேலெழுந்ததை ஒத்து (ப் பத்துத் தலைகளையும் இருபது கைகளையும் உடையனாய்) எழுந்து நின்றான்.

கு :—இவன், அல்லன் என இயையும். மேலோரல்லன் என்றது, “ஐயந்திணைபா லவ்வப் பொதுவினும் மெய்தெரி பொருண்மேலன்மையும் விளம்புப” (நன்னூல். 376) என்ற விதியான் அமைந்தது. இருவினை துறத்தலாவது, இறைவன் பொருள்சேர் புகழ்புரிதலால் இருவினையும் தாமே நீங்கப்பெறுதல். கொல் ஐயத்தின்கண்வந்தது. எய்தா செய்யாவென்னும் வாய்பாட்டு வினையெச்சம். வஞ்சக எண்ணத்தாலும் முன்னில்லாத தலைகளும் கைகளும் தோன்ற நின்றதாலும் இராவணனுக்கு நஞ்சுடையதாய், முன் சுருங்கியிருந்த தலை படமாக விரியப்பெற்ற பாம்பு ஏற்ற உவமையாதல் காணலாம். பணம் விரித்து உயர்ந்த தொத்தான் என்று உவமை கூறியதால் இராவணன் தலைபத்தும் தோன்ற நின்றமை பெறப்படும். பணம் - படம். தெரிவு - தெளிவு. பாம்புக்குச் சீற்றம் தோன்றும்போது படம் விரிதல் போல இராவணனுக்கும் சீற்றம் பொங்கும்போது உண்மைவடிவம் தோன்றிற்று என்க. கரவுடைய நெஞ்சத்தார்க்கு நஞ்சுடைய பாம்பு உவமை கூறப்படுதலை, “நஞ்சுடைமைதானறிந்து நாகங் கரந்துறையும், அஞ்சாப் புறங்கிடக்கும் நீர்ப்பாம்பு - நெஞ்சில் கரவுடையார் தம்மைக் கரப்பர்” (வாக்குண்டாம். 25) என்பதால் அறியலாம். (65)

## சீதையின் அச்சம்

3482. ஆற்றவெந் துயரத் தன்னா
ளாண்டுற்ற வலக்க ணோக்கி
னேற்றமென் னினைக்க லாகு
மெதிரெடுத் தியம்ப லாகு
மாற்றமொன் றில்லை செய்யும்
வினையில்லை வரிக்க லாகாக்
கூற்றம்வந் துற்ற காலத்
துயிரெனக் குலைவு கொண்டாள்.

ஆற்ற வெம் துயரத்து அன்னாள்
ஆண்டு உற்ற அலக்கண் நோக்கின்
ஏற்றம் என் நினைக்கல் ஆகும்?
எதிர் எடுத்து இயம்பலாகும்
மாற்றம் ஒன்று இல்லை; செய்யும்
வினை இல்லை; வரிக்கல் ஆகாக்
கூற்றம் வந்து உற்ற காலத்து
உயிர் எனக் குலைவு கொண்டாள்.

பொ:—மிகக் கொடிய துயரத்தை அடைந்திருந்த சீதை (இராவணன் உண்மையுருவெடுத்த) அப்போது அடைந்த துன்பத்தை நோக்கினால், அத்துன்பத்திற்கு மேலான துன்பமாக எதனை நினைக்க இயலும்? (எதனையும் நினைக்க இயலாது; அதுவே துன்பத்திற்கெல்லாம் வரம்பு). இராவணன் எதிரில் சீதை எடுத்துச்சொல்லக் கூடிய சொல் ஒன்றும் இல்லை; அவளால் செய்யத்தக்க செயல் ஒன்று இல்லை; (யாரும் இங்ஙனம் செய்யென்று) நியமிக்க இயலாத கூற்றுவன்வந்து அடைந்தபோது உயிர் நடுங்குவதுபோல நடுக்கம் அடைந்தாள்.

கு:—ஆற்ற என்பது மிகுதி என்னும் பொருளில் வந்தது; "அமிழ்தினும் ஆற்ற இனிதே" (குறள் - 64) என்புழிப் போல. தன் கொழுநனுக்குத் தீங்குற்றதோ என்ற எண்ணத்தால் சீதை முன்னரே பெருந்துயர் எய்தியிருந்தாளாதலின், 'ஆற்ற வெந்துயரத் தன்னாள்' என்றார். அது ஆற்றலாகாப் பெருந்துயராக இருக்க, மேலும், கொடிய இராவணன் முன்னிற்பது கண்டபோதுண்டாய துயரும் சேர்ந்ததால் அத்துயரத்தினளவு நினைத்தற்கும் இயலாத பேரளவினது ஆயது என்பார், ஏற்றமென்னினைக்கலாகும் என்றார். என் - எதனை. அவள் துயரமே உலகத்து ஏற்றமுடைய துயரமாய்

வரம்பாக அமைதலின் அங்ஙனம் வினவினர். இராவணனைக்கண்ட அச்சத்தால் சீதை சொல்லையும் செயலையும் இழந்தாள் என்பார், 'மாற்றமொன்றில்லை; செய்யும் வினையில்லை' என்றார். வரித்தல் - நியமித்தல். 'கடவுள் வேதியர்களை வரித்து' (திருவிளை - இந்திரன் முடி. 26) என்புழியும் இச்சொல் இப்பொருளில் வந்துள்ளமை காணலாம். எல்லோரையும் தான் நியமிப்பதன்றித் தன்னை நியமிப்போரை இல்லாதவன் எமன் ஆதலின், 'வரிக்கலாகாக் கூற்றம்' என்றார். உயிர்போங்காலத்து மக்கள் எமனைக்கண்டு நடுங்குதல் இயல்பு ஆகலின் அதனைச் சீதையின் அச்சத்தாலாய நடுக்கத் திற்கு உவமையாக்கினர். குலைவு - நடுக்கம். இராவணனுக்கு எமன் உவமை. (66

### இராவணன் சீதையை அச்சுறுத்தல்

3483. விண்ணவ ரேவல் செய்ய
வென்றவென் வீரம் பாராய்
மண்ணிடைப் புழுவின் வாழு
மானிடர் வலிய ரென்றாய்
பெண்ணெனப் பிழைத்தா யல்லை
யுன்னையான் பிசைந்து தின்ன
வெண்ணுவெ னெண்ணிற் பின்னை
யென்னுயி ரிழப்பெ னென்றான்.

"விண்ணவர் ஏவல் செய்ய,
வென்ற என் வீரம் பாராய்;
மண்ணிடைப் புழுவின் வாழும்
மானிடர் வலியர் என்றாய்;
பெண் எனப் பிழைத்தாய் அல்லை;
உன்னை யான் பிசைந்து தின்ன
எண்ணுவென்; எண்ணில், பின்னை
என் உயிர் இழப்பென்" என்றான்.

பொ:—"தேவர்களும் எனக்கு ஏவற்பணி செய்யுமாறு வென்ற என் வீரத்தைப் பார்ப்பாயாக; மண்ணில் புழுவைப் போல் வாழும் மானிடர் வலிமையுடையவர்கள் என்று முன் சொன்னாய்; அப்படிச் சொன்ன நீ பெண்பால் என்ற கருத்தால் உயிர்பிழைத்தாயல்லை; உன்னையான் என்கையால் பிசைந்துதின்ன எண்ணியிருப்பேன்; அவ்வாறு எண்ணிச் செய்திருப்பேனாயின் பிறகு நின்மேல் வைத்த

காதலால் என் உயிரையே இழந்துவிடுவேன் (ஆதலால்) அதுசெய்தி லேன்" என்ருன்.

கு:—அவன் தோற்றமே அவ்வீரத்தைப் புலப்படுத்தலின், 'வென்ற என் வீரம் பாராய்' என்ருன். இனிப் 'பாராயாய் மானிடர் வலியர் என்ருய்' என இயைப்பினுமாம். மானிடரின் சிறுமை புலப் படுத்த 'மண்ணிடைப் புழுவின் வாழும் மானிடர்' என்ருன். புழுவைக் கொல்லுதல் எளிதாதல் போலவே மனிதரைக் கொல்லுதலும் எளிது என்றபடி. மானிடர் வலியர் என்ற சொல் இராவணனை இழிவுபடுத் தியதாகலின் அக்குற்றத்திற்காக நின்னைக் கொல்லுதலே தக்கது என்பது கருத்து. பிழைத்தல் - உய்தல். தின்னுங்கால் படும் தொழிலை யுணர்த்தப் 'பிசைந்து தின்ன' என்ருன். எண்ணுவென் எண்ணில் என்பன செய்தலையுணர்த்தின; செய்தலை உணர்த்தாக்கால் 'என் னுயிரிழப்பென்' என்றல் பொருந்தாமை காண்க. இராவணன் சீதையைத் தின்னுமைக்குக் காரணம் பெண்பால் என்பது அன்று; காதலிக்கப்பட்டவளாயிருத்தலேயாம்; என்பது இதனுல் அறிய லாம். என்னுயிரிழப்பென் என்றமையால் இராவணன் சீதைமேல் வைத்த காதற்பெருக்கை யுணர்த்தியவாறு. (67)

### இராவணன் சீதையை நயந்து வேண்டுதல்

3484. குலைவுற லன்ன முன்னம்
யாரையுங் கும்பி டாவென்
றலைமிசை மகுட மென்னத்
தனித்தனி யினிது தாங்கி
யலகில்பூ ணரம்பை மாத
ரடிமுறை யேவல் செய்ய
வுலகமீ ரேழு மாளுஞ்
செல்வத்து ளுறைதி யென்ருன்.

"குலைவு உறல், அன்னம்! முன்னம்
யாரையும் கும்பிடா என்
தலை மிசை மகுடம் என்னத்
தனித்தனி இனிது தாங்கி,
அலகு இல் பூண் அரம்பை மாதர்
அடி முறை ஏவல் செய்ய
உலகம் ஈரேழும் ஆளும்
செல்வத்துள் உறைதி" என்ருன்.

பொ :—“ அன்னம் போன்றவளே! நடுக்கம் கொள்ளாதே; யாரையும் இதற்குமுன் கும்பிட்டறியாத என்தலைமேல் முடிகளைத் தாங்குவது போலத் தனித்தனியே ஒவ்வொருதலையிலும் உன்னை மகிழ்ச்சியோடு எடுத்துவைத்துக் கொண்டு பாராட்ட, அளவில்லாத அணிகலன் அணிந்த அரம்பைமாதர்கள் நின் அடிக்கீழிருந்து ஏவலைச் செய்யாநிற்க, பதினான்கு உலகங்களையும் ஆளும் என் அரசாட்சியாகிய செல்வத்தில் நீ தலைமையாகத் தங்குவாயாக” என்றான்.

கு :—இராவணன் முடிகள் யாரையும் வணங்காதன என்பதை முன்னும் “ மாதர் வலிய நெடும் புலவியினும் வணங்காத மகுட நிரை வயங்கமன்றோ” (மாரீசன்வதை. 3) எனக் கூறியுள்ளமை காணலாம். கும்பிடாமை தலைக்குரியதே யாயினும் ஒற்றுமைநயம் பற்றி மகுடத்திற்கும் கூறியவாறு. தாங்கி என்ற செய்து என்னும் எச்சத்தைச் செயவெனெச்சமாகத் திரிக்கவேண்டும். தாங்க ஏவல் செய்ய, உறைதி என இயையும். அலகில் மாதர் என்க. அடிமுறை ஏவல் செய்தல் என்பது பணிவு மிகுதியை யுணர்த்தியது. தன் அரசச் செல்வத்தை அவட்கே கொடுக்கும் விருப்புடையனாகலின், ‘உலகமீரேழும் ஆளும் செல்வத்துள் உறைதி’ என்றுகூறினான். “மூவுலகமுமிவர் முறையினுள, யான் ஏவல் செய்துய்குவென், இனி” (31) என முன் அவன் எண்ணியதும் நினைக்க. (68)

## சீதையின் சினச்சொல் 3485-86

**3485.** செவிகளைத் தளிர்க்கை யாலே
சிக்குறச் சேமஞ் செய்தாள்
கவினும்வெஞ் சிலைக்கை வென்றிக்
காகுத்தன் கற்பி னேனைப்
புவியிடை யொழுக்க நோக்காய்
பொங்கெரிப் புனித ரீயு
மவியைநாய் வேட்ட தென்ன
வென்சொனா யரக்க வென்னா.

செவிகளைத் தளிர்க் கையாலே
சிக்குறச் சேமம் செய்தாள்;
“ கவினும் வெஞ்சிலைக் கை வென்றிக்
காகுத்தன் கற்பினேனை,

புவியிடை ஒழுக்கம் நோக்காய்
பொங்கு எரிப் புனிதர் ஈயும்
அவியை நாய் வேட்டது என்ன,
என் சொனாய் அரக்க ?'' என்னா.

பொ :—சீதை, தன் காதுகளைத் தன் தளிர்போன்ற கைகளாலே அழுத்தமாக மூடிக்கொண்டு, ''அரக்கனே! காட்சிக்கு அழகிதாய்ச் செயலில் கொடிதாகிய வில்லையேந்திய கையையுடைய வெற்றி பெறும் இயல்பினனான காகுத்தன் மனைவியாகிய கற்புடைய என்னை, உலக ஒழுக்கமும் நோக்காதவனாய், மிக்கு எரிகின்ற வேள்வித்தீயில் அந்தணர் கொடுக்கின்ற (தேவர்க்குரிய) அவியை இழிந்த நாய் விரும்பினாற்போல (விரும்பி) என்ன சொன்னாய்?'' என்று.

கு :—'என்றாள்' என மேல் முடியும். தீய சொற்கள் புகுதாவண்ணம் காதுகளை அழுத்தமாக மூடிக்கொண்டாள். உயர்ந்தோர்க்கு இது இயல்பு என்பதை 'உடன் வயிற்றோர்கள் ஒருங்குடன் வாழ்க்கை, கடவது முண்டோ கற்றறிந்தீரெனத் தீமொழி கேட்டுச் செவியகம் புதைத்து' (சிலம்பு - நாடுகாண். 227 - 229) எனக் கவுந்தியடிகள் செயல் கூறப்படுதலாலும் அறியலாம். சிக்குற - அழுத்தமாக; "யானுனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்" (திருவாச-பிடித்த. 9) எனவும், "சிக்கென அடைத்தேன் தோழி" (1161) என முன்னும் வந்துள்ளமை காண்க. சேமம் செய்தல் - மூடுதல். சென்ற போர்தோறும் வென்றியே புனையும் இயல்பினன் இராமன் என்பது தோன்ற 'வென்றிக் காகுத்தன்' என்றாள். ககுஸ்தன் அசுரரை அழித்ததுபோல அவன் மரபில் தோன்றிய இவனும் உம்மை அழிப்பதற்குரியவன் என்பது புலப்பட வேண்டி இராமன் என்னாது காகுத்தன் என மரபுப் பெயரால் குறிப்பிட்டாள். கணவன் பெயர்கூறலாகாது என்ற அறமும் இதற்குத் துணையாயிற்று. ஒருவன் மனைவியைப் பிறன் விரும்பலாகாது என்ற உலக ஒழுக்கம் நோக்கினும் இங்ஙனம் கூறகில்லாய் என்பாள், 'புவியிடையொழுக்கம் நோக்காய்......என் சொனாய் அரக்க' என்றாள். ஒழுக்கமும் என்புழி உம்மை விகாரத்தால் தொக்கது. அறநூலை நோக்காவிடினும் உலக ஒழுக்கத்தையேனும் நோக்கவில்லையே என்பது கருத்து. எரி என்றது வேள்வித்தீயை. புனிதர் என்றது அந்தணரை. உயர்ந்த தேவர்கட்குரிய அவியுணவை இழிந்த நாய் விரும்பியதுபோலப் பெருமைவாய்ந்த இராமனுக்குரிய என்னைச் சிறுமையுடைய நீ விரும்பினாய் என்பது கருத்து. 'என் சொன்னாய்' என்றது சொல்லத்தகாததைச் சொன்னாய் என்பதைப் புலப்படுத்தும் தெறற் சொல். அவியை நாய் வேட்டால் அது கிடைக்காததோடு அந்நாய்க்கும் அழிவுண்டாகுமாறுபோல உனக்கும் அழிவுண்டாகும் என்பது குறிப்பு. (69)

3486. புன்னுனை நீரி னெய்தாப்
போதலே புரிந்து நின்ற
வின்னுயி ரிழத்த லஞ்சி
யிற்பிறப் பழித லுண்டே
மின்னுயிர்த் துருமிற் சீறும்
வெங்கணை விரவா முன்ன
முன்னுயிர்க் குறுதி நோக்கி
னொளித்தியா லோடி யென்ருள்.

"புல் நுனை நீரின் நொய்தாப்
போதலே புரிந்து நின்ற
இன் உயிர் இழத்தல் அஞ்சி,
இற்பிறப்பு அழிதல் உண்டே?
மின் உயிர்த்து உருமின் சீறும்
வெங்கணை விரவாமுன்னம்,
உன் உயிர்க்கு உறுதி நோக்கின்,
ஒளித்தியால் ஓடி" என்ருள்.

பொ :—"புல்லின் நுனியில் உள்ள பனிநீரினும் விரைந்து நிலையாது போதலையே விரும்பி உடம்பில் நிற்கின்ற இனிய உயிரை இழப்பதற்கு அஞ்சி, நற்குடிப்பிறப்பிற்குரிய கற்புக் கெடுதல் உண்டோ? (இல்லை,) மின்னைப்போல விரைந்து ஒளி வீசிக்கொண்டு, இடியைப் போலக் கோபித்து வருகின்ற இராமனது கொடிய அம்பு வருதற்குமுன்னம் உன்னுடைய உயிர்க்கு உறுதியை விரும்பினை யாயின் ஓடி ஒளித்துக்கொள்வாயாக" என்ருள்.

கு :—புல் நுனியில் உள்ள பனிநீர்த்துளி ஞாயிற்றின் ஒளிபட்ட வுடன் மறையும் இயல்பினதாகலின், நிலையாமை யுணர்த்துவதற்கு அதனை எடுத்துக்காட்டாகக் கூறுவதுண்டு. "புன்னுனிமேல் நீர் போல் நிலையாமை யென்றெண்ணி" (நாலடி. 29) என்பதும் காண்க. நொய்து - விரைவு. 'ஆயிழை நொய்தினுரை பொருளுண்டெனின்' (சீவக. 1767) என்புழியும் நொய்து, அப்பொருளதாதல் காண்க. புரிதல் - விரும்புதல்; செய்தலுமாம். பின்னும் செல்வதாய உயிரைவிடுத்தும், என்றும் நிலைபெறுவதாகிய கற்பொழுக்கத்தைக் காப்பாற்றுவேன் என்பாள், "உயிரிழத்தலஞ்சி இற்பிறப்பழிதலுண்டே?" என்று வினவினுள். இற்பிறப்பு என்பது இற்பிறந்தார் போற்றும் கற்பினை உணர்த்தியது. முன், 'உன்னை யான் பிசைந்து தின்ன எண்ணுவென்' என்று இராவணன் அச்சுறுத்தியது கொண்டு உயிரிழத்தற்குத் தான் அஞ்சாமை புலப்படுத்தியவாறு.

யான் உயிரிழத்தற்கு அஞ்சவில்லை; நீ அதற்கு அஞ்சி உயிர்க்குறுதி நோக்கினால் 'ஓடி ஒளித்தி' என்று அவனை அச்சமுடையவனாகக் காட்டியவாறு. இராமனது கணையின் விரைவும், அழிக்குமாற்றலும் புலப்பட மின்னலையும் உருமினையும் உவமை கூறினாள். சிறிது நேரம் தாழ்ப்பின் இராமன் வருவான்; தவறு இழைக்க எண்ணிய இராவணன்மேல் கணையெய்வான் என்றது சீதையின் நம்பிக்கை. ஓடி ஒளித்தியால் என்றது, அவனது சிறுமையினைப் புலப்படுத்த வேண்டியேயன்றி அவன்மேல் வைத்த கருணையினாலன்று. (70)

## இராவணன் மறுமொழி 3487-3488

3487. என்றவ ளுரைக்க நின்ற
விரக்கமி லரக்க னெய்த
வுன்றுணைக் கணவ னம்பவ்
வுயர்திசை சுமந்த வோங்கல்
வன்றிறன் மருப்பி னாற்றன்
மடித்தவென் மார்பின் வந்தாற்
குன்றிடைத் தொடுத்து விட்ட
பூங்கணை கொல்ல தென்றான்.

என்று அவள் உரைக்க, நின்ற
இரக்கம் இல் அரக்கன், "எய்த
உன் துணைக் கணவன் அம்பு, அவ்
உயர் திசை சுமந்த ஓங்கல்
வன் திறல் மருப்பின் ஆற்றல்
மடித்த என் மார்பில் வந்தால்,
குன்றிடைத் தொடுத்து விட்ட
பூங்கணை கொல் அது" என்றான்.

பொ:—என்று சீதை சொல்லவும் ஓடாது நின்ற, இரக்கம் இல்லாத இராவணனாகிய அரக்கன், "உனக்குத் துணையாயுள்ள கணவனான இராமன் எய்த அம்பு, அந்த உயர்ந்த திசைகளைத்தாங்கிக் கொண்டுள்ள மலைபோன்ற திசையானைகளின் மிக்க வலிமையுடைய கொம்புகளின் ஆற்றலை முறித்த எனது மார்பின்கண் வருமாயின், அவ்வம்பு குன்றினிடையே தொடுத்துவிட்ட மலர்க்கணை போலும்," என்று கூறினான்.

கு:—மலரை மலைமேல் எறிந்தால் அம்மலைக்குத் தீங்கு நேராதது போல, இராமன் அம்பால் இராவணன் மார்புக்கு ஊனம் உண்டா

காது என்பது கருத்து. அரக்கத்தன்மை விளக்க 'இரக்கமில் அரக்கன்' என்ருர். தன் மார்பின் வலிமை தோன்றத் திசையானையின் மருப்புகளை முறித்தமை கூறினுன். திசை யானைகளின் கொம்பால் ஊறுபடாத மார்பு, இராமன் அம்பால் ஊறுபடாது என்பதைநிறுவியவாறு. ஓங்கல் என்பது தொழில் ஆகுபெயராய் மலையையுணர்த்திப் பின் அம்மலை, உவமை ஆகுபெயராய் யானையை யுணர்த்தியது; இருமடி ஆகுபெயர். வன்திறல், மீமிசைச்சொல். கொல் அசைநிலை. பூங்கணை போலும் என்க. ஓடி ஒளித்தி எனச் சீதை கூறவும், அவ்வாறு செய்யாது நின்ற வன்னெஞ்சுடைமை புலப்பட, நின்ற விரக்கமிலரக்கன் என்ருர். (71)

**3488.** அணங்கினுக் கணங்க ஞய்நின்
ஞசைநோ யகத்துப் பொங்க
வுணங்கிய வுடம்பி னேனுக்
குயிரினை யுதவி யும்பர்க்
கணங்குழை மகளிர்க் கெல்லாம்
பெரும்பதங் கைக்கொ ளென்ஞ
வணங்கின னுலகந் தாங்கு
மலையினும் வலிய தோளான்.

"அணங்கினுக்கு அணங்கு அஞய்! நின்
ஆசை நோய் அகத்துப் பொங்க,
உணங்கிய உடம்பினேனுக்கு
உயிரினை உதவி, உம்பர்க்
கணம் குழை மகளிர்க்கெல்லாம்
பெரும் பதம் கைக்கொள்" என்ஞ,
வணங்கினன்—உலகம் தாங்கும்
மலையினும் வலிய தோளான்.

பொ:—உலகத்தைத் தாங்குகின்ற எட்டுக் குலமலைகளைக்காட்டிலும் வலிய தோள்களையுடைய இராவணன், "திருமகளுக்கும் மேம்பட்ட திருமகள்போன்ற அழகுடையவளே! நின்மேல் வைத்த ஆசையாகிய காமநோய் மனத்தில் பெருகுவதால் வாடிய உடம்பையுடைய எனக்கு உயிர் போகாதபடி (என் ஆசையை நிறைவேற்றுவதால் தடுத்து) உதவி, விண்ணுலகத்திலுள்ள கூட்டமாய்த்திரண்ட காதணியையுடைய தேவமாதர்களுக்கெல்லாம் மேம்பட்டிருக்கும் பெரிய பதவியைப் பெறுக" என்று கூறிக்கொண்டே வணங்கினுன்.

கு :—அணங்கு - திருமகள். திருவினும் சிறந்த அழகுடையவள் சீதை ஆதலின், 'அணங்கினுக்கணங்கனாய்!' என விளித்தான். அணங்கு, தெய்வப்பெண்ணுமாம். ஆசைநோய் என்றது, காம நோயை. பொங்குதல் - மிகுதல். உணங்கிய - வாடிய. உயிரினை உதவிப் பெரும்பதம் கைக்கொள் என்றது, பரிவருத்தனை என்னும் அணியின்பாற்படும். ஆசைநோயினால் போகின்ற உயிரை, அவ் வாசையை நிறைவேற்றுதலால் போகாமல் நிறுத்தி, என்ற கருத்தால் 'உயிரினை உதவி' என்றான். உம்பர் என்றது, விண்ணுலகத்தை. குழையின் அமைப்புத் தோன்றக் 'கணங்குழை' என்றான். விண்ணுலகமாதரை யெல்லாம் ஏவல்கொள்ளும் பெரிய அரசபதவியைக் கைக்கொள் என்றது, உயிரினை உதவியதற்குத் தரும் கைம்மாறு கூறியவாறு. உயிரினை உதவிய அளவில் அப்பெரும்பதம் பிறர் கொடுக்க வேண்டாது தானே யுனக்கு உரிமையாகும் என்ற கருத்தால் 'கைக்கொள்' என்றான். தோள்வலிமை யெல்லாம் மறந்து, இராவணன் சீதையை வணங்கினான் என்றமையால், அவன் காம மிகுதி புலப்படுத்தியவாறு. பெருமிதச்சுவை மறைய உவகைச்சுவை மிக்கமை இதனாலறியலாம். (72)

## சீதையின் ஏக்கம்

3489. தறைவா யவன்வந் தடிதா ழுதலுங்
★ கறைவாள் படவா விகலங் கினள்போ
லிறைவா வினையோ யெனவேங் கினளாற்
பொறைதா னுருவா னதொர்பொற் புடையாள்.

தறைவாய் அவன் வந்து அடி தாழுதலும்,
கறை வாள் பட ஆவி கலங்கினள் போல்,
"இறைவா! இளையோய்!" என ஏங்கினளால்,
பொறைதான் உருவானது ஓர் பொற்பு உடையாள்.

பொ :—அவ்விராவணன் வந்து தரைமேல் வீழ்ந்து அடிவணங்குதலும், பொறுமையே உருவு எடுத்தாற்போன்ற அழகுடைய சீதை, இரத்தக்கறை படிந்த வாள் தன்மேல்பட ஆவி கலங்கினவளைப் போல் நிலை கலங்கி, 'என் தலைவா! இளையோய்!' என விளித்து ஏங்கி அழுதாள்.

கு :—தரை, எதுகை நோக்கித் தறை ஆயிற்று. தறைவாய் அடிதாழுதலும் என இயையும். கொலைசெய்து பழகிய வாள் என்பது புலப்பட வேண்டிக் 'கறைவாள்' என்றார்; இரத்தக்கறை

படிதல் அத்தகைய வாளுக்கே யுண்மையான். ஆவி கலங்கல் - உயிர் நிலை தடுமாறல். இறைவா! என்றது கணவனை. பொறுமையே உருவுகொண்டாற்போன்ற அமைதியுடையவள், அவ்வமைதி குலைந்து கணவனையும் இளையோனையும் விளித்து அழுமாறு இராவணன் செயலிருந்தது என்க. மேலும் அவனைச் சொல்லினாற்சுடும் ஆற்றல் கற்புமிக்க சீதைக்கிருந்தும் அது செய்யாது ஏங்கியது, அவள் பொறுமை மிகுதியினாலேயாம் என்பதும் கொள்க. வில்லின் வணக்கம் தீங்கு பயப்பதுபோல இப்பகைவன் வணக்கமும் தீங்கு பயக்கும் என்ற அச்சத்தால் சீதை ஆவிகலங்கி அங்ஙனம் ஏங்கினாள் என்க. 'சொல்வணக்கம் ஒன்னார்கட் கொள்ளற்க வில்வணக்கம் தீங்கு குறித்தமையான்' (குறள். 827) என்பது இங்கு நினைவு கூர்தற்குரியது. (73)

## இராவணன் சீதையைப் பன்னசாலையோடு எடுத்தல் 3490-3491

**3490.** ஆண்டா யிடைதீ யவனா யிழையைத்
தீண்டா னயன்மே லுரைசிந் தைசெயாத்
தூண்டா னெனலா முயர்தோள் வலியாற்
கீண்டா னிலம்யோ சனைகீ ழொடுமேல்.

ஆண்டு ஆயிடை, தீயவன் ஆயிழையைத்
தீண்டான், அயன் மேல் உரை சிந்தைசெயாத்
தூண்தான் எனல் ஆம் உயர் தோள் வலியால்,
கீண்டான் நிலம்; யோசனை கீழொடு மேல்.

பொ :—அப்பொழுது அவ்விடத்துத் தீயவனாகிய இராவணன், முற்காலத்துப் பிரமன் தனக்கு இட்ட சாபச்சொல்லை நினைந்து சீதையைக் கையால் தீண்டாதவனாய்த் தூண் என்று சொல்லத்தக்க உயர்ந்த தன் தோள்களின் வலிமையால் அவள் இருந்த நிலத்தைக் கீழும் மேலும் ஒரு யோசனைவரை அகழ்ந்து எடுத்தான்.

கு :—சிந்தைசெயாத் தீண்டானாய்க் கீண்டான் என இயையும். அயன் சாபம் கொடுத்தான் என்பதை, "மேவு சிந்தையில் மாதரை மெய்தொடில், தேவு பொன்றலை சிந்துக நீயெனப், பூவின் வந்த புராதனனே புகல், சாவமுண்டு எனது ஆருயிர் தந்ததால்" (சுந்தர. 627) எனச் சீதை அநுமானுக்குக் கூறுமாறும், சடாயு, "தீண்ட அஞ்சுமால் ஆரியன் தேவியை யரக்கன் அம்மலர்ப் பேருலகளித்த வன் பிழைப்பில் சாபத்தால்" (143) எனப் பின்னர்க் கூறுமாறும், காண்க. தோளின் பருமையும் வலிமையும் கண்டோர் தூணேயென

எண்ணத்தக்கவாறு இருந்தன என்க. கீண்டான் - அகழ்ந்தான். ஒரு யோசனை அகலமும் ஒரு யோசனை ஆழமும்பட அகழ்ந்தான் என்பார், 'யோசனை கீழொடுமேல்' என்றார். பிரமனேயன்றி வேத வதியும் நளகூபரனும் அவன் காதலியாகிய அரம்பையும் இவ்வாறே சாபம் கொடுத்துள்ளார்கள் என்பது இங்கு நினைவுகூர்தற் குரியது. (74)

3491. கொண்டா னுயர்தேர் மிசைகோல் வளையாள்
கண்டா டனதா ருயிர்கண் டிலளான்
மண்டா னுறுமின் னின்மயங் கினளால்
விண்டான் வழியா வெழுவான் விரைவான்.

கொண்டான் உயர் தேர் மிசை; கோல் வளையாள்
கண்டாள், தனது ஆருயிர் கண்டிலளால்,
மண்தான் உறும் மின்னின் மயங்கினளால்;
விண்தான் வழியா ।எழுவான் விரைவான்.

பொ :—இராவணன் பெயர்த்த நிலத்தைத் தன் உயர்ந்த தேர் மேல் வைத்துக்கொண்டான்; (அந்நிகழ்ச்சியைத்) திரண்ட வளையலை யணிந்த சீதை கண்டு தனது அரிய உயிரைக் காணுதவளாய்த் தரைமேல் விழுந்து கிடக்கும் மின்னலைப்போல விழுந்து மயக்க மடைந்தாள்; அந்நிலையில் அவன் விண்வழியாகப் போகக்கருதி விரைகின்றவன்.

கு:—'விடுதேரென' என மேல் முடியும். கோல்-திரட்சி. 'கோனிற வளையினுர்க்கு' (சீவக. 209) என்ற இடத்து நச்சினுர்க்கினியர் எழுதிய உரையும் காண்க. 'தனது ஆருயிர் கண்டிலளால்' என்றது, உயிர் நீங்கினுள்போல மூச்சற்ருள் என்றவாறு. இனி, தனது ஆருயிர் போன்ற இராமனைக் காணுது என்ற பொருளும் தோன்றுதல் காணலாம். 'ஒருங்கிய இரண்டுடற் குயிரொன்ருயினுர்' 'இருவருமாறிப்புக் கிதயமெய்தினுர்' என முன்கூறியதும்நினைக்க. மண்தானுறு மின் என்றது இல்பொருளுவமை. சீதையின் பொன்மேனிக்கு மின் உவமை. மண்டான், விண்டான் என்புழித் தான் அசைநிலை. கண்டாள், கண்டிலள், என்பன முற்றெச்சங்கள்; முரண்தொடை. எழுவான் வினையெச்சம். (75)

## சீதையின் அரற்றல் 3492-3497

**3492.** விடுதே ரெனவெங் கனல்வெந் தழியுங்
கொடிபோற் புரள்வாள் குலேவா ளயர்வா
டுடியா வெழுவா டுயரா லழுவாள்
கடிதா வறனே யிதுகா வெனுமால்.

"விடு தேர்" என, வெம் கனல் வெந்து அழியும்
கொடிபோல் புரள்வாள், குலேவாள், அயர்வாள்,
துடியா எழுவாள், துயரால் அழுவாள்,
"கடிதா அறனே! இது கா" எனுமால்.

பொ :—"விடு தேரை" என்று (இராவணன் தன் பாகனை நோக்கிக்) கூற, (கேட்ட சீதை) வெப்பமிக்க நெருப்பில் வீழ்ந்து வெந்து அழிகின்ற பசுங்கொடி போல விழுந்து புரளுவாள்; நிலேகுலேவாள்; சோர்வாள்; துடிதுடித்துப் பின் எழுந்திருப்பாள்; மீண்டும் துயரால் அழுவாள்; 'அறக்கடவுளே! விரைவாக இத்துன்பத்தில் நின்றும் என்னேக் காத்தருள்க" என்று வேண்டிக்கொள்வாள்.

கு :—'விடு தேர்' என்ற ஏவலால், தேரைச் செலுத்தப் பாகன் அங்கு இருந்தமை அறியலாம். துன்பத்தின் வெம்மை பொருது புரளும் சீதைக்குக் கனலில் வெந்து அழியும் பசுங்கொடி உவமை. மாரீசன் மாயக்குரல் கேட்டபோதும், "மொய்யழல் கொடிப்படிந்த தென, நெடுங்கோளரா இடிக்குடைந்ததெனப் புரண்டேங்கினுள்" (3) என இவ்வுவமை கூறியிருத்தல் காணலாம். துன்பத்தில் அவளுக்கு ஏற்பட்ட பலவகைநிலேகளேயுணர்த்தியவாறு. இத்துன்பக் காலத்துக் காத்தற்குரியது அறனே ஆகலின் அதனேயே விளித்து வேண்டினுள். இலக்குவனும் "அறந்தனு லழிவில தாகி ஞக்கலாம்" (18) என முன் கூறியிருத்தலும் இங்கு நினேக்க. "மீளருந்தருமந் தன்னே வெல்லுமோ பாவம்" (59) என்று முன்கூறிய சீதை, தரும நெறியில் நிற்கின்ற தன்னேப் பாவியால் நேர்ந்த துன்பத்திலிருந்து அத்தருமதேவதையே காக்கவல்லது என்ற நம்பிக்கையுடையளாய் இங்ஙனம் கூறினுள். இராவணன் தன் நகரத்திற்குக் கொண்டு போனபின் காத்துப் பயனில்லே யாதலானும் இத்துன்ப நிலேயில் நெடிது இருக்க இயலாது என்ற எண்ணத்தாலும் 'கடிதா இது கா' என்ருள். இது என்றது துன்பத்தினே. இத்துன்பத்தில் நின்றும் என்னேக் காப்பாற்றுக என்பது கருத்து. இனி கா என்பதற்குத் தடு என்று பொருள் கொண்டு 'இத்துன்பத்தைத் தடுப்பாயாக' எனக் கூறலுமாம். 'எனும்' படர்க்கைக்கண் வந்த 'செய்யும்' என்னும் முற்று; பெண்பாலே யுணர்த்தியது. (76)

3493. மலையே மரனே மயிலே குயிலே
கலையே பிணையே களிறே பிடியே
நிலையா வுயிரே னிலைதே றினிர்போ
யுலையா வலியா ருழைநீ ருரையீர்.

"மலையே! மரனே! மயிலே! குயிலே!
கலையே! பிணையே! களிறே! பிடியே!
நிலையா உயிரேன் நிலை தேறினிர் போய்,
உலையா வலியார்உழை நீர் உரையீர்!"

பொ :—"மலையே! மலைமேல் ஓங்கி வளர்ந்துள்ள மரமே! மரத்திலேறி நின்று தோகை விரித்து ஆடும் மயிலே! அம்மயிலின் ஆடலுக்கேற்பக் கூவி மகிழுங் குயிலே! மலையில் ஓடி விளையாடும் கலைமானே! அக்கலைமானைப் பிரியாது விளையாடும் பெண்மானே! நீருண்டு மகிழ்ந்து செல்லும் களிற்று யானையே! அக்களிற்றைப் பிரியாது செல்லும் பெண் யானையே! நீங்கள் யாவிரும் நிலைத்திராது செல்லும் இயல்பிலுள்ள உயிரையுடையேனாகிய என் துன்பநிலையை அறிந்து சென்று, அழியாத வலிமையுடைய இராமனிடத்தில் சொல்லுங்கள்."

கு :—விண்வழியே இராவணனது தேரிற் செல்லும் சீதைக்குக் கண்ணெதிரே முதலில் காணப்படுவது மலையே யாகலின், அதனை முதலில் விளித்துப் பின் அம்மலையோடு இயைபுடையவற்றை விளித்துக் கூறினாள். சொல்லாதனவாகிய மலை முதலியவற்றை விளித்து இராமனுக்குத் தன் துயர்நிலை கூறுமாறு சீதை கூறியது, "சொல்லா மரபினவற்றொடு கெழீஇச் செய்யாமரபிற்றொழிற்படுத்தடக்கியும்" (தொல்-பொருளியல்: 2) என்ற விதியால் அமைந்த வழுவமைதியாம். பிரியாமல் விளையாடும் கலையும் பிணையும், களிறும் பிடியும் பிரிவின் துயர்மிகுதியை யறியுமாகலின், இராமனைவிட்டுப் பிரிக்கப்பட்ட தன் துயர்மிகுதியை அறிதற்குரியன என்ற கருத்தால் அவற்றைப் பின்னர் விளித்தாள். நிலையா உயிரேன் நிலை என்றது, உயிர்போகும் நிலையிலுள்ள என் துயர்நிலை என்றவாறு. தன்னிலையைத் தேருது இராமனிடம் சென்று சொல்லுதல் இயலாது ஆகலின், 'நிலை தேறினிர் போய்' என்றாள். 'இராமன் விரைந்து வந்து தடுக்காவிடின், என் உயிர் நிலையாது' என்பாள், 'நிலையா உயிரேன்' என்றாள். 'தேறினிர்' முன்னிலையில் வந்த முற்றெச்சம். வஞ்சக வேடம் பூண்டு வந்து இராவணன், தன்னை எடுத்துச் செல்லும் நிகழ்ச்சியால் முன் இராமன் குரல்போல் விளித்ததும் இலக்குவன் கூறியவாறு, மாய அரக்கர் செயலே என்பதைத் தெளிந்தாளாதலின், 'உலையாவலியார்' என இராமனைக் குறிப்பிட்டாள். முன், "பெருமகனுலைவுறு பெற்றி கேட்டும் நீ வெருவலை நின்றனை" (13) என இராமன் உலைவுற்றதாகவே

இலக்குவனிடம் சினந்து கூறியுள்ளது நினைக்கின், இங்கு, 'உலையா வலியார்' என்ற சீதையின் கருத்து நன்கு புலப்படும். தன்னலல்லல் கண்டு கூறுவார் அவ்வனத்துப் பிறரின்மையின் இவையேனும் சொல்லாவோ என்னும் கருத்தால் இவற்றை விளித்துக் கூறினுள் என்க. (77)

3494. செஞ்சே வகனுர் நிலைநீர் தெரிவீர்
மஞ்சே பொழிலே வனதே வதைகா
ளஞ்சே லெனநல் குதிரே லடியே
னுஞ்சா லதுதா னிழிவோ வுரையீர்.

"செஞ் சேவகனுர் நிலை நீர் தெரிவீர்;
மஞ்சே! பொழிலே! வன தேவதைகாள்!
'அஞ்சேல்' என நல்குதிரேல், அடியேன்
உஞ்சால், அதுதான் இழிவோ? உரையீர்!"

பொ :—"மேகங்களே! (மேகந்தவழும்) சோலைகளே! சோலையில் வாழும் வனதேவதைகளே! நீங்கள் (உயர்ந்த இடத்தில் இருப்ப தால்) நேர்மையான வீரனுகிய என் கொழுநன் இருக்குமிடத்தைத் தெரியவல்லீராவீர்! அஞ்சுகின்ற எனக்கு 'அஞ்சேல்' என்று கூறி (அவர்க்கும் என் நிலையைக் கூறியருளுவீராயின்) அடியேன் உய்ந்து விடுவேன்; அவ்வாறு யான் உயிர் பிழைத்தால் அது இழிவாகுமோ? (உயர்வாகுமன்ருே? ஆதலால்) சொல்லுங்கள்."

கு :—மேகம் விண்ணில் உலவுவதாலும், பொழில் வானளாவி யிருப்பதாலும், வனதேவதைகள் விண்ணில் திரியும் ஆற்றல் பெற்றன ஆதலாலும் இராமன் உள்ள இடத்தைத் தெரிந்து கொள்ளும் ஆற்றல் பெற்றவை என்ற கருத்தால், 'சேவகனுர் நிலை நீர் தெரிவீர்' என்ருள். நிலை என்றது, இராமன் இருக்குமிடத்தை. தலைவன் இருக்குமிடம் தெரியாது வருந்தும் ஒரு தலைவி, "பொங்கிரு முந்நீ ரகமெல்லாம் நோக்கினே, திங்களுள் தோன்றி யிருந்த குறுமு யால்! எங்கேள் இதனகத் துள்வழிக் காட்டீமோ" (கலி-144) எனத் திங்களில் உள்ள முயலைக் கேட்பதும் இங்கு நினைவு கூர்தற்குரியது. வஞ்சப்போர் வல்லரக்கரை விலக்க, 'செஞ்சேவகனுர்' என்ருள்; வஞ்சியாது எதிர்நின்று வெல்லும் வீரன் இராமன் என்பது பொருள். வனத்திலுள்ள தெய்வங்களை 'வனதேவதைகாள்' என்று விளித் தாள். என் துன்ப நிலையை அவர்க்குத் தெரிவிப்பீராயின் உடனே அவர் வந்து என்னை மீட்பர், என்ற கருத்தால், 'நல்குதிரேல் அடி யேன் உஞ்சால்' என்ருள். உய்வேன், உஞ்சால் என ஒருசொல்

வருவிக்க. ஒரு பெண்ணின் உயிரைக் காப்பது ஒருவர் பெருமைக்குக் காரணமாகுமேயன்றி, இழிவுக்குக் காரணமாகாது என்பது யார்க்கும் ஒப்ப முடிந்த முடிபாகலின், அதுதான் இழிவோ? என்று வினவி, இழிபின்மையை வலியுறுத்தியவாறு. எனக்கு உயிரைக் கொடுத்து நீங்கள் பெருமையடைதற்குரியசெயல் என் கொழுநனுக்கு என்னிலை சொல்லுதலே யாதலின், அதனைத் தவறாது செய்யுங்கள் என்பாள், 'உரையீர்' என்றாள். உய்ந்தால் என்பது எதுகை நோக்கிப் போலியாய் 'உஞ்சால்' என்றாயிற்று. மேல் விளித்த மலை முதலியன தான் உரைத்தவாறு உரையாமையால், மஞ்சு முதலியவற்றை விளித்துக் கூறியவாறு. (78)

3495. நிருதா தியர்வே ரறநீன் முகில்போற்
சரதா ரைகள்வீ சினிர்சார் கிலிரோ
வரதா விளையோய் மறுவே துமிலாப்
பரதா விளையோய் பழிபூ ணுதிரோ.

"நிருதாதியர் வேர் அற, நீல் முகில் போல்
சர தாரைகள் வீசினிர், சார்கிலிரோ?
வரதா! இளையோய்! மறு ஏதும் இலாப்
பரதா! இளையோய்! பழி பூணுதிரோ?"

பொ:—"வரத்தைத் தரும் இயல்புடைய காகுத்தா! அவனை விட்டகலாத இளவலே! குற்றம் சிறிதுமில்லாத பரதா! அவனுக்குத் தொண்டு செய்யும் இளையவா! அரக்கர் முதலான கொடியவர்கள் எல்லாம் வேரோடு அழியும்படி நீலமேகம்போல அம்பின் தாரைகளை வீசிக்கொண்டு வரமாட்டீர்களோ? (பெண்ணைக் காக்க வியலவில்லை என்ற) பழியைப் பூண்டுகொள்ளப் போகின்றீர்களோ?"

கு:—'வரதா' என்றது, இராமனை. கணவன் இயற்பெயர் கூறலாகாது என்ற விதிநோக்கி, அப்பெயரால் விளித்தாள். இராமனுக்கு வரதன் என்ற பெயருண்மை. 'வரதனுதித்திட மற்றைய ஒளியை' (பால. 300) எனவும், 'வரதனுமிளவலுமென மருவினரே' (பால. 310) எனவும் முன் கூறியனகொண்டு அறியலாம். நீல முகில் நீர்த்தாரைகளை வீசி வருதல்போல இராமன் முதலியவர்கள் அம்பு மழையைப் பெய்துகொண்டு வரல்வேண்டும் என்னும் எண்ணமுடையளாதலின், 'சரதாரைகள் வீசினிர் சார்கிலிரோ' என்றாள். "கருமேக நெடுங்கடல் காரனையான் தருமே தனியேன் எனதாருயிர்தான் உருமேறுமிழ் வெஞ்சிலை நாணொலிதான், வருமேயுரையாய் வலியார் விதியே" (சுந்தர. 491) என்று இராமன் வில் வீரத்தோடு

தோன்றுவதையே சீதை எதிர்பார்க்கும் நிலை இங்கு ஒப்புநோக்கத் தகும். நால்வரில் இருவர் நிறத்திற்கு நீல்முகில் வண்ணவுவமை யாயும் வாய்த்துள்ளமை காண்க. முகில்போல் தாரைகள் வீசி என்பது தொழிலுவமம். பரதன், தாயுரை கொண்டு தாதையுதவிய தரணி தன்னைத் தீவினை என்ன நீத்தமை நினைந்து, 'மறுவேதுமிலாப் பரதா' என்று விளித்தவாறு. சத்துருக்கனுக்கும் அதை அடையாக்க லாம். இராமன் திருவடிநிலைகளை அரசாளச்செய்து தொண்டு பூண் டொழுகும் பரதனுக்குத் தொண்டு பூண்டொழுகும் பெருமை சத்துருக் கனுக்குண்மை காண்க. காட்டிலுள்ள இருவரையும் நாட்டிலுள்ள இருவரையும் சேர்த்து விளித்தது, அவ்விரு திறத்தாரும் தன் சொற் களைக் கேட்கவியலாத தொலைவிலுள்ளனர் என்ற ஒற்றுமையால் போலும். மனையாளை மாற்றான் கொளவும் மீட்காதவன் வீரம் என்ன வீரம்? என்ற பழியை இராமனும், அப்பழியைத் துடைத்திலர் என்ற வசையை இளவல்களும் எய்துதல் திண்ணமாதலின், 'பழி பூணு திரோ' என்றாள். "அன்பழி சிந்தையராய ஆடவர் வன்பழி சுமக்கினும் சுமக்க" (சுந்தர. 504) எனப் பின்னரும் சீதை இதை நினைத்தல் காண லாம். மேல் விளித்துக் கூறியவாறு மஞ்சு முதலியன செய்யாமையால் சீதை இராமன் முதலியோரை விளித்துக் கூறினாள். (79)

3496. கோதா வரியே குளிர்வாய் குழைவாய்
மாதா வனையாய் மன்னே தெளிவா
யோதா துணர்வா ருழையோ டினைபோய்
நீதான் வினையே னிலைசொல் லலையோ.

"கோதாவரியே! குளிர்வாய், குழைவாய்;
மாதா அனையாய் மனனே தெளிவாய்;
ஓதாது உணர்வார் உழை ஓடினை போய்,
நீதான் வினையேன் நிலை சொல்லலையோ?"

பொ :—"கோதாவரி நதியே! எனக்குக் குளிர்ச்சியைத் தருவாய்; என்னைக் கண்டு இளகும் இயல்புடையாய்; ஆதலால் எனக்குத் தாயை ஒத்துள்ளாய்; என் மனக்கருத்தை யான் சொல்லாத முன்னரே தெளிவாய் உணர்பவராகிய என் கணவரிடம் ஓடிச்சென்று நீயேனும் தீவினையையுடைய என்னிலைமையைச் சொல்லமாட் டாயோ?"

கு :—நிருதாதியர் என்று தொடங்கும் முன்னைச் செய்யுளுக்கு முன் இருக்கவேண்டியது இப்பாடலாகும். செய்யா மரபின தொழிற் படுத்தடக்கிக் கூறிய மலையும் மானும் மயிலும் குயிலும் கலையும்

பிணேயும் களிறும் பிடியும் மஞ்சும் பொழிலும் வனதேவதைகளும் தான் கூறியதைக் கேட்டு இராமனுக்குக் கூருமையால், அவற்ருேடு ஒப்ப எண்ணத்தகும் கோதாவரியை விளித்து மாதாவனேய நீதானும் விணேயேன் நிலே சொல்லலேயோ ? என்று கூற, அதுவும் சொல்லாமையால் நேரே இராமன் முதலியோரை விளித்து, 'சரதாரைகள் வீசினிர் சார்கிலிரோ' எனக் கூறுதலும், அவ்வாறு அவர் அம்பு மழை பெய்துகொண்டு வந்தால், இராவணன் தலே பத்தும் கையிருபதும் சிந்தும்படி கண்டு சிரிக்குமாறு சுணேகளேயும் அரிகளேயும் விளித்துக் கூறுதலுமே பொருத்தமாதல் நுனித்துணர்க. மகள் குளிர்ப்ப முயங்கலும், மகள் துயர்கண்டு குழைதலும் தாய்க்கு இயல்பாதலின், 'குளிர்வாய்! குழைவாய்! மாதாவணேயாய்' என்ருள். கோதாவரி யாற்றில் சீதை குளிக்கும்போதும் அந்நீரைக் குடிக்கும்போதும் அவ்வாறு அவட்குக் குளிர்ச்சி தந்தமையும், "வனத்துறை வருத்தம் நோக்கி அழுவது மொத்ததாலவ் வலங்குநீ ராறுமன்னே" (சூர்ப்பணகைப். 3) என்று கூறியதால் அது குழைவுடையதானமையும் அறியலாம். குழைவுடைமை, நெகிழ்ச்சியுடைமை எனப் பொதுப் பொருள் கூறுவதுமுண்டு. இராமனுக்கும் தனக்கும் உள்ள மன ஒற்றுமை விளக்க, ஓதாது மனனே தெளிவாய் உணர்வார் என்ருள். கூருமல் குறிப்பறிபவன் என்றவாறு. என் மனநிலேயை யான் ஓதாமலும் தெளிவாய் அறியவல்லவன், இப்போது யான்படுந் துயரை அறியவல்லனே எனினும் மாதாவணேயாய் ஆதலின் நினக்குரிய கடமையாக விணேயேன் நிலே சொல்லலேயோ என்றவாறு. மலே முதலியன ஓடாது நிற்கும் பொருள்கள்; அவை ஓடிச் சொல்லாமை குறையன்று; ஓடும் இயல்புடையநீ அவருழை ஓடிச் சென்று என்னிலே சொல்ல வேண்டாவோ என்றபடி. ஓதாதுணர்வார் என்றது, இராமன் தெய்வநிலே நிணேந்து கூறியதாகக் கூறுதல் ஈண்டைக் கியைபின்மை யறிக. (80)

3497. முந்துஞ் சுணேகாண் முழைவா ழரிகா
ளிந்தந் நிலனே டுமெடுத் தகைநா
லேந்துந் தலேபத் துமலேந் துலேயச்
சிந்தும் படிகண் டுசிரித் திடுவீர்.

"முந்தும் சுணேகாள்! முழை வாழ் அரிகாள்!
இந்தந் நிலனேடும் எடுத்த கை நால்
ஐந்தும், தலே பத்தும், அலேந்து உலேயச்
சிந்தும்படி கண்டு சிரித்திடுவீர்."

பொ :—“என்முன் தோன்றும் மலேச்சுனேகளே! மலேக்குகைகளில் வாழும் சிங்கங்களே! இந்த நிலத்தோடும் என்னைத் தூக்கிய கைகள் இருபதும், தலேகள் பத்தும், (இராமன் கணேயால்) அலேவு பெற்று ஒழிய இவ்வரக்கன் சிந்தும் தன்மையைக் கண்டு சிரிப்பீர்களாக.”

கு:—மழைநீரைத் தன்பால் தேக்கிவைத்துக்கொண்டு வேனிலில் உயிர்களின் தாகத்தைத் தணிக்கும் உயர் பேரறமுடைமையின் அறத்தில் முற்பட்டுத் தோன்றும் சுனே என்று கூறினும் ஆம். இனி, உயிர்கள் எல்லாம் தம் நீர்வேட்கைத் துன்பந்தீர முந்துதற்கிடமான சுனே எனலும் ஆம். அறத்தில் சுனேயும் வீரத்தில் சிங்கமும் நிகரற்று விளங்குகின்றமையின் அவ்விரண்டினேயும் விளித்து அறநெறியும் வீரநெறியும் மாசுபடச் செய்தவன், இராமன் கணேயால் சிதறுண்டு வீழ்வதைக் கண்டு எள்ளி நகைக்குமாறு கூறினுள். சரதாரைகள் சிந்தி இராமன் வந்து இராவணனேக் கொல்லுதல் தப்பாது நிகழும், என்ற நம்பிக்கையால் இங்ஙனம் கூறினுள். இந்தந்நிலம் என்புழி நகரம் சந்தம் நோக்கி விரிந்தது. அலேந்துலேதல் கைகளுக்கும் தலேகளுக்கும் உரிய செயல்; சிந்துதற்கு வினேமுதல் இராவணன். (81)

## இராவணன் சிரித்தல்

3498. என்றின்ன பலவும் பன்னி
☆ யிரியலுற் றரற்று வாளேப்
பொன்றுன்னு புணர்மென் கொங்கைப்
பொலங்குழாய் போரி லென்னேக்
கொன்றுன்னே மீட்பர் கொல்லம்
மானிடர் கொள்க வென்னு
வன்றிண்கை யெறிந்து நக்கான்
வாழ்க்கைநாள் வறிது வீழ்ப்பான்.

என்று இன்ன பலவும் பன்னி
இரியலுற்று அரற்றுவாளேப்
“பொன் துன்னு புணர் மென் கொங்கைப்
பொலம் குழாய்! போரில் என்னேக்
கொன்று, உன்னே மீட்பர் கொல், அம்
மானிடர்? கொள்க” என்னு,
வன் திண்கை எறிந்து நக்கான்,
வாழ்க்கை நாள் வறிது வீழ்ப்பான்.

பொ :—என்று இத்தகைய பலவற்றையும் சொல்லிக்கொண்டு நிலையிழந்து வாய்விட்டுப் புலம்புகின்ற சீதையைப்பார்த்து, "பொன் னிறம் பொருந்திய இணைந்த நகில்களையும், பொன்னாலாய குழை யையும் உடையவளே! அந்த மானிடர்கள் போரில் என்னைக் கொன்று உன்னை மீட்பார் போலும்? மீட்டுக் கொள்க" என்று சொல்லிக்கொண்டு, தன் வாழ்நாளை வறிதாக வீழ்த்துபவனாகிய இராவணன், வன்மையும் திண்மையுமுடைய தன் கைகொட்டிச் சிரித்தான்.

கு :—இரியலுற்று என்றது, இராவணனிடத்திருந்து தப்பிச் செல்ல விரும்பி என்னுங் கருத்தினது. மலைமுதலியவற்றை விளித்துக் கூறியவற்றிலும், இராமன் முதலியோரை விளித்துக்கூறியவற்றிலும், இவ்விருப்பம் வெளிப்படுதலின் 'இரியலுற்றரற்றுவாளை' என்றார். மேல் இரண்டு பாடலிலும், இராமன் சரதாரையோடு வந்து சார் வான் என்றும், இராவணன் தலை பத்தும் கைகளிருபதும் சிதைந்து வீழ்வான் என்றும் சீதை நம்பியது புலப்படுதலின், "அம்மானிடர் என்னைக்கொன் றுன்னை மீட்பர் கொல்" என்றான். என்னை என் றது, மூவுலகங்களுக்கும் தலைவனாய் வெள்ளிமலை யெடுத்த வல்லமை யுடையவனாய்ப் பத்துத் தலைகளையும் இருபது தோள்களையுமுடைய என்னை என்ற கருத்துடையதாகும். படை வலியும் உடல் வலியும் அற்று இருகையும் ஒரு தலையும் உடைய மானிடர் என்ற இகழ்ச்சி புலப்பட 'அம்மானிடர்' என்றான். எள்ளிக் கூறுகின்றானாதலின், கையெறிதலும் நகுதலும் செய்தான். கொள்க என்றது, மீட்டுக் கொள்க என்றவாறு. கொள்ள இயலாமை குறித்தபடி. வறிது - வீண். அரைக்கோடி வாழ்நாளும் முடிவடையும் நிலையிலிருப்பவன் ஆதலின் இங்ஙனம் கற்புடையாளைக் கவர்ந்து தன் வலிமையை வியந்து கைகொட்டிச் சிரிக்கின்றான் என்றவாறு. (82)

## சீதையின் சினச் சொற்கள் 3499-3500

**3499.** வாக்கினா லன்னான் சொல்ல
மாயையால் வஞ்ச மானென்
றாக்கினா யாக்கி யுன்னை
யாருயி ருண்ணுங் கூற்றைப்

போக்கினுய் புகுந்து கொண்டு
போகின்ருய் பொருது நின்னைக்
காக்குமா காண்டி யாயிற்
கடவலுன் றேரை யென்ருள்.

வாக்கினுல் அன்னுன் சொல்ல,
''மாயையால் வஞ்ச மான் ஒன்று
ஆக்கினுய்; ஆக்கி, உன்னை
ஆருயிர் உண்ணும் கூற்றைப்
போக்கினுய்; புகுந்து, கொண்டு
போகின்ருய்; பொருது நின்னைக்
காக்குமா காண்டி ஆயின்,
கடவல் உன் தேரை'' என்ருள்.

பொ:—அவ்விராவணன் வாயால் (இராமனை இழித்துச்) சொல்ல, (சீதை), ''நீ மாயையால் பொய்ம்மான் ஒன்றை உண்டாக்கினுய்; உண்டாக்கி உனது அரிய உயிரைக்குடிக்கும் கூற்றுவனுகிய இராமனை என்னை விட்டுப் பிரிந்து போகச் செய்தாய்; (பின் அற்றம் பார்த்துக் கள்வன்போல்) புகுந்து, என்னைக் கவர்ந்து கொண்டு போகின்ருய்; அவரோடு போர் செய்து நின்னைக் காத்துக்கொள்ளும் திறம் அறிவாயாயின் உன் தேரைச் செலுத்தாதே'' என்ருள்.

கு:—வாயால் கூறத்தகாததைக் கூறினுன் என்பது புலப்பட வாக்கினுல் சொல்ல என்ருர். வாக்கு - வாய்ச்சொல். உன்னை, என்பதை உனது என வேற்றுமை மயக்கமாக்குக. கூற்றுப் போன்ற இராமனை ஆகுபெயரால் கூற்று என்றே கூறினுள். கடவல், 'எதிர் மறை யேவல். நின்னைப் பொருது என்னைக் காக்குமா காண்டியாயின்' என ஒரு சொல் வருவித்து இயைத்துப் பொருள் கூறலுமாம். (83)

3500. மீட்டுமொன் றுரைசெய் வாணீ
வீரனே விரைவின் மற்றுன்
கூட்டரா மரக்கர் தம்மைக்
கொன்றுங்கை கொங்கை மூக்கும்
வாட்டினுர் வனத்தி லுள்ளார்
மானிட ரென்ற வார்த்தை
கேட்டுமிம் மாயஞ் செய்த
தச்சத்தின் கிளர்ச்சி யன்ருே.

மீட்டும் ஒன்று உரை செய்வாள்; " நீ
வீரனே! விரைவில் மற்று உன்
கூட்டராம் அரக்கர்தம்மைக்
கொன்று, உங்கை கொங்கை மூக்கும்
வாட்டினர் வனத்தில் உள்ளார்,
மானிடர் " என்ற வார்த்தை
கேட்டும், இம் மாயம் செய்தது
அச்சத்தின் கிளர்ச்சி அன்றோ ?"

பொ :—மீளவும் ஒன்றைச் சொல்கின்றாள் : "நீ வீரமுடையவனா? (அல்லை). உன்னோடு தொடர்புடையராகிய கரன் முதலிய அரக்கர்களை விரைவில் கொன்று, (அதற்குமுன்) உன் தங்கையின் கொங்கையையும், மூக்கையும் அரிந்து வாடச் செய்தவர்களாகிய மானிடர், வனத்தில் உள்ளார் என்ற வார்த்தையைக் கேட்டிருந்தும் இவ்வாறு வஞ்சனை செய்தது, அவர்களைக் காண அஞ்சிய அச்சத்தின் மிகுதியினாலன்றோ ?"

கு :—'அச்சமுடையவனே அன்றி நீ வீரனாகாய்' என்பதைக் காரணத்தோடு நிறுவியவாறு. ஏகாரம் எதிர்மறைப் பொருளது. வீரன் அல்லை என்றவாறு. கூட்டர் - தொடர்புடையவர். விரைவில் கொன்று என்றியையும். பல்லாயிரக்கணக்கினராகிய வீரர்களைக் கடிகை மூன்றில் வில்லொன்றால் வீழ்த்திய வீரம் புலப்படுத்த 'உன் கூட்டராமரக்கர்தம்மை விரைவிற்கொன்று' என்றாள். மூக்கரிந்த நிகழ்ச்சி காலத்தால் முற்பட்டதாயினும், இராமன் வீரத்தைப் புலப்படுத்தும் நிகழ்ச்சியாதலின் கரன் முதலோர் வதையை முன் கூறினாள். உங்கை கொங்கை மூக்கும் வாட்டினர் என்றது, இராவணன் வெட்கித் தலைகுனியுமாறு கூறியதாகும். 'அம்மானிடர்' என இராவணன் இழித்துக் கூறியதால் அச்சொல்லாலே அவரைக் குறிப்பிட்டு, அவர் வீரச் செயலையும் அவரைக் கண்டஞ்சிய அவன் கோழைச் செயலையும் புலப்படுத்தியவாறு. வீரனாயின் வாட்டின மானிடர் வனத்திலுள்ளார் என்று கேட்டதும் நேரே படையொடு சென்று தாக்குவான்; அங்ஙனம் செய்யாது மாய வேடம் பூண்டு வந்து வஞ்சித்தது வீரமின்மையாலும் அச்சமுண்மையாலுமேயாம், என்றவாறு. கேட்டும், என்புழி உம்மை இழிவு சிறப்பு. அச்சத்தின் கிளர்ச்சி - அச்சத்தின் மிகுதி. 'அன்றோ' என்னும் வினா ஆம் என்ற பொருளை வற்புறுத்த வந்தது. (84)

## இராவணன் மறுமொழி

3501. மொழிதரு மளவி னங்கை
கேளிது முரணில் யாக்கை
யிழிதரு மனித ரோடே
யான்செரு வேற்ப லென்றுல்
விழிதரு நெற்றி யான்றன்
வெள்ளிவெற் பெடுத்த தோட்குப்
பழிதரு மதனிற் சாலப்
பயன்றரும் வஞ்ச மென்றுன்.

மொழிதரும் அளவில், "நங்கை!
கேள் இது; முரண் இல் யாக்கை
இழி தரு மனிதரோடே
யான் செரு ஏற்பல் என்றுல்,
விழி தரும் நெற்றியான்தன்
வெள்ளி வெற்பு எடுத்த தோட்குப்
பழி தரும்; அதனின் சாலப்
பயன் தரும், வஞ்சம்" என்றுன்.

பொ:—அவ்வாறு சீதை சொன்ன அளவில், (இராவணன்) "நங்கை! இதைக் கேள்; வலிமையில்லாத உடம்பினையுடைய இழிவான மனிதர்களோடு யான் போர் மேற்கொள்வேன் என்றுல், அது கண்ணுதற் கடவுளுடைய வெள்ளிமலையை எடுத்த என் தோள்களுக்குப் பழியைத்தரும் செயலாம்; ஆதலின், அப்போரைக்காட்டிலும் வஞ்சமே மிக்க பயன்தரும் செயலாகும்" என்றுன்.

கு:—யான் என்றது முரண்மிக்க யாக்கையும் மூவுலகாளும் பெருமையுமுடைய யான் என்னும் கருத்தினது. விழிதருநெற்றியான்-கண் பொருந்திய நெற்றியான்; 'முக்கண்ணன்' என்றவாறு. வெள்ளிமலையை அள்ளி யெடுத்த தோள்களால் இழிந்த மனிதரோடு போர் செய்தான் என்று கூறும் பழியைக் காட்டிலும், போர் இன்றி வஞ்சனையால் உன்னைக் கவர்தல் பழியாம் எனினும் பயன்தரும் என்ற கருத்தால், 'சாலப் பயன்தரும் வஞ்சம்' என்று கூறினன். (85)

## சீதையின் பழிப்புரை

3502. பாவையு மதனைக் கேளாத்
தங்குலப் பகைஞர் தம்பாற்
போவது குற்றம் வாளிற்
பொருவது நாணம் போலா
மாவது கற்பி னுரை
வஞ்சிக்கு மாற்ற லேயா
மேவமென் பழிதா னென்னே
யிரக்கமி லரக்கர்க் கென்றுள்.

பாவையும் அதனைக் கேளாத்
"தம் குலப் பகைஞர் தம்பால்
போவது குற்றம்! வாளின்
பொருவது நாணம் போலாம்!
ஆவது, கற்பி னுரை
வஞ்சிக்கும் ஆற்றலே ஆம்!
ஏவம் என்? பழிதான் என்னே?
இரக்கம் இல் அரக்கர்க்கு" என்றுள்.

பொ:—சித்திரப்பாவை போன்ற சீதையும், அவன் கூறியதைக் கேட்டு, "தம் குலத்திற்கே பகையாயுள்ளவர்களிடத்தில் போர்க்குப் போவது, குற்றம்போலாம்; அவர்களோடு வாளால் போர்செய்வது நாணம்போலாம்; தக்கதாவது கற்புடையவரை வஞ்சிக்கும் ஆற்றலே ஆம்! இரக்கம் இல்லாத அரக்கர்கட்குக் குற்ற மென்னே? பழிதான் என்னே? (ஒன்றுமில்லை)" என்று சொன்னுள்.

கு:—சீதையின் அழகைப் புலப்படுத்த, உவமையாகுபெயரால் 'பாவை' என்றுர். தங்குலத்தவரைக் கொன்றும் பங்கப்படுத்தியும் வருகின்றவர்களை அழிக்க எண்ணி, அவர்பால் படையுடன் செல்லுதலும் போர் செய்தலும் வீரரின் மானத்திற்கும் புகழிற்கும் காரணமாயிருக்க, இராவணன், 'மனிதரோடே யான் செரு ஏற்பலென்றல் பழிதரும்' என்று கூறினமை நகைதரு சொல்லாகும் என்ற கருத்தால், "குலப்பகைஞர்தம்பால் போவது குற்றம்; வாளிற் பொருவது நாணம் போலாம்" என்றுள். போலாம் என்றதை முன்னும் கூட்டுக. ஒப்பில்போலி; உண்மையல்லாதது என இகழும் குறிப்பில் வந்தது. நாணம் தரும் பிறன்மனை நயத்தலைத் தக்கதாகவும், மானம் தரும் போர்ச் செயலை நாணம் தருவதாகவும் மாறுபடக் கொள்கின்றவன் அரக்கன் என்பது, அவன் சொல்லால் புலப்பட்டமையின்

ஏவம் என்? பழிதான் என்னே? என்ருள். எல்லா அறங்களுக்கும் அடிப்படையாக நிற்கும் இரக்கம் என்ற நற்பண்பு இல்லாத அரக்கர்க்கு இது குற்றமுடைய செயல். இது பழிக்கப்படுஞ் செயல் என்பன இல்லை என்று இகழ்ந்தவாறு. இவ்விகழ்ச்சி கேட்டேனும் இராவணன் தேரை இராமனுள்ள இடத்திற்குத் திருப்பமாட்டானு என்ற கருத்தால் இது கூறினுள். (86)

1, 2, 8, 21, 22-ஆம் பிரதிகளில் இச்செய்யுளின்பின்,

3502 (a) என்றன ளபயம் புட்காள்
விலங்குகா ளிராமன் றேவி
வென்றிகொள் சனகன் பேதை
விதியினு லரக்கன் றேர்மேற்
றென்றிசை சிறைபோ கின்றேன்
சீதையென் பெயரு மென்ருள்
சென்றது சடாயு வேந்தன்
செவியிடை யுற்ற தன்றே.

என்று ஒரு மிகைப்பாடல் காணப்படுகிறது.

## சடாயு எதிர்த்தல் 3503-3509

**3503.** என்னுமவ் வேலை யின்க
ணெங்கடா போவ தெங்கே
நின்னிலென் றிடித்த சொல்ல
னெருப்பிடைப் பரப்புங் கண்ணன்
மின்னென விளங்கும் வீரத்
துண்டத்தன் மேரு வென்னும்
பொன்னெடுங் குன்றம் வானின்
வருவதே போலு மெய்யான்.

என்னும் அவ் வேலையின்கண்,
"எங்கு அடா போவது? எங்கே?
நில்! நில்!" என்று இடித்த சொல்லன்,
நெருப்பிடைப் பரப்பும் கண்ணன்,
மின் என விளங்கும் வீரத்
துண்டத்தன், மேரு என்னும்
பொன் நெடுங்குன்றம் வானின்
வருவதே போலும் மெய்யான்.

பொ :—என்று சீதை சொல்லும் அமையத்தில் "அடா! நீ போகின்றது எங்கே? எங்கே? நில்! நில்!" என்று இடி இடித் தாற்போன்ற சொல்லையுடையவனாய், சினத்தீப்பொறிகளுக்கிடையே விரித்த கண்ணை யுடையவனாய், மின்னலைப்போல ஒளியுடன் விளங்கு கின்ற வீரமிக்க அலகினை யுடையவனாய், மேரு என்னும் பெயரை யுடைய பொன்மயமான நெடிய மலை வான்வழியாக வருகின்றதை யொத்து விண்ணில் பறந்துவரும் பொன்மயமான பெரிய உடம்பை யுடையவனாய்,

கு :—சொல்லன், கண்ணன், துண்டத்தன், மெய்யான் என்ற குறிப்பு முற்றுக்கள் எச்சமாய் 'எருவையின் மன்னன் வந்த னன்' என்று, 92ஆம் செய்யுளில் முடியும். மேல்வருவனவும் அத்தன்மையனவே. அடா என்பது ஒருமையில் இகழ்ச்சி தோன் றக் கூறும் சொல். போவது எங்கு? எங்கே? என்றியையும்; போக வியலாது என்னும் பொருளது; நில்! நில்! என்பன வெகுளிப் பொருளில் வந்த அடுக்கு. சின நெருப்பின் மிகுதி புலப்பட 'நெருப் பிடைப் பரப்பும் கண்ணன்' என்றார். பரப்புதல் என்பது சினத்தால் கண்களை அகல விரித்தல். துண்டம் - அலகு; மூக்கு. கூற்றுக்கு வாளவுணரை விருந்தூட்டிய துண்டம் (சடாயுகாண். 6) ஆதலின் 'வீரத்துண்டம்' எனச் சிறப்பித்தனர். நிறத்தாலும் பருமையாலும் மேருமலை சடாயுவின் உடம்பிற்கு உவமையாயிற்று. 'குன்றம் வானின் வருவதே போலும் மெய்யான்' என்றது இல்பொருளுவமை. 'மந்தர கிரியென வயங்குவான்றனை' (சடாயுகாண். 3) என முன்னம் அவன் உடம்பிற்கு மந்தர மலையை உவமை கூறியிருத் தலும் காண்க. மலைபோன்ற பெரிய தோற்றத்தையுடையவன் என்பது கருத்து. (87)

**3504.** பாழிவன் கிரிக ளெல்லாம்
பறித்தெழுந் தொன்றோ டொன்று
பூழியி னுதிர விண்ணிற்
புடைப்புறக் கிளர்ந்து பொங்கி
யாழியு முலகு மொன்று
யழிதர முழுதும் வீசு
மூழிவெங் காற்றி தென்ன
விருசிறை யூதை மோத.

பாழி வன் கிரிகள் எல்லாம்
பறித்து, எழுந்து, ஒன்ரோடு ஒன்று
பூழியின் உதிர, விண்ணில்
புடைப்புறக் கிளர்ந்து பொங்கி,
ஆழியும் உலகும் ஒன்ருய்
அழிதர, முழுதும் வீசும்
ஊழி வெம் காற்று இது என்ன,
இரு சிறை ஊதை மோத.

பொ :—பெரிய வலிய மலேகள் எல்லாம் பறியுண்டு எழுந்து புழுதிபோலத் துகளாய் உதிரும்வண்ணம் விண்ணில் ஒன்ரோடு ஒன்று தாக்குண்ணவும், மேல் எழுந்து பொங்கிக் கடலும் உலகமும் ஒன்ருகி அழியவும், உலக முழுவதிலும் வீசுகின்ற ஊழிக்காலத்துக் கடுங்காற்று இது என்று சொல்லுமாறு, தன் இரு சிறகுகளின் காற்று மோதாநிற்க.

கு :—குளகம் ; மோத, தாழ, செல்ல, நைய, மாறுகொள்ள, சிறைகளே விரிக்கும் பண்பினனுய் வந்தனன் எருவையின் மன்னன் (92) என மேல் முடிவுறும். பாழி-பெருமை. 'பறித்து' என்பது பறி யுண்டு எனச் செயப்பாட்டுவினைப்பொருளில் வந்தது. உதிர-உதிரு மாறு. 'பறியுண்டு எழுந்து, விண்ணில் ஒன்ரேடொன்று புடைப்புற' என்றியையும். உதிருமாறு புடைப்புற என்க. புடைப்புறல்-தாக்குண் ணுதல்; அடிபடுதல். துடைப்பேனெருபுடைப்பால், (யுத்த - முதற் போர். 164) என்றதும் காண்க. கடலும் உலகுக்கு உட்பட்டதேயாயி னும் ஆழியும் என முன்பிரித்தலின் இங்கு நிலப்பகுதியைமட்டும் உலகு என்றதாகக் கொள்க. ஊழியிறுதியில் கடல் நீர் பொங்கி உலகை மறைத்து அழிக்கும் என்பதும், அக்காலத்தில் வீசும் காற்றுப் பேராற்றலுடையதாய் மலேகளேயும் விண்ணில் மோதவிடுதலோடு, கடலேயும் பொங்கி மேலெழச்செய்யும் என்பதும் அறியத்தக்கன. முதல் மூன்றடிகளும் ஊழிவெங்காற்றுக்கு அடையாக அமைந்தன. ஊழிவெங்காற்று இது என்னுமாறு சடாயு இருசிறகும் அசைப் பதால் எழும் காற்று ஆற்றலுடையதாக மோதுகின்றது என்பது கருத்து. ஊதை - காற்று. (88)

3505. சாகவன் றலேயொடு மரமுந் தாழமேன்
★ மேகமும் விண்ணின்மீச் செல்ல மீமிசை
மாகவெங் கலுழனும் வருகின் ருனென
நாகமும் படமொளித் தொதுங்கி நையவே.

சாக வன் தலையொடு மரமும் தாழ, மேல்
மேகமும் விண்ணின் மீச் செல்ல, மீமிசை
"மாக வெம் கலுழன் ஆம்; வருகின்றான்" என,
நாகமும் படம் ஒளித்து ஒதுங்கி நையவே.

பொ :—இலைகளையுடைய வலிய தலையோடு மரங்களும் சாய்ந்து விழ, மேல் உள்ள மேகமும் ஒதுங்கிப் பின்னும் விண்ணின்மேல் செல்ல, மேலே பறந்து வருகின்றவன், பெருமை பொருந்திய கொடிய கருடனும் என்று நல்ல பாம்பும் படத்தை ஒடுக்கிக்கொண்டு ஒருபுறம் ஒதுங்கியிருந்து வருந்தாநிற்க.

கு :—சாகம் - இலை. தாழ்தலாவது சாய்ந்து வீழ்தல். மீமிசை ஒருபொருட் பன்மொழி. மீமிசை வருகின்றான், கலுழனும் என நாகமும் நைய என்க. மாகம் இங்குப் பெருமை என்னும் பொருளது. கருடன் சிறகின் நிழல் பட்டவுடன் பாம்பு வலிமை குறைந்து அழியும் ஆதலின், சடாயுவைக் கலுழன் என மயங்கிப் பாம்பு படம் ஒளித்து ஒதுங்கி மனம் வருந்திற்று என்க. மரமும் தாழ மேகமும் மீச்செல, வருகின்றவன் கலுழனும் என நாகமும் நைய என இயைத்துரைத்தலும் ஆம். பறத்தற்றொழிலாலும் வடிவின் பருமையாலும் நிறத்தாலும் கலுழனுக்கும் சடாயுவுக்கும் ஒற்றுமையுண்மையின் பாம்பு மயங்க நேர்ந்தது. இது மயக்கவணி. (89)

3506. யானையும் யாளியு முதல யாவையுங்
கானெடு மரத்தொடு தூறு கல்லிவை
மேனிமிர்ந் திருசிறை வீச்சி னேறலால்
வானமுங் கானமு மாறு கொள்ளவே.

யானையும், யாளியும், முதல யாவையும்,
கான் நெடு மரத்தொடு தூறு கல் இவை
மேல் நிமிர்ந்து, இரு சிறை வீச்சின் ஏறலால்,
வானமும் கானமும் மாறு கொள்ளவே.

பொ :—யானையும் யாளியும் முதலாகிய எல்லாவிலங்குகளும், காட்டில் உள்ள நெடிய மரங்களோடு புதர்கள் கற்களாகிய இவைகளும், (சடாயுவின்) இரு சிறகுகளின் வீச்சினால் விண்ணில் நிறைந்து ஏறுதலால் வானமும் கானமும் தம்முள் நிகர்ப்பனவாக.

கு :—யாளி என்பது துதிக்கையுடைமையால் யானையை ஒத்து மற்றையமைப்புக்களால் சிங்கத்தை ஒத்து விளங்கும் ஒரு வலிய

விலங்கு. சடாயுவின் சிறகு வீசும் காற்ருல் கானகத்திலுள்ள விலங்குகளும் மரமுதலிய நிலத்திணைப் பொருள்களும் மேலெழுந்து ஏறுதலால் வானமும் கானகமாகக் காட்சியளிக்க என்பார், 'வானமும் கானமும் மாறுகொண்டவே' என்ருர். மாறு - ஒப்பு. "மாறன்மையின் மறம்வாடுமென்றிளையாரையு மெறியான்" (சீவக. 2261) என்புழியும் மாறு அப்பொருளதாதல் காண்க. "எண்ணில் தரு கோடிகள் எறிந்தன செறிந்தே, தண்ணமழை போலிடை தழைந்தது சலத்தால், அண்ணலனுமான் அடல் இராவணனது அந்நாள் விண்ணும் ஒரு சோலையுளதாம் என விதித்தான்" (சுந்தர. 710) என்பது இங்கு ஒப்புநோக்கத்தகும். (90)

3507. உத்தமன் றேவியை யுலகொ டோங்குதேர்
வைத்தனை யேகுவ தெங்கு வானினோ
டித்தனை திசையையு மறைப்பெ னீண்டெனுப்
பத்திரச் சிறைகளை விரிக்கும் பண்பினன்.

"உத்தமன் தேவியை, உலகொடு ஓங்கு தேர்
வைத்தனை ஏகுவது எங்கு? வானினோடு
இத்தனை திசையையும் மறைப்பென் ஈண்டு" எனுப்
பத்திரச் சிறைகளை விரிக்கும் பண்பினன்.

பொ:—"யாவரினும் மேம்பட்டவனாகிய இராமன் மனைவியை அவளிருந்த நிலத்தோடு பெயர்த்து உயர்ந்த தேரில் வைத்துக் கொண்டு நீ செல்வது எவ்விடத்திற்கு? (எங்கும் நீ போகாதவாறு) ஆகாயத்தோடு, எட்டாகிய இந்தத் திசைகள் எல்லாவற்றையும் இப்பொழுது மறைப்பேன்" என்று சொல்லிக் கொண்டு தனக்குப் பாதுகாப்பாயுள்ள சிறகுகளை விரிக்கின்ற தன்மையுடையவனாய்;

கு:—உத்தமன்-யாவர்க்கும் உயர்ந்த தன்மையன். உலகொடு-நிலத்தோடு. உலகம் நிலம் என்ற பொருளில் வந்தது; "மாயோன் மேய காடுறையுலகமும்" (தொல் - பொருள் 5.) என்புழிப்போல. தேவியை நிலத்தொடு பெயர்த்துத் தேர்மேல் வைத்தான் என்பதை "உயர்தோள்வலியாற் கீண்டானில மோசனை கீழொடுமேல்" "கொண்டானுயர்தேர்மிசை" (74,75) என முன் கூறியுள்ளமையால் அறியலாம். 'வைத்தனை' முன்னிலையில் வந்த முற்றெச்சம். எட்டுத் திசையும் என்பான் இத்தனை திசையையும் என்ருன். ஈண்டு மறைப்பென் என்க. ஈண்டு - இப்பொழுது. பத்திரம் - பாதுகாப்பு. பண்பினன் முற்றெச்சம்; பண்பினனாய் வந்தனன் என இயையும். என்னும் அவ்வேலையின்கண் இடித்த சொல்லன், பரப்புங்

கண்ணன், வீரத்துண்டத்தன், மெய்யான், இருசிறை யூதைமோத, தாழ, செல்ல, நைய, மாறுகொள்ள, சிறைகளை விரிக்கும் பண்பினனாய் வந்தனன் 'எருவையின் மன்னன்' எனமேல் இயையும். (91)

3508. வந்தன னெருவையின் மன்னன் மாண்பிலா
னெந்திரத் தேர்செல வொழிக்கு மீட்டினாற்
சிந்துரக் கால்சிரஞ் செக்கர் மூடிய
கந்தரக் கயிலையை நிகர்க்குங் காட்சியான்.

வந்தனன் எருவையின் மன்னன்; மாண்பு இலான்
எந்திரத் தேர் செலவு ஒழிக்கும் ஈட்டினால்,
சிந்துரக் கால் சிரம் செக்கர் மூடிய
கந்தரக் கயிலையை நிகர்க்கும் காட்சியான்.

பொ :—நற்குண நற்செய்கைகள் இல்லாத இராவணனுடைய எந்திரத் தேர் செல்லுதலைத் தடுக்கும் வன்மையுடைமையால், சிந்துரம் போன்று சிவந்த கால்களையும் சிவந்த தலையையுமுடைய தாய்ச் செவ்வானத்தால் மூடப்பெற்ற குகைகளோடுங் கூடிய கயிலை மலையை ஒத்த காட்சியுடையவனாய்க் கழுகுகட்கு அரசனாகிய சடாயு வந்தான்.

கு:—கயிலைமலை இராவணனுடைய எந்திரத் தேரைத் தடுத்து நிறுத்தியது என்ற நிகழ்ச்சி, "போரரக்கன் புட்பகந்தான் பொருப்பின்மீதோடாதாக" என்பதாலும், "இலங்கைவேந்தன் கடுந்தேர் மீதோடாமைக் காலாற் செற்ற பொருவரையாய்" என்பதாலும் (தேவாரம் - 6-12-10, 6-99-10) அறியலாம். சடாயுவும் இராவணன் எந்திரத்தேரைத் தடுத்து நிறுத்திய ஆற்றலுடைமையால் அக்கயிலைமலையை ஒத்தவனானான் என்பார், சடாயு சிவந்த கால்களும் சிவந்த தலையும் பொன்மேனியும் உடையனாயிருத்தலின் வெள்ளிய கயிலைமலை போன்றவன் என்றற்கு ஏலாமை கருதி, சிந்துரக்கால் சிரம் செக்கர் மூடியகயிலை என்று இல்பொருளுவமம் கூறினார். சிந்துரக்காலும் சிரமும் கயிலைக் கின்மையின் அவற்றையுடைய கயிலை என்றது, இல்பொருளே யாதல் காண்க. சடாயுவின் பொன்னிறச் சிறகுகளுக்கு உவமையாக வேண்டிச் செக்கர் மூடிய கயிலை என்றார். 'காட்சியானாய் எருவையின் மன்னன் வந்தனன்' என்றியையும். கந்தரம் - மலைக்குகை. (92)

3509. ஆண்டுற் றவணங் கினையஞ் சலெனுத்
★ தீண்டுற் றிலனென் றுணர்சிந் தையினுன்
மூண்டுற் றெழுவெங் கதமுற் றிலனுய்
மீண்டுற் றுரையா டலைமே யினனுல்.

ஆண்டு உற்று அவ் அணங்கினை "அஞ்சல்" எனுத்
தீண்டுற்றிலன் என்று உணர் சிந்தையினுன்,
மூண்டுற்று எழு வெங்கதம் முற்றிலனுய்,
மீண்டுற்று, உரையாடலை மேயினனுல்.

பொ:—(வந்து) அவ்விடத்தை அடைந்து, துன்புறுகின்ற அச்சீதையைக் கண்டு, "அஞ்சாதே" என்று கூறிவிட்டு, (இராவணன் சீதையைத்) தீண்டவில்லை என்பதை யுணர்ந்த மனத்தினனுதலின், முன் மூண்டு எழுந்த கொடிய கோபம் முதிரப் பெருதவனுய்த் தணியப் பெற்றுச் சடாயு அவ்விராவணனேடு உரையாடுதலைத் தொடங்கினுன்.

கு:—'அவ்வணங்கினை' என்பது தொக்கது. அணங்கு என்பது, இங்குச் சீதையை உணர்த்தியது; துன்பவடிவினள் என்ற கருத்தால் அப்பெயரால் கூறினர் எனலும் ஆம். நிலத்தோடு பெயர்த்துத் தேரில் வைத்திருத்தலைக் கண்ட சடாயு, வழியளவையால் தீண்டிலன் என்பதை யுணர்ந்தான் என்க. சிந்தையான் ஆதலின், கதமுற்றிலனுய் மீண்டுற்று என்க. முன் மூண்டெழுந்த கோபம் முதிரப் பெருமல் தணிவிற்குத் திரும்பினுன் என்பார், 'மீண்டுற்று' என்ருர். மீளுதல் என்பது கோபம் தணிதலையுணர்த்தியது. மேயினன் - தொடங்கினுன். சீதையைத் தீண்டாமையால் இராவணன் சிறிது அஞ்சியுள்ளான் என்பது தெரிந்தமையின் மேலும் அறவுரை கூறின் விடுதலும் கூடும் என்ற எண்ணத்தால் பேசத் தொடங்கினுன். (93)

## சடாயுவின் அறிவுரை 3510-3518

3510. கெட்டாய் கிளையோ டுநின்வாழ் வையெலாஞ்
சுட்டா யிதுவென் னைதொடங் கினைநீ
பட்டா யெனவே கொடுபத் தினியை
விட்டே குதியால் விளிகின் றிலையால்.

"கெட்டாய்! கிளையோடும் நின் வாழ்வை யெலாம்
சுட்டாய்; இது என்னை தொடங்கினை? நீ

பட்டாய் எனவே கொடு, பத்தினியை
விட்டு ஏகுதியால்! விளிகின்றிலையால்."

பொ:—"ஒழுக்கங் கெட்டவனே! நின் இனத்தோடு நின் செல்வவாழ்வை யெல்லாம் சுட்டொழித்தாய்! இத்தகைய தீச் செயலை ஏன் செய்யத் தொடங்கினுய்? இச் செயலால் நீ இறந்தாய் என்றே உளங்கொண்டு (அத்தீமை நீங்கக்) கற்புடைய இச் சீதையை விட்டுச் செல். அவ்வாறு விட்டால் அழிவு எய்த மாட்டாய்."

கு:—பட்டாய் எனப் பின்வருதலின், கெட்டாய்! என்பதை ஒழுக்கங் கெட்டவனே! என்ற பொருளுடைய விளியாகக் கொள்க. பிறன் மனைவியை விரும்பி எடுத்த செயல், அறன் கடை நின்ற அழிதரு செயலாதலின் 'கெட்டாய்' என இராவணனை விளித்தான். அத்தீச் செயல் காரணமாக அவன் இனமும் வாழ்வும் எல்லாம் அழியுமாதலின், 'கிளையோடு நின் வாழ்வை யெலாம் சுட்டாய்' என்ருன். இன்பவாழ்வின் வகைமைகள் பலவும் தோன்ற 'வாழ்வையெலாம்' எனப் பன்மையால் கூறினான். தவஞ் செய்து பெருஞ் செல்வ வாழ்வை யடைந்த நீ, அது அழிதற்குக் காரணமான அவச் செயல் செய்யலாமோ என்பான், 'இது வென்னை தொடங்கினை நீ' என்ருன். தெளிந்தாரிற் றீமை புரிந்தொழுகுவார் விளிந்தாரின் வேறல்லர். (குறள் - 143) என்ற கருத்தால் 'பட்டாய் எனவே கொடு' என்ருன். பிறர் கொல்ல வேண்டாது, அவன் செய்த தீமைதானே அவனைக் கொல்லும் என்ற கருத்தால் 'பட்டாய் எனவே கொடு' என்ருன் எனலுமாம். பத்தினியை விடுத்தால் எடுத்த இக் குற்றமும் மன்னிக்கப்படும் என்பான். 'விட்டேகுதியால் விளிகின்றிலையால்' என்ருன். 'விட்டேகா விடின் என்னுல் விளிவாய்' என்பது அருத்தாபத்தியால் புலனுக்கியவாறு. சுட்டாய், பட்டாய் என்பன தெளிவு பற்றி எதிர்காலம் இறந்தகாலமாக வந்த வழுவமைதி. நின் கிளையையும் வாழ்வையும் சுடுதற்கும் நின்னை அடுதற்கும் ஏற்ற கற்பின் கனலி என்பான், சீதை என்னுது, 'பத்தினி' என்ருன். பத்தினி - கற்புடையவள். 'எல்லை நீத்த உலகங்கள்யாவும் என் சொல்லினுற் சுடுவேன்' (சுந்தர. 624) எனச் சீதையே பின்னர்க் கூறுவதும் காண்க. (94)

3511. பேதாய் பிழைசெய் தனைபே ருலகின்
மாதா வனையா ளைமனக் கொடுநீ

யாதாக நினைத்தனை யெண்ண மிலா
யாதா ரநினக் கினியா ருளரோ.

"பேதாய்! பிழை செய்தனை; பேர் உலகின்
மாதா அனையாளை மனக்கொடு, நீ
யாது ஆக நினைத்தனை? எண்ணம் இலாய்!
ஆதாரம் நினக்கு இனி யார் உளரோ?"

பொ :—"அறிவு இல்லாதவனே! பிழை செய்துவிட்டாய்; பெரிய உலகினுக்குத் தாய் போன்றவளாகிய சீதையை (க் காதலியாக) மனத்தில் கொண்டு நீ எந்த இழி நிலையடைய நினைத்தாய்? சிந்தனையில்லாதவனே; இனி நினக்குப் பற்றுக்கோடாய் நின்று காப்பாற்றுவோர் யார் இருக்கின்றார்கள்? (எவருமிலர்)"

கு :—காதன்மை கையல்லதன்கட் செய்த பேதையுட்பேதை இராவணன் ஆதலின் அவனைப் 'பேதாய்!' என விளித்தான். உலகமாதாவாகிய சீதையைக் காதலியாக விரும்பி மனத்தில் கொண்டதால் வாழ்விழந்து பிணமாவாய் என்பான், "மாதாவனை யாளை மனக்கொடு நீ யாதாக நினைத்தனை" என்றான். "கோநகர் முழுவதும் நினது கொற்றமும், சானகி யெனும்பெய ருலகின் தம் மனை யானவள் கற்பினால் வெந்த தல்லதோர், வானரஞ் சுட்ட தென் றுணர்தல் மாட்சியோ" (யுத்த - 2 - 75) என்றும், "தாயினுந் தொழத்தக்காண்மேல் தங்கிய காதற்றன்மை நோயுநின் முனிவு மல்லால் வெல்வரோ" (யுத்த - 36 - 211) என்றும் வீடணன், இராவணனிடத்தும் இராமனிடத்தும் கூறியன இங்கு நினைக்கத்தக்கன. எண்ணம் - சிந்தனை; ஆலோசனை. மாதாவைக் காதலிக்கும் குற்றம் செய்தானாகலின், அவனழிவை வராமற் காப்போர் யாருமிலர் என்பான், 'ஆதாரம் நினக்கு இனி யாருளரோ?' என்றான். இனி, சீதையை விரும்பினமையால் அவள் கணவன் இராமன் கோபத்திற்கு இலக்காகாது பிழைப்பிக்க ஆதாரமாவார் பிறர் இலர் என்றானும் ஆம். ஆதாரம் - பற்றுக்கோடு. (95)

**3512.** உய்யா மன்மலைந் துமரா ருயிரை
மெய்யா கவிரா மன்விருந் திடவே
கையா ரமுகந் துகொடந் தகனு
ரையா புதிதுண் டதறிந் திலையோ.

"உய்யாமல் மலைந்து, உமர் ஆருயிரை
மெய்யாக இராமன் விருந்திடவே,

கை ஆர முகந்து கொடு, அந்தகனுர்,
ஐயா! புதிது உண்டது அறிந்திலேயோ?''

பொ :—“உம்மினத்தவராகிய கரதூடணர் முதலோர் ஒருவரும் பிழைக்காதவாறு, இராமன் போர் செய்து, அவர்களின் அரிய உயிரை மெய்யாகவே விருந்துணவாக அளிக்க, எமன் தன் கைந்நிறைய வாரிக் கொண்டு புதிதாக உண்ட செய்தியை அவர்கள் தலேவனுகிய நீ அறியவில்லேயோ?”

கு :—அறிந்திருந்தால் இது செய்வாயலே என்றவாறு. உமர் - உம்மவர்; உம் உறவினர். படையின் பெருக்கத்தையும் அதை யழித்த காலத்தின் சுருக்கத்தையும் இராமன் தனிமையையும் உணர்ந்தோர் மெய்ம்மையாக அப்படையின் அழிவை நம்பமாட்டார்கள் ஆதலின் ‘மெய்யாக’ என்று கூறவேண்டிற்று. விருந்து என்றது, ஈங்குப் புதிய சிறந்த உணவு என்னும் பொருளது. இராவணன் ஆட்சியில் எமனும் அஞ்சி அவனினத்தவர் உயிரை நெடிதுநாள் உண்ணு திருந்தாளுகலின், இராமன்துணேயால் அப் போரில் அரக்கர் உயிர்கவர்ந்ததைப் ‘புதிதுண்டு’ என்ருன். விரும்பியாங்கு ஆசைதீர உண்டான் என்பான், ‘கையார முகந்து கொடு - உண்டது’ என்ருன். தன்கீழ்க் குடிகளின் அழிவைத் தலேவனுகிய நீ அறியாதிருக்க இயலாது என்பான், ஐயா...அறிந்திலேயோ? என்ருன்; ஐயா - தலேவா, அறிந்திருந்தும் இவ் விழிசெயலேச் செய்தனேயே, இராமன் அம்பிற்கு உய்வாயோ? என்பது கருத்து. எமனுடைய கொடுமை புலப்பட ‘அந்தகனுர்’ எனப் பலர்பாலால் கூறினுன். “இயற்பெயர் முன்ன ராரைக் கிளவி பலர்க்குரி யெழுத்தின் வினேயொடு முடிமே” (தொல்-சொல்-270) என்ற விதியால் அன் விகுதியும் ஆர்விகுதியும் இணேந்து வந்தன. (96)

**3513.** கொடுவெங் கரிகொல் லியவந் ததன்மேல்
விடுமுண் டைகடா வவிரும் பினேயே
யடுமென் பதுணர்ந் திலேயா யினும்வன்
கடுவுண் டுயிரின் னிலேகா ணுதியோ.

“கொடு வெங்கரி கொல்லிய வந்ததன் மேல்
விடும் உண்டை கடாவ விரும்பினேயே!
அடும் என்பது உணர்ந்திலே, ஆயினும், வன்
கடு உண்டு, உயிரின் நிலே காணுதியோ?''

பொ :—"கொல்ல வந்ததாகிய கொடிய கோபத்தையுடைய யானை மேல், எறிவதற்குரிய மண் உண்டையை வீச விரும்பினுய் போல, உங்குலத்தை அழிக்கவே வந்துள்ள இராமனை வெகுளியூட்ட அவன் கற்புடை மனைவியை எடுத்துச் செல்கின்ருயே! (இது தகுமோ?); வலிய நஞ்சு கொல்லும் இயல்புடையது என்பதை நின் னனுபவத்தால் நீ உணர்ந்திலை ஆயினும், அந்நஞ்சை அருந்தி உயிரினிலைமையைச் சோதிப்பாயோ? அதுபோலக் கற்புடையாரை விரும்பினல் உனக்கு இறுதி உண்டாம் என்பதை நின் அநுபவ உணர்வால் அறியாயாயினும், நஞ்சு போன்ற சீதையை விரும்பி உன் உயிர் நிலைத்திருக்கின்றதா நீங்குகின்றதா என்பதைச் சோதிக்கலாமோ? (சோதித்தலாகாதுகாண்")

கு :—முன் இரண்டடிகளில் கொல்லவே வந்த இராமனை மேலும் வெகுள்வித்தாய் என்பதும், பின்னிரண்டடிகளில் பிறன் கற்புடை யாளைக் காதலித்தால் வாழ்வோமா? வீழ்வோமா? எனச் சோதிக்க லாமோ? ஆகாது என்பதும், பிறிது மொழிதலாய் வருவிக்கப்பட்டன. 'கூற்றத்தைக் கையால் விளித்தற்ரு லாற்றுவார்க், காற்ருதா ரின்ன செயல்' (குறள்-894) என்பது இங்கு ஒப்புநோக்கத்தகும். 'கொல்லிய வந்த கொடுவெங்கரிதன்மேல்' என இயையும். சினவெம்மை யுடைமை தோன்ற 'வெங்கரி' என்ருன். இயல்பாகவே கொல்லும் கருத்தோடு வந்துகொண்டிருக்கும் யானைமேல் மண் உண்டையை எறிந்தால் அவ் யானை உடனே மிகச் சினந்து, தன்னை எறிந்தானைத் தவிராது கொல்லுதல் போல, முனிவர்களின் வேண்டுகோட்படி அரக்கரினத்தை அழிக்கவே வந்துள்ள இராமனின் பத்தினியைக் கவர்ந்து செல்ல விரும்பி அவனை மேலும் கோபிக்கச் செய்தாயே; இது பொருந்துமோ? என்பது முன்னிரண்டடிகளின் விளக்கம். 'நஞ்சு உயிரைக் கொல்லும் என்று அறிந்தோர் சொல்லக் கேட்ட தன்றி நாம் நம் அனுபவத்தால் உணர்ந்ததில்லையே என்று அக் கொடிய நஞ்சையுண்டு அதனல் உயிர் நிற்கின்றதா? அன்றிப் பிரிகின்றதா எனச் சோதிப்பாயா? சோதிக்கமாட்டாயன்றே! அது போலவே கற்புடைய சீதையை விரும்பினல் நாம் வீழ்வோமா? வாழ்வோமா? எனச் சோதிக்கலாமா? சோதிக்கலாகாதன்றே! பிறர் கற்புடைய மனைவியரை விரும்பினல் அழிவெய்துவோம் என்பதை நூலளவையாலறிந்தே விடுத்தல் வேண்டும்' என்பது பின்னிரண் டடிகளின் விளக்கம். இங்குப் பிறிது மொழிதலாய்க் கூறியதையே பின், உருவக அணியில் வைத்து வீடணன், "உண்ணுதே யுயிருண்ணு தொருநஞ்சு சனகியெனும் பெருநஞ்சு உன்னைக் கண்ணுலே நோக்கவே போக்கியதே யுயிர்" (யுத்த. இராவணன் வதை - 220) என்று கூறி இதன் விளைவை விளக்குதல் காணலாம். இக்கருத்தானே 'வன்கடு' என அடைகொடுத்தான். நஞ்சால்

உயிர் என்னுகின்றது என உயிரின் நிலைமையைச் சோதித்தலாகாது என்பான் ‘வன்கடுவுண்டு உயிரின் நிலை காணுதியோ’ என்றான். “நஞ்சு நுகர்வாரை யிது நன்றெனலு நன்றோ” (மாரீசன்வதைப்-193) என முன் மாரீசன் கூறியதும் நினைக்க. (97)

3514. எல்லா வுலகங் களுமிந் திரனு
மல்லா தவர்மூ வருமந் தகனும்
புல்வாய் புலிகண் டதுபோல் வரலால்
வில்லா ளரைவெல் லுமிடுக் குளரோ.

“எல்லா உலகங்களும், இந்திரனும்,
அல்லாதவர் மூவரும், அந்தகனும்,
புல்வாய் புலி கண்டது போல்வர் அலால்,
வில்லாளரை வெல்லும் மிடுக்கு உளரோ?”

பொ ;—“மூவுலகத்திலுள்ளாரனைவரும், அவர்கட்குத் தலைவனாய இந்திரனும், அவன் அல்லாத முதற்றேவராகிய அயன், அரி, அரன் என்ற மூவரும், எமனும், (இராமனையும் இலக்குவனையும் காண்பாராயின்) புல் தின்னும் வாயினையுடைய மான், (பசித்தாலும் புல்லைத் தின்னாத) புலியைக் கண்டால் அஞ்சுதல்போல் அஞ்சுவார்களே அல்லாமல், அந்த வில்வீரர் இருவரையும் வெல்லும் வல்லமையுடையராவரோ?” (ஆகார்)

கு :—உலகங்களில் வாழ்வாரை இடவாகுபெயரால், ‘எல்லா வுலகங்களும்’ என்றார். உலகங்கள் மூன்றே ஆதலின், எல்லா வுலகங்களும் என்பதற்கு மூவுலகத்தோரும் என்பதே பொருளாம். இந்திரனோடு சேர்த்து மூவரையும் எண்ணும் வழக்குண்மையான், இந்திரனைப் பிரித்துக் கூறிப் பின் ‘அல்லாதவர் மூவரும்’ என்றான். “சிவனுமலர்த் திசைமுகனுந் திருமாலுந் தெறுகுலிசத் தவனுமடுத் தொன்றாகி நின்றன்ன வுருவோனே” (சூர்ப்பணகைப் - 132) என்புழி இந்திரனோடு முத்தேவரும் சேர்த்து எண்ணப்பட்டிருத்தல் காணலாம். அந்தகன் - எமன். அழித்தலையே தொழிலாகக் கொண்டவனாதலின் அவனை எடுத்துக் கூறி அவனைக்காட்டிலும் வலியர் இராம இலக்குவர் என்பது காட்டியவாறு. புல்வாய் - மான் ; புல் தின்னும் வாயையுடையது என்ற காரணம்பற்றி வந்தது. மெலிந்த மான், வலிய புலியைக் கண்டால் அஞ்சுதல் இயல்பு. இராம இலக்குவரைக் கண்டு அந்தகன் முதலோர் அஞ்சுவர் என்பதற்கு அவ்வியல்பு நிகழ்ச்சியை உவமை கூறியவாறு. வில்லாளர், வில்லைப் போர்க்

கருவியாக ஆள்கின்ற இராம இலக்குவர். மூவரும் அந்தகனுமே அவர்களைக் கண்டு அஞ்சுவர் எனின் நீ அஞ்சுதல் சொல்ல வேண்டுமோ? என்றவாறு. (98)

**3515.** இம்மைக் குறவோ டுமிறந் தழியும்
வெம்மைத் தொழிலிங் கிதன்மே லிலையா
லம்மைக் கருமா நரகந் தருமா
லெம்மைக் கிதமா கவிதெண் ணினைநீ.

“இம்மைக்கு உறவோடும் இறந்து அழியும்
வெம்மைத் தொழில், இங்கு, இதன்மேல் இலையால்;
அம்மைக்கு, அரு மா நரகம் தருமால்;
எம்மைக்கு இதமாக இது எண்ணினை, நீ?”

பொ ;—“இப்பிறவியில் உறவினரோடு இறந்து அழிதற்குக் காரணமான கொடிய தொழில், இவ்வுலகத்தில் பிறர்மனை நயத்தலாகிய இதற்குமேல் இல்லை; மறுபிறப்பிலும் இது மீளுதற்கரிய பெரிய நரகத்தைத் தரும்; ஆதலால் எப்பிறவிக்கு இன்பந்தரும் என்று இத்தவறான செயலைச் செய்ய எண்ணினாய்?”

கு :—இம்மை, மறுமை என்ற இருமையினும் துன்பமே தரும் செயல் பிறர்மனை நயத்தல் ஆதலின், அது எப்பொழுதும் இன்பம் பயவாது என்ற கருத்தால், ‘எம்மைக்கு இதமாக எண்ணினை நீ’ என்றான். எம்மை - எப்பிறவி? “காணிற் குடிப்பழியாங் கையுறிற் கால் குறையு, மாணின்மை செய்யுங்கா லச்சமாம் — நீணிரயத், துன்பம் பயக்குமால் துச்சாரி! நீ கண்ட, இன்பம் எனக்கு எனைத்தாற் கூறு” (நாலடி - 84) என்புழியும், பிறர்மனை நயத்தல் இன்பந் தாராமையே யன்றித் துன்பம் இருமையினும் தரும் என்பது விளக்கப்படுதல் காணலாம். பிறன்மனை நயந்தோர்க்கு மறுமையில் கிடைக்கும் நரகத் துன்பத்தைத் திருத்தக்கதேவர், “ஏதிலான் தாரம் நம்பி யெளிதென விறந்தபாவத், தூதுலை யுருகவெந்த வொள்ளழற் செப்புப்பாவை, ஆதகா தென்னப்புல்லி யலறுமால் யானைவேந்தே” (சீவக - 2769) என விவரித்தல் காணலாம். பிறனுக் குரிய கற்புடை மனைவியைக் காதலிப்பதால் காதலித்தவனேயன்றி அவன் சுற்றத்தவரும் அழிவர் என்பது கருத்து. இம்மைக்கண், அம்மைக்கண் என்பன நான்கனுருபாய் மயங்கி நின்றன; உருபு மயக்கம். இதம் - இன்பம். (99)

3516. முத்தே வரின்மூ லமுதற் பொருளா
மத்தே வரிம்மா னிடரா தலினு
லெத்தே வரொடெண் ணுவதெண் ணமிலாய்
பித்தே றினையா தல்பிழைத் தனையால்.

"முத் தேவரில் மூல முதற்பொருளாம்
அத்தேவர் இம் மானிடர்; ஆதலினல்,
எத்தேவரொடு எண்ணுவது? எண்ணம் இலாய்!
பித்து ஏறினை ஆதல் பிழைத்தனையால்."

பொ:—"ஆலோசனை அற்றவனே! இந்த மானிடர் இருவரும் அயன், அரி, அரன் என்ற முத்தேவரில் மற்றை இருவர்க்கும் மூலமாக நின்ற முதற் பொருளாகிய அத்திருமாலின் அமிசமானவர்; ஆதலால், எந்தத் தேவரோடு இவர்களை நிகராக எண்ணுவது? காமப்பித்து ஏறினை ஆதலால், இப்பிழையைச் செய்தாய்."

கு:—மற்றைத் தேவர்க்கு இடரிழைத்தும் இன்பமாக வாழ்கின்றேனே என அவன் எண்ணுதல்கூடுமாகலின், அத்தேவரை நிகர்ப்பவர் இவரல்லர்; முத்தேவர்க்கும் மூலமாக நின்ற அத்தேவர் இவர் எனக் கூறி, அவரைவெல்ல இயலாமைக்குக் காரணம் காட்டியவாறு. 'மூலமுதற்பொருளாம் அத்தேவர்' என்றது திருமாலை. "முதலாவார் மூவரே; அம்மூவருள்ளும் முதலாவான் மூரிநீர் வண்ணன்" (முதற் திருவந்தாதி - 15) எனப் பொய்கையாழ்வார் கூறியதும் காண்க. தன் வாழ்வையே முடிக்கும் செயலைத் தொடங்கியுளான் ஆகலின் இராவணனை 'எண்ணமிலாய்!' என விளித்தார். பித்து-மயக்கம். 'பித்து ஏருதிருந்தால் இப்பிழையைச் செய்யமாட்டாய்' என இராவணனுக்கு நயவுரை கூறித் திருத்தியவாறு. (100)

3517. புரம்பற் றியபோர் விடையோ னருளால்
வரம்பெற் றவுமற் றுளவிஞ் சைகளு
முரம்பெற் றனவா வனவுண் மையினேன்
சரம்பற் றியசா பம்விடுந் தனையே.

"புரம் பற்றிய போர் விடையோன் அருளால்
வரம் பெற்றவும் மற்று உள விஞ்சைகளும்,
உரம் பெற்றன ஆவன, உண்மையினேன்
சரம் பற்றிய சாபம் விடும் தனையே."

பொ :—"திரிபுரம் காரணமாகப் போரைச் செய்த எருதையூரும் சிவன் :அருளால் பெற்ற வரங்களும், மற்றும் உள்ள மாய வித்தைகளும், வாய்மையுடையவனுகிய இராமன் கையில் பற்றிய வில்லினின்று அம்பு விடும் வரையிலேதான் வலிமை பெற்றனவாக விளங்கும் ; (விட்ட பின் எல்லாம் அழிவுறும்")

கு :—வரம் கொடுத்தவன் வன்மை நோக்கி வாழ்ச்சி பெருமல் நின் புன்மை நோக்கி இராமனம்பால் வீழ்ச்சியுறும் என்பது விளக்கியவாறு. வரம் கொடுத்த சிவனுடைய வலிமை புலப்படப் 'புரம் பற்றிய போர் விடையோன்' என்ருன். பெற்ற வரமும் என உம்மையைப் பிரித்துக் கூட்டுக. உண்மையினேன் பற்றிய சாபம் சரம் விடுந்தனையே வரமும் விஞ்சைகளும் உரம் பெற்றன ஆவன என்றது, அவன் சாபத்தினின்று சரத்தை விடுத்ததும் அவை உரமற்றனவாய் அழியும் என்றவாறு. உரம் - வலிமை. வரம் சாபம் விடுந்தனையே உரம் பெற்றன என்புழிச் சாபம், சாபச்சொல் விடுந்தனையே என்ற பொருளும் தோன்ற நின்றமை காண்க. உண்மையினேன் என இராமனைக் கூறினமையால் இராவணன் பொய்ம்மையோன் என்பது புலப்படுத்தியவாறு. தந்தையின் வாய்மை காக்க வேண்டி வனம் புக்கவனுதலின் இராமனை, 'உண்மையினேன்' என்ற பெயரால் கூறினுன். (101)

**3518.** வாளுள் பவன்மைந் தன்வளைத் தவிலான்
ருனே வரினின் றுதடுப் பரிதா
ஞனே யவணுய்ப் பெனிந்நன் னுதலைப்
போநீ கடிதென் றுபுகன் றிடலும்.

"வான் ஆள்பவன் மைந்தன், வளைத்த விலான்,
தானே வரின், நின்று தடுப்பு அரிதால்;
நானே அவண் உய்ப்பென் இந் நன்னுதலை;
போ, நீ கடிது" என்று புகன்றிடலும்.

பொ :—"விண்ணுலகத்தில் சிறப்புடன் வாழ்கின்ற தயரதனுடைய மைந்தனுகிய இராமன், வளைத்த வில்லையுடையவனுய்த் தானே இங்கு வருவானுயின் (அவனுல் வரும் தீமையை வராமல்) எதிர் நின்று தடுத்தல் யார்க்கும் அரிதாகும்; (ஆதலால்) இந்த நல்ல நெற்றியையுடைய சீதையை யானே அழைத்துக்கொண்டு போய் அவ்விடத்தில் சேர்ப்பேன்; நீ விரைந்து ஓடிவிடு" என்று சொல்லுதலும்.

கு :—'கேட்டான்' என மேல் இயையும். மண்ணுலகம் ஆண்டு பழகிய தயரதன், வானுலகத்தையும் ஆள்பவனுகக் கூறியது உயர்வுநவிற்சி. சடாயு இராமன்பால் அன்பு செலுத்தக் காரணம் அவன் தயரதன் மைந்தன் என்பதே ஆதலின், அது புலப் பட 'வானுள்பவன் மைந்தன்' என்றுன். இனித் தயரதன் உயிரோடு இருக்குங்காலத்தில் சம்பரனுக்கு அஞ்சி இந்திரன் தன்னை வேண்ட அச் சம்பரனைக் கொன்று, விண்ணுலகத்தைக் காப்பாற்றிய நிலையை நினைந்து அவனை 'வானுள்பவன்' எனச் சிறப்பித்ததாகவும் கொள்ளலாம். முன்னரே அரக்கர்மேல் கோபங்கொண்டுள்ள இராமன், தன் மனையாளைக் கவர்ந்தவனைக் கண்டால் கொல்லாது விடான் என்பான், தானேவரின் தடுப்பரிதால் என்றுன். போர்க்கு ஆயத்தனுக இருக்கின்றமை புலப்பட, 'வளைத்த விலான்' என்றுன். அவன் கண்ணில் படாது சீதையை விடுத்து விரைந்து போய்விடு என்றது, இராவணன்மேல் பரிவு காட்டுபவன் போல் கூறிய அச்சுறுத்துமொழியாகும். உய்த்தல் - செலுத்துதல்; அழைத்துப் போய்ச் சேர்த்தல். அவண் என்றது, இராமனிருக்குமிடத்தை. சீதையின் அழகும் பண்பும் புலப்பட 'நன்னுதல்' என்றுன். சிறிதுகாலம் தாழ்ப்பினும் வில்லேந்திய இராமன் வந்து விடுவான் என்பான், நீ கடிதுபோ என்றுன். கடிதுபோதல்-விரைந்தோடுதல். (102)

## இராவணன் மறுப்புரை 3519-3520

3519 கேட்டா னிருதர்க் கிறைகேழ் கிளர்தன்
வாட்டா ரைநெருப் புகவாய் மடியா
வோட்டா யினிநீ யுரைசெய் குநரைக்
காட்டாய் கடிதென் றுகனன் றுரையா.

கேட்டான் நிருதர்க்கு இறை; கேழ் கிளர் தன்
வாள் தாரை நெருப்பு உக, வாய் மடியா,
"ஓட்டாய் இனி நீ உரைசெய்குநரைக்
காட்டாய் கடிது" என்று, கனன்று உரையா.

பொ :—சடாயு சொல்லியவற்றைக் கேட்டவனுகிய அரக்கர்க்குத் தலைவனுன இராவணன், நிறம் விளங்குகின்ற தன் ஒளி மிக்க கண்களில் நெருப்புப் பொறி சிந்த, வாயைமடித்துக் கொண்டு, "என்னை ஓட்டிவிட எண்ணுதே; இனி, நீ சொல்லுகின்ற வீரர்களை விரைந்து எனக்குக் காட்டுவாயாக" என்று வெகுண்டு கூறி.

கு :—'என்னுமளவில்' (105) என்பதில் இயையும். தாரை - கண்மணி. வாள் - ஒளி. கண் கனலுதலும், வாய் மடித்துக் கடித்தலும் வெகுளிக்குரிய மெய்ப்பாடுகள்; மேல் சடாயு, 'போ நீ கடிது' என்று தன்னை ஓட்டினமையால் அதனை மறுக்க, இராவணன், சடாயுவை நோக்கி 'ஓட்டாய்' என்றான். என்னை 'ஓட்டாதே; நீ யுரைசெய்குநரைக் காட்டுக' என்பது கருத்து. 'ஓட்டாய்' எதிர்மறையேவல்; 'காட்டாய்' உடன்பாட்டேவல். 'யார்க்கும் அஞ்சி ஓடுகின்றவனல்லேன்; நீ சொல்லுகின்றவரைக் காட்டுவாயேல் வெல்லும் ஆற்றலுடையேன்' என்பது புலப்படுத்தியவாறு. ஓட்டாய் என்பதற்கு, 'வார்த்தையை மேலும் வளர்க்காதே' எனப் பொருள் கூறுவாருமுளர். (103)

3520. வரும்புண் டரம்வா ளியுன்மார் புருவிப்
பெரும்புண் டிறவா வகைபே ருதிநீ
யிரும்புண் டநிர்மீள் கினுமென் னுழையிற்
கரும்புண் டசொன்மீள் கிலள்கா ணுதியால்.

"வரும் புண்டரம்! வாளி உன் மார்பு உருவிப்
பெரும் புண் திறவா வகை பேருதி நீ;
இரும்பு உண்ட நிர் மீள்கினும் என்னுழையின்
கரும்பு உண்ட சொல் மீள்கிலள்; காணுதியால்."

பொ :—"என்னை எதிர்த்துவரும் கழுகே! என் அம்பால் உன் மார்பு ஊடுருவப் பெற்றுப் பெரிய புண்ணாக்கிப் போகாதவாறு நீ திரும்பிச் செல்வாயாக; நெருப்பில் காய்ந்த இரும்பு உட்கொண்ட நீர் மீண்டு வெளிப்படுமாயினும், கரும்பு போன்ற இனிய சொல்லையுடைய இவள் என்பக்கத்திலிருந்து மீண்டு வர மாட்டாள்; இதனை நீ அறிவாயாக."

கு :—புண்டரம் - கழுகு; அண்மைவிளி. மார்பு திறவாவகை என இயையும். பேருதி - திரும்பிச்செல். நீர் ஓசை நோக்கி குறுக்கல்விகாரம் பெற்று நிர் என நின்றது. பழுக்கக் காய்ந்த இரும்பில் நீர் ஊற்றினால் அவ்விரும்பு இழுத்துக் கொள்ளும்; பின்னர் அந்நீரை வெளிப்படுத்த இயலாது. அந்நீர் ஒருகால் மீள்வதாயினும், சீதை என்னிடத்திலிருந்து மீண்டு வரமாட்டாள் என்று வலியுறுத்தியவாறு. கானப்பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதியைப் புகழுமுகத்தால் ஐயூர் மூலங்கிழார் கூறிய "அருங்குறும் புடுத்த கானப் பேரெயில், கருங்கைக் கொல்லன் செந்தீ மாட்டிய இரும்புணீரினும் மீட்டற்கரிதென, வேங்கை மார்பன்

இரங்க" (புறநா - 21) என்ற பகுதியில், இவ்வுறழ்பொரு விளக்கமாக விளங்குதல் காணலாம். கரும்புண்ட என்புழி, 'உண்ட' உவம உருபு. கரும்புபோன்று இனிய சொல்லினள் சீதை என்றவாறு. சொல் என்பது அடையடுத்து, ஆகுபெயராய்ச் சீதையை உணர்த்தியது. 'என்னுழை' என்புழி, உழை பக்கம் என்னும் பொருளுணர்த்திநின்ற பெயர்ச்சொல்; ஏழன் உருபன்று. இன் நீங்கற்பொருளில் வந்த ஐந்தனுருபு. (104)

### அஞ்சிய சீதையைச் சடாயு அஞ்சல் என்றது 3521-3522

3521. என்னும் மளவிற் பயமுன்னி னிரட்டி யெய்த
★ வன்னம் மயர்கின் றதுநோக்கி யரக்கன் யாக்கை
சின்னம் முறுமிப் பொழுதேசிலை யேந்தி நங்கண்
மன்னன் மகன்வந் திலனென்று வருந்த லன்னை.

என்னும் அளவில், பயம் முன்னின் இரட்டி எய்த,
அன்னம் அயர்கின்றது நோக்கி, "அரக்கன் யாக்கை
சின்னம் உறும் இப்பொழுதே; 'சிலை ஏந்தி, நங்கள்
மன்னன் மகன் வந்திலன்' என்று வருந்தல்; அன்னை!"

பொ:—என்று இராவணன் சொன்ன அளவில், அச்சம் முன்னையினும் இரண்டு மடங்காய்ப் பெருக, அன்னம் போன்ற சீதை சோர்வடைகின்றதை (சடாயு) பார்த்து, "அன்னையே! இந்த அரக்கன் உடம்பு இப்பொழுதே கண்டதுண்டம் ஆகப் போகின்றது; 'நம் மன்னவன் மகனாகிய இராமன் வில்லையேந்திக் கொண்டு போர்க்கு ஆயத்தமாக வந்திலனே' என்று வருந்தாதே."

கு:—குளகம்; மேல் 'என்றான்' என்பதில் முடியும். பயம் - அச்சம். இரட்டி எய்தலாவது இரண்டு மடங்காய்ப் பெருகுதல். "இரும்புண்ட நீர் மீள்கினும் என்னுழையில் கரும்புண்ட சொல் மீள்கிலள்" என்ற இராவணன் சொற்களால் சீதைக்கு அச்சம் பெருகிற்று என்க. அவள் அயர்ச்சியை முகக் குறிப்பால் அறிந்த சடாயு அவட்கு ஆறுதல் கூறியவாறு. இப்பொழுதே இராவணனைச் சின்ன பின்னமாக்கிக் கொல்லப் போகின்றேன் என்பதே அவன் ஆறுதல் மொழி. இவனைக் கொல்ல இராமன் வில்லேந்தி வர வேண்டுவதில்லை என்றவாறு. சின்ன முறுதல் என்பது கண்ட துண்டமாதல். நங்கள் என்பது உளப்பாட்டுத் தன்மைப்பன்மை. நம் என்பதே பன்மையுணர்த்துமேனும், மேலும் பன்மையுணர்த்தும்

கள் விகுதி பெற்று வந்தது; எங்கள் என்பது போல. மன்னன் என்றது தயரதனை. வருந்தல் என்பது, 'மகனெனல்' (குறள் - 196) என்பது போல எதிர்மறைப் பொருளில் வந்த அல்லீற்று வியங்கோள். அன்பு பற்றி மருகியை அன்னை என விளித்தான். (105)

**3522.** முத்துக் கனபோன் முகத்தாலி
முலைக்கண் வீழத்
தத்துற் றயரே றலைதால
பலத்தி னேலுங்
கொத்தொப் பனகொண் டிவன்கொண்
டனவென்ற வாசை
பத்திற்கு மின்றே பலியீவது
பார்த்தி என்றான்.

"முத்து உக்கன போல் முகத்து ஆலி முலைக்கண் வீழத்
தத்துற்று அயரேல்; தலை, தால பலத்தின் ஏலும்
கொத்து ஒப்பன கொண்டு, இவன் கொண்டன என்ற ஆசை
பத்திற்கும் இன்றே பலி ஈவது பார்த்தி" என்றான்.

பொ :—"முத்து உதிர்வனபோல முகத்தில் உள்ள கண்களிலிருந்து சிந்துகின்ற கண்ணீர்த்துளிகள், மார்பில் கொங்கை முகட்டில் வீழுமாறு கவலையுற்று வருந்தாதே; பனம்பழங்களின் வரிசையாகப் பொருந்திய கொத்து ஒத்து விளங்குகின்றனவாகிய பத்துத்தலைகளையும் பறித்துக்கொண்டு இவன் வென்றுகொண்டதாகக் கூறப்படும் திக்குகள் பத்துக்கும் இப்பொழுதே பலியிடப் போவதைப் பார்ப்பாயாக" என்றான்.

கு :—முகத்து ஆலி என்றது, கண்ணீர்த்துளிகளை. கண் முகத்திலிருப்பது பற்றி இடவாகுபெயராக்கி, 'முகத்து ஆலி' என்றான். கண்ணீர்த்துளி வீழ்தற்கு முத்து உதிர்தல் உவமை. கண்ணீர்த்துளிகள் விழுங்கால் முன்னர் முலைமுகத்து வீழ்தலே இயல்பாதலின், "முகத்தாலி முலைக்கண் வீழ" என்றார். "கொண்ட நெடுங்கணாலி கொங்கை கோப்ப" (1589) என்றதுங் காண்க. தத்து - மனக்கவலை. 'தத்துறலொழி நீ' (688) என்புழியும் இச் சொல் இப்பொருளில் வந்துளது காண்க. தாலபலத்தின் கொத்து, ஏலும் கொத்து என்று இயையும். தாலபலம் என்பது, வட சொற்றொடராதலின் இயல்பாயது; பனம்பழம் என்பது பொருள்.

கொத்தொப்பனவாய தலைகளைக் கொண்டு ஆசைபத்திற்கு இன்றே பலியீவது பார்த்தி என்றியையும். இராவணனுடைய வரிசையான பத்துத்தலைகளுக்குவமையாக வேண்டி, 'ஏலும் கொத்து' என்றார். பனம்பழங்கள் வரிசையாகப் பொருந்திய கொத்து என்க. ஆசை - திசை. வென்று கொண்டன என ஒரு சொல் வருவித்து முடிக்க. எட்டுத்திசையும் நிலனும் வானும் ஆகத் திசை பத்தென்றல் மரபு. அத்திசைத் தெய்வங்களுக்கு நிவேதனமாக வேண்டி ஒவ்வொரு திசைக்கும் ஒவ்வொரு தலையைக் கொய்து பலியிடுவேன் என்பது கருத்து. பனம்பழத்தை இராவணன் தலைகட்கு உவமையாக்குவதை, "இலங்கையர் கோனைப் பானு நேர்சரத்தால் பனங்கனிபோலப் பருமுடியுதிர வில் வளைத்தோன்" (பெரிய திருமொழி. 9 - 1 - 7) என்புழியும் காணலாம். இன்றே – இப்பொழுதே. பார்த்தி என்றது, இகர வீற்று முன்னிலை ஏவல் வினைமுற்று. (106)

## சடாயுவின் போர் 3523–43

**3523.** இடிப்பொத்த முழக்கி னிருஞ்சிறை
வீசி யெற்றி
முடிப்பத் திகளைப் படியிட்டு
முழங்கு துண்டங்
கடிப்பக் கடிதுற்றவன் காண்டகு
நீண்ட வீணைக்
கொடிப்பற்றி யொடித்துயர் வானவ
ராசி கொண்டான்.

இடிப்பு ஒத்த முழக்கின், இருஞ்சிறை வீசி எற்றி,
முடிப் பத்திகளைப் படி இட்டு, முழங்கு துண்டம்
கடிப்பக் கடிது உற்று அவன் காண்தகும் நீண்ட வீணைக்
கொடிப் பற்றி ஒடித்து, உயர் வானவர் ஆசி கொண்டான்.

பொ :—(என்று கூறிய சடாயு) இடியோசை போன்ற முழக்கத்தோடு பெரிய சிறகுகளை வீசி மோதி, இராவணனுடைய தலையில் அணிந்த முடிவரிசைகளைப் பூமியில் தள்ளிவிட்டு, முழக்கம் செய்கின்ற மூக்கினால் கடிப்பதற்காக விரைந்தவன், அவனுடைய காணத்தக்க அழகுடைய நீண்ட வீணைக் கொடியைப் பற்றி ஒடித்துத்தள்ளி விண்ணில் பார்த்துக் கொண்டிருந்த தேவர்களின் வாழ்த்துக்களைப் பெற்றான்.

கு :—சிறகினால் முடிகளைத் தள்ளிக் கடிக்க வேண்டுமென்று வந்தவன் மூக்கினால் வீணைக்கொடியை மட்டும் தள்ளினான் என்க. துண்டம் - மூக்கு; அலகு. கூவுதற்குக் கருவியாதல் கருதி, 'முழங்கு துண்டம்' எனச் சிறப்பித்தார். முடி பத்தாதலின் 'முடிப் பத்திகள்' என்றார். பத்தி - வரிசை. தேவர்கள் தமக்குப் பகைவனாய இராவணனுடைய கொடியை வீழ்த்திய காரணத்தால் சடாயுவை வாழ்த்தினார்கள் என்க. ஆசி - வாழ்த்து. இராவணன், இசைவல்லுநனாதலின் வீணையைக் கொடியாகக் கொண்டான். இராவணன் இசைவல்லான் என்பதை, "விசைதணிந்தரக்கன் வீழ்ந்து கைஞ்ஞரம் பெழுவிக் கொண்டு காதலால் இனிது சொன்ன கின்னரங் கேட்டுகந்தார் கெடில வீரட்டனாரே" (தேவாரம் - 4 - 28 - 10) என்பதால் அறியலாம். தன்னை அழிக்க நினைத்த இறைவனை வீணையொலியால் வரங்கொடுக்கச் செய்த இசைத் திறம் இராவணனுக்குண்டு. மேலும் 'இராவணனைக் கந்தருவத்தால் பிணித்து' (தொல் - பாயிரம்) என அகத்தியர் பெருமை கூற வந்த உரையாசிரியர் கூறுவதாலும் இராவணன் இசைத் திறன் இனிது விளங்கும். கொடியின் அழகும் நீட்சியும் புலப்படக் "காண்டகு நீண்ட கொடி" என்றார். வீணைக்கு அடையாக்கலும் ஆம். (107)

3524. அக்காலை யரக்க னரக்குருக்
கன்ன கண்ண
னெக்காலமு மின்னதொ ரீடழி
வுற்றி லாதா
னக்கா னுலகேழு நடுங்கிட
நாக மன்ன
கைக்கார் முகத்தோடு கடைப்புரு
வங்கு னித்தான்.

அக்காலை, அரக்கன், அரக்கு உருக்கு அன்ன கண்ணன்,
எக்காலமும், இன்னது ஓர் ஈடு அழிவுற்றிலாதான்
நக்கான், உலகு ஏழும் நடுங்கிட; நாகம் அன்ன
கைக் கார்முகத்தோடு கடைப் புருவம் குனித்தான்.

பொ :—(கொடி படியில் வீழ்ந்த) அப்பொழுது, இதற்கு முன் எக்காலத்தினும் இத்தகையதோர் பெருமையழிவை யடையாதவனாகிய இராவணன், அரக்கின் உருக்கைப் போன்று, சினத்தால் சிவந்த கண்ணையுடையவனாய், உலகம் ஏழும் நடுங்குமாறு சிரித்து

மலைபோன்ற கைவில்லையும் கண்ணின் கடைப்புருவத்தையும் வளைத்தான்.

கு :—கோபத்தால் சிவந்தகண்ணின் செந்நிறத்திற்கும் வெப்பத்திற்கும் உவமையாக வேண்டி அரக்குருக்கை உவமை கூறினர்; உருக்கிய அரக்கு அவ்விரண்டும் உடைமையால். ஈடழிவுற்றிலாதானகிய அரக்கன் எனவும், நடுங்கிட நக்கான் எனவும் மாற்றுக. நாகம் - மலை; பாம்பு எனலுமாம்; அவ்விரண்டும் வில்லுக்கு உவமையாகத்தக்கன. வில்லும் புருவமும் உடன் வளைந்தன என அவன் சினத்தையும் விரைவையும் புலப்படுத்தியவாறு. கார்முகத்தோடு கடைப்புருவம் குனித்தான் என்றது உடனிலையணி. நக்கானுய்க் குனித்தான் என முற்றெச்சமாக்கி முடிக்க. கார்முகம் - வில். (108)

3525. சண்டப் பிறைவா ளெயிற்றான்
சரதாரை மாரி
மண்டச் சிறகா லடித்தான்
சிலவள் ளுகீரால்
கண்டப் படுத்தான் சிலகாலனுங்
காண வுட்குந்
துண்டப் படையாற் சிலை துண்ட
துண்டங்கள் கண்டான்.

சண்டப் பிறை வாள் எயிற்றான் சர தாரை மாரி
மண்டச் சிறகால் அடித்தான் சில; வள் உகிரால்
கண்டப் படுத்தான் சில; காலனும் காண உட்கும்
துண்டப் படையால், சிலை துண்ட துண்டங்கள் கண்டான்.

பொ :—கொடிய, பிறைச் சந்திரனைப் போன்ற வளைந்த ஒளியுடைய பற்களையுடைய இராவணன் விட்ட அம்புகளாய தாரைகளையுடைய மழை நெருங்க, அவற்றில் சிலவற்றைச் சிறகுகளால் அடித்தான்; சிலவற்றைக் கூரிய நகங்களால் துண்டு துண்டாக்கினன்; எமனும் காண அஞ்சுகின்ற தன் அலகாகிய ஆயுதத்தால் அவன் வில்லைத் துண்ட துண்டங்கள் செய்தான்.

கு :—சண்டம் – கொடுமை; 'சண்ட மன்னனைத்தாடொழுது' (சீவக - 430) என்புழியும் அப்பொருளதாதல் காண்க; எயிற்றுக்கு அடை. தாரை - மழைக்கால். சரம் - அம்பு. மழைத்தாரைபோல அம்புகளை மிகுதியாக விட்டான் என்பது கருத்து. மண்டுதல்,

நெருங்குதல். உகிர் என்பது ஓசை நயத்திற்காக 'உகீர்' என நீட்டல் விகாரம் பெற்றது. இராவணன் விடுத்த அம்புகளைச் சடாயு தன் சிறகாலும், கால்நகங்களாலும், வீழ்த்தி மூக்கினால் வில்லைத் துண்டித்தான் என்பது கருத்து.' கண்டான் - செய்தான். மூக்கின் பெருமை தோன்றக் 'காலனும் காண உட்கும் துண்டப்படை' என்றார். பிறரை அஞ்சுவிக்கும் கூற்றுவனும் அஞ்சுதற்குக் காரண மான கொடுமையுடைய துண்டம் என்றவாறு. (109)

**3526.** மீட்டும் மணுகா நெடுவெங்க
ணநந்த நாகம்
வாட்டுங் கலுழ னெனவன்றலை
பத்தின் மீது
நீட்டுந் நெடுமூக் கெனுநேமியன்
சேம விற்கால்
கோட்டும் மளவின் மணிக்குண்டலங்
கொண்டெ ழுந்தான்.

மீட்டும் அணுகா, நெடு வெங்கண் அநந்த நாகம்
வாட்டும் கலுழன் என, வன் தலை பத்தின் மீதும்
நீட்டும் நெடு மூக்கு எனும் நேமியன், சேம வில் கால்
கோட்டும் அளவில், மணிக் குண்டலம் கொண்டு எழுந்தான்.

பொ :—நெடிய கொடிய கண்ணையுடைய அநந்தன் என்கின்ற நாகத்தை வருத்துகின்ற கருடனைப் போல இராவணனுடைய வலிய தலைகள் பத்தின்மேலும் செல்லுமாறு நீட்டுகின்ற நெடிய மூக்கு என்கின்ற சக்கரப்படையை யுடைய சடாயு, அவன் சேமவில்லின் தண்டினை வளைக்கும் அளவில் மீண்டும் அணுகி அவன் அணிந்த மணிகள் பதித்த குண்டலங்களைப் பறித்துக்கொண்டு கிளம்பினான்.

கு :—பத்துத்தலைகளையுடைய இராவணனுக்கு உவமையாக வேண்டிப் பலதலைகளையுடைய அநந்தன் என்னும் நாகத்தைக் கூறினார். அநந்தனாகிய நாகம் என்க. அநந்தன் அட்டநாகங் களில் ஒன்று. பலதலைகளையுடைய அநந்த நாகத்தை வாடச் செய்யும் கருடனைப் போலப் பத்துத்தலைகளையுடைய இராவணனை வாடுமாறு அவன்மேல் சடாயு, நீட்டிய மூக்கினனாய்ச் சென்றானாக, அச்சடாயுவைக் கொல்லச் சேமவில்லை இராவணன் வளைக்கும் போது அவன் காதிலிருந்த குண்டலங்களைப் பறித்துக் கொண்டு மேற் கிளம்பினான் என்க. நெடுவெங்கண், அநந்தனுக்கு அடை.

கலுழனுக்கு அடையாக்கலும் ஆம். கழுகின் மூக்கு வளைந்திருத்தல் பற்றிச் சக்கரப்படையாக உருவகஞ் செய்தார். நேமியனும் மீட்டும் அணுகிக் குண்டலங் கொண்டெழுந்தான் என இயையும். முன்னொருகால் அணுகி வில்லை யொடித்தான் ஆகலின், 'மீட்டும் அணுகா' என்றார். "துண்டப்படையால் சிலை துண்ட துண்டங்கள் கண்டான்" என மேல் கை வில்லை முறித்தமை கூறினாராதலின், இங்குச் சடாயுவைக் கொல்லச் சேமவில் எடுத்து வளைத்தமை கூறினர். சேமவில் - இருப்பாக வைத்துள்ள வில். (110)

3527. எழுந்தான் றடமார்பினி லேழிநெ
டேழு வாளி
யழுந்தாது கழன்றிடப் பெய்தெடுத்
தார்த்த ரக்கன்
பொழிந்தான் புகர்வாளிகண் மீளவும்
போர்ச்ச டாயு
விழுந்தானென வஞ்சினர் விண்ணவர்
வெய்து யிர்த்தார்.

எழுந்தான் தட மார்பினில், ஏழிநெடு ஏழு வாளி
அழுந்தாது கழன்றிடப் பெய்து, எடுத்து ஆர்த்து, அரக்கன்
பொழிந்தான், புகர் வாளிகள் மீளவும்; 'போர்ச் சடாயு
விழுந்தான்' என, அஞ்சினர், விண்ணவர் வெய்துயிர்த்தார்.

பொ :—(அவ்வாறு தன் குண்டலங்களைக் கொண்டு) எழுந்த சடாயுவின் மார்பினில் பதினான்கு அம்புகளைப் பெய்து, அவை அவன் மார்பில் அழுந்தமாட்டாமல் கழன்று விழுந்தமையால், இராவணன் (வெகுண்டு) மிக்க ஆரவாரம் செய்து, மிகவும் ஒளியுடைய சிறந்த பல அம்புகளை அவன் மார்பில் பொழிந்தான்; அது கண்ட தேவர்கள், "போர் செய்த சடாயு விழுந்துவிட்டான்" என்று அஞ்சினராய் வெப்பமாகப் பெருமூச்சுவிட்டார்கள்.

கு :—வாளி பெய்து, கழன்றிடலால் அரக்கன் எடுத்து ஆர்த்து மீளவும் வாளிகள் பொழிந்தான் என இயையும். சடாயுவின் மார்பைத் துளைக்கும் வன்மை அவ்வாளிகளுக்கு இன்மையின் அழுந்தாது கழன்றன. எடுத்தார்த்தல் - மிகுதியாக ஆரவாரித்தல். புகர் - ஒளி. முன் விட்ட அம்புகளினும் ஆற்றல் மிக்க அம்புகள் என்பார், புகர்வாளிகள் என்றார். பொழிந்தான் என்ற வினையால் அம்புகளின் மிகுதியை உணர்த்தியவாறு. யாரும் எதிர்க்க இயலாத

இராவணனை எதிர்த்துப் போர்செய்தமை கருதிப் 'போர்ச் சடாயு' என்றார். இராவணன் விட்ட அம்புகளின் வேகத்தைக் கண்ட அளவிலேயே தேவர்கள் துணிவுபற்றி, 'சடாயு விழுந்தான்' என்று எண்ணினர்; காலவழுவமைதி. இராமனுக்குச் சார்பாய் நின்று இராவணனோடு போர் செய்த சடாயு விழுகின்றானே என்ற வருத்தத்தால் தேவர், அஞ்சினர் ; வெய்துயிர்த்தனர் என்க. (111)

**3528.** புண்ணிற் புதுநீர் பொழியப்பொலி
புள்ளின் வேந்தன்
மண்ணிற் கரனேமுத லோருதி
ரத்தின் வாரி
கண்ணிக் கடலென்று நுகர்ந்தது
கான்று மீள
விண்ணிற் பொலிகின்றதொர் வெண்ணிற
மேக மொத்தான்.

புண்ணில் புது நீர் பொழியப் பொலி புள்ளின் வேந்தன்,
மண்ணில், கரனே முதலோர் உதிரத்தின் வாரி
கண்ணிக் கடல் என்று நுகர்ந்தது கான்று, மீள
விண்ணில் பொலிகின்றது ஓர் வெண் நிற மேகம் ஒத்தான்.

பொ :--(இராவணன் எய்த அம்புபட்ட) புண்ணிலிருந்து புதிய குருதிநீர் பொழியாநிற்க விளங்குகின்ற கழுகின் வேந்தனாகிய சடாயு, தரையில் கரன் முதலிய அரக்கரின் (உடம்புகள் சொரிந்த) இரத்தவெள்ளத்தைக் கடல் என்று கருதி உட்கொண்டு (பின் உதிரம் என்று உணர்ந்து) அக்குருதியை மீண்டும் தரையில் விடுமாறு கக்கிக்கொண்டு விண்ணில் விளங்குகின்றதாகிய ஒரு வெண்ணிற மேகத்தைப் போலத் தோற்றமளித்தான்.

கு :—சடாயு உடம்பிலிருந்து பெருகிய குருதி வெள்ளத்தின் மிகுதியைப் புலப்படுத்தியவாறு. கதையோடு தொடர்பு தோன்றுமாறு கரன் முதலோரின் உதிரம் உண்ட மேகம் கூறினார். கரன் முதலோரின் உதிரவாரியைக் கடல் என்று கருதி நுகர்ந்து, பின் உண்டது அரக்கரின் குருதி என்பது உணர்ந்து வெறுத்து உமிழ்கின்ற வெண்ணிற மேகம் போலச் சடாயு புண்ணில் குருதி சோர விண்ணில் விளங்கினான் என்க. தற்குறிப்பேற்ற உவமையணி. உதிரத்தின்வாரி கடலென்று கண்ணி நுகர்ந்து அது மீளக் கான்று என இயையும். கண்ணி - கருதி. புதுநீர் என்றது

குருதிநீரை. இதுகாறும் யார்படையாலும் வெளிப்படாது இன்று வெளிப்பட்டமை தோன்றப் புதுநீர் என்ருர். விண்ணிற்பொலி வெண்ணிறமேகம் சடாயுவின் நிறத்திற்கும் விண்ணில் திரிதற்கும் ஏற்ற உவமையாதலின் அதைக் கூறுகின்றவர், அச்சடாயுவின் உடம்பில் குருதிநீர் சொரிதற்கும் அம்மேகத்தையே உவமை கூற வேண்டிக் கரன் முதலோரின் உதிரவாரியை அறியாது கடலென்று மயங்கியுண்டமேகம் அக்குருதியை யுமிழ்ந்த நிலையைக் கற்பித்துக்கொண்டார். (112)

**3529.** ஒத்தா னுடனே யுயிர்த்தா
னுருத்தா னவன்ருேள்
பத்தோடு பத்தி னெடும்பத்தியிற்
றத்தி மூக்காற்
கொத்தா நகத்தாற் குடையாச்
சிறையாற் புடையா
முத்தார மார்பிற் கவசத்தையு
மூட்ட றுத்தான்.

ஒத்தான் உடனே உயிர்த்தான்; உருத்தான்; அவன் தோள்
பத்தோடு பத்தின் நெடும் பத்தியில் தத்தி, மூக்கால்
கொத்தா, நகத்தால் குடையா, சிறையால் புடையா,
முத்து ஆர மார்பில் கவசத்தையும் மூட்டு அறுத்தான்.

பொ:—அவ்வாறு குருதிகாலும் வெண்ணிற மேகம் ஒத்தவனுகிய சடாயு, உடனே உயிர்ப்பு உடையவனுனன்; பின் கோபித்தவனுய், அவ்விராவணனுடைய இருபது தோள்களின் நெடிய வரிசையில் குதித்துச் சென்று மூக்கினுல் கொத்தியும், நகத்தால் குடைந்தும், சிறகுகளினுல் அடித்தும் முத்துமாலை யணிந்த மார்பில் அணிந்த கவசத்தையும் பொருத்துவாய் அறுமாறு செய்தான்.

கு:—மழைபோலக் குருதி சோர மூச்சற்று நின்றவன் அப்படியே சோர்ந்து விடாமல் உடனே உயிர்ப்புடையனுனன் என்க. உயிர்த்தான் என்றமையால் முன் உயிர்ப்படங்கி நின்றமை பெறலாம். உருத்தல் – கோபித்தல். பத்தோடு சேர்ந்த பத்து, இருபது. பத்தி – வரிசை. இருபது தோள்களின் வரிசையாதலின் நெடும் பத்தி என்ருர். தத்தி - குதித்து. இராவணன் மார்பிலணிந்த கவசம் மிக்க உறுதியுடையதாதலின், சடாயு தன் மூக்கால் கொத்தியும் நகத்தால் குடைந்தும், சிறகுகளால் அடித்தும் அதை மூட்டறுக்க

வேண்டியதாயிற்று. மூட்டு - பொருத்துவாய்; மார்பையும் கவசத்தையும் பொருந்தச் செய்து பூட்டிய இடம். (113)

3530. அறுத்தானை யரக்கனு மைம்பதொ
டைம்ப தம்பு
செறித்தான் றடமார்பிற் செறித்தலுந்
தேவ ரஞ்சி
வெறித்தார் வெறியாமு னிராவணன்
வில்லைப் பல்லாற்
பறித்தான் பறவைக்கிறை விண்ணவர்
பண்ணை யார்ப்ப.

அறுத்தானை, அரக்கனும் ஐம்பதொடு ஐம்பது அம்பு
செறித்தான் தட மார்பில்; செறித்தலும், தேவர் அஞ்சி
வெறித்தார்; வெறியாமுன், இராவணன் வில்லைப் பல்லால்
பறித்தான் பறவைக்கு இறை, விண்ணவர் பண்ணை ஆர்ப்ப.

பொ:—அவ்வாறு அறுத்த சடாயுவை இராவணனும் நூறு அம்புகளை அகன்ற மார்பில் அழுத்தினன்; அவன் அழுத்திய அளவில், தேவர்கள் பயந்து திகைத்தார்கள்; அவர்கள் திகைப்பதற்கு முன்னே இராவணனுடைய வில்லைக் கழுகின் வேந்தனாகிய சடாயு தன் பல்லால் கடித்து அத்தேவர் கூட்டம் மகிழ்ந்து ஆரவாரிக்குமாறு பறித்தான்.

கு:—அறுத்தானை......மார்பில் என்பது, "முதலையையுறிற் சினையைக் கண்ணுறும்" (நன்னூல் - 314) என்ற விதியான் வந்தது. அறுத்தானது மார்பில் என உருபு மயக்கமாக்கலும் ஆம். செறித்தல் - அழுத்துதல். தம் துயர் தீர்க்க வந்த இராமனுக்குத் துணையாய்ப் போர் செயும் சடாயுவுக்குத் துன்பமுண்டாகுங்கால் வருந்துதலும், தம் பகைவனாகிய இராவணனுக்குத் துன்பம் வருங்கால் மகிழ்தலும் தேவர்க்கு இயல்பு. வெறித்தல் - திகைத்தல். பண்ணை - கூட்டம். (114)

3531. எல்லிட்ட வெள்ளிக் கயிலைப்பொருப்
பீச னோடு
மல்லிட்ட தோளா லெடுத்தான்சிலை
வாயின் வாங்கி

வில்லிட் டுயர்ந்த நெடுமேக
மெனப்பொ லிந்தான்
சொல்லிட் டவன்றேள் வலியாருளர்
சொல்ல வல்லார்.

எல் இட்ட வெள்ளிக் கயிலைப் பொருப்பு, ஈசனோடும்,
மல் இட்ட தோளால் எடுத்தான் சிலை வாயின் வாங்கி,
வில் இட்டு உயர்ந்த நெடு மேகம் எனப் பொலிந்தான்
சொல் இட்டு அவன் தோள் வலி, யார் உளர், சொல்ல வல்லார்?

பொ :—ஒளி பொருந்திய வெள்ளியாலாய கயிலாய மலையை, அதில் தங்கியிருக்கும் சிவனோடும் வலிமை பொருந்திய தோளால் தூக்கிய இராவணனது வில்லைச் சடாயு தன் வாயில் பறித்து வைத்துக்கொண்டு, இந்திரவில்லைக் கோலிக்கொண்டு உயர்ந்த நெடிய மேகம் போலத் தோற்றமளித்தான் ; அச்சடாயுவின் தோள் வலியைச் சொற்களைக்கொண்டு விரித்துச் சொல்ல வல்லவர்கள் யாருளர் ? யாருமிலர்.

கு :—வாயில் வில்லைத் தாங்கி விண்ணில் நிற்கும் சடாயுவின் தோற்றம், இந்திர வில்லோடு தோன்றும் மேகத்தைப் போலிருந்தது. முன் குருதி சோரும் நிலைக்கு, 'வெண்ணிற மேகமொத்தான்' (112) என உவமை கூறியிருத்தலும் காண்க. திரிபுரமெரித்த விரிசடைக் கடவுளோடு வெள்ளிமலையை யள்ளியெடுத்த ஆற்றலுடையவனது கைவில்லைப் பறித்த சடாயுவின் ஆற்றல் சொல்லில் அடங்காப் பெருமையது ஆதலின், "அவன் தோள்வலி யாருளர் சொல்லவல்லார்?" என்றார். சடாயுவுக்குத் தோள் ஆவது சிறகு. மல்-வலிமை. மற்போர்ப் பயிற்சியுடைய தோள் எனலும் ஆம். (115)

3532. மீளா நிறத்தாயிரங் கண்ணவன்
விண்ணி னோடை
வாளா லொறுத்தான் சிலைவாயிடை
நின்றும் வாங்கித்
தாளா லிறுத்தான் றழல்வண்ணன்
றடக்கை வில்லைத்
தோளா லிறுத்தான் றுணைத்தாதைத
னன்பிற் றேழன்.

மீளா நிறத்து ஆயிரம் கண்ணவன் விண்ணின் ஓட,
வாளால் ஒறுத்தான் சிலை வாயிடை நின்றும் வாங்கித்
தாளால் இறுத்தான்; தழல் வண்ணன் தடக்கை வில்லைத்
தோளால் இறுத்தான் துணைத் தாதைதன் அன்பின் தோழன்.

பொ :—தீயைப்போன்ற செம்மேனியனாகிய சிவபிரானின் பெரிய கையிலிருந்த திரியம்பகம் என்னும் வில்லைத் தன் தோள் வலிமையால் ஒடித்தவனாகிய இராமனுக்குத் துணையாய் நின்ற தந்தையின் அன்புசால் தோழனாகிய சடாயு, பின்னிடாத மார்பையுடைய இந்திரன் விண்ணில் அஞ்சி ஓடுமாறு வாளால் வருத்தினவனான இராவணன்வில்லை வாயில் நின்றும் எடுத்துத் தன் கால்களால் ஒடித்தான்.

கு :—நிறம் - மார்பு. மீளா நிறம் என்றது, போரில் பின்னிடாமையைப் புலப்படுத்தியது. ஆயிரங் கண்ணவன் - இந்திரன். மீளா நிறத்தவன் மீண்டோடுமாறு செய்தவன் இராவணன் என அவன் ஆற்றலைப் புகழ்ந்தவாறு. ஆற்றல்சான்ற இராவணன் வில்லை ஒடித்தற்கேற்ற தகுதி சடாயுவுக்கு உண்டு என்பது புலப்பட வேண்டி, தழல்வண்ணன் தடக்கை வில்லைத் தோளால் இறுத்தான் தாதைதன் அன்பிற்றோழன் என அவனைக் குறிப்பிட்டார். சிவன் வில்லைத் தோளால் ஒடித்த இராமன் தாதைக்குத் தோழனாகிய சடாயு, அச்சிவன் கால்விரலால் அழுத்த, அழுத இராவணன் வில்லைத் தாளால் இறுத்தல் சொல்லவேண்டுமோ? என்றவாறு. அவ்விராவணனை இழிவுபடுத்தவே அவன் வில்லைத் தாளால் இறுத்தான் என்க. முன் வாயால் பறித்த வில்லாகலின் 'வாயிடை நின்றும் வாங்கி' என்றான். தழல்வண்ணன் - சிவபிரான். 'எரி போல் மேனிப்பிரான்' 'தீவண்ணன்' என அப்பர் புகழ்தல் காணலாம். கைகேயி பரதனுக்குத் துணையாய் நிற்கத் தயரதன் இராமனுக்குத் துணையாய் நின்று பேசி, அவன் பிரிவால் வருந்தி உயிர் விட்ட சிறப்புடையவனாதல் கருதித் 'துணைத்தாதை' எனப்பட்டான். அன்பிற்றோழன், தாளால் இறுத்தான் என்றியையும். (116)

3533. ஞாலம் படுப்பான்றன தாற்றலுக்
கேற்ற நல்வின்
மூலம் மொடிப்புண்டது கண்டு
முனிந்த நெஞ்ச

ஞலம் மிடற்ருன்புர மட்டதொ
ரம்பு போலுஞ்
சூலம் மெடுத்தானெறித் தான்மறந்
தோற்றி லாதான்.

ஞாலம் படுப்பான் தனது ஆற்றலுக்கு ஏற்ற நல் வில்
மூலம் ஒடிப்புண்டது கண்டு, முனிந்த நெஞ்சன்,
ஆலம் மிடற்ருன் புரம் அட்டது ஓர் அம்பு போலும்
சூலம் எடுத்தான் எறிந்தான், மறம் தோற்றிலாதான்.

பொ:—உலகத்தை அழிக்கவல்ல கூற்றுவன் ஆற்றலுக்கு ஈடான ஆற்றலேயுடைய நல்ல வில்லின் மூலமாகிய தண்டு ஒடிதலுற்றதைக் கண்டு வீரத்திற்குத் தோல்வியுருத இராவணன், வெகுண்ட நெஞ்சமுடையனுய் நஞ்சினேயுண்ட கண்டத்தையுடைய சிவன் திரிபுரத்தை அழித்த ஒப்பற்ற அம்பைப்போன்ற சூலத்தை எடுத்துச் சடாயுமேல் எறிந்தான்.

கு:—படுத்தல் - அழித்தல். ஞாலத்தை அழிக்கும் ஆற்றல் கூற்றுவனுக்கே யுண்மையின் அவன் ஆற்றலுக்கு ஈடான வில் என இராவணன் வில்லின் அருமையைச் சிறப்பித்தவாறு. ஞாலம் படுப்பான் எமன். ஆற்றலுக்கேற்ற வில் என்பதற்குக் கூற்றுவன் ஆற்றலுக்குத் தக அவன் கையில் தங்குதற்குரிய வில் எனலுமாம். வில் என்பது மூங்கிற் பகுதியும் நாணும் சேர்ந்ததேயாதலின் ஒடிதற்குத் தக்க மூங்கில் தண்டு ஒடிந்தது என்பார், நல்வில் மூலம் ஒடிப்புண்டது என்ருர். மறந் தோற்றிலாதான், முனிந்த நெஞ்சனய், எடுத்தான், எறிந்தான் என இயையும். மூலம், ஆலம், சூலம் என்புழி ஓசை நோக்கி மகரம் விரித்தல் விகாரம் பெற்றது. நெஞ்சன், எடுத்தான் என்பன முற்றெச்சம். வில் ஒடிந்தமையால் சூலத்தை எடுத்தெறிந்தான். (117)

**3534.** ஆற்ரு னிவனென் றுணராதென
தாற்றல் காணென்
றேற்ரு னெருவைக்கிறை முத்தலே
யெஃக மார்பின்
மேற்ரு னிதுசெய்பவர் யாரென
விண்ணு ளோர்க
டோற்ருது நின்ருர்தம தோள்புடை
கொட்டி யார்த்தார்.

"ஆற்ருன் இவன் என்று உணராது, எனது
ஆற்றல் காண்" என்று
ஏற்ருன், எருவைக்கு இறை முத்தலை
எஃகம் மார்பின்;
"மேல்தான் இது செய்பவர் யார்?" என,
விண்ணு ளோர்கள்
தோற்ருது நின்ருர், தம தோள் புடை
கொட்டி ஆர்த்தார்.

பொ :—"இச்சூலத்திற்கு ஆற்றமாட்டான் இவன் என்று நினையாமல் என் வலிமையைக் காண்பாயாக" என்று கூறிக்கொண்டு கழுகின் வேந்தனுகிய சடாயு மூன்று தலைகளையுடைய சூலத்தைத் தன் மார்பில் தாங்கினுன்; (அதுகண்ட) தம்முருவம் புலப்படாமல் நின்றவர்களாகிய தேவர்கள், "இனிமேல் இத்தகைய பெரிய செயலைச் செய்பவர் யாருளர்?" என்று கூறிக்கொண்டு தம்முடைய தோள்மேல் தட்டி ஆரவாரித்தார்கள்.

கு :—உணர்தல்-நினைதல். இராவணன் சூலத்தின் ஆற்றலையே நினைந்து இவன் ஆற்ருது இறப்பான் என்று தன்னை எள்ளி நோக்கும் இயல் கண்டு இங்ஙனம் கூறி, அச்சூலத்தை மார்பில் ஏற்ருன் சடாயு. மேல்தான் இது செய்பவர் யார்? என்ற வினுவால் முன்னும் இது செய்தவர் இலர் என்பதும் கூறியவாருயிற்று. பகைவன் எய்யும் படையைத் தடுத்தலோ அல்லது அதினின்றும் தப்புதலோ செய்தல் இயல்பாகவும், சடாயு அங்ஙனம் செய்யாது அவ்விராவணன் விட்ட சூலாயுதத்தை மார்பில் ஏற்றுக்கொண்ட அருஞ் செயல் கண்டு தேவர்கள் இவ்வாறு வினவி வியந்தார்கள். பிறர் காணலாகாது என்று உருவு கரந்து தோற்ருது நின்ற தேவர்கள், வியப்பால் அந்நிலைமை மறந்து பிறர் கேட்குமாறு தம் தோள் தட்டி ஆரவாரித்தார்கள் என்க. இதனுல் தேவரின் வியப்பு மிகுதி விளக்கியவாறு. (118)

3535. பொன்னேக்கியர் தம்புல னேக்கிய
புன்க ணேரு
மின்னேக்கிய ரில்வழி யெய்திய
நல்வி ருந்துந்

தன்னேக்கிய நெஞ்சுடை யோகியர்
தம்மைச் சார்ந்த
மென்னெக்கியர் நோக்கமு மாமென
மீண்ட தவ்வேல்.

பொன் நோக்கியர் தம் புலன்
நோக்கிய புன்க ணேரும்,
இன் நோக்கியர் இல்வழி
எய்திய நல் விருந்தும்,
தன் நோக்கிய நெஞ்சுடை
யோகியர் தம்மைச் சார்ந்த
மென் நோக்கியர் நோக்கமும்,
ஆம் என மீண்டது, அவ்வேல்.

பொ :—பொருளேயே நோக்கி அன்பு செலுத்துகின்ற பொருட் பெண்டிரிடத்து ஐம்புல இன்பத்தைத் துய்க்கக் கருதிச் சென்ற வறியவரும், இனிய பார்வையுடைய கணவன் மனேவியர் இல்லாத (முகந்திரிந்து நோக்குவோர் உள்ள) வீட்டிற்குச் சென்ற நல்ல விருந்தினரும், இறைவனேயே நோக்கிய உள்ளத்தையுடைய யோகியரைச் சார்ந்த மெல்லிய நோக்கமுடைய பெண்டிரின் காதல் நோக்கமும் உவமையாம் என்று சொல்லுமாறு அச்சூல வேல் சடாயுவின் மார்பில் நுழையும் வலிமையின்றித் திரும்பியது.

கு :—பொன்னேக்கியர் - விலே மாதர். "அன்பின்விழையார் பொருள் விழையும் ஆய்தொடியார்" (குறள் - 911) என்பர் வள்ளுவர். "மாயப் பொய்பல கூட்டிக் கவவுக் கரந்து, சேயரும் நணியரும் நலனயந்து வந்த, இளம் பல் செல்வர் வளந்தப வாங்கி, நுண்டா துண்டு வறும்பூத் துறக்கும், மென்சிறை வண்டின மானப் புணர்ந்தோர், நெஞ்சேமாப்ப இன் துயில் துறந்து" (மதுரைக்காஞ்சி - 570 - 575) என இப் பொருட்பெண்டிர் இயல்பை மாங்குடி மருதனர் உவமை காட்டிவிளக்குவர். புலன் என்றது, அவர்பால் கண்டுங் கேட்டும் உண்டும் உயிர்த்தும் உற்றும் பெறும் ஐம்புல இன்பத்தை. விலே மாதரின் இன்பத்தை விரும்பிச் சென்ற வறியவர், பொருள் இல்லாத காரணத்தால் அவ்வின்பம் பெருது திரும்பிவருதல் போலச் சடாயுவின் மார்பு நோக்கிச் சென்ற சூலவேல், அம்மார்பில் நுழையும் ஆற்றல் இல்லாமையால் திரும்பி யது. புண்கணேர் - பொலிவிழந்த கண்ணேயுடையோர்; வறுமை யுடைய காரணத்தால் பொலிவிழந்த கண்ணேயுடையவர் ஆவர் ஆதலின் காரிய ஆகுபெயராய் வறியவர் என்னும் பொருளே

யுணர்த்தியது. 'முகந்திரிந்து நோக்கக் குழையும் விருந்து' (குறள்-90) ஆகலின் இனிய நோக்கியர் இல்லாத - இன்ன நோக்கமுடையவர் உள்ள வீட்டிற்குச் சென்ற நல்விருந்தினர் அவ்வீட்டிற்குள் செல்லாது திரும்புதல் போலச் சடாயுவின் மார்பில் நுழையாது திரும்பியது வேல். அல்விருந்தினராயின் இல்லவர் இன்னேக்கம் பாராது உணவினையே நோக்கி நுழைவர் ஆதலின் அவரை விலக்க, 'நல் விருந்தும்' என்ருர். தன் என்றது இறைவனை. "தம்மையுணர்ந்து தமையுடைய தன்னுணர்வார்" (சிவஞானபோதம் அவையடக்கம்) என்புழியும் தன் அப்பொருளதாதல் காண்க. காதற் குறிப்பினராயின், "நோக்கிய நோக்கெனும் நுதிகொள் வேலிணை ஆக்கிய மதுகையான் தோளினுழ்ந்தன" (599) என்று முன் கூறியது போல ஆடவரின் தோளில் ஆழத்தக்க இளம்பெண்டிரின் நோக்கு இறைவனையே நோக்கி இவ்வுலகை நோக்காத யோகியர்பால் செல்லின் அவர்பால் நுழையும் ஆற்றலின்றி வறிதே மீளுதல் போல, இராவணன் வேல் சடாயுவின்மார்பில் நுழையும் ஆற்றலின்றி மீண்டது என்க. புன்கண்ணேரும் விருந்தும் நோக்கமும் ஆம் என என்புழி உம்மை எண்ணுப்பொருளன. ஆம் என என்ற இரண்டும் மீமிசைச் சொல்லாய் உவம உருபாயின எனலும் ஆம். மீண்டது என்றது, சுவரில் மோதிய பந்துபோல வேல் தெறித்து வீழ்ந்ததையுணர்த்திற்று. (119)

3536. வேகம்முடன் வேலிழந் தான்படை
வேறெ டாமுன்
மாகம் மறையும்படி நீண்ட
வயங்கு மான்றேர்ப்
பாகன் றலையைப் பறித்துப்
படர்கற்பி னுள்பான்
மோகம் படைத்தா னுளைவெய்த
முகத்தெ றிந்தான்.

வேகம் முடன், வேல் இழந்தான்
படை வேறு எடாமுன்,
மாகம் மறையும் படி நீண்ட
வயங்கு மான் தேர்ப்
பாகன் தலையைப் பறித்துப்
படர் கற்பினுள் பால்
மோகம் படைத்தான் உளைவு
எய்த, முகத்து எறிந்தான்.

பொ :—இவ்வாறு சூலவேலைப் பயன் பெருது இழந்தவனுகிய இராவணன், வேறு படையை எடுப்பதற்கு முன், ஆகாயம் நிறையும்படி உயர்ந்துள்ள விளக்கமான குதிரைகள் பூட்டப் பெற்ற தேரைச் செலுத்தும்பாகன் தலையை வேகமுடன் பறித்து அத்தலையை, மிக்க கற்புடையவளாகிய சீதையிடத்து மோகம் கொண்ட இராவணன் மிகவும் வருந்துமாறு அவன் முகத்தில் எறிந்தான்.

கு :—வேகமுடன்...பறித்து முகத்தெறித்தான் என இயையும். வேகமுடன் எடாமுன் என்று இயைப்பாரு முளர். மாகம் – ஆகாயம். தேரின் 'உயர்ச்சியும் பருமையும் புலப்பட 'மாகம் மறையும்படி நீண்ட தேர்' என்ருர். மான் இங்குக் குதிரையை யுணர்த்தியது. படர்தல் நினைதல் எனக் கொண்டு மதிக்கும் கற் பினுள் எனக் கருத்துப் பொருள் கொள்ளுதலும் ஆம். கற்பினுள் பால் மோகம்படைத்த குற்றத்திற்குத் தண்டனையாக இராவணன் உளைவெய்த அவன் முகத்தில் பாகன் தலையை எறிந்தான் என்க. மோகம் படைத்தல் - ஆசையுண்டாக்கிக் கொள்ளுதல் ; இராவணன் சீதையின்பால் ஆசையைத் தானே யுண்டாக்கிக் கொண்டானே யன்றி இயல்பான காதல் தோன்றவில்லை என்பது இதனுல் புலப்படுத்தியவாறு. உளைவு - பெருந்துன்பம். (120)

3537. எறிந்தான் றனைநோக்கி யிராவண
னெஞ்சி னுற்ற
லறிந்தான் முனிந்தாண்டதொ ராடகத்
தண்டு வாங்கிப்
பொறிந்தாங் கெரியின்சிகை பொங்கி
யெழப்பு டைத்தான்
மறிந்தா னெருவைக்கிறை மால்வரை
போல மண்மேல்.

எறிந்தான் தனை நோக்கி,
இராவணன், நெஞ்சின் ஆற்றல்
அறிந்தான்; முனிந்து, ஆண்டது ஓர்
ஆடகத் தண்டு வாங்கி,
பொறிந்தாங்கு எரியின் சிகை
பொங்கி எழப் புடைத்தான்;
மறிந்தான் எருவைக்கு இறை,
மால்வரை போல மண்மேல்.

பொ:—தன்னை முகத்து எறிந்த சடாயுவை நோக்கி இராவணன், அவன் மார்பின் வலிமையை அறிந்தவனாய்க் கோபித்துத் தான் முன் போர்களில் கையாண்ட பொன்மயமான ஒரு தண்டாயுதத்தை எடுத்து, அவ்விடத்துப் பொறிகளை எழுப்பிக்கொண்டு நெருப்பின் கொழுந்து பொங்கி எழுமாறு அடித்தான்; கழுகின் வேந்தனாகிய சடாயு பெரிய மலையைப்போல் மண்மேல்விழச் சாய்ந்தான்.

கு:—இராவணன், நோக்கி, அறிந்தானாய், முனிந்து, தண்டு வாங்கிப் புடைத்தான் என இயையும். பாகன் தலையைப் பறித்துத் தன்முகத்திலும் சடாயு எறிந்தமையால் அவன் நெஞ்சுரம் எத்தகையது என்பதை அறிந்து கொண்டு அவன் ஆற்றலுக்கேற்ற ஆடகத்தண்டு கொண்டு அடித்தான் இராவணன் என்க. எறிந்தான்றனை நோக்கிப் புடைத்தான் என்க. அடியின் வேகத்தைப் புலப்படுத்த 'எரியின் சிகை பொங்கியெழப் புடைத்தான்' என்றார். அடிபட்டுத் தரையில் விழுங்கால் மேல் கீழாய் மறிந்து வீழ்தல் இயல்பாதலின் 'மறிந்தான்' என்றார். பின், 'மண்மேல் விழுந்தான்' என்பர். சடாயு உடம்பின் பெருமை தோன்ற மால்வரை போல வீழ்ந்தான் என உவமை கூறினார். "மந்தர மலையென வயங்கு வான்றனை" (சடாயு காண் - 3) என்று முன் உவமை கூறியதும் நினைக்க. மறிந்தான் - சாய்ந்தான். (121)

3538. மண்மேல் விழுந்தான் விழலோடும்
வயங்கு மான்றேர்க்
கண்மே லொளியுந் தொடராவகை
தான்க டாவி
விண்மே லெழுந்தா னெழமெல்லிய
லாளும் வெந்தீப்
புண்மே னுழையத் துடிக்கின்றனள்
போற்பு ரண்டாள்.

மண்மேல் விழுந்தான்; விழலோடும்,
வயங்கு மான் தேர்க்
கண்மேல் ஒளியும் தொடராவகை,
தான் கடாவி

விண்மேல் எழுந்தான்; எழ,
மெல்லியலாளும், வெந்தீப்
புண்மேல் நுழையத் துடிக்கின்றனள்
போல், புரண்டாள்.

பொ :—(சாய்ந்த சடாயு) மண்மேல் விழுந்தான்; விழுந்தவுடன், இராவணன், விளக்கமுடைய குதிரைகள் பூட்டியதேரைத் தானே செலுத்திக்கொண்டு, கண்ணின் பார்வையும் பின்பற்ற முடியாதபடி விண்ணின் மேல் கிளம்பினான்; கிளம்பியவுடன் மெல்லியளாகிய சீதையும், புண்ணில் வெம்மைமிக்க தீ நுழைதலால் துடிக்கின்றவளைப் போலத் தரையில் விழுந்து புரண்டாள்.

கு :—மான்றேரைத் தான் கடாவிக் கண்மேல் ஒளியுந் தொடராவகை விண்மேல் எழுந்தான் என இயையும். பாகன் சடாயுவால் கொல்லப்பட்டமையின், இராவணனே தேரைக்கடாவ நேர்ந்தது. கண்மேலொளி என்றது கட்பார்வையை. விண்ணில் உயர்ந்து சென்று விட்டால் சடாயுவின் கண்பார்வைக்கு எட்டாமல் போய்விடலாம் என்ற கருத்தால் விண்ணில் மேல்நோக்கி எழுந்தான் என்க. ஒளியும் என்புழி உம்மை உயர்வு சிறப்பு. நெடுந்தொலைவு சென்று பற்றும் கண்ணொளியே தொடரமுடியாத உயரத்தில் சடாயு தொடர இயலாது என்பது கருத்து. புண்மேல் வெந் தீ நுழைய என்க. "புண்ணிலாம் பெரும்புழையில் கனல் நுழைந்தாலென" (பால, – 328) என முன் உவமை கூறியதும் காண்க. இராவணன் தன்னை எடுத்துச் செல்லுதல் சீதையின் உடம்பில் பட்ட புண்ணாகவும் தன்னைக் காக்க வந்த சடாயு விழுந்தது, அப்புண்ணில் நுழையும் வெந்தீயாகவும் கொள்ளலாம். துன்பத்திற்குமேல் துன்பம் அடுக்கிவருவதற்கு இவ்வுவமை காட்டியவாறு. துன்பம் பொறுக்கலாகாத அவள் இயல்பு புலப்பட மெல்லியலாள் என்றார். (122)

3539. கொழுந்தே யனையாள் குழைந்தேங்கிய
கொள்கை கண்டா
னழுந்தே லவலத்திடை யஞ்சலை
யன்னை யென்னா
வெழுந்தா னுயிர்த்தா னடவெங்கினிப்
போவ தென்னா
விழுந்தா னவன்றேர்மிசை விண்ணவர்
பண்ணை யார்ப்ப.

கொழுந்தே அனையாள் குழைந்து ஏங்கிய
கொள்கை கண்டான்;
"அழுந்தேல் அவலத்திடை; அஞ்சலை
அன்னை!" என்ரு
எழுந்தான், உயிர்த்தான்; "அட! எங்கு இனிப்
போவது!" என்ரு,
விழுந்தான் அவன் தேர்மிசை விண்ணவர்
பண்ணை ஆர்ப்ப.

பொ:—இளந்தளிர் போன்ற மென்மையுடைய சீதை, மனங் குழம்பி வருந்திய தன்மையைச் சடாயு பார்த்தான்; "அன்னையே துன்பவெள்ளத்தில் அழுந்தாதே; (யான் இறந்துவிட்டேன் என்று) அஞ்சாதே" என்று சொல்லிக் கொண்டு எழுந்தான்; துன்பத்தால் பெருமூச்சு விட்டுக்கொண்டு, "அடா! இனி நீ போவது எங்கு?" என்று அதட்டிக்கொண்டு சென்று, தேவர் கூட்டம் கண்டு மகிழ்ந்து ஆரவாரிக்க அவ்விராவணன் தேர்மேல் பாய்ந்தான்.

கு:—அன்பு பற்றி மருகி முறையினளாகிய சீதையை, அன்னை! என்று விளித்தான். கொள்கை என்பது இங்குத் தன்மையை யுணர்த்தியது. அழுந்தேல் என்ற வினையால் அவலமாகிய வெள்ளத்தில் என்ற குறிப்புருவகம் உய்த்துணரலாம். தன்னைக் காக்க வந்த சடாயு இறந்து விட்டதாக எண்ணியே சீதை துடித்தாள் ஆதலின், அஞ்சலை என்புழி வேண்டும் சொற்கள் இசையெச்சமாக வருவிக்கப் பட்டன. அட என்றது, இழிந்தாரை விளிக்கும் சொல். முன்னும் அவ்வாறு விளித்துள்ளமை காணலாம். எழுந்தவன், முன் அடிபட்ட துயரால் உயிர்த்தான் என்க. விழுந்தான் என்றது, இயலாத நிலையிலும் முயன்று இராவணன் தேரில் பாய்ந்த தன்மையைக் குறிப்பாலுணர்த்தியது. 'பாய்ந்தான்' என மேல் தொடங்குதல் காண்க. தமக்குச் சார்பாக இராவணனோடு போர் செய்யப் பாய்ந்தமையால் விண்ணவர் பண்ணை ஆர்த்தது. பண்ணை - கூட்டம். (123)

3540. பாய்ந்தா னவன்பன் மணித்தண்டு
பறித்தெ றிந்தா
னேய்ந்தார் கதிர்த்தேர்ப் பரியெட்டினொ
டெட்டு மெஞ்சித்

தீய்ந்தா சறவீசியத் திண்டிறற்
றுண்ட வாளாற்
காய்ந்தான் கவர்ந்தானுயிர் காலனுங்
கைவி திர்த்தான்.

பாய்ந்தான், அவன் பல் மணித் தண்டு
பறித்து எறிந்தான்;
ஏய்ந்து ஆர் கதிர்த் தேர்ப்பரி எட்டிரெடு
எட்டும் எஞ்சித்
தீய்ந்து ஆசற வீசி அத் திண் திறல்
துண்ட வாளால்
காய்ந்தான்; கவர்ந்தான் உயிர் காலனும்,
கை விதிர்த்தான்.

பொ :—தேரில் பாய்ந்த சடாயு, அவ்விராவணனுடைய பல மணிகள் பதித்த பொன்னுலாய தண்டினைப் பறித்துப் புறத்தே வீசியெறிந்தான்; பின், ஒளி பொருந்திய தேரில் பொருந்தப் பூட்டிய குதிரைகள் பதினாறும் வலிமை குறைந்து அழிந்து ஒழியுமாறு அந்தத் திண்ணிய திறல்மிக்க அலகாகிய வாளினால் வீசி அழித்தான். அவற்றின் உயிரைக் கவர்ந்தவனாகிய எமனும் (இத்தகைய வீரனை யான் கண்டதில்லை எனக்) கைகளை அசைத்தான்.

கு :—முன் தன்னைத் தாக்கிய தண்டு ஆதலின் அதனை முன்னர்ப் பறித்து எறிந்தான். பாய்ந்தான், வினையாலணையும் பெயர்; சடாயு. ஏய ஆர் புரவி என இயையும். ஏய்ந்து, வினையெச்சத் திரிபு. ஏய எனச் செயவெனெச்சமாக்குக. ஆர்தல் - கட்டுதல்; பூட்டுதல். எஞ்சுதல் - வலிமை குறைதல். தீர்ந்து - அழிந்து. ஆசறல், ஒரு சொல்; முடிதல், ஒழிதல் என்னும் பொருளது. "ஊழி சென்று ஆசறுங் காலத்து" (சரபங்கன் பிறப். - 30) என்புழியும் இச்சொல் இப்பொருளில் ஆளப்பட்டிருத்தல் காணலாம். இராவணன் தேர் ஒளியுடையதாகலின், 'கதிர்த்தேர்' எனப்பட்டது. 'வயங்குமான் றேர்' (120) என முன்னும் கூறப்பட்டிருத்தலை நினைக. துண்டவாள் உருவகம்; அலகாகிய வாள் என்க. வாளால் வீசிக் காய்ந்தான் என இயையும். காய்தல் இங்கு அழித்தல் என்னும் பொருளது. 'கஞ்சனைக் காய்ந்தானை' (திவ். பெரியதிரு. 7-6-5) என்புழிப்போல. உயிர் கவர்ந்தானாகிய காலனும் என்று இயையும். கைவிதிர்த்தல் - கையை அசைத்தல்; இல்லை என்பதை மெய்ப்பாட்டால் உணர்த்திய வாறு. காலனும் என்புழி உம்மை உயர்வு சிறப்பு. இராவணனை எதிர்த்து இவ்வாறு போர் செய்தார் ஒருவரை இதுகாறும் கண்டிலா

மையால் காலனும் கைவிதிர்க்கலானன். இனி, விதிர்த்தல் - நடுங்குதல் என்று கொண்டு, காலனும் கைநடுக்கத்தோடு குதிரைகளின் உயிர் கவர்ந்தான் என இயைத்துக் கூறலுமாம். இராவணன் குதிரைகளாதலின் அவற்றின் உயிர் கவருங்கால் தனக்கு என்ன தீங்கு செய்வானே என்று காலனும் நடுங்க வேண்டிற்று. (124)

3541. திண்டே ரழித்தாங் கவன்றிண்புறஞ்
சேர்ந்த தூணி
விண்டான் மறைப்பச் செறிகின்றன
வில்லி லாமை
மண்டா ரமர்தான் வழங்காமையின்
வச்சை மாக்கள்
பண்டார மொக்கின்றன வள்ளுகி
ராற்ப றித்தான்.

திண் தேர் அழித்து, ஆங்கு அவன் திண் புறம் சேர்ந்த தூணி,
விண்தான் மறைப்பச் செறிகின்றன, வில் இலாமை,
மண்டு ஆர் அமர்தான் வழங்காமையின், வச்சைமாக்கள்
பண்டாரம் ஒக்கின்றன, வள் உகிரால் பறித்தான்.

பொ :—அவ்விராவணனது திண்ணிய தேரை அழித்துவிட்டு அப்பொழுதே, விண்ணை மறைக்குமாறு பொருந்தியுள்ளவையும், அவன் கையில் வில் இல்லாத காரணத்தால் நெருங்கிச் செய்கின்ற அரிய போரில் வழங்கப்படாமையால் உலோபிகளின் கருவூலத்தைப் போன்றனவுமாய், அவன் தோட்புறத்தில் சேர்ந்துள்ள அம்பருத் தூணிகளைத் தன் கூரிய நகங்களால் பிடுங்கி எறிந்தான்.

கு :—தேரை அழித்து, அவன் புறஞ்சேர்ந்த தூணியை வள்ளுகிரால் பறித்தான் என்க. விண் மறைப்பச் செறிகின்றனவும், வழங்காமையின் வச்சைமாக்கள் பண்டாரம் ஒக்கின்றனவுமான தூணிகள் என்க. தூணிகளின் பருமையாலும் பன்மையாலும் விண்ணை மறைத்தன. அம்புகள் அமரில் வழங்கப்படாமைக்குக் காரணம் வில்லிலாமை என்க. வில் முன்னரே சடாயுவால் ஒடியுண்டது. வச்சைமாக்கள் பண்டாரத்திற்கும், இராவணன் அம்பருத் தூணிகட்கும் பொதுத்தன்மை வழங்காமை. வழங்குதல் - கொடுத்தல்; எய்தல். வச்சைமாக்கள் - உலோபிகள். மக்கள் என்னாது மாக்கள் என்றார், அவர் இழிவு தோன்ற. உலோபிகளின் பண்டாரத்திலிருக்கும் பொருள் இரப்போர்க்குக் கொடுக்காமையால் குறைவின்றி நிறைந்திருத்தல் போல, இராவணன் தோட்புறஞ்சேர்ந்த

தூணிகளிலுள்ள அம்புகள் போரில் பகைவன்மேல் எய்யப்படாமையால் குறைவின்றி நிறைந்திருந்தன என்க. வள் உகிர் - கூரிய நகம். இதனல் தேரையும் அம்பருத் தூணியையும் ஒழித்தமை கூறினர். விண்தான், 'அமர்தான் என்புழித் தான் இரண்டும் அசைகள். ஆங்கு - அப்பொழுது; அசை எனலும் ஆம். (125)

3542. மாச்சிச் சிரல்பாய்ந் தெனமார்பினுந்
தோள்கண் மேலு
மோச்சிச் சிறகாற் புடைத்தா
னுலையா விழுந்து
மூர்ச்சித் தவிரா வணனும்
முடிசாய்ந் திருந்தான்
போச்சித் தனைபோ லுநின்னுற்
றலெனப் புகன்ருன்.

மாச் சிச்சிரல் பாய்ந்தென மார்பினும்
தோள்கள் மேலும்
ஓச்சிச் சிறகால் புடைத்தான்;
உலையா விழுந்து,
மூர்ச்சித்த இராவணனும்
முடி சாய்ந்து இருந்தான்;
'போச்சு ; இத்தனை போலும் நின் ஆற்றல் ?'
எனப் புகன்ருன்.

பொ :—பெரிய சிரல் பாய்வது போலப் பாய்ந்து, சடாயு அவன் மார்பிலும் தோள்கள் மேலும் தன் சிறகால் ஓங்கி அடித்தான்; தோல்வியுற்று வீழ்ந்து மூர்ச்சித்த இராவணனும் முடி சாய்ந்து இருந்தான் ; (சடாயு அதுகண்டு) 'நின் வாழ்வு போயிற்று ; நின் வலிமை இவ்வளவுதானே?' என இகழ்ந்து கூறினன்.

கு :—ஓச்சுதல் - ஓங்குதல்; வீசுதல் எனலுமாம். புடைத்தல் - அடித்தல். சடாயு தன் சிரங்களில் பாய்ந்த வேகத்தாலும் சிறகுகளின் புடைப்பாலும் வருந்தி இராவணன் மூர்ச்சித்துத் தலைசாய்ந் திருந்தான். போயிற்று என்பது போச்சு என எதுகை நோக்கி மருவிற்று. நின் வாழ்வு போச்சு என வருவிக்க. படையேதுமிலாது சிறகுகளாலும் மூக்காலும் தாக்கியதற்கே ஆற்ருது அழிகின்ருன் ஆகலின், "இத்தனை போலும் நின்னுற்றல்" என எள்ளல் தோன்ற வினவினன். (126)

3543. அவ்வே லையினே முனிந்தான் முனிந்
தாற்ற லன்னவ்
வெவ்வே லரக்கன் விடலாம்படை
வேறு காணுஃ
னிவ்வே லையினே யிவனின்னுயி
ருண்பெ னென்னுச்
செவ்வே பிழையா நெடுவாளுறை
தீர்த்தெ றிந்தான்.

அவ்வேலையினே முனிந்தான்; முனிந்து, ஆற்றலன், அவ்
வெவ்வேல் அரக்கன், விடலாம் படை வேறு காணுன்;
"இவ்வேலையினே இவன் இன் உயிர் உண்பென்'' என்னுச்
செவ்வே, பிழையா நெடுவாள் உறை தீர்த்து, எறிந்தான்.

பொ :—அப்பொழுது, அந்தக் கொடிய வேல் தாங்கியிருந்த இராவணன், சடாயு சொன்ன இழிசொல்லுக்கு ஆற்ருதவனுய் வெகுண்டான்; அவ்வாறு வெகுண்டு, அச்சடாயுமேல் விடுதற்குத் தகுதியுடைய ஆயுதம் வேறு ஒன்றும் காணுதவனுய்த் தப்பாமல் தாக்கும் நீண்ட வாளை உறையில் நின்றும் எடுத்து, "இக்கணத்திலே இவனுடைய இனிய உயிரை உண்பேன்" என்று சடாயுவுக்கு நேராக வீசினுன்.

கு :—அவ்வேலையினே அவ் வெவ்வேலரக்கன் ஆற்றலனுய் முனிந்தான் என்க. பிழையா நெடுவாள் என்றது, சிவன்பால் பெற்ற சந்திரகாசம் என்னும் வாளை. அது சடாயுவின் தகுதிக்கு மேற்பட்ட சிறப்புடைமையால் விடலாகாது; ஆயினும், விடலாம் படை வேறு காணுமையால் அதையே விட்டான் என்க. உயிருண் பென் என்றது, உயிரை மாய்ப்பேன் என்னும் கருத்தினது; செவ்வே எறிந்தான் என இயையும். செவ்வே - நேரே; நன்ருக எறிந்தான் எனலும் ஆம். உறைதீர்த்தல் - உறையினின்றும் எடுத்தல்; நீக்குதல். (127)

சடாயு வீழ்தல்

3544. வலியின் றலைதோற்றிலன் மாற்றருந்
தெய்வ வாளா
னலியுந் தலையென்றது வன்றியும்
வாழ்க்கை நாளு

மெலியுங் கடைசென் றுளதாகலின்
விண்ணின் வேந்தன்
குலிசம் மெறியச் சிறையற்றதொர்
குன்றின் வீழ்ந்தான்.

வலியின் தலை தோற்றிலன்; மாற்றருந் தெய்வ வாளால்
நலியும் தலை என்றது அன்றியும், வாழ்க்கை நாளும்
மெலியும் கடை சென்றுளது ஆகலின், விண்ணின் வேந்தன்
குலிசம் எறியச் சிறை அற்றது ஒர் குன்றின், வீழ்ந்தான்.

பொ:—சடாயு தன் வலிமையில் இராவணனுக்குத் தோற்றுவிட வில்லை; யாராலும் மாற்ற இயலாத தெய்வத்தன்மை வாய்ந்த சிவன் வாளினால் எத்தகையோர் தலையும் தவறாமல் அழியும் என்று கூறப் படும் அவ்வாளின் சிறப்பேயன்றியும், அவன் வாழ்நாளும் குறை வதற்குரிய முடிவை அடைந்துளது; ஆதலால், விண்ணுலகத்திற்கு வேந்தனாகிய இந்திரன் வச்சிரப்படை வீசச் சிறகுகள் அற்ற ஒரு மலைபோல வீழ்ந்தான்.

கு:—வலிமை மிக்க பெரிய மலை இந்திரன் வச்சிரப்படையால் சிறகற்று வீழ்ந்ததுபோல, வலிமை சான்ற பெரிய வடிவுடைய சடாயு, இராவணன் வீசிய வாளால் சிறகற்று வீழ்ந்தான் என்க. சடாயு வீழ்ந்தது, வாளின் மகிமையாலும் தன் வாழ்நாள் முடிவுற்ற தாலுமேயன்றி வலிமையில் இராவணனுக்குத் தோற்றதாலன்று, என்று சடாயுவின் பெருமையை நிறுவியவாறு. 'வலியின் தலை' என்புழித் தலை ஏழனுருபு. மாற்றருந் தெய்வ வாள் என்றது, கயிலை மலையின்கீழ் அகப்பட்டுக்கொண்டு அழும் இராவணன், அமைச்சர் கூறியபடி தன் தலையையும் கையையும் தறித்து யாழாக்கிச் சாமகீதம் பாடியது கேட்டுச் சிவன் மகிழ்ந்து கொடுத்த சந்திரகாசம் என்னும் வாளினை. இதனை, "எவ்வகைப் படையும் வெல்லும் சந்திர வாளு மீந்தான்" (உத்தரகாண்டம் - வரையெடுத்த - 75) எனப் பின்னர் வருதல் காண்க. சடாயு வாளால் வெட்டுண்டு வீழ்ந்தாலும் இராமனைக் கண்டு நிகழ்ந்தது கூறிய பின் உயிர் நீங்க இருக்கின்றா னாகலின் வாழ்க்கை நாளும் முடிந்தது என்னாமல், 'மெலியுங்கடை சென்றுளது' என்றார். குலிசம் - வச்சிரப்படை. மலைகளுக்குச் சிறகுகள் இருந்தன என்பதும் அச்சிறகுகளை இந்திரன் வச்சிரப் படையால் அறுத்தான் என்பதும் பழைய வரலாறு. "ஐய! விலங்க லெல்லாம், மாற்றுச் சிறையென்று அரி வச்சிர மாண வோச்ச, வீற்றுப் பட நூறிய வேலையின் வேலையுய்த்துக், காற்றுக்கிறைவன் எனைக் காத்தனன்" (சுந்தர-55) என மைந்நாகம் கூறுவதால் அதை யறியலாம். (128)

## சீதை வருந்தி யுரைத்தல் 3545-3552

**3545.** விரிந்தார் சிறைகீ ழுறவீழ்ந்தனன்
மண்ணின் விண்ணோ
ரிரிந்தா ரிழந்தா டுணையென்ன
முனிக்க ணங்கள்
பரிந்தார் படர்விண் டுவினாட்டவர்
பைம்பொன் மாரி
சொரிந்தா ரதுநோக் கியசீதை
துளக்க முற்றாள்.

விரிந்து ஆர் சிறை கீழ் உற வீழ்ந்தனன்,
மண்ணின்; விண்ணோர்
இரிந்தார்; "இழந்தாள் துணை!" என்ன,
முனிக் கணங்கள்
பரிந்தார்; படர் விண்டுவின் நாட்டவர்
பைம்பொன் மாரி
சொரிந்தார்; அது நோக்கிய சீதை
துளக்கம் உற்றாள்.

பொ:—விரிந்து அமைந்த சிறகுகள் வெட்டுண்டு கீழேவிழச் சடாயு மண்மேல் வீழ்ந்தான்; அதுகண்ட தேவர்கள், (அத்துன்ப நிலையைப் பார்க்கப் பொருதவர்களாய்) ஓடினார்கள்; முனிவர் கூட்டத்தோர், "சீதை துணையிழந்தாளே!" என இரக்கங்கொண்டார்கள்; பரவியுள்ள விட்டுணுவின் வைகுண்டத்தில் வாழும் நித்தியசூரிகள், அச் சடாயுவின் தொண்டினைக்கண்டு அவன்மேல் பசுமையான பொன்மலர்மாரியைச் சொரிந்தார்கள்; அச் சடாயு சிறகற்று வீழ்ந்தது நோக்கிய சீதை திடுக்கிட்டாள்.

கு:—சடாயு வீழ்ந்தது கண்ட விண்ணவரும், முனிக்கணமும், விண்டுவின் நாட்டவரும், சீதையும், உற்றநிலை கூறியவாறு. இரிதல் - ஓடுதல். பரிதல் - இரக்கமுறுதல்; வருந்துதல். இழந்தாள் என்ற வினையால் சீதை என்னும் எழுவாய் வருவிக்கப் பட்டது. அருள் உள்ளம் உடையராதலின் முனிவர் பரிவாராயினர். வைகுண்டத்தின் பரப்பை யுணர்த்தப் 'படர் விண்டுவினாடு' என்றார். விட்டுணு என்பதற்குரிய வியாபகம் என்னும் பொருள் புலப்படப் 'படர்விண்டு' எனக் கூறினர் எனலுமாம். படர்தல் - வியாபித்தல். இனி, யாவரும் விரும்பி நினைத்தற்குரிய விண்டுவினாடு' என்றலுமாம். முனிக்கணங்கள் பரிந்ததும் சீதை துளக்க

முற்றதும், இழந்தாள் துணை என்ற ஒரு நோக்கத்தாலாகும். விண்ணோர் இரிதற்குச் சடாயுவின் துன்பநிலை காணப்பொறுமை யும், சடாயுவை வருத்திய இராவணன் தங்கள் மேலும் வெகுண்டு வருவானோ என்ற அச்சமும் காரணம் ஆகலாம். விண்டுவின் நாட்டவர்கள், சடாயுவின் துன்பநிலையை நினையாது, சீதையின் துணையிழந்த நிலையையும் நினையாது, அவன் தன் னுயிரையும் எண்ணாது செய்த சேவையின் மேன்மையே நினைந்து, அதன் பொருட்டு மகிழ்ந்து பொன்மலர் மாரி சொரிந்தார்கள்; அவர்கள் இறைவன் சேவையையே இன்பமாக நினைக்கின்றவர் கள் ஆதலின். "சரணெனக் கியார்கொலென்று சானகியழுதுசாம்ப அரணுனக் காவென் வஞ்சி யஞ்சலென் றருளினெய்தி, முரணுடைக் கொடியோன் கொல்ல மொய்யமர் முடித்துத் தெய்வ மரணம் என் தாதை பெற்றது என் வயின் வழக்கன்றோமோ?" (யுத்த - வீடணனடைக் - 110) எனவும் 'தன்னுயிர் புகழ்க்கு விற்ற சடாயு' (சுந்தர - 567) எனவும் இராமனாலும் அநுமனாலும் அவன் தொண்டு பாராட்டப்படுதல் காணலாம். துளக்க முறுதலாவது உள்ளமும் உடலும் நடுங்குதல். (129)

3546. வெள்கும் மரக்கன் னெடுவிண்புக
வார்த்து மிக்கான்
ஞெள்கின் றலையெய் தியமானெனச்
சோர்ந்து நைவா
ளுள்கும் முயிர்க்கும் முயங்கும்மொரு
சார்பு காணாள்
கொள்கொம் பொடியக் கொடிவீழ்ந்தது
போற்கு லைந்தாள்.

வெள்கும் அரக்கன், நெடு விண்புக
ஆர்த்து, மிக்கான்;
தொள்கின்தலை எய்திய மான் எனச்
சோர்ந்து நைவாள்,
உள்கும்; உயிர்க்கும்; உயங்கும்; ஒரு
சார்பு காணாள்,
கொள்கொம்பு ஒடியக் கொடி வீழ்ந்தது
போல் குலைந்தாள்.

பொ :—சடாயுவின் வலிமை கண்டு நாணிய இராவணன், அச் சடாயு வீழ்ந்தவுடன் அகன்ற ஆகாயத்தில் ஒலி சென்று புகுமாறு ஆரவாரித்துச் செருக்கினுன்; வலையில் அகப்பட்ட மானைப்போல உளம் சோர்ந்து வருந்துகின்ற சீதை, மேல் என் செய்வது என்று நீடுநினைப்பாள்; பெருமூச்சு விடுவாள்; பின் துவள்வாள்; தன்னைக் காத்தற்குரிய சார்பு ஒன்றையும் காணுதவளாய், ஒரு பூங்கொடி, தனக்கு ஆதாரமாக நின்ற கொள்கொம்பு ஒடிந்துபோகத் தானும் வீழ்ந்தது போல (தனக்குத் துணையாய் வந்துதவிய சடாயு வீழத் தானும் வீழ்ந்து) நிலை குலைந்தாள்.

கு :—வெள்குதல் - நாணுதல்; வெள்ளிமலையை யள்ளி எடுத்த தன்னுற்றல் ஒரு பறவைக்கு எதிர்நிற்க இயலாது போகின்றதே என்ற எண்ணத்தால் இராவணன் நாணுதல். நெடுவிண் என்புழி நெடுமை அகலத்தை யுணர்த்தியது. மிக்கான் - செருக்குற்றான். தொள்கு - வலை. தலை ஏழனுருபு. சீதை இராவணன் பால் அகப்பட்டு வருந்தும் நிலைக்கு வலையில் அகப்பட்டு வருந்தும் மானும், அவள் சார்பிழந்து வருந்தும் நிலைக்குக் கொள்கொம்பொடியத் தரையில் வீழ்ந்து வாடும் கொடியும் உவமமாயின. "கொம்பரில்லாக் கொடிபோல் அலமந்தனன்" (திருவா. நீத்தல் 20) என மணிவாசகர் கூறியதும் இங்கு நினைக்கத்தகும். உள்கும் உயிர்க்கும் உயங்கும் என இழவு காரணமாக வந்த அழுகைச் சுவையினைப் படி முறையான் அமைத்துக் காட்டியவாறு. மகரங்கள் விரித்தல் விகாரமாய் நின்று இசை நலம் பயந்தன. கொள் கொம்பிற்குச் சடாயுவும் கொடிக்குச் சீதையும் உவமேயங்கள். இவ்வாறு வருவன இரட்டையுவமம் எனப்படும். குலைதல் - நிலைதடுமாறல்; மனஞ்சுழலுதல். (130)

**3547.** வன்றுணை யுளனென வந்த மன்னனும்
★ பொன்றின னெனக்கினிப் புகலெ னென்கின்ரு
ளின்றுணை பிரிந்திருந் தின்ன லெய்திய
அன்றிலம் பெடையென வரற்றி னளரோ.

"வன் துணை உளன் என வந்த மன்னனும்
பொன்றினன்; எனக்கு இனிப் புகல் என்?" என்கின்றாள்;
இன் துணை பிரிந்து இருந்து இன்னல் எய்திய
அன்றில் அம் பெடை என அரற்றினள் அரோ.

பொ :—"வலிமை பொருந்திய துணை எனக்கு இருக்கின்றான் என்று யான் எண்ணுமாறு வந்த கழுகின் மன்னனாகிய சடாயுவும் அழிவுற்றான்; இனி எனக்குத் துணை ஏது?" என்று கூறுகின்றவளாய், தன் இனிய துணையாகிய ஆண் அன்றிலைப் பிரிந்து பனைமரத்தில் இருந்து அது வாராமையால் பெருந்துயர் அடைந்த அழகிய அன்றிற்பேடை போல அரற்றினாள்.

கு :—மன்னன் என்றாள், சடாயு கழுகின் வேந்தனாகலின். 'வன்துணையுளன்' என்பதைச் சடாயுவின் கூற்றாக்கின், 'நினக்கு வன்மை வாய்ந்த துணையாக யானிருக்கின்றேன்' என்று அவன் கூறிக் கொண்டு வந்ததாகப் பொருள் செய்தலும் பொருந்தும்; இப்பொருட்கு, 'உளன்' என்பதில் அன் தன்மைக்கண் வந்ததாகக் கொள்ளவேண்டும், சடாயு சிறகு வெட்டப்பட்டு வீழ்ந்தமை கண்ட சீதை அவன் இறந்து வீழ்ந்ததாகவே எண்ணினள் ஆதலின், 'பொன்றினன்' என்றாள். அவன் குற்றுயிரோடு இருந்து இராமனைக்கண்டு நிகழ்ந்தது கூறிய பின்னரே உயிர்நீக்கின்றான் என்பது பின்னர்க் கூறப்படும். புகல் - அடைக்கலம்; தன்னை அடைக்கலமாக ஏற்றுக் காப்பாற்றும் தகுதியுடைய துணை என்னும் பொருள் தந்து நின்றது. என்கின்றாளாய் அரற்றினாள் என முற்றெச்சமாக்கி முடிக்க. இராமனைப்பிரிந்து வருந்தும் சீதைக்குத் துணைபிரிந்து வருந்தும் அன்றிற்பெடை உவமை. அன்றில் என்பது சிவந்த கொண்டையையுடையதாய் ஆணும் பெண்ணும் பிரியாமல் பனைமரத்தில் வாழும் ஒருவகைப் பறவை. ஆண்பறவை பிரியநேரின், அன்றிற்பேடை மூன்று முறை உரத்த குரலில் கூவிப்பார்த்து அக்குரல் கேட்டும் அது வாராதொழியின் இறந்துபடும் தன்மையது என்பர். "பெண்ணைக் கொழுமடலிழைத்த சிறுகோற் குடம்பைக், கருங்கா லன்றிற் காமர் கடுஞ்சூல் வயவுப் பெடையகவும் பானாட் கங்குல்" (குறுந் - 301) 'நெருப்பினன்ன செந்தலையன்றில்' (குறுந் - 160) 'சேவலொடு புணராச் சிறுகரும் பேடை இன்னா துயங்குங் கங்குலும்' (அகநா - 270 - 12 - 4) "அன்றிற் பேடை அரிற்குர லழைஇச் சென்று வீழ் பொழுது சேவற்கிசைப்ப" (மணிமே 5 : 127 : 8) என வருவனவற்றால் அன்றிலின் வடிவும் நிறமும் வாழிடமும் செயலும் காதலும் உணரலாம். (131)

3548. பின்னவ னுரையினை மறுத்துப் பேதையே
னன்னவன் றனைக்கடி தகற்றி னேன்பொரு
மன்னவன் சிறையற மயங்கி னேன்விதி
யின்னமு மெவ்வினை யியற்று மோவெனா.

"பின்னவன் உரையினை மறுத்துப் பேதையேன்,
அன்னவன்தனைக் கடிது அகற்றினேன்; பொரு
மன்னவன் சிறை அற மயங்கினேன்; விதி
இன்னமும் எவ் வினை இயற்றுமோ?'' என.

பொ:—"என் கணவருக்குப் பின்னவனாகிய இலக்குவன் சொல்லிய சொல்லை மறுத்து, அறிவிலாத யான் அவனைக் கடிது செல்லுமாறு போக்கினேன்; அக்குற்றத்தால், என்பொருட்டுப் போர்செய்த கழுகின் வேந்தனாகிய சடாயு சிறகு அற்று வீழ, வேறு துணையின்றி மயங்கினேன்; அத்தீவினை இன்னமும் எத்தகைய துன்பத்தைச் செய்யுமோ?" என்று கூறி,

கு:—ஏங்கினாள் என வருஞ் செய்யுளில் முடியும். தனக்குத் துணையாய் நின்ற இலக்குவனைக் கடுஞ்சொல் கூறியகற்றிய தீவினையால் துணையாய் வந்த சடாயுவும் துணை செய்ய இயலாது இறகு அற்று வீழ்ந்தான் என்பது சீதையின் கருத்தாகும். "வஞ்சனை மானின்பின் மன்னைப் போக்கியென், மஞ்சனை வைதுபின் வழிக் கொள்வாயென, நஞ்சனை யானகம் புகுந்த நங்கையான், உய்ஞ்சனெனிருத்தலு முலகங் கொள்ளுமோ" (சுந்தர - உருக்காட்டு: 17) எனவும், "என்னை நாயகன் இளவலை யெண்ணலா வினையேன், சொன்ன வார்த்தை கேட்டு அறிவிலள் எனத் துறந்தானோ?" (காட்சி - 14) எனவும் பின் கூறுகின்றமை காணலாம். (132)

3549. அல்லலுற் றேனைவந் தஞ்ச லென்றவிந்
நல்லவன் றோற்பதே நரகன் வெல்வதே
வெல்வதும் பாவமோ வேதம் பொய்க்குமோ
வில்லையோ வறமென விரங்கி யேங்கினாள்.

"அல்லல் உற்றேனை, வந்து, 'அஞ்சல்' என்ற, இந்
நல்லவன் தோற்பதே? நரகன் வெல்வதே?
வெல்வதும் பாவமோ? வேதம் பொய்க்குமோ?
இல்லையோ அறம்?'' என இரங்கி ஏங்கினாள்.

பொ:—"துன்பமுற்ற என்னை நாடி வந்து, 'அஞ்சாதே' என்று கூறிப் போர்செய்த இந்த நல்லவன் தோற்றுப்போவதா? நரகம் சேர்தற்குரிய இராவணன் வெல்வதா? வெல்லுவதும் பாவந்தானோ? அறம் வெல்லும் என்று சொல்லுகின்ற வேத வாக்குப் பொய்யாய்ப் போகுமோ? ஒருகால் எம்மிடத்துத் தருமம் இல்லையோ?" என்று கூறிக்கொண்டு அழுது ஏங்கினாள்.

கு:—சிறகிழந்து வீழ்ந்துகிடக்கும் சடாயுவைச் சுட்டிக்காட்டி, 'இந்நல்லவன் தோற்பதே' என்ருள். அல்லலுற்ருேரைக் கண்டு 'அஞ்சாதே' என்று அபயம் தந்து உதவியது நற்செயல் ஆதலின் சடாயுவை 'நல்லவன்' என்ருள். நரகமடைதற்குரிய பாவத்தைச் செய்தவன்—பிறர் மனே நயந்தவன்—இராவணன் ஆதலின் அவனே 'நரகன்' என்ருள். "பகை பாவ மச்சம் பழியென நான்கும் இகவாவாம் இல்லிறப்பான்கண்" (குறள் - 146) என இல்லிறப்பான்கண் பாவம் நீங்காமை சொல்லப்படுதல் காணலாம். "நரகனுயிர்க்கு நல்லுயிர் கொண்டு, பரகதி யிழக்கும் பண்பீங்கில்லே" (சிலப்: அடைக்கலம் - 84, 85) என்புழிப் பொய்க்கரி கூறிய பாவியை 'நரகன்' என்று கூறியிருத்தல் காண்க. 'தருமமே செயம்' என்று கூறிய வேதவாக்குக்கு முரணுன செயல் நடந்திருத்தலின், வேதம் பொய்க்குமோ? என்ருள். வேதம் பொய்க்காது என்று துணிந்தாளாதலின், தன்மாட்டுத்தான் அறமில்லேயோ? என ஐயமுற்ருள். தோற்பதே? வெல்வதே? பாவமோ? என்புழி வந்த ஏகாரங்களும், ஓகாரமும் அங்ஙனம் நிகழ்தல் முறையன்று என்னும் பொருளே உணர்த்திநின்றன. பொய்க்குமோ? என்புழி ஓகாரம் எதிர்மறைப்பொருளது; இல்லேயோ? என்புழி ஓகாரம் ஐயப் பொருளது. இரங்குதல் - அழுதல். ஏங்குதல் - விம்முதல். (133)

**3550.** நாணிலே னுரைகொடு நடந்த நம்பிமீர்
நீணிலே யறநெறி நின்று ளோர்க்கெலா
மாணியை யுந்தையர்க் கமைந்த வன்பனேக்
காணிய வம்மெனக் கலங்கி விம்மினுள்.

"நாண் இலேன் உரை கொடு நடந்த நம்பிமீர்!
நீள் நிலே அறநெறி நின்றுளோர்க்கு எலாம்
ஆணியை, உந்தையர்க்கு அமைந்த அன்பனேக்
காணிய வம்" எனக் கலங்கி விம்மினுள்.

பொ:—"நாணம் இல்லாதவளாகிய என் சொல்லேக் கேட்டுச் சென்ற ஆண்மையிற் சிறந்தவர்களே! நீடித்து நிற்பதாகிய அற நெறியில் நின்றவர்கட்கு எல்லாம் அச்சாணி போன்ற சடாயுவை—உம் தந்தையார்க்கு வாய்த்த அன்புசால் நண்பனேக் காண வாருங்கள்" என்று மனங்கலங்கித் தேம்பியழுதாள்.

கு:—கணவனது சொல்வழி அடங்கி நடத்தற்குரிய பெண்ணுகிய யான், நற்குடிப் பிறந்த மகளிர்க்கு இன்றியமையாததாய் உயிரினும் சிறந்த நாணமாகிய அருங் குணத்தினின்றும் நீங்கி, எனது

விளையாட்டு விருப்பத்தினையே முதன்மையாகக் கொண்டு, யான் விரும்பிய மானைப் பிடித்துத் தருமாறு என் கணவரை வற்புறுத்தி அனுப்பிய அளவில் நில்லாது, என் கணவர் சொல்வழி என்னைக் காத்து நின்ற அவர் தம்பியையும் கடுஞ்சொற் கூறி அனுப்பி, இத்தகைய இடர்நிலையைத் தேடிக்கொண்டேனே என மனங் கலங்கிய சீதை, இராவணனது பிணிப்பினின்றும் தன்னை மீட்க வந்த அறத்தின் ஆணியாகிய சடாயுவுக்கு நேர்ந்த அவலநிலையைக் காண வருமாறு தன் கணவனையும் கொழுந்தனையும் அழைத்து அரற்றும் நிலையில் அமைந்தது இச்செய்யுள்.

‘வஞ்சனை மானின்பின் மன்னைப் போக்கியென்
மஞ்சனை வைதுபின் வழிக்கொள் வாயென
நஞ்சனை யானகம் புகுந்த நங்கையான்
உய்ஞ்சனெ னிருத்தலும் உலகங் கொள்ளுமோ’

(சுந்தர, 505)

எனப் பிராட்டி பின்னர் நினைந்து இரங்குதலும் இங்கு நோக்கத் தகும். அறத்தின் நிலை பேற்றை வற்புறுத்த ‘நீணிலையறம்’ என்றார். “இளமையும் நில்லா யாக்கையும் நில்லா, வளவிய வான் பெருஞ் செல்வமும் நில்லா, புத்தே ளுலகம் புதல்வரும் தாரார், மிக்க அறமே விழுத்துணையாவது” (மணிமே 22. 135 - 138) என்பது காண்க. அறநெறி நின்றோர்களில் தலைசிறந்தவன் சடாயு வாதலின் அவர்கட்கு அச்சாணி போன்றவன் என்ற கருத்தால் ‘ஆணியை’ என்றார். உரையாணி என்றலுமொன்று. ‘சேணுயர் தருமத்தின் தேவைச் செம்மையின் ஆணியை’ (அயோத்தியா. 2530) எனமுன் பரதனைக் கூறியதும் ஈண்டு ஒப்பு நோக்கத்தகும். இறந்தவர்களைக் கண்டு அழுகின்றவர்கள், சேய்மையிலுள்ளாரையும் முன்னிலைப்படுத்தி அவர்கள் கேட்பதுபோலக் கூறும் வழக்கம் இன்றும் உண்டு. (134)

3551. எல்லியல் விசும்பிடை யிருந்த நேமியாய்
சொல்லிய வறநெறி தொடர்ந்த தோழமை
நல்லிய லருங்கடன் கழித்த நம்பியைப்
புல்லுதி யோவெனப் பொருமிப் பொங்கினாள்.

“எல் இயல் விசும்பிடை இருந்த நேமியாய்!
சொல்லிய அற நெறி தொடர்ந்த தோழமை
நல் இயல் அருங்கடன் கழித்த நம்பியைப்
புல்லுதியோ?” எனப் பொருமிப் பொங்கினாள்.

பொ :—"ஒளிபொருந்திய விண்டுவினுலகத்தில் இருந்த சக்கர வர்த்தியே! நூல்களில் கூறிய அறநெறியைப் பின்பற்றி ஒழுகிய வனும், தோழமைக்குரிய நல்ல இயல்பு வாய்ந்த அரிய கடமையைச் செய்து முடித்தவனும் ஆகிய ஆண்மைமிக்க சடாயுவை வரவேற்று மகிழ்ந்து தழுவிக் கொள்வாயோ?" எனக் கூறி விம்மி அழுதாள்.

கு :—விசும்பு என்றது இங்கு விண்டுவின் உலகமாகிய பரம பதத்தை; அது ஒளிமயமானது ஆகலின், 'எல்லியல் விசும்பு' என்று சிறப்பித்தார். தயரதன் விண்டுவின் உலகம் சென்றான் என்பதை வசிட்டன், இராமனிடத்தில், "எண்தகு குணத்தினாய்! தாதை என்றலால், புண்டரீகத் தனி முதற்கும் போக்கரு, விண்டுவினுல கிடை விளங்கினனரோ" (2540) எனக் கூறுவதால் அறியலாம். அறநெறி தொடர்ந்த நம்பி, தோழமைக் கடன் கழித்த நம்பி என்க. சடாயு அறநெறியில் தவறாமல் ஒழுகினவன் என்பதை, "நீணிலை யறநெறி நின்றுளோர்க்கெலாம் ஆணியை" என முன்னும் கூறியது கொண்டறியலாம். தோழமை நல்லியல் அருங்கடன் என்றது, நண்பனுடைய மருகிக்காகத் தன்னுயிரையே கொடுத்த பேருத வியை. அறநெறி தொடர்ந்த ஒழுக்கத்தாலும், தன்னைக் காக்க வேண்டி உயிர் கொடுத்த உயர்வாலும் சடாயு விண்டுவினுலகம் புகுதற்குரியவனே என்ற துணிவால் சீதை இங்ஙனம் கூறினாள். நம்பி என்றது இங்கு ஆண்மை தோன்ற அரக்கனை வருத்திய சடாயுவை. புல்லுதல், மகிழ்ச்சியால் தழுவிக் கொள்ளுதல். காலமிடையிட்டுக் காணுங்கால் நண்பரை மகிழ்ந்து தழுவிக்கொள் ளுதல் இக்காலத்தும் உண்டு; அதைத் தயரதனும் செய்வான் என்றவாறு. முன்னைச் செய்யுளில் சேய்மையில் உள்ள இராம இலக்குவரை விளித்துச் சடாயுவைக் காண வம்மின் என்றவள், இச்செய்யுளில் மேலுலகடைந்த தயரத சக்கரவர்த்தியை விளித்துச் சடாயுவின் பெருமை விளக்கி அவனை வரவேற்றுத் தழுவுவாயோ என வினவினாள். இவ்வாறு சடாயுவோடு தொடர்புடைய இவ்விரு செய்யுளையும் ஒருங்கு வைத்தலே முறையாகவும், சில பதிப்பிலும் சில ஏடுகளிலும் கற்பழியாமை என்று தொடங்கும் செய்யுளுக்குப் பின் இச்செய்யுள் காணப்படுகின்றது. (135)

**3552.** கற்பழி யாமையென் கடமை யாயினும்
பொற்பழி யாவலம் பொருந்தும் போர்வலான்
விற்பழி யுண்டது வினையி னேன்வந்த
விற்பழி யுண்டதென் றிரங்கி யேங்கினாள்.

"கற்பு அழியாமை என் கடமை; ஆயினும்,
பொற்பு அழியா வலம் பொருந்தும் போர்வலான்
வில் பழியுண்டது; வினையினேன் வந்த
இல் பழியுண்டது'' என்று இரங்கி ஏங்கினுள்.

பொ:—"உயிரே போவதாயினும் கற்பு அழியாமல் இருத்தல் என் கடமை; ஆயினும், பொலிவு கெடாத வலிமை பொருந்திய போரில்வல்ல என் கணவனின் வில் (போர்செய்து என்னை மீட்கா மையால்) பழியடைந்தது; பிறனுல் கவரப்பட்ட தீவினையுடைய யான் பிறந்த குடி பழியடைந்தது" என்று கூறி அழுது வருந்தினுள்.

கு:—பிறனுல் கவரப்பட்ட நிலையிலும் உயிரினும் நாணினும் சிறந்த கற்பைக் காத்து நிற்பேன் என்பாள், 'கற்பழியாமை என் கடமை' என்ருள். என் கடமையை யான் செய்வேன்; ஆனுல், போரில்வல்ல கணவன் வில்லேந்தியிருந்தும் அதுகொண்டு என்னைக் கவர்ந்து செல்லும் அரக்கனைக் கொன்று என்னை மீட்கும் கடமையைச் செய்யாமையால் அவ் வில் பயனற்றதாய்ப் பழியுண்டது என்ருள். கணவன் பழியுண்டான் என்று கூற மனமிலாது, அவன் வில் பழியுண்டது என்ருள். கற்புடைப் பெண்டிர் பிறர் நெஞ்சு புகாராகவும் பிறனுல் கவரவும் பட்டாள் ஆதலின், சீதை தன்னை 'வினையினேன்' என்ருள். வந்த இல் என்றது, பிறந்த குடியை; புகுந்த குடி பழியுண்டமை, இராமன் வில் பழியுண்டது என்றமை யால் பெறப்பட்டமையின் மீண்டும் கூறவேண்டா. பொற்பு-பொலிவு. வலம் - வலிமை. கற்பில் தவறியவழி உண்டாக வேண்டிய இற்பழி, கற்பழியாத நிலையிலும் உண்டாய்விட்டதே என்பதும், கரன் முதலான எத்துணையோ அரக்கரை வென்ற என் கணவன் வில் இந்த ஓரரக்கனை வெல்லும் வாய்ப்பு இல்லாமையால் பழியுண்டதே என்பதும் சீதையின் கவலையாகும். 'எல்லை நீத்த உலகங்கள் யாவு மென், சொல்லினுல் சுடுவேன், அது தூயவன் வில்லின் ஆற்றற்கு மாசென்று வீசினேன்' (சுந்தர - 624) என இராமன் வில் பழியுண்ணலாகாது என்ற நோக்கமுடைமையைப் பின்னும் புலப்படுத்தல் காணலாம். (136)

### சீதையை நிலத்தோடு தோளில் தாங்கி இராவணன் செல்லுதல்

3553. ஏங்குவா டன்மையு மிறகி ழந்தவ
னுங்குறு தன்மையு மரக்க னேக்கினன்

வாங்கினன் றேரிடை வைத்த மண்ணொடும்
வீங்குதோண் மீக்கொடு விண்ணி னேகினன்.

ஏங்குவாள் தன்மையும், இறகு இழந்தவன்
ஆங்கு உறு தன்மையும், அரக்கன் நோக்கினன்;
வாங்கினன் தேரிடை வைத்த மண்ணொடும்
வீங்கு தோள் மீக்கொடு விண்ணின் ஏகினன்.

பொ :—அவ்வாறு கூறி வருந்துகின்றவளின் துன்ப நிலையையும் இறகு இழந்த சடாயு அவ்விடத்து அடைந்துள்ள மூச்சற்ற தன்மையையும் இராவணன் பார்த்து, இதுதான் அமையம் என்று சீதையைத் தான் முன் தேரில் பெயர்த்து வைத்த தரையோடும் எடுத்துத் தன் பருத்த தோள்மேல் வைத்துக்கொண்டு விண்வழியே சென்றான்.

கு :—சடாயு மீண்டும் எழுந்து தன்னோடு போர் செய்ய வருவானோ என்று அஞ்சுகின்றவன் இராவணன் ஆகலின், சீதை சடாயு இறந்ததாக எண்ணி அரற்றுகின்ற நிலையையும் நோக்கிப் பின் சடாயுவின் மூச்சற்றுக் கிடக்கும் தன்மையையும் நோக்கி, சடாயு இறந்துவிட்டான்: இனி யாரும் வாராமுன் செல்லவேண்டும் என்று விரைந்து சீதையை முன் பெயர்த்த நிலத்தோடும் எடுத்துத் தோள் மேல் வைத்துக்கொண்டு விண்வழிச் சென்றான். முன் சடாயுவால் இராவணன் தேரும் பாகனும் குதிரைகளும் அழிந்தமையால், வேறு தேரின்றிச் சீதையைத் தன் தோள்மேல் தூக்கிச் செல்ல நேர்ந்தது. சீதையை நிலத்தொடு பெயர்த்து எடுத்தான் என்று கம்பர் தாம் புதுவதாக நாட்டிய கருத்தை மேலும் மேலும் தவறாது கூறுவது, 'தாஅனாட்டித் தனாதுநிறுத்தல்' என்னும் மதமாகும். மீ - மேல். விண்ணில் செல்லும் ஆற்றலைத் தவத்தால் பெற்றவன் இராவணன் ஆதலின், தேரிழந்த நிலையிலும் விண்ணில் ஏக உரியவனானான். நோக்கினான், வாங்கினன் மீக்கொடு ஏகினான் என்று முற்றெச்சங்களாக்கி முடிக்க. (137)

## சீதையின் நிலை

3554. விண்ணிடை வெய்யவ னேகும் வேகத்தாற்
கண்ணொடு மனமிவை சுழன்ற கற்பினா
ளுண்ணிறை யுணர்வழிந் தொன்று மோர்ந்திலண்
மண்ணிடைத் தன்னையும் மறந்து சாம்பினாள்.

விண்ணிடை வெய்யவன் ஏகும் வேகத்தால்,
கண்ணொடு மனம் இவை சுழன்ற; கற்பினள்,
உள் நிறை உணர்வு அழிந்து ஒன்றும் ஓர்ந்திலள்;
மண்ணிடைத் தன்னையும் மறந்து சாம்பினள்.

பொ :—ஆகாய வழியாகக் கொடிய இராவணன் செல்லும் வேகத்தினால், கற்புடையவளான சீதையின் கண்ணும் மனமுமாகிய இவை சுழன்றன; அவள் உள்ளத்தில் நிறைந்திருந்த உணர்ச்சியும் அழியப்பெற்று ஒன்றும் உணராதவளாய்த் தன்னையும் மறந்து தரையிடைக் கிடந்து வாடினள்.

கு :—வெய்யவன் - கொடிய இராவணன்; சீதைமேல் விருப்பங் கொண்டவன் எனலும் ஆம். இராவணன் வேகத்திற்குக் காரணம் இராமன் பின் தொடர்வானோ என்ற அச்சம் ஆகும். கற்பினள் கண்ணொடு மனமிவை சுழன்ற; கற்பினள் உணர்வழிதலால் ஒன்றும் ஓர்ந்திலள் என முன்னும் பின்னும் இயைந்து, கற்பினள் என்பது இடைநிலை விளக்காய் நின்றது. 'சுழன்ற கற்பினள்' எனக் கற்பினளுக்கு அடையாக்கலும் ஆம். ஓர்ந்திலளாய் மறந்து என முற்றெச்சமாக்குக. தன்னையும் என்புழி உம்மை இறந்தது தழீஇயது; 'பிறவற்றை உணராமையே யன்றித் தன்னையும் உணராது மறந்தாள்' என்று பொருள்படுதல் காணலாம். இங்கு மண் என்றது, இராவணனால் பெயர்த்தெடுக்கப்பட்டதும் தான் முன் தங்கியிருந்தது மாகிய தரையை. சாம்புதல் - வாடுதல்; சோர்தல். விண்வழியில் காணப்படும் பொருள்களையோ, எங்குச் செல்கின்றோம் என வழியினிலையினையோ எதையும் அறியாள், என்பார், 'ஒன்றும் ஓர்ந்திலள்' என்றார். (138)

### சடாயு விண்ணோக்கி இரங்குதல் 3555-3561

3555. ஏகின னரக்கனு மெருவை வேந்தனு
மோகவெந் துயர்சிறி தாறி முன்னியே
மாகமே நோக்கினன் வஞ்சன் வல்லையிற்
போகுதல் கண்டகம் புலர்ந்து சொல்லுவான்.

ஏகினன் அரக்கனும்; எருவை வேந்தனும்,
மோக வெம் துயர் சிறிது ஆறி, முன்னியே,
மாகமே நோக்கினன்; வஞ்சன் வல்லையில்
போகுதல் கண்டு அகம் புலர்ந்து சொல்லுவான்.

பொ :—இராவணனும் சென்ருன்; கழுகின் மன்னனுகிய சடாயுவும் மூர்ச்சையாகிய கொடிய துயர் சிறிது தணிந்து, முன் நினைவு வரப்பெற்று, விண்ணையே நோக்கினுன்; வஞ்சகனுகிய இராவணன் விரைந்து போதலைக் கண்டு மனம் புழுங்கிச் சொல்லுகின்ருன்.

கு :—மோகம் - மூர்ச்சை. ஆறுதல் - தணிதல். முன்னி - கருதி; முன்னினைவு வரப்பெற்று என்பது கருத்து. மாகம் - ஆகாயம். வஞ்சன் - இராவணன்; பிறன் மனையை அற்றம் பார்த்துக் கவர்ந்து செல்லுதலின், அப்பெயரால் கூறினர். வல்லை - விரைவு. புலர்தல் - வாடுதல்; இங்கும் புழுங்குதலை யுணர்த்திற்று. அவன் சொல்லுவன வற்றை அடுத்துவரும் ஐந்து கவிகளில் அறியலாம். (139)

**3556.** வந்திலர் மைந்தரும் மருகிக் கெய்திய
வெந்துயர் துடைத்தன னென்னு மெய்ப்புகழ்
தந்திலர் விதியினுர் தரும வேலியைச்
சிந்தினர் மேலினிச் செயலென் னுங்கொலோ.

"வந்திலர் மைந்தரும்; மருகிக்கு எய்திய
வெந்துயர் துடைத்தனன் என்னும் மெய்ப் புகழ்
தந்திலர், விதியினுர், தரும வேலியைச்
சிந்தினர்; மேல் இனிச் செயல் என் ஆம் கொலோ?"

பொ :—"நம் மைந்தர்களாகிய இராம இலக்குவரும் வரவில்லை; நம் மருகிக்கு வந்த கொடிய துயரை நீக்கினேன் என்கின்ற உண்மை யான புகழை எனக்கு விதியினுர் தராதவராய்த் தருமத்தின் வேலியைச் சிதற அடித்துவிட்டார்; இனிமேல் நடக்கும் செயல் யாதோ?"

கு :—மூர்ச்சித்து விழுந்த சடாயு, சிறிது தெளிந்து விண்ணைப் பார்க்கையில் அவன் கூரிய கண்களுக்கு இராவணன் சீதையை யெடுத்துச் செல்வது புலப்பட்டமையால் 'மைந்தர் வந்திலர்' என்பதைத் துணிந்தான்; அவர்கள் வந்திருந்தால் இராவணன் அழிந்திருப்பான். இராவணனைக் கொன்று சீதையைக் காத்திருந்தால், 'மருகிக்கெய்திய வெந்துயர் துடைத்தனன்' என்ற மெய்ப்புகழை யான் எய்தியிருக்கலாம்; ஆனுல், அப்புகழை எய்தாத படி சிறகுகள் அற்றுவிட்டன; சிறகுகள் அறுதற்குக் காரணம் விதியாகலின், அவ்விதி அம் மெய்ப் புகழை எனக்குத் தாராமல் தருமத்தின் வேலியைச் சிந்தியது என்ருன். விதியினுர் என்றது இழித்தற் கண் வந்த பன்மை. தன் இறகுகள் அற்றமையால் இராவணன் தருமத்திற்கு மாருய்ச் சீதையை எடுத்துச்செல்ல நேர்ந்தது; ஆதலால், தன் சிறகறுதற்குக் காரணமான விதியே, தருமம் சிதைவுறு

தற்கும் காரணமாயிற்று என்பதைத் தெளிவுபடுத்தியவாறு. மேல் இனிச் செயல் என்னும்கொலோ என்பதற்குச் சிறகிழந்த என்னல் இனி எச்செயல் செய்ய இயலும்? என்று பொருள் கூறலுமாம். கொல், ஓ, அசைகள். (140)

3557. வெற்றிய ருளரெனின் மின்னி னுண்ணிடைப்
பொற்றொடிக் கிந்நிலை புகுதற் பாலதோ
வுற்றதை யின்னதென் றுணர கிற்றிலேன்
சிற்றவை வஞ்சனை முடியச் செய்ததோ.

"வெற்றியர் உளர் எனின், மின்னின் நுண் இடைப்
பொன் தொடிக்கு, இந்நிலை புகுதற் பாலதோ?
உற்றதை இன்னது என்று உணரகிற்றிலேன்;
சிற்றவை வஞ்சனை முடியச் செய்ததோ?"

பொ :—"எவரிடத்தும் வெற்றி பெறுதற்குரிய வீரராகிய இராம இலக்குவர் சீதையோடு இருந்திருப்பாராயின், மின்னலைப் போன்ற நுண்ணிய இடையையுடைய, பொன்னலாய தொடியினையணிந்த அச்சீதைக்கு இந்த இழிநிலை நேர்ந்திருக்குமா? (அவர்களில்லாமையினல்தான் இது நேர்ந்தது) அவ்விராம இலக்குவர்க்கு நேர்ந்தது இன்னது என்று உணர்ந்து கொள்ள இயலாதவனாக இருக்கின்றேன்; சிறிய தாயாகிய கைகேயியின் வஞ்சனைதான் அவர்கள் முடியுமாறு செய்துவிட்டதோ?"

கு :—இராவணன் எடுத்துச் செல்லும்போது சீதையின் குரல் கேட்டு விரைந்து சென்று தடுத்தானேயன்றி இராம இலக்குவர் என்ன ஆயினர் என்பதைச் சடாயு அறிந்துகொள்ள வாய்ப்பில்லை; சீதை சொல்லவும் வாய்ப்பில்லை; ஆதலால் இப்பொழுது சிந்திக்கின்ருன். இராம இலக்குவர் யார்க்கும் தோலாதவர் என்ற கருத்தால், 'வெற்றியர்' என்று அவர்க்குப் பெயர் கொடுத்தான். அவர்கள் சீதையுடன் இருந்திருப்பின் இராவணனைக் கொன்றிருப்பர்; அவன் சீதையைக் கவரும் இழிநிலை நேர்ந்திராது; அவன் கவர்ந்து செல்கின்றமையால், இராம இலக்குவர் சீதையுடன் இல்லை என்று, அருத்தாபத்தியால் உய்த்துணர்ந்து, அவர்க்கு என்ன நேர்ந்ததோ என்று ஐயமுறுகின்ற சடாயு, நாடாளாது காடாளச் செய்த சிற்றன்னையின் வஞ்சனை அவரை இவ்வுலகிலும் வையாது மேலுலகிற்குச் செலுத்தியதோ? என்று கருதலானன். பகைவரால் அழிவுருத வெற்றியாதலின் சிற்றன்னையின் வஞ்சனைச் செயலாலன்றிப் பிறரால் முடிந்திருக்க இயலாது என்பது அவன் கருத்து. இராமன்பால்

அன்புள்ள குகனும் இலக்குவனும் பரதன் படையுடன் வருதல் கண்டு இவ்வாறு ஐயுற்றமை முன்னரே அறிந்தது. அவர்க்குற்றதை முன்னம் அறியாமையேயன்றி இனிப் பறந்து சென்று அறியும் ஆற்றலும் தனக்கின்மை தோன்ற 'உணரகிற்றிலேன்' என்றான். கில் ஆற்றல் உணர்த்தி நின்றது. உற்றதை என்புழி ஐ சாரியை. (141)

3558. பஞ்சணை பாம்பணை யாகப் பள்ளிசே
ரஞ்சன வண்ணனே யிராம னாதலால்
வெஞ்சின வரக்கனால் வெல்லற் பாலனோ
வஞ்சனை யிழைத்தனன் கள்ள மாயையால்

"பஞ்சு அணை பாம்பு அணை ஆகப் பள்ளி சேர்
அஞ்சன வண்ணனே இராமன்; ஆதலால்,
வெஞ்சின அரக்கனால் வெல்லற்பாலனோ?
வஞ்சனை இழைத்தனன், கள்ள மாயையால்."

பொ :—"ஆதிசேடனாகிய அரவணையையே படுத்தற்கு உரிய பஞ்சணையாகக் கொண்ட திருமாலே இராமனாக வந்துள்ளான் ஆதலால், கொடிய கோபத்தையுடைய இராவணனால் வெல்லப்படுதற்குரியவனோ? அல்லன்; கள்ளமிக்க மாயையால், (அவர்கள் அவளைப் பிரிந்து செல்லுமாறு) ஏதோ வஞ்சனை செய்திருக்கின்றான்."

கு :—அஞ்சனவண்ணன் - மைபோன்ற கரிய நிறத்தையுடைய திருமால். பஞ்சணை - பஞ்சுமெத்தை. முன்னைச் செய்யுளில் இராம இலக்குவர் பிறிதுற்றனரோ? என்று ஐயுற்றவன், மேலும் சிந்தித்து, அவர்கள் உடனிருக்கவும் அவர்களை வென்று இராவணன் கவர்ந்திருக்கலாகாதோ? என்ற கருத்துத் தோன்ற, அஞ்சனவண்ணனே இராமனாதலால் அரக்கனால் வெல்லற்பாலனோ? என்று வினவி அமைதி செய்துகொண்டு, 'கள்ள மாயையால் வஞ்சனை இழைத்தனன்' என உய்த்துணர்ச்சியால் துணிந்தவாறு. இதனால் சடாயு உய்த்துணர்ச்சியில் சிறந்தோனாதல் தெளியலாம். கள்ள மாயை - பிறர் அறியவியலாத மாயச் செயல். வெல்லற்பாலனோ என்புழி ஓகாரம் வெல்லற்பாலனல்லன் என்ற எதிர்மறைப் பொருளையுணர்த்தியது. (142)

3559. வேரற வரக்கரை வென்று வெம்பழி
தீருமென் சிறுவனுந் தீண்ட வஞ்சுமா

லாரியன் றேவியை யரக்க னன்மலர்ப்
பேருல களித்தவன் பிழைப்பில் சாபத்தால்.

"வேர் அற அரக்கரை வென்று, வெம்பழி
தீரும், என் சிறுவனும்; தீண்ட அஞ்சுமால்
ஆரியன் தேவியை அரக்கன், நல் மலர்ப்
பேர் உலகு அளித்தவன் பிழைப்பு இல் சாபத்தால்."

பொ :—"என் சிறுவனுகிய இராமனும் அரக்கரை வேரோடு அறுமாறு வென்று, தனக்குண்டாய கொடிய பழி நீங்குவான்; சிறந்த தாமரை மலரில் தங்கிப் பெரிய உலகத்தைப் படைத்த பிரமனின் பிழையாத சாபத்தால் இராவணன், இராமனுடைய தேவியைத் தீண்ட அஞ்சுவான்."

கு :—என் சிறுவனும் பழி தீரும்; சாபத்தால் அரக்கன் தீண்ட அஞ்சும் என இயையும். சிறுவன் என்றது மகன் என்னும் பொருளது. வெம்பழி என்றது, மனையாளை மாற்ருன்கொள விடுத்தவன் என்னும் பழி. 'போர்வலான் விற்பழியுண்டது' என முன் சீதை கூறியதும் நினைக்க. தீரும், அஞ்சும் என்பன செய்யும் என் முற்றுக்கள். ஆரியன் என்றது இராமனை; தலைமையுடையவன் என்னும் பொருளது. நன்மலர் என்றது, பூவினுள் சிறந்த தாமரை மலரை. மலரிலிருந்து உலகளித்தவன் என்க. அளித்தல் இங்குப் படைத்தலை யுணர்த்தியது; பிரமன் என்பது கருத்து. பிழைப்பில் சாபம் - தவறுபடாத சாபம்; ஆவது, 'மேவும் சிந்தையில்லாத மாதரை மெய் தொடின் நீ தலைசிந்துக' என்பது. இச்சாபமுள்ளதைச் சீதையும் அநுமானுக்குக் கூறுகின்ருள். "மேவுசிந்தையின் மாதரை மெய் தொடின், தேவு பொன்தலை சிந்துகநீ எனப், பூவின்வந்த புராதனனே புகல், சாவமுண்டு, எனது ஆருயிர் தந்ததால்" (சுந்தர. 627) என்பது காண்க. இராமனும் அரக்கனைக் கொன்று பழிதீருவான்; சீதையும் இராவணனல் தொடப்பெருது கற்பின் தூய்மையைக் காத்துக் கொள்வாள் எனச் சடாயு மனவமைதி பெற்றவாறு. வரும் செய்யுளும் அன்னதே. (143)

**3560.** பருஞ்சிறை யின்னன பன்னி யுன்னுவா
னருஞ்சிறை யுற்றன ளாமெஞ மனம்
பொருஞ்சிறை யற்றதேற் பூவை கற்பெனு
மிருஞ்சிறை யிருதென விடரு நீங்கினன்.

பருஞ்சிறை இன்னன பன்னி உன்னுவான்;
"அருஞ்சிறை உற்றனளாம்" எஞ, மனம்

'பொரும் சிறை அற்றதேல், பூவை கற்பு எனும்
இரும் சிறை இருது' என, இடரும் நீங்கினன்.

பொ :—பெரிய சிறகுகளையுடைய சடாயு இத்தன்மையான சொற்களைச் சொல்லிவிட்டு, "(சீதை) நீங்குதற்கு அரிய சிறைச்சாலையை அடைந்தாளே ஆம்" என்று மனதில் எண்ணித் துன்புறுகின்றவன், (பின்) "என் போர் செய்தற்கு உரிய சிறகு அற்றதாயினும், நாகணவாய்ப் பறவை போன்ற சீதையின் கற்பு என்கின்ற பெரிய சிறை (காவல்) அழிவடையாது" என்பதை எண்ணி முன்னைய துன்பமும் நீங்கினன்.

கு :—பருஞ்சிறை என்பது, பெரிய சிறகுகளையுடையவன் எனப் பண்புத்தொகைநிலைக்களத்துப் பிறந்த அன்மொழித்தொகையாய்ச் சடாயுவுக்குப் பெயராயிற்று. இராவணன் சீதையைத் தொடானேயாயினும் அவன்பால் சிறைப்பட்டாள் என்ற பழி சீதைக்கு உண்டாகுமே என்பதை நினைந்து முன்வருந்திய சடாயு, பின் கற்பினின்றும் அவள் எக்காரணத்தாலும் வழுவமாட்டாள் என்ற துணிவால் துன்பம் நீங்கினன் என்க. பொருஞ் சிறை - போர் செய்த சிறகுகள்; சீதையின் கற்பைக் காக்க முயன்றமையால் காவல் என்ற பொருளையும் உணர்த்தி நின்றது. "சிறைகாக்கும் காப்பெவன் செய்யு மகளிர், நிறைகாக்கும் காப்பே தலை," (குறள் - 57) என்பதைப் பின்னிரண்டடிகள் நினைவூட்டல் காணலாம். 'காவலிரண்டினும் நிறைக்காவல் இல்வழி ஏனைச் சிறைக்காவலால் பயனில்லை என்பார், நிறைகாக்கும் காப்பே தலையென்றார்' என்ற பரிமேலழகர் விளக்கமும் இங்குச் சொல்வகையால் பொருந்தி நிற்றல் காணலாம். தலையாய நிறைக்காவல் இருதபோது சிறையாகிய காவல் இற்றதாயினும் குறையில்லை என்றவாறு. "கற்பழியாமை என் கடமை" எனச் சீதை முன்கூறியதால் கற்பெனும் இருஞ்சிறையிருமை யுறுதியாயிற்று. மதிலும் வாயிற்காவலும் முதலிய சிற்றையினும் பெருமையுடைமை பற்றிக் கற்பு 'இருஞ்சிறை' எனப்பட்டது. இதனால், சீதை சிறையுற்றதற்கும் தன் சிறையற்றதற்கும் வருந்தவேண்டிய சடாயு அது செய்யாதிருந்தான் என்பது புலப்படுத்தியவாறு. (144)

**3561.** அஞ்சிறைக் குருதியா றழிந்து சோர்வுற
வஞ்சியை மீட்கிலே னென்னு மானமுஞ்
செஞ்செவே மக்கள்பாற் சென்ற காதலு
நெஞ்சுறத் துயின்றன னுணர்வு நீங்கலான்.

அம் சிறைக் குருதி யாறு அழிந்து சோர்வுற,
"வஞ்சியை மீட்கிலேன்" என்னும் மானமும்,

செஞ்செவே மக்கள்பால் சென்ற காதலும்,
நெஞ்சு உறத் துயின்றனன், உணர்வு நீங்கலான்.

பொ :—அழகிய சிறகுகளிலிருந்து இரத்த வெள்ளம் முன்னைய வேகம் தணிந்து சிறிதுசிறிதாக ஒழுகாநிற்க, வஞ்சிக்கொடி போன்ற சீதையை யான் மீட்க முடியவில்லையே என்ற அவமானமும், தன் மக்களிடத்தில் செவ்விதாகச் சென்ற அன்பும், தன் நெஞ்சில் நிறைந்து நிற்க, உணர்வு நீங்கப் பெருதவனாய் உறங்கினன்.

கு :—குருதியாறு சோர்வுற, மானமும் காதலும் நெஞ்சுற, உணர்வு நீங்கலானாய்த் துயின்றனன் என இயையும். வெட்டுண்டதும் சிறகுகளில் பீறிக்கொண்டு வேகமாய் வந்த இரத்தவெள்ளம் போலாது, இப்பொழுது தணிந்து சிறிது சிறிதாகச் சேர்ந்தது வழிந்தது என்க. பெரிய சிறகு ஆதலின் அது வெட்டுண்டவழிப் பெருகிய குருதியின்மிகுதி புலப்படுத்தக் 'குருதியாறு' என்ருர். வஞ்சி, உவம ஆகுபெயராய்ச் சீதையை யுணர்த்தியது. மானம் - அவமானம் ; "மானந்தலைவருவ செய்பவோ" (நாலடி - 198) என் புழியும் இச்சொல் இப்பொருளதா தல் காணலாம். செஞ்செவே சென்ற காதல் என இயையும். செவ்விதாகச் சென்ற அன்பு என்க. தயரதன் தோழன் ஆதலின், அவன் மக்களைத் தன் மக்களாகவே சடாயு கொண்டமை முன்னரே அறிந்தது. சிறகு வெட்டுண்ட துன்பத்தில் வந்த துக்கம் ஆதலின், உணர்வுநீங்காமலே இருந்தது. சீதையை மீட்க இயலவில்லையே என்ற அவமான வுணர்ச்சியும் இராம இலக்குவரைக்காணவேண்டும் என்ற அன்புணர்ச்சியும் அவன் நெஞ்சில் ஒன்றன்பின் ஒன்ருக அழுந்தப் பதிந்துவிட்டதாகலின் 'மானமும் காதலும் நெஞ்சுற' என்ருர். வெட்டுண்ட சிறகுகளின் சிறப்புத் தோன்ற மேலைச் செய்யுளில் 'பருஞ்சிறை' என்றும் இச் செய்யுளில் 'அஞ்சிறை' என்றும் பாராட்டினர். (145)

27, 45, 52 என்ற எண்ணுள்ள பிரதிகளில் இச்செய்யுட்குப் பின் கீழ்வரும் மிகைப் பாடல்கள் காணப்படுகின்றன.

3561. (a) சடாயுவைத் தடிந்த வாளைச்
சடுதியில் விதிர்க்கக் கண்டாள்
தடாலெனக் கபாடஞ் சாத்திச்
சாலையுள் சலித்தாள் அந்தோ ;
விடாதட மண்ணை விண்மேல்
விரைந்தெடுத் துச்சி வேட்டான்
குடாமதிக் கோனைச் சேரும்
கோமுகன் குறளி ஒத்தான்.

3561. (b) பெண்ணைவிட் டமைந்திடின் பிழைய தாமென
உண்ணிறை கூடமு முவந்த சாலையும்,
மண்ணினி லிராமன்மார் பமர்ந்த வாதியும்
விண்ணினில் மேதினி வேண்டி யெய்தினுள்.

3561. (c) முன்னமே பூமியை முகந்து பாதலம்
தன்னிலே தரித்தன சயமுந் தந்திலது
என்னவே மாகம்மீ தேகினுன் செய
உன்னியே யிராவண னுவந்த தொத்தரோ.

3561. (d) சடாயுவுஞ் சாய்ந்தனன் சனகி சாய்ந்தனள்
விடாசெய மேதியும் பிரகேதி வேறுளோர்
தொடாமறைக் கிரியையும் சுவைத்த கோமகன்
அடாதமேற் செயலெலாம் அமைத்த லென்சயம்.

3561. (e) மூன்றுபத் தொருபது முந்து யோசனை
யேன்றது; பாவையு மேதென் றெண்ணுமுன்
தோன்றினன் சுபாரிசன் தொழுது தொல்லுல
கீன்றவ ளிவளென விசைத்தி றைஞ்சியும்.

3561. (f) இசைக்கட லுறைபவ இலங்கை வேந்தனீ
திசைப்படாப் புவனமுன் செல்வ மென்னதோ
வசைக்கடல் வாழ்விது வழக்கென் றெண்ணியோ
துசக்கடல் மொழிசொலத் தொழுது போயினுன்.

## சீதையை அசோகவனத்தில் சிறை வைத்தல்

3562. வஞ்சியை யரக்கனும் வல்லை கொண்டுபோய்ச்
செஞ்செவே திருவுருத் தீண்ட வஞ்சுவா
னஞ்சிய லரக்கியர் நடுவ ணுயிடைச்
சிஞ்சுப வனத்திடைச் சிறைவைத் தானரோ.

வஞ்சியை அரக்கனும் வல்லை கொண்டுபோய்ச்
செஞ்செவே திருவுருத் தீண்ட அஞ்சுவான்
நஞ்சு இயல் அரக்கியர் நடுவண் ஆயிடைச்
சிஞ்சுப வனத்திடைச் சிறைவைத்தான் அரோ.

பொ:—இராவணனும் சீதையை விரைவாக எடுத்துக்கொண்டு இலங்கைக்குச் சென்று அவள் திருவுருவை நேரே தீண்ட அஞ்சுகின்றவனுய் அவ்விலங்கையில் உள்ள சிஞ்சுபவனத்தில் நஞ்சின் இயல்பையுடைய கொடிய அரக்கியர்களின் நடுவில் சிறைவைத்தான்.

கு :—வல்லே - விரைவு. செஞ்செவே - நேராக. சீதையிருந்த தரையைத் தொட்டதன்றி நேரே சீதையை இராவணன் தீண்ட வில்லே என்பதை நினைக்க. திருவுருத் தீண்ட அஞ்சுவான் ஆதலின், சீதையின் உள்ளம் இசையவேண்டிச் சிஞ்சுபவனத்தில் அரக்கியர் இடையில் சிறைவைத்தான் என்க. அரக்கியரின் கொடுமை புலப் படுத்த நஞ்சியல் அரக்கியர் என்ருர். சிஞ்சுபம் - மரவிசேடம். அரக் கனும் வஞ்சியைக் கொண்டுபோய் ஆயிடைச் சிஞ்சுபவனத்தில் அரக்கியர் நடுவண் சிறை வைத்தான் என இயையும். அஞ்சுவாளுய் என முற்றெச்சமாக்கி, வைத்தான் என்பதோடு முடிக்க. இச்செய் யுளும் வருஞ் செய்யுளும் கவிக் கூற்று. (146)

இச்செய்யுளின்பின் 53-ஆம் எண்ணுள்ள சுவடியில் பின்வரும் மிகைப்பாடல் காணப்படுகின்றது.

3562. (1) தேன்றிரு மிராவணன் சேற வென்றெதிர்ந்
தூன்றுசெம் பாதிசேய் தூண்டத் தூண்டிட
மூன்றுதன் பதத்திலொன் றிழிந்த மொய்கரத்
தூன்றுதண் டொடிந்தென வீழ வோடினன்.

### கவிக் கூற்று

3563. இந்நிலே யினையவன் செயலி யம்பினும்
பொன்னிலே மானின்பின் ருெடர்ந்து போகிய
மன்னிலே யறிகென மங்கை யேவிய
பின்னிளே யவனிலே பேசு வாமரோ.

இந்நிலே இனையவன் செயல் இயம்பினும்;
"பொன் நிலே மானின் பின் தொடர்ந்து போகிய
மன் நிலே அறிக" என மங்கை ஏவிய
பின் இளேயவன் நிலே பேசுவாம் அரோ.

பொ :—இவ்வாருக இந்த இராவணன் செயலேச் சொன்னேம்; பொன்னிறம் நிலேபெற்ற மானின்பின் தொடர்ந்து சென்ற தலேமகனுகிய இராமன் நிலேயைச் சென்று அறிவாயாக என்று சீதை கட்டளேயிட்டு அனுப்பியபின் இலக்குவனுடைய நிலேயாது என்பதை இனிச் சொல்லுவோமாக.

கு :—பொன் இங்கு நிறத்தைக் குறித்தது. மன் என்றது இரா மனே. மங்கை என்றது, பருவங்குறியாது, சீதையாகிய பெண் என்

னும் பொருளதாய்நின்றது. இராவணன் செயலைச் சொன்னோம்; இனி, இலக்குவன் செயலைச் சொல்வோம் என்று நுதலிப்புகுகின்றார் கவி. (147)

## இலக்குவன் துயர்நிலை

3564. ஒருமக டனிமையை யுன்னி யுள்ளுறும்
பருவரன் மீதிடப் பதைக்கு நெஞ்சினன்
பெருமகன் றனைத்தனிப் பிரிந்து பேதுறுந்
திருநகர்த் தீருமப் பரதன் செய்கையான்.

ஒருமகள் தனிமையை உன்னி, உள் உறும்
பருவரல் மீதிடப் பதைக்கும் நெஞ்சினன்,
பெருமகன்தனைத் தனிப் பிரிந்து பேதுறும்
திருநகர்த் தீரும் அப் பரதன் செய்கையான்.

பொ:—சீதை என்கின்ற ஒரு பெண்ணின் தனிமையை நினைந்து உள்ளத்தில் பொருந்திய துன்பம் மேலும் மேலும் பெருகப் பதைக்கின்ற நெஞ்சினையுடைய இலக்குவன், பெருமகனாகிய இராமனைப் பிரிந்து தனித்து வருந்துகின்ற அயோத்தியென்னும் அழகிய நகரமாகிய பெண்ணை விட்டுப் பிரிந்த பரதன் போன்று இராமனைத் தேடிச்செல்லும் செய்கையுடையவனானான்.

கு:—ஒரு மகள் என்றது சீதையை. துணையாவார் ஒருவரும் இலாதவள் என்பதைப் புலப்படுத்த, 'ஒரு மகள்' என்றார். ஒப்பற்ற பெண் எனலும் ஆம். 'பெருமகன்றனைப் பிரிந்து பேதுறும்' என்ற திருநகர்க்கு உரிய அடையை ஒருமகளுக்கும், தனிமையை யுன்னி யுள்ளுறும் பருவரன் மீதிடப் பதைக்கும் என்ற இலக்குவனுக்குரிய அடையைப் பரதனுக்கும் இயைக்க. பிரிந்து பேதுறும் என்ற வினையால் 'திருநகராகிய பெருமகள்' என்ற குறிப்புருவகம் பெறப்படும். இதனால் இராமனைப் பிரிந்து வருந்தும் சீதையின் தனிமையை நினைந்து இலக்குவன் துன்பத்தால் பதைத்தல் போலவே, இராமனாகிய மன்னவனைப் பிரிந்து வருந்தும் அயோத்தி நகரின் தனிமையை நினைந்து துன்ப மேலிட்டுப் பரதன் பதைபதைத்தான் என்பதும், அயோத்தி நகரமாகிய பெண் பெருமகனைப் பிரிந்து தனித்துயர் எய்தியது போலவே, சீதை இராமனைப் பிரிந்து அவன் குரல் கேட்டபோது தனியே பேதுற்றாள் என்பதும் புலனாம். இராமனைப் பிரிந்து வருந்தும் அயோத்தி நகரின் துன்ப நிலையைக் கண்ட பரதன், 'மன்னன் வைகும் வளநகர் போலுமீது? என்ன

தன்மை யிளையவனே' எனவும், "கருங்கார்புரை தோற்றத்தான் சேற்றடங்கண் திருவொடும் நீங்கிய பாற்றடங்கடல் ஒத்தது பார்" (2226, 2227) எனவும் சத்துருக்கனுக்குக் காட்டி வருந்தினமை இங்கு நினைதற்குரியது. "மொய்யழல் கொடிப் படிந்ததென, நெடுங் கோளரா இடிக்குடைந்ததெனப் புரண்டேங்கினள்" (3) என முன் இராமனைப் பிரிந்து வருந்தும் சீதையின் துயர்நிலை கூறப்பட்டிருத்தல் காணலாம். திருநகர்த்தீரும் பரதன் செய்கையான் என்ற உவமையால், சீதையைத் தனியே விடுத்து இராமனை நாடி இலக்குவன் சென்றான் என்பது பெறப்படும். பரதன் செய்கையாவது அதுவே யாதல் தெளிக. தனிப் பேதுறும் என்றியைக்க. (148)

## இலக்குவன் இராமனைக் காணுதல்

**3565.** தெண்டிரைக் கலமென விரைவிற் செல்கின்றான்
புண்டரீ கத்தடங் காடு பூத்தொரு
கொண்டல்வந் திழிந்தன கோலத் தான்றனைக்
கண்டனன் மனமெனக் களிக்குங் கண்ணினான்.

தெண் திரைக் கலம் என விரைவில் செல்கின்றான்,
புண்டரீகத் தடம் காடு பூத்து, ஒரு
கொண்டல் வந்து இழிந்தன, கோலத்தான் தனைக்
கண்டனன், மனம் எனக் களிக்கும் கண்ணினான்.

பொ:—தெளிவான அலைகளையுடைய கடலில் செல்லும் மரக்கலம் போல, விரைவில் செல்கின்றவனாகிய இலக்குவன், தாமரைகளாகிய பெரிய காட்டைப் பூத்துக்கொண்டு ஒரு கரிய மேகம் தரையில் வந்து இறங்கினாற்போன்ற அழகுடைய இராமனைத் தன் மனம்போலக் களிக்கும் கண்ணினால் கண்டான்.

கு:—செல்கின்றான் வினைப்பெயர்; செல்கின்றவனாகிய இலக்குவன், கண்ணினான் கண்டான் என இயையும். தங்கு தடையின்றி விரைந்து செல்லுதற்குத் தெண்டிரைக்கலம் தக்க உவமையாம். கொண்டல் காடு பூத்து இழிந்தன கோலத்தான் என்க. இராமன் கரிய மேனியனாய்க் கண்ணும் கையும் வாயும் அடியும் செய்யனாய் இருத்தல்பற்றி இவ்வாறு இல்பொருளுவமை கூறினார். "திருவடியும் கையும் திருவாயும் செய்ய, கரியவனைக் காணாத கண்ணென்ன கண்ணே" (சிலப். ஆய்ச்சியர்குரவை - 36) என இளங்கோவடிகளும், 'கருமுகில் தாமரைக் காடு பூத்து' (192) எனப் பாலகாண்டத்து

இந்நூலாசிரியரும் கூறியுள்ளமை இங்கு நினைவுகூர்தற்குரியன. கண்ணினன் என்புழி, ஆன் மூன்றனுருபு. கண்ணினனாய் என முற்றெச்சமாக்கலும் ஆம். மனத்தோடு கூடியவழியன்றிக் கண் செயற்படாதாயினும் மனம் களிக்குங்கால் கண்ணும் மலர்ச்சி மிகவுடையதாய்க் காணப்படும் இயல்புபற்றிக் கண்ணிற்கும் களிப்புக் கூறினர். இராமன் குரலால் மாரீசன் கதறியது கேட்டு, 'குற்றம் வீந்த குணத்தினெங் கோமகன் மற்றை வாளரக்கன்புரி மாயையால் இற்று வீழ்ந்தனன்' என்று சீதை நினைந்து கூறியதைக் கேட்டு, வந்த இலக்குவன், தன் கூற்றின்படியே இராமன் இடையூறு சிறிதும் இன்றி எதிர்வரக் கண்டபோது, கண்ணும் மனமும் களித்தல் சொல்லவேண்டுமோ ? தயரதன் ஆணைப்படி இராமனை அழைக்கச் சென்ற சுமந்திரன், இராமனழகைக் களிப்புடன் கண்ட நிகழ்ச்சியை, 'அண்ணலாண்டிருந்தா னழகு அருநறவென்னக் கண்ணும் உள்ளமும் களிப்புறக் கண்டான்' (1448) என்பதும் இங்கு ஒப்புநோக்குதற்குரியது. (149)

## இராமன் இலக்குவனைக் காணுதல்

**3566.** துண்ணெனு மவ்வுரை தொடரத் தோகையும்
பெண்ணெனும் பேதமை மயக்கப் பேதினு
லுண்ணிறை சோருமென் றூச லாடுமக்
கண்ணனு மிளவலைக் கண்ணுற் ருனரோ.

"துண்ணெனும் அவ்வுரை தொடரத் தோகையும்
பெண் எனும் பேதமை மயக்கப் பேதினல்
உள் நிறை சோரும்" என்று, ஊசலாடும் அக்
கண்ணனும் இளவலைக் கண்ணுற்றான் அரோ.

பொ :—"கேட்டவர் திடுக்கிடத்தக்க (இலக்குவா ! சீதா ! என்று மாரீசன் சொல்லிய) அச்சொல் செவியில்படப்பெற்ற சீதையும் பெண்மை என்கின்ற தன் அறியாமை மயக்குதலால். உண்டான வருத்தத்தால் உள்ளத்தின் உறுதி தளர்வாள்" என்று எண்ணி ஊசல்போல் மனந்தடுமாறுகின்ற அந்த இராமனும் தன் இளவலைக் கண்டான்.

கு :—'துண்' என்பது அச்சத்தை யுணர்த்தும் குறிப்புச் சொல். 'துண்ணெனும் வினைத்தொழில் தொடங்கியுளளேனும்' (பால - 395) என்றார் முன்னும். அவ்வுரை என்புழி அகரம் நெஞ்சறிசுட்டு. தொடர்தலாவது செவியிற் சேர்தல். தோகை என்றது சினையாகு

பெயராய் மயிலையும், உவமையாகுபெயராய்ச் சீதையையும் உணர்த்தி இருமடியாகுபெயராய்நின்றது. 'பெண்ணறிவெனும் பேதைமை' யென்பார், ஒற்றுமை நயத்தால் பெண்ணெனும் பேதைமை என்ருர். 'நுண்ணறிவுடையோர் நூலொடு பழகினும், பெண்ணறிவென்பது பெரும் பேதைமைத்தே" என்ற ஆன்ருேர் வாக்கை இப்பகுதி நினைவுறுத்தல் நோக்குக. மயக்கச் சோரும் என்று இயையும். பேது - வருத்தம் ; 'பெருமகன்றனைத்தனிப் பிரிந்து பேதுறும்' என (148) முன்னும் இப்பொருளில் வந்திருத்தல் காணலாம். உள்நிறை - உள்ளத்தின் உறுதி. சோர்தலாவது தளர்தல்; நிலைகுலைதல். இலக்குவனுல் காணப்பட்ட அக்கண்ணனும் என அகரம் பண்டறி சுட்டாய்நின்றது. உம்மை இறந்தது தழீஇய எச்சம். கண்ணன் - இராமன் ; கண்ணழகுடைமையால் பெற்ற பெயர். யாவர்க்கும் கண் போன்று சிறந்தவன் ; யாவர் கண்ணிலும் இருப்பவன் என்ற காரணங்களும் அப்பெயர்க்குண்டு. ஊசலாடும் அக்கண்ணன் இளவலைக் கண்ணுற்றதனுல் தான் நினைந்தாங்கே நிகழ்ந்தது என்பதை அறிந்தான் என்க. "நெஞ்சு நடுக்குறக் கேட்டுங் கடுத்துந்தாம், அஞ்சிய தாங்கே யணங்காகும் என்னும் சொல், இன்றீங்கிளவியாய் வாய்மன்ற" (கலி - 24) என்பது இங்கு ஒப்புநோக்கத்தகும். (150)

## இலக்குவன் வருதல் கண்டு இராமன் சிந்தித்தல்

3567. புன்சொற்க டந்த பகுவா யரக்க
☆ னுரைபொய் யெனுது புலர்வாள்
வன்சொற்க டந்து மடமங்கை யேவ
நிலைதேர வந்த மருளே
தன்சொற்க டந்து தளர்கின்ற நெஞ்ச
முடையேன் மருங்கு தனியே
யென்சொற்க டந்து மனமுந்த ளர்ந்த
விளவீரன் வந்த வியல்பே.

"புன்சொற்கள் தந்த பகுவாய் அரக்கன்
உரை பொய் எனுது, புலர்வாள்
வன் சொற்கள் தந்து மடமங்கை ஏவ,
நிலை தேர வந்த மருளே
தன் சொல் கடந்து தளர்கின்ற நெஞ்சம்
உடையேன் மருங்கு, தனியே
என் சொல் கடந்து, மனமும் தளர்ந்த
இளவீரன் வந்த இயல்பே."

பொ :—இது உண்மை மான் அன்று என்று தெளிந்து கூறிய தன் சொல்லைக் கடந்து அதனால் என்ன நேருமோ என்று தளர்ச்சி யுறுகின்ற மனமுடைய என்னிடம், 'சீதையைக் காத்திரு' என்று கூறிய என் சொல்லைக் கடந்து, உடம்போடு மனமும் தளர்ந்துள்ள இளைய வீரனாகிய இலக்குவன் தனியே வந்த தன்மை, கீழ்மையான சொற்களையே பேசிப் பழகிய பிளந்தாற்போன்ற வாயையுடைய அரக்கன் கூறிய, 'இலக்குவா, சீதே' என்ற சொல்லைப் பொய் என்று கருதாது, வாடுகின்றவளாகிய அறியாமையுடைய சீதை, கொடுஞ்சொற்கள் சொல்லி ஏவுதலால் உண்மை நிலையை அறிதற் காக வந்த மயக்கமான செயலேயாம்.

கு :—நல்ல சொற்கள் பயிலாத வாய் என்பார், 'புன்சொற்கள் தந்த பகுவாய் அரக்கன்' என்று அரக்கனது வாயின் இழிபை யுணர்த்தியவாறு. அரக்கன் உரை யென்றது, மாரீசன், இராமன் அம்பால் இறந்து வீழுங்கால் குரலை மாற்றிக்கொண்டு இலக்குவா! சீதே! என்று விளித்த சொல்லை. அவ்வுரை வஞ்சகமாகக் கூறியதே யாகலின் பொய்யென்று கருதுதலே முறையாகவும், அங்ஙனங் கொள்ளாது, உள்ளமும் உடம்பும் வாடுவாளாய்க் கடுஞ் சொற்களைச் சொல்லி இலக்குவனை ஏவுதற்கு அவள் மடமையே காரணம் என்பது புலப்படச் சீதையை 'மடமங்கை' என்றான். ஏவ வந்த, நிலைதேர வந்த என்க. நிலை என்றது உண்மை நிலையை. தேர்தலாவது, ஆராய்ந்தறிதல். மருளாவது ஒன்றைப் பிறிதொன்றாகக் கருதும் மயக்க உணர்ச்சி. இலக்குவனுக்கு அம்மயக்கம் இல்லையாயினும் மடமங்கை ஏவ வந்த செயலாதலின் அவன் செயலும் மருளே எனக் கூற நேர்ந்தது. ஏகாரம் தேற்றம். மேல் ஊசலாடுமுள்ளத்தான், இலக்குவனைக் கண்டவுடன் தெளிந்து கூறுகின்றானாகலின் தேற்றப் பொருளதாதல் காணலாம். இலக்குவன் சொல் உண்மையாதலை உணர்ந்தானாகலின் இராமன், 'தன்சொற் கடந்து தளர்கின்ற நெஞ்சமுடையேன்' என்று கூறிக்கொள்கின்றான். தன்சொற் கடந்த என்பால் என்சொற் கடந்து தான் வர நேர்ந்ததற்கு இலக்குவன் வருந்துகின்றான் என்பான், 'மனமுந் தளர்ந்த இளவீரன்' என்றான். உம்மையால் உடம்பும் தளர்ந்தமை பெறவைத்தவாறு. எனக்கு இடர் நேர்ந்ததாக எண்ணிய சீதையையும் உடனழைத்துவர லாகாதா? என்பான், 'தனியே இளவீரன் வந்த இயல்பு மருளே' என்றான். இயல்பே என்புழி ஏகாரம் ஈற்றசை. தளர்தற்குரியன் அல்லன் என்பது தோன்ற 'தளர்ந்த இளவீரன்' என்றான். (151)

### இராமன் இலக்குவனை வினவுதல்

3568. என்றுன்னி யென்னை விதியார் முடிப்ப
தெனவெண்ணி நின்ற விறையைப்
பொன்றுன்னு விற்கை வயவீரன் வந்து
புனைதா ளிறைஞ்சு பொழுதின்
மின்றுன்னு நூலின் மணிமார் பழுந்த
விரைவோடு புல்லி யுருகா
நின்றுன்னி வந்த நிலையென்கொ லென்று
நெடியோன் விளம்ப நொடிவான்.

என்று உன்னி, "என்னை விதியார் முடிப்பது?"
என எண்ணி நின்ற இறையைப்
பொன் துன்னு வில் கை வய வீரன் வந்து
புனைதாள் இறைஞ்சு பொழுதில்
மின் துன்னு நூலின் மணி மார்பு அழுந்த,
விரைவோடு புல்லி, உருகா,
நின்று, "உன்னி, வந்த நிலை என்கொல்?" என்று,
நெடியோன் விளம்ப, நொடிவான்.

பொ:—என்று முடிவு செய்துவிட்டு, "விதி முடிக்க இருப்பது இனி என்னையோ?" என்று சிரித்துக்கொண்டு நின்ற இராமனை, அழகு பொருந்திய வில்லேந்திய கையையுடைய வலிமிக்க வீரனாகிய இலக்குவன் நெருங்கி வந்து, அவனுடைய அழகிய திருவடிகளில் வீழ்ந்து வணங்கியபோது, மின்னற்கொடி போன்ற பூணூலினை யுடைய அவன் அழகிய மார்பில் தன் மார்பு அழுந்துமாறு விரைவோடு தழுவிக்கொண்டு உளமுருகி நின்று, "நீ நினைத்து வந்த காரணம் என்னை?" என்று இராமன் கேட்க, இலக்குவன் கூறுவான்.

கு:—முதலடியில், 'உன்னி' என்பது முடிவு செய்து என்னும் பொருளது. விதியார் என்புழி, ஆர் உயர்த்தற்கண் வந்தது. சீதை தனிமையில் இருப்பதால் அரக்கர் செய்த திட்டத்தின்படி கவர்ந்திருத்தல் கூடும் என்ற எண்ணத்தனாகலின், 'விதியார் முடிப்பது என்னையோ' என்றான். இனி வரவிருக்கும் துன்பநிலை யாதோ? என்பது கருத்து. இறை, நெடியோன் என்றது, இராமனை; அவன் பழைய நிலையை நினைந்து கூறியதாகும். பொன்துன்னு வீரன் என இயைத்துப் 'பொன்போன்ற நிறத்தவனாகிய இலக்குவன்' எனப் பொருள் கூறலுமாம். புனைதாள் - அழகிய திருவடிகள். மின் துன்னு என்புழித் 'துன்னு' உவமையுருபு. மின்னுநூலின் மணிமார்பு

என்பது இருவர்க்கும் பொதுவாய்நின்றது. இலக்குவனுடைய நுண்ணுணர்வை எண்ணி ஆர்வமிகுதியால் விரைவோடு புல்லினன் என்க. தன் சொல்லையும் சீதையின் சொல்லையும் ஒருகாலத்தில் நிறைவேற்ற முடியாமல் வருந்துகின்ற இலக்குவன் நிலையை நினைந்து உருகாநின்று என்க. நிலை என்றது காரணத்தை. நொடிவான் - சொல்லுவான். (152)

## இலக்குவன் மறுமொழி 3569-3570

3569. இல்லா நிலத்தி னிசையாத வெஞ்சொ
லெழவஞ்சி யெவ்வ முறயான்
வல்வா யரக்க னுரையாகு மென்ன
மதியாண் மறுக்க முறுவா
ணில்லாது மற்றி தறிபோதி யென்ன
நெடியோய் புயத்தின் வலியென்
சொல்லான் மனத்தி னடையாள் சினத்தின்
முடிவோடு நின்று துவள்வாள்.

"இல்லா நிலத்தின் இயையாத வெம் சொல்
எழ, வஞ்சி எவ்வம் உற, யான்,
'வல்வாய் அரக்கன் உரையாகும்' என்ன,
மதியாள், மறுக்கம் உறுவாள்,
'நில்லாது மற்று இது அறி, போதி' என்ன,
நெடியோய் புயத்தின் வலி என்
சொல்லால் மனத்தின் அடையாள், சினத்தின்
முடிவோடு நின்று துவள்வாள்.

பொ:—"நீ இல்லாத பன்னசாலையில், நின் தகுதிக்கு ஏலாத 'ஆ சீதே! இலக்குவா!' என்ற துன்பமுண்டாக்கும் கொடிய சொல் செவியில் ஒலிக்க, வஞ்சிக் கொடி போன்ற சீதை அதுகேட்டுத் துன்பமடைய, யான், 'இவ்வொலி வலிய வாயையுடைய அரக்கனின் சொல்லாகும்' என்று சொல்ல, அச்சொல்லை உண்மையென்று மதிக்காமல், கலக்கமுறுகின்றவள், 'இங்கு நில்லாமல் இதை நேரில் கண்டறிக! போக' என்று கட்டளையிட, யான் சொன்ன சொற்க ளால் நெடியோயாகிய நின் தோள்களின் வலிமையைத் தன் மனத் தில் ஏற்றுக்கொள்ளாதவளாய்க் கோபத்தினால் உயிரை மாய்த்துக் கொள்ளும் முடிவோடு நின்று துவளுகின்றவள்."

கு :—வருஞ்செய்யுளில் முடியும்; குளகம். இராமன் இல்லாத போது பன்னசாலையில் சீதே! இலக்குவா! என்ற சொல் வந்து கேட்டமையால் அச்சொல் இராமன் சொல்லே என்று சீதை நம்பு மாறு நேர்ந்தது என்பது கருத்து. இல்லா நிலத்தின் எழ, என இயையும். இராமன் தகுதிக்குப் பொருத்தமற்றதும், ஆனால், கேட் டோர்க்குத் துன்பம் விளைப்பதுமாகிய கொடிய சொல் என்ற கருத் தால், 'இசையாத வெஞ்சொல்' என்றான். எழுதலாவது ஒலித்தல். வஞ்சி உவமையாகுபெயராய்ச் சீதையை யுணர்த்தியது. எவ்வம் - துன்பம். விரும்பிய குரலை எழுப்பவல்ல வாயையுடையவன் என்ற கருத்தால், 'வல்வாய் அரக்கன்' என்றான். மதியாள் - கருதாள். மதியாளாய் மறுக்கமுறுகின்றவள் என முற்றெச்சமாக்கி முடிக்க. மறுக்கமுறுவாள், துவள்வாள் வினைப்பெயர். நெடியோயது புயத்தின் வலி என்க. நின்புயத்தின் வலிமைபற்றிப் புகழ்ந்துகூறிய, என் சொல்லால் அப் புயத்தின் வலிமையைத் தன் மனத்தில் ஏற்றுக் கொள்ளாள் என விரித்துரைக்க வேண்டியதைச் சுருங்கக் கூறிய வாறு. சினத்தின் முடிவோடு நின்று என்பதற்கு, சினத்தின் மேல் வரம்பில் நின்று என உருபு மயக்கமாக்கி யுரைப்பினும் அமையும். (153)

3570. ஏகாது நிற்றி யெனின்யா னெருப்பி
னிடைவீழ்வெ னென்று முடுகா
மாகா னகத்தி னிடையோட லோடு
மனமஞ்சி வஞ்ச வினையேன்
போகா திருக்கி னிறவாதிருக்கை
புணரா ளெனக்கொ டுணரா
வாகா திறக்கை யறனன் றெனக்கொ
டிவண்வந்த தென்ன வமலன்.

" 'ஏகாது நிற்றி எனின், யான் நெருப்பி
னிடை வீழ்வென்' என்று, முடுகா
மா கானகத்தினிடை ஓடலோடும்,
மனம் அஞ்சி வஞ்ச வினையேன்,
போகாது இருக்கின் இறவாது இருக்கை
புணராள் எனக்கொடு உணரா,
ஆகாது இறக்கை; அறன் அன்று; எனக்கொடு
இவண் வந்தது" என்ன அமலன்.

பொ :—" 'நீ போகாது இங்கு நிற்பாயானால், யான் நெருப்பில் வீழ்வேன்' என்று அவள் விரைந்து பெரிய காட்டின்கண் ஓடுதலும், யான் மனம் நடுங்கி, வஞ்சகத் தொழிலுடைய யான் இப்பொழுது போகாது இங்கு இருந்தால், இவள் இறவாமல் இருக்கமாட்டாள் என்பதறிந்து, அவள் இறத்தல் ஆகாது ; அது அறமும் அன்று என்று உளங்கொண்டே யான் இங்கு வந்தது" என்று இலக்குவன் சொல்ல, இராமன்,

கு :—தெருளா என வருஞ் செய்யுளில் இயைந்து, அழிவான் என அதற்கு அடுத்த செய்யுளில் முடியும் ; குளகம். இலக்குவன், நிகழ்ந்ததை இரண்டு செய்யுளில் சுருக்கிக் கூறியவாறு. முடுகுதல் - விரைதல். 'வஞ்சவினையேன்' என்று இலக்குவன் தன்னைக் கூறிக் கொண்டது, தன்னைப் பற்றிச் சீதை கருதியதைக் குறிப்பால் இராம னுக்குத் தெரிவித்தவாறு. இவ்வாறன்றி அவள் கூறியதை வெளிப் படையாகக் கூறலாகாமை தெளிவு. 'இறவாதிருக்கை புணராள்' என இரண்டு எதிர்மறைவினையால் கூறினான், இறப்பாள் என்று கூறுதற்குக் கூசி. இறத்தல் தவிராள் என்று வற்புறுத்த வேண்டி அங்ஙனம் கூறினான் எனலும் ஆம். இரண்டு எதிர்மறைவினை, ஒரு உடன்பாட்டு வினையை யுணர்த்தல் முறையாகும். உணரா - உணர்ந்து ; செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம். இறக்கை - இறத்தல்; அது, இடைநிலை விளக்காய், 'இறக்கை ஆகாது ; இறக்கை அறனன்று' என்று இருவழியும் இயைந்து பொருள்பட் டது. கணவனொடு கனையெரி புகுதல் அறனாகுமேயன்றிக் கணவன் இருக்கக் காட்டுத் தீயில் புகுந்து உயிர்விடுதல் தற்கொலைப் பாவ மாய் அறனாகாமையின், 'இறக்கை அறனன்று' என்று கருதலானான். அறனன்று என்பதற்கு அவளை இறக்கவிடுதல் அறனன்று என வேண்டுஞ் சொல் வருவித்து முடித்தலும் ஆம். உன்னி வந்த நிலை என் கொல்? என்ற இராமன் வினாவிற்கு விடையாக 'இறக்கை அறனன்று' என உன்னியே யான் இவண் வந்தது என்ன இலக்கு வன் கூறினான். வந்தது என்பது யான் வருதலைச் செய்தது என்று பொருள்பட்டுத் தொழில்மேல் நின்றது ; "பெறுமவற்றுள் யாமறிவ தில்லை" (குறள் - 61) என்புழிப்போல. (154)

## இராமன் சிந்தனை

**3571.** சாவா திருத்த லிவளான துற்ற
தஃதோ தடுக்க முடியா
தாவா வலக்க ணுறுவா ளுரைத்த
பொருளோ வகத்தி னடையா

காவா நிலத்தின் வருமேத மற்ற
தொழியாது கைக்கொ டகலப்
போவார் பிரிக்க முயல்வார் புணர்த்த
பொருளாகு மென்று தெருளா.

"சாவாது இருத்தல் இவள் ஆனது, உற்றது;
அஃதோ தடுக்க முடியாது;
ஆ! ஆ! அலக்கண் உறுவாள் உரைத்த
பொருளோ அகத்தின் அடையா;
காவா நிலத்தின் வரும் ஏதம்; மற்று அது,
ஒழியாது கைக்கொடு அகலப்
போவார், பிரிக்க முயல்வார் புணர்த்த
பொருள் ஆகும்; என்று தெருளா.

பொ :—'இலக்குவன் இங்கு வந்துற்றது, இவள் சாவாதிருத்தற்கும் காரணமாயது; ஆகலின் அவன் செய்ததோ தடுக்க முடியாததே யாகும்; அவன் சொன்ன பொருள்களோ, ஐயோ! அழுது கலக்க மடைகின்றவளின் மனத்தில் பதியாதனவேயாம்; (ஆதலால் இவளிடத்தும் குற்றமில்லை;) ஆனால், இவனால் காக்கப்படாத பன்னசாலையில் தீங்கு நிகழும்; அத்தீங்குதான் சீதையைத் தப்பாமல் கைக்கொண்டு தொலைவில் போக எண்ணியவரும், (மான் வடிவில் வந்து) நம்மைப் பிரிக்க முயல்வாருமாய் இருவராக ஆலோசித்துச் செய்த சூழ்ச்சியே யாகும்' என்று தெளிந்து,

கு :—வருஞ் செய்யுளில் முடியும். உற்றது, இவள் சாவாதிருத்தல் ஆனது என்க. இருத்தற்குக் காரணமாயது என்பது கருத்து. சாவாதிருத்தற்குக் காரணமாயது ஆகலின், இலக்குவன் இங்குவந்த செயல் தடுக்க முடியாததேயாம் என்றவாறு. இலக்குவன் உற்றது; இலக்குவன் உரைத்த பொருள் என எழுவாய் அவாய் நிலையான் வருவிக்கப்பட்டன. அவனுரைத்த பொருளோ அலக்கண் உறுவாள் அகத்தில் அடையாவேயாம்; ஆதலின் அவளிடத்தும் குற்றமில்லை என்றவாறு. ஆஆ என அலக்கணுறுவாள் எனக் கூட்டி, என என்னும் சொல் விகாரத்தால் தொக்கது எனலுமாம். பிரிக்க முயன்ற மாரீசன் செயல் குறைவின்றி நிறைவேறியது போலவே, ஒழியாது கைக்கொடு அகலப் போவார் செயலும் நிறைவேறியிருக்கும் என்பது அவன் சிந்தனை. போவாரும் முயல்வாரும் புணர்த்த பொருள் என உம்மைத் தொகையாக்குக. அது, புணர்த்த பொருள் ஆகும் என இயையும். பொருள் என்றது சூழ்ச்சியை; சூழ்ச்சியாலான காரியத்தைச் சூழ்ச்சி எனக் காரணமாக்கினர்; உபசார வழக்குப்பற்றி.

மற்று அசைநிலை. இலக்குவனிடத்தும் சீதையிடத்தும் தவறில்லை என்பதும், ஏதம் வருதல் திண்ணம் என்பதும் அவ் ஏதந்தானும், சீதையைத் தப்பாமல் கைக்கொடு போவாரும், அங்ஙனம் அவர் போதற்கு வாய்ப்புண்டாகுமாறு பிரிக்க முயல்வாரும் ஆய் இருதிறத்தாரும் செய்த சூழ்ச்சியாலானதே என்பதும், இராமன் உய்த்துணர்ச்சியால் உணர்ந்தான் என்பது இச்செய்யுளில் கூறப்பட்டது. உரைத்த பொருள் என்றது, இராமன் வலிமைபற்றி இலக்குவன் கூறிய கருத்துக்கள். (155)

### இராமன் இலக்குவனுக்குக் கூறுவது

3572. வந்தாய் திறத்தி னுளதன்று குற்ற
மடவாண் மறுக்க முறுவாள்
சிந்தா குலத்தொ டுரைசெய்த செய்கை
யதுதீது மன்று தெளிவாய்
முந்தே தடுக்க வொழியா தெடுத்த
வினையேன் முடித்த முடிவா
லந்தோ கெடுத்த தெனவுன்னி யுன்னி
யழியாத வுள்ள மழிவான்.

"வந்தாய்திறத்தின் உளதன்று குற்றம்;
மடவாள் மறுக்கம் உறுவாள்,
சிந்தாகுலத்தொடு உரைசெய்த செய்கை
யதுதீதும் அன்று, தெளிவாய்,
முந்தே தடுக்க ஒழியாது, எடுத்த
வினையேன் முடித்த முடிவால்,
அந்தோ! கெடுத்தது" என உன்னி உன்னி
அழியாத உள்ளம் அழிவான்.

பொ:—"சீதை யேவியபடி வந்த உன்னிடத்தில் குற்றம் உளதன்று; (அரக்கன் கூவிய சொல்லால்) கலக்கம் அடைகின்ற மடவாளாகிய சீதை, தன் மனத்தே தோன்றிய பெருந்துன்பத்தால் கடுஞ்சொல் சொல்லி யுன்னைப்போமாறு வற்புறுத்திய செயலும் குற்றமன்று; வருவது தெளிந்தவனாகிய நீ முன்னரே (மாயமான் பின் போகவேண்டாம் என்று) தடுக்கவும் விடாது, (மானைப் பிடிக்க) எடுத்துக் கொண்ட முயற்சியுடைய யானே, அவ்வாறு செய்து முடித்த முடிவினால் ஐயோ! கெடுத்தது" என்று கூறிப் பின், தன்பிழையை நினைந்து நினைந்து எதற்கும் அழியாத உள்ளம் அழிபவனானான்.

கு :—மேல் என்று கடுகி என்பதோடு இயையும். முன் சிந்தித்ததை இராமன் இலக்குவனுக்குக் கூறித் தன் குற்றமென்று எண்ணி வருந்தியவாறு. மறுக்க முறுபவளும் மடவாளும் ஆகச் சீதையிருத்தவின் அவள் நின்னைப் போ என்று வற்புறுத்தி உரை செய்த செய்கையதும் தீதன்று என்க. அரக்கன் ஒலியால் கலக்கமுறுகின்றவள், அக்கலக்கத்தில் கூறியது - அறியாமை யுடையவள் - கூறியது குற்றமாகாது என்றவாறு. தீதும் அன்று என்ற உம்மையைச் செய்கையதுவும் தீதன்று எனப் பிரித்துக் கூட்டுக. வினையேன் கெடுத்தது என இயையும். எடுத்த வினை முடித்துவிடவேண்டும் என்று எண்ணி அங்ஙனமே செய்து முடித்த முடிவால் யானே தவறு செய்தேன் என்றவாறு. கெடுத்தது - கெடுதியைச்செய்தது; தவறு செய்தது. வந்தாய், தெளிவாய். என்பன முன்னிலை வினைப்பெயர். ஒழிதல் - விடுதல். எடுத்தவினை - மேற்கொண்ட வினை. அந்தோ, இரக்கக் குறிப்புணர்த்தும் இடைச்சொல். கெடுத்தது என்பது கெடுதியைச் செய்தது எனத் தொழில்மேல் நின்றது. எனச் சொல்லி என ஒரு சொல் வருவிக்க. அழியாத உள்ளமென்றது, தந்தை வீயவும் தாய் துயர் மேவவும், பரதன் வருந்தவும், நகர மாந்தர் வன்துயர் எய்தவும் இராமன் தான்மட்டும் வருந்தாது காடு புகுந்த துணிவுள்ளம் உடைமை கருதி. பிறர் செய்த தீங்குகளைப் பொருட்படுத்தாதவன் தானே தனக்குச் செய்துகொண்ட தீங்கிற்காக உள்ளம் அழிந்தான் என்க. மேலும் தம்பி தடுக்கவும் விடாது சென்று விளைத்துக் கொண்ட தீமையாதலின் தன் தவற்றினை நினைந்து நினைந்து வருந்துபவனானான். (156)

### இராமன் சீதையிருந்த சோலைக்கு விரைதல்

**3573.** பாணிக்க நின்று பயனாவ தென்னை
பயில்பூவை யன்ன குயிலைக்
காணிற் கலந்த துயர்தீரு மன்றி
யயலில்லை யென்று கடுகிச்
சேணுற் றகன்ற நெறியூடு சென்று
சிலைவாளி யன்ன விசைபோ
யாணிப் பசும்பொ னனையா ளிருந்த
வவிர்சோலை வல்லை யணுகா.

"பாணிக்க நின்று பயன் ஆவது என்னை?
பயில் பூவை அன்ன குயிலைக்
காணில் கலந்த துயர் தீரும் அன்றி,
அயல் இல்லை" என்று கடுகிச்

சேண் உற்று அகன்ற நெறியூடு சென்று,
சிலை வாளி அன்ன விசை போய்,
ஆணிப் பசும்பொன் அனையாள் இருந்த
அவிர் சோலை வல்லை அணுகா.

பொ :—(பின்பு) "காலம் நீட்டிக்க இங்கு யோசித்து நின்று ஆகும் பயன் யாதுளது? சொற்கள் பயின்ற நாகணவாய்ப் பறவை போன்ற சீதையைக் கண்டால்தான் நம் மனதிற் கலந்துள்ள துயரம் தீரும் அல்லது, வேறு ஒன்றால் தீர்தல் இல்லை" என்று சொல்லி விரைந்து, நெடுந் தொலைவு பொருந்திப் பரவியுள்ள வழியிலே நடந்து, வில்லில் தொடுத்து விட்ட அம்பு போன்ற வேகத்தோடு சென்று, பசுமையான ஆணிப் பொன்னைப் போன்றவளான சீதை தங்கியிருந்த விளக்கமுடைய சோலையை விரைவில் நெருங்கி,

கு :—பாணித்தல் - காலம் நீட்டித்தல். நிகழ்ந்ததை எண்ணிக் காலம் தாழ்த்தலால் பயனில்லை; விரைந்து சென்றால் பயன் உண்டாகலாம் என்பது கருத்து. வேடர் கையில் அகப்பட்டு மீளாது வருந்தும் பறவைபோலச் சீதை அரக்கர் கையில் அகப்பட்டு வருந்து தற்குரியளாவளோ என்ற கருத்தால் 'பூவையன்ன குயிலை' எனப் பறவைகளையே விதந்து கூறினான். குயில் என்பது உவமையாகு பெயராய்ச் சீதையை உணர்த்தியது. சொலல்வல்ல பூவையும் கீத மினிய குயிலும் தம்மால் தாமே வேடர் கையில் அகப்படுதல் போலச் சீதையும் தன் இயற்கையழகால் பிறர் கவர்தற்குரியளாவாள் என்ற குறிப்பும் காணலாம். உள்ளம் முழுமையையும் கலந்த துயர் என அதன் மிகுதி புலப்படுத்தியவாறு. அயல் என்றது, அயற்காரணத்தை; பிறிதொன்றால் தீராது என்பது கருத்து. கடுகி - விரைந்து. கடுகி, விசைபோய், வல்லை அணுகா எனப் பன்முறை விரைவுணர்த்தும் சொற்களை வழங்கியது, இராமன் விரைவைப் புலப்படுத்த வேண்டியேயாம். சிலைவாளி எனப் பொதுவகையாற் கூறியிருப்பினும் வில்லினுக்கு இராமன் சிறந்தவனாதலின் அவன் அம்பு போன்ற விசையோடு போய் என்பது பொருத்தமாகும். ஆணிப் பசும்பொன் என்றது, மற்றைப் பொன்னுக்கு உரையாணியிடுதற்கு உரிய மாற்றுயர்ந்த பசிய பொன் என்றவாறு. பிறரால் கவர்தற்குரியவள் என்ற கருத்து இவ்வுவமையானும் பெறவைத்தவாறு. பொன்னனையாள் இருந்த சோலையாதலின் அவிர்சோலை எனப்பட்டது. அணுகா ஓடி வந்தனன் என வருஞ் செய்யுளோடு இயையும். (157)

## சீதையைக் காணுமல் இராமன் திகைத்து நிற்றல் 3574-3575

**3574.** ஓடி வந்தனன் சாலையிற் சோலையி னுதவுந்
★ தோடி வர்ந்தபூஞ் சுரிகுழ லாடனைக் காணுன்
கூடு தன்னுடை யதுபிரிந் தாருயிர் குறியா
நேடி வந்தது கண்டில தாமென நின்ருன்.

ஓடிவந்தனன், சாலையின் சோலையின் உதவும்
தோடு இவர்ந்த பூஞ்சுரிகுழலாள்தனைக் காணுன்,
கூடு தன்னுடையது பிரிந்தாருயிர், குறியா,
நேடி வந்து, அது கண்டிலதுஆம் என நின்ருன்.

பொ :—(அனுகி) ஓடிவந்த இராமன், பன்னசாலையினையுடைய சோலையில், தான் கொணர்ந்து கொடுத்த இதழ்கள் பொருந்திய மலர்களையணிந்த சுருண்ட கூந்தலையுடையளாகிய சீதையைக் காணுதவனுய், தன்னுடைய உடற்கூட்டைப் பிரிந்து சென்ற ஓர் அரிய உயிர், அவ்விடத்தைக் குறித்துத் தேடி வந்து, அக்கூட்டினைக் காணுமல் திகைத்து நின்றதுபோலத் திகைத்துநின்ருன்.

கு :—சாலை என்றது பன்னசாலையை. சோலையின்கண் இருந்த சுரிகுழலாள்தனைக் காணுன் என்றமையால் பன்னசாலையையும் கண்டிலன் என்பது கருத்தாகக் கொள்க. என்னை? "ஆண்டு நின்றும் அரக்கன் அகழ்ந்துகொண்டு, ஈண்டு வைத்தது இளவல் இயற்றிய, நீண்ட சாலையொடு நிலைநின்றது, காண்டி ஐய!" (சுந்தர - 630) எனப் பின் சீதை அநுமானுக்குக் கூறுவது முரணுமைப் பொருட்டு என்க. சோலையிலிருந்து கொணர்ந்து இராமன் உதவிய பூக்களைச் சூடிய சுரிகுழலாள் என்றதால் இராமனுக்கும் சீதைக்கும் உள்ள அன்புப் பிணைப்பைப் புலப்படுத்தியவாறு. தோடு- இதழ். இவர்தல் - பொருந்துதல். 'மாதிவர் பாகன்' (திருவாசகம். 43-1) என்றதும் காண்க. காணுய் நின்ருன் என முற்றெச்சமாக்கி முடிக்க. வந்தனன், பெயர். தன்னுடையதாகிய கூடு பிரிந்த ஆருயிர் என இயையும். பிரிந்த என்புழி அகரம் தொகுத்தல்; 'புகழ்புரிந்தில்லிலோர்' (குறள் - 59) என்புழிப்போல. குறியா, அக்கூடு இருந்த இடத்தை அடையாளத்தால் குறித்து. நேடி - தேடி. அது என்றது உடற்கூட்டினை. தன்னுடம்பை ஓரிடத்தில் விடுத்து, வேறுடம்பில் புகுந்து உலாவுதலும் பின் அவ்வுடம்பை விடுத்துத் தன்னுடம்பை விடுத்த இடத்தை அடையாளங் குறித்துத் தேடி வந்து அவ்வுடம்பில் புகுதலும் யோகிக்கு இயல்பு. கயிலையிலிருந்து வந்த ஒரு யோகி ஆவடுதுறையடைந்தபோது மூலன் என்ற பெயருடைய ஓரிடையன் துடும் என இறந்துவிட்டானுக,

அவனுல் மேய்க்கப்பட்ட பசுக்கள் அவனுடலேச் சுற்றி நின்று படும் துயரைக் கண்டு பொருது, தன்னுடம்பை ஒரு குறிப்பிட்ட இடத்தில் வைத்துவிட்டு அம்மூலன் உடம்பிற் புகுந்து எழுந்து அப்பசுக்களின் துயரைப் போக்கிப் பின் அக்கூடு விடுத்துத் தன்கூடுபாய நினைந்து போய்ப் பார்க்கும்போது, வைத்த காப்பினிலுய்த்த முந்தை யுடற் பொறை காணுது வருந்தி, ஈசர் அருள் என்று உணர்ந்து திருமூல ராய் நின்று திருமந்திரம் இயற்றிய வரலாறு பெரியபுராணத்தில் காணலாம். திருவாவடுதுறையை யடுத்துள்ள திருவழுந்தூரில் வாழ்ந்திருந்த கம்பர் இத்திருமூலர் வரலாற்றை மனத்தில் கொண்டே இவ்வுவமையைக் கூறினுர் எனலாம். கூடு என்று இங்கு உடம்பைக் குறித்ததும் கூடுவிட்டுக் கூடு பாய்தல் என்பதைக் குறிப்பால் உணர்த்தவேயாம். உடம்பை விட்டுப் பிரிந்து போய் மீண்டு வந்து காணும் ஆற்றலுடைய உயிர் என்பார் 'ஆருயிர்' என்ருர். ஆருயிர் இராமனுக்கும் கூடு சீதைக்கும் உவமை. இவ் வுவமையால், ஒற்றுமை நயத்தால் ஒன்றெனத் தோன்றிய இராமன் சீதை இவர்களின் பிணைப்பும் இராமனுடைய வருத்தமும் புலப்படுத் தியவாறு. (158)

**3575.** கைத்த சிந்தையன் கணங்குழை
யணங்கினேக் காணு
துய்த்து வாழ்தர வேருெரு
பொருளிலா னுதவ
வைத்த மாநிதி மண்ணெடு
மறைந்தன வாங்கிப்
பொய்த்து ளோர்கொளத் திகைத்துநின்
ருனேயும் போன்ருன்.

கைத்த சிந்தையன், கணங்குழை
அணங்கினேக் காணுது,
உய்த்து வாழ்தர வேறு ஒரு
பொருள் இலான், உதவ
வைத்த மா நிதி, மண்ணெடு
மறைந்தன, வாங்கிப்
பொய்த்துளோர் கொளத் திகைத்து
நின்ருனேயும் போன்ருன்.

பொ :—கூட்டமான குழையணிந்த சீதையைக் காணுமல், வாழ் வையே வெறுத்த மனமுடையனுகிய இராமன், எதிர்காலத்தில்

செலவழித்து வாழ்தற்கு நிலமுதலாகிய வேறு ஒரு பொருளும் இல்லாத ஒருவன், பிற்காலத்தில் தனக்கு உதவியாகுமாறு சேமித்து வைத்தனவும் மண்ணொடு மறைந்திருந்தனவுமாய பெருஞ் செல்வங் களை வஞ்சகர்களாகிய கள்ளர்கள் தோண்டி எடுத்துக்கொண்டு போய்விடத் திகைத்து நின்றவனையும் ஒத்து விளங்கினன்.

கு :—கைத்தல் - கசத்தல்; இங்கு வெறுத்தலையுணர்த்தியது. சீதையைக் காணாத இராமன் புதைத்து வைத்த செல்வத்தைக் காணாதவனைப் போலத் திகைத்தான் என்பது கருத்து. நின்றானையும் என்புழி உம்மை, மேற் பாட்டிற் கூறிய தன் உடற்கூட்டைப் பிரிந்த உயிர் மீண்டு வந்து அவ்வுடற்கூட்டைக் காணாமல் திகைத்தது போல் திகைத்த இயல்பைத் தழுவியது; இறந்தது தழீஇய எச்ச வும்மை. உய்த்தல் - செலுத்துதல்; இங்குச் செலவழித்தலை யுணர்த் தியது. வேறொரு பொருள் என்றது, மக்கள் செல்வமாகக் கொள்ளும் நிலமும், மாடும் போன்ற பொருள்களுள் ஒன்றை. வேறு பொருள் களையுடையவன் வைத்த நிதியை யிழந்து படும் துயரினும், வேறு ஒரு பொருளுமிலாதவன் வைத்த நிதியை யிழந்த துயர் பெரிதாக லின் அவன் திகைப்பையே இங்கு உவமை கூறினர். உதவ என்றது வலிமையிழந்த முதுமையில் உதவும் பொருட்டு என்பது கருத்து. உதவச் சேமித்து வைத்தனவாய் மண்ணொடு மண்ணாய் மறைந் திருந்தனவாய பெருஞ் செல்வங்களை என இயைத்துப் பொருள் கொள்க. வைத்த - மறைந்தன மாநிதி என்க. வாங்குதல் - இங்குத் தோண்டுதல் என்னும் பொருளது. மண்ணில் மாநிதியைப் புதைத் தல், கள்வர் கொள்ளாமைப் பொருட்டு. பிறர் அறியாவாறு மறைத்துப் புதைத்த பொருளையும் தம் பொய்மொழிகளால் புல னறிந்து கவரும் இயல்புதோன்றப் பொய்த்துளோர் எனக் கள்வரைக் குறிப்பிட்டார். சீதையையன்றி வேறொரு மாதரைச் சிந்தையாலும் தொடாத இராமனுக்கு வேறொரு பொருளிலான் உவமை. வைத்த மாநிதி, சீதைக்கு உவமை. பொய்த்துளோர், இராவணனுக்கு உவமை. வேறொரு பொருளிலானுக்கும் இராமனுக்கும் பொதுத் தன்மை திகைத்துநிற்றல். இனி மண் என்றது ஆகுபெயராய்க் குடத்தை யுணர்த்தியதாகக் கொண்டு குடத்தோடு வைத்த மாநி தியை அக்குடத்தோடு கள்வர் வாங்கிக்கொள எனப் பொருள் கொள்வாருமுளர். இப்பொருட்கு மண் நடுநிலை விளக்காய் இரு புறமும் இயையும். பன்னசாலையொடு சீதையைக் கொண்டு போனமை இவ்வுவமையால் பெறவைப்பர். (159)

அப்போது உலகப் பொருள்கட்கு நேர்ந்த நிலை 3576-3578

3576. மண்சு ழன்றது மால்வரை சுழன்றது மதியோ
ரெண்சு ழன்றது சுழன்றதவ் வெறிகட லேழும்
விண்சு ழன்றது வேதமுஞ் சுழன்றது விரிஞ்சன்
கண்சு ழன்றது சுழன்றது கதிரொடு மதியும்.

மண் சுழன்றது; மால் வரை சுழன்றது; மதியோர்
எண் சுழன்றது; சுழன்றது அவ் எறி கடல் ஏழும்;
விண் சுழன்றது; வேதமும் சுழன்றது; விரிஞ்சன்
கண் சுழன்றது; சுழன்றது கதிரொடு மதியும்.

பொ :—(யாவரும் யாவுமாகி நிற்கின்ற இராமன் மனம் சுழன்றமையால்) பூமி சுழன்றது; பெரிய மலை சுழன்றது; அறிவுடைய ஞானிகளின் எண்ணம் சுழன்றது; அந்த அலை வீசும் கடல் ஏழும் சுழன்றது; விண்ணுலகம் சுழன்றது; வேதமும் சுழன்றது; பிரமனுடைய கண் சுழன்றது; சூரியனோடு சந்திரனும் சுழன்றது.

கு :—நீல மேனி நெடியவன் மனநிலை திரிய மண் சுழன்றது என மேல்வரும் அடியோடு இயையும். வரை, எண், வேதம், கண் என்பன சாதியொருமையாதலின் சுழன்றது என ஒருமை முடிவு கொண்டன. கடலேழும் சுழன்றது என்பது ஒருமைப் பன்மை மயக்கம். கதிரொடு மதியும் என ஒடுக்கொடுத்தாராதலின் சுழன்றது என ஒருமை முடிவு கொள்ளலாயிற்று; 'சிறப்பொடு பூசனை செல்லாது' (குறள் - 18.) என்புழிப்போல. சுழன்றது என்பது ஒரே பொருளில் பன்முறை வரத் தொடுத்தமையால் இச்செய்யுள் சொற்பொருட்பின்வருநிலையணியாம். விண் என்றது ஆகுபெயராய் விண்ணுலகத்தை யுணர்த்தியது. வேதமும் என்புழி உம்மை உயர்வு சிறப்பும்மை. சுழலுதற்கு ஏலாத ஒலி வடிவாகிய வேதமும் என்பது கருத்து. அவ்வெறிகடல் என்புழி அகரம் உலகறிசுட்டு. (160)

3577. அறத்தைச் சீறுங்கொ லருளையே
சீறுங்கொ லமரர்
திறத்தைச் சீறுங்கொன் முனிவரைச்
சீறுங்கொ றீயோர்
மறத்தைச் சீறுங்கொ லென்கொலோ
முடிவென்று மறையி
னிறத்தைச் சீறுங்கொ னெடுந்தகை
யோனென நடுங்கா.

"அறத்தைச் சீறுங்கொல்? அருளையே
சீறுங்கொல்? அமரர்
திறத்தைச் சீறுங்கொல்? முனிவரைச்
சீறுங்கொல்? தீயோர்
மறத்தைச் சீறுங்கொல்? 'என்கொலோ
முடிவு?' என்று மறையின்
நிறத்தைச் சீறுங்கொல்? நெடுந்தகையோன்"
என நடுங்கா.

பொ :—"பெரும் பண்பினனான இராமன், இனி, தருமத்தைக் கோபிப்பானோ? அல்லது அருளைத்தான் கோபிப்பானோ? தேவர்களின் கூட்டத்தைக் கோபிப்பானோ? முனிவர்களையெல்லாம் கோபிப்பானோ? அல்லது, தீயவர்களாகிய அரக்கரின் பாவச் செயலைத்தான் கோபிப்பானோ? (தருமமே செயம் என்கின்ற) 'நின் முடிவு என்னாயிற்று?' என்று வேதத்தின் உயிர் நிலையான கருத்தையே கோபிப்பானோ?" என்று நடுங்கி,

கு :—கணக்கரும் பொருள்கள், 'நடுங்கா', 'மேல கீழுறக் கீழன மேலுறும் வேலை' என வருஞ் செய்யுளில் இயைந்து முடியும். அற நெறிக்கும் அருள் நெறிக்கும் பாதுகாவலாயுள்ள தனக்கு இத்தகைய துன்பம் நேரப் பார்த்துக்கொண்டிருந்த குற்றத்திற்காக அறக்கடவுளையும், அருட் சத்தியையும், தேவர் கூட்டத்தையும், முனிவர் கூட்டத்தையும் இராமன் கோபிக்கக்கூடும் என்பது கருத்து. அறச் சார்புடைய தேவர்களும், அருட்சார்புடைய முனிவர்களும் தம் மெய் வலியும் சாபவலியும் காட்டிச் சிறிது நேரம் அரக்கனைத் தடுத்து நிறுத்தாது போயினரே என இராமன் வெகுள்வது இயல்புதானே! திறம் - கூட்டம்; 'திறங்களாகி யெங்குஞ் செய்களூடுழல் புள்ளினங்காள்' (திருவாய்மொழி 6-1-3) என்புழியும் திறம் இப்பொருட்டாதல் காணலாம். மறம் - பாவம். தீயோர் என்றது அரக்கரை. அறமும் அருளும் அமரரும் முனிவரும் அரக்கர் செய்த தீங்கினைத் தடுத்தல் செய்யாமைக்காக உரிமையால் சீறலாம் எனவும் தீயோர் தனக்குத் தீங்கிழைத்த பாவத்திற்காகப் பகைமையால் சீறலாம் எனவும் வேறு படுத்திக் காண்க. அறம் வெல்லும் பாவம் தோற்கும் என்ற நியதி வேதத்தின் உயிர்நிலையான உயர்ந்த கொள்கையாதலின் அந்நியதி இப்பொழுது மாறுபட்டமையால், நின் முடிவு என்கொலோ? என்று மறையின் நிறத்தைச் சீறலாம் என்பது கருத்து. நிறம் - உயிர்நிலை; இங்கு உயிர்நிலையாகிய கருத்தை யுணர்த்தியது. நெடுந்தகை என்பதில் நெடுமை இங்குப் பெருமையுணர்த்திற்று; அல்லது நெடியோனாகிய பழைய நிலையை நினைந்து இராமனை நெடுந்தகையோன் எனக் கூறினர் எனலும் ஆம். (161)

3578. நீல மேனியந் நெடியவன்
மனநிலை திரிய
மூல காரணத் தவனொடு
முலகெலா முற்றுங்
கால மாமெனக் கடையிடுங்
கணக்கரும் பொருள்கண்
மேல கீழுறக் கீழன
மேலுறும் வேலை.

நீல மேனி அந்நெடியவன் மனநிலை திரிய,
மூல காரணத்தவனொடும் உலகெலாம் முற்றும்
காலம் ஆம் எனக் கடையிடும் கணக்கரும்பொருள்கள்,
மேல கீழ் உறக் கீழன மேல் உறும் வேலை.

பொ:—நீலமேனியையுடைய நெடியவனாகிய அந்த இராமன் மனநிலை தடுமாறுவதால், உலகத் தோற்றத்திற்கு மூல காரணனான பிரமனோடு உலக முழுமையும் முற்றுப்பெறுதற்குரிய ஊழிக்காலம் இதுவாம் என்னுமாறு, வரம்பு கட்டுதற்குரிய அளவு இல்லாத உலகப் பொருள்களுள், மேலுள்ள பொருள்கள் கீழாகவும் கீழுள்ள பொருள்கள் மேலாகவும் நிலை தடுமாறுகின்ற அப்பொழுது,

கு:—இளையவன் தொழலும் என மேல் இயையும். இராமன் நிறமும் பெருமையும் புலப்பட, 'நீலமேனி யந் நெடியவன்' என்றார். இதனால் உலகப் பொருள்களின் உள்ளும் புறமும் இருப்பவனாகிய திருமாலே இராமன் என்பதை வடிவாலும் வினையாலும் புலப்படுத்தியவாறு. இராமன் மனநிலை தடுமாறிய அளவில் உலகப் பொருள்கள் நிலைதடுமாறியதால் அவன் அப்பொருள்களின் உள்ளும் புறமும் உளன் என்பது புலனாதல் காணலாம். படைத்தற்றொழில் செய்யும் பிரமன் உலகத் தோற்றத்திற்கு நேரே காரணனாதல்பற்றி அவனை மூலகாரணத்தவன் என்றார். பிரமகற்பத்தில் உலகத்தோடு பிரமனும் அழிவானாகலின், 'மூல காரணத்தவனொடு முலகெலாம் முற்றும் காலம்' என்றார். திருமால் உலகத்தோடு முற்றுதல் இன்றாகலின் மூலகாரணத்தவன் என்பதற்குத் திருமால் எனப் பொருள்கூறல் பொருந்தாமை யுணரலாம். முற்றும் காலம் என்றது எல்லாம் அழிதற்குரிய பேரூழியை. இத்துணையன என வரம்பு கட்டுதற்குரிய வாய் எண்ண இயலாத பொருள்கள் என அப்பொருள்களின் அளவின்மையை யுணர்த்தியவாறு. உலகப் பொருள்களின் நிலை தடுமாற்றத்தை யுணர்த்த, மேல கீழுறக் கீழன மேலுறும் வேலை என்றார். நெடியவன் மனநிலை திரிதலே, மண் முதலியன சுழலு

தற்கும், கணக்கரும் பொருள்கள், 'நெடுந்தகையோன் அறத்தைச் சீறுங்கொல்' என்றுங்குஐயுற்று நடுங்கி, மேல் கீழாய்க் கீழ் மேலாய்த் தடுமாறுதற்கும் காரணம்என்க. (162)

இலக்குவன், தேடிச் செல்லுவோம் எனல்

3579. தேரி னாழியுந் தெரிந்தனந்
தீண்டுத லஞ்சிப்
பாரி னோடுகொண் டகன்றதும்
பார்த்தனம் பயனின்
றோருந் தன்மையீ தென்னென்ப
துரனிலா தவர்போற்
றூரம் போதன்முன் றொடர்துமென்
றிளையவன் றொழலும்.

“தேரின் ஆழியும் தெரிந்தனம்;
தீண்டுதல் அஞ்சிப்
பாரினோடு கொண்டு அகன்றதும்
பார்த்தனம்; பயன் இன்று
ஒரும் தன்மை ஈது என் என்பது?
உரன் இலாதவர் போல்;
தூரம் போதல் முன் தொடர்தும்” என்று,
இளையவன் தொழலும்.

பொ :—“தேர்ச்சக்கரத்தின் சுவட்டையும் கண்டோம்; கற்பிற்கு அரசியைத் தீண்டுதற்கு அஞ்சித் தரையோடு பெயர்த்துக்கொண்டு சென்றதையும் பார்த்தோம்; (இவற்றையெல்லாம் கண்டபின்பும் அவனைப் பிடிக்க விரையாது) வலிமையில்லாதவர்களைப்போலப் பயன் இல்லாமல் சிந்தித்துக் கொண்டிருக்கும் தன்மையாகிய இதை என்னென்று சொல்வது? கவர்ந்தவன் நெடுந்தொலைவு போதற்குமுன் அவனைப் பின் தொடர்வோம்” என்று கூறி இலக்குவன் வணங்குதலும்,

கு :—‘ஆம் அதேயினியமைவதென்று அமலனும்’ என்பதோடு இயையும். தெரிந்தனம் - பார்த்தோம். தெரிந்தனம் என்றமையால் ஆழி என்றது, ஆழிச்சுவட்டையே என்பது பெறப்படும். பாரினோடு கொண்டகன்றதை அங்குள்ள அடையாளத்தால் கண்ட இலக்குவன், அவ்வாறு தரையோடு பெயர்த்துக்கொண்டு போதற்

குக் காரணம் 'தீண்டுதல் அஞ்சியே' என்பது உய்த்துணர்ச்சியால் கூறியது. உரனிலாதவர்போல் பயனின்று ஒருந்தன்மை ஈது என் என்பது? என மாற்றுக. இன்றி என்பது செய்யுளில் இன்று என உகரமாய் வந்தது. இராமன் சிந்தனையில் தடுமாறிக் கொண்டிருந்த நிலையினை யுணர்ந்த இலக்குவன் இங்ஙனம் கூறினான். ஒரும் தன்மை - சிந்தனைசெய்துகொண்டிருக்கும் தன்மை. தூரம் போதற்கு முன் என நான்காவதுருபு விரிக்க. தொடர்தும் என்பது உளப்பாட்டுத் தன்மைப் பன்மை. இனி, சீதையைக் கவர்ந்தவனை எங்குச் சென்று தேடுவது? என்றோ பிறனால் கவரப்பட்டவளைத் தேடிப் பயன் என்னை? என்றோ இராமன் சிந்திப்பதாக இலக்குவன் நினைத்துத் தேடுதற்குரிய பற்றுக்கோடு கிடைத்துள்ளது என்பான், 'தேரினுழியும் தெரிந்தனம்' என்றும், சீதை மீட்டற்குரியவளாகவே யுள்ளாள் என்பான், 'தீண்டுதலஞ்சிப் பாரினோடு கொண்டகன்றதும் பார்த்தனம்' என்றும் கூறினான். இரண்டாவது கூறிய தொடரே இராமனுள்ளத்தில் தேடும் முயற்சியை யுண்டாக்கியது எனலாம். (163)

## இராமனும் உடன்பட்டுப் போதல்

3580. ஆம தேயினி யமைவதென் றமலனு மெய்யிற்
றாம வார்கணைப் புட்டிலு முதலிய தாங்கி
வாம மால்வரை மரனிவை மடிதர வயவர்
பூமி மேலவன் றேர்சென்ற நெடுநெறி போனார்.

"ஆம்; அதே இனி அமைவது" என்று, அமலனும், மெய்யில்
தாம வார் கணைப் புட்டிலும் முதலிய தாங்கி
வாம மால்வரை மரன் இவை மடிதர, 'வயவர்,
பூமி மேல் அவன் தேர் சென்ற நெடுநெறி போனார்.

பொ :—குற்றமற்றவனாகிய இராமனும், "தேர்ச்சுவடும், தீண்டுதலஞ்சிப் பாரினோடு கொண்டகன்றதும் காணப்படுவது உண்மையேயாம்; கவர்ந்தவனைத் தொடர்ந்து போகுமதுவே இனிச் செய்யத் தகுவது" என்று உடன்பட்டுச் சொல்லிக்கொண்டே தன் உடம்பில் ஒளிமிக்க நீண்ட கணைகளையுடைய அம்புப் புட்டில் முதலியவற்றைத் தாங்கிக் கொள்ள வீரர் இருவரும் அழகிய பெரிய மலைகளும் மரங்களும் சாயும்படி, தரைமேல் அவன் தேர் சென்ற நெடுவழியைப் பின் பற்றிப் போனார்கள்.

கு :—சீதை பிறனால் கவரப்பட்டவளாயினும், அவளைத் தீண்டுதலஞ்சிப் பாரினோடு அவன் கொண்டகன்றதைக் கண்டபின்னரே அவ

ளைப் பின் தேடிச் சென்று மீட்க உடன்பட்டான் என இராமன் தூய் மையைப் புலப்படுத்த வேண்டி அமலன் என அவனைக் குறித்தார். தெரிந்தனம் பார்த்தனம் என இலக்குவன் கூறியவற்றை இராமன், 'ஆம்' என உடன்பட்டான் எனவும், 'தூரம் போதன்முன் தொடர் தும்' என்று இளையவன் கூறியதை 'அதே இனி யமைவது' என இரண்டாவதாக உடன்பட்டான் எனவும் கொள்க. தாமம் - ஒளி; வார் - நீட்சி; இவை கணைக்கு அடை. புட்டிலும் என்புழி உம்மை அசை. முதலிய என்றமையால் பிற போர்க்குரிய கருவிகளை யெல் லாம் கொள்க. தாங்கி என்பதைத் தாங்க எனச் செயவெனெச்ச மாக்குக. வாமம் – அழகு. இராம இலக்குவர் சென்ற வேகத்தில் வழியிலிருந்த மலைகளும் மரங்களும் சாய்ந்தன என அவர் வேகத் தைச் சிறப்பித்தவாறு. "மாறு நின்ற மரனு மலைகளும் நீறு சென்று நெடுநெறி நீங்கிட வேறு சென்றனன்" (கிட்கிந்தைப் - 10) எனப் பின்னர் இலக்குவன் சுக்கிரீவன்பால் செல்வதைக் கூறுதலும் காண்க. வயவர் - வீரர். அமலனும் அதே அமைவதென்று தாங்க, வயவர் நெடுநெறி போனார் எனஇயையும். மரன் இவை மடிதரப் போனார் என்க. (164)

## தேர் சென்ற சுவடு மறைய வருந்துதல்

3581. மண்ணின் மேலவன் றேர்சென்ற
சுவடெலா மாய்ந்து
விண்ணி னோங்கிய தொருநிலை
மெய்யுற வெந்த
புண்ணி னூடுறு வேலென
மனமிகப் புழுங்கி
யெண்ணி னாமினிச் செய்வதென்
னிளவலே யென்றான்.

மண்ணின்மேல் அவன் தேர் சென்ற
சுவடு எலாம் மாய்ந்து,
விண்ணின் ஓங்கியது ஒருநிலை;
மெய் உற வெந்த
புண்ணின் ஊடு உறு வேல் என,
'மனம் மிகப் புழுங்கி,
"எண்ணின் நாம் இனிச் செய்வது என்?
இளவலே!" என்றான்.

பொ :—தரையின்மேல் அவ்வரக்கனது தேர் போன சுவடு முழுமையும் முடிவுற்றமையால் அத்தேர் விண்ணில் உயர்ந்து சென்றதாகக் கருதப்பட்ட ஓரிடத்தில் இராமன், உடம்பில் மிகுதியாக வெந்த புண்ணின் நடுவில் வேல் நுழைந்தாற்போல மனம் மிகவும் வருந்தி, "இளவலே! எண்ணிப் பார்க்கின், நாம் இனிமேல் செய்வது யாது உளது?" என்று கூறினன்.

கு :—இக்காலத்து, ஆகாய விமானம் புறப்படுங்கால் தரையில் சிறிது தொலைவு ஊர்ந்துசென்று பின் சிறிது சிறிதாக விண்ணில் பறந்து செல்வது போலவே, இராவணன் தேரும் சிறிது தொலைவு தரையில் ஊர்ந்துசென்று பின் விண்ணில் சென்றமை இதனுல் புலப்படும். தேர் சென்ற சுவடு இடையில் முடிவுற்றமையால் அது விண்ணின் ஓங்கியதாக உய்த்துணர்ந்தார்கள் என்க. மாய்ந்து என்பது காரணப் பொருளில் வந்த வினையெச்சம். 'மழை பெய்து நெல் விளைந்தது' என்புழிப்போல. மாய்ந்து - முடிவடைதலால். விண்ணின் ஓங்கியதொரு நிலை - அத்தேர் விண்ணில் உயர்ந்து சென்றதாகக் கருதப்பட்ட ஓரிடத்தில். நிலை - இடம். இராமன் மனமிகப் புழுங்கி என எழுவாய் வருவிக்க. மெய் - உடம்பு. உறவெந்த - மிகுதியாக வெந்த. புண்ணினூடு வேலுற்றெனப் புழுங்கி என்க. சீதையைக் கவர்ந்து சென்றமை மெய்யுற வெந்த புண்ணுகவும், கவர்ந்து சென்றவன் தேர்வழி மறைந்தது, அப்புண்ணில் வேல் நுழைவதாகவும் கொள்க. "வெந்த கொடும்புணில் வேனுழைந்த தொப்பச் சிந்தை திரிந்து திகைத்தயர்ந்து" (அயோத்தியா - 1603) என முன் கூறியுள்ளதும், "வெந்ததோர் புண்ணின்கண் வேல்கொண்டு நுழைப்பான் போல்" (நெய்தற்கலி - 3) என்ற கலித்தொகையடியும் இங்கு ஒப்பு நோக்குதற்குரியன. இது வருத்த மிகுதிக்குக் காட்டும் உவமை. நாமினிச் செய்வதென் என்ற வினு, இனிச் செய்யலாவது யாதுமில்லை என்ற எதிர்மறைப் பொருளை யுணர்த்தியது. எண்ணின், யோசிக்குமிடத்து. (165)

### இலக்குவன் அமைதி கூறல்

3532. தெற்கு நோக்கிய தெனும்பொரு
டெரிந்ததத் திண்டேர்
மற்கு நோக்கிய திரள்புயத்
தண்ணலே வானம்

விற்கு நோக்கிய பகழியி
னெடிதன்று விம்மி
நிற்கு நோக்கிதென் பயத்ததென்
றிளையவ னேர்ந்தான்.

"தெற்கு நோக்கியது எனும் பொருள்
தெரிந்தது, அத்திண் தேர்;
மற்கு நோக்கிய திரள் புயத்து
அண்ணலே! வானம்,
விற்கு நோக்கிய பகழியின்
நெடிதன்று; விம்மி,
நிற்கும் நோக்கு இது, என்பயத்தது ? என்று
இளையவன் நேர்ந்தான்.

பொ:—"மற்போர் செய்தற்கு எதிர்நோக்கியுள்ள திரண்ட புயத்தையுடைய அண்ணலே; (தேர்ச்சுவடு கொண்டு பார்த்தால்) 'அத்திண்ணிய தேர் தென்திசை நோக்கிச் சென்றுளது' என்ற உண்மை புலனாயிற்று; அத்தேர் சென்ற வானம், நின் வில்லை எதிர் நோக்கியுள்ள அம்புக்கு எட்டாத நீண்ட தொலைவில் உள்ளதன்று; ஆகவே, புயவலியும் வில்வலியும் காட்டாமல் கலங்கி நிற்கும் இச்சிந்தனை என்ன பயனைத் தரவல்லது?" என்று இலக்குவன் விடை பகர்ந்தான்.

கு:—தேர்ச்சுவட்டைப் பின்பற்றி வந்தமையால் அத்தேர் சென்ற ஊர் தெரியவில்லையாயினும், தெற்கு நோக்கியது எனத் திசையேனும் புலனாயிற்று என்றபடி. பொருள் - உண்மை. "பொருள் சேர்புகழ்" (குறள் - 5) என்புழியும் இச்சொல் இப்பொருளதாதல் காணலாம். தேர்ச்சுவடு முடிவடைந்ததால் அத்தேர் விண்வழிச் சென்றிருக்க வேண்டும் என உய்த்துணரப்பட்டமையால், 'வானம் பகழியின் நெடிதன்று' என்று கூறி, வான் வழிச் சென்றானாயினும் நின் அம்பால் தடுத்து நிறுத்தற்குரியனே என இராமனுக்கு ஊக்கம் ஊட்டியவாறு. 'நாமினிச் செய்வதென்' என மனம் தளர்ந்து வினவிய இராமனுக்குத் தன்னம்பிக்கையூட்ட, 'மற்கு நோக்கிய திரள்புயத் தண்ணலே!' எனவும், 'வானம் பகழியின் நெடிதன்று' எனவும் அவன் புயவலியும் வில்வலியும் விளக்கி இலக்குவன் விடை நேர்ந்தான் என்க. விற்கு பகழியின் உருபுமயக்கம்; வில்லை நோக்கிய என்றும் 'பகழிக்கு நெடிதன்று' என்றும் விரிக்க. விம்மி நிற்கும் நோக்கிது என்புழி நோக்கு, நோக்கல் நோக்கம் எனப் படும் சிந்தனையை யுணர்த்தியது. விம்மி நிற்கும் இச் சிந்தனையால்

பயனில்லை; மேலும் தெற்கு நோக்கிச் செல்லுதலே செய்யத்தக்கது என்றுணர்த்தியவாறு. நாமினிச் செய்வதென் என்ற வினாவிற்கு விம்மி நிற்கும் நோக்கிது என் பயத்தது? என வினாவெதிர்வினாவியே இலக்குவன் விடையிறுத்த திறம் நினைக்க. (166)

வீணைக் கொடியைக் காணுதல்

3583. ஆகு மன்னதே கருமமென்
றத்திசை நோக்கி
யேகி யோசனை யிரண்டுசென்
றூரிடை யெதிர்ந்தார்
மாக மால்வரை கால்பொர
மறிந்தது மானப்
பாக வீணையின் கொடியொன்று
கிடந்தது பார்மேல்.

"ஆகும்; அன்னதே கருமம்" என்று,
அத்திசை நோக்கி,
ஏகி, யோசனை இரண்டு சென்றூர்,
இடை எதிர்ந்தார்,
மாக மால் வரை கால், பொர
மறிந்தது மானப்
பாக வீணையின் கொடி ஒன்று
கிடந்தது பார்மேல்.

பொ:—"இங்கு நில்லாது செல்லும் அதுவே நாம் செய்யத்தக்க கருமமாகும்" என்று கூறி, அத் தென்திசையே நோக்கி நடந்து இரண்டு யோசனை தூரம் சென்றவர்கள், நடு வழியில் வானளாவிய பெரிய மூங்கில் ஒன்று காற்று மோதுதலால் ஒடிந்து கிடந்தாற் போல அழகிய வீணை எழுதிய கொடி கட்டிய காம்பு ஒன்று தரை மேல் கிடந்ததைக் கண்டார்கள்.

கு:—நிற்கும் நோக்கிது என்பயத்தது? என்ற இலக்குவன் வினா, செல்லுதலே பயனுடையது என்னும் கருத்தினதே ஆதலின், அக் கருத்துப்பொருளை இராமன் உடன்பட்டு 'அன்னதே கருமமாகும்' என்று கூறிப் புறப்பட்டான் என்க. அத்திசை என்றது, தென் திசையை; தெற்கு நோக்கியதெனும பொருள் தெரிந்தது என்று முன் கூறப்பட்டதாகலின் இங்குச் சுட்டினால் உணர்த்தினர். என்று,

ஏகிச் சென்றூர் என்பது, சிறப்பு வினையெச்சம் பொது வினை கொண்டு முடிந்ததாகும்; என்னே; அன்னதே கருமமாகும் என்றது, இராமன் வினையாதலும், ஏகுதலும் செல்லுதலும் இராமனுக்கும் இலக்குவனுக்குமுரிய பொது வினையாதலும் அறிக. இவ்வாறு வருதலுண்டு என்பதை "இவளும் இவனும் சிற்றிலிழைத்தும் சிறுபறையறைந்தும் விளையாடுப" (சேனுவரையம் - சூ. 3) என்ற எடுத்துக்காட்டால் அறியலாம். சென்றூர், இடை, பார்மேல் கொடியொன்று கிடந்தது எதிர்ந்தார் என இயையும். சென்றூர் வினையாலணையும் பெயர். மாகம் - விண். வரை - மூங்கில். வீணை எழுதிய கொடிச் சீலையும் காம்பும் தரையில் கிடந்தமைக்கு மலையை உவமை கூறுதல் பொருந்தாமையும், வானளாவிய மூங்கில், காற்றுல் மோதுண்டு வீழ்ந்ததை உவமை கூறுதலே பொருந்தியதாதலும் அறிக. பாகவீணை - அழகுடைய வீணை, பாகு - அழகு. பாகாரிஞ்சி (சுந்தர - 177) என்புழியும் அப்பொருள்படுதல் காண்க. கொடிப்பாகம் என்று இயைத்தற்கு மகரவீறு இன்மையும் உணர்க. வீணையின் உருவம் வரைந்த கொடியை இராவணன் தன் இசைப்புலமை தோன்றக் கொண்டான். (167)

### கொடி துணிந்துள்ள நிலையை ஆராய்தல் 3584, 3585

**3584.** கண்டு கண்டக ரோடுமக்
காரிகை பொருட்டா
லண்ட ராதியர்க் காரமர்
விளைந்ததென் றயிர்த்தார்
துண்ட வாளினிற் சுடர்க்கொடி
துணிந்ததென் றுணராப்
புண்ட ரீகக்கண் புனல்வரப்
புரவலன் புகல்வான்.

கண்டு, "கண்டகரோடும் அக்
காரிகை பொருட்டால்,
அண்டர் ஆதியர்க்கு ஆர் அமர்
விளைந்தது?" என்று அயிர்த்தார்;
துண்ட வாளினில் சுடர்க் கொடி
துணிந்தது என்று உணராப்
புண்டரீகக் கண் புனல் வரப்
புரவலன் புகல்வான்.

பொ :—அக்கொடியைக் கண்டு, 'அந்தச் சீதையின் காரணமாகக் கொடியவர்களாகிய பகைவரோடும் தேவர் முதலியவர்கட்கு அரிய போா விளைந்தது போலும்' என்று ஐயுற்றார்கள்; பின்பு இராமன் (ஒடிந்த கொடியின் தன்மையை யூன்றி நோக்கி) மூக்காகிய வாளினால் ஒளிவாய்ந்த கொடி துணிபட்டுள்ளது என்று உணர்ந்து, தாமரை மலர்போன்ற தன் கண்களில் நீர் பெருகச் சொல்லலானான்.

கு :—கண்டகர் - கொடியவர். அண்டர் - தேவர். முறிந்து கிடந்த வீணைக் கொடியைக் கண்டவுடனே சீதையைக் கவர்ந்து செல்வோர்க்கும் தேவர் முதலியோர்க்கும் போர் நடந்திருக்கலாம் என அவர் ஐயுறுதல் இயல்பாகும்; என்னை? கானகத்தில் தமக்குத் துணையாவார் தேவரன்றிப் பிறர் இலராதலின். 'அமரர் திறத்தைச் சீறுங்கொல்' என்று உலகப் பொருள்கள் நடுங்கியதும் இவ்வியைபு பற்றியேயாம். அயிர்த்தார் எனப் பின்வருவதால், அமர் விளைந்தது போலும் என ஒரு சொல் வருவிக்கப்பட்டது. துண்டவாள் - மூக்காகிய வாள்; உருவகம். 'துண்டப்படை' (109) என்றார் முன்னும். அயிர்த்தவர்களில் இராமன், கொடியின் ஒடிந்த பகுதியை உற்று நோக்கி அது ஆயுதங்களால் வெட்டுண்ணாமல், பறவையின் மூக்கால் முறியுண்டிருந்ததை உணர்ந்தான் என்க. தன் தந்தை முறையினனாகிய சடாயுவின் துண்ட வாளால் துணிந்ததே என்று துணிந்தமையால் அதுபற்றிக் கூறத்தொடங்கிய இராமனுக்குப் புண்டரீகக் கண்ணில் புனல் வரத் தொடங்கியது என்க. புரவலன், எல்லா உயிரையும் புரத்தற்கு உரியவன் என்ற காரணம்பற்றி இராமனுக்குப் பெயராயிற்று; தனக்காகச் சடாயு போர் செய்திருக்கின்றான் என்று இராமன் கூறும்போதே அவன் கண்ணில் நீர் மல்கியது என்க. (168)

**3585.** நோக்கி னாலைய நொய்திவ
ணெய்திய நுந்தை
மூக்கி னாலிது முறிந்தமை
முடிந்ததான் மொய்ம்பின்
தாக்கி னானொடு வடுத்தது
தெரிகிலந் தமியன்
யாக்கை தேம்பிடு மெண்ணரும்
பருவங்க ளிறந்தான்.

"நோக்கினுல், ஐய! நொய்து
இவண் எய்திய நுந்தை
மூக்கினுல் இது முறிந்தமை
முடிந்ததால்; மொய்ம்பின்
தாக்கினுன்; நடு அடுத்தது
தெரிகிலம்; தமியன்;
யாக்கை தேம்பிடும்; எண்ணரும்
பருவங்கள் இறந்தான்."

பொ :—(இலக்குவனே நோக்கி) "ஐய! பார்வையின் கூர்மையால் (சீதையைக் கவர்ந்து செல்வதைக் கண்டு) விரைந்து இங்கு வந்து சேர்ந்த நும் தந்தையாகிய சடாயுவின் மூக்கினுல் இக்கொடி முறிந்த செயல் முடிந்திருக்கின்றது ; துணையற்றுத் தனியாக உள்ளவன்,— உடம்பு மெலிகின்ற அளவிலா ஆண்டுகள் கடந்த முதியவன்— வலிமையால் தாக்கியிருக்கின்ருன் ; இடையில் அவனுக்கு நேர்ந்த தைத் தெரிந்துகொள்ள முடியவில்லை ;" (என்ருன்.)

கு :—ஐய! என இளையவனை அன்பினுல் விளித்தவாறு. சடாயு தொலைவிலுள்ளவற்றையும் நோக்கும் கூர்மையான பார்வையன் ஆகலின், சீதையைக் கவர்ந்து சென்றவனைத் தன்னேக்கினுல் கண்டு நொய்து இவண் எய்தியதாக உய்த்துணர்ந்து கூறினுன் இராமன். 'சேய்மையின் நோக்குறும் சிறுகணுன்றனை' (சடாயு காண் - 5) என முன்னர்க் கூறியதுங் காண்க. நோக்கினுல் கண்டு எய்திய நுந்தை என ஒரு சொல் வருவிக்க. "சேக்கையிற் பார்ப்பைப் பார்க்கும் பறவையிற் பார்க்கின்ருன்" (சடாயுகாண் - 48) எனச் சடாயு சேய்மையிலிருந்து அவர்களைப் பார்த்துக்கொண்டிருந்தமை கூறப்பட்டிருத்தலின் நோக்கினுல் கண்டு நொய்தின் எய்தினுன் என்பதே பொருந்துவதாகும். நோக்குமிடத்து எனப் பொருள் கூறுவாருமுளர். சடாயு தனக்கும் தந்தையாதலின் நம் தந்தை என்று கூறவேண்டியவன் இராமன் ; ஆயினும், இலக்குவனுக்கு மட்டும் அவன் தந்தை என்று கருதுமாறு 'நுந்தை' என்று கூறியது, தன்னினும் அவனுக்கு உரிமை மிகுதி உண்டு என்று புலப்படக் கூறிய அன்பு மொழியாகும். 'புகலரும் கானந்தந்து புதல்வராற் பொலிந்தானுந்தை' (விபீடணனடைக்கலம் - 146) என விபீடணனை நோக்கிப் பின் கூறுவதும் இக்கருத்துப் பற்றியேயாம். பகைவனைத் தாக்குதற்கேற்ற துணைவலியும் உடல்வலியும் சடாயுவுக்கு இல்லா திருந்தும் மொய்ம்பின் தாக்கினுன் என்பான், 'தமியன், யாக்கை தேம்பிடும் எண்ணரும் பருவங்களிறந்தான்' என்ருன் ; இதனை உறுப்புக் குறை விசேட அணி என்பர். அடுத்தது தெரிகிலம்

என்றது, தமியனும் பருவங்களிறந்தவனும் ஆதலின் என்னுற்றுனே என்ற ஐயத்தால் கூறியதாகும். என்ருன் என்பது இசையெச்சம். (169)

## இலக்குவன் சொல்

3586. நன்று சாலவு நடுக்கரு
மிடுக்கின ஞமும்
சென்று கூடலாம் பொழுதெலாந்
தடுப்பது திடனுல்
வென்று மீட்கினு மீட்குமால்
வேறுற வெண்ணி
நின்று தாழ்த்தொரு பயனிலே
யென்றலு நெடியோன்.

"நன்று சாலவும்; நடுக்கு அரு
மிடுக்கினன்; நாமும்
சென்று கூடலாம்; பொழுதெலாம்
தடுப்பது திடனுல்;
வென்று, மீட்கினும் மீட்குமால்;
வேறு உற எண்ணி,
நின்று தாழ்த்து ஒரு பயன் இலே"
என்றலும், நெடியோன்.

பொ :—"சடாயு வந்து உதவியது மிகவும் நல்லதாயிற்று; அவன் பகைவர்க்கு அஞ்சி நடுங்குதல் இல்லாத வலிமையுடையவன்; ஆதலின், இன்றைப் பொழுது முழுதும் அப்பகைவனே அவன் தடுத்துப் போர் செய்வான் என்பது உறுதியாகும்; அவனுக்குத் துணையாக நாமும் சென்று சேரலாம்; நாம் சென்று சேர்தற்கு முன் அவனே அப்பகைவனே வென்று சீதையை மீட்டாலும் மீட்கலாம். எனவே இங்கு வேறுவகையான எண்ணங்களே மிகுதியாக எண்ணிக் கொண்டு நின்று காலம் தாழ்த்துவதால் ஒரு பயனும் இல்லே" என்று இலக்குவன் கூறலும், இராமபிரான்,

கு :—'தொடர்வதே நலமாம் என' என வருஞ் செய்யுளோடு இயையும். மேல் இராமன் சடாயுவின் மூக்கினுல் இக்கொடி முறிந்துளது ஆதலின் அவனே தனியாகப் பகைவனே வலிமையாகத் தாக்கியுள்ளான் என்று கூறி 'யாக்கை தேம்பிடும் எண்ணரும் பருவங்கள் இறந்தான்' என அவன் முதுமை நினேந்து இரங்கிக்

கண்ணீர் விட்டமை கண்ட இலக்குவன், சடாயுவின் மிடுக்கை எடுத்துக்கூறி இராமன் இரக்கச் சிந்தனையால் காலம் தாழ்த்தலை விட்டு விரையுமாறு தூண்டினுன் என்க. நாமும் சென்று கூடலாம் என்ற எண்ணத்திற்குப் பொழுதெலாம் தடுப்பது திடனுல்' என்பதே காரணமாதலின், அதனை முதலில் கூட்ட வேண்டிற்று. சடாயுவின் முதுமையை நினைந்து வருந்துதல் சீதையை மீட்குமுயற்சிக்கு மாறு பட்டதாகலின் அதனை, 'வேறுற எண்ணி நின்று தாழ்த்தொரு பயனிலை' என இலக்குவன் விலக்குவானுனன். யாக்கை தேம்பிடும் எண்ணரும் பருவங்களிறந்தான் என்பதும், நடுக்கரும் மிடுக்கினன் என்பதும் ஆகிய முரண்பட்ட இரு கருத்துக்களை இலக்குவன் ஒருவனே கூறியதாகக் கொண்டு உரை வரைந்தாருமுளர். (170)

## இராம இலக்குவர் இராவணனது வில் முறிந்திருத்தலைக் காணுதல்

**3587.** தொடர்வ தேநல மாமெனப்
படிமிசைச் சுற்றிப்
படருங் காலெனக் கறங்கெனச்
செல்லுவார் பார்த்தார்
மிடல்கொள் வெஞ்சிலை விண்ணிடு
வின்முறிந் தென்னக்
கடலின் மாடுயர் திரையெனக்
கிடந்தது கண்டார்.

"தொடர்வதே நலம் ஆம்''
எனப் படிமிசைச் சுற்றிப்
படரும் கால் எனக் கறங்கு
எனச் செல்லுவார் பார்த்தார்,
மிடல்கொள் வெஞ்சிலை, விண்
இடு வில் முறிந்தென்னக்
கடலின் மாடு உயர் திரை
எனக் கிடந்தது கண்டார்.

பொ :—"மேலும் தொடர்ந்து செல்வதே நலம் ஆகும்" என்று உடன்பட அவ்விருவரும், பூமிமேல் சுற்றிச் சுற்றிப் பார்த்தவராய், விரைந்து செல்லும் காற்றுப் போலவும் காற்றுடி போலவும் விரைந்து செல்லுகின்றவர்கள், வலிமை கொண்ட கொடிய வில் ஒன்று, விண்ணில் தோன்றும் இந்திரவில் முறிந்து வீழ்ந்தது போலவும்,

கடலின்கண் உயர்ந்து தோன்றும் பெரிய அலை போலவும் கிடந்ததைக் கண்டார்கள்.

கு :—படிமிசைச் சுற்றிப் பார்த்தாராய்ச் செல்லுவார், வெஞ்சிலை கிடந்தது கண்டார் என இயையும். அவர் விரைவிற்குக் காற்றும், சுற்றிப் பார்த்துக்கொண்டு போதற்குக் காற்றுடியும் உவமையாயின. 'படருங்கால்' எனக் காற்றின் இயல்பு புலப்படுத்தியவாறு; 'சதாகதி' என்ற வடமொழிப் பெயரும் நினைக்க. படர்தல் - செல்லுதல்; இயங்குதல். வளி உளரும் என்பதும் காண்க. மிடல் - வலிமை. வில்லின் பெருமையைப் புலப்படுத்த வானிடு வில்லையும், சமவெளியான தரையில் உயர்ந்து தோன்றுதற்குக் கடலின் மாடுயர் திரையையும் உவமை கூறினர். விண்ணிடுவில் - இந்திரவில். இது, ஞாயிற்றுக்கு எதிர்த்திசையில் உருவாகும் கருமுகிலில் பல வண்ணத்தோடு பெரிய வில்போலத் தோற்றமளிக்கும்; வானில் தோன்றுதல்பற்றி 'வானவில்' என்றும், மேகவாகனனுகிய இந்திரனுக்குரியது என்ற கருத்தால் 'இந்திரவில்' என்றும் கூறுதல் மரபு. அவ்வில் முறிவதில்லை. ஆயினும் முறிந்து கிடக்கும் வில்லுக்கு உவமையாகவேண்டி 'விண்ணிடு வில் முறிந்தென்ன' என்ருர்; இஃது இல்பொருளுவமை. விகாரவுவமை எனலுமாம். வீணையின் கொடி கிடக்கக் கண்டவர்களாதலின், வேறு என்ன என்ன பொருள்கள் எவ்வெவ்விடத்துக் கிடக்குமோ என்ற எண்ணத்தால் விரைந்து செல்லும்போது தரைமிசைச் சுற்றிச் சுற்றிப் பார்த்துக்கொண்டே போனவர்கள், எண்ணியபடியே வில் முறிந்து கிடக்கக் கண்டார்கள் என்றவாறு. கடலின் மாடுயர் திரையை உவமை கூறியதால், அவ் வில் குருதிப் பரப்பில் கிடந்ததாக உய்த்துணர்தலும் கூடும். திரை - அலை; வளைந்தும் உயர்ந்தும் காணப்படுவது. (171)

வில்லை ஒடித்த சடாயுவை இராமன் வியத்தல்

3588 சிலைகி டந்ததா லிலக்குவ
தேவர்நீர் கடைந்த
மலைகி டந்தன வலியது
வடிவினுன் மதியின்
கலைகி டந்தன காட்சிய
திதுகடித் தொடித்தான்
நிலைகி டந்தவா நோக்கென
நோக்கின னின்ருன்.

"சிலே கிடந்ததால், இலக்குவ!
தேவர் நீர் கடைந்த
மலே கிடந்தன வலியது;
வடிவினுல் மதியின்
கலே கிடந்தன காட்சியது;
இது கடித்து ஒடித்தான்
நிலே கிடந்தவா நோக்கு!''
என நோக்கினன் நின்முன்.

பொ :—“ இலக்குவ! இதோ வில் கிடந்தது; தேவர்கள், கடலேக் கடைந்த மந்தரமலே கிடந்தாற்போல் கிடக்கும் வலிமையுடையதும், வளேந்த வடிவத்தால் சந்திரனின் ஒரு கலேயாகிய பிறைமதி கிடந் தாற்போன்ற காட்சியுடையதுமாகிய இவ்வில்லே வாயால் கடித்து ஒடித்தவனுகிய சடாயுவின் வலிநிலேமை இருந்தவாற்றை எண்ணி யுணர்க ” எனக் கூறி வில்லினே நோக்கியவனுய் நின்முன்.

கு :—நீர் என்பது தானியாகு பெயராய்க் கடலேயுணர்த்தியது; பின் அது, இலக்கணேயால் பாற்கடலே யுணர்த்தியது. கடைந்த மலே என்றது, மந்தரமலேயை. வில்லின் பருமைக்கும் வலிமைக்கும் மந்தரமலேயும், வளேந்த வடிவிற்குப் பிறைமதியும் உவமை. மதியின் கலே என்றது பிறைச்சந்திரனே. ஒடிந்து கிடந்த வில்லின் பெரு மையை யுணர்த்தி அத்தகைய வில்லே வாயால் கடித்து ஒடித்தவ னுகிய சடாயுவின் வலியை வழியளவையால் யுய்த்துணர்க என்ற வாறு. நோக்கு இரண்டில் முன்னது நோக்கல் நோக்கம்; கருதுதல். பின்னது நோக்கிய நோக்கம். முன்னமொரு வில்லே ஒடித்துப் பழகி யவன் இராமன் ஆதலின், வில்லின் வலிம்மையைக் கண்ணுல் நோக்கி வியந்து கொண்டிருந்தான் என்க. கண்முன் கிடந்த வில்லின் பெரு மையை யுவமை கூறிக் காட்டி, அதை யொடித்தவன் வலிமையை வழியளவையான் உய்த்துணரச் செய்தலே முறையாகவும், காணப் படாத சடாயுவின் தோற்றத்திற்கும் நிறத்திற்கும் இங்குவமை கூறிய தாகப் பொருள் கொள்ளுதல் பொருத்தமன்று; மேலும், பின்னர், சடாயுவைக் கண்டபோது, “ உம்பர் கடலுள் நாட்டிய வரையெனத் தாதையைக் கண்டான் ” (179) என்று கூறும் கம்பர் இங்கும் அவ் வுவமையே கூறினுர் என்றலும் பொருந்தாமை காண்க. (172)

## இராவணனது அம்பருத்தூணியைக் காணுதல்

3589. நின்று பின்னரு நெடுநெறி
கடந்துற நிமிரச்
சென்று நோக்கினர் திரிசிகைத்
திணிநெடுஞ் சூலம்
ஒன்று பல்கணை மழையுறு
புட்டிலோ ரிரண்டு
குன்று போலவட் கிடந்தகண்
டதிசயங் கொண்டார்.

நின்று, பின்னரும் நெடு நெறி
கடந்து உற நிமிரச்
சென்று நோக்கினர், திரிசிகைத்
திணி நெடுஞ் சூலம்
ஒன்று, பல்கணை மழையுறு
புட்டில் ஓர் இரண்டு
குன்று போல் அவண் கிடந்த கண்டு
அதிசயம் கொண்டார்.

பொ :—அவ்வாறு நோக்கி நின்று, பின்னும் நீண்ட வழியை மிக விரைவாகக் கடந்து சென்று, (மேலும் ஏதேனும் விழுந்து கிடக்குமோ என்று) உற்று நோக்கின அவ்விருவரும், மூன்று தலைகளையுடைய திண்மையான நீண்ட சூலம் ஒன்றும், பலகணைகளாகிய மழைத் தாரைகள் பொருந்தியுள்ள அம்புப் புட்டில்கள் இரண்டும் மலைபோல அங்குக் கிடந்தவற்றைக் கண்டு அதிசயம் அடைந்தார்கள்.

கு :—உற நிமிரக் கடந்து சென்று என்றியைக்க ; நிமிர்தல் - விரைதல். கொடியும் வில்லும் விழுந்திருக்கக் கண்டவர்களாதலின் மேலும் என்ன என்ன வீழ்ந்து கிடக்குமோ என்ற எண்ணத்தால் உற்று நோக்கினவர்கள், சூலமும் அம்புப் புட்டிலும் கண்டு அதிசயம் கொண்டார் என்க. பகைவர்மேல் மழைத்தாரைகளைப் போலச் செல்லும் இயல்பு பற்றிக் 'கணைமழை' என உருவகித்தார். கணைகளாகிய மழைத்தாரைகள் பொருந்திய புட்டில் என்க. "திண்புறஞ் சேர்ந்த தூணி, விண்டான் மறைப்பச் செறிகின்றன" (125) எனத் தூணியின் விண்மறைக்கும் பேருருவத்தைச் சொல்லியதற்கேற்ப இங்கும் 'குன்றுபோலவட்கிடந்த' எனக் குன்றினை உவமை கூறினார். அங்குப் பன்மையாகச் சுட்டிய புட்டில்கள் இரண்டே என்பது இப்பாடலில் புலனாகின்றது. அம்புப் புட்டில்களின் பெருமையும்,

சூலத்தின் திண்மையும் கண்டு அதிசயங் கொண்டார்கள், கிடந்த கண்டு - கிடந்தனவற்றைக் கண்டு; அகரவீற்றுப் பன்மை வினைப் பெயர். நோக்கினர், பெயர். நோக்கினர் கண்டு அதிசயங் கொண்டார் என்க. நோக்குதல், ஆராய்தல் என்னும் பொருளது. (173)

### இராவணனது கவசத்தைக் காணுதல்

**3590.** மறித்துஞ் சென்றனர் வானிடை
வயங்குற வழங்கி
எறிக்குஞ் சோதிகள் யாவையுந்
தொக்கன வெனலாய்
நெறிக்கொள் கானக மறைதர
நிருதர்கோ னெஞ்சின்
பறித்து வீசிய கவசமுங்
கிடந்தது பார்த்தார்.

மறித்தும் சென்றனர்; வானிடை
வயங்குற வழங்கி
எறிக்கும் சோதிகள் யாவையும்
தொக்கன எனலாய்
நெறிக் கொள் கானகம் மறைதர,
நிருதர் கோன் நெஞ்சில்
பறித்து வீசிய கவசமும்
கிடந்தது பார்த்தார்.

பொ—:மீண்டும் தெற்கு நோக்கிச் சென்றவர்கள், வானத்தில் விளக்கம் உண்டாகும் வண்ணம் இயங்கி, ஒளிவீசும் சூரியன், சந்திரன் முதலிய சோதிகள் எல்லாம் ஓரிடத்துக் கூடியுள்ளன என்று சொல்லுதற்குரியதாய், வழியைத் தன்பால் கொண்டுள்ள காடு மறையுமாறு, இராவணன் மார்பிலிருந்து சடாயு பறித்து வீசிய கவசமும் கிடந்ததைப் பார்த்தார்கள்.

கு:—சென்றனர் பெயர்; கிடந்தது பார்த்தார் என்ற வினை கொண்டது. சோதிகள் யாவையும் தொக்கன எனலாய்க் கானக மறைதரக் கவசமும் கிடந்தது பார்த்தார் என இயையும். நிருதர் கோன் நெஞ்சின் சடாயு பறித்து வீசிய கவசம் என்று ஒரு சொல் வருவிக்க. சோதிகள் யாவையும் தொக்கன எனலாய் என்றமையால் கவசத்தின் பேரொளியும், ‘கானக மறைதரக் கிடந்தது’

என்றமையால் அதன் பரப்பும் புலப்படுத்தியவாறு. நெஞ்சின் என்புழி இன் நீங்கற்பொருளில் வந்த ஐந்தனுருபு. நிருதர்கோன் இராவணன். கவசமும் என்புழி உம்மை இறந்தது தழுவிய எச்சப் பொருளில் வந்தது. கிடந்ததாகிய கவசமும் பார்த்தார் என மாற்றி னும் ஆம். நெஞ்சு, தானி ஆகுபெயராய் மார்பினை யுணர்த்தியது. இராவணன் கவசம் உயர்ந்த நவமணிகளைப் பதித்துச் செய்யப் பெற்றதாகலின் பேரொளியுடையதாயிற்று என்க. (174)

## இராவணனது குதிரை முதலிய கிடந்த இடத்தை அடைதல்

3591. கான்கி டந்தது மறைதரக் கால்வயக் கலிமாத்
தான்கி டந்துழி சாரதி கிடந்துழி சார்ந்தார்
ஊன்கி டந்தொளி ருதிரமுங் கிடந்துழி யுலகில்
வான்கி டந்தது போன்றதேர் கிடந்துழி வந்தார்.

கான் கிடந்தது மறைதரக் கால்வயக் கலிமாத்
தான் கிடந்துழி, சாரதி கிடந்துழி, சார்ந்தார்;
ஊன் கிடந்து ஒளிர் உதிரமும் கிடந்துழி, உலகில்
வான் கிடந்தது போன்ற தேர் கிடந்துழி வந்தார்.

பொ :—காடாகக் கிடந்த இடம் எல்லாம் மறையுமாறு, கால் வலிமையுடைய குதிரைகள் இறந்து கிடந்த இடத்தையும், அக் குதிரைகளைச் செலுத்தும் தேர்ப்பாகன் கிடந்த இடத்தையும் அடைந் தார்கள்; பின்னர், இராவணன் தசையில் கிடந்து விளங்கும் இரத்த மும் பரந்து கிடந்த இடத்திற்கு அருகில், தரையில் மேகம் வீழ்ந்து கிடந்தாற்போன்று விளங்கும் தேர் வீழ்ந்து கிடந்த இடத்திற்கு வந்தார்கள்.

கு :—இராவணன் தேரில் பூட்டியிருந்த குதிரைகள் பதினறு என்பது (124) மேலே பெறப்பட்டமையின், அப்பதினறு குதிரைகளும் இறந்து வீழ்ந்த காரணத்தால் அக்கானமே மறைந்தது என்பது கருத்து. இதனுல் குதிரைகளின் பருமையும் பன்மையும் புலப்படுத் தியவாறு. கலிமாத்தாம் எனற்பாலது எதுகை நோக்கித் தான் எனத் திரிந்தது. ஓடுதற்குரியதாகலின், 'கால்வயக் கலிமா' என்ருர். வய - வலிமை. கலிமா - கடிவாளத்தையுடைய குதிரை. கால், காற்று எனக்கொண்டு, காற்றுப்போல் விரைகின்ற வலிய குதிரை எனலுமாம். 'தான் கிடந்துழி சாரதி கிடந்துழி சார்ந்தார்' என்பது உம்மைத்தொகையாதலின் இயல்பாயிற்று. இராவணனுடைய முகத் திலும் மார்பிலும் தோள்கள்மேலும் சடாயு சிறகால் புடைத்தும்

வாயாற் கடித்தும் உண்டாக்கிய புண்ணிலிருந்து பெருகிய குருதி வெள்ளத்திற்கருகில் அவன் தேரும் கிடந்தது என்க. எப்போரிலும் சிந்தாத இராவணன் உதிரமும் என உம்மை உயர்வு சிறப்பாகக் கொள்க. விண்ணில் திரியும் தன்மையாலும் விரைவாலும் இராவணன் தேர்க்கு மேகம் உவமையாயிற்று. உலகு என்றது இங்குத் தரையை. வான் - மேகம். உலகில் வான் கிடந்தது போன்ற தேர் என்பது இல்பொருளுவமை. தேரிற் பூட்டிய குதிரைகளும் பாகனும் இறந்து கிடந்த இடத்தைக் கண்ட இராம இலக்குவர் பின், இராவணன் இரத்தஞ் சிந்தியுள்ள இடத்தையும் அவன் தேர் கிடந்த இடத்தையும் கண்டார்கள் என்க. வந்தார் என்பது வந்து கண்டமையும் உணர்த்திற்று. (175)

### இராவணனது குண்டலங்களைக் காணுதல்

3592. கண்ட லங்குதங் கைத்தலம்
விதிர்த்தனர் கவினர்
விண்ட லந்துறந் திறுதியின்
விரிகதிர் வெய்யோன்
மண்ட லம்பல மண்ணிடைக்
கிடந்தன மணியின்
குண்ட லம்பல குலமணிப்
பூண்களின் குவியல்.

கண்டு, அலங்கு தம் கைத்தலம் விதிர்த்தனர், கவின் ஆர்
விண் தலம் துறந்து; இறுதியின் விரிகதிர் வெய்யோன்
மண்டலம் பல, மண்ணிடைக் கிடந்தன மணியின்
குண்டலம் பல, குலமணிப் பூண்களின் குவியல்.

பொ :—ஊழி இறுதியில் தோன்றுதற்குரிய விரிந்த கிரணங்களையுடைய சூரிய மண்டலங்கள் பல, அழகமைந்த விண்ணிடத்தை விடுத்து மண்ணிடைக் கிடந்தாற்போன்ற மணியாலியன்ற குண்டலங்கள் பலவற்றோடு சிறந்த மணிகள் பதித்துச் செய்த மற்ற அணிகலன்களின் குவியல்களைக் கண்டு விளக்கமுடைய தம் கைகளை வியப்பினால் விதிர்த்தார்கள்.

கு :—குவியல் கண்டு என இயைத்துப் பூட்டுவிற்பொருள் கோளாக்குக. தேர் முதலியன கண்டவழி உண்டாய வியப்பினும், மிகப் பேரொளியுடைய குண்டலங்களையும் தோள் வளைகள் முதலிய அணிகலன்களையுங் கண்டவழி யுண்டாய வியப்புப் பெரிதாகலின்

இத்தகைய அணிகலன்களைக் கண்டிலேம் என்ற குறிப்புத் தோன்ற இராம இலக்குவர் தம் கைகளை விதிர்த்தார்கள். விதிர்த்தல்-அசைத்தல். குலமணிப் பூண்களின் குவியல் என்றது, தோள் வளைகளும், மணிமுடிகளுமே என்பது, "தோளணிக்குலம் பலவுள குண்டலத் தொகுதி, வாளிமைப்பன பலவுள மணிமுடி பலவால்" (177) எனப் பின் எடுத்துக் கூறுவதால் அறியலாம். பத்து மணிமுடிகட்கும் இருபது தோள்வளைகட்கும் இருபது குண்டலங்களுக்கும் உவமையாக்க ஒரு ஞாயிறு போதாமையானும் ஒளி மிகுதியுடைமையானும் ஊழி இறுதியில் தோன்றும் வெய்யோன் மண்டலம் பலவற்றை உவமையாக்கினர். ஊழியிறுதியில் பன்னிரண்டு சூரியர்களும் ஒரு காலத்தில் தோன்றி வெயில் வீசுவார்கள் என்பது புராண மரபு. வெய்யோன் மண்டலம் - சூரிய வட்டம். முடியும் தோள்வளையும் குண்டலமும் ஆகியவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு சூரியனைப் போன்ற ஒளியுடையன என்பது கருத்து. அவ்வணிகள் தரையில் வீழ்ந்து கிடத்தலின் 'வெய்யோன் மண்டலம் பல விண்டலந் துறந்து மண்ணிடைக் கிடந்து அன' என இல்பொருளுவமை கூற நேர்ந்தது. இராவணன் குண்டல முதலியனவற்றைச் சடாயு பறித்தெறிந்ததாக முன் கூறப்படாவிடினும், 'மாச் சிச்சிரல் பாய்ந்தென மார்பினுந் தோள்கண்மேலும், ஓச்சிச் சிறகாற் புடைத்தா னுலையா விழுந்து, மூர்ச்சித்த விராவணனும் முடிசாய்ந்திருந்தான்" (126) என முன் கூறியதால் முடியும். தோள்வளையும், குண்டலமும் வீழ்ந்தமை உய்த்துணர்ச்சியால் பெறவைத்தமை காணலாம். (176)

## குண்டலம் முதலியன பலவாக இருத்தலைக் கொண்டு போர் செய்தோர் பலர் என இராமன் கூறுதல்

**3593.** தோள ணிக்குலம் பலவுள
குண்டலத் தொகுதி
வாளி மைப்பன பலவுள
மணிமுடி பலவால்
நாள னைத்தையுங் கடந்தனன்
றமியனந் தாதை
யாளி போல்பவர் பலருளர்
பொருதன ரிளையோய்.

"தோள் அணிக்குலம் பல உள; குண்டலத் தொகுதி
வாள் இமைப்பன பல உள; மணிமுடி பலவால்;

நாள் அனைத்தையும் கடந்தனன், தமியன், நம் தாதை;
யாளிபோல்பவர் பலர் உளர், பொருதனர்; இளையோய்!''

பொ :—"தம்பி! தோள்வளைகளின் கூட்டம் பல இருக்கின்றன; ஒளி வீசுகின்ற குண்டலங்களின் கூட்டம் பல இருக்கின்றன; மணிகள் பதித்த கிரீடங்களும் பல இருக்கின்றன; ஆதலால் ஆயுள் நாள் அனைத்தையும் கடந்த முதியவனும் தனித்தவனும் ஆகிய நம் தந்தை சடாயுவோடு போர் செய்தவர்கள் சிங்கவேற்றைப் போன்றவர் பலராதல் வேண்டும்."

கு :—குண்டலம் - காதணி. வாளிமைப்பன - ஒளி வீசுவன. நாள் என்றது ஆயுட்காலத்தை. முதியவனும் தனித்தவனுமாகிய சடாயு என்றது, பலரோடு போர்செய்தற் கேலாமை யுணர்த்தவேண்டி. இருபது தோள்வளைகளும் இருபது குண்டலங்களும் பத்து முடிகளும் வீழ்ந்து கிடக்கின்றமையால், சடாயுவோடு போர் செய்தவர்கள் பதின்மராதல் வேண்டும் என உய்த்துணர்ந்து இராமன் கூறினன் என்க. பலர் என்றது பதின்மர் என்னும் கருத்தினது. யாளி போல்பவரோடு நாளனைத்தையும் கடந்தவன் போர் செய்தலும், பலரோடு தமியன் போர் செய்தலும் இயலாமை புலப்படுத்தியவாறு. "தமியன் யாக்கை தேம்பிடு மெண்ணரும் பருவங்களிறந்தான்" (169) என இராமன் முன்னுங் கூறியது காண்க. இரண்டு தோளும் இரண்டு காதும் ஒரு தலையும் உடையவர்களையே நினைந்து பலருளர் பொருதனர் என வழியளவையால் உய்த்துணர்ந்து கூறியவாறு. (177)

பொருதவன் இராவணன் ஒருவனே என இலக்குவன் கூறல்

3594. திருவி னுயக னுரைசெயச்
சுமித்திரை சிங்கந்
தருவி னீளிய தோள்பல
தலைபல வென்றால்
பொருது தாதையை யித்தனை
நெறிக்கொடு போனன்
ஒருவ னேயவ னிராவண
னுமென வுரைத்தான்.

திருவின் நாயகன் உரை செயச் சுமித்திரை சிங்கம்,
"தருவின் நீளிய தோள் பல, தலை பல என்றால்,

பொருது தாதையை இத்தனை நெறிக்கொடு போனான்
ஒருவனே; அவன் இராவணன் ஆம்'' என உரைத்தான்.

பொ :—சீதையின் நாயகனாகிய இராமன் அவ்வாறு சொல்லச் சுமத்திரை யீன்ற சிங்கம் போன்ற இலக்குவன், "மரம்போல் நீண்ட தோள்கள் பல; தலைகள் பல என்பது, இவ்வணிகலன்களால் விளங்குகின்றதென்றால், போர் செய்துகொண்டே இவ்வளவு தொலைவான வழிவரையில் கொண்டு போனவன் ஒருவனே ஆவன்; அவன் (பத்துத் தலைகளையுடையவனான) இராவணனாம்" என்று கூறினான்.

கு :—திரு என்றது திருமகளின் அமிசமான சீதையை யுணர்த்தியது. சீதையின் நாயகனான இராமன் இப்போது அச்சீதையைப் பிரிந்த துயரத்தால் உய்த்துணரும் ஆற்றலிலும் குறையுடையனானான் என்ற கருத்துப் புலப்பட வேண்டித் 'திருவினாயகன்' என்ற பெயரால் குறிப்பிட்டவாறு. திரு இல் நாயகன் என்று பிரிக்கவும் இத்தொடர் இடந்தருதல் காணலாம். சிங்கம் முன்னும் பின்னும் பார்த்துச் செல்லும் இயல்பினது; 'சிங்கநோக்கம்' என்று இதனைச் சிறப்பித்தல் இயல்பு. சிங்கம்போல முன் நிகழ்ந்தவற்றையும் பின் நிகழப்போவதையும் அறியவல்லவன் என்ற குறிப்புத் தோன்றச் சுமித்திரை சிங்கம் என இலக்குவன் சிறப்பிக்கப்பெற்றான். "வெய்ய வல்லரக்கர் வஞ்சம் விரும்பினார் வினையிற்செய்த, கைதவ மான் என்று அண்ணல் காணுதி கடையின்" (மாரீசன் வதைப் - 232) என்று முன் இலக்குவன் கூறியதால் அவன் எதிர்கால வுணர்வையும், தோளணி பலவும் தலையணி பலவும் கிடத்தலைக் கண்டு, 'ஒருவனே அவன் இராவணனாம்' எனக் கடந்தகால நிகழ்ச்சியை உய்த்துணர்ந்து கூறும் அவன் இறந்தகால உணர்வையும் அறியலாம். பத்துத் தலைகளையும் இருபது தோள்களையுமுடைய இராவணன் என்னும் அரக்கன் ஒருவன் உளன் என்பதை இலக்குவன் கேள்விப்பட்டவன் ஆதலானும், மானாக வந்த மாரீசனோடு அவ்விராவணன் தொடர்புடையவனாதலானும், தோளணி பலவும் முடி பலவும் வீழ்ந்து கிடத்தலைக் கண்டவுடன் 'அவன் இராவணனாம்' என உய்த்துணர்ந்து துணிந்து கூறினான் என்க. வீணைக் கொடி கிடந்த இடத்திற்கும் தோள்வளை முதலியன கிடந்த இடத்திற்கும் உள்ள தொலைவை யுளத்திற்கொண்டு, 'தாதையை இத்தனை நெறிக்கொடு போனான்' என்றான். 'எனத்' திருவினாயகன் உரைசெய என்றேனும், திருவினாயகன் 'இவ்வாறு' உரைசெய என்றேனும், ஒரு சொல் வருவித்துக்கொள்க. (178)

## சடாயுவைக் காணுதல்

3595. மடலு ளூட்டிய தாரிளை
யோன்சொலை மதியா
மிடலு ளூட்டங்க டீயுக
நோக்கினன் விரைவான்
உடலு ளூட்டிய குருதியம்
பரவையி னும்பர்க்
கடலு ளூட்டிய மலையன்ன
தாதையைக் கண்டான்.

மடலுள் நாட்டிய தார் இளையோன் சொலை மதியா,
மிடலுள் நாட்டங்கள் தீ உக நோக்கினன் விரைவான்,
உடலுள் நாட்டிய குருதி அம் பரவையின் உம்பர்க்
கடலுள் நாட்டிய மலையன்ன தாதையைக் கண்டான்.

பொ :—மலர் இதழ்களைத் தன்னிடத்தே கொண்ட மாலை அணிந்த இலக்குவனுடைய சொல்லைப் பொருத்தமுடையதாக மதித்து, (இராவணன்மேல் தோன்றிய கோபத்தால்) வலிமையுள்ள கண்களில் தீப்பொறி சிந்தச் சுற்றிலும் பார்த்துக்கொண்டே விரைந்து செல்கின்ற இராமன், உடம்பில் நிலைபெற்றிருந்து வெளிப் பட்ட இரத்தக் கடலின்மேல், திருப்பாற் கடலில் மத்தாக நாட்டிய மந்தரமலைபோலக் கிடந்த தந்தை சடாயுவைப் பார்த்தான்.

கு :—மடல் - மலர் இதழ். இலக்குவன் உய்த்துணர்ந்து கூறிய சொல், இராமன் அறிவிற்குப் பொருத்தமாகத் தோன்றியதனுல் அச் சொல்லை நன்கு மதித்தான் என்க. இலக்குவன் சொல்லின்படி சீதை யைக் கவர்ந்தவன் இராவணன் என்ற அரக்கனே என்ற உண்மை புலப்பட்டமையால் அவன்மேல் கோபம் உண்டாயிற்று. அக்கோபத் தால் கண்களில் நெருப்புப் பொறிகள் சிந்தின. உடம்பின் வலிமை முழுதும் கண்களால் புலப்படுதலின், ‘மிடலுள் நாட்டங்கள்’ என்று சிறப்பித்தார். நோக்கினன் முற்றெச்சம்; விரைவான், வினைப்பெயர். குருதியின் இயல்பு புலப்படுத்த, ‘உடலுள் நாட்டிய குருதி’ என்ருர். ‘ஊன் கிடந்தொளிர் உதிரம்’ (475) என முன் கூறியதும் காண்க. உடம்பில் நிலைபெற்றிருந்த குருதி, இராவணன் வாள் வீச்சால் வெளிப்பட்டுக் கடல்போல் பரவியிருந்தது என்பதும். அந்த இரத்தக் கடலில் சடாயுவின் பெரிய உடம்பு கிடந்த தோற்றம், பாற்கடலில் நாட்டிய மந்தரமலையினைப் போன்றது என்பதும் அறிக. குருதியம் பரவைக்குப் பாற்கடலும், சடாயுவுக்கு மந்தரமலையும் உவமை. “அந்த மில் கனைகடல் அமரர் நாட்டிய, மந்தரமலையென வயங்குவான்றனை”

(சடாயுகாண்-3) என முன் கூறியதும் நினைக்க. இளையோன் சொலை மதியா நோக்கினனாய் விரைகின்றவன், குருதியம் பரவையி னும்பர்த் தாதையைக் கண்டான் என இயையும். (179)

## இராமன் சடாயுவின் உடல்மேல் வீழ்ந்து அரற்றுதல் 3596-3602

**3596.** துள்ளி யோங்குசெந் தாமரை
நயனங்கள் சொரியத்
தள்ளி யோங்கிய வமலன்றன்
றனியுயிர்த் தந்தை
வள்ளி யோன்றிரு மேனியிற்
றழனிற வண்ணன்
வெள்ளி யோங்கலி லஞ்சன
மலையென வீழ்ந்தான்.

துள்ளி, ஓங்கு செந்தாமரை நயனங்கள் சொரியத்
தள்ளி, ஓங்கிய அமலன் தன் தனி உயிர்த் தந்தை
வள்ளியோன் திருமேனியில் தழல் நிற வண்ணன்
வெள்ளி ஓங்கலில் அஞ்சன மலை என வீழ்ந்தான்.

பொ :—யாவர்க்கும் மேலோனாகிய இராமன் உயர்ந்த செந்தாமரை மலர் போன்ற தன் கண்கள் நீர்த்துளிகளைச் சொரிய அத்துளிகளை விரல் நுனியால் மாற்றிக் கொண்டு, தன் ஒப்பற்ற உயிர் போன்ற தந்தையாகிய வள்ளல் தன்மையுடைய சடாயுவின் திருமேனியில், நெருப்பின் நிறம்போன்ற சிவந்த வண்ணமுடைய சிவனுக்குரிய வெள்ளிமலையில் மைம்மலை வீழ்ந்தாற்போல் வீழ்ந்தான்.

கு :—பூவினிற் சிறந்தது பொங்கு தாமரையாதலின், 'ஓங்கு செந்தாமரை' எனச் சிறப்பிக்கப் பெற்றது. நயனங்கள் துள்ளி சொரிய என இயையும். துளி, விரித்தல் விகாரத்தால் துள்ளி என நின்றது. "துள்ளிசோர் வெள்ளக்கண்ணன்" (223) எனப் பின்னும் இவ்வாறு வருதல் காணலாம். தள்ளுதல், இங்குக் கண்ணீரை விரல் நுதியால் தெளித்தலை யுணர்த்தியது. கண்ணீரை இவ்வாறு மாற்றுதலுண்டு என்பதை. "மாயிதழேந்திய மலிந்து வீழரிப்பனி, செவ்விரல் கடைக்கண் சேர்த்திச் சில தெறியா" (நெடுநல்வாடை-164, 165) என்பதால் அறியலாம். உயர்வற உயர்நலமுடையவன் ஆதலின், ஓங்கிய அமலன் எனச் சிறப்பித்தார். அமலன் - குற்றமற்றவன். ஓங்கிய அமலனே கண்ணீர் மல்கத் தன்மேல் வீழ்ந்து

புலம்பும் பேறு பெற்ருன் சடாயு என அவன் சிறப்புணர்த்த இராமனை, 'ஓங்கிய அமலன்' என்று இங்குக் குறிப்பிட்டார். உயிர்த் தந்தை, உவமைத் தொகை. உயிர் போன்ற தந்தையாகிய வள்ளியோன் என இரு பெயரொட்டாக்குக. உள்ளவெல்லா முவந்தீயும் வள்ளல்களும் ஈயகில்லா உயிரைச் சீதையின் பொருட்டு ஈந்தமையால் சடாயுவை 'வள்ளியோன்' என்று சிறப்பித்தார்; வள்ளல் தன்மையுடையவன் என்பது பொருள். "வள்ளியோரின் வழங்கின" (பால - 4) என்ருர் முன்னும். அமலன், துள்ளி சொரியத் தள்ளி, வள்ளியோன் திருமேனியில் வீழ்ந்தான்; என இயையும். தழனிற வண்ணன் - சிவன். 'எரிபோல் மேனிப் பிரான்' (திருநாவுக்கரசர். திருவங்கமாலை) என்பது ஒப்புநோக்கத்தகும். வெண்ணிறமுடைய சடாயுவுக்கு வெள்ளிமலையும், கரிய திருமேனியனுய இராமனுக்கு அஞ்சனமலையும் உவமை. வெள்ளிமலைமேல் மைம்மலை வீழ்ந்தது போல அமலன் வள்ளியோன் மேனியில் வீழ்ந்தான் என்றது இல் பொருளுவமை. தள்ளி என்பதை ஓங்குதற்கு அடையாக்கிப், பிறரையெல்லாம் கீழ்ப்படுத்தி யுயர்ந்த எனப் பொருள் கூறலுமாம். (180)

**3597.** உயிர்த்தி லன்னெரு நாழிகை
யுணர்விலன் கொல்லென்
றயிர்த்த தம்பிபுக் கங்கையி
னெடுத்தன னருவிப்
புயற்க லந்தநீர் தெளித்தலும்
புண்டரீ கக்கண்
பெயர்த்தும் பைப்பய வயர்வுதீர்ந்
தினையன பேசும்.

உயிர்த்திலன் ஒரு நாழிகை; "உணர்விலன் கொல்?" என்று
அயிர்த்த தம்பி புக்கு, அம் கையின் எடுத்தனன், அருவிப்
புயல் கலந்த நீர் தெளித்தலும், புண்டரீகக் கண்
பெயர்த்துப் பைப் பய அயர்வு தீர்ந்து, இனையன பேசும்.

பொ :—அவ்வாறு சடாயுமேல் வீழ்ந்த இராமன், ஒரு நாழிகைப் பொழுது காறும் உயிராது மூச்சற்று இருந்தாகை. உணர்வை இழந்தானே? என்று, ஐயமுற்ற இலக்குவன் சென்று, தன் அழகிய கைகளால் அண்ணனை எடுத்து நிறுத்தி, மலை அருவியில் கலந்து வந்த புயல் பொழிந்த புது நீரை முகத்தில் தெளித்தவுடன், தாமரை மலர் போன்ற கண் விழித்து மெல்ல மெல்லச் சோர்வு தீரப் பெற்று இத்தன்மையான சொற்களைச் சொல்லுவானுனன்.

கு :—சடாயுவின் மூப்பினலாய தளர்வையும் தனிமையையும் எண்ணி எண்ணி முன்னரே வருந்திய இராமன், தான் எதிர்பார்த்த வண்ணம் சடாயு வீழ்ந்து கிடத்தலைப் பார்த்தபோது, உளம் உருகிக் கண்ணீர் பெருகி அவன் மேல் வீழ்தலும், தன்பொருட்டு உயிர் கொடுத்த அவன் வள்ளல் தன்மையை நினைந்து, வருந்தி மூச்சறுதலும் இயல்பேயாகும். அயிர்த்தல் - ஐயுறுதல். எடுத்தனன், முற்றெச்சம். புயல் - மேகம்; ஆகுபெயராய் அது பொழிந்த மழைநீரை யுணர்த்தியது. புதுப் புயல் பொழிந்த நீர் கலந்த அருவிநீர் தண்மை மிக்கது ஆதலின், அந்நீரையே இலக்குவன் தெளித்தான். கண் பெயர்த்து, என்புழிப் பெயர்த்தல் விழித்தலை யுணர்த்தியது. அயர்வு - சோர்வு. இத்துன்ப நிலையிலும் கவிஞர், இராமன் கண்ணழகில் ஈடுபாடு கொண்டு, 'புண்டரீகக்கண் பெயர்த்து என்று' உவமை கூறி அநுபவிக்கின்ருர். (181)

3598. தந்தா தையரைத் தனையர் கொலை நேர்ந்தார்
★ முந்தாரே யுள்ளார் முடிந்தான் முனையொருவன்
எந்தாயோ வெற்காக நீயு மிறந்தனையோ
அந்தோ வினையே னருங்கூற்ற மானேனே.

"தம் தாதையரைத் தனையர் கொலை நேர்ந்தார்
முந்து ஆரே உள்ளார்? முடிந்தான் முனை ஒருவன்;
எந்தாய்! ஓ! எற்காக நீயும் இறந்தனையோ?
அந்தோ! வினையேன் அருங் கூற்றம் ஆனேனே!"

பொ :—"தம் தந்தையரைக் கொலை செய்த புதல்வர்கள், முன் யார் இருக்கின்ருர்கள்? ஒருவருமிலர்; முன்னம் ஒரு தந்தை (நாட்டில் என் பிரிவாற்ருது) முடிவுற்ருன்; ஓ எம் தந்தையே! எனக்காக நீயும் இறந்து விட்டாயோ? ஐயோ! தீவினையேனுகிய யான் அரிய எமனுகிவிட்டேனே!"

கு :—நேர்தல், செய்தல் என்னும் பொருளது. தயரதன் தன் பிரிவால் இறந்தமையானும், சடாயுவும் தன் மனைவியைக் காப்பாற்றும் பொருட்டே உயிர் கொடுத்தமையானும், அவ்விருவர் மரணத்திற்கும் தானே காரணம் ஆனது பற்றித் தான் கொலை செய்ததாகவும் அருங்கூற்றமானதாகவும் இராமன் கூறி ஏங்குகின்ருன். முந்தாரேயுள்ளார்? என்ற வினு முன் யாருமிலர் என்பதை யுணர்த்தியது. முன்னை என்பது முனை என விகாரப்பட்டது. ஒருவன் என்றது தயரதனை. எந்தை என்பது விளியில் 'எந்தாய்' எனத் திரிந்தது. ஓ இரக்கக் குறிப்புணர்த்த வந்தது. எற்காக நீயும்

இறந்தனையோ? என்புழி உம்மை இறந்தது தழீஇயது. தயரதன் எனக்காக இறந்ததேயன்றி, நீயும் எனக்காக இறந்தனையோ? என்று விரித்தல் வேண்டும். "தேனடைந்த சோலைத் திருநாடு கைவிட்டுக் கானடைந்தே னென்னத் தரியாது காவலநீ வானடைந் தாய்" (2528) என இராமனே தன் பிரிவாற்ருது தயரதன் இறந் தான் என்பதைக் கூறியுள்ளமை காண்க. சூலமும் பாசமும் ஏந்திய கொடிய உருவத்தோடு உயிர் கவரும் கூற்றம் போலாது, அக்கருவிகள் ஏதும் இன்றி இனிய உருவத்தோடு மகனாகத் தோன் றியே தந்தையரைக் கொன்றமையான் 'அருங்கூற்றமானேன்' என அக்கூற்றிற்கும் தனக்குமுள்ள வேற்றுமையை அடையால் புலப் படுத்தியவாறு. அந்தோ இரக்கமுணர்த்தும் இடைச்சொல். (182)

3599. பின்னுறுவ தோராதே
பேதுறுவேன் பெண்பாலாள்
தன்னுறுவ றீர்ப்பான்
றனியுறுவ தோராதே
யுன்னுறவு நீதீர்த்தா
யோருறவு மில்லாதே
னென்னுறுவான் வேண்டி
யிடருறுவே னெந்தாயே.

"பின் உறுவது ஓராதே பேதுறுவேன், பெண்பாலாள்
தன் உறுவல் தீர்ப்பான், தனி உறுவது ஓராதே,
உன் உறவு நீ தீர்த்தாய்; ஓர் உறவும் இல்லாதேன்
என் உறுவான் வேண்டி இடர் உறுவேன்? எந்தாயே!"

பொ:—"என் தந்தையே! சீதையாகிய பெண்ணின் துன்பத் தைத் தீர்ப்பதற்காக, துணையிலாது நீ தனித்திருப்பதையும் கருதா மல் போர் செய்து, உயிர் கொடுத்து, உன் உறவுக்குரிய கடமையைச் செய்து தீர்த்துவிட்டாய்; பின் என்ன நிகழும் என்பதையே யுணரா மல் துன்புறுகின்ற யான் - தந்தை, மனைவி போன்ற ஒருறவினரும் இல்லாத யான்-என் உயிரைக் கொடுத்து என் உறவுக்குரிய கடனைத் தீர்க்காமல் என்ன பயனை அடையவேண்டி வீணே துன்புறுகின் றேனோ? அறியேன்."

கு:—என் தந்தை என்ற உறவுக்குரிய கடமையை உயிர்கொடுத் துத் தீர்த்துவிட்டாய்; உயிர்கொடுத்தார்க்கு மகன் செய்யவேண்டிய உயிர்கொடுத்தலாகிய கடனை யான் தீர்க்காமல் வீணே துன்பமட்டும்

உறுகின்றேன்; இவ்வுடலால் என்ன பயனையடையப் போகின்றேனே? என்று இரங்கியவாறு. உறுவல் - துன்பம். உயிர் விடுதற்கேற்ற காரணங்கள் நிரம்ப இருந்தும் அது செய்யாது அன்புடையேன் போலத் துன்புறுகின்றேன் என்பான், 'பின்னுறுவதோராதே பேதுறுவேன்' எனவும், 'ஒருறவும் இல்லாதேன்' எனவும் கூறினான். மனைவி பிரிந்த பின், தந்தையர் இருவர் எனக்காக உயிர் நீத்தபின், யான் உயிர் வாழ்தலால் பயன் யாது? என்று வெறுப்பைப் புலப்படுத்தியவாறு. பின்னுறுவது ஓராதே பேதுறுவேன் என்றது, தேவியைப் பிரித்த பாவியைக் கொன்று அப் பாவையை மீட்பேனோ? மீட்க வியலாமல் தவிப்பேனோ என்பதை அறிதல் கூடாமையின் துன்புறுவேன் என்றவாறு. இனி, பின் நிகழ இருந்த தீங்கை யுணராமல் மாயமானே உண்மை மான் என்று மயங்கிய என் பெண்பாலாளாகிய சீதை என இயைத்துப் பொருள் கூறுதலுமாம். அறியேன் சொல்லெச்சமாக வருவிக்க. (183)

**3600.** மாண்டேனே யன்றோ
மறையோர் குறைமுடிப்பான்
பூண்டேன் விரத
மதனு லுயிர்பொறுப்பேன்
நீண்டேன் மரம்போல
நின்ருெழிந்த புன்ருெழிலேன்
வேண்டேனிம் மாமாயப்
புன்பிறவி வேண்டேனே.

"மாண்டேனே அன்றோ? மறையோர் குறை முடிப்பான்
பூண்டேன் விரதம்; அதனால் உயிர் பொறுப்பேன்;
நீண்டேன் மரம்போல நின்று ஒழிந்த புன்தொழிலேன்;
வேண்டேன், இம் மாமாயப் புன்பிறவி வேண்டேனே!"

பொ:—"தந்தையை யிழந்த துன்பத்தால் யான் மாண்டுவிடுதற்கு உரியவனே அல்லவோ? ஆயினும், வேதம் வல்ல முனிவர்களின் குறையை முடிப்பதற்காக விரதம் பூண்டு விட்டேன்; அவ்விரதத்தை முடிக்க வேண்டியிருத்தலால் உயிர்தாங்கியிருப்பேன்; உதிமரம்போல நீண்டு வளர்ந்தேனாய் நின்று பயனற்ற அற்பத் தொழிலுடையேனாகிய யான், இந்தப் பெரிய பொய்ம்மை வாய்ந்த அற்பப் பிறவியை விரும்பியிருக்க மாட்டேன்; விரும்பியிருக்கமாட்டேன்."

கு :—மாள்வதற்குரியவனே என்பான், விரைவுபற்றி 'மாண்டேனே' என இறந்த காலத்தால் கூறினுன்; காலவழுவமைதி. மறையோர் குறை முடிப்பான் விரதம் பூண்டமை; "அறந்தவா நெறி யந்தணர் தன்மையை மறந்த புல்லர் வலிதொலேயேனெனின், இறந்து போகினும் நன்று" (அகத்தியப்-19) என்றதாலும், "ஆரறத்தினெடன்றிநின்ருரவர், வேரறுப்பென் வெருவன்மின்" (22) என்றதாலும் அறியலாம். அவ்விரதத்தை முடிக்காமல் உயிர்விடுதல் நன்றன்ருகலின், உயிர்தாங்கி யிருக்கின்றேனேயன்றி, மாமாயப் புன்பிறவியிலுள்ள பற்றிஞலன்று; என்பது விளக்கியவாறு. 'மரம் போல' என்பது, இடைநிலே விளக்காய் 'மரம்போல நீண்டேன்' எனவும், 'மரம்போல நின்ருெழிந்த' எனவும் இருவழியும் இயையும். உதிய மரம் நீண்டும் பிறர்க்குப் பயன்படாவாறு போல யான் வளர்ந்தும் பிறர்க்குப் பயன்பட வாழவில்லே என்பதும், பிறர் வெட்டிய வழியும் வேரறப்பறித்த வழியும் தீயிட்டெரித்த வழியும் அவர்க்கு யாதொரு தீங்கும் செய்யமாட்டாது நின்ருெழியும் மரம்போல, என் தந்தையைக் கொன்று, மனேவியை மாற்ருன் கொளவும் அவனுக்கு ஒரு தீங்கும் செய்யாது நின்ற அற்பத்தொழிலேயுடையேன் என்பதும் உணர்த்தியவாறு, இறந்து போதற்குரிய இழிதகவெலாம் பெற்றவன் என்பது இதனுல் புலப்படுத்தினுன். பிறவியும் விரும்புவதற்குரிய பெருமையுடையதாகாது, வெறுத்தற்குரியதாகவே யுள்ளது என்பான், 'மாமாயப் புன்பிறவி' என்ருன். மணிமுடி சூடுதற்குரியவன் சடைமுடி தாங்கிவர நேர்ந்தமையால் செல்வ நிலேயாமையும், பிரிவிலாளேப் பிரிய நேர்ந்தமையால் இன்பம் நிலேயாமையும், தயரதனும் சடாயுவும் தன் பொருட்டிறந்தமையால் யாக்கை நிலேயாமையும் உணர்ந்தாளுகலின், இம்மனிதப் பிறவியை அவ்வாறு இழித்துக் கூறினுன். மாமாயம் - பெரும் பொய்; பொய் என்றது நிலேபேறிலாதது என்றவாறு. வேண்டேன்; வேண்டேனே என்ற அடுக்கு வெறுப்புணர்ச்சியை விளக்க வந்தது. பயனற்றதும் நிலேயற்றது மாய அற்பப் பிறவியை வேண்டி உயிர் தாங்கவில்லே; விரதத்திற்காகவே உயிர்பொறுக்கின்றேன் என்றவாறு. (184)

**3601.** என்ருரம் பற்றுண்ண
வேன்ருயைச் சான்ருேயைக்
கொன்ருனு நின்ருன்
கொலேயுண்டு நீகிடந்தாய்

வன்ருட் சிலேயேந்தி
வாளிக் கடல்சுமந்து
நின்றேனு நின்றேன்
நெடுமரம்போ னின்றேனே.

"என் தாரம் பற்றுண்ண ஏன்ருயைச் சான்ருேயைக்
கொன்ருனும் நின்ருன்; கொலேயுண்டு நீ கிடந்தாய்;
வன்தாள் சிலே ஏந்தி, வாளிக் கடல் சுமந்து,
நின்றேனும் நின்றேன், நெடு மரம்போல் நின்றேனே."

பொ:—"என் மனேவி பிறனல் கவரப்பட்டமையால் அவனே எதிர்த்த உன்னே - சால்புமிக்க பெரியோனுகிய உன்னேக் - கொன்ற பாவியும் உயிரோடு இருக்கின்ருன்; அறவோனுகிய நீ கொலேயுண்டு கிடக்கின்ருய்; போர் செய்தற்குரிய வலிய அடியையுடைய வில்லே யேந்திக் கொண்டு, அம்புகளாகிய கடலேச் சுமந்து கொண்டு நிற்கின்ற யானும் அப்பகைவனேக் கொல்லாது, செயலற்ற நீண்ட மரம் போல நிற்கின்றேன்; நிற்கின்றேன்; (என்னிலேமைதான் என்னே!)"

கு:—தாரம் - மனேவி, பற்றுண்ணுதல் - கவரப்படுதல். ஏன்ருயை, சான்ருேயை, முன்னிலே வினேயாலணேயும் பெயர்; ஏலுதல் - எதிர்த்தல்; "அன்பு நாண் ஒப்புரவு கண்ணேட்டம் வாய்மையோ, டைந்துசால் பூன்றிய தூண்," (குறள் - 983) என வள்ளுவர் கூறிய சால்புக்கு அடிப்படையான அன்பு முதலிய ஐந்தும் சடாயுவினிடம் அமைந்திருத்தலின் அவனேச் 'சான்ருேயை' என்ருன். நண்பனுகிய தயரதன் மக்கள் என்றவுடன் அளவிலா அன்பு காட்டி அவர் பொருட்டே உயிர்தாங்கி யிருந்தமையும், தன் மருகி முறையினளாய சீதை பிறனல் கவரப் பட்டாளே என்று பழிக்கு நாணிக், கவர்ந்தானேத் தாக்கினமையும், பிறர்க்கென வாழ்ந்து பழகிய ஒப்புரவுடைமையால் சீதைக்காகத் தன்னுயிரையும் கொடுத்தமையும், சீதையின் அல்லல் கண்டு கண்ணேடி அல்லற்படுத்திய இராவணனேத் தாக்கினமையும், தன்னுயிர் நிலேத்துள்ளது சிறகினில், என்ற வாய்மையை, இராவணனுக்குக் கூறினமையும் நோக்கின், சடாயுவின்பால் அன்பும், நாணும், ஒப்புரவும், கண்ணேட்டமும் வாய்மையும் சிறந்திருந்தமை யுணரலாம். இராவணன் தன்னுயிர் நிலேத்துள்ள இடமிதுவெனப் பொய் கூறவும், சடாயு உண்மையைக் கூறி உயிரிழந்தான் என்பது பழைய வரலாறு. "மெய் சொல்லா இராவணனே மேலோடி யீடழித்துப், பொய் சொல்லா துயிர் போனன் புள்ளிருக்கு வேளூரே" (ஞான சம்பந்தர் தேவாரம் 2-43-2) என்ற பாடலில் அக்குறிப்புள்ளமை காணலாம். பிறன்மனேயாளேக் கவர்ந்த பாவி இறத்தலும் அப்பாபச் செயலேத் தடுத்த அறவோன் வாழ்தலுமே முறையாகவும் அங்ஙனம்

நிகழவில்லையே என்பான், 'சான்ருேயைக் கொன்ருனும் நின்ருன்; கொலையுண்டு நீ கிடந்தாய்' என்று கூறி வியந்தான். "அல்ல லுற்றேனை வந் தஞ்சலென்றவிந் நல்லவன் தோற்பதே நரகன் வெல்வதே" (133) எனச் சீதையும் இவ்வாறே வியந்தமை காண லாம். பகைவனைக் கொல்லுதற்குரிய படையால் குறைவிலாதிருந் தும் என் ஆண்மைக் குறைவால் வாளா இருக்கின்றேன் என்பான், "வன்ருட்சிலையேந்தி வாளிக்கடல் சுமந்து நின்றேனு நின்றேன்" என்ருன். என் தாரம் பற்றுண்ண ஏன்ற நீ, கொலையுண்டு கிடக்கத் தாரத்தைப் பறிகொடுத்த யான், கவலையின்றி 'நெடுமரம்போல் நின் றேன்' என்று தன்னை இழித்துக் கூறிக்கொண்டவாறு. கொன்ரு னும் என்புழி உம்மை இழிவு சிறப்பு. வாளிகளின் மிகுதியைப் புலப்படுத்த 'வாளிக்கடல்' என்ருன். அவை பயன்படாமையின் 'சுமந்து' என்ருன். "கணைப்புட்டிலும் கட்டமைந்த வில்லும் சுமக்கப் பிறந்தேன்" (1830) என இலக்குவன் கூறியதும் காண்க. நின் றேன், நின்றேன் என அடுக்காக்குக. (185)

**3602.** சொல்லுடையா ரென்போ
லினியுளரோ தொல்வினையேன்
இல்லுடையாள் காண
விறகுடையா யெண்ணிலாப்
பல்லுடையா யுன்னைப்
படையுடையான் கொன்றகல
வில்லுடையே னின்றேன்
விறலுடையே னல்லேனே.

"சொல் உடையார் என்போல்
இனி உளரோ? தொல்வினையேன்
இல் உடையாள் காண,
இறகு உடையாய்! எண் இலாப்
பல் உடையாய்! உன்னைப்
படை உடையான் கொன்று அகல,
வில் உடையேன் நின்றேன்;
விறல் உடையேன் அல்லேனே?"

பொ:—"புகழ்ச்சொல்லை உடையவர்கள் என்னைப் போல்பவர் இவ்வுலகத்து வேறு யாரேனும் உளரோ? இறகுகளையும் அளவற்ற பற்களையும் மட்டுமே கருவியாக உடையவனே! பழைய தீவினை யுடைய என் இல்லிற்குரியவளாகிய சீதை காண வேறு படையிலாத

உன்னைப் படைகளையுடைய இராவணன் கொன்றுவிட்டுச் செல்ல, வில்லுடையேனாய் அவனை ஒன்றும் செய்யாது நிற்கின்ற யான், வீரமுடையவன் அல்லேனோ ?''

கு :—சொல் என்றது, புகழ்ச் சொல்லை. இவ்வுலகத்தில் என்னைப் போல் புகழுடையவர் பிறர் இலர் என்றது, குறிப்புச் சொல்; கற்கறித்து, " நன்கட்டாய் " என்றாற்போல. என்னைப்போல் பழி யுடையோர் வேறு யாரும் இல்லை என்பதே கருத்து. 'விறலுடையே னல்லேனோ' என்பதும் குறிப்புச் சொல்லே. மனைவியை மாற்றான் கொள்ளவும் தந்தையைக் கொல்லவும் காண்பதற்குரிய தீவினையை முன்பிறப்பில் செய்துகொண்டவன் எனத் தன்னை இழித்துக் கூறு வான், 'தொல்வினையேன்' என்றான். 'இறகுடையாய் எண்ணிலாப் பல்லுடையாய்' என்றது, இறகும் பல்லுமன்றி வேறு படைக்கலமில் லாதவன் என்பதைப் புலப்படுத்திப் படையிலானைப் படையுடையான் கொன்றது போரறமன்று என்பதை விளக்கியவாறு. காணக் கொன்றகல என இயையும். படையிலாத உன்னைப் படையுடை யான் கொல்வதைக் காணும் தீவினை சீதைக்கு என் சார்பால் வந்தது என்பான், 'தொல்வினையேன் இல்லுடையாள் காண' என்றான். படையிலாத நீ படையுடைய இராவணனை எதிர்த்துப் போர் செய்து இறக்கவும், பெரிய வில்லையேந்தி வாளா நிற்கின்றேனாகிய யான் வீரமுடையவனன்றோ ? என்று தன்னை இழித்து இகழ்ந்து கொண்டவாறு. இனிச் சொல் என்பதற்குப் பழிச்சொல் எனப் பொருள் கொண்டு, என்னைப்போல் பழிச்சொல் உடையார் இனி வேறு யாருளர் ? என்று வெளிப்படைச் சொல் ஆக்கிக் கூறலுமாம், இல்லுடையாள் காணப் படையுடையான் கொன்றகல என்புழி. படையிலாத உன்னைப் படையுடையான் கொல்வதைக் கண்ட சீதை எவ்வாறு பதைத்தாளோ ? என்ற குறிப்பும் தோன்றுதல் காணலாம். பெண்ணுள்ளம் பதைக்குமே என்ற எண்ணமுமின்றிக் கொன் றகன்ற கொடுமை புலப்படுத்தியவாறு. பறவைகட்கு அலகில் சிறிய முனைபோன்ற பகுதி இங்குப் பல் எனப்பட்டது போலும். இராவ ணன் வில்லைப் பல்லால் பறித்தான் (114) என முன்னும் சடாயு வுக்குப் பல்லுண்மை கூறியுள்ளமை காணலாம். இப்பாடல் ஐயப் பாட்டிற்குரியது. (186)

## சடாயு உயிர்த்தெழுதல்

**3603.** அன்னா பலபலவும் பன்னி யழுமயங்கும்
தன்னே ரிலாதான்றன் றம்பியுமத் தன்மையனா
வுன்னா வுணர்வுசிறி துண்முளைப்பப் புள்ளரசும்
இன்னா வுயிர்ப்பா னிருவரையு நோக்கினான்.

அன்ன பலபலவும் பன்னி அழும்; மயங்கும்;
தன் நேர் இலாதான்தன் தம்பியும் அத்தன்மையனு;
உன்னு, உணர்வு சிறிது உள் முளைப்பப் புள் அரசும்,
இன்னு உயிர்ப்பான், இருவரையும் நோக்கினன்.

பொ :—அத்தன்மையான சொற்கள் பலபலவற்றையும் சொல்லி அழுகின்றானும், மதிமயக்கம் கொள்கின்றானுமாக, தனக்குவமையில் லாதவனாகிய இராமனுடைய தம்பியும் அவன் போலவே அழுபவனும் மயங்குபவனுமாக, உணர்வு சிறிது உள்ளே தோன்ற நினைவு கூர்ந்து சடாயுவும் துன்பத்தோடு மூச்சு விடுபவனாய் அவ்விருவரை யும் விழித்துப் பார்த்தான்.

கு :—அன்ன என்னும் பலவின் வினைமுற்று எதுகை நோக்கி அன்னு என நீண்டது. அழும், மயங்கும் என்பன, நிகழூஉ நின்ற பலர் வரை கிளவி; ஆணொருமை யுணர்த்தின. தன்னேரிலாதான் என்றது, இராமனை. "உரவோ ரெண்ணினு மடவோ ரெண்ணினும், பிறர்க்கு நீ வாயி னல்லது நினக்குப் பிறருவம மாகா வொருபெரு வேந்தே" (பதிற்றுப் பத்து. 73) என்பது இங்கு ஒப்புநோக்கத்தகும். இராமன் போலவே இலக்குவனும் சடாயுவின் நிலைமை நினைந்து அழுதலும் மயங்குதலும் செய்தான் என்பார், 'தம்பியு மத்தன்மை யனு' என்றார். ஆக என்பது ஆ என ஈறுகெட்டது. உன்னு, செய்யா வென்னும் வாய்பாட்டு வினையெச்சம். முளைத்தல் - தோன்றுதல். முளைப்ப உன்னி என்க. கழுகுகளாகிய புட்களுக்கு அரசன் சடாயு ஆதலின் அவனைப் 'புள்ளரசு' என்றார். 'இன்னு உயிர்ப்பான்' - துன்பத்தோடு மூச்சுவிடுபவனாய்; என முற்றெச்சமாக்கி நோக்கினன் என்பதோடு முடிக்க. தன் அருகில் அழுது மயங்குகின்ற இராம இலக்குவரைச் சடாயு கண் விழித்துப் பார்த்தான் என்க. அழும் மயங்கும் என்ற பயனிலைக்கு அமலன் (180) என்பதே எழுவாயாகும். மூச்சற்றுக் கிடந்த சடாயு இராம இலக்குவரின் குரல் கேட்டுச் சிறிது உணர்வு வரப்பெற்றானுதலின், அவன் மூச்சுவிடத் தொடங்கும் நிலை புலப்பட 'இன்னு வுயிர்ப்பான்' என்றார். (187)

### இராம இலக்குவரைக் கண்டு மகிழ்தல்

**3604.** உற்ற துணரா
துயிருலைய வெய்துயிர்ப்பான்
கொற்றவரைக் கண்டான்ற
னுள்ளங் குளிர்ப்புற்றான்

இற்ற விருசிறகு
மின்னுயிரு மேழுலகும்
பெற்றனனே யொத்தான்
பெயர்த்தேன் பழியென்ருன்.

உற்றது உணராது, உயிர் உலைய வெய்து உயிர்ப்பான்
கொற்றவரைக் கண்டான்; தன் உள்ளம் குளிர்ப்புற்ருன்;
இற்ற இரு சிறகும், இன்னுயிரும், ஏழ் உலகும்,
பெற்றனனே ஒத்தான், ''பெயர்த்தேன் பழி'' என்ருன்.

பொ :—சீதையை இராவணன் கவருமாறு இராம இலக்குவர்க்கு நேர்ந்தது இன்னது என்று உணராமல், உயிர் அழியுமாறு வெப்பமாகப் பெருமூச்சு விடுகின்ற சடாயு, வெற்றிவீர ரிருவரையும் கண்டு, தன் மனம் குளிரப் பெற்றவனுய், வெட்டுண்டு ஒடிந்த இரு சிறகுகளையும், தன் இனிய உயிரையும், ஏழு உலகங்களையும் பெற்றவன் போன்று மகிழ்ந்தவனுய், “ பழியைப் போக்கிவிட்டேன் ” என்று கூறினன்.

கு :—‘ உற்றது ’ என்றது, இராம இலக்குவர்க்கு நேர்ந்ததை. ‘வெற்றிய ருளரெனின் மின்னி னுண்ணிடைப், பொற்ருெடிக் கிந்நிலை புகுதற் பாலதோ? உற்றதை யின்னதென் றுணரகிற்றிலேன்’ (141) என முன்னம் சடாயு வருந்திய நிலையை அநுவதிப்பார், “உற்றதுணரா துயிருலைய வெய்துயிர்ப்பான் ” என்று அவனைக் குறித்தார். அவ்விருவருயிர்க்கும் ஏதம் ஏற்பட்டிருக்குமோ என்று ஐயுற்றவனுகலின், அக்கொற்றவரைக் கண்டவுடன், உள்ளங் குளிர்ந்ததோடு, தன் இற்ற சிறகும், இனிய உயிரும், ஏழுலகமும் பெற்றவனைப்போல மகிழ்ந்து, பழிதுடைத்தேன் என்று, துணிந்து கூறுவானுனன். கொற்றவரை - இராம இலக்குவரை ; யாரையும் வெல்லும் ஆற்றலுடையவர் அவர் என்றவாறு. ‘வெற்றியர் உளரெனின் ’ (141) என முன்னும் அப்பொருள்படவே அவர்களைக் குறித்திருத்தல் காணலாம். இருசிறகு இருதிருந்தால் என்ன செய்வானே அச்செயலை இராம இலக்குவர் செய்யவல்லவராதலின் அவரைக் கண்டவுடன் இற்ற இருசிறகு பெற்றவன்போல் மகிழ்ந்தான் ; தனக்கு உயிர்போன்ற அன்புடைய அவ்விருவரைக் கண்டவுடன் மாய்கின்ற தன்னுயிரை மீளப் பெற்றவன்போல் மகிழ்ந்தான். இராவணனைக் கொன்று சீதையை மீட்டு ஏழுலகிற்கும் அரசனுய் இராமன் திகழப் போகின்ருன் என்ற நம்பிக்கையுடையவன் சடாயு ஆதலின், அவர்கள் பெறும் ஏழுலகும் தான் பெற்றதாகக் கொண்டு மகிழ்ந்தான் என்பார், ‘ஏழுலகும் பெற்றனனே ஒத்தான்’ என்ருர். உயிர்ப்பான், வினைப்பெயர். கண்டான், குளிர்ப்புற்ருன், ஒத்தான்

என்பன முற்றெச்சங்களாய் என்ருன் என்பது கொண்டு முடியும். இராம இலக்குவர் உயிரோடிருத்தலின் இனி அவர் இராவணனைக் கொன்று சீதையை மீட்டுத் தமக்கு வந்த பழியைப் போக்கி விடுவர் என்ற துணிவுபற்றிப் ‘பெயர்த்தேன் பழி’ என இறந்த காலத்தால் கூறினுன். தான், அவர் என்ற வேற்றுமையில்லாத ஒற்றுமை தோன்ற, ‘பெயர்த்தேன் பழி’ எனத் தன் வினையாகக் கூறினுன். (188)

### அவர்களை அருகே அழைத்து உச்சி மோத்தல்

3605. பாக்கியத்தா லின்றென்
பயனில் பழியாக்கை
போக்குகின்றேன் கண்ணுற்றேன்
புண்ணியரே வம்மினென்று
தாக்கி யரக்கன்
மகுடத் தலைதகர்த்த
மூக்கினு லுச்சி
முறைமுறையே மோக்கின்ருன்.

“பாக்கியத்தால், இன்று, என்
பயன் இல் பழி யாக்கை
போக்குகின்றேன், கண்ணுற்றேன்;
புண்ணியரே! வம்மின்” என்று,
தாக்கி அரக்கன்
மகுடத் தலை தகர்த்த
மூக்கினுல் உச்சி
முறை முறையே மோக்கின்ருன்.

பொ :—“புண்ணியமூர்த்திகளே! பயன் இல்லாததும் பழியுடையதுமாகிய என் உடம்பை விடுக்கின்ற யான், இப்பொழுது என் நல்வினைப்பயனுல் உம்மைக் கண்ணுரக் காணப்பெற்றேன்; வாருங்கள்” என்று வரவேற்று, அரக்கனுடைய முடியணிந்த தலையைத் தாக்கி மணிமுடியைத் தகர்த்து வீழ்த்திய மூக்கினுல் அவர்கள் உச்சியை முறைமுறையே மோந்திடுவானுனன்.

கு :—போக்குகின்றேன் வினைப்பெயர்; பாக்கியத்தால் கண்ணுற்றேன்; என இயையும். என் யாக்கை; என் பாக்கியத்தால் என, என் இடைநிலை விளக்காய் இருவழியும் இயையும். இன்று, இப்

பொழுது என்னும் பொருளது. பயனில் யாக்கை; பழியாக்கை என்க. நம் மருகிக் கெய்திய வெந்துயர் துடைத்தனன் என்னும் மெய்ப்புகழை மேவாத யாக்கை என்பான், பயனில் யாக்கை எனவும், பழிபடு யாக்கை எனவும் இழித்துக் கூறினான். "நம்மருகிக் கெய்திய, வெந்துயர் துடைத்தனன் என்னும் மெய்ப்புகழ், தந்திலர் விதியினார் தரும வேலியைச் சிந்தினர்" (140) என முன் சிந்தித்தமை இங்கு நினைவுகூரத்தகும். வசையென்ப வையத்தார்க்கெல்லாம் இசை யென்னும் எச்சம் பெறாஅ விடின் (குறள் - 238) என்புழிப் புகழ் பெருமையே பழிபெற்றதாகும் என்றாராகலின், இங்கும், மெய்ப்புகழ் மேவாமையையே பயனின்மையும் பழியுண்மையுமாக்கிப் 'பயனில் பழியாக்கை' என்று வகுத்துக் கூறியவாறு. தன் யாக்கை போக்குதற் குரிய இழிவுடையது என்று கூறித் தன் இறப்பிற்காக இராம இலக்கு வர் வருந்தும் வருத்தம் தணித்தபடி. முன்செய்த என் நல்வினையினால் புண்ணியரைக் காணும் பேறு மரணகாலத்தில் கிடைத்தது என்பான், 'பாக்கியத்தால் கண்ணுற்றேன்' என்றான். மரணகாலத்தில் நினைந் தாரை நல்லுலகுய்த்தற்குரிய புண்ணியரைக் கண்ணாலும் காணப் பெறுதல், பாக்கியத்தாலன்றி வாய்க்காது என்பது கருத்து. புண் ணியர் - புண்ணியத்தின் வடிவாயுள்ளவர். இராமன் திருமாலே என்பதை, "பஞ்சணை பாம்பணை யாகப் பள்ளிசேர், அஞ்சன வண்ணனே இராமன்" (142) என முன்னமே உணர்ந்தவனாதலின் இங்ஙனம் கூறினான். தகர்த்த - துணித்த; வேறுபடுத்தி வீழ்த்திய. தகர்த்தற்குச் செயப்படுபொருள் மகுடம். தலைமகுடம் தகர்த்த என மாற்றினும் ஆம். இராவணன்பால் வன்தொழில் செய்த மூக்கே இராம இலக்குவர்பால் மென்மைத் தொழிலும் செய்கின்றது என்ற நயம் காண்க. முன்னவனை முன்னும் பின்னவனைப் பின்னும் உச்சி மோந்தான் என்பார், 'முறைமுறையே மோக்கின்றான்' என்றார். தந்தையும் உச்சி மோத்தலுண்டு: "மோவாதுச்சி......என்மகனை யிழந்திட்ட" (பெருமாள் திருமொழி: 9 - 6) எனத் தயரதன் கூற்றாக வந்துள்ளமை காண்க. "உச்சிமோந்து கன்றுகாண் கறவையன்னான்" (மீட்சிப் - 346) என இராமன் பரதனை உச்சி மோந்தது பின்னர்க் காணலாம். (189)

## இரங்கி வினவுதல்

3606. வஞ்சனையால் வந்த வரவென்ப தென்னுடைய
நெஞ்சகமே முன்ன நினைவித்த தானாலும்
அஞ்சொல் மயிலை யருந்ததியை நீங்கினிரோ
வெஞ்சலிலா வாற்ற லிருவீரு மென்றுரைத்தான்.

"வஞ்சனையால் வந்த வரவு என்பது என்னுடைய
நெஞ்சகமே முன்னம் நினைவித்தது; ஆனாலும்,
அம் சொல் மயிலை, அருந்ததியை, நீங்கினிரோ,
எஞ்சல் இலா ஆற்றல் இருவீரும்?'' என்று உரைத்தான்.

பொ:—"இராவணன் சீதையைக் கவர்ந்துவந்த வரவு வஞ்சனையால் நிகழ்ந்ததே என்பதை என் நெஞ்சமே முன் என்னை நினைக்கச் செய்தது; ஆனாலும், (விளங்க வினவுகின்றேன்) அழகிய சொல்லையுடைய மயில் போன்றவளைக் கற்பில் அருந்ததி போன்றவளாகிய சீதையைத் தனியே விடுத்துக் குறைவிலாத வலிமையுடைய நீங்கள் இருவீரும் பிரிந்து சென்றுவிட்டீர்களோ?" என்று வினவினான்.

கு:—இராவணன் சீதையைக் கவர்ந்து வந்த வரவு வஞ்சனையால் நிகழ்ந்ததே என்பது என வேண்டுஞ்சொல் வருவிக்க. "பஞ்சணை பாம்பணையாகப் பள்ளிசேர், அஞ்சன வண்ணனே யிராமனாதலால், வெஞ்சின வரக்கனால் வெல்லற்பாலனோ, வஞ்சனையிழைத்தனன் கள்ள மாயையால்" (142) என முன் சிந்தனை செய்தவனாகலின், என்னுடைய நெஞ்சகமே முன்னம் நினைவித்தது என்று இங்குக் கூறினான். வஞ்சனையால் நிகழ்ந்திருக்க வேண்டும் எனப் பொதுவகையால் உய்த்துணர்ந்ததன்றி நிகழ்ந்த வஞ்சனை யிதுவென முழுதும் உணர்ந்திலன் ஆகலின், அதனை அறிய வினவுகின்றேன் என்பது போதர 'ஆனாலும்' என்று தொடங்குகிறான். வேடன், வலையில் அகப்படுத்திய வழி மீளகில்லா மயில்போல் இராவணன் பிடியில் சிக்கி அல்லலுறுகின்றாளே என்ற குறிப்புப் புலப்படச் சீதையை 'அஞ்சொல் மயில்' என்றும், அவ்வாறு அவன் பிடியில் அகப்பட்ட வழியும் அவனால் தொடப்பெறுமையின் கற்புடைமைக் கிழுக்கின்றியே இருக்கின்றாள் என்ற குறிப்புப் புலப்பட 'அருந்ததியை' என்றும் ஆகுபெயரால் கூறினான். 'அஞ்சொல் மயில்' என்றது இல்பொருளுவமையாகும். இருவரில் ஒருவர் நீங்காதிருந்தாலும் இத்தீங்கு வந்திராதே என்ற எண்ணத்தால், இருவீரும் நீங்கினிரோ? என்றான். இராவணனை வெல்லத்தக்க ஆற்றல் இருவர்க்கும் உண்டு என்பான், 'எஞ்சலிலா வாற்ற லிருவீரும்' என்றான். அவ்வாறு நீங்கமாட்டீர்களே என்ற கருத்தால், இருவீரும் நீங்கினிரோ? என்றான். நீங்கினிரோ என்ற வினா, இயல்பாகவே நீங்கினீரோ? அல்லது வஞ்சனைச் செயல் ஏதேனும் நிகழ்ந்தமையால் நீங்கினீரோ? என்ற ஐயத்தால் நிகழ்ந்ததாகும். எனவே, இவர்களின் நீக்கத்திற்காகவே வஞ்சனை நிகழ்ந்திருக்க வேண்டும் என்ற கருத்துச் சடாயுவுக்கு உண்டு என்பது இதனால் புலனும். நெஞ்சினில் தோன்றியதையே நெஞ்சகமே முன்னம் நினைவித்ததாகக் கூறினான். (190)

## இலக்குவன் நிகழ்ந்தது கூறல்

3607. என்றவ னியம்பலு மிளைய கோமக
★ ஞென்றுமாண் டுறுபொரு ளொழிவு ருவகை
வன்றிறன் மாயமான் வந்த தாதியா
நின்றது நிகழ்ந்தது நிரப்பி ஞனரோ.

என்று அவன் இயம்பலும், இளைய கோமகன்,
ஒன்றும் ஆண்டு உறுபொருள் ஒழிவுரு வகை,
வன்திறல் மாயமான் வந்தது ஆதியா
நின்றது நிகழ்ந்தது நிரப்பினன் அரோ.

பொ :—என்று சடாயு வினவுதலும், இலக்குவன், நிகழ்ந்த செயல் ஒன்றையும் விடாமல் வலிமையும் திறமையும் உடைய மாய மான் வந்தது முதலாக நிகழ்ந்துநின்ற வரலாற்றைச் சொல்லி முடித்தான்.

கு :—ஒன்றும் ஒழிவுருவகை என இயையும். விரைந்தோடுதற்கு உரிய வன்மையும் தன்னைப் பின்பற்றுவோரை வஞ்சிக்கும் திறமையும் உடைய மான் என்பார், 'வன்றிறல் மாயமான்' என்றார். நிகழ்ந்ததாய் நின்றது என மாற்றி முற்றெச்சமாக்கி முடிக்க. சொல்லுதற்கியலாத துன்ப நிலையிலும் சடாயுவின் கேள்விக்கு விடை கூறியாக வேண்டும் என்ற நிலையில் சொல்லி நிரப்பினன் என்ற கருத்துப் புலப்பட, கூறினன் என்னாது 'நிரப்பினன்' என்றார். (191)

## சடாயு அவர்கட்குத் தேறுதல் கூறுதல்

3608. ஆற்றலோ னவ்வுரை
யறைய வாணையா
லேற்றுணர்ந் தெண்ணியவ்
வெருவை வேந்தனும்
மாற்றருந் துயரவர்
மனக்கொ ளாவகை
தேற்றுத னன்றென
வினைய செப்புவான்.

ஆற்றலோன் அவ் உரை அறைய, ஆணையால்,
ஏற்று, உணர்ந்து, எண்ணி, அவ் எருவை வேந்தனும்,
"மாற்றரும் துயர் அவர் மனக் கொளா வகை
தேற்றுதல் நன்று" என, இனைய செப்புவான்.

பொ :—இராமன் கட்டளையின்படி, சொல்லாற்றலையுடைய இலக்குவன் அச்சொற்களைச் சொல்ல, கழுகின் வேந்தனாகிய சடாயுவும் அச்சொற்களைச் செவியில் ஏற்று, அவர்கள் துன்பநிலையை உணர்ந்து, பின் இனிச் செய்யத்தகுவது யாது என ஆராய்ந்து பிறரால் மாற்றுதற்கு அரிய துயரத்தை அவர்கள் மனத்தில் கொண்டிராதபடி தேற்றுதல் நல்லது என்று தெளிந்து இத்தகைய சொற்களைச் சொல்லலானான்.

கு :—ஆற்றல் என்றது இங்குச் சொல்லாற்றலை. ஆணையால் என்றது, இராமன் குறிப்பாலறிவித்த கட்டளையின்படி என்றவாறு. இதனால் இராமன் ஆணையின்படி நடக்கும் இலக்குவன் பெருமை புலனாம். பிறர்க்குத் தம் வரலாற்றைக் கூறநேர்ந்த போதெல்லாம் இலக்குவனே கூறிவந்துள்ளதை நோக்கின் இலக்குவன் சொல்லாற்றலுடையவன் என்பது புலனாம். புலனைந்தும் நெறி கலங்கியுள்ள நிலையில் சடாயு இலக்குவன் கூறியதை அரிதின் முயன்று செவியேற்றமை தோன்ற, 'ஏற்று' என்றும், அவர்கள் முகக் குறிப்பால் அகத்துறு பெருந்துயரை உய்த்துணர்ந்தமை தோன்ற 'உணர்ந்து' என்றும், அவர்கள் துயர் தணிக்க வழி யாது என்று நெடிது சிந்தித்தமை தோன்ற, 'எண்ணி' என்றும் கூறினார். மனையாளை மாற்றான் கொண்டதனினும் பெருந்துயர் பிறிதின்மையானும், அத்துயரை எக்காரணத்தைக் காட்டியும் மாற்ற முடியாமையானும் அதனை 'மாற்றருந்துயர்' என்றார். (192)

## சடாயுவின் ஆறுதல் மொழி 3609-3616

3609. அதிசய மொருவரா லமைக்க லாகுமோ
துதியறு பிறவியி னின்ப துன்பந்தான்
விதிவய மென்பதை மேற்கொ ளாவிடின்
மதிவலி யான்விதி வெல்ல வல்லமோ.

"அதிசயம் ஒருவரால் அமைக்கல் ஆகுமோ?
'துதி அறு பிறவியின் இன்ப துன்பம்தான்
விதி வயம்' என்பதை மேற்கொள்ளா விடின்,
மதி வலியால் விதி வெல்ல வல்லமோ?"

பொ :—"விதியைக் கடந்தும் புதுவது ஒன்றை ஒருவரால் உண்டாக்க முடியுமோ? முடியாதுகாண். புகழ்ச்சிக்குரியதல்லாத இப் பிறவியில் வரும் இன்ப துன்பங்கள் யாவும் விதிவயத்தால் வரத் தக்கனவே என்ற உண்மையை மனங்கொளல் வேண்டும்; அதை

மனங்கொளாவிட்டால் நம் மதியின் வலிமையால் விதியை வெல்லு தற்கு வல்லமை யுடையோமோ? அல்லேம் அன்றே!"

கு:—'இல்லது வாராது' என்ற சற்காரிய வாதத்தை முதலடி விளக்குகின்றது. இராவணன் அனுப்பிய பொய்ம் மானை மெய்ம் மானென்று மயங்கிக் கெட்டோமே என்று தம் திறமையைத் தாழ்த் தியும் வஞ்சித்த இராவணன் ஆற்றலை உயர்த்தியும் மதித்துத் துன் புறுதல் கூடாது; நமக்கு வரவேண்டிய துன்பத்தை ஊழ் இராவணன் வழியாக யூட்டியதேயன்றி நம் அறிவின்மையால் நிகழ்ந்ததன்று என்பதை உணர்த்தியவாறு. "பேதைப் படுக்கும் இழவூழ் அறி வகற்றும், ஆகலூழ் உற்றக்கடை" (குறள் - 372) என்றது காண்க. இராமன் மயக்கத்திற்கும், இராவணன் சூழ்ச்சிக்கும் காரணம் ஊழே ஆதலின் அதன் வலிமையை யுணர்ந்து அமைதலன்றி நாம் செய்யத் தக்கது வேறு இல்லை என்றவாறு. அதிசயம் - புதுமை; எல்லாம் ஊழ் வழியாக வருவதன்றி ஒருவரால் புதுவதொன்றை யுண்டாக்க வியலாது என்பது முதலடியின் விளக்கம். வினா ஓகாரம், ஆகாது என எதிர்மறையை யுணர்த்தியது. பிறந்தோர் உறுவது பெருகிய துன்பமேயாதலின் இப்பிறவி இகழ்தற்குரியதே யன்றிப் புகழ்தற் குரியதன்று என்பான் 'துதியறு பிறவி' என்றான். 'இம்மாமாயப் புன்பிறவி வேண்டேனே' என முன் இராமனும் தன் பிறவியை இகழ்ந்து கூறியது காண்க. மதிவலியால் விதி வெல்ல வல்லவர்க ளாயின், உயிர்க்கு வரும் இன்ப துன்பங்கள் விதிவயம் என்பதை மேற்கொளாது விடுதல் கூடும். நாம் அத்தகைய ஆற்றலுடையே மல்லேம் ஆதலின், எல்லாம் விதிவயம் என்பதை மேற்கொண்டே தீரவேண்டும் என்று வற்புறுத்தியவாறு. "ஊழிற்பெருவலி யாவுள மற்றொன்று, சூழினுந் தான்முந்துறும்" (குறள் - 380) என்ற குறளை இறுதியடி நினைப்பித்தல் காணலாம். (193)

3610. தெரிவுறு துன்பம்வந் தூன்றச் சிந்தையை
யிரிவுசெய் தொழியும திழுதை நீரதால்
பிரிவுசெய் துலகெலாம் பெறுவிப் பான்றலை
யரிவுசெய் விதியினர்க் கரிதுண் டாகுமோ.

"தெரிவுறு துன்பம் வந்து ஊன்றச், சிந்தையை
இரிவு செய்து ஒழியுமது, இழுதை நீரதால்;
பிரிவு செய்து உலகு எலாம் பெறுவிப்பான் தலை
அரிவு செய் விதியினர்க்கு அரிது உண்டாகுமோ?"

பொ :—"விதிவயத்தால் வருவது என்று தெளியப்பட்ட துன்பம் வந்து பொருந்த, அதற்காக மனத்தினை நிலைகெடச் செய்துவிட்டுச் செய்யவேண்டியதைச் செய்யாது அழியும் தன்மை பேதைமையாகும்; நால்வகைத் தோற்றத்து எழுவகைப் பிறப்பாக வகுத்து உலக முழுமையும் படைக்கின்ற பிரமன் தலையையே அரிதலைச் செய்த விதிக்குச் செய்தற்கு அரிய செயல் ஒன்று உளதாமோ? (ஆகாது காண்)"

கு :—மேல், இன்பதுன்பங்கள் விதிவயம் என்பது தெரிவிக்கப் பட்டமையின் இங்குத் 'தெரிவுறு துன்பம்' என்று சிறப்பித்தார். ஊன்றுதல் - பொருந்துதல். துன்பம் வந்தபோது அதனையே நினைந்து வருந்தி மனத்தைப் புண்படுத்திக்கொண்டு அழிவது அறியாமையாகும் என்றபடி. "இடுக்கண் வந்துற்றகாலை......... இருந்தழு தியாவ ருய்ந்தார்? வடுப்படுத்தென்னை யாண்மை வருபவந் துறுங்களன்றே" (சீவக - 509) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். இழுதை - அறியாமை. உலகெலாம் பெறுவிப்பான் என்றது பிரமனை. விதிக்கும் வெலற்கரிய விதியின் வலிமை புலப் படுத்த வேண்டிப் 'பெறுவிப்பான்றலை அரிவுசெய் விதியினர்' என்றார். ஆர் விகுதி, உயர்த்தற்கண் வந்தது. பிரமன் ஐந்து தலையுள் ஒரு தலை 'யானே பிரமம்' என்றும், சிவன் என் புதல்வன் என்றும் கூறியதாக அச்சொல் பொய்யாதலின் சிவன் வெகுண்டு அத் தலையைக் கொய்தான் என்பது கதை. "ஆதிக்கணன் முகத்தி லொன்று தோன்றி அல்லாத சொல்லுரைக்கத் தன் கை வாளால் சேதித்த திருவடியை" (6-20-1) என்ற தேவாரமும் காண்க. இங்குச் சிவன் செய்த செயலையும் விதியின் செயலாகவே கொண்டு கூறிய வாறு. பிரமனையே தலையிழக்கச் செய்த விதி நின் மனைவியைப் பிரித் தற்குச் சொல்ல வேண்டுமோ? என்பது எச்சம். (194)

3611. அலக்கணு மின்பமு மணுகு நாளவை
விலக்குவ மென்பது மெய்யிற் ருகுமோ
இலக்கு முப்புரங்களை யெய்த வில்லியார்
தலைக்கலத் திரந்தது தவத்தின் பாலதோ.

"அலக்கணும் இன்பமும் அணுகும் நாள் அவை,
விலக்குவம் என்பது, மெய்யிற்று ஆகுமோ?
இலக்கு முப்புரங்களை எய்த வில்லியார்
தலைக்கலத்து இரந்தது தவத்தின் பாலதோ?"

பொ :—“ துன்பமும் இன்பமும் வருங்காலத்தில் அவற்றை விலக்கிவிடுவோம் என்று எண்ணுவது உண்மையில் நிகழக் கூடியதாகுமோ ? (ஆகாதுகாண்.) இலக்காகிய முப்புரங்களை அழிக்க அம்பு தொடுத்த மேருமலையாகிய வில்லையுடைய சிவன், பிரமனது மண்டையோட்டில் யாசித்தது அவன் தவத்தொடு பொருந்திய செயலாகுமோ ? (ஆகாதன்றே !)”

கு :—அலக்கண் - துன்பம். விலக்குதற்குரிய அலக்கணைக் கூற வந்தவர் இனம்பற்றி விரும்பியேற்றற்குரிய இன்பத்தையும் உடன் கூறினர். முப்புரங்களை அழித்து வெற்றிகொண்டு இன்புற்ற சிவனே பின், தீயூழால் பிரமன் தலையோட்டில் இரந்து துன்புறவும் நேர்ந்ததே என, நல்லூழும் அல்லூழும் கடவுளையும் ஊட்டாமல் கழிவதில்லை என்பதைச் சான்று காட்டி நிறுவியவாறு. சிவன் தலைக் கலத்திரந்தது ஊழின் செயலாகுமேயன்றி அவன் தவவேடத்திற்கேற்ற செயலாகக் கொள்ளலாகாது என்றவாறு. பிறரால் விலக்கமுடியாத திரிபுரங்களை இவ்வுலகை விடுத்தே விலக்கிய சிவனுக்குத் தலைக்கலத்திரக்க நேர்ந்த தன் துன்ப நிலையை விலக்க இயலாது போயதே என ஊழின் வலிமையைச் சிறப்பித்தவாறு. முதலிரண்டடியிற் கூறிய பொதுப் பொருளைப் பின்னிரண்டடிகளிற் கூறிய சிறப்புப் பொருள் நிறுவி நிற்றலின் வேற்றுப் பொருள் வைப்பணியாகும். திரிபுரமெரித்த விரிசடைக் கடவுளையே இரக்கச் செய்த ஊழுக்கு நின் மனைவியைப் பிரித்தல் அரிதோ ? என்றபடி. (195)

**3612.** பொங்குவெங் கோளரா விசும்பு பூத்தன
வெங்கதிர்ச் செல்வனை விழுங்கி நீங்குமால்
அங்கண்மா ஞாலத்தை விளக்கு மாய்கதிர்த்
திங்களு மொருமுறை வளருந் தேயுமால்.

“பொங்கு வெங்கோள் அரா, விசும்பு பூத்தன
வெங்கதிர்ச் செல்வனை விழுங்கி நீங்குமால்;
அம் கண்மா ஞாலத்தை விளக்கும் ஆய்கதிர்த்
திங்களும் ஒரு முறை வளரும், தேயுமால்.’’

பொ :—“ சீறுகின்ற கொடிய கொலைத் தொழிலையுடைய கேது என்னும் பாம்பு, ஆகாயமென்னும் பொய்கை பூத்த மலர் போன்று விளங்கும் சூரியனை விழுங்கிப் பின் விடுத்து நீங்கும்; அழகிய இடத்தையுடைய உலகத்தை விளக்கம் செய்யும் அழகிய தண்ணிய கதிர்களையுடைய சந்திரனும் ஒருமுறை வளர்கின்றான் ; ஒருமுறை தேய்கின்றான்.”

கு:—உலகை விளக்கும் ஞாயிறு திங்கள் என்னும் ஒளிமண்டலங் களையும் விடாது வருத்தும் ஊழ், மக்கட் பிறவியிற் பிறந்த நின்னை வருத்தல் சொல்லவேண்டுமோ? என்றவாறு, அரா - பாம்பு; சூரி யனை விழுங்குதற்குரிய பாம்பு கேது ஆதலின், அப்பாம்பையே கொள்க. சூரியன் வெம்மையான கதிர்களைச் செல்வமாக உடைய வன் ஆதலின், அவனை 'வெங்கதிர்ச் செல்வன்' என்றார். பூத்தது அன்ன என்பது பூத்தன என விகாரமாயிற்று. பூத்தன்ன என்ற வினையால், விசும்பு என்னும் பொய்கையில் பூத்த மலர் போன்ற சூரி யன் என்ற குறிப்புருவகம் கொள்ளப்பட்டது. இனி ஆகாயம் பூத் தாற்போன்ற சூரியன் எனக்கொண்டு தற்குறிப்பேற்றவணி ஆக்கலு மாம். அமிழ்தம் பங்கிடுங்கால் தன்னருகிலிருந்த அசுரனைக் காட் டிய தீவினையால் சூரியன், கேதுவென்னும் பாம்பினால் விழுங்கப்படு கின்றான் ஆதலின், அச் சூரியன் பாம்பால் விழுங்கப்படுதற்கும் அவன் தீயூழ் காரணமாதல் தெளியலாம். சூரியனை விழுங்கிய பாம்பு பின் நீக்குதல் போல 'நின்னையுற்ற துன்பமும் நீங்கும்' என்பது குறித்தவாறு. ஆய் - அழகு. 'ஆய் பொறியுமுலை' (கலித் - 46, 4) என்புழியும் இச்சொல் இப்பொருளதாதல் காண்க. இருபத்தேழு மனைவியரையுடைய சந்திரன் உரோகிணியிடம் மட்டும் கழிகாதலனாய் ஏனையோரை வெறுத்தமையால் தக்கன் வருந்திக் கொடுத்த சாபம் காரணமாகவே தேய்கின்றான்; ஆதலின் அவன் தேய்வுக்கும் ஊழே காரணமாதல் தெளிவித்தவாறு. ஒருமுறை தேயும் எனப் பின்னும் இயையும். நிறைமதி நாளுக்குப் பின் பதினைந்து நாள்களிலும் ஒவ் வொரு கலையாகத் தேய்ந்து அமாவாசையன்று முழுதும் மறைந் திருப்பான். "தேய்தலுண்மையும் பெருகலுண்மையும், மாய்தலுண் மையும் பிறத்தலுண்மையும் அறியாதோரையும் அறியக் காட்டித், திங்கட் புத்தேள் திரிதரு முலகத்து" (புறநா-27) என உலகத் தோரின் இன்ப துன்பங்களைத் திங்களே அறியக் காட்டுவதாக உறை யூர் முதுகண்ணன் சாத்தனார் கூறியிருத்தல் காண்க. தேயும் திங்கள் மீண்டும் வளர்தல் போலத் துன்புறும் நீங்களும் இராவணனைக் கொன்று சீதையை மீட்டு இன்புறுவீர்கள் என்பது குறிப்பு. (196)

**3613.** அந்தரம் வருதலு மனைய தீர்தலும்
சுந்தரத் தோளினிர் தொன்மை நீரவால்
மந்திர விமையவர் குருவின் வாய்மொழி
யிந்திர னுற்றன வெண்ண வொண்ணுமோ.

"அந்தரம் வருதலும், அனைய தீர்தலும்,
சுந்தரத் தோளினிர்! தொன்மை நீரவால்;

மந்திர இமையவர் குருவின் வாய்மொழி
இந்திரன் உற்றன எண்ண ஒண்ணுமோ ?''

பொ :—“ அழகிய தோள்களையுடையவர்களே ! ஒருவர்க்குத் தீங்குகள் வருதலும், வந்த தீங்குகள் நீங்குதலும் ; பழவினையின் தன்மையனவேயாம் ; ஆலோசனையிலும் வேத மந்திரத்திலும் வல்ல தேவ குருவாகிய வியாழனின் வாய்மொழியைக் கேட்டு நடக்கும் இந்திரன் அடைந்த துன்பங்களை எண்ண முடியுமோ ?”

கு :—அந்தரம் - தீங்குகள். தனக்குத் தோளாகிய இறகுகள் வெட்டுண்ட சடாயுவுக்கே தோள்களின் அருமை தெரிவதால் சுந்தரத் தோளினிர் ! என்ற அவ்வுறுப்பால் பெயர்கூறி விளித்தான். வந்த துன்பம் தீர்தற்குக் கருவியாகிய சுந்தரத் தோள்கள் இருக்கக் கவல் வானேன் ? என்ற குறிப்பும் இங்குக் காணலாம். மேல் ஞாயிறு திங்கள் என்ற இரு ஒளித் தெய்வங்கட்குத் தீமை வருதலையும் நீங்குதலையும் காட்டினுைகலின், அவ்வெடுத்துக் காட்டினுலாய தெளிவை, முதலிரண்டடிகளால் இங்குக் கூறினுன். தொன்மை என்றது ஆகு பெயராய்ப் பழவினையை யுணர்த்தியது. துன்பம் வாராமல் முன்னறிந்து சொல்லுதற்குரிய தேவகுருவின் வாய்மொழி கேட்டு நடக்கும் இந்திரனுக்கும் இடர்கள் வந்தன ; அவை எண்ணிறந்தன என்பதைப் பின்னிரண்டடிகளால் கூறி வருஞ் செய்யுளால் அவ்விடர்களில் ஒன்றை எடுத்துக் காட்டுகின்ருன். இமையவர் குரு என்பது, தேவகுரு என்ற பெயரை விளக்கி, வியாழனைச் சுட்டியது. மந்திர குரு என இயையும். மந்திரம் - சூழ்ச்சி ; ஆலோசனை. இந்திரனுக்கு அமைச்சனும் குருவும் வியாழனே என்பது புலப்படுத்த, ‘மந்திர - குருவின் வாய்மொழி இந்திரன்’ என்ருன். ‘மந்திரம்’ என்பது இரட்டுற மொழிதலாய் அமைச்சுக்கும் குருவுக்கும் ஏற்ற அடையாய் நின்றது. வியாழன் அமைச்சனுதற்கேற்ப ஆலோசனையில் வல்ல என்ற பொருளையும், அவன் குருவுமாதற்கேற்ப வேத மந்திரம் வல்ல என்ற பொருளையும் தருதல் காணலாம். வரும் பொருளுரைத்த இலக்குவனின் யோசனையைக் கேட்டு நடவாமையால் தீங்கு வந்தது ; என்று இராமன் வருந்துவதைத் தவிர்க்க வேண்டிப் பின்னிரண்டடியைக் கூறுகின்ருன். அமைச்சனும் குருவுமாய வியாழன் சொல்லைக் கேட்டு நடந்தும் இந்திரன் துன்புற்றுள்ளான் என்பது காட்டித் துன்பம் நேர்தற்குக் காரணம் பிறர் ஆலோசனையைக் கேட்டலும் கேளாமையுமன்று ; பழவினையே என்பது தெளிவித்தவாறு. ஒண்ணுமோ என்ற வினு, எண்ண ஒண்ணுமையுணர்த்திற்று ; உற்றனவாய துன்பங்கள் எண்ணிறந்தன என்றவாறு. (197)

3614. தடைக்கரும் பெருவலிச் சம்ப ரப்பெயர்க்
கடைத்தொழி லவுணனுற் குலிசக் கையினன்
படைத்தனன் பழியது பகழி வில்வலாய்
துடைத்தன னுந்தைதன் குவவுத் தோளினுல்.

"தடைக்கரும் பெருவலிச் சம்பரப் பெயர்க்
கடைத் தொழில் அவுணனுல், குலிசக் கையினன்,
படைத்தனன் பழி; அது, பகழி வில் வலாய்!
துடைத்தனன் நுந்தை, தன் குவவுத் தோளினுல்."

பொ :—"அம்பு எய்தற்குரிய விற்போரில் வல்ல இராமா! வச்சிரப் படையேந்திய கையையுடைய இந்திரன், பிறரால் தடை செய்தற்கு அரிய பெரிய வலிமையுடைய சம்பரன் என்ற பெயரினனுகிய, இழிந்த தொழிலையுடைய ஒரு அவுணனுல் தன் அரசிழந்து பழியைப் பெற்ருன்; அப்பழியை, உன் தந்தை தயரதன் தன் திரண்ட தோள் வலியால் துடைத்தான்."

கு :—தடைக்கு - தடை செய்தற்கு; தடுத்தற்கு. கடைத் தொழில் - இழி தொழில்; அறங்கடைப்பட்ட தொழில் எனக் கொண்டு பாவச் செயல் எனலுமாம். மலைச் சிறகரிந்த வச்சிர மேந்திய கையனுயிருந்தும் சம்பரனுக்குத் தோற்றுப் பழிபடைத் தான் எனச் சம்பரனுடைய வலிமையைப் புலப்படுத்தியவாறு. பழி படைத்தனன் என்றது, தன்னரசு இழந்து பழிக்கப்பட்ட நிலையை. குவவு - திரட்சி. குலிசக் கையினனை வென்ற சம்பரன் நுந்தையின் தோள் வலியால் மாண்டான் எனத் தயரதனின் தோள்வலியைப் புலப்படுத்தியவாறு. தயரதன் இந்திரன் வேண்டுகோளின்படி சென்று சம்பரனைக் கொன்று விண்ணுலகாட்சியைக் கொண்டு இந்திரனுக்களித்து அவன் பட்ட பழியைத் துடைத்தான் என்க. "சம்பரனைக் குலத்தோடுந் தொலைத்து நீ கொண்டு அன்றளித்த அரசன்ருே புரந்தரனின் ருள்கின்ற தரச வென்ருன்" (325) என இவ்வரலாறு முன்னும் கூறப்பட்டிருத்தல் காண்க. இப்போரைச் சடாயு நேரில் கண்டு தயரதனுக்குத் துணைபுரிந்தவனுதலின் இங்கு அதனையே கூறினன். இன்பவுலகமாகிய விண்ணுலக வேந்தனும் ஊழ்வினையால் துன்புற்ருன் எனின் மண்ணுலக வேந்தனுகிய நீ அவ்வூழ் வினையால் துன்புறுவது இயல்பு என்பது கூறுவான்போல, விண்ணுலக வேந்தனை வென்ற சம்பரனைக் கொன்று அவ்விந்திரன் பழிதுடைத்தவனின் மைந்தனுகிய நீ இராவணனைக் கொன்று நினக்கு வந்த பழிதுடைத்தல் அரிதாமோ? என்பதைத் தெளிவித்த வாறு. தோளினுல் சம்பரனை வென்ருன் நுந்தையெனில் பகழிவில் வல்ல நீ இராவணனை வெல்லுதல் சொல்ல வேண்டுமோ?

என்பான், பகழி வில்வலாய்! என விளித்தான். நுந்தை சம்பரனைக் கொன்றது இந்திரன் துயர்தீர்க்க வேண்டியே நிகழ்ந்தது போல, நீ இராவணனைக் கொல்வதும் தேவர் துயர்தீர்த்தற்கேயாம் என்ற குறிப்பும் காண்க. (198)

3615. பிள்ளைச் சொற் கிளியனாளைப்
★ பிரிவுற லுற்ற பெற்றி
தள்ளுற்ற வறமுந் தேவர்
துயரமுந் தந்த தேயால்
கள்ளப்போ ரரக்க ரென்னுங்
களையினைக் களைந்து வாழ்தி
புள்ளிற்கும் புலனில் பேய்க்குந்
தாயன்ன புலவு வேலோய்.

"பிள்ளைச் சொல் கிளி அனாளைப்
பிரிவுறல் உற்ற பெற்றி,
தள்ளுற்ற அறமும், தேவர்
துயரமும், தந்ததேயால்;
கள்ளப் போர் அரக்கர் என்னும்
களையினைக் களைந்து வாழ்தி;
புள்ளிற்கும், புலன் இல் பேய்க்கும்,
தாய் அன்ன புலவு வேலோய்!

பொ :—"பருந்து முதலிய பறவைகட்கும், அறிவில்லாத பேய்க்கும் உணவூட்டலில் தாய்போன்ற புலால் நாற்றம் வீசும் வேலினையுடையவனே! நீ, மழலைச்சொல் பேசும் கிளியை ஒத்த சீதையைப் பிரிய நேர்ந்த தன்மை, அரக்கரால் தள்ளப்பட்ட தருமமும், அவர்களால் தேவர் உற்ற துயரமும் தந்ததேயாகும்; ஆதலால், மாயப் போர் செய்யும் அரக்கர் என்கின்ற களையினைக் களைந்து வீசி நீ இனிது வாழ்வாயாக."

கு :—பிள்ளைச்சொல் என்றது மழலை மொழியினை. வேடனால் பிடித்தற்குரியதாய்த் தானே மீட்சிபெறும் ஆற்றலற்ற கிளிபோல இராவணனால் கவர்தற்கு எளியளாய் மீளுதற்கு இயலாதவள் சீதை என்ற குறிப்பும் தோன்றக் 'கிளியனாளை' என்றான். பிரிவுறலுற்ற பெற்றி, அறத்தாலும் துயரத்தாலும் தரப்பட்டதே என்க. 'தந்தது' என்பது செயப்பாட்டுவினைப் பொருளில் வந்தது. இராமன் சீதையைப் பிரிந்ததற்குக் காரணமாகக் கூறப்பட்டவிதி இன்னது என்ப

தைச் சடாயு இதனல் விளக்கியவாறு. அரக்கர்களால் புறக்கணிக்கப்பட்ட அறமும் அவர்களால் தேவர்கள் பட்ட துயரமுமே விதியாய் நின்று இராமனையும் சீதையையும் பிரித்தது என்பது கருத்து. திருமாலின் அமிசமான இராமனுக்கு வேறு பழவினை இன்மையும் இங்கு நினைத்தற்குரியது. முன் கைகேயி அருள் துறந்தமைக்குக் காரணம் கூறும் வழியும், "அரக்கர் பாவமும் அல்லவரியற்றிய வறமும் துரக்க நல்லருள் துறந்தனள் தூமொழிமடமான்" (1573) என இவ்வாறே காரணம் கூறியிருத்தல் காணலாம். தள்ளுற்ற அறம் என்றதனல், அரக்கர் செய்தது பாவமாதலும், தேவர் துயரமும் என்றதனல், தேவர்கள் உற்ற நோய் நோன்றது தவமாதலும் காண்க. எனவே, கைகேயி அருள் துறந்தமைக்கும் இராமன் சீதையைப் பிரிந்ததற்கும் காரணமான விதி ஒன்றேயாதல் பெறப்படும். 'கள்ளப் போர்' என்றது, மாயமும் வஞ்சனையுமாய போரை. 'பேடிப் போர் வல்லரக்கர்' (சூர்ப்பணகை-123) என இராமன் இகழ்ந்ததும் இங்கு நினைக்க. அரக்கரைக் களையாக உருவகஞ் செய்தமையால் அறப்பயிர் என்பது கொள்ளப்படும். 'அரக்கர் என்னும் களையினைக் களைந்து அறப்பயிர் வளர்த்து நெடிது வாழ்க' என அறவோனுகிய சடாயு உளங்குளிர வாழ்த்துகின்ருன். அவன் வாழ்த்துப் பின் செயலாய்ப் பயனளித்தல் காணலாம். "கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ் களைகட்டதனெடு நேர்" (குறள் - 550) என்றமையால் அரக்கர் என்னும் களையினைக்களைதல் இராமனுக்கு அறமாதலும் அறிக. பால் நினைந்தூட்டும் தாய்போலப் பசியால் வருந்தும் பறவைகட்கும் அறிவில்லாத பேய்கட்கும் பசிதீருமாறு பகைவரைக் கொன்று குவிக்கும் வேலாதலின், "தாயன்ன புலவுவேல்" எனப்பட்டது. தந்ததே என்புழி ஏகாரம் பிரிநிலை. இராமன் பராக்காலும் இலக்குவன் சொல் கோளாமையாலும் வந்ததன்று என்பது கருத்து. சீதையின் பொருட்டாக நீ செய்யும் போர், அறத்திற்கும் துணையாய் நின்று தேவரையும் காப்பாற்றும் என்பது புலப்படுத்தியவாறு. (199)

**3616.** வடுக்கண்வார் கூந்த லாளை
யிராவணன் மண்ணி னேடு
மெடுத்தன னேகு வானை
யெதிர்ந்தென தாற்றல் கொண்டு
தடுத்தனெ ளுவ தெல்லாந்
தவத்தரன் றந்த வாளால்
படுத்தன னிங்கு வீழ்ந்தே
னிதுவின்று பட்ட தென்ருன்.

"வடுக்கண், வார் கூந்தலாளை,
இராவணன் மண்ணி னோடும்
எடுத்தனன் ஏகுவானை, எதிர்ந்து,
எனது ஆற்றல் கொண்டு
தடுத்தனென், ஆவதெல்லாம்; தவத்து,
அரன் தந்த வாளால்
படுத்தனன்; இங்கு வீழ்ந்தேன்;
இது இன்று பட்டது" என்றான்.

பொ :—"மாவடுவின் பிளவையொத்த கண்ணையும், நீண்ட கூந்தலையும் உடைய சீதையை அவளிருந்த தரையோடும் எடுத்துச் செல்லும் இராவணனை எதிர்ந்து, எனது வலிமையைக்கொண்டு, என்னாலாகக் கூடிய போர்த் திறன் எல்லாம் செய்து தடுத்தேன்; இறுதியில், அவன் தவத்தால், சிவன்தந்த வாளினால் என் இறகுகளை வெட்டினான்; இவ்விடத்தில் வீழ்ந்துவிட்டேன்; இது இன்றைக்கு நிகழ்ந்தது" என்று கூறினான்.

கு :—வடு என்றது, மாவடுவின் வகிரை; அதுவே கண்ணுக்கு உவமையாகத்தக்கது. "மாவடு வகிரன்ன கண்ணிபங்கா" (திருவாசகம் - அடைக்கலப் - 8) என்றதும் காண்க. வார் - நீட்சி. ஏகுவானாகிய இராவணனை என இயையும். எடுத்தனன், முற்றெச்சம். ஆவதெல்லாம் செய்து தடுத்தனென் என ஒரு சொல் வருவித்து முடிக்க. ஆவது எல்லாம் என்றது, போர்க்குரிய படைக்கலனும் துணையும் இல்லாத பறவையாகிய என்னாலான போர்ச் செயலெல்லாம் செய்து என்றவாறு. தவத்தால் தந்த வாள் எனப் பாவியாகிய இராவணனுக்கு அரன் வாள் தந்தமைக்குக் காரணம் கூறியவாறு. அரன் தந்த வாளாதலின் என் இறகற்றது. ஏனைப்படைகளால் இறுந்தரத்ததன்று என்பதும் புலப்படுத்தியவாறு. இதனால் சீதையை எடுத்துச் சென்றவன் இராவணனே என்பதும், அவன் மண்ணினோடு எடுத்துச் சென்றமையால் சீதை அவனால் தொடவும்படாத கற்பினளாய் மீட்டற்குரியவள் என்பதும், படைக்கலனும் துணையும் இல்லாத என்னால் வெல்லவியலாது போயினும் போர்க்குரிய வில்லும், வேலும், தம்பியாகிய துணையும், உடைய உன்னால் வெல்லப்படுதல் உறுதி என்பதும் சடாயு கூறியவாறாயிற்று. (200)

## இராமன் சீற்றம்

3617. கூறின மாற்றஞ் சென்று
செவித்துளை குறுகா முன்ன
மூறின வுதிரஞ் செங்க
ணுயிர்த்தன வுயிர்ப்புச் செந்தீ
யேறின புருவ மேன்மே
லிரிந்தன சுடர்க ளெங்குங்
கீறின தண்ட கோளங்
கிழிந்தன கிரிக ளெல்லாம்.

கூறின மாற்றம் சென்று
செவித்துளை குறுகா முன்னம்,
ஊறின உதிரம், செங்கண்;
உயிர்த்தன, உயிர்ப்புச் செந்தீ;
ஏறின புருவம் மேல் மேல்;
இரிந்தன சுடர்கள் எங்கும்;
கீறினது அண்ட கோளம்;
கிழிந்தன கிரிகள் எல்லாம்.

பொ :—சடாயு கூறின சொல் சென்று, இராமன் செவித்துளையில் சேர்வதற்கு முன்னே, அவன் சிவந்த கண்கள் குருதியைப் பொழிந் தன; அவன் பெருமூச்சுகள் சிவந்த நெருப்பை வெளிப்படுத்தின; அவன் புருவங்கள் நெற்றிமுற்ற மேல்மேல் ஏறின; சூரியன் முதலிய சுடர்கள் அஞ்சி ஓடின; அண்டமாகிய உருண்டை பல விடங்களில் பிளவுற்றன; மலைகள் எல்லாம் பிதிர்ந்தன.

கு :—மாற்றம் என்றது, இராவணன் சீதையை எடுத்தனன்; வாளால் படுத்தனன் இங்கு வீழ்ந்தேன் என்ற சொற்களை. வெகுளிக் குக் காரணமாகிய உறுப்பறை, குடிகோள், அலை, கொலை என்ற நான்கினுள் சீதையை எடுத்தனன் என்பது, குடிகோளும் அலையுமாய் அமைதலானும், வாளால் படுத்தனன் என்றது, தந்தையின் உறுப்ப றையும் கொலையுமாய் அமைதலானும் இராமனுக்குக் கடுங்கோபத்தை யுண்டாக்கின என்க. ஊறுதல் - சுரத்தல்; சொரிதல். பாலகாண் டத்தில் கோசிகமுனிவன், துருவாச முனிவன் இவர்கள் கோபங் கொண்ட வழியும் புருவமேறுதல் சுடர்களிரிதல் முதலியன இவ் வாறே கூறப் பெற்றிருத்தல் காணலாம் (330, 491, 492). கண்ணிற் கடைத்தீயுக நெற்றியிற் கற்றைநாற, விண்ணிற்சுடரும் சுடர்வீய மெய்ந்நீர் விரிப்ப, உண்ணிற்கு முயிர்ப்பெனும் ஊதை பிறக்க நின்ற

அண்ணற்பெரியோன்" (1807) என இலக்குவன் சீற்றமுற்ற பெற்றி கூறப்பட்டதும் காண்க. கோபத்தின் ஆற்றலைத் தோற்றுவிக்க வேண்டி, 'ஊறின உதிரஞ் செங்கண், உயிர்த்தன உயிர்ப்புச் செந்தீ' எனப் பயனிலையை முன்னெடுத்துரைத்தார். செங்கண் உதிரமூறின எனவும் உயிர்ப்புச் செந்தீ உயிர்த்தன எனவும் புருவம் மேன்மேலேறின எனவும் இயைக்க. ஏனையவும் இவ்வாறே இயையும். அண்டகோளம் - அண்ட உருண்டை. அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம் (திருவாசகம். 3;) என்றதும் காண்க. குறுகிய உடன் என்பார், விரைவுபற்றிக் 'குறுகாமுன்னம்' என்றார். (201)

கவிக்கூற்று

3618. மண்ணகந் திரிய நின்ற
மால்வரை திரிய மற்றைக்
கண்ணகன் புனலுங் காலுங்
கதிரொடுந் திரியக் காவல்
விண்ணகந் திரிய மேலை
விரிஞ்சனுந் திரிய வீரன்
எண்ணரும் பொருள்க ளெல்லா
மென்பது தெரிந்த தன்றே.

மண்ணகம் திரிய, நின்ற
மால்வரை திரிய, மற்றைக்
கண் அகன் புனலும் காலும்
கதிரொடும் திரியக் காவல்
விண்ணகம் திரிய, மேலை
விரிஞ்சனும் திரிய, "வீரன்
எண் அரும் பொருள்கள் எல்லாம்"
என்பது தெரிந்தது அன்றே.

பொ :—பூமி சுழல, பூமியில் நின்ற பெரிய மலைகள் சுழல, மற்றும் இடமகன்ற கடல் நீரும், காற்றும் ஞாயிறு திங்கள் முதலிய ஒளி மண்டலங்களோடு சுழல, இந்திரனால் காக்கப்படுகின்ற விண்ணுலகம் சுழல, எல்லா உலகங்களுக்கும் மேலதாகிய பிரமலோகத்தில் இருக்கும் பிரமனும் சுழலுதலால் "வீரனாகிய இராமனே அளவில்லாத பொருள்கள் யாவுமாக இருக்கின்றான்" என்பது புலனாயிற்று.

கு:—மண்ணகம், விண்ணகம் என்பன மண்ணுலகையும் விண்ணுலகையும் உணர்த்தின. கண்ணகன்புனல் என்றது கடல் நீரை. பூமி சுழலுங்கால் பூமியிலுள்ள எல்லாப் பொருள்களும் சுழலுதல் இயல்பாயினும் சிறப்புப்பற்றி மால் வரை முதலியவற்றைப் பிரித்து வேறு கூறினர். திரிய என வந்த சொல்லே பன்முறை வரத் தொடுத்தலால் இச்செய்யுள் சொற்பொருட் பின்வருநிலையணி யாகும். திரிய என்ற செயவெ னெச்சங்களெல்லாம் மழைபெய்ய நெல் விளைந்தது என்புழிப் போலத் 'தெரிந்தது' என்ற வினைக்குக் காரணங்களாயின. விரிஞ்சனும் என்புழி உம்மை உயர்வு சிறப்பு. மண்ணுலக முதலியவற்றைப் படைக்கும் பிரமனும் சுழன்றனே என அவன் உயர்வைப் புலப்படுத்தல் காணலாம். வீரன் என்றது இராமனை. இராமனே எல்லாப் பொருள்களுமாய் இல்லாதிருந்தால், அவன் மனஞ்சுழன்றவுடன் மண்ணக முதலிய பொருள்கள் சுழலாவாம்; அவை சுழன்றமையால் இராமனே எண்ணரும் பொருள்களெல்லாம் ஆயினன் என்பது தெரிந்தது என வழியளவை கொண்டு நிறுவியவாறு. "மாபூதத்தின் வைப்பெங்கும் ஊனும் உயிரும் உணர்வும்போல் உள்ளும் புறனுமுளன் என்ப; ........... கானுங் கடலுங் கடந்திமையோர் இடுக்கண் தீர்த்த கழல் வேந்தை" (1399) என முன்கூறியுள்ளதும் நினைக்க. அன்று - அசைநிலை. (202)

**3619.** குறித்தவெங் கோபம் யார்மேற்
கோளுறுங் கொல்லென் றஞ்சி
வெறித்துநின் றுலக மெல்லாம்
விம்முறு கின்ற வேலைப்
பொறிப்பிதிர் படலைச் செந்தீப்
புகையொடு பொடிப்பப் பொம்மென்
றெறிப்பதோர் முறுவ றோன்ற
விராமனு மியம்ப லுற்றான்.

"குறித்த வெங்கோபம் யார் மேல்
கோளுறும் கொல்?'' என்று அஞ்சி,
வெறித்து நின்று, உலகம் எல்லாம்
விம்முறுகின்ற வேலை,
பொறிப் பிதிர் படலைச் செந்தீப்
புகையொடு பொடிப்பப் பொம் என்று,
எறிப்பது ஓர் முறுவல் தோன்ற,
இராமனும் இயம்ப லுற்றான்.

பொ :—“இவ்வாறு மனத்தில் எழுந்த கொடுங்கோபம் யார் மேல் கொள்கின்ருனே ?” என்று அஞ்சி உலகம் எல்லாம் திகைத்து நின்று கலங்குகின்ற பொழுது, பொறிகளைப் பிதிர்க்கின்ற திரண்ட சிவந்த நெருப்புப் புகையோடும் தோன்ற விரைவாக ஒளிவீசுகின்ற ஒருபுன்சிரிப்புத் தோன்ற இராமனும் சொல்லத் தொடங்கினுன்.

கு :—குறித்தல் - நினைத்தல். “அறத்தைச் சீறுங் கொல்? அருளையே சீறுங்கொல் அமரர், திறத்தைச் சீறுங்கொல்? முனிவரைச் சீறுங்கொல்? தீயோர் மறத்தைச் சீறுங்கொல் என்கொலோ முடிவு என்று மறையின் நிறத்தைச் சீறுங்கொல் நெடுந்தகையோன் என நடுங்கா” (161) எனமுன் விரித்துக் கூறியவற்றையே இங்கு “வெங்கோபம் யார்மேற் கோளுறுங் கொல்? என்று அஞ்சி வெறித்து நின்றுலகமெல்லாம் விம்முறுகின்ற வேலை” எனச் சுருக்கிக் கூறியவாறு. விம்முதல் - கலங்குதல். பெருநெருப்பில் பிதிர்வதே பொறி எனப்படுதலின் ‘பொறிப் பிதிர்’ என்ருர். பிதிர்தல் - சிதைந்து பிரிதல். படலை - திரட்சி. பொறியாகிய பிதிரினை யுடைய திரண்ட சிவந்த தீ என்க. பொடித்தல் - தோன்றுதல். ‘பொம்’ என்பது விரைவைக் குறிக்க வந்த இடைச்சொல். ஒளி யெறிப்பதோர் முறுவல் என ஒருசொல் வருவிக்க. முறுவல் செய்யுங்கால் பல்லின் ஒளி வீசுகின்ற இயல்பு புலப்படுத்த, ‘ஒளிஎறிப்பதோர் முறுவல்’ என்ருர். கோபத்தால் இராமன் வாயில் நெருப்புப் புகையோடு தோன்ற முறுவலும் தோன்றிற்று என்பது கருத்து. எறிப்பது - வீசுவது. இராமனும் என்புழி உம்மை இறந்தது தழீஇயது; சடாயு இயம்பியதேயன்றி எனப் பொருள்படுதல் காண்க. (203)

## இராமன் வெகுளிச் சொற்கள் 3620-3622

3620. பெண்தனி யொருத்தி தன்னைப்
பேதைவா ளரக்கன் பற்றிக்
கொண்டன னேக நீயிக்
கோளுறக் குலுங்கல் செல்லா
வெண்டிசை யிறுதி யான
வுலகங்க ளிவற்றை யின்னே
கண்டவா னவர்க ளோடுங்
களையுமா றின்று காண்டி.

"பெண் தனி ஒருத்தி தன்னைப்
 பேதை வாள் அரக்கன் பற்றிக்
கொண்டனன் ஏக, நீ இக்
 கோளுறக் குலுங்கல் செல்லா
எண் திசை இறுதியான
 உலகங்கள் இவற்றை, இன்னே,
கண்ட வானவர்க ளோடும்
 களையுமாறு, இன்று காண்டி."

பொ :—"துணையின்றித் தனித்திருந்த ஒரு பெண்ணை, வாள் ஏந்திய அறிவிலாத அரக்கன் பற்றிக்கொண்டு போகவும், அவனைத் தடுத்த நீ இவ்வாறு கொலையுண்ணவும், கண்டு துன்பத்தால் நடுங்குதலும் செய்யாத எட்டுத் திசை வரையிலும் உள்ள இவ்வுலகங்களாகிய இவற்றை யெல்லாம் இந்நிகழ்ச்சிகளைக் கண்டு கொண்டிருந்த தேவர்களோடும் இப்பொழுதே அழித்தொழிப்பதை இன்றைக்குக் காண்பாயாக."

கு :—வாளரக்கன் பற்றிக்கொண்டு போதற்கு ஏலாமை புலப்படப் 'பெண்' என்றும், 'தனியொருத்தி' என்றும் கூறினர் வீரமுடையவன்போல வாளையேந்திய அரக்கன், பேதைமையுடைய பெண்ணை - துணையின்றித் தனித்திருந்த பெண்ணைக் - கவர்ந்தது பேதைமைச் செயல் என்பான், 'பேதை வாளரக்கன்' என்றான். "அரன் தந்த வாளால் படுத்தனன்" (200) எனமுன் சடாயு கூறக் கேட்டானாகலின், இராவணனை 'வாளரக்கன்' எனச் சிறப்பித்தான். வாளேந்தியவனாயினும் பேதைப்பெண் போன்றவனாய் ஆடவரை அகற்றிப் பெண்ணைக் கவர்ந்தானே என இகழ்ச்சிக் குறிப்பும் தோற்றுவித்தல் காணலாம். 'பேடிப் போர் வல்லரக்கர்' (சூர்ப்பணகைப். 123) எனமுன் இகழ்ந்தது இங்கு உண்மையாயிற்று என்க, நீ என்றது எனக்குத் தந்தையும் முதுமையுடையவனுமாய நீ என்றவாறு. கோளுற - கொலையுண்ண. 'கோள் நினைக்குறித்து வந்தான் கட்டியங்காரன்' (சீவகசிந். 264) என்புழிக் கோள் என்பதற்குக் 'கொலை' என நச்சினார்க்கினியர் பொருள் கூறியது நினைக்க. இறகிழந்து வீழ்ந்து இறக்கின்ற நிலையைச் சுட்டிக்காட்டி 'இக் கோளுற' என்றான். படைக்கலம் ஏதுமிலாத நீ, படையுடையானால் கொலையுண்ணவும் என்றும் விரிக்க. தனித்திருந்த பெண்ணைக் கவர்ந்ததும் படைக்கலமிலாத நின்னைக் கொன்றதும் பெரும்பாவச் செயலாகவும் இப்பாவச் செயலுக்கு மாறுசெய்ய இயலாது போயினும் துன்பத்தால் நடுங்குதலும் செய்யாதிருந்த உலகங்கள் அரக்கனது பாவச் செயலுக்கு உடன்பட்டனவே யாதலின் அவற்றைக் களைதலும், கண்டுகொண்டு வாளா இருந்த தேவர்களும் குற்றம்

செய்தவர்களே ஆதலின், அவர்களைக் களைதலும், தக்க தண்டனை யாம் என இராமன் கருதி, 'களையுமாறு இன்று காண்டி' என்றான். குலுங்கல் - நடுங்கல். (204)

**3621.** தாரகை யுதிரு மாறுந்
தனிக்கதிர் பிதிரு மாறும்
பேரகல் வான மெங்கும்
பிறங்கெரி பிறக்கு மாறும்
நீரொடு நிலனுங் காலு
நின்றவுந் திரிந்த யாவும்
வேரொடு மழியு மாறும்
விண்ணவர் விளியு மாறும்.

"தாரகை உதிரு மாறும்,
தனிக்கதிர் பிதிருமாறும்,
பேரகல் வானம் எங்கும்
பிறங்கு எரி பிறக்குமாறும்,
நீரொடு நிலனும், காலும்,
நின்றவும், திரிந்த யாவும்,
வேரொடும் அழியு மாறும்,
விண்ணவர் விளியு மாறும்."

பொ:—"விண்மீன்கள் உதிரும் தன்மையும், ஒப்பற்ற சூரியன் பொடிப் பொடியாய்ப் பிதிரும் தன்மையும், இவ்விருதன்மையாலும் பெரியதாய் விரிந்துள்ள ஆகாயம் எங்கும் விளக்கமுடைய நெருப்புத் தோன்றும் தன்மையும், நீரும் நிலமும் காற்றும் ஆகிய பூதங்களும், நிலைத்திணைப் பொருள்களும் இயங்குதிணைப் பொருள்களும் ஆகிய யாவும் அடியோடு அழியும் தன்மையும் தேவர்கள் இறக்கும் தன்மையும்."

கு:—காண் என மேல் முடியும். தனிக்கதிர் என்றது சூரியனை. சூரியன் நெருப்புக் கோளமாதலின் அது பிதிர்வதால் வானம் எங்கும் எரிபிறக்கும் என்க. தாரகை யுதிர்தலும் எரி பிறத்தற்கு ஏதுவே யாம். ஏனை நான்கு பூதங்கட்கும் இடங்கொடுத்து விரிந்திருத்த லின் ஆகாயத்தைப் 'பேரகல் வானம்' என்று சிறப்பித்தார். வான மெங்கும் பேரெரி தோன்றி அழித்தலால் ஏனை மூன்று பூதங்களும் நிற்பவும் நடப்பவுமாய உயிர்களும் அழியும் என்றவாறு. திரிந்தவும் என உம்மை விரிக்க. திரிந்தனவாகிய யாவும் எனலும் ஆம். திரிந்த என்றது நடப்பனவற்றை. (205)

3622. இக்கண மொன்றி னின்ற
வேழினோ டேழு சான்ற
மிக்கன போன்று தோன்று
முலகங்கள் விளியு மாறும்
திக்குடை யண்ட கோளப்
புறத்தவுந் தீந்து நீரின்
மொக்குளி னுடையு மாறுங்
காணென முனியும் வேலை.

"இக்கணம் ஒன்றில், நின்ற
ஏழினோடு ஏழு சான்ற
மிக்கன போன்று தோன்றும்,
உலகங்கள் வீயு மாறும்,
திக்குடை அண்ட கோளப்
புறத்தவும் தீந்து, நீரின்
மொக்குளின் உடையு மாறும்,
காண்'' என முனியும் வேலை.

பொ :—"இதுவரை நிலைபெற்று நின்றனவும், பதினான்காய் அமைந்தனவும், பெரியனபோலத் தோன்றுவனவுமாய உலகங்கள், இவ்வொரு கணத்தில் என்னால் அழியும் தன்மையும், திக்குகளை யுடைய இந்த அண்டகோளத்தின் புறத்தனவாகிய அண்டங்களும் என்னால் தீய்ந்துபோய் நீர்க் குமிழிபோல உடையும் தன்மையும் காண்பாயாக" எனச் சொல்லிக் கோபிக்கும் அமையத்தில்.

கு :—'சுடர்க் கடவுள் மறையலுற்றான்' என வருஞ் செய்யுளோடு இயைந்து முடியும். 'இக்கணமொன்றில் என்னால் உலகங்கள் விளியுமாறும், புறத்தவும் தீந்து உடையுமாறும் காண்' என ஒரு சொல் வருவித்து முடிக்க. நின்ற உலகங்கள், ஏழினோடேழு சான்ற உலகங்கள், மிக்கன போன்று தோன்றும் உலகங்கள் என்க. மிக்கன - மிகப் பெரியன. மிக்கன போன்று தோன்றும் எனவே, 'உண்மையில் அவை தன் ஆற்றலுக்குச் சிறியன' என்பது புலப்படுத்தியவாறு. புறத்த என்றது, புறத்தனவாகிய அண்டங்களை. தனக்குத் தீங்கு செய்த இராவணன் உள்ள அண்டம் மட்டுமேயன்றிப் புறத்திலுள்ள அண்டங்களும் உடையுமெனத் தன் சின மிகுதியை யுணர்த்தியவாறு. ஓரண்டத்தில் கீழும் மேலுமாக அமைந்த உலகங்களையே 'ஏழினோடேழு சான்ற உலகங்கள்' என்றார். சான்ற– அமைந்த. விளிதல் - அழிதல். தன் கோபக்கனலால் தீய்ந்து உடையும் என்றவாறு. விரைவில் அழிகின்ற நீரிற்குமிழி அண்டங்

களுக்கு வடிவாலும் ஒப்புமையுடையதாகலின், புறத்தண்டங்களின் அழிவிற்கு அதனையே உவமை கூறினர். மொக்குள் - நீர்க்குமிழி. 'படுமழை மொக்குளின்' (நாலடி-27) என்றதும் காண்க. (206)

### சூரியன் மறைய உலகம் அஞ்சுதல்

3623. வெஞ்சுடர்க் கடவுண் மீண்டு
மேருவின் மறைய லுற்ருன்
எஞ்சலி றிசையி னின்ற
யானையு மிரியல் போய
துஞ்சின வுலக மெல்லா
மென்பதென் றுணிந்த நெஞ்சின்
அஞ்சின னிளைய கோவு
மயலுளோர்க் கவதி யுண்டோ.

வெஞ்சுடர்க் கடவுள் மீண்டு,
மேருவில் மறைய லுற்ருன்;
எஞ்சல் இல் திசையில் நின்ற
யானையும் இரியல் போய;
துஞ்சின உலகம் எல்லாம்
என்பது என்? துணிந்த நெஞ்சின்,
அஞ்சினன், இளைய கோவும்;
அயல் உளோர்க்கு அவதி உண்டோ?

பொ :—வெம்மையுடைய சூரியனும், (இராமன் சினத்திற்கு இலக்காகாது) தப்பி மேருமலையில் மறையலானுன்; திக்குகளில் காவலாய் நின்ற, வலிமை குறையாத எட்டு யானைகளும் அஞ்சி ஓடின; உலகத்துயிர்கள் எல்லாம் அஞ்சி ஒடுங்கின; என்பது பற்றிச் சொல்வது எதற்கு? துணிந்த நெஞ்சினையுடைய இலக்குவனும் அஞ்சினுன், என்ருல், மற்றும் உள்ளோரின் அச்சத்திற்கு எல்லை உண்டோ? (இல்லை.)

கு :—மாலையில் இயல்பாக மலையில் மறையும் சூரியனை இராமன் சினத்திற்கு இலக்காகாமல் மீண்டு மலையில் மறைந்ததாகத் தற்குறிப்பேற்றமாகக் கூறியவாறு. எஞ்சலில் யானை என இயையும். போய - போயின; முற்று. துஞ்சுதல் என்பது, இங்கு அஞ்சி அடங்குதல் என்னும் பொருளது. உலகம் என்பது, இடவாகுபெயராய் உயிர்களை யுணர்த்திற்று. துணிந்த நெஞ்சினையுடைய இலக்குவனும் அஞ்சினுன் என்பதைச் சொன்ன அளவிலே மற்றை யுயிர்கள் அஞ்சினமை

பெறப்படுதலின், துஞ்சின வுலகமெல்லாம் என்பது என்? என்று வினவினர். அயலுளோர்க்கு - மற்றையோரின் அச்சத்திற்கு என்க. அவதி - எல்லே: மற்றையோரின் அச்சத்திற்கு எல்லே இல்லே என்றவாறு. வெஞ்சுடர்க் கடவுள் எனவும், எஞ்சலில் யானே யெனவும், துணிந்த நெஞ்சின் இளேயகோவும் எனவும் அஞ்சாமைக் கேதுவாய அடைகளேப் புணர்த்தி இராமன் சினத்தைச் சிறப்பித்தவாறு. (207)

## சடாயு இராமன் வெகுளியைத் தணித்தல் 3624-3628

**3624.** இவ்வழி நிகழும் வேலே
யெருவைகட் கிறைவன் யாதும்
செவ்வியோய் முனியல் வாழி
தேவரு முனிவர் தாமும்
வெவ்வலி வீர நின்ஞல்
வேறுமென் றேமுற் றுய்வார்
எவ்வலி கொண்டு வெல்வா
ரிராவணன் செயலே யென்ருன்.

இவ் வழி நிகழும் வேலே,
எருவைகட்கு இறைவன், "யாதும்,
செவ்வியோய்! முனியல்; வாழி!
தேவரும் முனிவர் தாமும்,
வெவ்வலி வீர! நின்ஞல்
'வேறும்' என்று ஏமுற்று உய்வார்,
எவ்வலி கொண்டு வெல்வார்,
இராவணன் செயலே?" என்ருன்.

பொ:—இவ்வாறு நிகழும்போது சடாயு, "செம்மைக் குணமுடையவனே! சிறிதும் வெகுளாதே; வாழ்க; விரும்பத்தக்க வலிமையுடைய வீரனே! தேவரும் முனிவரும் நின்னேத் துணையாகக் கொண்டு (அரக்கரை) வெல்வோம் என்று கருதி மகிழ்ந்து உயிர் தாங்கியுள்ளார்கள்; அத்தகையோர், இராவணன் செய்த கொடுஞ் செயலே எந்த வலிமையைக் கொண்டு வெல்வார்கள்?" என்று வினவினன்.

கு:—செவ்வியோய், யாதும் முனியல்; எனவும், இராவணன் செயலே எவ்வலி கொண்டு வெல்வார் எனவும் இயையும். நின் செம்மைக் குணத்திற்கு முரண் உண்டாகுமாறு வெகுளாதே என்பான், 'செவ்வியோய் முனியல்' என்ருன். தீய பிறத்தல் வெகுளியால்

வருதலின், அத்தீமை இன்றி வாழ்க என்பான் ‘முனியல்; வாழி!’ என்றான். முனியல் என்பது எதிர்மறை வியங்கோள்; ‘மகனெனல்’ (குறள் - 196) என்புழிப்போல. வெவ்வலி - விரும்பத்தக்க வலி; கொடிய வலி எனலும் ஆம். தேவரும் முனிவரும் நின்னால் அரக்கரை வெல்லலாம் என்று நம்புதற்கேற்ற வலிமையும் வீரமும் நின்பால் உண்டு என்ற கருத்துப்பட ‘வெவ்வலி வீர!’ என விளித்தான். வேறும் - வெல்லுதும்; தன்மைப் பன்மை வினைமுற்று. அவர் கூற்றாகக் கொண்டு கூறியது; ஏமம் - மகிழ்ச்சி. ஏமமுற்று என்பது, ஏமுற்று என மருவிற்று. ஏமம், காவல் எனக்கொண்டு, நின்னால் வெல்வோம் என்ற நம்பிக்கையையே பாதுகாப்பாகக் கொண்டு உயிர் வாழ்கின்றார்கள்; எனலுமாம். நின்னையே வலியாகக் கொண்டு அரக்கரை வெல்லலாம் என எண்ணி வாழ்கின்றவர்கள், இராவணனின் கொடுஞ் செயலை எந்த வலிமையைக் கொண்டு வெல்லவல்லார்? என்று வினவி, இராவணனை வெல்லுமாற்றல் தேவர்க்கும் முனிவர்க்கும் இல்லாமையால்தான் தடுத்திலர்; என்பதைப் புலப்படுத்தி, அவர்கள் மேல் குற்றமில்லை என்பதை நிறுவியவாறு. (208)

**3625.** நாட்செய்த கமலத் தண்ண
னல்கின நவையி லாற்றல்
தோட்செய்த வீர மென்னிற்
கண்டனை சொல்லு முண்டோ
தாட்செய்ய கமலத் தானே
முதலினர் தலைபத் துள்ளாற்
காட்செய்கின் றார்க ளன்றி
யறஞ்செய்கின் றார்கள் யாரே.

“நாள் செய்த கமலத்து அண்ணல்
நல்கின நவை இல் ஆற்றல்
தோள் செய்த வீரம் என்னில்
கண்டனை; சொல்லும் உண்டோ?
தாள் செய்ய கமலத்தானே
முதலினர், தலை பத்து உள்ளாற்கு
ஆட் செய் கின்றார்களன்றி,
அறம் செய்கின்றார்கள் யாரே?”

பொ:—“அன்றலர்ந்த தாமரை மலரில் வீற்றிருக்கின்ற பிரமன் வரமாகக் கொடுத்த குற்றமற்ற வலிமையையுடைய இராவணனுடைய தோள்கள் செய்த வீரம் எத்தகையது என்பதை, (இறகிழந்து

கிடக்கும்) என்னிடத்தில் காட்சியளவையால் கண்டாய்; ஆதலின், அவன் வீரத்தைப் பற்றி வேறு சொல்ல வேண்டுவதும் உண்டோ? நாளத்தையுடைய சிவந்த தாமரை மலரில் தோன்றிய பிரமன் முதலிய தேவர்கள் யாவரும், பத்துத் தலைகளையுடைய இராவண னுக்கு அடிமை வேலை செய்கின்றார்களே யன்றித், தத்தமக்குரிய அறங்களைச் செய்கின்றவர்கள் யாருளர்? (யாருமிலர்.)"

கு:—நாள் செய்த கமலம் என்றது, அன்று அலர்ந்த தாமரை மலரை. பிரமன் வரமாகக் கொடுத்த ஆற்றல் வாய்ந்த தோள்கள் இராவணனுக்கு உண்டு என்பதும், அத்தோளாற்றலால், தான் இற கிற்று வீழ்ந்தமையும், வரங்கொடுத்த பிரமன் முதலிய தேவர்கள் அவன் ஆற்றலுக்கு அஞ்சி ஆட்செய்கின்றவர்களே யொழிய, அவனை யெதிர்த்து நின்று அறஞ் செய்ய இயலாதவராவர் என்பதும் புலப் படுத்தியவாறு. இதனால், தேவர்கள் நின்றால் கோபிக்கத்தக்கவர்க ளல்லர் என்பது நிறுவி இராமன் கோபத்தைத் தணித்தபடி. "நரை திரையென் றில்லாத நான்முகனே முதலமரர். கரையிறந்தோர் இராவணற்குக் கரமிறுக்குங்குடி" (சூர்ப்பணகைப் - 124) எனச் சூர்ப் பணகை கூறியதும் நினைக்க. காட்சியளவைக்கிடமில்லாத போதன்றே ஆகம அளவை வேண்டப்படும்? இராவணன் தோள் செய்த வீரச் செயலை இறகிழந்து கிடக்கும் என்பால் கண்டனையாத லின், சொற்பிரமாணம் வேண்டா என்பான், சொல்லுமுண்டோ? என்றான். தத்தமக்குரிய அறத்தையே செய்ய இயலாதவர்கள், அறங்கடை நின்றானைத் தடுத்து நிறுத்தும் பொதுவறத்தை எங்ங னம் செய்வர் என்றவாறு. (209)

**3626.** தெண்டிரை யுலகந் தன்னிற்
செறுநர்மாட் டேவல் செய்து
பெண்டிரின் வாழ்வ ரன்றே
யிதுவன்றோ தேவர் பெற்றி
பண்டுல களந்தோ னல்கப்
பாற்கட லமுத மந்நாள்
உண்டில ராயி னிந்நா
ளன்னவர்க் குய்த லுண்டோ.

"தெண்திரை உலகம் தன்னில்,
செறுநர்மாட்டு ஏவல் செய்து
பெண்டிரின் வாழ்வர் அன்றே!
இது அன்றோ தேவர் பெற்றி?

பண்டு உலகு அளந்தோன் நல்கப்
பாற்கடல் அமுதம் அந் நாள்
உண்டிலர் ஆகில், இந் நாள்
அன்னவர்க்கு உய்தல் உண்டோ ?

பொ :—"தெளிவான அலைகளையுடைய கடலால் சூழப்பெற்ற இவ்வுலகத்தில் பகைவரிடத்தில் ஏவற் பணி செய்து கொண்டு, வீர மிழந்து பெண்டிரைப்போல வாழ்கின்றார்கள் ; தேவர்களின் தன்மை இதுவன்றோ ? முன்பு மூவுலகையும் அளந்து கொண்டவனாகிய திருமால், பாற்கடலில் தோன்றிய அமுதத்தைப் பகிர்ந்து கொடுக்க, அந்த நாளில் உண்ணாது இருந்தனராயின், இந்த நாளில் அத் தேவர்க்கு உயிர் பிழைத்திருத்தலும் உளதாமோ ?"

கு :—செறுநர் - பகைவர். வீரமிழந்து வாழ்கின்றார்கள் என்பான், 'பெண்டிரின் வாழ்வர்' என்றான். அன்று, ஏ அசைநிலை. உண்டாரை வாழ்விக்கும் அமுதை அந்நாள் திருமால் கொடுக்க உண்டமையால் உயிர் வாழ்கின்றார்கள் ; இல்லையேல் உயிரிழந்திருக்க வேண்டியவர்களே என்பது கருத்து. மானவுணர்ச்சியால் உயிர் விடவும் முடியாமையால் பகைவர்க்குப் பணி செய்து வாழ்கின்றார்கள் என்ற குறிப்பும் இங்குக் கொள்ளலாம். அரக்கர்க்கு அஞ்சிப் பெண்டிர்போல் வீரமிழந்து ஏவல் செய்து வாழும் தேவர்கள் இராவணனைத் தடுக்கவில்லை என நீ வெகுள்வதற்கு உரியரல்லர் என்பதை விளக்கியவாறு. உண்டோ ? என்ற வினா எதிர்மறைப் பொருளது, இல்லை என்றவாறு. (210)

3627. வம்பிழை கொங்கை வஞ்சி
வனத்திடைத் தமியள் வைகக்
கொம்பிழை மானின் பின்போய்க்
குலப்பழி கூட்டிக் கொண்டீர்
அம்பிழை வரிவிற் செங்கை
யையன்மீ ராயுங் காலை
உம்பிழை யென்ப தல்லா
லுலகஞ்செய் பிழையு முண்டோ.

"வம்பு இழை கொங்கை வஞ்சி
வனத்திடைத் தமியள் வைகக்,
கொம்பு இழை மானின் பின்போய்க்
குலப்பழி கூட்டிக் கொண்டீர்;

அம்பு இழை வரிவில் செங்கை
ஐயன்மீர்! ஆயும் காலை,
உம் பிழை என்பது அல்லால்,
உலகம் செய் பிழையும் உண்டோ?"

பொ:—"அம்பு எய்தற்கு உரிய கட்டமைந்த வில்லைத் தாங்கிய சிவந்த கையையுடைய மக்களே! கச்சு அணிந்த கொங்கையினை யுடைய வஞ்சிக் கொடி போன்ற சீதை காட்டில் தனித்திருக்க விட்டு விட்டுக் கொம்புகள் பொருந்திய மானின் பின்னே சென்று உம் குலத் துக்கே பழியைத் தேடிக் கொண்டீர்கள்; ஆராய்ந்து பார்க்குமிடத்து அது உங்கள் குற்றம் என்று கொள்வதல்லது, உலகம் செய்த குற்ற மும் உண்டோ? (இல்லை.)"

கு:—பிறர் கவர்தற்குரிய வனப்பும் எளிமையுமுடையவள் என்பது புலப்பட 'வம்பிழை கொங்கை, வஞ்சி' எனச் சீதையைக் குறிப்பிட் டான். மனையிலும் தனித்திருக்கத் தகாதவளைக் காட்டில் தனித் திருத்திச் சென்றது பெரும் பிழை என்பது புலப்பட, 'வனத்திடைத் தமியள் வைக' என்றான். சீதையைத் தனியே விடுத்துச் சென்றது பெரும் பயன் தரும் அருஞ் செயற்கன்று என்பான், 'கொம்பிழை மானின் பின் போய்' என இகழ்ந்து கூறியவாறு. கொம்புளதற்கு ஐந்து முழம் விலகிச் செல்லவேண்டியிருக்க நீங்கள் பின்பற்றியும் சென்றீர்களே! என்ற இகழ்ச்சிக் குறிப்பும் காண்க. மனையாளை மாற் றான் கவரவிடுத்தமையையே இங்குக் 'குலப்பழி' என்றான். இராவ ணனால் சீதை கவரப்பட்டது இராமனுக்குமட்டுமன்றி அவன் குலத் திற்கும் சீதை பிறந்த குலத்திற்கும் பழியாதலின் 'குலப்பழி கூட்டிக் கொண்டீர்' என்றான். "போர்வலான் விற்பழியுண்டது; வினையி னேன் வந்த இற்பழியுண்டது" (135) என முன், சீதை இரங்கியேங்கி யதும் நினைக்க, பொது வகையால் நோக்கின் பிறர் பிழையாகக் காணப்பட்டாலும், ஆய்ந்து பார்க்கும்போது, வஞ்சி வனத்திடைத் தமியள் வைக நீவிர் மானின் பின் போனதால் வந்த விளைவேயாத லின் உம் பிழையாதல் புலனும் என்பான், 'ஆயுங்காலை உம்பிழை என்பதல்லால்' என்றான். "ஏதிலார் குற்றம்போல் தங்குற்றங் காண்கிற்பிற் றீதுண்டோ மன்னு முயிர்க்கு'' (குறள் - 190) என்றபடி தம் குற்றத்தையும் இராம இலக்குவர் காணுமாறு செய்து, கோபத் தைத் தணித்த சடாயுவின் திறம் காண்க. முன் தேவர்கள்மேல் கோபித்தல் தகாது என்றவன், இங்கு உலகத்தின்மேல் கோபித்தல் தகாது என்பான், உலகஞ் செய்பிழையுமுண்டோ? என்றான். 'உல கங்கள் விளியுமாறும் காண்' என இராமன் முன் முனிந்தமையை விலக்கியவாறு. இழை, பொருந்துதல் என்ற பொருளில் வந்தன. மக்களை ஐயன்மீர்! என்று விளித்தது அன்புபற்றியாகும். வினு ஒகா ரம் எதிர்மறைப் பொருளது. (211)

3628. ஆதலான் முனிவா யல்லை
யருந்ததி யனைய கற்பின்
காதலா டுயர நீக்கித்
தேவர்தங் கருத்து முற்றி
வேதநூன் முறையின் யாவும்
விதியுளி நிறுவி வேறும்
தீதுள துடைத்தி யென்றான்
சேவடிக் கமலஞ் சேர்வான்.

"ஆதலால், முனிவா யல்லை;
அருந்ததி அனைய கற்பின்
காதலாள் துயரம் நீக்கித்
தேவர்தம் கருத்தும் முற்றி,
வேத நூல் முறையின் யாவும்
விதியுளி நிறுவி, வேறும்
தீது உள துடைத்தி" என்றான்,
சேவடிக் கமலம் சேர்வான்.

பொ:—"ஆதலால், தேவர்களையும் உலகத்தையும் நீ கோபிக்கத் தக்காயல்லை; அருந்ததி போன்ற கற்பினையுடைய நின் மனைவியின் துயரத்தை நீக்கி அதனாலே, தேவர்களுடைய கருத்தையும் முற்றுவித்து, மக்கள் செய்யும் செயல்கள் யாவற்றையும் வேத நூலில் முறையாக விதித்தபடியே நிகழுமாறு நிறுவி மேலும் உள்ள தீமைகளைப் போக்குவாயாக," என்று சொன்னான், திருமாலின் சிவந்த திருவடித் தாமரைகளில் சேர்தற்குரியனாய் உடம்பை விடுகின்ற சடாயு.

கு:—உலகம் செய்த பிழையில்லை; இராவணன் சீதையைக் கவர்தலாகிய தீங்கைச் செய்தற்கு இராமன் மானின்பின் போனமையே காரணம் என்பதை மேல் நிறுவி, அவன் பிறரை முனிதல் தக்கதன்று என்பது புலப்படுத்தினமையின் இங்கு, 'ஆதலால் முனிவாயல்லை' என்றான். கவர்ந்து சென்ற இராவணனைக் கொன்று, மீட்டற்குரிய தகுதியுடையவள் சீதை என்பான், 'அருந்ததி யனைய கற்பிற் காதலாள்' எனச் சிறப்பித்தான். இராவணன் தரையோடு பெயர்த்தெடுத்துச் சென்றதன்றித் தொடுதலாகிய சிறு குறையும் உண்டாக்கவில்லை யாதலின், "அருந்ததி யனைய கற்பிற் காதலாள்' எனவும், சீதை தன்னுயிரைக் காட்டிலும் இராமனிடத்தில் காதல் கொண்டவள் என்பது தோன்ற மனைவி யென்னாது 'காதலாள்' எனவும் கூறினான். கற்பிற்சிறந்த காதலி

யின் துயரை நீக்குதல் கணவனுக்குக் கடமை யாதலின் அக்கடமை யைச் செய்க என்பான், 'காதலாள் துயர நீக்கி' என்ருன். துயரம் நீக்குதலாவது, கவர்ந்த இராவணனைக் கொன்று சீதையை மீட்டலே யாகும்; இராவணனைக் கொல்லுதலே தேவர்தம் கருத்தும் ஆதலின் நின் மனைவி துயர் நீக்குதலே தேவர் கருத்து முற்றுவித்தலுமாகும்; தன் கருமம் செய்யப் போய் உலக நன்மையும் செய்தவனுவாய் என்றவாறு. இராமாவதாரத்தின் நோக்கங்களையே சடாயு இங்குக் கூறினுன். இனிச் சேர்தற்குரிய திருவடியின் பெருமை, அவன் சேரும் முன்னமே இத்தகைய தேவ ரகசியத்தைக் கூறும் ஞானத் தைக் கொடுத்துவிட்டது என்பார், 'என்ருன், சேவடிக் கமலம் சேர்வான்' என்ருர். இராமாவதாரத்தின் நோக்கம் இவையே என் பதை "அறந்தலை நிறுத்தி வேதம் அருள் சுரந்தறைந்த நீதித், திறந்தெரிந்துலகம் பூணச் செந்நெறி செலுத்தித், தீயோர் இறந்துக நூறித் தக்கோ ரிடர்துடைத் தேக வீண்டுப் பிறந்தனன் தன் பொற்பாதம் ஏத்துவார் பிறப்பறுப்பான்" (சுந்தர. பிணிவீட்டுப். 81) என இராவணனுக்கு அநுமன் கூறுவதும் பின்னர்க் காணலாம். சீதையைக் காப்பாற்று முயற்சியில் உயிர்விடுகின்றவனுதலாலும், சொல்லிய அறநெறி தொடர்ந்தவனுதலாலும், உயிர் நீங்குங்கால் இராமன் உருவைக் காணப்பெற்றமையாலும், திருமாலின் சேவடிக் கமலம் சேர்வதற்குரியவன் சடாயு என்பது அறியலாம். (212)

## இராமன் தணிதல்

**3629** புயனிற வண்ண னுண்டப்
புண்ணியன் புகன்ற சொல்லைத்
தயரதன் பணியீ தென்னச்
சிந்தையிற் றழுவி நின்ருன்
அயலினி முனிவ தென்னை
யரக்கரை வருக்கந் தீர்க்கும்
செயலினிச் செயலென் றெண்ணிக்
கண்ணிய சீற்றந் தீர்ந்தான்.

புயல் நிற வண்ணன், ஆண்டு,
அப் புண்ணியன் புகன்ற சொல்லைத்
"தயரதன் பணி ஈது" என்னச்
சிந்தையில் தழுவி நின்ருன்;

"அயல் இனி முனிவது என்னே ?
அரக்கரை வருக்கம் தீர்க்கும்
செயல் இனிச் செயல்'' என்று எண்ணிக்,
கண்ணிய சீற்றம் தீர்ந்தான்.

பொ :—மேகத்தின் நிறம் போன்ற கரிய நிறத்தனுகிய இராமன் அப்பொழுது அந்தப் புண்ணியனுகிய சடாயு சொன்ன அறிவுரையைத் "தயரதன் கட்டளேயே இது" என்று தன் மனத்தில் ஏற்றுக் கொண்டு நின்றவனுய், "தீமை செய்தவரை விடுத்து, அயலாக உள்ள தேவரையும் உலகத்தையும் வெகுள்வது என்ன பயனுடைத்து? (நமக்குத் தீங்கு செய்த) அரக்கர்களே வருக்கத்தோடு அழிக்கும் செயலே இனிச் செய்யத்தக்க செயலாகும்" என்று எண்ணி, முன் கருத்திற்கொண்ட கோபம் தணிந்தான்;

கு :—புயல்நிற வண்ணன் தழுவி நின்ருனுய் எண்ணிச், சீற்றம் தீர்ந்தான், என இயையும். நின்ருன், முற்றெச்சம். தன்னுயிர் புகழ்க்கு விற்றவனுகலின் சடாயு இங்குப் புண்ணியன் எனப்பட்டான். இனி, உயிர்விடுங்கால் இராமனுடைய புயனிற வண்ணத்தைக் காணுதற்குரிய புண்ணியத்தையுடையவன் ஆதலின் அப்பெயரால் கூறப் பெற்ருன் எனலுமாம். 'ஆயிர முகமுள தவமயர்குவெனுன், நீயிவண் வருதிகொலெனு நினேவுடையேன், போயின விருவினே; புகலுறு விதியான், மேயினே'. (சரபங்கன் பிறப்புநீங். 40) எனச் சரபங்கன் கூறியதும், "அண்டமு மகிலமு மறிவருநெறியால், உண்டவனொருபெயர் உணர்குந ருறுபேறு, எண்டவ நெடிதெனி னிறுதியிலவனேக் கண்டவருறு பொருள் கருதுவ தெளிதே" (சரபங்கன்–45) எனக் கவி கூறியதும் இங்கு நினேக்கத்தகும். சடாயுவைத் தன் தந்தையாகவே கொண்டான் இராமனுதலின், அவன் சொல்லேத் தயரதனுகிய தந்தையின் கட்டளேயை யேற்றதுபோலவே மகிழ்ந்து ஏற்றுக்கொண்டான் என்பார். 'தயரதன் பணியீதென்னச் சிந்தையிற்றழுவி நின்ருன்' என்ருர். தயரதனேடு சடாயுவுக்கு வேற்றுமையின்மை தேற்றியவாறு, 'முனிவாயல்லே' என்ற சொல்லே யேற்றுக் கொள்ளுகின்றேன்' என்று இராமன் வாக்கினுற் கூருமல் செயலால் காட்டினன் என்பார், சிந்தையிற் றழுவி நின்ருன்...... கண்ணிய சீற்றந் தீர்ந்தான்' என்று கூறினர். தேவர்களும் உலகமும் அடங்க அயலவரை என்னுது, அயல் எனப் பொதுப்படக் கூறினர். வருக்கம் - இனம். தனக்குத் தீங்கு செய்த இராவணனின் இனமும் இல்லாதபடி ஒழிப்பதே இனி யான் செய்யத்தகும் செயல் என்றவாறு. 'ஆறத்தினே டன்றி நின்ருரவர் வேறுப்பென்' (அகத். 32) என முன் முனிவர்க்குக் கூறியதும் இங்கு நினேக்கத் தகும். (213)

சடாயு உயிர் நீத்தல்

3630. ஆயபி னமலன் ருனு
மையநீ யமைதி யென்ன
வாயிடை மொழிந்த தன்றி
மற்ருெரு செயலு முண்டோ
போயதவ் வரக்க னெங்கே
புகலெனப் புள்ளின் வேந்த
னேய்வின னுணர்வுந் தேய
வுரைத்தில னுயிருந் தீர்ந்தான்.

ஆயபின், அமலன் தானும்,
"ஐய! 'நீ அமைதி' என்ன
வாயிடை மொழிந்தது அன்றி,
மற்று ஒரு செயலும் உண்டோ?
போயது அவ் அரக்கன் எங்கே?
புகல்" எனப் புள்ளின் வேந்தன்
ஓய்வினன், உணர்வும் தேய,
உரைத்திலன், உயிரும் தீர்ந்தான்.

பொ:—அவ்வாறு சினம் தணிந்தபிறகு, குற்றம் அற்றவனுன இராமனும், "தந்தையே! 'நீ வெகுளாது அமைவாயாக' என்று உன் வாயினுல் சொன்னபடியே யான் நிற்பது அல்லாமல், அதற்குப் பிறிதான செயலும் என்பால் உளதாமோ? உளதாகாது; அந்த அரக்கன் போனது எவ்விடத்திற்கு? சொல்லுவாயாக" என்று வினவக் கழுகின் வேந்தனுகிய சடாயு, ஆற்றல் குறையப் பெற்றவனுய், உணர்வும் தேய்ந்து போனமையால், அதற்கு விடைகூற வியலாதவனுய் உயிரும் நீங்கினுன்.

கு:—அப்பொழுது தோன்றிய வெகுளியாகிய குற்றமும் தீரப் பெற்ருன் என்பது புலப்பட இராமனே, 'அமலன்' என்ற பெயரால் குறிப்பிட்டார். ஐய! என்றது, சடாயுவை விளித்தவிளி. 'நீயமைதி' என்பது, சடாயுவின் சொல்லாக இராமன் கொண்டு கூறியது. அறத்திற்கு மாருயவற்றைப் பேசிப் பழகாதது என்ற கருத்துத் தோன்ற 'வாயிடை மொழிந்ததன்றி' என்புழி 'வாய்' என வேண்டாது கூறினுர். 'அமைதி' என்பது, இகரவீற்று வியங்கோள். மற்று என்பது, 'பிறிது' என்னும் பொருளதாய்ச் சினத்தை யுணர்த்தியது. நீ சொன்னபடி செய்வதன்றி அச்சொல்லுக்கு மாருன செயல் என்பால் உண்டாகாது என்று தெளிவித்தவாறு. புள் என்றது, இங்குக் கழுகினேயுணர்த்தியது. 'கண்டனர் கழுகின் வேந்தையே' (சடாயு காண் - 1) என இராம இலக்குவர் முதலில் கண்டபோது கூறின

பெயரையே, அவன் பெரும்பிறிதுறும்போதும் கூறிய நயம் காண்க. வேந்தனுகவே விளிந்தான் என்றவாறு. ஓய்தல்—உள்ளதன் நுணுக்கம்; ஆவது, ஆற்றல் நுணுகிப்போதல். உயிர் உணரும் தன்மைத் தாகலின் அத்தன்மை முன்னர்த் தேய்ந்தமைகூறி, விடைகூற விய லாமைக்குக் காரணம் காட்டியவாறு. உணர்வும் தேய என்றது, ஆற்றல் ஓய்ந்ததேயன்றி என்னும் பொருளதாகலானும் 'உயிரும் தீர்ந்தான்' என்றது, உணர்வு தேய்ந்ததேயன்றி என்னும் பொருள தாகலானும் அவ்விரண் டும்மைகளும் இறந்தது தழுவிய எச்ச உம்மைகளாம். அரக்கன் போன திசையைச் சடாயு கூறியிருப்பின் சீதையை உலகமுழுதும் நாடவேண்டி நேர்ந்திராது. (214)

## கவிக் கூற்று 3631-3632

3631. சீதங்கொண் மலரு ளோனுந்
தேவரு மென்ப தென்னே
வேதங்கள் காண்கி லாமை
வெளிநின்றே மறையும் வீரன்
பாதங்கள் கண்ணிற் பார்த்தான்
படிவங்கொ ணெடிய பஞ்ச
பூதங்கள் விளியு நாளும்
போக்கிலா வுலகம் புக்கான்.

சீதம் கொள் மலருளோனும்,
தேவரும் என்பது என்னே?
வேதங்கள் காண் கிலாமை,
வெளிநின்றே மறையும் வீரன்
பாதங்கள் கண்ணில் பார்த்தான்;
படிவம் கொள் நெடிய பஞ்ச
பூதங்கள் விளியும் நாளும்
போக்கு இலா உலகம் புக்கான்.

பொ :—குளிர்ச்சி கொண்ட தாமரை மலரில் உள்ள பிரமனும் தேவர்களும் காண்பதற்கு அரியவன் என்று கூறவேண்டுவது என்னே? பலரும் காண வெளிப்பட்டு நின்றும், (தன் இயல்பை ஆராய்வதற்கென்றே தோன்றிய) வேதங்கள் கண்டு தெளியாதபடி, ஒளிந்து நிற்கும் வீரனாகிய இராமனுடைய திருவடிகளை உயிர் நீங்குங் கால் கண்ணில் பார்த்தான் ஆதலின், வடிவுகொண்ட பெரிதாகிய மண்ணும், புனலும், அனலும், வளியும், வெளியும் ஆகிய ஐம்பூதங்

களும் அழிவெய்துகின்ற பேரூழியிறுதியினும் அழியாத பரமபதத்தை அடைந்தான்.

கு :—வேதங்கள் காண்கிலாமை மறையும் வீரன் ஆதலின், அவனைப் பிரமனும் தேவர்களும் காண்பதற்கரியவன் என்பது சொல்லாமல் அமையும் என்பார், "மலருளோனும் தேவரும் என்பதென்னே" என்றார். மலருளோனும் தேவரும் காண்கிலாமை மறையும் வீரன் என்பதென்னே? என இயைத்துக் கொள்க. திருமால் இராமனாக வடிவுகொண்டு வெளிப்பட்டு நின்றும் இவனே பரம்பொருள் என்று தெளியாது "மனிதரில் ஒருவனாகவே யாவரும் எண்ணுமாறு தன் தெய்வத்தன்மையைப் புலப்படுத்தாது மறைந்திருக்கின்றான் என்பார், "வெளிநின்றே மறையும் வீரன்" என்றார். பிரமன் முதலோர்க்கும் மறைகின்ற வீரன், சடாயுவின் கண்களுக்கு மறையாது காட்சியளித்தமை தோன்ற 'வீரன் பாதங்கள் கண்ணிற் பார்த்தான்' என்றும், பார்த்ததன் பயனாகப் 'போக்கிலாவுலகம் புக்கான்' என்றும், கூறினார். 'அளிக்கு நாயகன் மாயைபுக்கடங்கினனெனினுங், களிப்பி லிந்தியத் தியோகியைக் கரக்கிலன்' (2145) என்ற உண்மையை இராமனே சீதைக்குக் கூறியிருத்தல் இங்கு நினைவு கூர்தற்குரியது. முன் சரபங்கற்கும், பின்னர்ச் சவரிக்கும் இராமன் தன் தெய்வத்தன்மையை மறைக்காமல் வெளிநின்று காட்சியளித்து அவர்கட்கு வீடு கொடுத்தமையும் காண்க. விராதன் கவந்தன் ஆகியோர் தம் சாபம் நீங்கியவுடன் இராமன் தெய்வத் தன்மையைக் கண்டு துதித்தமையும் நினைக்க. போக்கிலா உலகம் என்றது பரமபதத்தை. 'உறுகால்கிளர் பூதமெலா முகினும் மறுகா நெறி' (சரபங்கர் - 93) என முன்கூறியதும் நினைக்க. (215)

**3632.** வீடவ னெய்தும் வேலை
விரிஞ்சனே முதல மேலோ
ராடவர்க் கரச னோடு
தம்பியு மழுது சோரக்
காடமர் மரமு மாவுங்
கற்களுங் கரைந்து சாய்ந்த
சேடரும் பாரி னோர்க்குங்
கரஞ்சிரஞ் சேர்ந்த வன்றே.

வீடு அவன் எய்தும் வேலை,
விரிஞ்சனே முதல மேலோர்,
ஆடவர்க்கு அரசனோடு தம்பியும்,
அழுது சோர,

காடு அமர் மரமும் மாவும்
கற்களும் கரைந்து சாய்ந்த ;
சேடரும் பாரி ஞேர்க்கும்
கரம் சிரம் சேர்ந்த அன்றே.

பொ :—சடாயு பரமபதத்தை அடையும்பொழுது, பிரமன் முதலிய மேலோராகிய ஆடவர்கட்கெல்லாம் அரசஞக விளங்கும் இராமனேடு இலக்குவனும் அழுது சோர்வடைய, அந்நிலையைக் கண்ணுற்ற காட்டில் பொருந்திய மரங்களும் விலங்குகளும் மலைகளும் இரக்கத்தால் கரைந்துருகிச் சாய்ந்தன ; உயர்வறவுயர்ந்த பரமபதமாகிய உலகத்திலுள்ள நித்திய சூரிகளுக்கும் கைகள் தலைமேல் சேர்ந்து குவிந்தன.

கு :—சடாயு வீடு அடைந்தபோது கானகத்தும் பரமபதமாகிய வானகத்தும் நிகழ்ந்தவாற்றைப் புலப்படுத்தியவாறு. அழும் செயலுக்குச் சிறிதும் உரிமையில்லாத இராமனும் சடாயுவின் உயிர் நீக்கத்திற்காக அழுதான் என்பார், விரிஞ்சனே முதல மேலோராகிய ஆடவர்க்கரசன் என்று சிறப்பித்தார். புருடோத்தமன் என்னும் வடமொழிப் பெயரை விளக்கியவாறு. எந்த ஆடவர்க்கு அரசன் என்பது விளக்க, விரிஞ்சனே முதல மேலோராய ஆடவர்க்கு அரசன் என்ருர். ஓடு உயர்பின் வழித்தாயது. பெண்டிர் மேற்கொள்ள வேண்டிய அழுகையைப் புருடோத்தமன் மேற்கொண்டான் என்பதை விளக்கியவர் அப்புருடோத்தமனையும் தேற்றுதற்குரிய ஆற்றல் சான்ற இலக்குவனும் அழுது சோர்ந்தானே என்பார், தம்பியும் அழுது சோர என உயர்வு சிறப்பும்மை கொடுத்தார். இராம இலக்குவர் அழுது சோர்ந்ததைக் கண்டு இரக்கமுற்று மரங்களாகிய ஓரறிவுயிரும், விலங்கும் பறவையுமாகிய ஐயறிவுயிர்களும் உயிரற்ற மலைகளும் உருகிச் சாய்ந்தன என அவ்விருவரின் துன்பநிலையைச் சிறப்பித்தவாறு. குறுக்கே வளர்வது என்ற காரணம் பற்றிய பெயரே விலங்கு என்பது ஆகலின், அச்சொல் பறவையையும் குறித்தது என்க. சேடு அரும்பார் என்றது பரமபதத்தை. சேடு - உயர்வு. தன்னினும் உயர்ந்தது இல்லாத உலகம் என்றவாறு. அங்குள்ளோர் என்றது, நித்தியசூரிகளை. சடாயுவின் பெருமையால் நித்திய சூரிகளின் கருத்தின்றியும் அவர் கைகள் தலைமேற் குவிந்தன என்பார், ‘கரம் சிரம் சேர்ந்த’ எனச் சினையை வினைமுதலாக்கிக் கூறினர். “நைவள நவிற்றுமொழி நண்ணவரலோடும்......கைகள் தலைபுக்கன கருத்துளதுமெல்லாம் தெய்வமெனலுற்ற உடல் சிந்தை வயமன்றே” (பால - 1235) என்பது இங்கு ஒப்புநோக்கத்தகும். சடாயு முன் சிறகிற்று வீழ்தல் கண்டபோது, “விண்ணோர் இரிந்தார்;

இறந்தார் துணையென்ன முனிக்கணங்கள் பரிந்தார்; படர்விண்டு விளுட்டவர் பைம்பொன்மாரி சொரிந்தார்" (129) என்று கூறியுள்ளதும் இங்கு நினைக்கத்தகும். (216)

### இராமன் இரங்கி வினவுதல்

3633. அறந்தலை நின்றி லாத
வரக்கனி ஞண்மை தீர்ந்தேன்
துறந்தனென் றவஞ்செய் கேனே
துறப்பெனோ வுயிரைச் சொல்லாய்
பிறந்தனென் பெற்று நின்ற
பெற்றியாற் பெற்ற தாதை
யிறந்தன னிருந்து ளேன்யா
னென்செய்கே னிளவ லென்றான்.

"அறம் தலை நின்றிலாத
அரக்கனின், ஆண்மை தீர்ந்தேன்;
துறந்தனென், தவம் செய்கேனோ?
துறப்பெனோ உயிரைச் சொல்லாய்?
பிறந்தனென் பெற்று நின்ற
பெற்றியால், பெற்ற தாதை
இறந்தனன்; இருந்துளேன் யான்;
என் செய்கேன்? இளவல்!'' என்றான்.

பொ :—"இளவலே! அறத்தில் நிற்காத அறங்கடை நின்ற அரக்கனால் ஆண்மை நீங்கப்பெற்றேன்; பெற்ற தந்தையாகிய சடாயு என்னை மகனாகப் பெற்றுநின்ற உரிமைக்காக (அரக்கனோடு போர் செய்து) இறந்து போனான்; அவனுக்கு மகனாகப் பிறந்த யான், (அவன் அன்புரிமையைக் கண்டும்) இறவாது உயிரோடு வாழ்ந்திருக்கின்றேன்; இந்நிலையில் யான் துறவு மேற்கொண்டு தவஞ் செய்வேனா? அல்லது உயிரை விடுவேனா? என் செய்வேன்? சொல்லுவாயாக" என்று இரங்கிக் கூறினான்.

கு :—'அறங்கடை நின்றவன்' என்று வாயினால் கூறவும் கூசி அறந்தலை நின்றிலாத என எதிர்மறையால் கூறிப் பெறவைத்தான். "அறன்கடை நின்ருருள் எல்லாம் பிறன்கடை, நின்ருரிற் பேதையாரில்" (குறள் - 142) என்றது நினைக்க. அறன்கடை, நிற்றலாவது, இன்பங்கருதிப் பெண்வழிச் செல்லுதலும், வரைவின் மகளிரோடும், இழிகுலமகளிரோடும் கூடுதலும், பிறன் மனைவியை விரும்புதலும்

ஆம். அரக்கனால் சீதை கவரப்பெற்றமையின் ஏறுபோல் பீடுநடையின்றிப் பழியுற்றமை கருதி, "அரக்கனின் ஆண்மை தீர்ந்தேன்" என்றான்; பெண்ணை ஆளும் தன்மையில் குறைபாடு நேர்ந்தது என்பது கருத்து. மனைவியை மாற்றான் கொள ஆண்மை தீர்ந்தமையாலும், தனக்காகத் தந்தை யிறந்தமையாலும் இனித் துறந்து தவஞ்செய்தலோ, உயிர் துறத்தலோ இரண்டில் ஒன்று செய்து தீர வேண்டும் என்பான், 'என் செய்கேன் இளவல்' என்று வினவினான். தந்தை என்ற உரிமைக்கேற்பச் சடாயு தனக்காக உயிர் துறக்கவும், மகன் என்ற உரிமைக்காகத் தான் உயிர் துறவாத இழிவு புலப்பட 'இருந்துளேன் யான்' என்றான். பெற்றி என்றது, உரிமைத் தன்மையை. 'இளவல் தீர்ந்தேன், பிறந்தனென் இருந்துளேன் யான், தவஞ்செய்கேனோ? உயிரைத் துறப்பெனோ? என் செய்கேன்? சொல்லாய்' என இயையும். பெற்றதாதை, பெற்று நின்ற பெற்றியால் இறந்தனன் என்க. (217)

### இலக்குவன் தேற்றுதல் 3634, 3635

**3634.** என்றலு மிளைய கோவவ்
விறையினை யிறைஞ்சி யாண்டும்
வென்றியாய் விதியின் றன்மை
பழியல விளைந்த தொன்றோ
நின்றினி நினைவ தென்னோ
நெருக்கிய வரக்கர் தம்மைக்
கொன்றபி னன்றோ வெய்ய
கொடுந்துயர்க் குளிப்ப தென்றான்.

என்றலும், இளைய கோ அவ்
இறையினை இறைஞ்சி, "யாண்டும்
வென்றியாய்! விதியின் தன்மை
பழி அல; விளைந்தது ஒன்றோ?
நின்று இனி நினைவது என்னோ?
நெருக்கிய அரக்கர் தம்மைக்
கொன்றபின் அன்றோ, வெய்ய
கொடுந்துயர்க் குளிப்பது?" என்றான்.

பொ:—என்று கூறிய அளவில். இலக்குவன் அவ்வாறு கூறிய இராமனை வணங்கி, "எக்காலத்தும் எவ்விடத்தும் வெற்றிபூணத் தக்கோய்! விதிவயத்தால் நேர்ந்த தன்மை ஆதலின், இந்

நிகழ்ச்சிகள் நமக்குப் பழி விளைப்பன அல்ல; நமக்கு விளைந்த துன்பம் இஃது ஒன்றுதானே? எத்தனையோ நிகழ்ந்தன; இப்பொழுது இத்துன்பங்களை யெல்லாம் நினைப்பதால் என்ன பயன்? நம் தந்தையை வருத்திய அரக்கர் தம்மைக் கொன்றபின் அல்லவோ மிக்க துயர்க்கடலில் ஆழ வேண்டும்" என்று கூறினன்.

கு:—யாண்டும் என்றது இடமும் காலமுமாகிய இரு பொருளையும் ஒருங்குணர்த்தியது. ஊழையும் உப்பக்கம் காணும் ஊக்கமுடையவன் என்பான், 'யாண்டும் வென்றியாய்' என்று விளித்தான். ஊழ் மாறுபட்ட வழியும் வென்றிகொள்ளத் தக்கவன் இராமன் என அவன் ஆள்வினையைச் சிறப்பித்தவாறு. இராவணன் சீதையைக் கவர்ந்ததும் சடாயு இறந்ததுமாகிய நிகழ்ச்சிகள் விதியால் நிகழ்ந்தன ஆதலின் அவை பழியல என்றவாறு. "இன்ப துன்பந்தான், விதிவயமென்பதை மேற்கொளாவிடின், மதிவலியான் விதி வெல்ல வல்லரோ" (193) என இராவணன் சீதையைக் கவர்ந்தது விதியின் செயல் என்பதைச் சடாயு முன் கூறியிருத்தலும், "வாழ்க்கை நாளும் மெலியும் கடை சென்றுளது ஆகலின்......சிறையற்றதோர் குன்றின் வீழ்ந்தான்" (128) எனச் சடாயுவின் வீழ்ச்சிக்கு விதியே காரணம் என்பதை முன் கூறியிருத்தலும் இங்கு நினைவுகூரத் தக்கன. இவ்விரண்டு நிகழ்ச்சிகளும் விதியால் நிகழ்ந்தனவாதலின் அவை பழி தருவதாக நினைந்து வருந்துதல் தக்கதன்று; தந்தையைக் கொன்ற அரக்கரைக் கொல்ல முயலாமையே நமக்குப் பழியாகும் என்று கூறி, "பொறியின்மை யார்க்கும் பழியன்று அறிவறிந்து ஆள்வினையின்மை பழி" (குறள் - 618) என்பதை நினைவூட்டியவாறு. நல்லூழின்மை யார்க்கும் பழியன்று என்பது, தீயூழ் உண்மை யார்க்கும் பழியன்று; என்ற கருத்தையும் விளக்குதல் காணலாம். சடாயு மரணத்திற்கு முன்னும் பல துன்பங்கள் நேர்ந்துள்ளமையால் அவற்றிற்கு வருந்தாத நாம் இதற்கு மட்டும் வருந்துதல் என்னை? என்பான், 'விளைந்தது ஒன்றோ?' என்றான். என்றது, பலவன்றோ என்றவாறு. நெருக்குதல் - வருத்துதல்; இங்குக் கொல்லுதலை யுணர்த்தியது. பகைவனைக் கொன்ற பின் துன்பத்தில் ஆழ்ந்திருக்கலாம்; இப்போது எழுக என்பான், 'அரக்கர் தம்மைக் கொன்றபினன்றோ, வெய்ய கொடுந்துயர்க் குளிப்பது' என்றான். குளிப்பது என்ற வினையால் துயரைக் கடலாக உருவகித்தமை புலனும். துயரத்தின் மிகுதி புலப்பட 'வெய்ய கொடுந்துயர்' எனச் சிறப்பித்தான். (218)

3635. எந்தையீ தியம்பிற் றென்னை
யெண்மைய ஞகி யேழைச்
சந்தவார் குழலி ஞளைத்
துறந்தனை தணிதி யேனும்
உந்தையை யுயிர்கொண் டானை
யுயிர்கொள்ளு மூற்ற மில்லாச்
சிந்தையை யாகினன்று செய்தவஞ்
செய்கை யென்ருன்.

"எந்தை ஈது இயம்பிற்று என்னை?
எண்மையன் ஆகி ஏழைச்
சந்த வார் குழலினளைத்
துறந்தனை தணிதி யேனும்,
உந்தையை உயிர் கொண்டானை
உயிர் கொள்ளும் ஊற்றம் இல்லாச்
சிந்தையை ஆகின் நன்று,
செய்தவம் செய்கை" என்ருன்.

பொ:—"என் தந்தையே! இச்சொல்லைச் சொன்னது எது பற்றியோ? பிறனல் கவரப்பட்டவளை மீட்டலாகாது என்ற கருத்துடையவனுய், மெலிவுடைய, அழகிய நீண்ட கூந்தலையுடைய சீதையைத் துறந்து சினம் தணிவாயாயினும், உன் தந்தையின் உயிரைக் கொண்டவனைக் கொன்று உயிர் வாங்கும் உறுதியும் இல்லாத உள்ளமுடையை ஆயின் செய்தற்குரிய பெருமையுடைய தவம் செய்தல் நல்லதே" என்ருன்.

கு:—இராமன் கொள்கையை யுடன்படுவான்போல் இலக்குவன் மறுத்துக் கூறியது. இராமனை இலக்குவன் தந்தையாகவே மதித்தவனுகலின் இங்கும் எந்தை! என்று விளித்தான். 'ஈது என்றது, துறந்தனன் தவஞ் செய்கேனே! என்ற சொல்லை. எண்மை - கருத்து; பிறனல் கவரப்பட்டவளை மீட்டல் ஆகாது என்ற கருத்து. இக்கருத்திருப்பின் இராவணனைக் கொல்ல வேண்டும் என்று சினம் தணிதல் இயல்பாகும். மனைவியைக் கவர்ந்த மாற்ருனைக் கொல்லாது சினம் தணிதற்கேனும் காரணம் இருக்கலாம்; உந்தையைக் கொன்றவனைக் கொல்லாதிருத்தற்கும் நின் சிந்தை இடம் தருகின்றதோ? அங்ஙனமாயின் தவஞ்செய்தல் நல்லதே என்றவாறு. துறத்தற்கு அருமை தோன்றச், 'சந்தவார் குழலினளை' எனவும் துறத்தல் முறையன்று என்பது தோன்ற 'ஏழை' எனவும் கூறினன். ஏழை - வலிமையற்றவள். இராவணன் கவர்தற்கு எளியளான

அவள் நிலைமையைப் புலப்படுத்தி அவள் குற்றமன்று என்பதைக் குறிப்பிட்டவாறு, பிழை செய்யாத பேதையாகிய சீதையைத் துறத்தலாகாது என்பதே கருத்து. துறத்தற்குச் செயப்படு பொருள் சீதை; தணிதற்குச் செயப்படு பொருள் இராவணன் மேலெழுந்த சினம். சடாயு, தனக்கும் தந்தையாயினும் மான உணர்ச்சி தோன்ற வேண்டி 'உந்தையை' எனப் பிரித்துக் கூறினான். ஊற்றம் - உறுதி. சிந்தையை யாகின் என்றது இராமன் அச்சிந்தனையோனுகான் என்பது புலப்படுத்தியவாறு. செய்கை நன்று என இயையும். மனைவியைக் கவர்ந்து தந்தையைக் கொன்ற பகைவனைக் கொல்ல முற்படுவதே தக்கது. துறந்து தவம் செய்தல் தக்கதன்று என்பது பெற வைத்தவாறு. எந்தையாகிய நீ எளியவர் நீர்மையனாய் ஈது இயம்பிற்று என்னை? என இயைத்துப் பொருள் கூறலுமாம். (219)

'சடாயுவுக்கு ஈமச் சடங்கு இயற்றுவோம்' என
இராமன் கூறுதல்

3636. அவ்வழி யிளவல் கூற
வறிவனு மயர்வு நீங்கி
யிவ்வழி யினைய வெண்ணி
னேழைமைப் பால தென்னு
வெவ்வழி பொழியுங் கண்ணீர்
விலக்கினன் விளிந்த தாதை
செவ்வழி யுரிமை யாவுந்
திருத்துவஞ் சிறுவ வென்றான்.

அவ்வழி இளவல் கூற,
அறிவனும் அயர்வு நீங்கி,
"இவ்வழி இனைய எண்ணின்
ஏழைமைப் பாலது" என்னு,
வெவ்வழி பொழியும் கண்ணீர்
விலக்கினன், "விளிந்த தாதை
செவ்வழி உரிமை யாவும்
திருத்துவம்; சிறுவ!" என்றான்.

பொ :—அவ்வாறு இலக்குவன் சொல்ல இராமனும் சோர்வு நீங்கி, "இப்பொழுது இத்தகைய எண்ணங்களை எண்ணின் அறிவின்மையின்பாற்படும்" என்று கருதி, வெம்மையதாய் இடையறாது பொழிகின்ற கண்ணீரைத் துடைத்துக்கொண்டவனாய், "தம்பீ

இறந்த தந்தைக்குச் செய்யவேண்டிய கடன்கள் யாவற்றையும் செம்மையானவழியில் செய்வோம்" என்று கூறினன்.

கு :—உயிர்விடக் கருதிய துன்பநிலையிலிருந்த இராமன், இலக்குவன் சொல்லையேற்றுக்கொண்டு அயர்வு நீங்குதற்கு ஏற்றவனே என்பது, தோன்ற 'அறிவனும்' என்று அவனைக் குறித்தார். இவ்வழி - இப்போது; வழி, காலப்பொருளது. என்னு - என்று கருதி. துன்பக் கண்ணீர் வெப்பமுடையது ஆதலின், 'வெவ்வழி பொழியுங் கண்ணீர்' என்ருர். விலக்குதல் - துடைத்தல். செவ்வழி திருத்துவம் என்க. உரிமை என்றது இறுதிக்கடனை. திருத்துதல் - செய்தல். சிறுவ என்றது, தம்பி என்னும் பொருளது. இனைய என்றது, தவஞ்செய்வதும் உயிர் துறத்தலும் போல்வனவற்றை. பகைவனைக் கொல்லவேண்டிய காலத்தில், இவற்றை எண்ணி வருந்துதல் அறியாமையே என இராமன் தன்னுள் எண்ணிக்கொண்டான் என்க. விலக்கினன் முற்றெச்சம். (220)

## ஈமவிறகு அமைத்தல்

**3637.** இந்தன மெனைய வென்னக்
காரகி லீட்டத் தோடும்
சந்தனங் குவித்து வேண்டுந்
தருப்பையுந் திருத்திப் பூவும்
சிந்தினன் மணலின் வேதி
தீதற வியற்றித் தெண்ணீர்
தந்தனன் ருதை தன்னைத்
தடக்கையா னெடுத்துச் சார்வான்

இந்தனம் எனைய என்னக்
கார் அகில் ஈட்டத்தோடும்
சந்தனம் குவித்து, வேண்டும்
தருப்பையும் திருத்திப் பூவும்
சிந்தினன்; மணலின் வேதி
தீது அற இயற்றித் தெண்ணீர்
தந்தனன்; தாதை தன்னைத்
தடக்கையான் எடுத்துச் சார்வான்.

பொ :—மணலில் மேடையைக் குற்றமறச் செய்தமைத்து, அம்மேடையில் "ஈமவிறகு எத்துணைய!" என்று கண்டோர் வியக்குமாறு கரிய அகில் கட்டையின் திரளோடும், சந்தனக்கட்டைகளையும்

கொணர்ந்து அடுக்கிக்குவித்து, வேண்டிய தருப்பைப் புல்லையும் அவ் விறகின்மேல் பரப்பி மலர்களையும் அதன்மேல் சிந்திவிட்டுத் தெளி வான நீரால் முழுக்காட்டித் தந்தையைத் தன் பெரிய கைகளால் எடுத்துக்கொண்டு ஈமப்பள்ளியைச் சார்வானானன்.

கு :—வேதிதீதற இயற்றிக் குவித்துத், திருத்திச், சிந்தித், தெண் ணீர் தந்தனனாய், எடுத்துச் சார்வான் என இயையும். இந்தனம் - விறகு. ஈமவிறகின் மிகுதியைக் கண்டவர்கள், 'இந்தனம் எனைய' என வியப்பர் என்றவாறு. அகிலும் சந்தனமும் விறகிற் சிறந்தன வாதலின், அவற்றையே கொணர்ந்து சடாயுவுக்காக அடுக்கினன். அகிலின் நிறம் தோன்றக் 'காரகில்' என்றார். தருப்பையைத் திருத்துதலாவது, நல்லன எடுத்துப் பரப்புதல். தெண்ணீர் தந்த னன் என்றது, சடாயுவின் உடம்பை நீரால் கழுவியதை யுணர்த்திய வாறு. ஈமப்பள்ளி அமைத்துக்கொண்டு, சடாயுவின் உடம்பை நீராட்டிக் கொண்டுவந்தமை இதனால் கூறினார். (221)

### ஈமப்பள்ளியில் தீவைத்தல்

3638 ஏந்தின னிருகை தன்னா
லேற்றின னீமந் தன்மேல்
சாந்தொடு மலரு நீருஞ்
சொரிந்தனன் றலையின் சாரல்
காந்தெரி கனல மூட்டிக்
கடன்முறை கடவா வண்ணம்
நேர்ந்தன னிரம்பு நன்னூன்
மந்திர நெறியின் வல்லான்.

ஏந்தினன் இருகை தன்னால்
ஏற்றினன் ஈமம் தன்மேல்;
சாந்தொடு மலரும் நீரும்
சொரிந்தனன்; தலையின் சாரல்
காந்து எரி கனல மூட்டிக்
கடன் முறை கடவா வண்ணம்
நேர்ந்தனன் நிரம்பும் நன்னூல்
மந்திர நெறியின் வல்லான்.

பொ :—(ஈமப்பள்ளியை நெருங்கி) சடாயுவை இரண்டு கை களாலும் உயர ஏந்தி, அந்த ஈமப்பள்ளிமேல் ஏற்றினான்; பின் சந்தனத்தோடு மலரையும் நீரையும் அவ்வுடம்பின்மேல் தெளித்

தான்; பின், அவ்வுடம்பின் தலைப்பக்கத்தில் எரிகின்ற நெருப்பைப் பற்றுமாறு மூட்டிவிட்டுப் பின் செய்யவேண்டிய கடமைகளை முறை தவறுவண்ணம் செய்தான்; யாரெனின்? நல்ல வேதத்தில் நிரம்பி யுள்ள மந்திரங்களின் முறைமையில் வல்லவனான இராமன்.

கு :—சடாயு விழுந்துகிடந்த இடத்திலிருந்து கொண்டுவந்ததும் கைகளில் ஏந்தியே யெனினும், உயர்ந்த ஈமப்பள்ளியில் ஏற்றும் போது உயரத்தூக்கிய நிலையை யுணர்த்த, 'ஏந்தினனிருகைதன்னால், என்றார். முன், 'பூவும் சிந்தினன்' என்றது, ஈமப்பள்ளியில் மலர் சிந்தியதை; இங்குச் 'சாந்தொடு மலருநீரும் சொரிந்தனன்' என்றது, ஈமப்பள்ளியில் கிடத்திய சடாயுவின் உடம்பின்மேல் சந்தனக்குழம்பையும் மலர்களையும் நீரையும் தூவியமை யுணர்த்திய தாகும். கனலுதல் - நெருங்குதல்; ஈண்டுத் தீ, விறகில் பற்றுதலை யுணர்த்தியது. நேர்தல் - செய்தல். தயரதனாகிய தந்தைக்கு ஈமக் கடன் செய்யும்பேறு இழந்த இராமன், அக்குறைபாடு நீங்கச் சடாயு வாகிய தந்தைக்குரிய கடன்களைத் தானே செய்யும் வாய்ப்பு கிடைத்தது போலும். மாமுது பார்ப்பான் மறைவழிகாட்டிடச் செய்ய வேண்டிய சடங்குகளை இராமன் தானேயும் செய்தற்கு உரியவனே என்பது புலப்பட, 'நிரம்பு நன்னூல் மந்திர நெறியின்வல்லான்' என இராமனைச் சிறப்பித்தார். நன்னூல் என்றது, வேதத்தை. மேலோர் மூவர்க்கும் வேதம் ஓதுதல் உண்டு ஆகலின், இராமன் அதில் வல்லவனாதல் இயல்பாதல் தெளியலாம். (222)

## இராமன் நீர்க்கடன் செய்தல்

3639 தளிர்த்தன களித்த பச்சைத்
தாமரைக் கெழுவு செம்பூத்
துளித்தன வனைய வென்னத்
துள்ளிசோர் வெள்ளக் கண்ணன்
குளித்தனன் கொண்ட லாற்றுக்
குளித்தபின் கொண்ட நன்னீர்
அளித்தன னரக்கர்ச் செற்ற
சீற்றத்தா னவலந் தீர்ந்தான்.

தளிர்த்தன களித்த பச்சைத்
தாமரைக் கெழுவு செம்பூத்
துளித்தன அனைய என்னத்
துள்ளி சோர் வெள்ளக் கண்ணன்,

குளித்தனன் கொண்டல்; ஆற்றுக்
குளித்தபின், கொண்ட நன்னீர்
அளித்தனன்; அரக்கர்ச் செற்ற
சீற்றத்தான் அவலம் தீர்ந்தான்.

பொ :—தளிர்த்தனவாய்ச் செழித்துள்ள பசுமை நிறம் வாய்ந்த தாமரைக் கொடியில் பொருந்திய சிவந்த மலரில் தேன் துளித்தன போலும் என்னலாம்படி, கண்ணீர்த் துளிகளாகிய வெள்ளம் பெருகுகின்ற கண்ணையுடையவனைக் கொண்டல் போன்ற இராமன், ஆற்றில் குளித்தான்; குளித்தபின் கைகளில் முகந்து கொண்ட நல்ல நீரைச் சடாயுவாகிய தந்தைக்குத் தருப்பணமாகக் கொடுத்தான்; பின் அரக்கரைப் பகைத்துக் கொண்ட கோபத்தினால் (அச்சடாயுவின் மரணம் பற்றித் தனக்கிருந்த) துன்பம் நீங்கினான்.

கு :—'தளிர்த்தனகளித்த பச்சை' என்பது, தாமரைக் கொடிக்கு அடை. பசுமை நிறம் வாய்ந்த மேனியில் உள்ள சிவந்த கண்களில் நீர் பெருகுதற்கு முற்றுவமையாக வேண்டிப் பச்சைத் தாமரைக் கொடியையும், அதில் பொருந்திய செம்பூவையும், அப்பூவில் தேன் துளித்தலையும் கூறினார். பசிய இலை படர்ந்த தாமரைக் கொடி இராமன் மேனிக்கும், செந்தாமரைப் பூக்கள் அவன் செங்கண்களுக்கும் அப்பூக்களில் தேன் துளித்தல் அவன் கண்ணில் நீர் பெருகுதற்கும் தனித்தனி யுவமையாகும். துள்ளி வெள்ளம்சோர் கண்ணன் என இயையும். கொண்டல் உவமை ஆகுபெயராய் இராமனை யுணர்த்தியது. கொண்டல், கண்ணனைக் குளித்தனன்; குளித்த பின் நீர் அளித்தனன்; பின் சீற்றத்தான் அவலம் தீர்ந்தான்; என இயையும். நன்னீர் அளித்தனன் என்றது, தருப்பணம் கொடுத்தலாகிய நீர்க் கடனை. செற்ற - பகைத்துக் கொண்ட; 'செற்றார் செயக் கிடந்ததில்' (குறள் - 446) என்புழியும் செற்றம், பகை என்ற பொருளைத் தருதல் காணலாம். இரண்டன் தொகையாதலின் 'அரக்கர்ச் செற்ற' என இயல்பின் விகாரமாயிற்று. அரக்கரைப் பகைத்துக் கொண்ட கோபத்தால் சடாயுவின் மரணம் பற்றிய துன்பந் தீர்ந்தான் என்றமையால், அக்கோபம் இல்லையாயின் அவ்வவலத்தில் ஆழ்ந்திருக்கத் தக்கவனே என்பது புலப்படுத்தியவாறு. இதனால், அவலச்சுவையை வெகுளிச்சுவை வென்று மேற்பட்டமை பெறப்படும். (223)

## கவிக் கூற்று

3640. மீட்டினி யுரைப்ப தென்னே
விரிஞ்சனே முதல மேல்கீழ்
காட்டிய வுயிர்க ளெல்லா
மருந்தின களித்த போலாம்
பூட்டிய கைக ளாலப்
புள்ளினுக் கரசைக் கொள்கென்
றூட்டிய நன்னீ ரைய
னுண்டநீ ரொத்த தன்றே.

மீட்டு இனி உரைப்பது என்னே?
விரிஞ்சனே முதல மேல், கீழ்,
காட்டிய உயிர்கள் எல்லாம்
அருந்தின களித்த போலாம்;
பூட்டிய கைகளால், அப்
புள்ளினுக்கு அரசைக் கொள்கென்று,
ஊட்டிய நல் நீர் ஐயன்
உண்டநீர் ஒத்தது அன்றே!

பொ:—ஒன்று சேர்த்து விரித்த தன் இரு கைகளால் அச் சடாயுவை நோக்கி, 'ஏற்றுக்கொள்க' என்று பாவனையால் ஊட்டிய நல்ல தருப்பணநீர், இராமன் (திருமால்) தான் உண்ட நீர்போல எல்லாவுயிர்க்கும் உணவாயது; ஆதலின், பிரமன் முதலாக உயர்ந்தவையும் தாழ்ந்தவையுமாகச் சொல்லப்பட்ட உயிர்கள் யாவும் அப்பொழுது அத்தருப்பண நீரை அருந்தினவாய்க் களித்தன; என்னின், அதற்கு மேலாக இராமன் ஊட்டிய நீரின் பெருமையைப் பற்றி வேறு கூறுவதற்கு என்னுளது?

கு:—போல், ஆம், அன்று, ஏ அசைநிலை. அருந்தின, முற்றெச்சம். அருந்திக் களித்தன என்க. ஒரு மரத்தின் வேரில் ஊற்றியநீர், கவடு, கோடு, விளார், இலை, பூ, காய், கனி என்ற அம்மரத்தின் உறுப்புகட்கு எல்லாம் பரவுதல் போல உலக உயிர்கட்கு முதற் காரணனான திருமால் உண்டநீர், அவன் காரியமாக விளங்கும் உலக உயிர்கட்கும் உணவாதல் இயல்பு ஆதலின், சடாயுவுக்கு ஊட்டிய நீரைப் பிரமன் முதலான உயிர்களெல்லாம் அருந்திக் களித்தமைக்கு அதனை உவமையாக்கினார். கண்ணன் உண்ட சிறிய உணவு, துருவாசர் முதலிய உயிர்கட்கெல்லாம் நிறைவளித்தது என்பது, (பாரதம் - துருவாசமுனிச் சருக்கம்) இங்கு நினைவு கூரத்தகும்.

ஐயன் உண்டநீர் அங்ஙனம் ஆகலாம்; ஐயன் சடாயுவுக்கு ஊட்டிய நீர் அங்ஙனமாதல் கூடுமோ? எனின், "தீதுளதுடைத்தியென்றூன் சேவடிக் கமலஞ்சேர்வான்" (212) என முன்கூறியதை நினைவு கூரின், சடாயு, இராமனாகிய திருமாலின் சேவடியில் சேர்ந்து அத் திருமாலாகவே ஆகிவிட்டானாதலின், அவனுண்டநீர்க்கும் ஊட்டிய நீரைப் பிரமன் முதலாய உயிர்கள் அருந்திக்களித்தமை பொருத்த மாதல் புலனாம். ஊட்டியவனும் உண்டவனும் ஒருவனே என்னுமாறு சடாயு திருமாலோடு இரண்டறக் கலந்தான் என்பது இதனால் விளங்கும். "தானே யுலகாந் தமியே னுளம்புகுதல் யானே யுலகென் பன் இன்று" (சிவஞானபோதம்-2 சூ. 1 அதிகரணம் உதா-வெண்பா) என்றதும், "கடல் ஞாலம் செய்தேனும் யானேயென்னும், கடல் ஞாலமாவேனும் யானேயென்னும்,........கடல் ஞாலத்தீசன் வந் தேறக் கொலோ?" (திருவாய்மொழி - 5-6-1) என்றதும் நோக்கின் இக்கருத்துத் தெளிவாம். இறைவனைத் தன்னுள் கொண்டோர் நிலையும் இறைவனிடம் கலந்தோர் நிலையும் ஒருதன்மையவேயாம். சடாயுவுக்கு இராமன் ஊட்டிய தருப்பணநீரின் பெருமையை இதற்கும் மேலாகச் சொல்லுதல் கூடாமையின், "மீட்டினியுரைப்ப தென்னே"!என்றார். (224)

### சூரியன் மறைவு

3641. பல்வகைத் துறையும் வேதப்
பலிக்கடன் பலவு முற்றி
வெல்வகைக் குமர னின்ற
வேலையின் வேலை சார்ந்தான்
தொல்வகைக் குலத்தின் வந்தான்
றுன்பத்தாற் புனலுந் தோய்ந்து
செல்வகைக் குரிய வெல்லாஞ்
செய்குவா னென்ன வெய்யோன்.

பல்வகைத் துறையும், வேதப்
பலிக்கடன் பலவும் முற்றி,
வெல்வகைக் குமரன் நின்ற
வேலையின், வேலை சார்ந்தான்,
தொல்வகைக் குலத்தின் வந்தான்
துன்பத்தால், புனலும் தோய்ந்து,
செல்வகைக்கு உரிய எல்லாம்
செய்குவான் என்ன, வெய்யோன்.

பொ :—பிதிரர்க்குச் செய்தற்குரிய பலவகையான சடங்குகளை யும், மற்றும் வேத விதிப்படி செய்தற்குரிய பிண்டபலி முதலிய கடன் களையும், முற்றுப்பெறச் செய்துவிட்டு, அரக்கர்களை வெல்லும் வகை யில் வெகுளிக் குறிப்போடு இராமன் நின்ற அமையத்தில், சூரியன், தொன்றுதொட்டு வரும் வகையினையுடைய தன் குலத்தில் வந்தவ னாகிய சடாயுவின் இறப்புக் காரணமாக நேர்ந்த துன்பத்தால் தானும் நீரில் மூழ்கி, அவன் செல்லும் நற்கதிக்கு நலம் புரியும் சடங்குகளை யெல்லாம் செய்யச் செல்வானைப்போல மேல் கடலை அடைந்தான்.

கு:—இராமன் குலமுதலாகிய சூரியன், இராமனை மகனாக ஏற்றுக் கொண்ட சடாயுவையும் தன் குலத்தில் வந்தவனாகவே கற்பித்துத் "தொல்வகைக் குலத்தின் வந்தான்" என்றதாகக் கொள்க. மேலும், காசிப முனிவனின் மனைவியர் பதின்மூவருள் அதிதியின் மகன் சூரியன்; விநதையின் மகனான அருணனின் மகன் சடாயு; ஆதலின், சூரியனுக்கு மகன் முறையினன் சடாயுவாதலும் நினைக. வேலை - பொழுது; கடல். மேல், 'அரக்கர்ச் செற்ற சீற்றத்தான் அவலந் தீர்ந்தான்' என்றதைத் தழுவி இங்கு, "வெல்வகைக் குமரன் நின்ற வேலையின்" என்றார். சடாயுவின் மரணத்திற்கு வருந்திக் கொண்டி ருந்த இராமன், அத்துன்பம் ஒருவாறு தணியப் பெற்று அரக்கரை வெல்வதற்கு ஆயத்தமாக நின்றான் என்றவாறு. இனித் தொல் வகைத் குலத்தின் வந்தான் என்றது, இராமனையே எனக் கொண்டு, இராமன் செய்யும் பிதிர்க்கடனைத் தானும் செய்ய வேண்டுமே என்ற உரிமை நினைவால் மேலைக் கடலாகிய நீர் நிலையைச் சேர்ந்தான் எனக் கூறலுமாம். வெய்யோன் புனலுந் தோய்ந்து செல்வகைக்கு உரிய வெல்லாம் செய்குவான் என்ன வேலை சார்ந்தான் என இயை யும். இயல்பாக மாலையில் மேலைக்கடலில் மறையும் சூரியனைச் சடாயு வின் இறப்புக் கருதி நீரில் மூழ்கி இறுதிக் கடனைச் செய்யச் செல் வான் போலச் சென்றான் என்றது தற்குறிப்பேற்ற அணியாகும்.

(225)

## சடாயு உயிர்நீத்த படலம் முற்றும்

# 9. அயோமுகிப் படலம்

அயோமுகி என்னும் அரக்கியைப் பற்றிய நிகழ்ச்சியை விரித் துரைக்கும் படலமாதலின் இஃது அயோமுகிப் படலம் என்னும் பெயர்த்தாயிற்று. இப்படலம் அயோமுகி மூக்கரி படலம் எனவும், அதோமுகிப் படலம் எனவும் சில சுவடிகளிற் குறிக்கப்பெற்றுளது. அயோமுகி என்னும் வடசொல் இரும்பினாலாகிய முகமுடையாள் எனப் பொருள் தரும் என்பர். அயம் - இரும்பு. எத்தகைய படைக் கலங்களால் தாக்கினாலும் இரும்பினை யொத்துச் சிதைவுறாத வன்மை வாய்ந்த முகமுடையாள் என்ற கருத்தில் அயோமுகி என்னும் பெயர் அவ் அரக்கிக்கு வழங்கப் பெற்றிருத்தல் கூடும்.

அயோமுகி பற்றிய கதை நிகழ்ச்சி வான்மீக ராமாயணம் ஆரணிய காண்டம் 69-ஆம் சருக்கத்திற் பின்வருமாறு கூறப் பட்டுளது.—

சடாயுவுக்கு நீர்க்கடன் செய்து முடித்துப் பின் சீதையைத் தேடுந் தொழிலை மேற்கொண்ட இராம இலக்குவர் இருவரும் தண்டக வனத்தைக் கடந்து ஜனஸ்தானத்திலிருந்து மூன்று நாழிகை வழி சென்று கிரவுஞ்சாரணியம் என்னும் வனத்திற் புகுந் தார்கள். பல இடங்களிலும் சீதையைத் தேடி அலைந்தவர்கள், அவ்வனத்தில் தங்கி இளைப்பாறி மூன்று நாழிகை வழி நடந்து கிரவுஞ்சாரணியத்திற்கும் மதங்காச்சிரமத்திற்கும் நடுவில் அஞ்சத் தக்கதும் கொடிய விலங்குகளும் பறவைகளும் நிரம்பப் பெற்றதும் பல்லுயிர்கள் நிறைந்ததும் எங்கும் அடர்ந்த மரங்களையுடையதும் ஆகிய வனத்தை யடைந்து, பாதாளத்தை நிகர்த்த ஆழமுடையதும் எப்பொழுதும் இருள் மூடப்பட்டதும் ஆகிய குகையொன்றைக் கண் டார்கள். அக்குகையின் அருகே பேருருவம் உடையவளும் கண்டார் அஞ்சத்தக்க தோற்றமுடையவளும் ஆகிய அரக்கி யொருத்தி காணப்பட்டாள். உரனுடைய உள்ளத்தவர்க்கும் நடுக்கத்தை விளைப்பவளும் அருவருத்தற்குரிய தோற்றத்தினளும் சரிந்தவயிறும் கோரப் பற்களும் கரடுமுரடான மேனியும் அழகிலா வுருவும் உடையவ ளுமான அரக்கியை ஆடவரிற் சிறந்தாராய அவ்விருவரும் உற்று நோக்கினார்கள். அவள் அவ்விருவரையும் அணுகித் தமையனுக்கு முன்னே நடந்து செல்லும் இலக்குவனைப் பார்த்து, 'நாம் இரு வரும் விளையாடுவோம் வா' என்று சொல்லி, அவனை இறுகப் பிடித்துக் கொண்டாள்; 'நான்தான் அயோமுகி என்று பேர் பெற்றவள், நீ என் காதலுக்கு உரியவன் ஆயினாய்; உனக்குப்

பெரும் பாக்கியம் இது. கணவனே என்னைக் காத்தருள்க. மலைச் சிகரங்களிலும் ஆற்றிடைக் குறைகளிலும் எஞ்சியுள்ள வாழ்நாட்களை நீ என்னுடன் இனிமையாகக் கழிப்பாயாக' எனக் கூறினள்; அதனைக் கேட்டு வெகுண்ட இலக்குவன், வாளை உருவி அரக்கியின் காதையும் மூக்கையும் தனங்களிரண்டையும் அரிந்து ஒறுத்தான். அந்நிலையில் அயோமுகி அருவருக்கத்தக்க பெருங்குரலுடன் கதறி அரற்றிக்கொண்டு வந்த வழியே ஓடி விட்டாள். பின்னர் இராம இலக்குவர் இருவரும் அடர்ந்ததொரு காட்டினையடைந்தார்கள் என்பதாம்.

இவ்வாறு ஒன்பது சுலோகங்களாற் சுருங்கச் சொல்லப்பட்ட அயோமுகியின் கதை நிகழ்ச்சியைக் கல்வியிற் பெரிய கம்பரென்னும் புலவர் பெருமான், கற்போர் உள்ளத்தைக் கனிவிக்கும் இனிய நாடக அமைப்புடையதாய் அயோமுகிப் படலம் எனத் தனியே ஒரு படலமாக்கி நூற்றொரு பாடல்களாற் சுவைநலம் பொருந்த விரித்துக் கூறியுள்ளார்.

இராமனும் இலக்குவனும் உடன்செல்லும் நிலையில் அயோமுகி என்பாள், இராமனுக்கு முன்னே செல்லும் இலக்குவனைக் கண்டு காமுற்று அவனை வலிதிற் பற்றித் தழுவிக்கொண்டாள் எனவும், அதுகண்டு சினமுற்ற இலக்குவன், அயோமுகியின் மூக்கு முதலியவற்றை அரிந்து அவளது பிணிப்பினின்றும் மீண்டான் எனவும் வான்மீகம் கூறும். தன்னிகரில்லாத் தலைவனாகிய இராமனது முன்னிலையிலே, இழிந்தவளாகிய அரக்கர் குலப் பெண்ணொருத்தி பெருவீரனாகிய இலக்குவனைக் காமுற்று எளிதிற் கைப்பற்றிக் கொண்டாள் என்னும் இச்செய்தி, ஒப்பாரும் மிக்காருமில்லாத காப்பியத் தலைவரது பெருமைக்கு இழுக்கென எண்ணிய கம்பர், வான்மீகத்திற் கூறப்படும் இந்நிகழ்ச்சி இராமன் முன்னிலையிலே இலக்குவன் அறிய நிகழ்ந்த நிகழ்ச்சியன்று என்றும், இராமனது நீர் வேட்கையைத் தணித்தல் வேண்டி இரவுப் பொழுதில் தண்ணீரைத் தேடிச் செல்லும் இலக்குவனை அயோமுகி என்னும் அரக்கி வழியிடையே தனிமையிற் கண்டு காமுற்றுத் தனது வேட்கையை அவனுக்கு எடுத்துரைக்கவும் அவன் அதற்கு உடன்படாது வெகுண்டு விலக்கினமையால், தன் நினைவு நிறைவேறப்பெறாது துயருழந்த அவ்வரக்கி, இலக்குவன் உணராதவாறு மோகன மந்திரத்தை நினைந்து தன் மாயச் செய்கையால் வஞ்சித்து இலக்குவனைப் பற்றியெடுத்துக்கொண்டு வான்வழியே சென்றாள் என்றும், இந்நிலையில் இலக்குவனைப் பிரிந்து தனித்திருக்கும் இராமன், தண்ணீர் கொணரச் சென்ற தம்பி விரைவில் மீண்டு வாராமையை யெண்ணிக் கலக்கமுற்றுத் தம்பியின் பிரிவாற்றாமையாற் பெரிதும் வருந்தித் தன் இன்னுயிரைத் துறக்க முற்பட்

டான் என்றும், அந்நிலையில் உரனுடைட உள்ளத்தவனாகிய இலக்குவன், தன் ஞானத்தால் அயோமுகியின் மாயப்பிணிப்பிலிருந்து விடுபட்டு அவ் அரக்கியின் மூக்கு முதலிய உறுப்புக்களையரிந்து தடிந்தானாக, வெம்மையுடையளாகிய அயோமுகி இலக்குவனை விட்டுவிட்டு அலறிக்கொண்டு விரைந்தோடினாள் என்றும், அவளது அலறல் ஒலியைக் கேட்டு அங்கு நிகழ்ந்ததனை உய்த்துணர்ந்த இராமன், இரவின்கண் இருள்நீங்க அக்கினிப் படையினைக் கையிற் கொண்டு இலக்குவனைத் தேடி விரைந்து சென்றான் என்றும், அன்பின் மிகுதியால் இராமன் தன்னைத் தேடி வருதலையறிந்த இலக்குவன், 'வந்தனன் வந்தனன் வருந்தல் வாழி' எனக் கூறி விரைந்தோடி வந்து தமையன் பாதங்களில் வீழ்ந்து வணங்கினான் என்றும், அங்கு நிகழ்ந்தவற்றை இலக்குவன்பால் வினவியறிந்த இராமன் இன்னலும் உவகையும் ஒருங்கெய்தித் தன் தம்பியின் மறனிழுக்கா மானமாகிய பேராண்மையினை உளங்கசிந்து பாராட்டினான் என்றும் இப்படலத்திற் சுவைபெற விளக்கியுள்ளார்.

இப்படலத்திற் காவிய பாத்திரங்களாக அமைந்தோர் இராமன், இலக்குவன், அயோமுகி என்னும் மூவராவர். அவருள் இராமன் தன் தம்பியின்பால் வைத்த பேரன்பின் திறமும், அவனது அன்புக்குரிய தம்பியாகிய இலக்குவன் நள்ளிருளில் தன்னை வஞ்சித்துக் கைப்பற்றிய கொலைத் தொழிலாட்டியாகிய அரக்கியையும் கொல்லாது ஒறுத்துத் துரத்திய அறத்தின் வழிப்பட்ட பேராண்மையும் இப்படலத்தில் நன்கு விளக்கப் பெற்றுள்ளன. தன்பால் அகலா அன்பினனாகிய இலக்குவனது பிரிவு இராமனது உள்ளத்தே சீதையின் பிரிவுத் துயரினும் மேற்பட்டு வருத்தினமையால் இராமன் தன்னுயிரைத் துறக்க முற்பட்டமை, இலக்குவன்பால் இராமன் கொண்டுள்ள பேரன்பின் திறத்தை இனிது புலப்படுத்துவதாகும். அரக்கர் குலப் பெண்ணாகிய அயோமுகி என்பாள், சூர்ப்பணகை தாடகை ஆகிய அரக்கியரைப் போன்று யாவராலும் வெல்லுதற்கரிய பெருவலி படைத்தவள்; பல்லுயிர்களையும் கொன்று தின்றுழலும் இயல்புடையவள்; இராமனது நீர்வேட்கையினைத் தணிவித்தல் வேண்டி விரைந்து தண்ணீர் கொணரச் செல்லும் இலக்குவனைக் கண்டு அவன்பால் தான் கொண்ட எல்லையற்ற காம வேட்கையால் தனக்குரிய இயல்பாகிய கொடுமை தணியப்பெற்று அவன் முன் சென்று தனது விருப்பத்திற்கு இசையும்படி அவனை இரந்து நிற்கின்றாள்; இலக்குவன் அவளது தவறான வேட்கைக்கு உடன்படாது சினந்தமையால் அவனை வலிதிற் பற்றிச் சென்று தன் குகையில் அடைத்து வைத்து அவனது வன்மை கெடுத்து அவனொடு கூடி மகிழ எண்ணி மோகனையென்னும் மாயச் செய்கையால் அவனை வலிதிற் பற்றி யெடுத்துக் கொண்டு விசும்பின் வழியே செல்பவள், தன்னுணர்வு மீளப்பெற்ற

இலக்குவனால் தண்டிக்கப்பட்டு உறுப்பறையாகி அவனை விட்டுவிட்டு அலறியோடுகின்றாள். இந்நிகழ்ச்சி, எத்தகைய வன்மையுடையோரையும் காமவுணர்வு வலியிழக்கச் செய்வதுடன் எத்தகைய தீச்செயல்களையும் செய்யத் தூண்டும் இயல்பினதென்பதனையும், தன்னை விரும்பாதாரை வலிதிற்கூட விரும்பும் இத் தீச்செயல் அரக்கிற் கொடியோராகிய ஆடவரிடத்து மட்டுமன்றி அயோமுகியை யொத்த மகளிரிடத்தும் உண்டென்பதனையும் அறிவித்தற்குரிய எடுத்துக்காட்டாக அமைந்துளது.

ஞாயிறு தோன்றுதல், மறைதல், இரவு வருதல, இருள் பரவுதல், திங்கள் தோன்றுதல் முதலிய இயற்கை நிகழ்ச்சிகளைக் காப்பியத் தலைவரது கதை நிகழ்ச்சியுடன் தொடர்புபடுத்தித் தற்குறிப்பேற்றம் உவமை உருவகம் முதலிய அணிநலம் அமைய இப்படலத்தில் ஆசிரியர் புனைந்துரைத்துள்ளார். இராமன் தன் இன்னுயிர்ச் சீதையை யெண்ணியும் தன்னையகலாது உடன்போந்த இலக்குவனது பிரிவினை நினைந்தும் வருந்தியுரைக்கும் உரைகள், கற்போர் நெஞ்சத்தைக் கனிவிக்கும் இயல்பினவாய்த் தன்னிகரற்ற தலைவனொருவன்பால் தோன்றும் அவலச் சுவைக்குச் சிறந்த இலக்கியமாக அமைந்துள்ளன. அயோமுகியின் அரற்றொலி கேட்டு இலக்குவனைத் தேடி நள்ளிருளில் அக்கினிப் படையுடன் விரைந்து செல்லும் இராமனது விரைவும், அவன் இலக்குவனைக் காணப் பெற்ற பின் இன்னலும் உவகையும் ஒருங்கெய்திக் கண்களில் நீர்மல்கத் தன் தம்பியை வியந்து பாராட்டும் ஆர்வ மொழிகளும் உடன் பிறப்பாளர்பால் இராமன் வைத்துள்ள எல்லையற்ற அன்பின் திறத்தை நன்கு புலப்படுத்துவனவாகும்.

# 9. அயோமுகிப் படலம்

## இராம இலக்குவர் அந்திப்பொழுதில் ஒரு மலையிற் சென்று தங்குதலும் இருள் பரவுதலும்

3642. அந்திவந் தணுகும் வேலை
யவ்வழி யவரு நீங்கிச்
சிந்துரச் சென்னித் தாண்டோர்
மைவரைச் சேக்கை கொண்டார்
இந்திரற் கடங்கல் செல்லா
விராக்கத ரெழுந்த தென்ன
வெந்துயர்க் கூற்ற மாய
விரியிருள் வீங்கிற் றன்றே.

அந்தி வந்து அணுகும் வேலை,
அவ்வழி, அவரும், நீங்கிச்
சிந்துரச் சென்னித்து ஆண்டு ஓர்
மைவரைச் சேக்கை கொண்டார்;
இந்திரற்கு அடங்கல் செல்லா
இராக்கதர் எழுந்தது என்ன,
வெந்துயர்க்கு ஊற்றம் ஆய
விரி இருள் வீங்கிற்று அன்றே.

பொ :—(இராமன் இலக்குவன் ஆகிய) அவ்விருவரும் அந்தி மாலை வந்து நெருங்கும் அப்பொழுதிலே அவ்விடத்தைவிட்டு நீங்கிச் செந்நிறம் வாய்ந்த சிகரத்தையுடையதாய் அங்கு உள்ளதொரு கரிய மலையினை அடைந்து அதனை இருப்பிடமாகக் கொண்டு தங்கினார்கள். (அந்நிலையில்) கொடுந் துன்பத்திற்கு வலிமை தருவதாய் விரிந்த இருளானது, இந்திரனுக்கு அடங்கியொழுகாத அரக்கர்கள் எல்லாம் (ஒருங்கு கூடிப் போர் மேற்கொண்டு) எழுந்தாற்போன்று, எங்கும் பரவிச் செறிந்தது.

கு :—'அவரும், அந்தி வந்து அணுகும் வேலை அவ்வழி நீங்கி, ஆண்டுச் சிந்துரச் சென்னித்து ஓர் மைவரைச் சேக்கை கொண்டார்' என்வும், 'வெந்துயர்க்கு ஊற்றமாய விரியிருள், இராக்கதர் எழுந்தது என்ன வீங்கிற்று' எனவும் இரு தொடராக இயையும். அந்தி - பகற் பொழுதின் பிற்கூறு; பொழுது சாயுங்காலம். அவ்வழி - சடாயு

வுக்கு நீர்க்கடன் நிகழ்த்திய கானாற்றங்கரையாகிய அவ்விடம். அவர் என்றது, முன்னைப் படலத்திற் குறித்தவாறு சடாயுவுக்கு நீர்க்கடன் இயற்றிய இராமன் இலக்குவன் ஆகிய இருவரையும். வெய்யோனாகிய கதிரவன் நீங்கியதேயன்றி அவ்விருவரும் நீங்கினர் என்பது பட வருதலின் 'அவரும்' என்புழி உம்மை, இறந்தது தழீஇய எச்சவும்மை. சிந்துரம் - செந்நிறம். சென்னித்து - சிகரத்தையுடையது; சென்னி என்னும் சினையடியாகப் பிறந்த வினைக் குறிப்புப் பெயர். மை - கருமை; மேகமும் ஆம். 'சேயோன்மேய மைவரை யுலகமும்' என வரும் தொல்காப்பியத் தொடர்க்குச் 'செங்கேழ் முருகன் காதலித்த வான் தங்கிய வரை சூழுலகமும்' எனப் பொருள் கூறுவர் நச்சினார்க்கினியர். கருமுகில் தவழும் மலையாயினும் ஞாயிறு மறையும் நிலையிற் செவ்வானத்தின் ஒளி அதன் சிகரத்திற் படர்ந்தமையால் செந்நிறச் சிகரத்ததாய்த் திகழ்வதாயிற்று. அந்தியின் முடிவிலே வந்த கங்குற் பொழுதாகிய காரிருள், இராவணன் செய்த வஞ்சனையாற் சீதையைப் பிரிந்து பெருந்துயருழக்கும் இராமனது உள்ளத்தில், கொடியோனாகிய இராவணனையும் அவன் இனத்தாராய அரக்கர்களையும் தனது கருமை நிறத்தாற் புலப்படுத்தியதுடன், இந்திரனுக்குப் பகைவரான இராக்கதர் அனைவரும் ஒருங்கு கூடிப் போர் மேற்கொண்டு எழுந்த நிலையினை யொத்துத் தோன்றியது என்பார், 'இந்திரற்கு அடங்கல் செல்லா இராக்கதர் எழுந்த தென்ன' என்றார். அன்பிற் சிறந்த காதலரைப் பிரிந்தார்க்குக் கங்குற்காலமாகிய இருட்பொழுது, வெந்துயர் விளைக்கும் இயல்புடையதாய்த் தோன்றுமாதலின், 'வெந்துயர்க்கு ஊற்றமாய விரியிருள்' என்றார். வீங்குதல் - பக்கமெங்கும் பரவிச் செறிதல். அன்று, ஏ என்பன அசை. (1)

## இரவுப் பொழுது வர இராம இலக்குவர் மனங்கவலுதல்
## 3643, 3644

3643. தேனுக வருவி சிந்தித்
தெருமர லுறுவ போலக்
கானமு மலையு மெல்லாங்
கண்ணினீ ருகுக்குங் கங்குல்
மானமுஞ் சினமுந் தாதை
மரணமு மைந்தர் சிந்தை
ஞானமுந் துயருந் தம்முண்
மலைந்தென நலிந்த தன்றே.

தேன் உக அருவி சிந்தித் தெருமரல் உறுவ போலக்
கானமும் மலையும் எல்லாம், கண்ணின்நீர் உகுக்கும் கங்குல்,
மானமும் சினமும் தாதை மரணமும், மைந்தர் சிந்தை,
ஞானமும் துயரும், தம்முள் மலைந்தென, நலிந்தது அன்றே.

பொ :—காடும் மலையும் ஆகிய யாவும் தேன் ஒழுக அருவி நீரைச் சொரிந்து மனத்தடுமாற்றம் உற்றனபோலத் தங் கண்ணீரைச் சொரிதற்குக் காரணமாகிய கங்குற் பொழுதானது, (சீதையைப் பிரிந்ததனு லுண்டாகிய அவ)மானமும், அது கருதிப் (பகைவர் மேல் உண்டாகிய) வெகுளியும், (சடாயுவாகிய) தந்தை யிறந்தமையால் ஏற்பட்ட செயலறவும், மெய்யுணர்வாகிய ஞானமும் (அதனை மீதூர்ந்து வரும்) பெருந் துயரும் தம்முள் மாறுகொண்டு பொருதாற் போன்று மைந்தராகிய அவ்விருவருடைய சிந்தையினையும் தாக்கி வருத்தியது.

கு :—தெருமரல் - மனச்சுழற்சி. கண்ணினீர் - கண்ணீர். கானமும் மலையும் எல்லாம் கண்ணினீர் உகுக்கும் என்றது, கானம் தன் பாலுள்ள மரஞ் செடி கொடிகளிற் பூத்த மலர்களிலிருந்து கள் (தேன்) ஆகிய நீரைச் சொரிதலையும், மலை தன் கண்ணின்று வீழும் இனிய அருவி நீரைச் சொரிதலையும் குறித்து நின்றது. இராமன் இலக்குவன் ஆகிய வீரருடைய மனத்துயரத்தினையுணர்ந்து மனத் தடுமாற்றம் உறுவனபோலக் கானமும் மலையும் தேனும் அருவியும் ஆய தம் கண்ணீரைச் சொரிந்தன என்பதாம். மனவுணர்வு பெருதனவாகிய காடும் மலையுமெல்லாம் கண்ணீர் உகுக்கும்படி வந்த கங்குல் என அதன் கொடுமை குறித்தவாறு. கங்குல், மைந்தர் சிந்தையினை நலிந்தது எனக் கூறவந்த ஆசிரியர், மைந்தர் சிந்தையில் மானமும் சினமும் தாதை மரணமும் தம்முள் மலைந்து நலிந்தாற் போலவும், ஞானமும் துயரும் தம்முள் மலைந்து நலிந்தாற் போலவும் கங்குல் நலிந்தது எனச் சிந்தையை நலிந்த அப்பொருள்களையே கங்குலுக்கு உவமையாக எடுத்துக் காட்டினர். இது தற்குறிப்பேற்ற உவமை. மலைதல் - பொருதல். அன்று, ஏ என்பன அசை. (2)

**3644.** மெய்யுற வுணர்வு செல்லா
வறிவினை வினையி னூக்கும்
பொய்யுறு பிறவி போலப்
போக்கரும் பொங்கு கங்குல்

நெய்யுறு நெருப்பின் வீங்கி
நிமிர்தர வுயிர்ப்பு நீளக்
கையற வுறுகின் ருராற்
காணலாங் கரையிற் றன்றே.

மெய் உற உணர்வு செல்லா அறிவினை வினையின் நூக்கும்
பொய் உறு பிறவிபோலப் போக்க அரும் பொங்கு கங்குல்,
நெய் உறு நெருப்பின் வீங்கி நிமிர்தர, உயிர்ப்பு நீளக்
கையறவு உறுகின்ருரால் காணல் ஆம் கரையிற்று அன்றே.

பொ :—மெய்ப் பொருளைப் பொருந்த உணரத் தலைப்படாதாரது அறிவினை வினையாகிய பாசத்திலே புகத் தள்ளும் பொய்ம்மையினல் வரும் பிறவித் தொடர்ச்சியினைப் போன்று, எளிதிற் கடத்தற்கரியதாகி மிக்குத் தோன்றிய கங்குற்பொழுது, நெய் சொரியப்பட்டு (மேலோங்கி) எரியும் நெருப்பினை யொத்து வெம்மை மிக்குப் புடைபரந்து நிமிர்ந்தெழப் பெருமூச்சு நீடுதலாற் செயலற்று வருந்தும் (இராமன் இலக்குவன் ஆகிய) அவ்வீரர்களாற் கடந்து காணுதற்குரிய கரையில்லாததாயிற்று.

கு :—'மெய்' என்றது, தோற்றக் கேடுகள் இன்றி என்றும் நிலையுடையதாயுள்ள மெய்ப் பொருளை. மெய் உற உணர்வு - மெய்ம்மைப் பொருளாகிய இறைவனைப் பொருந்த உணர்தல்; அஃதாவது மெய்யுணர்வுடையார் பலரிடத்தும் பலகாலும் அணுகிப் பழகிக் கேட்டல் சிந்தித்தல் தெளிதல் என்னும் உபாயம் மூன்றினலும் உள்ளவாறு உணர்ந்து போற்றுதல். இங்ஙனம் மெய்ப்பொருளின் இயல்பினை உணர்ந்தோர்பாற் கேட்டுச் சிந்தித்துத் தெளியும் முயற்சியும் ஆற்றலும் வாய்க்கப் பெருத கீழோரது அறிவினை 'மெய்யுறவுணர்தல் செல்லா அறிவு' என்ருர். பொய்யுறு பிறவி என்றது, நில்லாதவற்றை நிலையின என்றுணரும் பேதைமையாகிய பொய்ம்மையின் பயனுக வந்த பிறவி என்றவாறு. பொய்ம்மையை விளைக்கும் பேதைமையினை இங்குப் 'பொய்' எனக் குறித்தார். வித்தும் மரமும் போல, வினையாற் பிறப்பும், பிறப்பால் வினையும் என இவ்வாறு காரண காரியத் தொடர்ச்சியாய்க் கரையின்றி வருதலின், 'வினையின் நூக்கும் பொய்யுறு பிறவி' என்றும், பிறவித் தொடர்ச்சியானது மெய்யுணர்வில்லாதவர்களால் உணர்ந்து போக்குதற்கரிதாய்க் கரையின்றி நீளுமாறுபோல, மிக்க கங்குற்பொழுதும் கையறவுற்ற இராமன் இலக்குவன் ஆகியோராற் கடத்தற்கு அரிதாய்க் கரையின்றி நீள்வதாயிற்று என்பார், 'பொய்யுறு பிறவிபோலப் போக்கரும் பொங்கு கங்குல் கையறவு உறுகின்ருராற் காணலாம் கரையிற்று அன்று' என்றும், சிந்தை கலங்கிய அவ்வீரர்கள், நெய் சொரியப்

பெற்று நிமிர்ந்தெரியும் நெருப்பினையொத்து நெஞ்சழன்று நீண்ட பெருமூச்செறிய அடைந்த செயலற்ற நிலையினைப் புலப்படுத்துவார்,' 'நெய்யுறு நெருப்பின் வீங்கி நிமிர்தர உயிர்ப்பு நீளக் கையறவு உறுகின்றார்' என்றும் கூறினர் ஆசிரியர். மெய்ப்பொருளை நினையாதாரது அறிவினை வினையிற் செலுத்தும் பொய்யுறு பிறவி, கடத்தற்கு அரியதாய்க் கரையற்ற கடலையொத்துப் பெருகி நீளுமாறு போலப் பொங்கு கங்குலும் கடந்து காணும் கரையில்லாததாய்க் கடல்போற் பெருகி நீண்டது என்பது கருத்து. 'கரையிற்று அன்று' என்ற சொற் குறிப்பால் பிறவியும் கங்குலும் கடல்களாக உருவகஞ் செய்யப் பெற்றமை புலனும். (3)

## இராமன் கண்துயிலப்பெருமை 3645, 3646

3645. யாமது தெரித றேற்றா
மின்னகைச் சனகி யென்னுங்
காமரு திருவை நீத்தோ
முகமதி காண்கி லாதோ
தேமரு தெரியல் வீரன்
கண்ணெனத் தெரிந்த செய்ய
தாமரை கங்குற் போதுங்
குவிந்திலாத் தன்மை யென்னோ.

யாம் அது தெரிதல் தேற்றாம்; இன்நகைச் சனகி என்னும்
காமரு திருவை நீத்தோ? முகமதி காண்கிலாதோ?
தேம்மரு தெரியல் வீரன் கண் எனத் தெரிந்த செய்ய
தாமரை, கங்குற் போதும், குவிந்திலாத்தன்மை என்னோ?

பொ :—நறுமணம் பொருந்திய மாலையினையணிந்த பெருவீரனுகிய இராமனுடைய கண்கள் எனக் கூறப்பெறும் செம்மைநிறம் வாய்ந்த தாமரை மலர்கள், இரவுப்பொழுதிலேயும் குவிந்து மூடப் பெறுத்தன்மை, (அத்தாமரைமலர்கள்) இனிய புன்முறுவலுடன் விளங்கும் சனகன்மகளாகிய அழகிய திருமகளை இழந்தமையினாலோ, அன்றி (அத்திருமகளின்) முகமாகிய திங்களைக் காணப்பெறுமையாலோ, (காரணம்) வேறுயாதோ? யாம் அதனைத் தெரிந்து தெளியப் பெற்றிலோம்.

கு :—இது கவிக்கூற்று. கண்களென்னுந் தாமரை குவிந்திலாத் தன்மை, திருவைநீத்தோ, முகமதிகாண்கிலாதோ, (வேறு) என்னோ, யாம் அது தெரிதல் தேற்றாம் என முடியும். சீதையைப் பிரிந்து

வருந்தும் இராமன், கங்குற்பொழுது முழுவதும் செந்தாமரை மலர் போலும் தன்கண்கள் மூடப்பெற்றிலன் எனக் கூறக்கருதிய ஆசிரியர், அக்கருத்தினை அவநுதி முதலிய அணிநலம் பொருந்த இச் செய்யுளிற் புனைந்துரைக்கின்றார். இராமனுடைய கண்கள் எனக் கருதப்படும் அவை, உண்மையால் நோக்குவார்க்குச் செந்தாமரை மலர்களே என்பது நன்கு புலனும் என்பார், 'வீரன் கண் எனத் தெரிந்த செய்ய தாமரை' என்றார். தாமரைமலர்களாகிய அவை, இரவுப்பொழுதிற் குவிதல் இயல்பாயினும், தங்கண் என்றும் அகலா தமரும் திருமகளை இழந்தமையாலோ, அன்றி அவளது முகமாகிய முழுமதியின் நிலவொளியினைத் தாம் காணப்பெறுமையாலோ, வேறு எந்தக் காரணத்தினலோ அவை குவியாவாயின என்பதாம். இராமன் கண்களைச் செந்தாமரை மலர்களாகக் கூறியதற்கேற்ப, அவன் கண்ணினின்றகலாக் கற்புடை நங்கையாகிய பிராட்டியை 'இன்னகைச் சனகியென்னும் காமருதிரு' என்றார். இதனல் திரு மகளே சீதையாக வந்தமை குறிப்பித்தவாறு. 'தன் பொற்பாதம் ஏத்துவார் பிறப்பறுப்பான்' ஆகிய அறத்தின் மூர்த்தியின் கண்கள் இரவுமுழுவதும் மூடப்பெருமைக்குரிய உண்மையான காரணம் இது வென்பதனைச் சில்வாழ்நாட் பல்பிணிச் சிற்றறிவினேமாகிய யாம் சிறிதும் தெளியப் பெற்றிலேம் என்பார், 'யாம் அது தெரிதல் தேற்றும்' என்றார். அடுத்த செய்யுளில் 'நவையிலுள்ளத்து எண்ணியது அறிதல் தேற்றும்' என்றதும் இக்கருத்தினதே. (4)

**3646.** பெண்ணியற் றீப மன்ன
பேரெழி லாட்டி மாட்டு
நண்ணிய பிரிவு செய்த
நவையினு னவையி லுள்ளத்
தெண்ணிய தறித றேற்று
மிமைத்தில விராம னென்னும்
புண்ணியன் கண்ணும் வன்றோட்
டம்பிகண் போன்ற வன்றே.

பெண் இயல் தீபம் அன்ன பேர் எழிலாட்டிமாட்டு
நண்ணிய பிரிவு செய்த நவையினுல், நவை இல் உள்ளத்து
எண்ணியது அறிதல் தேற்றும்; இமைத்தில, இராமன் என்னும்
புண்ணியன் கண்ணும் வன்தோள் தம்பிகண் போன்ற அன்றே.

பொ:—பெண் தன்மையுடையதாய் ஒளிர்வதோர் சுடர் விளக்கினையொத்த பேரழகினையுடையளாய சீதைதிறத்தே அமைந்த

பிரிவுத் துயரினை யுண்டாக்கிய குற்றத்தினால் (இராமன் தனது) குற்றமற்ற தூய உள்ளத்தே எண்ணியது இதுவென்பதனைத் தெளிய அறிந்திலோம். இராமன் என்னும் அறவோன் கண்களும் வலியதோள்களையுடைய அவன் தம்பியாகிய இலக்குவன் கண்களை யொத்து இமைத்தலின்றி (விழித்து) இருந்தன.

கு :—இதுவும் கவிக்கூற்று. சீதை, தன்கண் அமைந்த கற்பாகிய சுடரால் பெண்குலத்தை விளக்கும் பேரெழில் விளக்காக விளங்குதல் பற்றிப் 'பெண்ணியற் றீபமன்ன பேரெழிலாட்டி' எனச் சிறப்பித்தார். சீதையின் பிரிவுத்துயரால் இராமன் கண்ணிமைப்பின்றி யிருந்த நிலையைப் புலப்படுத்தக் கருதிய ஆசிரியர், தமையன்பால் வைத்த எல்லையற்ற பேரன்பினால் என்றும் உறக்கமின்றியிருந்த இலக்குவன் கண்களை இராமன் கண்களுக்கு உவமையாகக் கூறினார். தமையன்பால் வைத்த பேரன்பினால் வில்லேந்திய கையினனாய் நின்று இரவு முழுதும் கண்ணிமைப்பின்றிக் காக்குந் தோள்வலி யுடைய தம்பி இலக்குவனாதலின் 'வன்தோள் தம்பி' எனச் சிறப்பித்தார். "வரிவில் ஏந்திக், காலைவாயளவுந் தம்பி இமைப்பிலன் காத்து நின்றான்" (கம்பர் - அயோத்தி - கங்கைப் - 43) எனவும், "அல்லை யாண்டமைந்த மேனி அழகனும் அவளுந்துஞ்ச, வில்லையூன்றிய கையோடும் வெய்துயிர்ப்போடும் வீரன்,......கங்குல், எல்லைகாண் பளவும் நின்றான் இமைப்பிலன் நயனம்" (கம்பர் - அயோத்தி - குகப் - 42) எனவும் வரும் பகுதிகள் இங்கு நினைக்கத்தக்கன. (5)

## வெண்மதி தோன்றுதல்

**3647.** வண்டுளர் கோதைச் சீதை
வாண்முகம் பொலிய வானிற்
கண்டனெ னென்று வீரற்
காண்டொரு காதல் காட்டத்
தண்டமிழ்த் தென்ற லென்னுங்
கோளராத் தவழுஞ் சாரல்
விண்டலம் விளக்குஞ் செவ்வி
வெண்மதி விரிந்த தன்றே.

'வண்டு உளர் கோதைச் சீதை வாள்முகம் பொலிய வானில் கண்டனென்' என்று வீரற்கு ஆண்டு ஒரு காதல் காட்டத் தண் தமிழ்த் தென்றல் என்னும் கோள் அராத் தவழும் சாரல், விண் தலம் விளக்கும் செவ்வி வெண்மதி விரிந்தது அன்றே.

பொ :—'வண்டுகள் தேனுண்டு முரலும் மலர்மாலையை அணிந்த சீதையின் ஒளிபொருந்திய முகம் விசும்பிடத்தே பொலிவுற்று விளங்குதலை (இப்பொழுது) கண்டேன்' என (விருப்புற்று நோக்கும்படி) இராமனுக்கு அவ்விடத்தே (சீதையின்பால் உள்ள) காதலுணர்வைத் தோற்றுவிக்கும் வண்ணம், வானிடத்தினை விளக்கும் வெள்ளிய முழுமதியானது, குளிர்ந்த இனிய தென்றல் எனக் கூறப்படும் கொல்லுந் தன்மைவாய்ந்த பாம்பு தவழும் மலைச்சாரலிடத்தே விரிந்து தோன்றியது.

கு :—சீதையின் முகத்தினை இனி என்று காண்பேன் என ஏக்கற்று வருந்தும் இராமனது உள்ளத்தே, வானில் தோன்றிய முழுமதியானது, சீதையின் முகப்பொலிவினை ஒருகணநேரந் தோற்றுவித்து அதனை நினைக்கத் தூண்டியதென்பார், "சீதை வாண்முகம் பொலிய வானிற் கண்டனென் என்று வீரற்கு ஆண்டு ஒரு காதல் காட்ட......வெண்மதி விரிந்தது" என்றார். தன்னியல்பில் தோன்றிய மதியினை இராமனுள்ளத்தே சீதையின்பாலுள்ள காதலுணர்வைத் தூண்டவேண்டித் தோன்றியதாகக் குறித்தது தற்குறிப்பேற்ற அணியின்பாற்படும். காட்டுதல் என்ற சொல், ஒன்றனை வேறொன்றாகக் கருதும்படி புலப்படுத்துதல் என்ற பொருளில் இங்கு வழங்கப் பெற்றது. வெண்மதி விண்ணிடம் முழுவதும் விரிந்து பரவிய நிலவொளியைத் தந்ததாயினும், அது மண்ணிடத்தே வாழும் இராமனது மனத்திலே மையலாகிய இருளை விளைத்ததன்றி ஒளியினைத்தரும் செவ்வியுடையதாகத் தோன்றவில்லை என்பதனைக் குறிப்பாற் புலப்படுத்துவார், 'விண்தலம் விளக்குஞ் செவ்விவெண்மதி' என்றார். தண் தமிழ்த்தென்றல்—குளிர்ச்சியும் இனிமையும் வாய்ந்த தென்றற் காற்று. 'தமிழ்தழீஇய சாயலவர்' (சீவக - 2026) என்றாற்போன்று தமிழ் என்பது இனிமை என்ற பொருளில் இங்கு ஆளப்பெற்றது. இனி, தமிழ் வளர்த்த அகத்திய முனிவர் வாழும் பொதியமலையிற் பிறந்து தமிழின் இனிமையொடு கலந்து வருதல் கருதித் 'தமிழ்த் தென்றல்' எனச் சிறப்பிக்கப் பெற்றதெனினும் பொருந்தும். குளிர்ச்சியும் இனிமையும் வாய்ந்த அத் தென்றல்தானும் பிரிவுத்துயரால் வருந்தும் இராமனுக்கு இன்பந்தரும் மென்காற்றாய்த் தோன்றி உடம்புக்கும் உள்ளத்திற்கும் இன்பஞ்செய்யாமல், உயிர்கவரும் கொடிய பாம்பாக அம் மலைச்சாரலிடத்தே ஊர்ந்து வருகின்றது என்பார், 'தண்தமிழ்த் தென்றலென்னுங் கோளராத் தவழுஞ்சாரல்' என்றார். தென்றல் என்னும் உண்மையை மறுத்து அம் மென்காற்றினைப் பாம்பெனக் குறித்தமையால் இஃது அவநுதி என்னும் அணி. 'என்னும்' என்ற சொல்லை 'ஆகிய' என்னும் பண்புருபாகக் கொண்டு, தென்றல் என்னும் அரா (தென்றலாகிய பாம்பு) என உருவக அணியமையக் கூறினர் என்றலும் பொருந்தும். உளர்தல்-சுழன்று ஒலித்தல்; கோதுதலும் ஆம். வான் - ஒளி. (6)

நிலவு இராமனை வருத்துதல்

3648. களியுடை யனங்கக் கள்வன்
கரந்துறை கங்குற் காலம்
வெளிபடுத் துலக மெங்கும்
விளக்கிய நிலவின் வெள்ளம்
நளியிருட் பிழம்பென் றீண்டு
நஞ்சொடு கலந்த நாகத்
துளையெயிற் றூற லூற்ற
தாமெனச் சுட்ட தன்றே.

களியுடை அனங்கக் கள்வன் கரந்து உறை கங்குற்காலம் வெளிபடுத்து, உலகம் எங்கும் விளக்கிய நிலவின் வெள்ளம், நளி இருட்பிழம்பு என்று, ஈண்டு, நஞ்சொடு கலந்த நாகத் துளை ஏயிற்று ஊறல் உற்றதாம் எனச் சுட்டது அன்றே.

பொ :—மனச்செருக்கினையுடைய மன்மதனாகிய கள்வன் மறைந்து உறைந்து தீமை செய்தற்கு ஏற்ற கங்குற்பொழுதிலே (பொருள்களை) வெளிப்படச் செய்து உலகமுழுவதும் தன் ஒளியால் விளக்கமுறச் செய்த நிலவின் பெருக்கம், செறிந்த இருளின் திரட்சியென்று சொல்லப்பெற்று மேலோங்கிய நஞ்சொடு பொருந்திய பாம்பினது துளையுடைய எயிற்றிலிருந்து ஊறிப்பெருகிய நச்சுநீர் என்னும்படி (இராமனைச்) சுட்டு வருத்தியது.

கு :—களி - மனக்களிப்பு. அனங்கன் - உருவமில்லாதவன்; மன்மதன். மக்களது உள்ளத்துணர்வைக் கரந்துநின்று கொள்ளை கொள்ளுதல் அவனது தொழிலாதலின் 'அனங்கக் கள்வன்' என்றும், அக் கள்வன் அச்சமின்றி யாண்டும் உலவித் தன் தொழிலை நிகழ்த்தற்கு வேண்டிய வன்மையினைத்தந்து அவனுக்கு உடந்தையாய் நின்று உதவுவது இரவுப் பொழுதாதலின், 'கள்வன் கரந்துறை கங்குற் காலம்' என்றும் கூறினர். கங்குற்பொழுதிற் காரிருளினையடுத்துத் தோன்றிய நிலவொளி, இருளாகிய கரும் பாம்பின் துளையுடைய எயிற்றில் ஊறிய நச்சுநீரையொத்து இராமனது மேனியிற் பொருந்திப் பெருந்துயர் விளைத்தது என்பார், 'நிலவின் வெள்ளம், நளியிருட்பிழம்பென்று ஈண்டும் நஞ்சொடு கலந்தநாகத், துளை எயிற்று ஊறல் உற்றதாம் எனச் சுட்டது' என்றார். நிலவின் வெள்ளம் சுட்டது என முடியும். அன்று, ஏ என்பன அசை. நளியிருட்பிழம்பென்று ஈண்டு நாகம், நஞ்சொடு கலந்த நாகம் என இயையும். நஞ்சினையுடைய இருளாகிய கரும் பாம்பு என்றபடி. இருளைக் கருநாகமாகவும் அவ்விருளொடு கலந்த

நிலவினை அதன் நஞ்சாகவும் வெளிப்பட உருவகஞ் செய்து அந் நஞ்சினைச் சுரக்கும் துளையுடைய எயிருகத் திகழ்வது வெண்மதி யென்பதனைக் குறிப்பாக உணரவைத்தமையால் இது குறிப்புருவ கத்தின்பாற்படும். (7)

## இராமன் சீதையை நினைந்து வருந்துதல் 3649-3665

3649. இடம்படு மானத் துன்ப
மிருடர வெண்ணிற் றீர்ந்தான்
விடம்பரந் தனைய தாய
வெண்ணிலா வெதுப்ப வீரன்
படம்பரந் தனைய வல்குற்
பால்பரந் தனைய வின்சொற்
றடம்பெருங் கண்ணி ணுடன்
றனிமையை நினைய லுற்ருன்.

இடம்படு மானத்துன்பம் இருள்தர எண்ணின் தீர்ந்தான்;
விடம் பரந்தனையது ஆய வெண்நிலா வெதுப்ப, வீரன்,
படம் பரந்தனைய அல்குல், பால்பரந்தனைய இன்சொல்,
தடம்பெரும் கண்ணினுள்தன் தனிமையை நினையலுற்ருன்.

பொ:—வீரருட் சிறந்தோனுகிய இராமன், தன்னிடத்து உண் டாகிய தாழ்வாகிய (அவமானமாகிய) துன்பத்தினை இருட்பொழு தானது மிகுதிப்படுத்த அதனுல் தன் உணர்வினையிழந்தான்; நஞ்சு பரவினுலொத்த வெள்ளிய நிலா தன்னை வெதுப்புதலால், பாம்பின் படம் விரிந்தாலொத்த அல்குலையும் பாலின் சுவை விரிந்து பரவினு லொத்த இனிய மொழியினையும் அகன்ற பெரிய கண்களையும் உடையவளாகிய சீதையின் தனிமைத் துன்பத்தினை யெண்ணி வருந்துவானுயினன்.

கு:—இடம்படு மானத் துன்பம் - (தன் வாழ்க்கைத் துணைவியை மாற்ருனெருவன் வஞ்சனையாற் கவர்ந்து செல்லவும் அவனைத் தொடர்ந்து பொருது புறங்கண்டு தன் மனைவியை மீட்காமையால்) தன்னிடத்து உண்டாகிய அவமானமாகிய துன்பம். இருள் - கங்குற் பொழுது. தருதல், ஈண்டு மிகுதிப்படுத்தல் என்னும் பொருளது. இரவுப்பொழுது வந்த அளவிலேயே தன் உணர்விழந்த நிலையின னுகிய இராமன், அதன் மேலும் வெண்ணிலாத் தோன்றித் தன்னை வெதுப்புதலால் ஆற்ருதவனுகித் தன்னைப் பிரிந்து வருந்தும் ஆருயிர்த் துணைவியாகிய சீதையின் தனிமை நிலையினையெண்ணி

அவலமுற்ருன் என்பதாம். வீரன், எண்ணிற்றீர்ந்தான்; நினைய லுற்ருன் என முடிக்க. தன் ஆருயிர்த்துணைவியாகிய சீதையின் தனிமைத்துயரை எண்ணி மாற்ருனை வென்று அவளை மீட்டுக் கொண்டு வருதலையே தனது முதற்கடமையாகக் கொண்டான் என்பார் 'வீரன்' என்ருர்.

"ஆரந் தாழ்திரு மார்பற் கமைந்ததோர்
தாரந் தானல ளேனுந் தயாவெனும்
ஈரந் தானகத் தில்லையென் ருலுந்தன்
வீரங் காத்தலை வேண்டென்று வேண்டுவாய்"
(சுந்தர - சூளா - 30)

என இராமனுக்கமைந்த இக் கடமையுணர்வினைப் பிராட்டி அநுமனிடம் நினைவுபடுத்துவதாக அமைந்த செய்யுள் இங்கு நினைக்கத்தக்க தாகும். (8)

3650. மடித்த வாயன் வயங்கு முயிர்ப்பினன்
☆ றுடித்து வீங்கி யொடுங்குறு தோளினன்
பொடித்த தண்டளிர்ப் பூவொடு மால்கரி
யொடித்த கொம்பனை யாடிறத் துன்னுவான்.

மடித்த வாயன், வயங்கும் உயிர்ப்பினன்;
துடித்து வீங்கி, ஒடுங்குறு தோளினன்,
பொடித்த தண் தளிர்ப் பூவொடு, மால்கரி
ஒடித்த கொம்பு அனையாள்திறத்து உன்னுவான்.

பொ :—(வெகுளியால்) வாயின் உதட்டினை மடித்தவனுய், (கையறவால்) வெளிப்பட்டு இயங்கும் பெருமூச்சினை யுடையவனுய், துடிப்புடையனவாகி மேலுயர்ந்து தடித்தும் ஒடுங்கியும் மாறுபடும் தோள்களையுடையவனுகிய இராமன், அரும்பிய குளிர்ந்த தளிரொடும் பூவொடும் மதச் செருக்குடையதோர் யானையால் ஒடித்துக் கொண்டு செல்லப் பெற்ற பூங்கொம்பினை யொப்பாளாகிய சீதை திறத்துப் பலவாறு நினைந்து வருந்துவாஞயினன்.

கு :—இராமன், தன்னை வஞ்சித்துச் சீதையைக் கவர்ந்து சென்ற மாற்ருனுகிய இராவணனது அடாச் செயலை யெண்ணி வெகுளியும், தன் இன்னுயிரனைய சீதையைப் பிரிந்தமையால் ஆற்ருமையும் மீதூரப் பெற்ற திறத்தினைப் புலப்படுத்தும் முறையில் இச்செய்யுள் அமைந்துள்ளது. வாயின் உதடுகளை மடித்தல், தோள் துடித்து வீங்குதல் என்பன வெகுளி பற்றிய மெய்ப்பாடுகள். பெருமூச்சும்

தோள்களின் வாட்டமும் செயலற்ற தன்மையாகிய ஆற்ருமையைப் புலப்படுத்துவன. அரும்பிய தளிர்களும் மலர்களும் உடையதாய்ப் பொலிவுறத் தழைத்து விளங்கும் பூங்கொம்பொன்று, அதன் பொலிவும் மென்மையும் உணராத மதயானையால் ஒடிக்கப்பட்டுச் சிதைந்தாற் போன்று, பொன்னுயிர்த்த பூமடந்தையாய் இராமனது இன்னுயிராய்த் திகழும் சீதை, காம மயக்கமுடைய கருநிறத்தரக்கனுகிய இராவணனுற் கவரப்பட்டு அவலமுற்றனள் என்பார், 'பொடித்த தண்டளிர்ப் பூவொடு மால்கரி, ஒடித்த கொம்பு அனையாள்' என்ருர். ஒடித்த என்னும் பெயரெச்சம், கொம்பு என்னும் செயப்படு பொருளாகிய பெயர் கொண்டு முடிந்தது. பூங்கொம்பு சீதைக்கும், அதன்கண் உள்ள தளிரும் பூவும் அவளது மேனியின் எழில் பெறும் அங்கங்களுக்கும், மால்கரி காமபரவசனுகிய இராவணனுக்கும் உவமை. பொடித்தல் - அரும்புதல். ஒடித்த பூங்கொம்பு அனையாள் எனவே அக்கொம்பினை உறுப்பாகக் கொண்ட முதற் பொருள் இராமன் என்பதூஉம், தன்னிற் பிரிப்பின்றி ஒன்ருயமைந்த பிராட்டியைப் பிரிந்தமையால் அவனுற்ற பெருந்துயர் சொல்லால் வெளியிட்டுரைக்குந் தரத்ததன்றென்பதூஉம் உணர்த்தியவாறு. (9)

**3651.** வாங்கு வில்லன் வரும்வரு மென்றிரு
பாங்கு நீணெறி பார்த்தன ளோவெனும்
வீங்கு வேலை விரிதிரை யாமென
வோங்கி யோங்கி யொடுங்கு முயிர்ப்பினன்.

"'வாங்கு வில்லன் வரும் வரும்' என்று இரு
பாங்கும் நீள்நெறி பார்த்தனளோ?" எனும்;
வீங்கு வேலை விரி திரை ஆம் என,
ஓங்கி ஓங்கி ஒடுங்கும் உயிர்ப்பினன்.

பொ :—கொந்தளித்துப் பொங்கும் கடலிடத்தே அடுத்தடுத்து விரிந்து பரவும் அலைகளை யொத்து மேன்மேற் பெருகித் தோன்றிப் பின் வர வர அடங்கியொடுங்கும் பெருமூச்சினையுடையவனுகிய இராமன், "(பகைவன் கையிலிருந்து மீட்டுக் காக்கும் பொருட்டு) வளைத்த வில்லைத் தாங்கியவனுகி என்னை நோக்கி வந்துவிடுவான் வந்து விடுவான் என்று எண்ணி(ச் சீதை தான் செல்லும்) நீண்ட வழியின் முன்னும் பின்னுமாகிய இருமருங்கும் என்னை எதிர்பார்த்துத் துடித்தனளோ" என்று சொல்லி வருந்துவான்.

கு :—'இராவணனுல் வலிந்து கவரப்பட்டுச் செல்லும் இடர்நிலையினளாகிய சீதை, தன்னைப் பகைவனிடமிருந்து மீட்கும் உறுதி

யுடன் இராவணனோடு போர் குறித்து வில்லை வளைத்து அம்பினைச் சொரியும் நிலையில் யான் நிச்சயமாக வந்து சேர்வேன் என நம்பித் தான் செல்லும் நீண்ட வழியின் இருமருங்கும் என்னை எதிர்பார்த்து, என்னைக் காணாமையாற் பெரிதும் அல்லலுற்றிருப்பாள். அந்தோ, இவ்விடர் நிலையில் அவளைக் காப்பாற்றும் கடமையினை யான் மேற்கொண்டிலேனே' என வருந்தினான் இராமன். 'சுருதி நாயகன் வரும் வரும் என்பதோர் துணிவாற், கருதி மாதிரம் அனைத்தையும் அளக்கின்ற கண்ணாள்' (சுந்தர - காட்சி 9) எனச் சீதையின் நிலை பின்னர்ப் பேசப் பெற்றிருத்தல் காணலாம். வரும் வரும் என்ற அடுக்கு, விரைவும் தேற்றமும் பற்றியது. நீலமேனி நெடியோனாகிய இராமன்பால் தோன்றி யொடுங்கும் நெட்டுயிர்ப்புக்குக் கருங்கடலில் தோன்றி யொடுங்கும் அலைகளை யுவமை கூறிய திறம் நினைக்கத் தக்கது. (10)

3652. என்னி னைந்தில ளென்பது சாலுமோ
மின்னி னைந்த வெயிற்றின் விலங்கனா
னின்னி லென்று நெருங்கிய போதவ
ளென்னி னைந்தன ளோவென வேங்குமால்

"என் நினைந்திலள் என்பது சாலுமோ
மின் இனைந்த எயிற்றின் விலங்கு அனான்,
'நில் நில்' என்று நெருங்கியபோது, அவள்
என் நினைந்தனளோ?" என ஏங்குமால்.

பொ :—"(இடர்நிலையினளாகிய சீதை) என்னை நினைந்திலள் என்று எண்ணுதல் பொருந்துமோ? மின்னலும் அஞ்சி வருந்தும் கோரப் பற்களையுடையதொரு விலங்கினை யொத்தவனாகிய இராவணன், 'நில் நில்' என்று அதட்டிக் கொண்டு தன்னை அணுகிய நிலையில் அவள் என்ன என்ன நினைந்தாளோ?" என இரங்கி வருந்தினான் (இராமன்).

கு :—சீதையின் அவல நிலையைக் குறித்து எண்ணிய இராமன், 'தன்னைக் காக்கும் கடமையினையுடைய என்னை அவள் நினைக்கவில்லை என்பது எவ்வாறு பொருந்தும்? அவள் என்னை நினைந்தே வருந்தியிருப்பாள் என்பது உறுதி. விலங்கனைய இராவணன் தன்னை நெருங்கிய பொழுது, யான் உரிய காலத்திற் சென்று அவளைக் காப்பாற்றாமையால் எனக்கு ஏதேனும் இடர் நேர்ந்திருக்குமோ என்று அஞ்சிக் கற்பின் செல்வியாகிய அவள் தன்னுயிர் துறக்கவும் நினைந்திருப்பாள் அல்லளோ? அவ்வாறு தன்னுயிரைத் துறப்பாளாயின்

அவளைப் பிரிந்து வருந்தும் என்னிலை யாதாகும்?' என்றெல்லாம் எண்ணி ஏங்கினன் என்பார், "நில் நில் என்று நெருங்கிய போதவள் என்னினைந்தனளோ என ஏங்கும்" என்றார். இராவணன் எத்தகைய பேராற்றலுடையனாயினும் பிறனொருவன் மனையாளை விரும்புதல் ஆண்மையாளர்க்கு அடாதது என்னும் பகுத்துணர்வு சிறிதுமின்றி இழிந்த காமமாகிய விலங்குணர்வே கொண்டு சீதையைக் கவர அணுகினனாதலின், 'மின் இனைந்த எயிற்றின் விலங்கனன்' என்றார். மின்னலை யொத்த கோரப் பற்களும் பத்துத் தலைகளும் உடையதொரு விலங்கு உளதாயின் அதனை இராவணனுக்கு உவமையாகக் கூறலாம் எனக் குறித்தவாறு. (11)

3653. நஞ்சு காலு நகைநெடு நாகத்தின்
வஞ்ச வாயின் மதியென மட்குவாள்
வெஞ்சி னஞ்செ யரக்கர்தம் வெம்மையை
யஞ்சி னன்கொலென் றையுறு மாலென்பான்.

" நஞ்சு காலும் நகை நெடு நாகத்தின்
வஞ்ச வாயின் மதி என மட்குவாள்,
'வெஞ்சினம் செய் அரக்கர்தம் வெம்மையை
அஞ்சினன் கொல்?' என்று ஐயுறுமால்" என்பான்.

பொ :—"நஞ்சினை யுமிழ்கின்ற (துளையமைந்த) பற்களையுடைய பாம்பினது கொடிய வாயின்கண் அகப்பட்ட திங்களைப் போன்று ஒளி மழுங்கிச் சோர்பவளாகிய சீதை, மிக்க சினத்தினால் (யாவரையும்) வருத்தும் இயல்பினராகிய அரக்கர்களது கொடுமையை நினைந்து (என் ஆருயிர்த் தலைவன்) அஞ்சி அகன்றானோ?' என (எனது வன்மையினைக் குறித்து) ஐயுற்று வருந்துவாளே" என்று கூறி யிரங்குவான் (இராமன்).

கு :—காலுதல் - உமிழ்தல்; கக்குதல். நகை - பல். நாகம் என்றது இராகு என்னும் பாம்பினை. மட்குதல் - ஒளி மழுங்கிக் குறைதல். இராகு என்னும் கரும்பாம்பின் வாய்ப்பட்ட மதி, கருநிறத்தரக்கனாகிய இராவணனாற் கவரப்பட்ட சீதைக்கு உவமை. "அரவுநுங்கு மதியிற் கணந்தோறும் உயிர்மெலியப் பெறுவாளாகிய சீதை, யான் உரிய காலத்தில் வந்து உதவாமையால் 'அரக்கரது கொடுமைக்கு அஞ்சினேன்' என்று என் வன்மையினைக் குறித்து ஐயுறுவாள் என இராமன் வருந்தினன் என்க. (12)

3654. பூண்ட மானமும் போக்கருங் காதலுந்
தூண்ட நின்றிடை தோமுறு மாருயிர்
மீண்டு மீண்டு வெதுப்ப வெதும்பினுன்
வேண்டு மோவெனக் கின்னமும் வில்லென்பான்.

பூண்ட மானமும், போக்க அருங் காதலும்
தூண்ட, நின்று, இடை தோம் உறும் ஆருயிர்,
மீண்டு மீண்டு வெதுப்ப, வெதும்பினுன் ;
" வேண்டுமோ எனக்கு இன்னமும் வில் ?'' என்பான்.

பொ :—அணிகலனுகப் பூணப்பெற்ற மானமும், நீக்குதற்கு அரிய காதலும் (உணர்விழந்த தன் மனத்தைத்) தூண்டி நிற்க, அவற்றினிடையே துன்புற்று வருந்தும் (தனது) அரிய உயிரை (முற்குறித்த மானமும் காதலும்) மீண்டும் மீண்டும் சுடுதலால் மனம் வெதும்பியவனுகி "(வீரனுக்குரிய கடமையினை நிறைவேற்ற இயலாத) " எனக்கு இவ்விற்படை இனியும் வேண்டுமோ ?" எனக் கூறி வருந்தினுன் (இராமன்).

கு :—பூண்ட மானம் - குடிப் பிறந்தாரால் இன்றியமையாத அணிகலனுகப் பூணப்பெற்ற மானம்; அஃதாவது எக்காலத்தும் தனக்குரிய உயர்நிலையிற் குறையாமையும் ஊழ்வினை காரணமாகக் குறைவு நேர்ந்தால் தான் உயிர்வாழக் கருதாமையும் ஆகிய பெருமை. போக்க அருங்காதல் - தன் வாழ்க்கைத் துணைவிபாற் கொண்ட மாருத பேரன்பு. மானமும் காதலும் தூண்ட அவற்றினிடை நின்று துன்புறும் தனதுயிரை, அவை மீண்டும் மீண்டும் வெதுப்புதலால் இராமன் மனம் வெதும்பினுன். 'என் உயிரினுஞ் சிறந்ததாகிய மானத்தினையும் வாழ்க்கைத் துணைவிபாற் செலுத்தத் தகும் அன்பின் வழிப்பட்ட கடமையினையும் நிலைநிறுத்தும் ஆற்றலில்லாத யான். மானமுடைய வீரர்களே தாங்குதற்குரிய தகுதி வாய்ந்த இவ்வில்லைத் தாங்குதல் என்ன பயன் கருதி' எனத் தன்னைத் தானே நொந்து கொள்ளும் நிலையில் 'எனக்கு இன்னமும் வில் வேண்டுமோ ?' எனக் கூறி இராமன் வருந்தினுன் என்க. இறந்த சடாயுவை நோக்கி "உன்னைப் படையுடையான் கொன்றகல, வில்லுடையேன் நின்றேன் விறலுடையேனல்லேனே" என இராமன் புலம்பினமையும் இங்கு நினைக்கத் தகுவதாகும். (13)

3655. வில்லை நோக்கி நகுமிக வீங்குதோட்
கல்லை நோக்கி நகுங்கடைக் கால்வரு

சொல்லை நோக்கித் துணுக்கெனுந் தொன்மறை
யெல்லை நோக்கினர் யாவரு நோக்குவான்;

வில்லை நோக்கி நகும்; மிக வீங்கு தோட்
கல்லை நோக்கி நகும்; கடைக்கால் வரு
சொல்லை நோக்கித் துணுக்கெனும்; தொல்மறை
எல்லை நோக்கினர் யாவரும் நோக்குவான்.

பொ :—பழமறைகளின் முடிவாகிய வேதாந்தப் பொருளை இடைவிடாது சிந்தித்துக் காண்பாராகிய முனிவர்கள் யாவராலும் தியானிக்கப்பெறும் தனிமுதல்வனாகிய இராமன், தன் கையிலுள்ள வில்லினைப் பார்த்து நகுவான்; (அதனைத் தாங்கி) மிகவுயர்ந்து திரட்சியுற்று விளங்கும் தோளாகிய திரண்ட கல்லினை (மலையினை)ப் பார்த்து நகுவான்; முடிவில் தனக்கு வரக் கூடிய பழிச் சொல்லை எண்ணிப் பார்த்து மனந் துணுக்கமுறுவான்.

கு :—நகுதல் - சிரித்தல். இராமன்பால் தோன்றிய சிரிப்பு, தன்கண் தோன்றிய இகழ்ச்சி பற்றிய நகையென்னும் மெய்ப்பாடாகும். பகைவனை வெல்லுதற்குரிய படைக் கருவியாகப் பயன்படாமல் வீணே சுமக்கப்படுதல் பற்றி வில்லினை நோக்கி நக்கனன். வில்லைத் தாங்கி மிகவுயர்ந்து திரண்டு மலைபோற் காணப்பட்டாலும் பகைவன்மேல் அம்புகளைச் சொரிதலாகிய தொழில் புரியாது வெறுங் கல்லைப் போன்று உணர்ச்சியற்றிருந்தன எனத் தன் தோள்களை இகழ்ந்தனன் என்பார், 'வீங்குதோட் கல்லை நோக்கி நகும்' என்றார். இங்கு நோக்குதல் என்றது கண்ணால் நோக்குதலை; இதனை நோக்கிய நோக்கம் என்பர். இங்ஙனம் தான் ஏந்திய விற்படையும் தன் தோள்களும் மாற்றானை யழித்தற்குச் சிறிதும் பயன்படாமையால் முடிவில் தனக்குப் பழிச்சொல் வந்துவிடுமோ என மனம் நடுக்கமுற்று அப்பழிச் சொல்லை நினைந்து வருந்தினன் என்பார், 'கடைக்கால் வரு சொல்லை நோக்கித் துணுக்கெனும்' என்றார். ஈண்டு நோக்குதல் என்றது, மனத்தாற் கருதிப் பார்த்தலை. இதனை 'நோக்கல் நோக்கம்' என்பர். இவ்வாறு தன் வில்லையும் தோள்களையும் கண்ணால் இகழ்ந்து நோக்கி நகைத்து முடிவில் தனக்கு உளதாய்வரும் பழிச்சொல்லை எண்ணி மனந் திடுக்குற்றவன், நம்மைப் போன்று வினைவயத்தாற் பிறந்து இறந்து அல்லற்பட்டுழலும் மகனல்லன்; மறைமுடி வுணர்ந்த முனிவர் பெருமக்களால் தமக்குச் சிறந்தானாகக் கருதித் தியானிக்கப்பெறும் முழுமுதற்கடவுளே எனவும், அருளாளனாகிய அவனே அறந்தலை நிறுத்தி உலகுயிர்களை இடர்துடைத்து உய்விக்க வேண்டி இங்ஙனம் இராமனாய்ப் பிறந்து தனது எளிமைத்திறமாகிய பெருங்குணத்தால்

நல்லோர் பொருட்டு அல்லலுழந்தான் எனவும் புலப்படுத்துவார், 'தொன்மறை எல்லே நோக்கினர் யாவரும் நோக்குவான்' என்றார். இத்தொடரில் நோக்குதல் என்றது, தம் உயிரினுஞ் சிறந்த முழு முதற்பொருளாகக் கருதிப் போற்றுதலே. சரபங்கர் என்ற முனிவர் இராமனைக் கண்ணாரக்கண்டு போற்றிப் பிறப்பு நீங்கி வீடு பெற்று உய்ந்த செய்தி இங்கு நினைவுகூர்தற்குரியதாகும்.' (14)

3656. கூதிர் வாடைவெங் கூற்றினை நோக்கினன்
வேத வேள்வி விதிமுறை மேவிய
சீதை யென்வயிற் றீர்ந்தன ளோவெனும்
போத கம்மெனப் பொம்மெ னுயிர்ப்பினன்

கூதிர் வாடை வெங்கூற்றினை நோக்கினன்,
"வேத வேள்வி விதிமுறை மேவிய
சீதை, என்வயின் தீர்ந்தனளோ?" எனும்;
போதகம் எனப் பொம் என் உயிர்ப்பினன்.

பொ:—இளைய யானைக் கன்றினைப் போன்று நெட்டுயிர்ப்புடைய இராமன், கூதிர்க் காலத்து வாடைக்காற்றாகிய கூற்றினைக் கண்டு அஞ்சினான்; 'வேதநெறிப்படி வளர்த்த வேள்வித் தீமுன்னர் விதிமுறைப்படி என்னை மணந்த சீதை இப்பொழுது என்னிடத்தி னின்றும் நீங்கி விட்டாளோ' எனக் கூறி வருந்தினான்.

கு:—சீதையொடு கூடியிருந்த காலத்தெல்லாம் இராமனுக்கு இனிய நல்ல காற்றாகப் பயன்தந்த வாடைக்காற்று, அவளைப் பிரிந்த நிலையில் கொடிய கூற்றுவனாகத் தோன்றி அச்சத்தினை விளைத்தது என்பார், 'கூதிர் வாடைவெங் கூற்றினை நோக்கினன்' என்றார். தனித்தார் உயிரை யீர்தலின் வாடையினைக் கூற்றுவனாக உருவகஞ் செய்தார். "இன்றுபோல் என்றும் நின்னை அகலாது உடனிருப்பேன்" என அங்கியங் கடவுள் சான்றாக என்னாற் கைப் பிடிக்கப் பெற்ற சீதையைப் பிரிந்த இவ்விளிவரவே கூதிர்வாடையினைக் கூற்றெனக் கண்டு அஞ்சும் எளிமை நிலையினை எனக்கு உண்டாக்கிவிட்டது என இரங்குவான். 'வேதவேள்வி விதிமுறை மேவிய சீதை என்வயின் தீர்ந்தனளோ?' என்றான். போதகம் - யானைக்கன்று. 'நெடுமூக்கிற்கரி' (தேவாரம். 6-93-8) என்பவாகலின், யானையினது நெட்டுயிர்ப்பு இராமனது பெருமூச்சுக்கு உவமையாயிற்று. (15)

3657. நின்று பல்லுயிர் காத்தற்கு நேர்ந்தயா
னென் றுணைக்குல மங்கையொ ரேந்திழை
தன்று யர்க்குந் தகவிலெ னாயினே
னன்று நன்றென் வலியென நாணுமால்.

" நின்று பல்உயிர் காத்தற்கு நேர்ந்த யான்,
என் துணைக் குலமங்கை ஓர் ஏந்திழை
தன் துயர்க்கும் தகவு இலென் ஆயினேன்;
நன்று நன்று என் வலி!" என நாணுமால்.

பொ :—"(என் தந்தையின் ஆணையின்படி) அரசுரிமையை ஏற்று நின்று பல உயிர்களையும் (இடர்தீர்த்துப்) பாதுகாத்தற்கு இசைந்த யான், என் வாழ்க்கைத் துணையாக நல்ல குடியிற் பிறந்த நங்கையும் பொருந்திய அணிகலன்களை யுடையாளும் ஆகிய ஒரு பெண்ணினது துன்பத்தையும் துடைத்தற்கு வேண்டிய தகுதியில்லாதவனாயினேன்; எனது வன்மை மிகவும் நன்றாயிருந்தது" என நாணமடைவான் (இராமன்).

கு :—நிற்றல் - செங்கோன்மையாகிய நீதி நெறியில் வழுவாது நிலைத்து நிற்றல். உயர்திணையுயிராகிய மக்களையே யன்றி ஓரறிவுயிர் முதலிய அஃறிணையுயிர்களையும் துன்புறாது காத்தல் அரசனாகிய தனது கடமையாதலின், 'பல்லுயிர் காத்தற்கு நேர்ந்த யான்' என்றான். 'தானே அவளே' என்றவாறு என்னின் வேறாகாது 'இருதலைப்புள்ளின் ஓருயிர்' என என்னோடு ஒன்றானவள் என்பான், 'என்துணைக் குலமங்கை' என்றும், தனக்கு நேர்ந்த இன்னலைத் தானே போக்கவல்ல உடல்வன்மை பெறாத ஓர் எளிய பெண் என்பான், 'ஓர் ஏந்திழை' என்றும், 'பல்லுயிர்களையும் பாதுகாக்கும் கடமை பூண்ட வேந்தனாகிய யான், என் மனைவியாகிய ஒருத்தியின் துன்பத்தையும் துடைத்தற்குரிய ஆற்றலின்றி எளிமையுற்று இரங்குகின்றேன்' என்பான், 'ஓர் ஏந்திழை தன் துயர்க்குந் தகவிலென் ஆயினேன்' என்றும் வருந்தினான் இராமன். 'துயர்க்கும் தகவிலென்' என்ற தொடர், பிணிக்கு மருந்து என்றாற்போன்று, 'துயரையும் நீக்குதற்குரிய தகவு இல்லாதேன்' எனப் பொருள் தந்து நின்றது. தகவு - தகுதி; இங்குத் துயரை நீக்குதற்குரிய ஆற்றல் என்ற பொருளில் வழங்கப் பெற்றது. இனி, 'நின்று பல்லுயிர் காத்தற்கு நேர்ந்த யான்' என்பதற்குத் 'தண்டக வனத்து முனிவர் வேண்டிய வண்ணம், இரக்கமென் றொருபொருள் இலாத நெஞ்சினராகிய அரக்கரைப் பொருதழிக்கும் தொழிலில் நிலைத்து நின்று, அறத்தின் வழியொழுகும் பல நல்லுயிர்களையும் பாதுகாக்குங் கடமையினை மேற்கொண்ட யான்' எனப் பொருளுரைத்தலும் உண்டு. இராமன்

முனிவர் வேண்டுகோளின்படி அறத்தின் வழிப்பட்ட நல்லுயிர்களைக் காத்தற்கு நேர்ந்தமை, 'சூரறுத்தவ னுஞ்சுடர் நேமியும், ஊரறுத்த வொருவனும் ஓம்பினும், ஆரறத்தினே டன்றிநின் ருரவர், வேரறுப்பென் வெருவன்மின் நீரென்ருன்' (கம்பர் - ஆரணிய, அகத்தியப் படலம் 2.) எனவரும் செய்யுளால் இனிது விளங்கும். (16)

3658. சாயுந் தம்பி திருத்திய தண்டளிர்
தீயு மங்கவை தீய்தலுஞ் செவ்விருந்
தாயு மாவி புழுங்க வழுங்குமால்
வாயு நெஞ்சும் புலர மயங்குவான்.

சாயும்; தம்பி திருத்திய தண்தளிர்
தீயும்; அங்கு அவை தீய்தலும், செவ்இருந்து
ஆயும்; ஆவி புழுங்க அழுங்குமால்;
வாயும் நெஞ்சும் புலர மயங்குவான்.

பொ:—வாயும் நெஞ்சும் வெப்பத்தால் பசையற்று உலரும்படி மயங்கி வருந்துவாளுகிய இராமன், சோர்வுற்றுப் படுக்கையிற் சாய்வான்; (அந்நிலையில்) தம்பியாகிய இலக்குவனல் திருத்தமுற அமைக்கப்பெற்ற அத் தளிர்ப்படுக்கை (அவனது மேனி வெப்பத்தால்) தீய்ந்து கருகும். அவை தீய்ந்து கரியவே (படுக்கையை விட்டெழுந்து) செவ்வனே அமர்ந்திருந்து சிந்தித்து ஆராய்வான்; இவ்வாறு (பிரிவுத்துயராற்) புழுங்கிச் சோர்ந்து வருந்துவானுயினன்.

கு:—சீதையின் பிரிவினுற் கலக்கமுற்ற இராமன், நாவிற் சொல்லெழாத நிலையில் வாய் புலர்ந்தும் சிந்திக்க முடியாத நிலையில் நெஞ்சு புலர்ந்தும் வருந்தி மயக்கமுற்ருன் என்பார், 'வாயும் நெஞ்சும் புலர மயங்குவான்' என்ருர். சாய்தல் - சோர்ந்துபடுத்தல். 'தம்பி திருத்திய தண்டளிர்' என்றது, தம்பியாகிய இலக்குவன் தமையனுக்கு நேர்ந்த வெப்பத்தைத் தணித்தற் பொருட்டுத் திருத்தமுற அமைத்த தளிர்ப்படுக்கையினை. குளிர்ச்சியைத்தரும் அத்தளிர்களும் உடல் வெப்பத்தால் தீய்ந்து கருகிய நிலையில் இராமன் படுக்கையை விட்டெழுந்து அமர்ந்து சிந்தனையில் ஆழ்ந்திருந்தனன் என்பார், 'செவ் இருந்து ஆயும்' என்ருர். செவ்விருத்தல் - சாயாது நேரே (1) நிமிர்ந்து அமர்ந்திருத்தல். ஆல் - அசை.

3659. பிரிந்த வேதுகொல் பேரபி மானங்கொ
றெரிந்த தில்லை திருமலர்க் கண்ணிமை
பொருந்த வாயிரங் கற்பங்கள் போக்குவா
னிருந்து கண்டிலன் கங்குலி னீறரோ.

பிரிந்த ஏதுகொல்? பேர் அபிமானம் கொல்?
தெரிந்தது இல்லை; திருமலர்க்கண் இமை
பொருந்த, ஆயிரம் கற்பங்கள் போக்குவான்,
இருந்து கண்டிலன் கங்குலின் ஈறுஅரோ.

பொ :—அழகிய செந்தாமரை மலர்போலும் கண்களின் இமைகள் பொருந்தி மூடும் இமைப்பளவிலேயே ஆயிரம் பிரமகற்பங்களைக் கழிக்கும் இயல்பினனாகிய இராமன், விழித்திருந்தே இரவுப்பொழுதின் முடிவினைக் காணமாட்டாதவனாயினான். (அவன் அங்ஙனம் காணாமைக்குரிய காரணம்) சீதையைப் பிரிந்தமையால் தன்னிடத்துண்டாகிய துயரமோ? அன்றி அவள்பால் தான்கொண்ட பேரன்போ? ஒன்றும் தெரிந்ததில்லை.

கு :—இது கவிக்கூற்று. ஆயிரம் என்ற எண் ஈண்டுப் பல என்னும் பொருளில் வழங்கப்பெற்றது. கற்பம் - ஊழிக்காலம். பல்லூழிக்காலங்கள் ஓர் இமைப்பொழுதிலே கழியும்படி அலைகடல்மிசை அறிதுயில் கொள்ளும் திருமாலாகிய இராமன், தன்னைவிட்டு என்றும் பிரியாதவளாகிய சீதையைப் பிரிந்தமையால் தனக்கு உளதாகிய துயரத்தாலும், 'அகலகில்லேன் இறையும்' என்று தன்னைத் தொடர்ந்து வந்த சீதையின்பால் தான்கொண்ட பேரன்பினாலும் கங்குற்பொழுதில் ஒரு கணமே பல்லூழிகளாகத் தோன்ற ஆற்றாது வருந்தினான் என்பதாம். இமைப்பளவிலேயே எண்ணிலாக் கற்பங்களைக் கழிக்க வல்லவன், ஒரு நாளின் ஒரு பாதியாகிய கங்குற்பொழுதின் எல்லையைக் கண்ணிமையாது விழித்திருந்துங் காணமாட்டாதவனாயினான் என அவனது தெய்வத்திறமாகிய அருமையும், அவன் கொண்ட அவதாரத்திறமாகிய எளிமையும், ஒருங்கு உணர்த்தியவாறு. இனி, 'திருமலர்க்கண் இமை பொருந்த ஆயிரங் கற்பங்கள் போக்குவான்' என்ற தொடர்க்கு 'சீதையின் பிரிவாற்றாமையினால் ஓர் இமைப்பொழுதே ஆயிரங் கற்பங்கள் போன்று நீண்டு தோன்றும்படி வருந்திப் பொழுதுபோக்கும் நிலையினனாகிய இராமன்' எனப் பொருள் கொள்ளுதலும் உண்டு. பிரிந்த ஏது - பிரிந்தமையால் உளதாகிய துயரமாகிய காரணம். ஏது - காரணம். அபிமானம் - அன்பு. இவற்றுள் உண்மையான காரணம் இதுவென விளங்கவில்லை என்பார் 'தெரிந்ததில்லை' என்றார். அரோ - அசை. (18)

3660. வென்றி வேற்கை யிளவலை மேலெலா
மொன்று போல வுலப்பில நாள்கடாம்
நின்று காண்டியன் றேநெடுங் கங்குரு
னின்று நீள்வதற் கேதுவெ னென்னுமால்.

"வென்றி வேற்கை இளவலை! மேல்எலாம்
ஒன்றுபோல உலப்பு இல நாள்கள்தாம்
நின்று காண்டி அன்றே? நெடுங் கங்குல்தான்,
இன்று நீள்வதற்கு ஏது என்?" என்னுமால்.

பொ :—"வெற்றி விளக்கும் வேற்படையைத் தாங்கிய கையினை யுடைய தம்பியே! முன்சென்ற நாட்களையெல்லாம் ஒரே அளவினை யுடையனவாக நீ கண்விழித்து நின்று கண்டிருக்கின்றாய் அல்லையோ? நெடுமையுடையதாய்த் தோன்றும் இரவுப்பொழுது இன்றுமட்டும் தனக்குரிய எல்லையைக் கடந்து நீள்வதற்குரிய காரணம் யாதோ?" என (இராமன் இலக்குவனை நோக்கி) வினவினான்.

கு :—இளவலை - இளவல்; அண்மை விளி. ஐ - இடைச்சொல். 'கயிலைநன் மலையிறை மகனைநின் மதிநுதல், மயிலியன் மடவரன் மலையர்தம் மகளார், செயலைய மலர்புரை திருவடி தொழுதேம்' (சிலப் - குன்றக்குரவை - 15) என வரும் பகுதிக்கு 'மகனை; ஐ: இடைச்சொல்' என அரும்பதவுரையாசிரியர் எழுதிய குறிப்பு 'இள வலை' எனவரும் இதற்கும் ஏற்புடையதாகும். இனி, இளவலை என்புழி ஐகாரத்தை வேற்றுமையுருபாகக் கொண்டு, நோக்கி என ஒரு சொல் வருவித்து முடித்தலும் உண்டு. மேல் எலாம் - முன் கழிந்த நாட்களெல்லாம். ஒன்றுபோல - ஒரே அளவினவாக. காண்டி அன்றே - கண்டுள்ளாய் அல்லையோ? நெடுங்கங்குல் என்றது, காதலர்ப் பிரிந்தார்க்குப் பகற்பொழுதினும் வருத்தமிகுதியால் நீண்டு தோன்றும் கங்குற்பொழுது-என அதன் இயல்புணர நின்றது. 'இன்று' என்பது, என்னுயிரினுஞ் சிறந்தாளாகிய சீதையைப் பிரிந்து வருந்தும் அல்லல் நாளாகிய இன்று என்னுங் குறிப்பினைத் தந்தது. 'சீதையைப் பிரியாத முன்னெல்லாம் விழித்திருந்து கங்குலின் அளவினை யான் உள்ளவாறு அளந்து கண்டேனல்லேன். நீயோ எனக்குத் துணையாக வனம்புக்க நாள்முதல் கண்ணிமைப் பின்றி இரவுப்பொழுதின் அளவினை என்றும் உள்ளவாறு அளந்து கண்டிருக்கின்றாய். சீதை என்னைவிட்டுப் பிரிந்த நிலையில் வந்த இவ்விரவுப்பொழுது மட்டும் தனக்குரிய அளவினைக் கடந்து நீளுதற்குரிய காரணத்தை நீ அறிந்தனையோ' எனத் தனது ஆற்றாமை தோன்ற இலக்குவனை நோக்கி இராமன் வினவினான். (19)

3661. நீண்ட மாலை மதியினை நித்தமும்
மீண்டு மீண்டு மெலிந்தனை வெள்குவாய்
பூண்ட பூணவள் வாண்முகம் போதலா
லீண்டு சால விளங்கினை யென்னுமால்.

நீண்ட மாலை மதியினை, " நித்தமும்
மீண்டு மீண்டு மெலிந்தனை வெள்குவாய்;
பூண்ட பூணவள் வாள்முகம் போதலால்,
ஈண்டு சால விளங்கினை " என்னுமால்.

பொ :—நெடிய மாலைப்பொழுதில் விளங்கும் மதியினை நோக்கி, "(முன்பெல்லாம் சீதையது முகவொளியின்முன் நிற்கலாற்ருது) நாள்தோறும் மீட்டும் மீட்டும் குறைந்து மெலிவுற்றனையாகி ஒளி யிழந்து நாணுவாய். பூணப்பெற்ற அணிகலங்களையுடையவளாகிய சீதையின் ஒளியுடைய முகம் இவ்விடத்தைவிட்டு நீங்கினமையால், இப்பொழுது மிகவும் விளக்கமுற்றுத் திகழ்கின்ருய்" என்று கூறி வருந்திஞன் (இராமன்).

கு :—மதி - நிறைமதி. நோக்கி என ஒரு சொல் வருவித்துரை கப்பட்டது. மீண்டு மீண்டு - மீள மீள. மெலிதல் - தேய்ந்து குறை தல். வெள்குதல் - நாணத்தால் நிறம் விளர்த்தல். வாள் - ஒளி. ஈண்டு - அவள் இல்லாத இவ்விடத்து, இப்பொழுது. சால விளங் கினை - (முன்னில்லாத அளவு) மிகவும் ஒளியுடன் விள்ங்குகின்ருய். (20)

3662. நீணி லாவி னிசைநிறை தன்குலத்
தாணி யாய பழிவர வன்னது
நாணி நாடு கடந்தன ஞங்கொலோ
சேணு லாந்தனித் தேரவ னென்னுமால்.

" நீள் நிலாவின் இசைநிறை தன்குலத்து
ஆணி ஆய பழி வர, அன்னது
நாணி, நாடு கடந்தனனும் கொலோ,
சேண் உலாம் தனித் தேரவன் ?" என்னுமால்.

பொ :—"வானிடத்தே உலாவும் ஒப்பற்ற தேரையுடையவனுகிய சூரியன், நெடிதாய்ச் சென்று எங்கும் பரவிய நிலாவினையொத்துப் புகழ் நிறைந்த தன் குலத்தின் கண்ணே வன்மைமிக்க பெரும் பழி

யொன்று வந்து சேர்தலால், அப்பழிக்கு நாணி(த் தனக்குரிய வான வீதியாகிய) நாட்டைவிட்டு நீங்கி வேறெங்கேனும் ஓடிப் போயி ஞனோ" எனக் கூறி வருந்தினன் (இராமன்).

கு :—மனைவியை மாற்ருன் கவர்ந்து சென்றதனுல் தனக்கும் தன் குலத்துக்கும் நேர்ந்த பழியினையெண்ணி வருந்தும் இராமன், இரவுப்பொழுதே நீண்டு மிக, ஞாயிறு தோன்ருமையையெண்ணி வருந்துகின்றவன், தனக்கு நேர்ந்த பழி தன் குலத்திற்கு வந்த பெரும் பழியாதலைக் கண்டு தன் குல முதல்வனுகிய கதிரவன் நாணி நாடு கடந்தனனோ எனக் கூறிப் புலம்பினன் என்க. என்றும் போன்று தன்னியல்பில் மறைந்த கதிரவன் இரவுப்பொழுது முடியும் வரை மீண்டும் தோன்ருத நிலையில் அவன் தோன்ருமைக்கு வேருெரு காரணங் கற்பித்துக் கூறினமையின், இது தற்குறிப்பேற்ற அணி. நீண்டு பரவிய நிலா, இந் நிலவெல்லை முழுதும் பரவிப் புத்தேளுலகளவும் நீண்டு செல்லும் புகழுக்கு உவமை. 'நீணிலாவின் இசை நிறை தன் குலம்' என்றது நிலாவினை வழங்கும் திங்களுக்கும் ஒளி வழங்குதல் கதிரவனுகிய தன் குல முதல்வனதியல்பு என்பதனைக் குறிப்பாற் புலப்படுத்தி நின்றமை காணலாம். ஆணியாயபழி - வலியபழி; தீராப்பழி. நாடுகடத்தல் - தன் குடிக்கு நேர்ந்த அவமானம் பொருது தான் வாழ்ந்த நாட்டைத் துறந்து தன் நாட்டுமக்களது கண்காணுத் தேயத்திற் சென்று புகுதல். கதிரவன் நெடுந்தூரத்திற் சென்றுலவும் விரைந்த செலவினையுடைய தேரைப் பெற்றவனுதலால் இந்நாட்டினை விட்டுக் கடந்து செல்லுதல் அவனுக்கு மிகவும் எளிதாயிற்றுப் போலும் என்பது குறிப்பு. (21)

3663. சுட்ட கங்கு னெடிதெனச் சோர்கின்ருன்
முட்ட மைந்த நெடுமுடக் கோனெடு
கட்டி வாளரக் கன்கதி ரோனையும்
இட்ட னன்கொ லிருஞ்சிறை யென்னுமால்.

"சுட்ட கங்குல் நெடிது" எனச் சோர்கின்ருன்,
"முட்டு அமைந்த நெடு முடக்கோனெடு
கட்டி, வாள் அரக்கன், கதிரோனையும்
இட்டனன்கொல் இரும்சிறை?" என்னுமால்.

பொ :—"வெம்மையுடையதாய் வருத்தி இரவுப்பொழுது எல்லை கடந்து நீளுகின்றதே" என எண்ணி உள்ளம் சோர்கின்ருனுகிய இராமன், "வாட்படையையுடைய அரக்கனுகிய இராவணன், தடை யுற்ற முதிய முடவனுகிய அருணன் என்னும் தேர்ப்பாகனேடு (என்

குலமுதல்வனாகிய) சூரியனையும் பிணித்து வலிய சிறையில் அடைத்து விட்டானோ?" என இரங்கினன்.

கு:—கங்குற்பொழுதில் துயரத்தாற் சோர்வுறும் இராமன், இரவின் எல்லை கடந்தும் கதிரவன் உரிய காலத்தில் தோன்றாது போயினன் என வருந்தி, 'இராவணன், என் குலமுதல்வனாகிய கதிரோனையும் வெகுண்டு அருணன் என்னுந் தேர்ப்பாகனோடு பிணித்துச் சிறையில் அடைத்துவிட்டானோ?' எனக்கூறி அவலமுற்றான் என்க. இதுவும் தற்குறிப்பேற்ற அணி. முட்டு - தடை. நெடுமை, ஈண்டு, முதுமை குறித்தது. சூரியனுடைய தேர்ப்பாகனாகிய அருணன் என்பான், தொடைக்குக்கீழ்க் காலுறுப்பில்லாதவனாதலின் 'முடக்கோன்' எனப்பட்டான். வாளரக்கன் முடக்கோனொடு கதிரோனையும்கட்டி இருஞ்சிறை இட்டனன் கொல்' என இயைத்துரைக்க. 'கொல்' என்னும் இடைச்சொல் ஐயப்பொருளில் வந்தது. 'உயிர் போல்வாளாகிய சீதையைக் கவர்ந்து சென்றதேயன்றி, என் குலமுதல்வனாகிய கதிரோனையும் தேர்ப்பாகனொடு கட்டிச் சிறையிட்டனனோ?' என இராமன் இரங்கினனாதலின், 'கதிரோனையும்' என்புழி உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மையாகும். (22)

3664. துடியி னேரிடை தோன்றல ளாமெனிற்
கடிய காரிருட் கங்குலின் கற்பம்போய்
முடியு மாகின் முடியுமிம் மூரிநீர்
நெடிய மாநில மென்ன நினைக்குமால்.

" துடியின் நேர் இடை தோன்றலளாம் எனின்,
கடிய கார் இருள் கங்குலின் கற்பம் போய்
முடியும்; ஆகின், முடியும் இம் மூரி நீர்
நெடிய மாநிலம்" என்ன நினைக்குமால்.

பொ:—"உடுக்கையினையொத்த இடையினையுடையாளாகிய சீதை தோன்றா தொழிவாளாயின், மிக்க கரிய இருளையுடைய இரவுப் பொழுதாகிய ஊழியே நீண்டு முடியும். அங்ஙனம் (கங்குற்பொழுது ஊழியாக) நீளுமானல், வலிய கடல்நீராற் சூழப்பெற்ற நீண்ட இப் பெரிய வுலகமானது (இக்கங்குலாகிய கற்பத்திலேயேபட்டு) அழியும்" என நினைந்து வருந்தினன் (இராமன்).

கு:—துடியின் நேர் இடை - துடியினை ஒக்கும் இடையினையுடையாள்; அன்மொழித் தொகை. போய் முடியும் - நீண்டு முடியும். போதல் - நீளுதல். சீதையைப் பிரிந்தமையால் ஒருகணமே ஒருழி

என்னும்படி இரவுப்பொழுது நீண்டு வருத்துதலால் ஆற்றுதவனுகிய இராமன், 'சீதை என்பால் தோன்ருதொழிவாளாயின், இக் கங்குற் பொழுது கற்பமாக நீளுதல் உறுதி. அவ்வாறு நீளின் இவ்வுலகமும் கங்குலாகிய இவ்வூழியிலேயே அழிந்துபடும்' என நினைந்து வருந்தினுன் என அவனது வருத்த மிகுதியைப் புலப்படுத்தினர் ஆசிரியர். கங்குல் நீட்சியால் தான் உற்ற துன்பம் உலகத்தார் எல்லாரையும் பற்றியதாகத் தனக்குத் தோற்றுதலால் 'இம் மூரிநீர் நெடிய மா நிலம் முடியும்' என்ருன் இராமன்.

'பையுள் நோய்கூரப் பகல்செய்வான் போய்வீழ, வையமோ கண்புதைப்ப வந்தாய் மருண்மாலை, மாலைநீ யாயின் மணந்தார் அவராயின், ஞாலமோ நல்கூர்ந்தது வாழி மாலை' (சிலப் - கானல் வரி) என, மாலைப்பொழுது கண்டு ஆற்ருதவளாகிய தலைவி வருந்துவதாக அமைந்த பாடல் இங்கு ஒப்புநோக்கத்தக்கதாகும். (23)

**3665.** திறத்தி னுதன செய்தவத் தோருற
ஒறுத்து ஞாலத் துயிர்தமை யுண்டுழல்
மறத்தி னுர்கள் வலிந்தனர் வாழ்வரே
லறத்தி னுலினி யாவதெ னென்னுமால்.

" திறத்து இ(ன்)னுதன, செய்தவத்தோர் உற
ஒறுத்து, ஞாலத்து உயிர்தமை உண்டு உழல்
மறத்தினுர்கள், வலிந்தனர் வாழ்வரேல்,
அறத்தினுல் இனி ஆவது என் ?" என்னுமால்.

பொ :—"இடையீடின்றிச் செய்யும் தவத்தினையுடைய முனிவர்கள், உளையுந்திறமுடைய கடுந் துன்பங்களை அடைய, அவர்களை வருத்தி உலகத்து வாழும் உயிர்களைக்கொன்று (அவற்றின் உடம்பினைத்) தின்று திரியும் பாவிகளாகிய அரக்கர்கள், இவ்வாறு (கற்புடைய மாதரையும் வலிதிற் கவர்ந்து) இடர் செய்து வாழ்வார்களானுல், அறத்தினுல் மேல் ஆகக்கூடிய பயன்தான் இனி யாது உளதோ?" என்று வருந்தினுன் (இராமன்).

கு :—திறத்து இன்னுதன - வருத்தும் திறத்தனவாகிய துன்பங்கள் எல்லாவற்றுள்ளும் மிக்க துன்பங்கள். மறத்தினுர்கள் - பாவிகள். வலிந்தனர் - இடர் செய்தனராய்; முற்றெச்சம். வாழ்வரேல் - (தாம் செய்த பாவங் காரணமாக விரைவில் இறந்தொழியாது) வாழவும் வல்லரானுல். அறத்தினுல் - என்பில்லாத உடம்பினை வெயில் காய்ந்தாற்போன்று அன்பில்லாத உயிர்களைச் சினந்து

ஒறுக்கவல்ல அறக்கடவுளால். 'அறம் வெல்லும் பாவம் தோற்கும்' என்னும் உண்மைக்கு மாருகப் பாவிகளாகிய அரக்கரே வலியுடைய ராக மேம்பட்டு வாழவும், அறமுடையார் இன்னலுற்றுத் தாழவும் இங்ஙனம் அறக்கடவுள் தனது ஆற்றல் குன்றி ஒடுங்குதல் முறையோ? என இராமன் வருந்தி இரங்கினுன் என்க. தன்னை விடுவிக்கும் பொருட்டுக் கொடியோனுகிய இராவணனை யெதிர்த்துப் பொருத அறவோனுகிய சடாயு வெல்லாது வீழ்ந்த நிலைகண்டு ஆற்ருத சீதை, 'வெல்வதும் பாவமோ வேதம் பொய்க்குமோ இல்லையோ அறம்?' (கம்பர் - ஆரணிய சடாயு உயிர்நீத்த படலம்-133) என இரங்கி ஏங்கினமை இங்கு நோக்கத்தக்கது. (24)

## காமனது கலக்கம் 3666-3667

3666. தேனின் றெய்வத் திருநெடு நாண்சிலைப்
பூநின் றெய்யும் பொருகணை வீரனும்
மேனின் றெய்ய விமலனை நோக்கினுன்
ருனின் றெய்யகி லான்றடு மாறினுன்.

தேனின் தெய்வத் திரு நெடு நாண் சிலைப்
பூ நின்று எய்யும் பொருகணை வீரனும்,
மேல் நின்று எய்ய விமலனை நோக்கினுன்;
தான் நின்று எய்யகிலான், தடுமாறினுன்.

பொ :—வண்டின் தொடர்ச்சியாகிய தெய்வத்தன்மை வாய்ந்த அழகிய நீண்ட நாணினையுடைய மலர் வில்லிற் பொருத்தி எய்யப் படும் பொருதற்குரிய அம்புகளையுடைய வீரனுகிய மன்மதனும், விசும் பிடத்தே நின்று அம்புகளை எய்தற்பொருட்டுக் குற்றமற்ற தூயோ னுகிய இராமனை நோக்கினுன்; (அங்ஙனம் நோக்கிய) காமன் தானும் (இராமன் முன்) துணிவுடன் நின்று எய்யும் ஆற்றல் அற்றவனுகி மனத்தடுமாற்ற முற்ருன்.

கு :—தேன் - வண்டு; ஈண்டு வண்டுகளின் தொடர்ச்சியைக் குறித்தது. தேனின் நாண் என இயையும். 'தெய்வ' என்னும் அடைமொழி நாண், வில், கணை ஆகிய எல்லாவற்ருேடும் பொருந் தும் முறையில் அமைந்துளது. மன்மதனுக்குக் கரும்பு வில்லே யன்றிக் 'காமநூல்' என்னும் பூவில்லும் உண்டாதலின் 'சிலைப் பூ' என்ருர். "காமன் சிலையிரண்டும் செவ்வனே கோலித்தந்தான்" (2065) எனவரும் சீவகசிந்தாமணித் தொடரும், "காமனுக்குக் காம நூலும் ஆலையும் வில்லாதலின்" (சிலப் - மனையறம் - 44) எனவரும் அடியார்க்கு நல்லார் உரைப்பகுதியும், "கயக்கணின்ற பூவின்மிக்க

காமகாண்டம் கன்னல் வில்' (காமதகன - 62) என வரும் கந்த புராணத் தொடரும் ஈண்டு நோக்கத்தகும். சிலைப்பூ - சிலையாகிய பூ என விரியும். பூஞ்சிலை எனற் பாலது, சிலைப்பூ என முன் பின்னாக மாறி நின்றது. காமநூல் என்றது ஒருவகைப் பூ விசேடம் என்ப. இப் பூவில்லினை மன்மத தந்திரம் என்பர் வடநூலார். ஆலை என்றது கரும்புவில்லை. பூஞ்சிலை, பூங்கணை எனப் பூ ஈரிடத்தும் கூட்டப்பட்டது. முன்னொருகால் சிவபெருமானுக்கு முன் நின்று மலரம்புகளை எய்தமையால் தன் உடம்பு முழுவதும் எரிந்து சாம்பராய் உருவிழந்த மன்மதன், இறைவனையொத்த இராமன் முன் நின்று எய்தால் தனக்குண்டாகும் துன்பத்திற்கு அஞ்சி, மேலே விசும்பின்கண் அருவாய் மறைந்து நின்று அம்புகளைச் சொரிய முற்பட்டு இராமனை நோக்கினன் என்பார், 'மேல்நின்று எய்ய விமலனை நோக்கினன்' என்றும், யாவரையும் வெல்லும் ஆற்றல் வாய்ந்த அவனும், காமம் வெகுளி மயக்கம் என்பவற்றின் பெயர்த்தொடர்பும் இல்லாத விமலனாகிய இராமன்மேல் அம்புகளை எய்யமாட்டாது மனத் தடுமாற்றமடைந்து வருந்தினன்' என்பார், 'தான் நின்று எய்ய கிலான் தடுமாறினன்' என்றும் கூறினர். காமன் தடுமாற்ற மடைதற்குரிய காரணம் அடுத்துவரும் செய்யுளில் விளக்கப் பெற்றுளது. (25)

**3667.** உழந்த யோகத் தொருமுதல் கோபத்தால்
இழந்த மேனியு மெண்ணி யிரங்கினன்
கெழுந்த கைக்கொரு வன்மை கிடைக்குமோ
பழந்து யர்க்குப் பரிவுறும் பான்மையால்.

உழந்த யோகத்து ஒருமுதல் கோபத்தால்
இழந்த மேனியும் எண்ணி இரங்கினன்;
கெழுந்தகைக்கு ஒரு வன்மை கிடைக்குமோ,
பழந் துயர்க்குப் பரிவு உறும் பான்மையால்?

பொ :—முயன்று செய்தற்குரிய யோகநிலையில் அமர்ந்திருந்த ஒப்பற்ற தனி முதல்வனாகிய இறைவனது வெகுளியால் முன் இழந்து போன தன் உடம்பின் எழில் நலத்தையும் நினைந்து இரங்கினன் (மன்மதன்). (இங்ஙனம் தான் அடைந்த) பழைய துயரத்தினை எண்ணி வருந்திய வலியற்ற தன்மையினால் (தனது) உரிமைத் தொழிலை விடாது செய்தற்குரியதொரு வன்மை அவனிடத்துத் தோன்றுமோ? (உண்டாகாது என்பதாம்).

கு:—உழத்தல் - முயலுதல். ஒருமுதல் - ஒப்பற்ற முதல்வனாகிய இறைவன்; சிவபெருமான். இச்சொல் 'தனிமுதல்' என்றாற் போன்று உயர்திணைப் பொருளை யுணர்த்தி நின்றது. விமலனாகிய இராமன்மேல் அம்புகளைச் சொரியக்கருதிய காமனது உள்ளத்தே மூவருள் முதல்வனாகிய சிவபெருமான்முன் சென்று மலர்க்கணை சொரிந்து தன்னுடம்பு நீறாயழிவுற்ற துயரச் செய்தி நினைவுக்கு வரவே, யாவராலும் எதிர்க்கலாற்றாத இறைவனது பேராற்றலையும் அதனால் தான் இழந்த உடம்பின் எழில் நலத்தையும் எண்ணி யிரங்கினான் என்க. இவ்வாறு மன்மதன் தனது பண்பற்ற செய்கை யின் பயனாகத் தானடைந்த பெருந் துன்பத்தினை நினைந்து மனங் கலங்கும் நிலையினனானமையால், காதலர்ப் பிரிந்தாரைத் துயர் செய்தலில் தனக்குள்ள உரிமையை நிலைநாட்டற்குரிய வலியற்றவ னாயினான் என்பார், 'பழந்துயர்க்குப் பரிவுறும்பான்மையால், கெழுந் தகைக்கு ஒரு வன்மை கிடைக்குமோ?' என்றார். கெழுதகை என்பது, எதுகைநோக்கி 'கெழுந்தகை' என மெல்லெழுத்து மிக்கது. கெழுதகை - உரிமை. 'பழையமெனக் கருதிப் பண்பல்ல செய்யும் கெழுதகைமை கேடுதரும்' (திருக்குறள் - 700) என்பது ஈண்டு நினைக்கத்தக்கது. (26)

## கங்குற்பொழுது கழிதல்

3668. நீல மான நிறத்த னினை ந்தவை
சூல மாகத் தொலைவுறு மெல்லையின்
மூல மாமலர் முன்னவன் முற்றுறுங்
கால மாமெனக் கங்குல் கழிந்ததே.

நீலமான நிறத்தன் நினைந்தவை
சூலம் ஆகத் தொலைவுறும் எல்லையில்,
மூலம் ஆம் மலர் முன்னவன் முற்றுறும்
காலம் ஆம் எனக் கங்குல் கழிந்ததே.

பொ:—நீலநிறம் வாய்ந்த மேனியினையுடையனாகிய இராமன் எண்ணிய எண்ணங்களே சூலப்படை போன்று வருத்த (மனம்) அழிந்து வருந்தும் அளவில், உலகத் தோற்றத்திற்கெல்லாம் மூலமாகிய (திருமாலின் உந்தித்) தாமரையில் தோன்றிய முதியவ னாகிய பிரமனது வாழ்நாள் முடியும் எல்லையாகிய பிரமகற்பத்தினைப் போன்று கங்குற்பொழுதும் முடிவடைந்தது.

கு:—தொலைவுறுதல் - அழிதல்; ஈண்டு மனமழிந்து சோர்வுறுத லாகிய தளர்ச்சியை யுணர்த்தியது. (27)

### இராமனது ஆற்ருமை 3669, 3670

3669. வெள்ளஞ் சிலம்பு பாற்கடலின்
★ விரும்புந் துயிலை வெறுத்தளியுங்
கள்ளுஞ் சிலம்பு பூங்கோதை
கற்பின் கடலிற் படிவாற்குப்
புள்ளுஞ் சிலம்பும் பொழில்சிலம்பும்
புனலுஞ் சிலம்பும் புனைகோல
முள்ளுஞ் சிலம்புஞ் சிலம்பாவே
லுயிருண் டாகும் வகையுண்டோ.

வெள்ளம் சிலம்பு பாற்கடலின் விரும்பும்
துயிலை வெறுத்து, அளியும்
கள்ளும் சிலம்பு பூங்கோதை
கற்பின் கடலில் படிவாற்குப்
புள்ளும் சிலம்பும்; பொழில் சிலம்பும்;
புனலும் சிலம்பும்; புனைகோலம்
உள்ளும் சில் அம்பும் சிலம்பாவேல்,
உயிர் உண்டாகும் வகை உண்டோ?

பொ:—அலைவெள்ளம் முழங்கும் திருப்பாற்கடலிலே தான் விரும்பி மேற்கொள்ளும் அறிதுயிலாகிய யோக நித்திரையை வெறுத்து, வண்டும் தேனும் முரலும் மலர்மாலையினை யணிந்த கூந்தலையுடையாளாகிய சீதையினது நற்குணக் கடலிலே படிந்து இன்துயில் கொள்வானுகிய இராமனுக்கு (வைகறைப் பொழுதிலே) பறவைகளும் ஒலித்தன; சோலைகளும் ஒலித்தன; (பொய்கை முதலியவற்றிலுள்ள) நீரும் ஒலித்தன; (இராமன் கொண்ட) போர்க் கோலத்தை நினைப்பிக்கும் வகையில் (அவனது அம்பருத் தூணியிற் பொருந்திய) சில அம்புகளும் ஒலி செய்திலவாயின், அவனது உயிர் ஒடுங்காது நிலைபெறும் வழியுண்டோ? (இல்லை) என்றவாறு.

கு:—வெள்ளம் என்றது, அலைகளின் மிகுதியை. சிலம்புதல் - ஒலித்தல், முழங்குதல். மலர்மகள், நிலமகள், நீளை என்னும் தெய்வ மங்கையர் மூவரும் உடனமர்ந்து பணிபுரியத் தூய திருப்பாற் கடலிலே அறிதுயில் கொள்ளும் நிலையைக் காட்டிலும், சீதையின் கற்பென்னும் நற்குணக் கடலிற் படிந்து வையத்து வாழ்வாங்கு வாழும் இந்நிலையே உலக உயிர்களின் வாழ்வுக்குப் பெருநலஞ் செய்வதெனக் கொண்டு திருமால் இராமனுக அவதரித்தனன் என் பார், 'வெள்ளம் சிலம்பு பாற்கடலின் விரும்புந்துயிலை வெறுத்து, அளியும் கள்ளும் சிலம்பும் பூங்கோதை கற்பின் கடலிற் படிவான்'

என்றார். அளி, கள் என்பன வண்டின் வகை. கங்குல் கழிந்த வைகறைப் பொழுதிலே, இராமனது துயரத்தைத் தணிக்கும் நிலையிற் பறவைகள் ஒலித்தன; சோலையும் புனலும் ஒலி செய்தன; அவ்வொலிகளுடன் இராமன் படுக்கையை விட்டெழ, அவனது போருடையுடன் இணைந்த அம்பருத் தூணியிலுள்ள சில அம்புகளும் ஒன்றோடொன்று தாக்கி யொலித்தமையால், இராமன் தான் மேற்கொண்ட போர்க்கோலத்தினை எண்ணி இராவணனை வென்று சீதையை மீட்டுக் கொள்ளலாம் என்ற துணிவுடன் உயிர்தரித்திருக்கும் நிலையினன் ஆயினான்; சில அம்புகளும் ஒலித்திலவாயின் சீதையின் பிரிவுத் துயரை மறந்து தரித்திருக்கும் வழியின்றி அவன் உயிர் துறந்திருத்தலும் கூடும் என்பார், 'புனைகோலம் உள்ளும் சில் அம்பும் சிலம்பாவேல் உயிருண்டாகும் வகையுண்டோ' என்றார். புனைகோலம் உள்ளும் சில் அம்பு - அரக்கரை யழித்தற்கென இராமன் தான் கொண்ட போர்க்கோலத்தினை நினைவுபடுத்தும் நிலையில் (அவனது அம்பருத் தூணியில்) உள்ள சில அம்புகள். சிலம்பாவேல் - ஒலித்திலவாயின். வைகறைப் பொழுதிற் பறவை முதலியவற்றின் ஒலியினைக் கேட்டுப் பள்ளியை விட்டெழும் நிலையினனாகிய இராமன், தன் அம்பருத் தூணியிலுள்ள சில அம்புகளும் ஒலிக்கக் கேட்டுத் தான் மேற்கொண்ட போர்க் கோலத்தினை நினைந்து இராவணனை வென்றழித்துச் சீதையை மீட்குந் துணிவுடையனாய் அவளது பிரிவுத் துயரை ஒருவாறு ஆற்றியிருந்தான் என்பதும், அவனது போர்க் கோலத்தினை நினைப்பிக்கும் நிலையில் சில அம்புகளும் ஒலித்திலவாயின் அவனது உயிர் நிலைத்தற்கு வேறு உபாயமில்லை என்பதும் புலப்படுத்தியவாறு. இது கவிக்கூற்று. (28)

**3670.** மயிலும் பெடையு முடன்றிரிய
மானுங் கலையு மருவிவரப்
பயிலும் பிடியுங் கடகரியும்
வருவ திரிவ பார்க்கின்றான்
குயிலுங் கரும்புஞ் செழுந்தேனுங்
குழலும் யாழுங் கொழும்பாகும்
அயிலு மமுதுஞ் சுவைதீர்த்த
மொழியைப் பிரிந்தா னழியானோ.

மயிலும் பெடையும் உடன் திரிய,
மானும் கலையும் மருவி வரப்
பயிலும் பிடியும் கடகரியும்
வருவ, திரிவ, பார்க்கின்றான்;

குயிலும், கரும்பும் செழுந்தேனும்,
குழலும், யாழும், கொழும் பாகும்,
அயிலும் அமுதும் சுவை தீர்த்த
மொழியைப் பிரிந்தான், அழியானே ?

பொ :—ஆண்மயிலும் பெண் மயிலும் உடன் சேர்ந்து ஆடித் திரியவும், பெண்மானும் ஆண்மானும் அன்பினுற் பொருந்தி உடன் வரவும், காதலாற் பழகும் பெண் யானையும் மதஞ் சொரியும் ஆண் யானையும் இணைந்து எதிரே வருவனவும் திரிவனவும் ஆகிய அவற்றை (வருந்திய சிந்தையுடன் மையலுற்று) நோக்குகின்றான் (இராமன்); குயிலினது குரலும் கரும்பின் சாறும் செழுமை மிக்க தேனும் குழலிசையும் யாழிசையும் கொழுவிய வெல்லப்பாகும் விரும்பி யுண்ணத்தக்க வானோரமிழ்தமும் ஆகிய இவற்றின் சுவையினை இல்லையாக்கிய இனிய மொழியினையுடையாளாகிய சீதையைப் பிரிந்து தனியனாகிய அவன், அப்பிரிவினால் உள்ளம் வருந்தாதிருப் பானோ ? (பெரிதும் அல்லலுற்று மனமழிந்தான்) என்றவாறு.

கு :—பெடை - பெண் பறவை. கலை – ஆண்மான், பிடி - பெண் யானை. குயிலும் குழலும் யாழும் செவிப்புலனும் இன்னோசையால் இன்பந்தருவன. கரும்பும் தேனும் பாகும் அமுதும் வாயுணர்வாகிய இன் சுவையால் நாவுக்கு இன்பம் தருவன. சீதை கூறும் இனிய மொழியில் திளைத்த இராமனுக்கு செவிக்கும் நாவுக்கும் சுவை பயப் பனவாகிய இவையனைத்தும் சுவையற்றன என்னும்படி இவை யெல்லாவற்றினும் மேலாக அவள் மொழியே தீஞ்சுவையுடையதாய் இன்பம் தந்தது என்பார், ‘ குயிலும்...அமுதுஞ் சுவை தீர்த்த மொழி ’ என்றார். ஈண்டு ‘ மொழி ’ யென்றது மொழியினையுடையாளாகிய சீதையை. திரிய, வர என்பன செயவென்னும் வாய்பாட்டு வினை யெச்சம் ; நிகழ்காலங் காட்டும் இவ் எச்சங்கள் ‘ வருவ, திரிவ ’ என் னும் பிற கருத்தாவின் தொழில் கொண்டு முடிந்தன. வருவ, திரிவ என்பன அன்சாரியை பெறாத அகரவீற்றுப் பலவின்பால் வினை முற் றுக்கள் ; வினையாலணையும் பெயராய் நின்றன. பார்த்தல்-அஃறிணை யுயிர்களாகிய இவற்றுக்கு வாய்த்த துணைப்பிரியா வாழ்வாகிய இன்ப நலம் உயர்திணை மகனாகிய எனக்கு வாய்த்திலதே என ஏக்கமுற்று நோக்குதல்.

‘புணர்துணையோ டாடும் பொறியலவன் நோக்கி, இணர்ததை யும் பூங்கானல் என்னையும் நோக்கி, உணர்வொழியப்போன ஒலி திரை நீர்ச் சேர்ப்பன் ’ (சிலப் – கானல்வரி) என்புழி, நோக்குதல் இப்பொருளில் வந்தமை காணலாம். இதனை ‘ மையல் நோக்கம் ’ என்பர் பேராசிரியர் (தொல்-மெய்ப்பாடு - 12). (29)

## கதிரவன் தோன்றுதல்

3671. முடிநாட் டியகோட் டுதயத்து
முற்ற முற்ருன் முதுகங்குல்
விடிநாட் கண்டுங் கிளிமிழற்று
மென்சொற் கேளா வீரற்காண்
டடிநாட் செந்தா மரையொதுங்கு
மன்ன மிலளால் யானடைத்த
கடிநாட் கமலத் தெனவவிழ்த்துக்
காட்டு வான்போற் கதிர்வெய்யோன்.

முடி நாட்டிய கோட்டு உதயத்து
முற்றம் உற்ருன் ; முதுகங்குல்
விடிநாள் கண்டும் கிளி மிழற்றும்
மென்சொல் கேளா வீரற்கு, ஆண்டு,
"அடிநாள் செந்தாமரை ஒதுங்கும்
அன்னம் இலளால், யான் அடைத்த
கடி நாட்கமலத்து" என, அவிழ்த்துக்
காட்டுவான்போல், கதிர்வெய்யோன்.

பொ:—வெம்மை வாய்ந்த ஒளிக்கதிர்களையுடைய சூரியன், முதிய கங்குற்பொழுது நீங்கி, விடியலாகிய நாட்காலையைக் கண்டும், கிளியின் மழலைபோன்று இனிமையாகப் பேசும் சீதையின் மென்மை வாய்ந்த இன்சொல்லைக் கேளாது வருந்தும் இராமனுக்கு, அவ்விடத்தே "முன்னாளிற் செந்தாமரை மலரிற் பயிலும் அன்னம் போல்வாளாகிய சீதை, என்னால் மூடப்பெற்ற மணம் பொருந்திய நாண்மலராகிய தாமரையிலும் இருந்திலள்" என்று அம்மலர்களை அலரச் செய்து திறந்து காட்டுவான்போல மலையின் முடியாக நிலை பெற்ற சிகரத்தினையுடைய உதயகிரியின் முற்றத்திலே வந்து தோன்றினன்.

கு:—கதிர்வெய்யோன் 'யான் அடைத்த கமலத்து அன்னம் இலள்' என வீரற்குக் காட்டுவான்போல் உதயத்து முற்றம் உற்ருன் என முடியும். கதிர் வெய்யோன் - வெங்கதிரோன். உதயம் - சூரியன் உதிக்கும் மலை. முதுகங்குல் - இருள்மிக்க இரவுப் பொழுது; 'கண்டும்' என்புழி உம்மை, காணுதலின் அருமை தோன்ற நின்றது. திருமகளின் அவதாரமே சீதையாதலின், 'அடிநாள் செந்தாமரை ஒதுங்கும் அன்னம்' என்ருர். தாமரை மலரில் வீற்றிருத்தல் பற்றியும் மென்னடை பற்றியும் சீதை அன்னம் எனப்பட்டாள்.

அன்னம் – உவமை யாகுபெயர். புறத்தே யாண்டும் சீதையைக் காணுது வருந்தும் இராமனுள்ளத்தே 'அவள், முன்னர்த் தனக்குரிய இடமாகிய செந்தாமரையில் மீண்டும் புகுந்தனளோ?' என்றதோர் ஐயமேற்படின் தானே அதனைத் தீர்க்கும் கடமையுடையோனுதலின், கதிரவன் தான் முதல் நாள் மாலையில் மூடிய தாமரை மலர்களையெல்லாம் மீண்டுந் திறந்து 'இம்மலர்களில் ஒன்றிலேனும் சீதையிருந்திலள்' என இராமனுக்குக் காட்டுவான் போன்று உதயமலையின் உச்சியில் தோன்றினன் என ஆசிரியர் புனைந்துரைத்தார். இது தற்குறிப்பேற்ற அணி. (30)

## சீதையின் பிரிவுத் துயரால் இராமன் வருந்துதல்

**3672.** பொழிலை நோக்கும் பொழிலுறையும்
புள்ளை நோக்கும் பூங்கொம்பின்
எழிலை நோக்கு மிளமயிலி
னியலை நோக்கு மியல்பானுள்
குழலை நோக்கிக் கொங்கையிணைக்
குவட்டை நோக்கி யக்குவட்டின்
தொழிலை நோக்கித் தன்னுடைய
தோளை நோக்கி நாட்கழிப்பான்.

பொழிலை நோக்கும்; பொழில் உறையும்
புள்ளை நோக்கும்; பூங்கொம்பின்
எழிலை நோக்கும்; இளமயிலின்
இயலைநோக்கும்; இயல்பு ஆனுள்
குழலை நோக்கிக் கொங்கை இணைக்
குவட்டை நோக்கி, அக்குவட்டின்
தொழிலை நோக்கித் தன்னுடைய
தோளை நோக்கி, நாள் கழிப்பான்.

பொ :—(பெண்மைக்குரிய அமைதித் தன்மையாகிய) இயல்பின் நீங்காதவளாகிய சீதையின் கூந்தலை நோக்கி, அவளுடைய இரு கொங்கைகளாகிய மலையை நோக்கி, அம்மலைகளின்கண் அமைந்த தொய்யிலின் தொழிலை நோக்கி, அத்தொழிலொடு பொருந்திய தன் தோள்களையும் நோக்கி (அவளது பிரிவாற்ருமையினுற்) பொழுது போக்கும் இராமன், (அவள் நினைவாகச்) சோலையை உற்று நோக்குவான்; அச்சோலையில் தங்கிய (சக்கரவாகப்) பறவையை நோக்கு

வான் ; பூக்களுடன் விளங்கும் பூங்கொம்பின் அழகினை நோக்குவான்; இளமை வாய்ந்த மயிலின் சாயலை உற்று நோக்குவான்.

கு :—இச்செய்யுளில் நோக்குதல் என்னுஞ் சொல், முன்னிரண் டடிகளிலும் கண்ணுற் பார்த்தல் என்ற பொருளிலும், பின்னிரண்டடி களிலும் மனத்தால் நோக்குதல் என்ற பொருளிலும் ஆளப்பெற்றுள் ளமை கூர்ந்துணரத்தக்கதாகும். சீதையின் பிரிவாற்ருமையினல் அவளுடைய எழில் நலங்களைத் தன்னுள்ளத்தே எண்ணி எண்ணி வருந்தும் இராமன், சீதையின் கூந்தலை நினைந்து பொழிலையும், கொங்கையினை யெண்ணிச் சக்கரவாகப் புள்ளையும், தொய்யிற் ருெழிலை நோக்கிப் பூங்கொம்பினையும், சாயலாகிய இயல்பினை யெண்ணி மயிலையும் நோக்கி ஆற்ருதவனுயினுன் என்பதாம். சீதையின் பிரிவால் தன் தோள்களுக்கு ஏற்பட்ட எளிமையும் அவளை மீட்டும் பெறுதற்குரிய பேராற்றல் அத்தோள்களுக்கு உண்மையும் எண்ணிப் பகைவனை யழித்தற்கு வாய்ப்பான காலங் கருதியிருக்கின்ருன் என்பார், 'தன்னுடைய தோளை நோக்கி நாட் கழிப்பான்' என்ருர். (31)

## இராம இலக்குவர் இருவரும் இராவணன் இருக்கும் இடத்தைத் தேடிச் செல்லுதல்

3673. அன்ன காலை யிளவீர
னடியின் வணங்கி நெடியோயப்
பொன்னை நாடா தீண்டிருத்தல்
புகழோ வென்னப் புகழோனும்
சொன்ன வரக்க னிருக்குமிடந்
துருவி யறிதுந் தொடர்ந்தென்ன
மின்னு சிலையார் மலைதொடர்ந்த
வெயில்வெங் கானம் போயினரால்.

அன்னகாலை, இளவீரன்,
அடியின் வணங்கி, "நெடியோய்! அப்
பொன்னை நாடாது ஈண்டு இருத்தல்
புகழோ?" என்னப் புகழோனும்
"சொன்ன அரக்கன் இருக்கும் இடம்
துருவி அறிதும் தொடர்ந்து" என்ன,
மின்னு சிலையார் மலைதொடர்ந்த
வெயில் வெங்கானம் போயினரால்.

பொ :—அப்பொழுது இளைய வீரனாகிய இலக்குவன், தமையனுடைய அடிகளில் வீழ்ந்து வணங்கி நின்று, "நெடியோனே, பொன்னைப்போல்வாளாகிய அச்சீதையைத் தேடாது இவ்விடத்தே தாமதித்திருத்தல் புகழுடைய செய்கையாகுமோ?" என்று கூற, புகழுக்கு நிலைக்களமாகத் திகழும் இராமனும் "(சடாயுவினால்) சொல்லப்பட்ட அரக்கனாகிய இராவணன் இருக்கும் இடத்தைத் தொடர்ந்து துருவிச் சென்று அறிவோம்" என்று இசைந்து புறப்பட, விளங்குகின்ற வில்லையுடையராகிய துணைவர் இருவரும் மலைகள் தொடர்ந்தமைந்த வெயில் வெம்மை மிக்க காட்டிடத்தே தொடர்ந்து சென்றார்கள்.

கு :—இறைமைக் குணங்கள் முற்றுமுடைய தலைவன் இராமனாதலின், அவன் பொருள்சேர் புகழுடையான் என்பார், புகழோன் என்றார். மின்னுசிலையார், போயினர் என இயையும். (32)

3674. ஆசை சுமந்த நெடுங்கரி யன்னார்
★ பாசிலை துன்று வனம்பல பின்னாக்
காசறு குன்றினொ டாறு கடந்தார்
யோசனை யொன்பதொ டொன்பது சென்றார்.

ஆசை சுமந்த நெடுங்கரி அன்னார்,
பாசிலை துன்று வனம்பல பின்னாக்
காசு அறு குன்றினொடு ஆறு கடந்தார்;
யோசனை ஒன்பதொடு ஒன்பது சென்றார்.

பொ :—திசைகளில் நின்று (பூமியைத்) தாங்கிய உயர்ந்த களிறுகளை யொத்த (இராமன், இலக்குவன் ஆகிய) அவ்விருவரும், பசிய இலைகள் தழைத்து அடர்ந்த காடுகள் பல பின்னே கழியக் குற்றமற்ற மலையுடன் ஆற்றினையும் கடந்து பதினெட்டு யோசனை தூரம் நடந்து சென்றார்கள்.

கு :—ஆசை - திசை. நெடுங்கரி என்புழி நெடுமை உயர்ச்சியும் பெருமையும் குறித்தது. பின்னாக என்பது பின்னா எனக் குறைந்து நின்றது. (33)

அவ்விருவரும் சோலையை அடைதல்

3675. மட்படி செய்த தவத்தினின் வந்த
கட்படி கோதையை நாடினர் காணார்

உட்படி கோபமு யிர்ப்பொடு பொங்கப்
புட்படி யுங்குளிர் வார்பொழில் புக்கார்.

மண் படி செய்த தவத்தினின் வந்த
கள் படி கோதையை நாடினர் காணார்;
உள் படி கோபம், உயிர்ப்பொடு பொங்கப்
புள் படியும் குளிர் வார்பொழில் புக்கார்.

பொ :—(நெடுங்கரியன்னாராகிய இராம இலக்குவர்) மண்ணுலகு செய்த தவத்தின் பயனாகத் தோன்றிய தேன் நிறைந்த மாலையினை யுடையாளாகிய சீதையைத் தேடிக் காணாதவர்களாய்த் தம் உள்ளத்தே அடங்கிக் கிடந்த பெருஞ் சினமானது, பெருமூச்சொடு மிகுந்து வெளிப்படப் பறவைகள் பொருந்தித் தங்கிய குளிர்ந்த நீண்ட சோலையினுள்ளே புகுந்தனர்.

கு :—மேற்பாடலிற் குறித்த 'நெடுங்கரியன்னார்' என்பது ஈண் டும் இயையும். மண்படி - மண்ணின் கூருகிய பூவுலகம். (34)

## கதிரவன் மறைதல்

3676. ஆரியர் சிந்தை யலக்க ணறிந்தான்
நாரியை யெங்கணு நாடின னாடிப்
பேருல கெங்கு முழன்றிருள் பின்னு
மேருவின் வெங்கதிர் மீள மறைந்தான்.

ஆரியர் சிந்தை அலக்கண் அறிந்தான்,
நாரியை எங்கணும் நாடினன், நாடிப்
பேர் உலகு எங்கும் உழன்று, இருள் பின்னு
மேருவின் வெங்கதிர் மீள மறைந்தான்.

பொ :—வெம்மை மிக்க கதிர்களையுடைய சூரியன், அறிவிற் சிறந் தோராகிய இராம இலக்குவரது உள்ளத்தில் உள்ள பெருந் துன் பத்தை அறிந்தவனாகிச் சீதையை எல்லாப் பக்கங்களிலும் நாடித் தேடிப் பார்த்துப், பெரும் பரப்புடைய உலகின் எல்லை முழுதும் வருந்தியலைந்து (அவளைக் காணப் பெறாமல்), இருள் தன் பின்னே தொடரத் தான் மீளவும் மேருமலையின் அப்புறத்தே மறைந்து சென்றான்.

கு :—வெங்கதிர், அறிந்தான், நாடினன், நாடி மீளவும் மேருவின் மறைந்தான் என முடியும். தன்னியல்பில் தோன்றி மறையும் ஞாயிற்றை, 'இராம இலக்குவரது சிந்தைத் துயரறிந்து சீதையை

எங்குந் தேடியலைந்து காணுமையால் மேருவின் மறைந்தான்' என ஆசிரியர் தம் கருத்தையேற்றி உரைத்தமையால், இச்செய்யுள் தற்குறிப்பேற்ற அணியாகும். (35)

## எங்கும் இருள் செறிதல்

3677. அரண்டரு குஞ்செறி யஞ்சன புஞ்சம்
முரண்டன போலிரு ளெங்கணு முந்தத்
தெருண்டறி வில்லவர் சிந்தையின் முந்தி
இருண்டன மாதிர மெட்டு மிரண்டும்.

அரண்டு அருகும் செறி அஞ்சன புஞ்சம்
முரண்டன போல் இருள் எங்கணும் முந்த,
தெருண்ட அறிவு இல்லவர் சிந்தையின், முந்தி
இருண்டன மாதிரம் எட்டும் இரண்டும்.

பொ :—(கண்டோர் யாவரும்) அஞ்சி மெலிதற்கு ஏதுவாகிய செறிந்த இருளானது, மைக்குழம்பின் திரட்சி ஒன்ருேடொன்று முரணிக் கலந்தாற் போன்று எல்லாப் பக்கத்தும் முற்பட்டுப் பரவுதலால், (எட்டும் இரண்டும் ஆகிய) பத்துத் திசைகளும், தெளிந்த அறிவினைப் பெருதாராகிய கீழோரது சிந்தையினை யொத்து விரைந்து இருண்டன.

கு :—திண்மை வாய்ந்த நெஞ்சத்தினரையும் அஞ்சி மெலிவுறச் செய்யும் நிலையில் தோன்றிய பேரிருள் என்பார் 'அரண்டு அருகும் இருள்' என்ருர். அரண்டு - அஞ்சி. அருகுதல் - சுருங்குதல், மெலிதல். அரண்டு அருகும் இருள், செறி இருள், அஞ்சனபுஞ்சம் முரண்டனபோல் இருள் எனத் தனித்தனி இயையும். அஞ்சனம் - மை. புஞ்சம் - திரட்சி. தெருண்டறிவில்லவர்' என்புழித் 'தெருண்ட' என்னும் பெயரெச்சத்து அகரம் விகாரத்தால் தொக்கது. அறிவிலாத கீழோரது சிந்தை அறியாமையாகிய பேரிருளால் மூடப்பெற்று இருளடைந்தாற் போன்று திசைகளும் இருண்டன என்பதாம். மாதிரம் - திசை. எட்டுத் திசைகளுடன் மேலும் கீழும் ஆகிய இரு திசைகளையும் கூட்டத் திசைகள் பத்தாயின. (36)

## அவ்விருவரும் ஓர் பளிக்கறையில் தங்குதல்

3678. இளிக்கறை யின்சொ லியைந்தன பூவை
கிளிக்கறை யும்பொழில் கிஞ்சுக வேலி

ஒளிக்கறை மண்டில மொத்துள தாங்கோர்
பளிக்கறை கண்டதில் வைகல் பயின்றார்.

இளிக்கு அறை இன்சொல் இயைந்தன, பூவை,
கிளிக்கு அறையும் பொழில், கிஞ்சுக வேலி,
ஒளிக்கறை மண்டிலம் ஒத்துளது, ஆங்கு ஓர்
பளிக்கறை, கண்டு, அதில் வைகல் பயின்றார்.

பொ :—இளி என்னும் இன்னிசைக்கு ஒப்பெனக் கூறத்தக்க இனிய சொற்களையுடைய நாகணவாய்ப் பறவை (தான் கற்ற அவ்வினிய சொற்களைக்) கிளிக்குக் கற்பித்தற்கு இடமாகிய சோலையிலே முருக்க மரங்களை வேலியாகக் கொண்டதும் ஒளியினையும் கறையினையும் உடைய தண் கதிர் மண்டிலமாகிய சந்திரனை யொத்து விளங்குவதுமாகிய பளிங்குப் பாறையினைக் கண்டு அதன்கண் தங்கியிருத்தலைப் பொருந்தினார்கள்.

கு :—இளி - ஏழிசைகளுள் ஒன்று. கிஞ்சுகம் – முள்முருக்கமரம். கறை – முயற்கறை. பளிங்கு+அறை=பளிக்கறை என்றாகியது. அறை - பாறை. (37)

## இராமன் பணித்தவாறு இலக்குவன் தண்ணீர் கொணரச் செல்லுதல்

3679. அவ்விடை யெய்திய வண்ணலி ராமன்
வெவ்விடை போலிள வீரனை வீர
இவ்விடை நாடினை நீர்கொணர் கென்றான்
தெவ்விடை வில்லவ னுந்தனி சென்றான்.

அவ் இடை எய்திய அண்ணல் இராமன்,
வெவ் விடைபோல் இள வீரனை, 'வீர!
இவ் இடை நாடினை நீர் கொணர்க' என்றான்;
தெவ் இடை வில்லவனும், தனி சென்றான்.

பொ :—அவ்விடத்தை யடைந்த தலைவனாகிய இராமனும் (பகையினைத் தாக்கும்) வெம்மை மிக்க ஆனேறு போல்வானாகிய இலக்குவனை நோக்கி, 'வீரனே, இவ்விடத்தில் நாடிச் சென்று (பருகுதற்குரிய) தண்ணீர் கொணர்வாயாக' என்று கூறினான். பகைவர் தளர்ந்து (தோல்வியுற்று) ஓடுதற்கு ஏதுவாகிய வில்லைத் தாங்கிய இலக்குவனும் தனித்துச் சென்றான்.

கு :—வெம்மை - சினம். விடை - ஆனேறு. தெவ் - பகை; ஆகு பெயராய்ப் பகைவரை யுணர்த்தியது. இடைதல் - தோற்று ஓடுதல். (38)

## அயோமுகி என்னும் அரக்கி இலக்குவனைக் கண்டு காமுறுதல் 3680-3683

**3680.** எங்கணு நாடின னீரிடை காணான்
சிங்கமெ னத்தமி யன்றிரி வானை
அங்கவ னத்து ளயோமுகி யான
வெங்க ணரக்கி விரும்பினள் கண்டாள்.

எங்கணும் நாடினன், நீர் இடை காணான்,
சிங்கம் எனத் தமியன் திரிவானை,
அங்கு அ(வ்)வனத்துள், அயோமுகி ஆன
வெங்கண் அரக்கி விரும்பினள் கண்டாள்.

பொ :—எல்லாப் பக்கங்களிலும் தேடிப் பார்த்தவனாய் ஓரிடத்தும் தண்ணீரைக் காணப்பெறாது சிங்க ஏறுபோலத் தனியே திரிகின்ற இலக்குவனை அக்காட்டின் கண்ணே வாழும் அயோமுகி என்னும் பெயருடையவளாகிய வெம்மை மிக்க கண்களையுடைய அரக்கி (அவன்பாற் காதலுடையளாய்) விரும்பிக் கண்டாள்.

கு :—இரக்கமற்ற அரக்கர்கள் திரியும் காட்டினுள்ளே தமையனது நீர்வேட்கையைத் தணிக்கவேண்டித் தண்ணீரை நாடிச் செல்லும் இலக்குவன், முன்னும் பின்னும் தம்மை நோக்கி வரவிருக்கும் எத்தகைய இடையூறுகளையும் எதிர்பார்த்தே அச்சமின்றி உலவினான் என்பார் 'சிங்கமெனத் தமியன் திரிவான்' என்றார். அயோமுகீ என்னும் வடமொழிப் பெயர், இரும்பினால் இயன்றதுபோலும் வலிய முகத்தினையுடையவள் எனப் பொருள்படும் என்பர். இரக்கமென்பது சிறிதுமின்றி மக்கள் முதலிய ஆருயிர்களைக் கொன்றுண்டு திரிதலே அரக்கரினத்தின் இயல்பாதலின், அக்குலத்தவளாகிய அயோமுகியும் உயிர்களைக் கொன்றுண்ணும் கொடுமை படைத்தவளாய்ச் சினக் குறிப்புடைய கண்ணினளாகவே காணப்பட்டாள் என்பார், 'அயோமுகியான வெங்கண் அரக்கி' என்றும், இங்ஙனம் கொடுமையுடையளாயினும் சிங்க ஏறுபோலும் இளையோனாகிய இலக்குவனைக் கண்ட அளவே அவனது பேரழகில் ஈடுபட்டு, வெகுண்டு நோக்குதலாகிய தன்னியல்பின் நீங்கிக் காதல் நோக்குடையளாய் அவனைக் [கண்குளிரக் கண்டாள் என்பார், 'வெங்

கண் அரக்கி விரும்பினள் கண்டாள்' என்றும் கூறினர். விரும்பினள் - விரும்பி; முற்றெச்சம். அயோமுகியான அரக்கி, வெங்கண் அரக்கி என இயையும். (39)

3681. நன்மதி யோர்புகன் மந்திர நாமச்
சொன்மதி யாவர விற்றொடர் கிற்பாள்
தன்மத னோடுதன் வெம்மை தணிந்தாள்
மன்மத னாமிவ னென்னு மனத்தாள்.

நல் மதியோர் புகல் மந்திர நாமச்
சொல் மதியா அரவின், தொடர்கிற்பாள்,
தன் மதனோடு தன் வெம்மை தணிந்தாள்,
'மன்மதன் ஆம் இவன்' என்னும் மனத்தாள்.

பொ :—நல்லறிவினையுடைய பெரியோர் கூறிய மறைமொழிகளாகிய புகழமைந்த சொற்களின் சிறப்புணர்ந்து அடங்காத (இழிந்த) பாம்பினைப் போன்று (இலக்குவனைத்) தொடர்ந்து செல்வாளாகிய அயோமுகி, 'அழகினால் இவன் மன்மதனே யாவான்' எனக் காமுற்ற மனத்தினளாய்த் தன் (இயல்பாகிய) செருக்கும் சினமும் தணியப் பெற்றாள்.

கு :—நன்மதியோர் - அறிவிற் சிறந்த நிறைமொழி மாந்தராகிய பெரியோர். மந்திரம் - அருளிக் கூறினும் வெகுண்டு கூறினும் அவ்வப் பயன்களைப் பயந்தேவிடும் ஆற்றலுடைய மறைமொழி. நாமச்சொல் - அருளப்பட்டார்க்குப் புகழையும் வெகுளப்பட்டார்க்கு அச்சத்தையும் தரும் சொல்; தெய்வத்தின் திருப்பெயராய் அமைந்த சொல் எனினும் ஆம். மந்திரமாகிய நாமச் சொல் எனப் பண்புத் தொகை. மந்திரம் - நினைப்பாரைக் காப்பது. கடிக்கும் வல்லரவும் மந்திரச் சொல்லைக் கேட்டு அதற்குக் கட்டுப்பட்டுத் தீங்கு செய்யாது அடங்கும்; இவளோ அறிவுடையோர் கூறுஞ் சொற்களுக்குச் சிறிதும் கட்டுப்படாது தீமையே செய்பவள் என்பார், 'மந்திர நாமச் சொல் மதியா அரவின் தொடர்கிற்பாள்' என்றார். "கடிக்கும் வல்லரவுங் கேட்கும் மந்திரம்' (சுந்தர. 465) என்பர் பின்னும். மந்திரம் கேட்டு அடங்குவது நல்ல பாம்பு என்றும், மந்திரம் மதியா அரவு கட்டுவிரியன் முதலிய இழிந்த சாதிப் பாம்பென்றும் கூறுவர், மதன் - வலி; செருக்கு. வெம்மை - சினம். (40)

**3682.** அழுந்திய சிந்தை யரக்கி யலக்கண்
எழுந்துயர் காதலின் வந்தெதிர் நின்ருள்
புழுங்குமென் ஞேவொடு புல்லுவெ னன்றி
விழுங்குவெ ஞேவென விம்ம லுழன்ருள்.

அழுந்திய சிந்தை அரக்கி, அலக்கண்
எழுந்து உயர் காதலின் வந்து, எதிர் நின்ருள்;
"புழுங்கும் என் நோவொடு புல்லுவென் அன்றி,
விழுங்கு வெஞே?" என விம்மல் உழன்ருள்.

பொ :—(இலக்குவன்பாற்) பதிந்த சிந்தையினையுடைய அரக்கியாகிய அயோமுகி, துயரம் மூளப்பெறும் மிக்க காதலுடன் வந்து (அவனெதிரே) நின்றவளாய், "உள்ளத்தை வெதுப்பும் எனது காமநோயினுல் (இவனை வலிந்து) தழுவுவேனேயன்றி (ஏனையோரைக் கொன்று தின்னுமாறு போன்று இவனையும் கொன்று) விழுங்கிவிடுவேஞே? (அவ்வாறு செய்யமாட்டேன்)" என்று ஏக்கமுற்று வருந்தினுள்.

கு :—அழுந்துதல் - ஆழப்பதிதல். நோவொடு - நோயினுல், ஒடுவுருபு கருவிப்பொருளது. அயோமுகி மனிதர் முதலியோரைக் கொன்றுதின்னும் கொடுமையுடைய அரக்கியாயினும் இலக்குவன் பாற் கொண்ட மீளாக் காதலால் அவனை வலிந்து கூடி மகிழ விரும்பினளாதலின், தனது விருப்பத்திற்கு அவன் உடன்படுவாஞே அன்றி மறுத்து விடுவாஞே என ஐயுற்ற மனத்தினளாய்க் காமத் துயராற் கலக்கமுற்றுத் திகைத்து நின்ருள் என்றவாறு. விழுங்குவெஞே என்புழி ஓகாரம் எதிர்மறை. (41)

**3683.** இரந்தனெ னெய்திய போதிசை யாது
கரந்தன னேனனி கொண்டு கடந்தென்
முரஞ்சினின் மேவி முயங்குவெ னென்று
விரைந்தெதிர் வந்தன டீயினும் வெய்யாள்.

"இரந்தனென் எய்தியபோது, இசையாது
கரந்தனனேல், நனி கொண்டு கடந்து, என்
முரஞ்சினில் மேவி முயங்குவென்" என்று,
விரைந்து எதிர் வந்தனள், தீயினும் வெய்யாள்.

பொ :—'யான் தன்னை இரந்து வேண்டியபோது இவன் எனது விருப்பத்திற்கு உடன்படாது தப்பி மறைய முற்படுவானுயின் இவனை

விடாது அழுந்தப் பற்றிக்கொண்டு இவ்விடத்தைக் கடந்து (எனக்குரிய காவலிடமாகிய) மலைக்குகையினை அடைந்து இவனை ஆசை தீரத் தழுவி மகிழ்வேன்' எனத் தன் மனத்துள் எண்ணி இலக்குவனெதிரே விரைந்து வந்து நின்றாள்; தீயினும் கொடுமையுடையாளாகிய அயோமுகி.

கு :—தீயினும் வெய்யாள், விரைந்தெதிர் வந்தனள் என இயையும். தன்கண் சேர்ந்தாரைக் கொல்வதன்றித் தானே பிறரைத் தேடிச் சென்று கொல்லுந்தன்மை நெருப்புக்கு இன்மையின், அத்தீயினும் வெம்மையுடையளாய்ப் பிறரைத் தேடிச் சென்று தீமைபுரிதலையே தொழிலாகக்கொண்ட அயோமுகியைத் 'தீயினும் வெய்யாள்' என்றார். முரஞ்சு - பாறை; இங்கு மலைமுழைஞ்சாகிய குகையினைக் குறித்தது. இனி, 'முழைஞ்சு' என்னுஞ் சொல் 'முரஞ்சு' என எதுகை நோக்கித் திரிந்தது எனக் கொள்ளுதலும் பொருந்தும். (42)

### அயோமுகியின் தோற்றம் 3684-3689

**3684.** உயிர்ப்பி னெருப்புமிழ் கின்றன ளொன்ற
எயிற்றின் மலைக்குல மென்றினி துண்ணும்
வயிற்றள் வலக்கொடு மாசுணம் வீசு
கயிற்றி னசைத்த முலைக்குழி கண்ணள்.

உயிர்ப்பின் நெருப்பு உமிழ்கின்றனள்; ஒன்ற
எயிற்றின் மலைக்குலம் மென்று இனிது உண்ணும்
வயிற்றள்; வலக்கொடு மாசுணம் வீசு
கயிற்றின் அசைத்தமுலை, குழி கண்ணள்.

பொ :—தனது நெட்டுயிர்ப்பினால் நெருப்பினை உமிழ்கின்றாள்; தன் பற்களால் மலையினை யொத்த யானைக் கூட்டங்களைப்பொருந்த மென்று இனிது உண்டு]அடக்குதற்கு இடனாகிய (பெரிய) வயிற்றினையுடையாள்; வன்மையும் கொடுமையும் உடைய மலைப்பாம்பினை இறுகப் பிணித்தற்குரிய கச்சாகக்கொண்டு கட்டிய கொங்கையினையும் குழிந்து ஆழ்ந்த கண்களையும் உடையாள்;

கு :—இது முதல் ஆறு செய்யுட்களில் இலக்குவன்முன் வந்து நின்ற அயோமுகியின் அஞ்சத்தக்க கோலத்தினை ஆசிரியர் புனைந்துரைக்கின்றார். மாசுணம் - பெரும் பாம்பு (மலைப் பாம்பு). கயிறு, இங்குக் கச்சு என்னும் பொருளில் ஆளப்பெற்றது. (43)

3685. பற்றிய கோளரி யாளி பணிக்கண்
தெற்றிய பாத சிலம்பு தெரிந்தா
ளிற்றுல கியாவையு மீறுறு மந்நாள்
முற்றிய ஞாயிறு போலு முகத்தாள்.

பற்றிய கோள் அரி, யாளி, பணிக்கண்
தெற்றிய பாதசிலம்பு தெரிந்தாள்;
இற்று உலகு யாவையும் ஈறு உறும் அந்நாள்,
முற்றிய ஞாயிறு போலும் முகத்தாள்.

பொ :—தன்னாற் பற்றப்பட்ட வலிய சிங்கங்களையும் யாளிகளையும் பாம்பாகிய கயிற்றின் கண்ணே இடையிட்டுப் பின்னியமைத்த பாத சரமாகிய காலணியைத் (தன் ஆற்றலுக்குரிய அணியாகத்) தெரிந்தெடுத்து அணிந்துள்ளாள்; உலகில் எல்லாப் பொருள்களும் அழிந்தொழியும் இறுதி நாளிலே (யாவும் நீருகி உதிரும்படி) முதிர்ந்து கனலும் சூரியனைப் போன்று (வெம்மை மிக்கு) அழலும் முகத்தினையுடையாள்;

கு :—அரி - சிங்கம். யாளி - யானையைப் போன்று துதிக்கையும் சிங்கத்தினைப் போன்று ஏனையுடலமைப்பும் உடையதொரு வலிய விலங்கு. பணி - பாம்பு. தெற்றுதல் - ஒன்றுவிட்டொன்ருக இடையிட்டுப் பிணைத்தல். இறுதல் - பசையற்று மடிந்தொழிதல். முற்றுதல் - முதிர்தல். (44)

3686. ஆழி வறக்க முகக்க வமைந்த
மூழை யெனப்பொலி மொய்பில வாயாள்
கூழை புறத்து விரிந்ததொர் கொட்பால்
ஊழி நெருப்பி னுருத்தனை யொப்பாள்.

ஆழி வறக்க முகக்க அமைந்த
மூழையெனப் பொலி மொய் பில வாயாள்;
கூழை புறத்து விரிந்தது ஓர் கொட்பால்,
ஊழி நெருப்பின் உருத்தனை ஒப்பாள்.

பொ :—கடல் வற்றும்படி அதன் நீரை ஒரு சேர முகந்து கொள்ளுதற்கு அமைந்த அகப்பை என்று சொல்லும்படி விளங்கும் பெரிய குகை போலும் வாயினையுடையாள்; (செந்நிறமுடைய) கூந்தல் புறத்தே விரிந்து பரந்து அலைதலால் ஊழித் தீயின் உருவத்தை ஒத்துக் காணப்படுவாள்;

கு :—ஆழி - கடல். வறத்தல் - நீரின்றி வற்றுதல். மூழை - முகக்கும் கருவியாகிய அகப்பை. கொட்பு - சுழன்று அலைதல். (45)

**3687.** தடிதட வப்பல தலைதழு வத்தாள்
நெடிதடை யக்குடர் கெழுமு நிணத்தாள்
அடிதட வப்பட வரவ மிசைக்கும்
கடிதட முற்றவ ளுருமு கறிப்பாள்.

தடி தடவப் பல தலை தழுவத் தாள்
நெடிது அடையக் குடர்கெழுமு நிணத்தாள்,
அடி தடவப் பட அரவம் இசைக்கும்
கடி தடம் உற்றவள், உருமு கறிப்பாள்.

பொ :—தசைத் துண்டங்கள் பல நிலத்திற் பொருந்தவும் பல உடல்களின் தலைகள் தன்னிடத்தே பொருந்தி யமையவும் தன் கால்கள்வரை நீண்டு தொங்கும்படி குடர்களோடு பொருந்திய நிணமாலையினையுடையாள்; தன் பாதத்தினைத் தடவி நிலத்திற் பொருந்தும் வண்ணம் படத்தோடு கூடிய பாம்பினைக் கடிசூத்திரமாக (அரைக்கச்சையாக)க் கட்டிய அரையினையுடையாள்; இடியிடிப்பது போன்று பற்களை (நறநறவென)க் கடித்து ஒலியெழுப்புவாள்;

கு :—தடி - தசைத்துண்டம். நிணம் - மாமிசம். கடிதடம் - அரையிடம். உருமு - இடி. கறித்தல் - கடித்தல். (46)

**3688.** இவையிறை யொப்பன வென்ன விழிப்பாள்
அவைகுளி ரக்கடி தழலு மெயிற்றாள்
குவைகுலை யக்கடல் குவிய வலைப்பாள்
நவையில் புவித்திரு நாண நடப்பாள்.

இவை இறை ஒப்பன என்ன விழிப்பாள்,
அவை குளிரக் கடிது அழலும் எயிற்றாள்,
குவை குலையக் கடல் குவிய அலைப்பாள்,
நவை இல் புவித்திரு நாண நடப்பாள்.

பொ :—(கண்களாகிய) இவை ஊழித் தீயை ஒப்பன என்று சொல்லும்படி தீப்பொறி பரக்க விழித்துப் பார்ப்பாள்; (அழல் மிக்க) அக்கண்களும் குளிர்ச்சியுடையன என்னும்படி (அவற்றினும் மேலாகக்) கனன்று அழலுமிழும் பற்களை யுடையாள்; கூட்டமாய்ச்

செறிந்த மலைகள் நிலைகுலைந்து சிதறவும், பல திசையிலுள்ள கடல்கள் ஒன்ருய் வந்து கூடவும் (இவ்வாறு உலகப் பொருள்களை) அலைத்துச் சிதைப்பாள்; குற்றமற்ற நிலமகள் (இவளும் ஒரு பெண்ணே என) நாணி வருந்தும்படி அதிர நடத்தலையுடையாள் ;

கு :—இவை - கண்களாகிய இவை. இறை - ஊழித்தீ ; உலகப் பொருள்கள் யாவும் நீருய் இற்றுச் சிதையும்படி செய்வது ஊழித்தீ யாதலின், இறையென்பது காரணப் பெயர். அவை - அக்கண்கள். முற்குறித்த கண்களின் அழல் வெம்மை குளிர்ந்தது என்னும்படி அக்கண்களினும் பன்மடங்கு மிக்க வெம்மையுடன் அவளுடைய எயிற்றின் அழல் பெருகித் தோன்றியது என்பார், ‘அவை குளிரக் கடிது அழலும் எயிற்ருள்’ என்ருர். தன்னை அகழ்ந்து துன்புறுத்தி ஞரையும் வீழாமல் தாங்கும் பொறையுடைய நிலமகள் என்பார் ‘நவையில் புவித்திரு’ என்ருர். நவை - குற்றம். புவித்திரு - பூமியா கிய பெண். பெண்ணினத்தவளாகிய அயோமுகியின் நாணமற்ற நடை, எல்லாக் குற்றங்களையும் பொறுக்கும் பொறையுடைய நிலமக ளாலும் பொறுத்தற்கரியதாய் அப்பூமியும் நாணமுற்று வருந்தும்படி அதிர்ச்சியைத் தந்தது என்பார் ‘நவையில் புவித்திரு நாண நடப் பாள்’ என்ருர். (47)

**3689.** நீளர வச்சரி தாழ்கை நிரைத்தாள்
ஆளர வப்புலி யார மணைத்தாள்
யாளி யினைப்பல தாலி யிசைத்தாள்
கோளரி யைக்கொடு தாழ்குழை யிட்டாள்.

நீள் அரவச்சரி தாழ்கை நிரைத்தாள்;
ஆள் அரவப்புலி ஆரம் அணைத்தாள்;
யாளியினைப் பல தாலி இசைத்தாள்;
கோள் அரியைக்கொடு தாழ்குழை இட்டாள்;

பொ :—தாழ்ந்து அசையும் தன் முன் கையின் கண்ணே நீண்ட பாம்பாகிய வளையல்களை வரிசையாக அணிந்துள்ளாள் ; பாம்பினுற் பிணிக்கப்பட்ட புலிமாலை பூண்டுள்ளாள் ; பல யாளிகளை ஒன்ருே டொன்று இசையும்படி பொருத்தித் தாலியாக அணிந்துள்ளாள் ; கொலைத் தொழிலையுடைய சிங்கங்களைக் கொண்டு தாழ்ந்தசையும் குண்டலங்களாகக் காதுகளிற் பொருத்தியுள்ளாள் ;

கு :—அரவச்சரி - அரவமாகிய சரி என விரியும். அரவம் - பாம்பு, சரி - வளையல். நிரைத்தல் - அடுக்கடுக்காக மேலும் மேலும் அணி தல். ஆரம் - மார்பிலணியும் மாலை. அரவம் ஆள்புலியாரம் என

இயைக்க. துதிக்கையோடு கூடிய யாளிகள் பலவற்றைக் கையொடு கால்களைப் பின்னிப் பிணைத்துத் தாலியாகக் கொண்டாள் என்பார், 'யாளியினைப் பல தாலியிசைத்தாள்' என்றார். கொடு - கொண்டு, குழை - குண்டலம் என்னும் காதணி. (48)

அயோமுகியைக் கண்ட இலக்குவன் அவளது
கொடுமை யுணர்ந்து நீ யார்? என வினவுதல் 3690-3692

3690. நின்றன ளாசையி னீர்கலு ழுங்கண்
குன்றி நிகர்ப்ப குளிர்ப்ப விழிப்பாள்
மின்றிரி கின்ற வெயிற்றின் விளக்கால்
கன்றிரு ளிற்றிரி கோளரி கண்டான்.

நின்றனள், ஆசையின் நீர் கலுழும் கண்
குன்றி நிகர்ப்ப, குளிர்ப்ப விழிப்பாள்;
மின் திரிகின்ற எயிற்றின் விளக்கால்,
கன்று இருளில் திரி கோளரி கண்டான்.

பொ :—ஆசையினால் உவகைக் கண்ணீரைச் சொரியும் கண்கள், குன்றிமணியைப் போன்று செந்நிறமுடையவை (சினக் குறிப்பாகிய வெம்மை நீங்கிக்) குளிர்ச்சியடையும் வண்ணம் (இலக்கு வனை விரும்பி) இமையாது பார்த்தவளாய் (அவன் முன்னே) நின்றாள். (எதிர்த்தாரைத் தாக்கி) உயிர்கொள்ளவல்ல சிங்கம்போல் வானாகிய இலக்குவன், மின்னலைப் போன்று ஒளிமிக்கு உலாவு கின்ற அவளுடைய கோரப் பற்களாகிய விளக்கொளியினால் செறிந்த இருளிலும் அவளைக் கண்டு கொண்டான்.

கு :—'உயிர்ப்பின் நெருப்பு உமிழ்கின்றனள்' என்னும் 43-ஆம் செய்யுள் முதல் இதுவரை அயோமுகியின் வினையாக வந்த வினை முற்றுக்கள் யாவும் எச்சத் தன்மையடைந்து முற்றெச்சமாய், இச் செய்யுளில் வந்த 'நின்றனள்' என்னும் வினைகொண்டு முடிந்தன. குன்றி - குன்றிமணி. கன்றுதல் - முதிர்தல். கோள் அரி - கொள்ளு தலில் வல்ல சிங்கம்; இத்தொடர் ஈண்டு ஆகுபெயராய்ச் சிங்கம் போல்வானாகிய இலக்குவனை யுணர்த்தி நின்றது. 'கோளுலாஞ் சிங்க மன்னன்' (சீவக. 749) என்னுந் தொடர் இங்கு ஒப்புநோக் கத்தக்கதாகும். (49)

3691. பண்டையி னாசி யிழந்து பதைக்குந்
திண்டிற லாளொடு தாடகை சீராள்

கண்டக ராய வரக்கர் கணத்தோர்
ஒண்டொடி யாமிவ ளென்ப துணர்ந்தான்.

"பண்டையின் நாசி இழந்து பதைக்கும்
திண்திற லாளொடு தாடகை சீராள்;
கண்டகர் ஆய அரக்கர் கணத்து ஓர்
ஒண்தொடி ஆம் இவள்" என்பது உணர்ந்தான்.

பொ :—(அயோமுகியைக் கண்ட இலக்குவன்) "இவள் முன்னர் மூக்கினை இழந்து வருந்தும் மிக்க வன்மையினையுடையவளாகிய சூர்ப்பணகையோடு தாடகையினையும் ஒத்த இயல்பினையுடையாள்; கொடியோர்களாகிய அரக்கர் கூட்டத்தைச் சேர்ந்த பெண்ணுவாள்" என்ற உண்மையை உணர்ந்தான்.

கு :—முன் செய்யுளில் வந்த 'கோளரி' என்னும் எழுவாயை இங்கும் அடுத்த செய்யுளிலும் வருவித்து, உணர்ந்தான், என்பான், என்ருன் என முடிக்க. நாசி - மூக்கு. பதைத்தல் – காமத்துயராற் கலக்கமுற்று மெலிதல். திண் திறலாள் - மனத்திண்மையும் உடல் வலியும் உடையாள்; சூர்ப்பணகை. சூர்ப்பணகையும் தாடகையும் பிறப்பாற் பெண்பாலாராயினும் பெண்ணியல்புக்கு ஏலாத உடல் வன்மையும் கொடுமையும் உடைய அரக்கியராவர். இலக்குவனுல் முன்பு நாசியிழந்து பதைக்கும் நிலைமை சூர்ப்பணகை யொருத்திக்கே யுரியதாகலின் 'நாசியிழந்து பதைக்கும் திண்டிறலாளொடு' என அவளை ஒடுக்கொடுத்துப் பிரித்தார். தாடகை என்னும் அரக்கி விசுவாமித்திரர் இயற்றிய வேள்விக்கு இடையூறு செய்யவந்து இராமனுற் கொல்லப்பட்ட செய்தி முன்னர்ப் பாலகாண்டம் தாடகைவதைப் படலத்திற் கூறப்பட்டது. சீராள் என்ற சொல், புகழற்ற இழி நிலையள் என்பதை யுணர்த்தும் குறிப்பு மொழியாய் நின்றது. கண்டகர் - வழிச் செல்வாரைத் தடுத்து முட்போன்று வருத்தும் கொடியோர். கண்டகம் - முள். கொடியோர் என்ற பொருளில் 'முள்ளுடையவர்கள்' (4-77-5) எனக் குறிப்பிடுவர் அப்பரடிகள். ஒண் தொடி - ஒள்ளிய தொடியினையுடையாள்; இச்சொல் இங்குப் 'பெண்' எனப் பாலுணர்த்தும் அளவாய் நின்றது. (50)

**3692.** பாவிய ராமிவர் பண்பிலர் நம்பால்
மேவிய காரணம் வேறிலை யென்பான்
மாவியல் கானின் வயங்கிருள் வந்தாய்
யாவள டியுரை செய்கடி தென்ருன்.

"பாவியர் ஆம் இவர் பண்பு இலர்; நம்பால்
மேவிய காரணம் வேறு இலை" என்பான்,
"மா இயல் கானின் வயங்குஇருள் வந்தாய்!
யாவள் அடீ? உரை செய், கடிது" என்றான்.

பொ:—"தீவினையாளராகிய இவ்வரக்கியர்கள் நற்குணம் உடையரல்லர், இன்னோர் நம்மை அடைந்தமைக்கு உரிய காரணம், (தம்முடைய முறையற்ற ஆசையல்லது) பிறிதொன்றும் இல்லை" என உணர்ந்த இலக்குவன், "விலங்குகள் திரியும் காட்டினுள்ளே மிக்க இருட்பொழுதிலே வந்துள்ளாய், நீ யாவள் அடீ! விரைவிற் சொல்" என அதட்டிக் கேட்டான்.

கு:—பாவியர் - தீத்தொழிலாளராய கொடியோர். பாவம் - தீயசெயல். பண்பு - உயிர்கள்பால் செலுத்தற்குரிய அன்பு அருள் முதலிய நற்குணங்கள். 'காரணம் வேறு இலை' என்றது, தம்முடைய இச்சையை நிறைவேற்றிக் கொள்வதே காரணமன்றிப் பிறிதொரு காரணமும் இல்லை யென்றவாறு. 'கடிது உரைசெய்' என்றது, கொடியவளாகிய அவ்வரக்கியாலுளதாம் தீமையினை யுணர்ந்து அவ்விடத்தினின்றும் அவளை விரைந்து வெருட்டி விலக்குதற் பொருட்டாம். (51)

அயோமுகி தான் வந்த காரணத்தைக் கூறித்
தன்னை ஏற்றுக்கொள்ளும்படி வேண்டுதல் 3693-3694

3693. பேசின னங்கவள் பேசுற நாணாள்
ஊச லுழன்றழி சிந்தைய ளுந்தான்
ஏசலி லன்பின ளாயினி துன்பால்
ஆசையின் வந்த வயோமுகி யென்றாள்.

பேசினன், அங்கு அவள் பேசுற நாணாள்,
ஊசல் உழன்று அழி சிந்தையளும் தான்,
"ஏசல் இல் அன்பினளாய் இனிது உன்பால்
ஆசையின் வந்த அயோமுகி" என்றாள்.

பொ:—(இவ்வாறு இலக்குவன்) கூறினானாக, ஊசல்போல் இங்கும் அங்கும் அலைக்கப்பட்டு வருந்திய சிந்தையினளாய் அங்கு நின்ற அயோமுகி, (தானுற்ற காமத்தன்மையினை) எடுத்துரைத்தற்குச் சிறிதும் நாணம் உறாதவளாய், "குற்றமற்ற அன்பினை யுடையளாய் உன்பால் வைத்த ஆசையால் இன்பச் செவ்வியுடன் வந்த அயோமுகி என்பவள் யான்" என மறுமொழி கூறினாள்.

கு:—ஆடவர்முன் நில்லாது விலகியொழுகுதல் குலப் பெண்டிரது இயல்பாகவும், இவள் இலக்குவன்முன் நாணமின்றி நின்று அவன்பால் தான் கொண்ட காமத்தன்மையினை எதிர்நின்று எடுத்துரைக்கவும் துணிந்தாள் என்பார், 'அங்கு அவள் பேசுற நாணுள்' என்றார். "தாமுறு காமத் தன்மை தாங்களே யுரைப்பதென்ப, தாமென லாவதன்றால் அருங்குல மகளிர்க்கம்மா' (ஆரணிய-சூர்ப்பணகை - 45) என, இக்கருத்தினைச் சூர்ப்பணகை கூற்றாக ஆசிரியர் விரித்துக் கூறியுள்ளமை காணலாம். அயோமுகி தான் கொண்ட காம விருப்பத்திற்கு இவன் இசைவானோ இசையானோ எனத் தன் மனத்துட்கொண்ட ஐயத்தால் ஒருபாற்படாது ஊசல் போன்று அங்குமிங்கும் அல்லலுற் றலையும் உள்ளமுடையளாயினுள் என்பார், "ஊசலுழன்றழி சிந்தையள்" என்றார். ஊசல் - ஊஞ்சல், "ஆசைவன் பாசமெய்தி அங்குற்றேன் இங்குற்றேனாய்; ஊசலாட்டுண்டு வாளா உழந்துநான் உழிதராமே' (4-76-8) எனவரும் தேவாரத் தொடர் இங்கு ஒப்புநோக்கத் தகுவதாகும். (52)

**3694.** பின்னு முரைப்பவள் பேரெழில் வீரா
முன்ன மொருத்தர் தொடாமுலை யோடுன்
பொன்னின் மணித்தட மார்பு புணர்ந்தெ
னின்னுயி ரைக்கடி தீகுதி யென்றாள்.

பின்னும் உரைப்பவள், "பேர் எழில் வீரா!
முன்னம் ஒருத்தர் தொடா முலையோடு உன்
பொன்னின் மணித் தட மார்பு புணர்ந்து, என்
இன் உயிரைக் கடிது ஈகுதி" என்றாள்.

பொ:—(இவ்வாறு தன் விருப்பத்தைத் தெளிவாகக் குறித்த) பின்னரும் அதனை விளக்கமாகச் சொல்லத் தொடங்கிய அயோமுகி, "பேரழகினையுடைய வீரனே! இதற்குமுன் ஆடவர் ஒருவராலும் தீண்டப்படாத என் தனங்களுடன் உனது பொன்போலும் நிறத்தினையும் அழகினையுமுடைய மார்பு பொருந்தும் வண்ணம் முயங்கி, (உடலோடு நிலைபெறாது ஊசலாடும்) எனது இனிய உயிரை விரைவில் எனக்குரியதாகத் தந்து என்னை உய்விப்பாயாக" என இரந்து வேண்டினாள்.

கு:—பின்னும் என்புழி உம்மை இறந்தது தழீஇயது. முன் குறிப்பால் உணர்த்தியதேயன்றி அதனைப் பின்னர் வெளிப்படையாகவும் கூறத் தொடங்கினாள் என்றவாறு. கன்னிமைத் தன்மையிற் சிறிதும் மாறாத தூயநிலையினள் எனத் தன்னைப் புலப்படுத்தும்

நோக்கத்துடன் 'முன்னம் ஒருத்தர் தொடா' என்றாள். ஒருத்தரும் என்புழி உம்மை விகாரத்தால் தொக்கது. (53)

### இலக்குவன் வெகுண்டுரைத்தல்

**3695.** ஆறிய சிந்தைய ளஃதுரை செய்யச்
சீறிய கோளரி கண்கள் சிவந்தான்
மாறிலி வார்கணை யிவ்வுரை வாயிற்
கூறிடி னின்னுடல் கூறிடு மென்றான்.

ஆறிய சிந்தையள் அஃது உரை செய்யச்
சீறிய கோளரி, கண்கள் சிவந்தான்,
"மாறு இல் இ வார்கணை, இவ்வுரை வாயில்
கூறிடின், நின் உடல் கூறு இடும்" என்றான்.

பொ :—வெகுளி தணியப்பெற்ற மனத்தினளாகிய அவள் (தன் காம மிகுதியைப் புலப்படுத்தும்) அம்மொழியைக் கூறிய அளவில், சினமிக்குப் பாய்ந்து உயிர் கொள்ளவல்ல சிங்க ஏற்றினை ஒப்பானாகிய இலக்குவன், வெகுளியாற் கண்கள் சிவக்கப் பெற்றவனாகி (அவளை நோக்கி) "இம்மொழியை (மீண்டும்) நின்வாயினால் கூறினை யானால், (யாவராலும்) தடுத்தற்கரியதாகிய இந்த நீண்ட அம்பு நின்னுடலிற் பாய்ந்து அதனை இருகூறாகப் பிளந்துவிடும்" என்றான்.

கு :—என்றும் சினம் மூண்டெரியுஞ் சிந்தையினளாகிய அயோமுகி, அழகனாகிய இலக்குவனைக் கண்ட மாத்திரத்தே தன்னுள்ளத் தெழுந்த காமத்தால் சினந் தணியப்பெற்ற சிந்தைய ளாயினள் என்பார், 'ஆறிய சிந்தையள்' என்றார். அஃது - அவள் கூறிய மொழி. குடிப்பிறப்புடைய சான்றோரால் அருவருத்து ஒதுக்கத்தக்கது என்பார் 'அஃது' என்று சுட்டினார். அயோமுகி தன் காமநிலையினைப் புலப்படுத்தும் நிலையிற்கூறிய அம்மொழி தனது குடிப்பிறப்பின் இயல்பினைச் சிதைப்பதாயிருத்தல் பற்றி இலக்குவன்பால் வெகுளி தோன்றியது என்பார், 'அஃது உரை செய்யச் சீறிய கோளரி கண்கள் சிவந்தான்' என்றார். இது 'உறுப் பறை, குடிகோள், அலை, கொலை என்ற - வெறுப்பின் வந்த வெகுளி நான்கே' (தொல் – மெய்ப்பாடு - 10) என்னும் நால்வகையுள் குடிகோள் பற்றித் தோன்றிய வெகுளியாகும். குடிகோள் - குடிப் பிறப்புப் பற்றிய பெருமைக்குக் கேடு சூழ்தல். கண் சிவத்தல், வெகுளி பற்றிய மெய்ப்பாடு. கூறிடின் – கூறினால், இடுபகுதிப் பொருள் விகுதி. வார்கணை - நீண்ட அம்பு. கூறிடும்-கூறுபடுத்தும்; இருகூறாகப் பிளந்து விடும். (54)

## அயோமுகி மீண்டும் இலக்குவனை இரந்து வேண்டுதல் 3696-3697

**3696.** மற்றவ னவ்வுரை செப்ப மனத்தாற்
செற்றிலள் கைத்துணை சென்னியின் வைத்தாள்
கொற்றவ நீயெனை வந்துயிர் கொள்ளப்
பெற்றிடி னின்று பிறந்தனெ னென்றாள்.

மற்று அவன் அவ் உரை செப்ப, மனத்தால்
செற்றிலள், கைத்துணை சென்னியின் வைத்தாள்,
"கொற்றவ! நீ எனை வந்து உயிர் கொள்ளப்
பெற்றிடின், இன்று பிறந்தனென்" என்றாள்.

பொ :—இலக்குவன் அம்மொழியைக் கூறவும் (அயோமுகி) தன் மனத்திற் சினங்கொள்ளாதவளாய், இருகைகளையும் சென்னியிற் குவித்து வணங்கினவளாய், "வெற்றியையுடைய வேந்தனே (என்னாற் காதலிக்கப் பெற்ற ஆருயிர்த் தலைவனாகிய) நீயே வந்து (நின் கையிலுள்ள அம்பினால்) என் உயிரைக் கவர்ந்து கொள்ளப் பெறுவேனாயின், (இவ்வுலகிற் பெண்ணாகப்) பிறந்த பயனை இன்றே பெற்றவளானேன்" என்றாள்.

கு :—மற்று - அசை. அவ்வுரை - அயோமுகியுள்ளத்திற் செற்றம் தோன்றும்படி இலக்குவன் கூறிய இகழுரை. அயோமுகி, தன்னை இலக்குவன் அவமதித்துக் கூறிய இகழுரையைக் கேட்டும் தான் அவன்பாற் செற்றங்கொள்ளாது பகைமையுடைய அவனையும் பணிந்து தனது நிறையழிந்து இரந்து நின்றமைக்கு அவள் அவன்பாற் கொண்ட பொருந்தாக் காமமே காரணமாகும். இவ்வாறு அன்பின்றித் தன்னை இகழ்ந்து வெறுத்தாரையும் பின் தொடர்ந்து இரந்து நிற்கும் சிறுமை காமநோயுற்றார் அடைதற்குரியதே என்பதனை,

'செற்றார்பின் செல்லாப் பெருந்தகைமை காமநோய்
உற்றார் அறிவதொன் றன்று' (திருக்குறள் 1255)

என்பதனால் திருவள்ளுவர் உய்த்துணரவைத்த திறம் இங்கு நினைத்தற்குரியதாகும். கைத்துணை - கையிரண்டினையும். துணை-இரண்டு. 'நின்னையின்றி உயிர்தரியா நிலையினளாகிய என்னை நீ நின்கணையால் ஒறுத்து உயிர் கவர்தலும் எனக்கு இன்பமாகவே அமையுமாதலின், யான் பிறந்ததன் பயனை நின்னைக் காணப்பெற்ற இன்றே பெற்றவளானேன்' என்பாள், 'கொற்றவ நீ எனைவந்து உயிர் கொள்ளப் பெற்றிடின், இன்று பிறந்தனென்' என்றாள். 'நின்னை

அணையப் பெருத நிலையில் நின் கையால் ஒறுக்கப்பட்டு இறத்தலையே யான் விரும்புகின்றேன்' என்ருளாயிற்று. அன்பு செய்யப் பெற்ருரால் ஒறுக்கப்படுதலும் அன்புடையார்க்கு இன்பமே விளைக்கும் என்பதாம். (55)

3697. வெங்கத மில்லவள் பின்னரு மேலோய்
இங்கு நறும்புன ஞடுதி யென்னின்
அங்கையி ஞலெனே யஞ்சலே யென்ருற்
கங்கையி னீர்கொணர் வென்கடி தென்ருள்.

வெங்கதம் இல்லவள் பின்னரும், "மேலோய்!
இங்கு நறும் புனல் நாடுதி என்னின்,
அங் கையினுல் எனை 'அஞ்சலை' என்ருல்,
கங்கையின் நீர் கொணர்வென் கடிது" என்ருள்.

பொ:—தன்கண் வெம்மையுடைய கோபத்தை நீக்கியவளாகிய அயோமுகி, பின்னும் (இலக்குவனை நோக்கிக் கூறுபவளாய்,) "மேன்மை மிக்க வீரனே! இவ்வனத்தின்கண்ணே (பருகுதற்கு ஏற்ற) நல்ல தண்ணீரை நாடிப் பெற விரும்பினையாயின், நின் அழகிய கையினுல் 'அஞ்சாதே' என எனக்கு அபயம் அளித்தனையானுல், (சிறப்பு மிக்க தீர்த்தமாகிய) கங்கையாற்றின் தூய நீர் வேண்டுமாயினும் யான் விரைவிற் கொண்டுவந்து தருவேன்" எனக் கூறினுள்.

கு:—கதம் - கோபம். இல்லவள் - இல்லையாகச் செய்தவள்; நீக்கியவள். கங்கையின் நீரும் என்புழி சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. (56)

## தன் வேண்டுகோளை ஏலாது வெகுண்டுரைத்த இலக்குவனைக் குறித்து அயோமுகி சிந்தித்தல்

3698. சுமித்திரை சேயவள் சொன்னசொ லன்ன
கமித்தில னின்னிரு காதொடு நாசி
துமிப்பதன் முன்பக லென்பது சொல்ல
இமைத்தில ணின்றன ளின்ன நினைந்தாள்.

சுமித்திரை சேய், அவள் சொன்ன சொல் அன்ன
கமித்திலன், "நின் இரு காதொடு நாசி

துமிப்பதன் முன்பு அகல்” என்பது சொல்ல,
இமைத்திலள் நின்றனள், இன்ன நினைந்தாள்.

பொ :—சுமித்திரையின் புதல்வனாகிய இலக்குவன், அவ் அயோமுகி சொன்ன சொற்களாகிய அவற்றைக் கேட்கப் பொறாதவனாகி, (அவளை நோக்கி) “நின்னுடைய இரண்டு காதுகளோடு மூக்கினையும் அறுத்து ஒறுப்பதற்கு முன்னரே (இவ்விடத்தை விட்டு) அகன்று ஓடியுய்வாயாக” என்ற வார்த்தையைச் சொல்லக் (கேட்டுச் சிறிது நேரம்) கண்ணிமையாமல் திகைத்து நின்றவள் (தன் மனத்துள்ளே) பின்வருமாறு நினைப்பாளாயினள்.

கு :—சுமித்திரை - தசரதனுடைய மனைவியர் மூவருள் இளையவள்; இலக்குவனுக்கும் சத்துருக்கனுக்கும் தாய். பிற பெண்டிரைக் கண்டால் தன் தாய் எனக் கருதும் தூய சிந்தையன் இலக்குவன் என்பார், ‘சுமித்திரை சேய்’ என்றார். கமித்திலன் - பொறாதவனாகி; முற்றெச்சம். கமித்தல் - பொறுத்தல். அயோமுகி நினைந்தவை அடுத்த செய்யுளிற் கூறப்படும். (57)

### இலக்குவனைத் தூக்கிச் செல்லக் கருதிய அயோமுகி அயலே சிறிது விலகிச் செல்லுதல்

**3699.** எடுத்தனெ னேகினெ னென்முழை தன்னுள்
அடைத்திவன் வெம்மை யகற்றிய பின்னை
உடற்படு மாலுட னேயுறு நன்மை
திடத்திது வேநல னென்றயல் சென்றாள்.

“எடுத்தனென் ஏகினென், என் முழை தன்னுள்
அடைத்து, இவன் வெம்மை அகற்றிய பின்னை,
உடற்படுமால்; உடனே உறும் நன்மை;
திடத்து இதுவே நலன்” என்று அயல் சென்றாள்.

பொ :—“(இவனைப்) பற்றி எடுத்தேனாகி இவ்விடத்தை விட்டுச் சென்று எனது குகையினுள்ளே அடைத்து வைத்து, வெகுளிக்குக் காரணமாகிய இவனது வன்மையைத் தணித்த பின்னரே இவன் எனது விருப்பத்திற்கு உடன்படுவான். அவ்வளவில் (இவனை வலிய அணைந்து இன்புறுதலாகிய) நலம் எனக்கு உடனே எய்தும். உறுதியுடையதாகிய இச்செயலே எனக்கு நன்மை தருவது” என்று (அவன் முன்னில்லாது அவ்விடத்தை விட்டு நீங்கிச்) சிறிது தூரத்தே விலகிச் சென்றாள்.

கு :—எடுத்தல் - தூக்குதல். முழை - குகை. அடைத்தல் - சிறைப் படுத்தல். வெம்மை அகற்றல் - வெகுண்டு பொருதற்குக் காரண மாகிய உடல் வன்மையும் உள்ளத் திண்மையும் குறையச் செய்து வெகுளியை நீக்குதல். வெம்மை - வெகுளி; ஈண்டு அதன் காரண மாகிய வன்மையைச் சுட்டி நின்றது. 'உடன்படும்' என்பது 'உடற் படும்' எனச் செய்யுட் டொடை நோக்கித் திரிந்தது. ஆல் - அசை. திடத்து இதுவே-உறுதியுடையதாகிய இச்செயலே. நலன்-நன்மை விளைப்பது. (58)

## அயோமுகி மோகனச் செய்கையால் இலக்குவனை எடுத்துச் செல்லுதல்

**3700.** மோகனை யென்பது முந்தி முயன்றாள்
மாக நெடுங்கிரி போலியை வவ்வா
ஏகின ளும்பரி னிந்துவொ டேகும்
மேக மெனும்படி நொய்தினின் வெய்யாள்.

மோகனை என்பது முந்தி முயன்றாள்,
மாக நெடுங் கிரி போலியை வவ்வா,
ஏகினள் உம்பரின், இந்துவொடு ஏகும்
மேகம் எனும்படி, நொய்தினின் வெய்யாள்.

பொ :—கொடுமையுடையவளாகிய அயோமுகி, (யாவரையும் மயக்கும் தன்மையினது ஆகிய) மோகனம் என்னும் செய்வினையை முற்பட்டு முயன்று செய்தனள்; வானுறவுயர்ந்த நெடிய மலையினை யொத்தவனாகிய இலக்குவனைப் பற்றி யெடுத்துக் கொண்டு, ஆகாயத் திலே சந்திரனைச் சூழ்ந்து செல்லும் கருமேகம் என்று சொல்லும்படி விரைந்து செல்வாளாயினள்.

கு :—மோகனை - மந்திரம் வல்லார் மேற்கொள்ளும் எண்வகைச் செயல்களுள் (அஷ்ட கர்மங்களுள்) ஒன்றாகிய மோகனம் என்னும் செய்வினை. மோகனா என்னும் ஆகாரவீறு மோகனை என ஐகார மாகத் திரிந்தது. நெடுங்கிரி போலி - நெடியமலையைப் போன்று திண்மையும் துளங்காமையும் உடையவன்; என்றது ஈண்டு இலக்கு வனை. போலி - போன்றவன்; இ வினை முதல் விகுதி. வவ்வா - பற்றியெடுத்து; செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம்: வெய் யாள், முயன்றாள், இந்துவொடு ஏகும் மேகம் எனும்படி உம்பரின் நொய்தினின் ஏகினள் என இயையும். உம்பர் - ஆகாயம். இந்து - சந்திரன். நொய்தினின் - விரைவாக. இனி, மாகநெடுங்கிரி

போலியை நொய்தினின் வவ்வா' என இயைத்து, மலையையொத்தவ ணுகிய இலக்குவனை எளிதாகப் பற்றி யெடுத்துக் கொண்டு' எனப் பொருளுரைத்தலும் ஆம். நொய்து - இலேசு; கனமில்லாதது. (59)

## இலக்குவனை யெடுத்துக்கொண்டு ஆகாயத்திற் செல்லும் அயோமுகியின் தோற்றம்

3701. மந்தரம் வேலையில் வந்ததும் வானத்
திந்திர னூர்முகி லென்னலு மானுள்
வெந்திறல் வேல்கொடு சூரடும் வீரச்
சுந்தர னூர்தரு தோகையு மொத்தாள்.

மந்தரம் வேலையில் வந்ததும், வானத்து
இந்திரன் ஊர்முகில் என்னலும் ஆனுள்;
வெந் திறல் வேல்கொடு சூர் அடும் வீரச்
சுந்தரன் ஊர்தரு தோகையும் ஒத்தாள்.

பொ :—(இலக்குவனைத் தூக்கிச் செல்லும் அவ் அயோமுகி) மந்தரமலையானது தன்கண் வரப்பெற்றதாகிய கருங்கடலும், வான வீதியிலே இந்திரனுல் ஊர்ந்து செலுத்தப்பெறும் ஊர்தியாகிய கருமுகிலும் என்று சொல்லும்படி யமைந்த தோற்றமுடையவள் ஆயினுள்; யாவராலும் அணுகுதற்கு அரிய வெம்மையும் பேராற்றலும் வாய்ந்த வேற்படையைக் கொண்டு சூரபதுமனைக் கொன்று அழித்த வீரமும் பேரழகும் உடைய முருகனுல் ஏறி நடத்தப் பெறும் ஊர்தியாகிய மயிலையும் ஒத்துத் தோன்றினுள்.

கு :—'மந்தரம் (தன்) இல் வந்தது (ஆகிய) வேலையும்' என உம்மை பிரித்துக் கூட்டுக. மந்தரம்-மந்தரம் என்னும் பெயருடைய மலை. வேலை - கருங்கடல். மந்தரமும், இந்திரனும், சுந்தரனும் (முருகனும்) இலக்குவனுக்கு உவமை. வேலையும் முகிலும் தோகையும் அயோமுகிக்கு உவமை. சூர் - சூரபதுமன். சுந்தரன் என்னுஞ் சொல், அழகன் என்னும் பொருளதாய், 'என்றும் இளையாய் அழகியாய்' என்றபடி மாருத பேரழகனுகிய முருகனைக் குறித்து நின்றது. தோகை - மயில். இலக்குவனைப்பற்றி யெடுத்து அந்தரத்தே செல்லும் அரக்கியாகிய அயோமுகியின் தோற்றத்தைப் புலப்படுத்தும் நிலையில் அமைந்தது இச்செய்யுளாகும். இதன்கண், முருகக் கடவுள் வேற்படையால் சூரபதுமனைச் சங்கரித்து மயிலை ஊர்தியாகக் கொண்ட புராணச் செய்தி உவமை வாயிலாகக் குறிக்கப் பெற்றிருத்தல் காண்க. (60)

### அயோமுகியின் பிணிப்பில் பொருந்திய இலக்குவனது தோற்றம்

3702. ஆங்கவண் மார்பொடு கையி னடங்கிப்
பூங்கழல் வார்சிலை மீளி பொலிந்தான்
வீங்கிய வெஞ்சின வீழ்மத வெம்போர்
ஓங்க லுரிக்கு ளுருத்திர னொத்தான்.

ஆங்கு அவள் மார்பொடு கையின் அடங்கிப்
பூங்கழல் வார்சிலை மீளி பொலிந்தான்;
வீங்கிய வெஞ்சின வீழ்மத வெம்போர்
ஓங்கல் உரிக்குள் உருத்திரன் ஒத்தான்.

பொ :—அப்பொழுது அவ் அயோமுகியின் மார்பும் கைகளும் ஆகிய அங்கங்களினுள்ளே அடங்கித் தோன்றினவனாகிய, பூத்தொழிலமைந்த வீரக்கழலையும் நீண்ட விற்படையினையும் உடைய பெருவீரனாகிய இலக்குவன், அந்நிலையில், மிக்குத் தோன்றும் கடுங்கோபத்தையும் தன் மேனியிற் பெருக்கெடுத்து இழியும் மதத்தினையும் உடையதாய் வெகுண்டு போர் செய்யும் யானையினையுரித்துப் போர்த்த போர்வையினுள்ளே திகழும் உருத்திரமூர்த்தியை ஒத்து விளங்கினான் என்பதாம்.

கு :—ஓங்கல் - மலை. இச்சொல், வீழ்மத வெம்போர் எனவரும் அடைமொழிகளால் குறிப்புருவகமாய் நின்று யானை எனப் பொருள் தந்தது. சிவபெருமான், தாருகாவனத்து முனிவர் வேள்வியிற் றோன்றிய யானையினைக் கொன்று அதன் தோலையுரித்துப் போர்வையாகப் போர்த்தருளிய புராணச் செய்தி இச்செய்யுளிற் குறிக்கப்பட்டது. உருத்திரன் ஒத்தான் எனவே அவ்வுருத்திரனைப் போன்று இலக்குவனும் அரக்கியை யழித்தற்குரிய சினக் குறிப்புடையவனாகக் காணப்பட்டான் என்பதும் உணர்த்தினாராயிற்று. (61)

### இலக்குவன் மீண்டு வாராமையை எண்ணி இராமன் பலவாறு சிந்தித்து வருந்துதல் 3703-3717

3703. இப்படி யேகின ளன்னவ ளிப்பால்
அப்பிடை தேடி நடந்தவெ னாவித்
துப்புடை மால்வரை தோன்றல னென்னா
வெப்புடை மெய்யுடை வீரன் விரைந்தான்.

இப்படி ஏகினள் அன்னவள்; இப்பால்,
"அப்பு இடை தேடி நடந்த என் ஆவித்
துப்புடை மால்வரை தோன்றலன்" என்று,
வெப்புடை மெய்யுடை வீரன் விரைந்தான்.

பொ :—அத்தன்மையளாகிய அயோமுகி இவ்வாறு (இலக்குவனைப்பற்றி யெடுத்துக் கொண்டு) அப்பாற் சென்றுளாக, இப்பால் (பிரிவுத்துயரால்) வெம்மையுற்று மெலியும் மேனியையுடைய வீரனாகிய இராமன், "தண்ணீர் இருக்கும் இடத்தைத் தேடிச் சென்ற என் உயிர்க்கு வலிமை தரும் பெரிய மலையை யொத்தானாகிய இலக்குவன் இன்னும் இங்கு வந்து தோன்றினன் அல்லனே" என மனக் கலக்கம் உற்றான்.

கு :—இப்படி - 59, 60, 61-ஆம் செய்யுளிற் குறித்தவாறு. அப்பு - நீர்; வடசொல். இடை - இடம். துப்பு – வலிமை. பெரியமலை போற் சலியாதவன் என்பார் மால்வரை என்றார். விரைதல் - மனக்கலக்க முறுதல்; இச்சொல் இப்பொருளதாதல், 'விரையாது நின்றான்' (சீவக-513) எனவரும் தொடர்க்குக் 'கலங்காமல் நின்றவன்' என நச்சினார்க்கினியர் எழுதிய உரையாற் புலனும். (62)

3704. வெய்தா கியகா னிடைமே வருநீர்
★ ஐதா தலினோ வயலொன் றுளதோ
நொய்தாய் வரவே கமுநொய் திலனால்
எய்தா தொழியா னிதுவென் னைகொலாம்.

"வெய்து ஆகிய கானிடை மேவரும் நீர்
ஐது ஆதலினோ? அயல் ஒன்று உளதோ?
நொய்தாய் வர வேகமும் நொய்திலனால்;
எய்தாது ஒழியான்; இது என்னை கொலாம்?"

பொ :—"வெம்மையுடையதாகிய கானகத்தே விரும்பிப் பருகுதற்குப் பொருந்திய நல்ல தண்ணீர் வற்றி இல்லையாயினமையாலோ, அன்றி வேறு ஏதேனும் ஓர் இடையூறுளதாயிற்றோ? விரைந்து வருதற்கேற்ற வேகத்திலும் தளர்ச்சியுடையானல்லன். (ஆதலால்) வாராதிருக்க மாட்டான். இங்ஙனம் தாழ்த்தமைக்குக் காரணம் யாதோ?"

கு :—'மேவரு தமிழ்' (சீவக - 1328) என்பதற்கு 'நாடக வழக்கும் உலகியல் வழக்கும் பொருந்துதல் வரும் அகப்பொருள்' என

நச்சினார்க்கினியர் கூறும் உரை விளக்கத்தைக் கூர்ந்து நோக்குங் கால், 'மேவுதல்வரு' என்னுந் தொடரே 'மே வரு' என்றாயிற்று என்பது அவர் கருத்தாதல் புலனாம். மேவுதல் - விரும்புதல்; பொருந்துதல். ஐது - நுண்மை; ஈண்டு வரவரச் சுருங்கி இல்லை யாதலைக் குறித்து நின்றது. (63)

3705. நீர்கண் டனையிவ் வழிநே டினைபோய்ச்
சார்கொண் டெனவித் துணைசார் கிலனால்
வார்கொண் டணிகொங் கையைவவ் வினர்பால்
போர்கொண் டனனே பொருளுண் டிதெனா.

"'நீர் கண்டனை இவ்வழி நேடினை போய்ச்
சார், கொண்டு' என, இத்துணை சார்கிலனால்;
வார்கொண்டு அணி கொங்கையை வவ்வினர்பால்
போர் கொண்டனனோ? பொருள் உண்டு இது" எனா.

பொ:—'இந்நெறியே தேடிச் சென்று நீரைக் கண்டு கொண்டு வருவாயாக' என்று கூறியனுப்ப, இந்நேரமளவும் இங்கு வந்து சேர்கின்றிலன். கச்சணிந்த கொங்கையினையுடையாளை (சீதையை)க் கவர்ந்து சென்ற அரக்கரொடு போர் செய்தலை மேற்கொண்ட னனோ? இவ்வாறு அவன் வாராது தாமதித்தற்கு ஏதோ பொருள் இருத்தல் வேண்டும்.

கு:—இது - வாராது தாமதித்தல். பொருள் - காரணம்; நிகழ்ச்சி. (64)

3706. அஞ்சொற் கிளியன் னவணங் கினைமுன்
வஞ்சித் தவிரா வணன்வவ் வினனோ
நஞ்சிற் கொடியா னடலைத் தொழிலால்
துஞ்சுற் றனனே விதியின் றுணிவால்.

"அம் சொல் கிளி அன்ன அணங்கினை முன்
வஞ்சித்த இராவணன் வவ்வினனோ?
நஞ்சிற் கொடியான் நடலைத் தொழிலால்
துஞ்சுற் றனனோ, விதியின் துணிவால்?"

பொ:—"அழகிய சொற்களைப் பேசவல்ல கிளியினைப் போன்றவ ளாகிய சீதையை முன்னர் வஞ்சனையாற் கவர்ந்து சென்ற இராவ

ணன் (இவனையும்) பற்றிச் சென்றனனோ? அன்றி, நஞ்சினுங்கொடியோனாகிய அவ் அரக்கனது வஞ்சனைத் தொழிலாலும் ஊழ்வினையின் வலியாலும் இறந்து விட்டானோ?"

கு :—அணங்கு என்றது சீதையை. 'பெருவீரனும் எதிரதாக் காக்கும் அறிவுடையோனுமாகிய இலக்குவன் ஒருகால் இறந்திருப்பானாயின், அதற்கு இராவணனது வஞ்சனைத் தொழில் மட்டும் காரணமாக இருந்திருக்க முடியாது; அதனோடு எமது தீவினையும் உடன் நின்று துணை செய்திருத்தல் வேண்டும்' என்பான், 'நஞ்சிற்கொடியான் நடலைத் தொழிலால், விதியின் துணிவால் துஞ்சுற்றனனோ' என இரங்கினான் இராமன். தொழிலாலும் துணிவாலும் என உம்மை விரித்துரைக்கப்பட்டது. (65)

3707. வரிவிற் கையெனா ருயிர்வந் திலனால்
தருசொற் கருதே னொருதை யலையான்
பிரிவுற் றனெனென் பதொர்பீ ழைபெருத்
தெரிவுற் றிடவா வியிழந் தனனோ.

"வரி விற்கை என் ஆருயிர் வந்திலனால்;
தருசொல் கருதேன், ஒரு தையலை யான்
பிரிவுற்றனென் என்பது ஒர் பீழை பெருத்து
எரிவுற்றிட, ஆவி இழந்தனனோ?"

பொ :—"கட்டமைந்த வில்லையேந்திய கையினையுடைய என் அரிய உயிர்போல்வானாகிய இலக்குவன் வந்து சேர்ந்திலன்; 'தான் சொன்ன வார்த்தையினை எண்ணிப் பாராதேனாய், ஒப்பற்றாளாகிய நங்கையினைப் பிரியலுற்றேன்' என்பதொரு துன்பம் (தன்னுள்ளத்தே) பெருகி அழன்று எரிதலால் (அதன் வெம்மையினைப் பொறுக்கலாற்றாது) தன்னுயிரை இழந்துவிட்டானோ?"

கு :—வரிதல்-கட்டுதல். ஆல், அசை. தருசொல்-இந்த மான் 'மாயம் எனல் அன்றி மெய்யல' (மாரீசன்வதை - 222) எனத் தான் (இலக்குவன்) கூறிய சொல். எரிவுற்றிட-எரிதலுறுதலால். பீழை - துன்பம். (66)

3708. உண்டா கியகா ரிருளோ டொருவென்
கண்டா னயல்வே றொருகண் ணிலெனால்

புண்டா னுறுநெஞ் சுபுழுங் குறுவேன்
எண்டா னிலெனெங் ஙனநா டுகெனே.

'உண்டாகிய கார் இருளோடு ஒருவென்
கண் தான்; அயல் வேறொரு கண் இலெனால்;
புண் தான் உறு நெஞ்சு புழுங்குறுவேன்;
எண் தான் இலென்; எங்ஙனம் நாடுகெனே ?'

பொ :—நிறைந்து தோன்றிய கரிய இருளுடனே தனியேனாய எனக்குக் கண்ணாவான் அவன்தானே ; (அவனையன்றி) அயலே வேறொரு கண்ணையும் பெற்றிலேன்: (சீதையின் பிரிவுத் துயரால்) புண்ணுற்ற நெஞ்சம் (இலக்குவனது பிரிவால்) மேலும் வெதுப்புற்று வருந்துகின்றேன்; எண்ணுந் திறமில்லாதேன் (அவனை) எவ்வாறு நாடியடைவேனோ ?

கு :—உண்டாதல்-நிறைய உளதாதல். இருளோடு ஒருவென் என்றது, துணையாவார் ஒருவருமின்றி இருளே துணையாக அதனோடு தனித்துள்ளேன் என்றவாறு. உலகப் பொருள்களின் நலந் தீங்கு களை உய்த்துணர்ந்து உடனிருந்து கண் போன்று காட்டியுதவுதல் பற்றித் தம்பியாகிய இலக்குவனைத் தன் கண் என்றான் இராமன். தான் என்றது இலக்குவனை. அவன் என்னைவிட்டு நீங்கிய இந்நிலை யில் புறத்தே யான் பெற்றுள்ள கண்களால் யான் சிறிதும் பயன் பெறுமையாற் குருட்டு நிலையிலுள்ளேன் என்பான், 'அயல் வேறொரு கண்ணிலென்' என்றான். எண்-எண்ணியறியும் ஆற்றல். புண் தான், எண் தான் என்புழி, தான் என்பன இரண்டும் அசை. (67)

3709. தள்ளா வினையேன் றனியா ருயிராய்
உள்ளா யொருநீ யுமொளித் தனையோ
பிள்ளாய் பெரியாய் பிழைசெய் தனையால்
கொள்ளா துலகுன் னையிதோ கொடிதே.

"தள்ளா வினையேன் தனி ஆர் உயிர் ஆய்
உள்ளாய்! ஒரு நீயும் ஒளித்தனையோ ?
பிள்ளாய்! பெரியாய்! பிழை செய்தனையால்;
கொள்ளாது உலகு உன்னை; இது ஓ கொடிதே !"

பொ :—"ஒழிக்கவொண்ணுத் தீவினையுடையேனது ஒப்பற்ற ஆருயிராய் உள்ளோனே ! (என்னைப் பிரியாது உடன் தொடர்ந்த)

ஒருவனாகிய நீயும் (என்னை விட்டு) மறைந்தனையோ? பிள்ளைமைத் தன்மையுடையோனே! பெரியோனே! (பெரியதொரு) பிழையைச் செய்துவிட்டாய். உனது செயலை அமைவுடையதாக உலகம் ஏற்றுக் கொள்ளாது: இச்செயல், ஓ! பெரிதும் கொடுமையுடையதே!"

கு:—நுகர்ந்தாலன்றித் தீராததாய்த், தனக்கு மாறாக மற்றொன்று சூழினுந் தான் முந்துறும் பெருவலியுடையது ஊழ்வினையாதலின், தள்ளாவினை எனப்பட்டது. உயிரினுஞ் சிறந்தானாகிய நீயும் என்றானாதலின் உம்மை சிறப்பும்மை. பின் விளைவு கருதாது எத்தகைய பெரும் பகையினையும் ஒருவனாகவே முந்துற்றுத் தாக்கும் பிள்ளைமைத்தன்மையுடையாய் என்பான், 'பிள்ளாய்' என்றான். 'வருதார் தாங்கல் வாள் வாய்த்துக் கவிழ்தலென், திருவகைப்பட்ட பிள்ளை நிலையும்' (தொல் - புறத்திணை. 5) என்பது இங்கு நோக்கத் தக்கது. அல்லற்காலத்து உசாத்துணையாய் நின்று உறுதி கூறுதலில் என்னினும் மூத்த அறிவுடையாய் என்பான், 'பெரியாய்' என்றான். இனி, சிறிய வயதிலேயே பேரறிவு வாய்க்கப் பெற்றனை என்பான், 'பிள்ளாய் பெரியாய்' என்றான் எனினும் ஆம். ஆற்றொணாத் துயரில் அழுந்திய என்னைக் கைவிட்டுச் சென்றமையால் இளவலாகிய நீ என்னுயிர்க்குப் பேரிடர் செய்தனையாயினை என்பான், 'பிழை செய்தனை' என்றான். பிழை - சாதற்றுன்பம். 'பிழையுயிர் ஓம்புமின்' (வரந்தரு - 195) என்பது சிலப்பதிகாரம். நின் ஆற்றலுக்கும் பெருமைக்கும் ஒவ்வாத நிலையில் என்னைக் கைவிட்டுச் சென்ற நின் செயலைப் புகழத்தக்க நற்செயலாக உயர்ந்தோர் ஏற்றுக்கொள்ளமாட்டார்கள் என்பான், 'கொள்ளாது உலகு உன்னை' என்றான். உலகு என்றது உயர்ந்தோரை. உன்னை - உன்செயலை. 'எள்ளாத எண்ணிச் செயல் வேண்டுந் தம்மொடு, கொள்ளாத கொள்ளா துலகு' (470) எனவரும் திருக்குறட் பொருளை இச்செய்யுளில் ஆசிரியர் எடுத்தாண்டதிறம் உணர்ந்து மகிழத் தக்கதாகும். ஓ என்பது மிகுதிப் பொருட்கண் வந்த குறிப்புச் சொல். (68)

**3710.** பேரா விடர்வந் தனபேர்க் கவலாய்
தீரா விடர்தந் தனைதெவ் வர்தொழும்
வீரா வெனையிங் ஙன்வெறுத் தனையோ
வாராய் புறமித் துணைவை குதியோ.

"பேரா இடர் வந்தன பேர்க்க வலாய்!
தீரா இடர் தந்தனை; தெவ்வர் தொழும்
வீரா! எனை இங்ஙன் வெறுத்தனையோ?
வாராய், புறம் இத்துணை வைகுதியோ?"

பொ :—ஒழிக்கவொண்ணாத பெருந் துன்பங்களாக வந்தன அனைத்தையும் வேருடன் களைந்து நீக்கவல்லவனே! நீங்காத பெருந் துன்பத்தை எனக்குத் தந்தனை. பகைவரும் பணிந்து போற்றும் (பண்புடைய) வீரனே! (நின்னையின்றியமையா) என்னை (அல்லற்காலமாகிய) இந்நிலையிலே வெறுத்து விலக்கினையோ? (என்னைப் பிரிந்து) இவ்வளவு நேரம் புறத்தே தனித்திருப்பாயோ? (இருக்கமாட்டாய்), (என் துயர் நீங்க விரைவில்) வருவாயாக.

கு :—பேரா இடர் - யாவராலும் பெயர்த்து நீக்கமுடியாத பெருந் துன்பம். பேர்த்தல் - வேருடன் களைந்தெறிதல். தீரா இடர் - உயிர் உடம்போடு உள்ள அளவும் தவிராத பெருந்துயர். நினது பண்புடைமை கண்டு பகைவரும் தொழுது போற்றும் வீரனாக விளங்குகின்றாய் என்பான், 'தெவ்வர் தொழும் வீரா' என்றான். தெவ்வர் – பகைவர். தெவ்வரும் என வரவேண்டிய உம்மை விகாரத்தால் தொக்கது. 'பகையுள்ளும் பண்புள பாடறிவார்மாட்டு' (திருக்குறள் - 995) என வரும் தெய்வப் புலவர் வாய்மொழி இங்கு நோக்கத் தக்கது. இங்ஙன் - (துன்பம் மிக்க) இந்நிலையில். பகைவரிடத்தும் பண்புளனாகிய நீ, நினது அன்பிற்குரிய தமையனாகிய என்னை இத்தகைய அல்லற்காலத்தில் வெறுத்து விலகுதல் நின் பண்புடைமைக்கு ஒவ்வாது என இரங்கியவாறு. (69)

**3711.** என்னைத் தருமெந் தையையென் னையரைப்
பொன்னைப் பொருகின் றபொலங் குழையாள்
தன்னைப் பிரிவே னுளெனா வதுதான்
உன்னைப் பிரியா தவுயிர்ப் பலவோ.

"என்னைத் தரும் எந்தையை என்னையரைப்
பொன்னைப் பொருகின்ற பொலங் குழையாள்
தன்னைப் பிரிவேன், உளென் ஆவதுதான்,
உன்னைப் பிரியாத உயிர்ப்பு அலவோ?"

பொ :—என்னைப் பெற்று வளர்த்த என் தந்தையையும் என் அன்னையர்களையும் திருமகளையொத்த பொன்னால் இயன்ற குண்டலத்தை யணிந்தாளாகிய சீதையையும் (நற்பேறின்மையாற்) பிரிதலுற்று வருந்துவேன் (இறவாது) உயிரோடுள்ளேன் என்னும் அளவில் உலவித் திரிவது, (என்னுயிரினுஞ் சிறந்த தம்பியாகிய) உன்னைப் பிரியாது உடனிருத்தலாகிய உயிர்ப்புடைமையால் அன்றோ?

கு :—தருதல் - ஈன்று புறந்தருதல். என் தந்தை எந்தை எனவும், என் அன்னையர் என்னையர் எனவும் வந்தமை மரூஉ முடிபு. பொன் – திருமகள். பொலம் என்பது பொன் என்னுஞ் சொல்லின் திரிபாகும். (தொல் - புள்ளிமயங்கு 61). உயிர்ப்பு - பிராணன்; உடம்பின்கண்ணே உயிர் நிலைபெற்றிருத்தற்கு இன்றியமையாத உயிர்வளி. 'என்னுளே யுயிர்ப்பாய்ப் புறம்போந்து புக்கு, என்னுளே நிற்கும் இன்னம்ப ரீசனே' (5-21-1.) என வரும் திருக்குறுந்தொகைத் தொடர் இங்கு ஒப்புநோக்கத் தகுவதாகும். (70)

**3712.** பொற்றோ டிவர்கின் றபொலங் குழையாள்
தற்றே டிவருந் துதவம் புரிவேன்
நிற்றே டிவருந் தநிரப் பினையோ
வெற்றே டினைவந் தவிளங் களிறே.

"பொன் தோடு இவர்கின்ற பொலங் குழையாள்
தன் தேடி வருந்து தவம் புரிவேன்,
நின் தேடி வருந்த நிரப்பினையோ ?
என் தேடினை வந்த இளங்களிறே !"

பொ :—(எனக்குப் பாதுகாவலாக) என்னைத் தேடிவந்த இளமை பொருந்திய களிற்றை யொத்தவனே! பொன்னாலியன்ற தோட்டுடன் பொருந்தி விளங்கும் அழகிய குண்டலத்தை யணிந்தாளாகிய சீதையினைத் தேடி வருந்தும் தவத்தினை மேற்கொள்ளும் இடர் நிலையேனாகிய யான் (அதனை விடுத்து) நின்னைத் தேடி வருந்துந் தொழிலை மேற்கொள்ளும்படி நிறைவு செய்தனையோ ?

கு :—தோடு - மகளிர் காதணி. குழை - அத்தோட்டினோடு காதிற் பொருத்தப்பெற்றுத் தாழ்ந்தசையும் குண்டலம் என்னும் அணி. இவர்தல் - மேம்பட்டு விளங்குதல். மகளிர் தோடும் குண்டலமும் ஒருசேர அணிந்து கொள்ளும் வழக்கமுண்மை, 'நெய்விலைப்பசும் பொற்றோடு நிழன்மணிக் குழையும் நீவி' (சீவக - 488) எனவும், 'பண்கனியப் பாவைமார் பைம்பொற் றோடுங் குண்டலமும் தாம் பதைப்பப் பாடும்போது' (சீவக. 3138) எனவும் வரும் சிந்தாமணித் தொடர்களால் இனிது புலனாம். நின்னைப் பிரிந்தமையால் உளதாகிய துயரம் என்னுள்ளத்தே சீதையின் பிரிவாலுளதாகிய பெருந் துயரத்தையும் கீழ்ப்படுத்து மறக்கச்செய்து அதனிடத்தை யெல்லாம் தான் பற்றிக்கொண்டது என்பான், 'பொலங்குழையாள் தற்றேடி வருந்து தவம்புரிவேன், நிற்றேடி வருந்த நிரப்பினையோ' என்றான். 'வேலேறுபடத் தேளேறு மாய்ந்தாற்போல' என

வழங்கும் பழமொழி ஈண்டு நினைக்கத்தக்கது. தவம்புரிவேன் என்றது, பொறுக்கவொண்ணு இடருழத்தலை. நிரப்புதல்-ஒரு பொருளுக்கு ஈடாக மற்றொரு பொருளைக் கொண்டு நிறைவித்தல். தன் இனத்திற்குத் தீங்கு நேராமற் பாதுகாத்துக் கொள்ளும் இளைய யானையினைப் போன்று, நீ நின் தமையனுகிய எனக்கு எத்தகைய தீங்கும் நேராமற் காத்தற்பொருட்டு என்னைத் தொடர்ந்து வந்தனை என்பான் 'எற்றேடினை வந்த இளங்களிறே' என்ருன். 'குழூஉப் படூஉப் புறந்தருதல் குஞ்சரத்தியல்பே' என்பது, (தொல் - எழுத்து பாயிரம்) நச்சினுர்க்கினியர் உரை மேற்கோள். தேடினை - தேடி; முற்றெச்சம். (71)

3713. இன்றே யிறவா தொழியே னெமரோ
பொன்ரு தொழியார் புகல்வா ருளரேல்
ஒன்ரு கியவுன் கிளையோ ரையெலாம்
கொன்ருய் கொடியா யிதுவுங் குணமோ.

"இன்றே இறவாது ஒழியேன்; எமரோ,
பொன்ருது ஒழியார், புகல்வார் உளரேல்;
ஒன்ருகிய உன் கிளையோரை எலாம்
கொன்ருய்; கொடியாய்! இதுவும் குணமோ?"

பொ :—(நின்னைப் பிரிந்து வருந்தும் யான்) இற்றைப் பொழுதிலேயே என் உயிரைத் துறவாதொழியேன்; (இச்செய்தியைச் சென்று) கூறுவாருளராயின் எம்முடைய சுற்றத்தாரும் உயிர் துறவாமல் இரார்; (எனவே) ஒருமித்த உணர்வினராகிய உன்னுடைய சுற்றத்தாரையெல்லாம் (நின் செயலால் ஒருசேரக்) கொன்றவன் ஆயினை; (ஆதலால்) கொடுமையுடையாய் (தான் பிறந்த குலத்துக்கு இடர் விளைக்கும்) இத்தகைய கொடுஞ் செய்கையும் நினக்குரிய இயல்பாகுமோ?

கு :—நீ என்னைத் துறந்து சென்றமையால் நின்னையின்றி அமையாத யான் இறந்துபடுதல் உறுதி. யான் இறந்த செய்தி நம் சுற்றத்தார் செவிக்கு எட்டுமாயின் அவர்களும் ஒருங்கே இறத்தல் நிச்சயம். ஆகவே உன்னுடைய சுற்றத்தாரையெல்லாம் ஒருசேரக் கொன்ற பழி உன்னையே சாரும் என்பான், 'ஒன்ருகிய உன் கிளையோரையெலாம் கொன்ருய்' என்ருன். கொன்ருய் என்றது, தெளிவுபற்றி எதிர்காலம் இறந்த காலமாய் நின்றது. என்னையின்றி அமையாத நின் சுற்றத்தார் என்பான், 'எமர்' என்றும், தன்னினும் இலக்குவனுக்கு அவர்களோடுள்ள அன்புரிமை

யுறவின் மிகுதியை வற்புறுத்துவான் 'உன் கிளையோரை' என்றும் கூறினன். இறவாதொழியேன், பொன்ருதொழியார் என எதிர் மறை முகத்தாற் கூறியது, இறத்தல் உறுதி எனத் தேற்றப்பொருள் பயந்தவாறு காண்க. (72)

3714. மாந்தா முதன்மன் னவர்தம் வழியின்
வேந்தா கைதுறந் தபின்மெய் யுறவோர்
தாந்தா மொழியத் தமியே னுடனே
போந்தா யெனைவிட் டனைபோ யினையோ.

"மாந்தா முதல் மன்னவர்தம் வழியின்
வேந்து ஆகை துறந்தபின், மெய் உறவோர்
தாம்தாம் ஒழியத் தமியே னுடனே
போந்தாய்; எனை விட்டனை போயினையோ?"

பொ :—மாந்தாதா முதலிய மன்னர்கள் (அரசு புரிந்த) வழி முறையிலே வேந்தனாகி முடிசூடும் உரிமையினை யான் துறந்த பின்னர் உண்மை யுறவுடைய சுற்றத்தார்கள் அவரவரும் (தமக்குரிய வாழ்க்கைப் பணிகளில் ஈடுபட்டு என்னைத் தொடராது) நீங்க, (நீ ஒருவன் மட்டும்) தனியேனாகிய என்னுடனே போந்தனை. (இப்பொழுது) என்னைத் தனியே விடுத்துச் சென்று விட்டாயோ?

கு :—மன்னுயிரனைத்தையும் தன்னுயிரெனப் பேணிப் போற்றும் மாந்தாதா முதலிய செங்கோல் மன்னர் தோன்றிய பரம்பரையிலே பிறந்து வேந்தனாகி ஆட்சி புரியும் அரச பதவியினை யான் துறப்ப தற்கு முன்பெல்லாம் என்னை உடம்பின் நிழல்போன்று நீங்கா திருந்த சுற்றத்தார்கள், யான் அப்பதவியினைத் துறந்து வனத்திற் போந்தபொழுது என்னைப் பிரியலாற்ருது வழியனுப்பிவிட்டுத் தத்தமக்குரிய வாழ்க்கைப் பணிகளிலேயே ஈடுபட்டு அமைந்தன ராக, நீ ஒருவன் மட்டும் நினக்குரிய வாழ்க்கை யின்பத்தைத் துறந்து என்னைப் பாதுகாப்பதே நினது பணியாகக் கொண்டு என்னுடன் போந்தனை என்பான், 'வேந்தாகை துறந்தபின் மெய் யுறவோர், தாம்தாம் ஒழியத் தமியேனுடனே போந்தாய்' என்ருன். நின் துயர் காணது என் துயர் துடைத்தலையே கடமையாகக் கொண்ட இளையோனாகிய நீ யான் வாழ்க்கைத் துணையைப் பிரிந்து வருந்தும் இத்துன்ப நிலையில் என்னைக் கைவிட்டுச் சென்று விட்டாயோ என்பான் 'விட்டனை போயினையோ' என இரங்கிக் கூறினன். (73)

3715. என்னு வுரையா வெழும்வீ ழுமிருந்
துன்னு வுணர்வோய் வுறுமொன் றலவான்
மின்னு திடியா திருள்வாய் விளைவீ
தென்னு மெனுமென் றனிநா யகனே.

என்னு உரையா, எழும்; வீழும்; இருந்து
உன்னு, உணர்வு ஓய்வுறும்; ஒன்று அலவால்;
"மின்னுது இடியாது, இருள்வாய் விளைவு ஈது
என் ஆம்" எனும்; என் தனி நாயகனே.

பொ:—எனது ஒப்பற்ற தலைவனாகிய இராமன் என்று (மேற் கூறியவாறு) உரைத்து (இலக்குவனைத் தேடுதற் பொருட்டு) எழுவான்: (நிற்கலாற்ருது) கீழே விழுவான்; அமர்ந்திருந்து (நெடிது) நினைந்து உணர்விழந்து சோர்வான்; (அவன் அடைந்த இன்னல்கள்) ஒன்றல்ல. "மின்னல் இன்றி இடி யிடித்தல் இல்லை; (மின்னுமல் இடித்தது போன்று) இருட்பொழுதிலே விளைந்த இத்துன்பம் யாதாய் முடியும்?" என்று கூறி வருந்துவான்.

கு:—இது கவிக்கூற்று. என் தனி நாயகன், எழும், வீழும், ஓய்வுறும். என் ஆம் எனும் என இயையும். இவ்விருட்பொழுதிலே எத்தகைய அறிகுறியுமின்றித் திடீரெனத் தோன்றிய இப்பேரிடர், மின்னுமல் இடியிடித்தது போன்று என்னுள்ளத்தைத் திடுக்கிடச் செய்தது; இது யாதாய் முடியுமோ? என்பான், 'மின்னுது இடியாது, இருள்வாய் விளைவு ஈது என் ஆம்' என்ருன். பின்வரும் பெருந் துயரத்தை முன்னரே யெண்ணி மனவன்மை பெறுதற்குரிய கால இடையீடின்றித் திடீரெனக் கடுகிவரும் பேரிடரைக் குறித்து வழங்குவது 'மின்னுமல் இடித்தது' என்னும் பழமொழியாகும். (74)

3716. நாடும் பலசூ ழல்கடோ றுநடந்
தோடும் பெயர்சொல் லியுளைந் துயிர்போய்
வாடும் வகைசோ ருமயங் குறுமால்
ஆடுங் களிமா மதயா னையனுன்.

நாடும், பல சூழல்கள்தோறும் நடந்து;
ஓடும், பெயர் சொல்லி உளைந்து; உயிர்போய்
வாடும் வகைசோரும்; மயங்குறு மால்,
ஆடும் களி மா மத யானை அ(ன்)னுன்.

பொ :—அசையும் தன்மை வாய்ந்த மதக்களிப்பினையுடைய பெரிய யானையினை யொத்தவனாகிய இராமன், பல பக்கங்களிலும் நடந்து சென்று (தன் தம்பியைத்) தேடுவான்; ('இலக்குமணா! இலக்குமணா!' என்று) அவனுடைய பெயரைச் சொல்லிக் (கூவி யழைத்துக் கொண்டு) காடெங்கும் ஓடித் திரிவான்; (அவனை எங்கும் காணாமல்) மனம் வருந்தி உயிர் தேய்ந்து வாடும்படி (உடல்தளர்ந்து) சோர்வான்; மனமயங்கித் திகைப்புறுவான்.

கு :—ஆடுதல் - அசைதல். ஓரிடத்து நில்லாது அசைதல் யானையின் இயல்பு. இனி, அடும் என்பது ஆடும் என முதல் நீண்டதாகக் கொண்டு, 'கொல்லும் தன்மை வாய்ந்த மதக்களிப்பினையுடைய யானையை யொத்தவன்' எனப் பொருளுரைத்தலும் உண்டு. அடுதல்-கொல்லுதல். களி-மதமிகுதியாலுளதாகும் மயக்கம். (75)

**3717.** கமையா ளொடுமென் னுயிர்கா வலினின்
றிமையா தவனித் துணைதாழ் வுறுமோ
சுமையா வுலகூ டுழறொல் வினையேற்
கமையா துகொல்வாழ் வறியே னெனுமால்.

"கமையாளொடும் என் உயிர் காவலில் நின்று
இமையாதவன், இத்துணை தாழ்வுறுமோ?
சுமையா உலகூடு உழல் தொல்வினையேற்கு
அமையாது கொல் வாழ்வு? அறியேன்" எனுமால்.

பொ :—"பொறையுடையாளாகிய சீதையுடன் என் உயிரைப் பாதுகாக்குங் கடமையில் நின்று இமைத்தல் இல்லாதவனாகிய இலக்குவன், இந்நேரமளவும் (என்னைத் தனிமையில் விடுத்துத்) தாமதித்திருப்பானோ? (நிலத்திற்குப்) பாரமாக உலகிடையே அலைந்து துன்புறுதற்குக் காரணமாகிய பழவினையையுடையேன் ஆன எனக்கு உயிர்வாழ்க்கை என்பது இனிப் பொருந்தாதோ? (ஒன்றும்) அறியேன்" எனக் கூறி இரங்குவான்.

கு :—கமை - பொறுமை. இமைத்தல் - கண்ணை மூடித் திறத்தல்; விழித்திருத்தலிற் சோர்தல். காவலினின்று இமையாதவன் என்பதற்குக் காத்தற் கடமையினின்றும் சுருங்காதவன்; சோர்தல் இல்லாதவன் எனப் பொருளுரைப்பினும் பொருந்தும். இத்துணை தாழ்வுறுமோ என்புழி ஓகாரம், தாழ்த்திருக்கமாட்டான் என எதிர் மறைப் பொருள் தந்தது. என்னுயிரைக் காக்குங் கடமையில் இமைப்பளவும் நீங்காதவனாகிய இலக்குவன் உயிரோடிருந்தால்

இத்துணைப் பொழுது தாமதித்திருக்க மாட்டான்; எனவே அவன் தன்னுயிரைத் துறந்தனனோ? என இராமன் தன்னுள்ளத்து எண்ணி வருந்தினன் என்பதாம். சுமையா - சுமையாக: பாரமாக. வாழ்வு அமையாது கொல் - வாழ்க்கை நன்கு அமையமாட்டாதோ? கொல், ஐயம். (76)

**3718.** அறப்பா லுளதே லவன்முன்ன வனாய்ப்
பிறப்பா னுறின்வந் துபிறக் கவெனா
மறப்பால் வடிவாள் கொடுமன் னுயிரைத்
துறப்பா னுறுகின் றதொடர்ச் சியின்வாய்.

"அறப்பால் உளதேல், அவன், முன்னவனாய்ப்
பிறப்பான் உறின், வந்து பிறக்க" எனா,
மறப்பால் வடிவாள் கொடு மன் உயிரைத்
துறப்பான் உறுகின்ற தொடர்ச்சியின் வாய்.

பொ :—(எனக்கு) அறப்பயனாகிய நல்லூழ் உளதாயின், அவன் (இலக்குவன்) மீண்டும் பிறத்தலுறுவானாயின், (எனக்குத்) தமையனாக வந்து பிறப்பானாக எனக் கூறி (இராமன்) தறுகண்மையினை யுண்டாக்கும் கூரிய வாட் படையைக் கொண்டு நிலைபெற்ற தன் உயிரை உடம்பினின்று நீக்க முற்படும் (அன்புறவுபற்றிய) தொடர் பின்கண்ணே.

கு :—இது முதல் நான்கு செய்யுட்கள் ஒரு தொடராய் இயைந்தன. (எனக்கு) அறப்பால் உளதேல், அவன் பிறப்பானுறின், (எனக்கு) முன்னவனாய் (அவன்) வந்து பிறக்க என இயையும். அறப்பால் - (இலக்குவனைச் சகோதரனாகப் பெறும்) நல்லூழ். பிறப்பான் உறின் என்றது, பிறவாப் பெருநெறியை எய்தும் தகுதியினை யுடைய இலக்குவன், தன் தமையனாகிய என்பால் வைத்த அன்பென்னும் பாசத்தால் மீண்டும் இவ்வுலகிற் பிறத்தலை உற்றானாயின் என்பதாம். முன்னவன் - தமையன். 'முன்னவனாய் அவன் வந்து பிறக்க' எனவே, தான் அவனுக்கு இளையோனாகப் பிறத்தல் வேண்டும் என்பதைப் புலப்படுத்தினானாயிற்று. இராமன் கருதியவண்ணமே அடுத்த அவதாரத்தில் தான் கண்ணனாகிய தம்பியாகவும், இலக்குவன் கண்ணனுக்குத் தமையனாகிய பலராமனாகவும் அவதரித்தமை கருதற்குரியதாகும். 'இப்பிறப்பில் யான் தமையனாக, இலக்குவன் என் தம்பியாக இருந்து எனக்கு ஏவல் புரிந்தாற்போன்று, வரும் பிறப்பில் அவன் என் தமையனாகப் பிறக்க, யான் அவனுக்குத் தம்பியாகப் பிறந்து அவனுக்கு, ஏவல்புரியும் அன்புரிமைப்பணி எனக்கு வாய்ப்ப

தாகுக' எனக் கூறி இராமன் தன்னுயிரைத் துறக்க முனைந்தான் என்பதாம். வேள்பாரி துஞ்சிய வழி அவனது பிரிவாற்ருது கலங்கிய கபிலர்,

'இம்மை போலக் காட்டி யும்மை
இடையில் காட்சி நின்னேடு
உடனுறைவாக்குக உயர்ந்த பாலே' (புறம் - 236)

எனக்கூறி வடக்கிருந்து உயிர் துறந்த செய்தி இங்கு நினைக்கத் தக்கதாகும். தொடர்ச்சி - அன்பின் தொடர்பு; ஈண்டு அத்தொடர்பு பற்றிய நிகழ்ச்சியைக் குறித்து நின்றது. தொடர்ச்சியின்வாய் என் பதற்குச் சமயத்தில் எனப் பொருள் கொண்டாருமுளர். (77)

3719. பேர்ந்தா னெடுமா யையினிற் பிரியா
ஈர்ந்தா னவணு சிபிடித் திளையோன்
சோர்ந்தா ளிடுபூ சல்செவித் துளையில்
சேர்ந்தார் தலுமே திருமா றெருளா.

பேர்ந்தான் நெடு மாயையினில்; பிரியா,
ஈர்ந்தான், அவள் நாசி பிடித்து, இளையோன்;
சோர்ந்தாள் இடுபூசல், செவித் துளையில்
சேர்ந்து ஆர்தலுமே, திருமால் தெருளா,

பொ:—இளையோனகிய இலக்குவன் (அயோமுகி செய்த) நீண்ட மாயையினின்றும் நீங்கினன்; (அவளது பிணிப்பை விட்டுப்) பிரிந்து அவளுடைய மூக்கினைப் பிடித்து அரிந்தான்; (அந்நிலையில் தன் ஆற்றல் குன்றித்) தளர்வுற்றவளாகிய அரக்கி எழுப்பிய அவலக்குரல், தன் செவி வழியில் வந்து பொருந்துதலும், அவ்வளவில் இராமபிரான் (தான் உயிர் துறத்தற்கேதுவாய மனக்கலக்கம் நீங்கித்) தெளிவுற்று.

கு:—தெருளா என்னும் வினையெச்சம், அடுத்த பாடலிலுள்ள 'எனு' என்னும் வினையோடு இயையும். இளையோன் நெடுமாயையினிற் பேர்ந்தான்; பிரியா, அவள் நாசி பிடித்து ஈர்ந்தான் என இயையும். நெடுமாயை - அயோமுகி செய்த மோகனை யென்னும் வஞ்சச் செயலால் விளைந்த மறைப்பு. ஈர்தல் - அரிதல். நாசி-மூக்கு, சோர்ந்தாள் - தளர்வுற்றவளாகிய அயோமுகி; வினையாலணையும் பெயர். பூசல் - துன்புற்ருேர் எழுப்பும் அவலக்குரல். மேற்செய்யுளிற் குறித்தவண்ணம் தன் தம்பியாகிய இலக்குவனது பிரிவாற்ருது அன்பின் தொடர்பால் உளங்கலங்கித் தன் இன்னுயிர் துறத்தற்கு

முந்தியவன், நம்மைப்போன்று வினைவயத்தால் ஈண்டுப் பிறந்து இறந்துவரும் மகனல்லன், காத்தற் கடவுளாகிய திருமாலே, மன்னுயிர்களின் இன்னலைப் போக்குதற் பொருட்டு ஈண்டு இராமனாக அவதரித்தருளினான் என்பார், இராமன் என்னாது 'திருமால்' எனக் குறித்தார். பிரியா, தெருளா என்பன, செய்யா என்னும் வாய்பாட்டு உடன்பாட்டு வினையெச்சம். (78)

3720. பரற்றரு கானகத் தரக்கர் பல்கழல்
முரற்றரு வெஞ்சம முயல்கின் றாரெதி
ருரற்றிய வோசையன் றொருத்தி யூறுபட்
டரற்றிய குரலவ ளரக்கி யாமெனா.

"பரல்தரு கானகத்து அரக்கர், பல்கழல்
முரற்று அரு வெஞ்சமம் முயல்கின்றார், எதிர்
உரற்றிய ஓசை அன்று; ஒருத்தி ஊறுபட்டு
அரற்றிய குரல்; அவள் அரக்கியாம்" எனா.

பொ :—" (செவியிற்பட்ட இப்பூசல்) பருக்கைக் கற்கள் நிறைந்த காட்டிடத்தே திரியும் அரக்கர்கள் பலவாகிய வீரக் கழல்கள் ஒலிக்க (உய்தற்கு) அரிய கொடும் போரைச் செய்கின்றவர்கள் மாறுபடத் துன்புற்று எழுப்பிய ஓசையன்று; (தனியளாய் நின்ற) பெண் ஒருத்தி தன் அங்கம் புண்பட்டு அழுதரற்றிய அவலக்குரலாகும்; (இங்ஙனம் அரற்றிய) அவள் (கொடுந் தொழிலையுடைய) அரக்கர் இனத்தவளாகவே இருத்தல் வேண்டும்" எனத் துணிந்து.

கு :—'எனா' என்னும் வினையெச்சம் அடுத்த பாடலிலுள்ள 'வாங்கி' என்னும் வினையைக் கொண்டு முடியும். பரல் - பருக்கைக் கல். தருதல் என்பது, ஈண்டு நிரம்பக் கிடத்தலை, யுணர்த்தியது. '(இப்பூசல்) பல்கழல் முரற்ற அருவெஞ்சமம் முயல்கின்றார் (ஆகிய) அரக்கர், எதிர் உரற்றிய ஓசையன்று; ஒருத்தி ஊறுபட்டு அரற்றிய குரல்' எனவும், '(அரற்றிய) அவள் அரக்கியே ஆம்' எனவும் இயைத்துரைக்க. 'முரற்ற' என்னும் பெயரெச்சத்து அகரம் விகாரத்தால் தொக்கது. உரற்றுதல் - உரக்க ஒலித்தல். ஊறுபடுதல் - உடலிற்றுக்கப்பட்டு அங்கங் குறைபட்டு வருந்துதல். (79)

3721. அங்கியி னெடும்படை வாங்கி யாங்கது
செங்கையிற் கரியவன் றிரிக்கு மெல்லையிற்

பொங்கிரு ளப்புறத் துலகம் புக்கது
கங்குலும் பகலெனப் பொலிந்து காட்டிற்றே.

அங்கியின் நெடும்படை வாங்கி, ஆங்கு அது
செங்கையில் கரியவன் திரிக்கும் எல்லையில்,
பொங்கு இருள் அப்புறத்து உலகம் புக்கது;
கங்குலும், பகல் எனப் பொலிந்து காட்டிற்றே.

பொ :—கரிய திருமேனியையுடைய இராமன், நெடிது செல்லும் அக்கினிப் படையை யெடுத்து அதனைத் தனது சிவந்த கையினுற் சுழற்றிய அளவில், மிகுந்த இருளானது உலகத்தின் (உட்பரப்பாகிய எல்லையை விட்டு நீங்கி) வெளிப்புற எல்லையிலே சென்று புகுந்தது. (ஒளியற்ற) இரவுப் பொழுதும் பகல் என்று சொல்லும்படி (ஒளி மிக்குப்) பொலிவு பெற்றுத் தோன்றியது.

கு :—அங்கியின் நெடும்படை - அக்கினிதேவனை அதிதெய்வ மாகக் கொண்ட படைக்கலம் ; அக்கினியாஸ்திரம். அங்கியின்படை, நெடும்படை எனத் தனித்தனி இயையும். அங்கி - தீ. ஆங்கு - அசை. திரித்தல் - (இருள் நீங்கச்) சுழற்றுதல் ; பிரயோகிக்கத் தொடங்குதல் எனினும் பொருந்தும். பொங்குதல் - நிறைந்து மேலோங்குதல். உலகத்து அப்புறம் என்பது அப்புறத்துலகம் என முன்பின்னாகத் தொக்கது. கங்குலும் என்புழி உம்மை சிறப்பும்மை. இராமன் அங்கியின் படையைத் தெரிந்தெடுத்தது, இருளைப்போக்கிப் பகையினைக் கண்டு களைதற் பொருட்டாம்.

(இராமன்) உயிரைத் துறப்பானுறுகின்ற தொடர்ச்சியின் வாய், இளையோன் (இலக்குவன்), நெடுமாயையிற் பேர்ந்தான் ; அவள் நாசி பிடித்து ஈர்ந்தான் ; சோர்ந்தாள் (அயோமுகி) இடுபூசல் செவித் துளையிற் சேர்ந்து ஆர்தலும் திருமால் (இராமன்) தெருளா, '(இப் பூசல்) அரக்கர் வெஞ்சமம் முயல்கின்றார், எதிர் உரற்றிய ஓசை அன்று, ஒருத்தி ஊறுபட்டு அரற்றிய ஓசை; அவள் அரக்கியே' என, நெடும்படை வாங்கிக் கரியவன் திரிக்கும் எல்லையில், இருள் அப்புறத்து உலகம் புக்கது ; கங்குலும் பகல் எனப் பொலிந்து காட்டிற்று என முடிக்க. (80)

**3722.** நெடுவரை பொடிபட நிவந்த மாமர
மொடிவுற நிலமக ளுலைய வூங்கெலாம்
சடசட வெனுமொலி தழைப்பத் தாக்குமா
முடுகின னிராமன்வெங் காலின் மும்மையான்.

நெடுவரை பொடிபட, நிவந்த மாமரம்
ஒடிவுற, நிலமகள் உலைய, ஊங்கு எலாம்
'சடசட' எனும் ஒலி தழைப்பத் தாக்குமா
முடுகினன் இராமன், வெங்காலின் மும்மையான்.

பொ :—இராமன் நீண்ட மலைகள் துகளாகவும் வளர்ந்தோங்கிய பெருமரங்கள் ஒடிதலுற்றுச் சிதையவும் மண்மகள் நடுக்கமுறவும் பக்கங்களிலெல்லாம் சடசடவென்னும் ஓசைமிக்குத் தோன்றவும் கடுங்காற்றினும் மும்மடங்கு வேகமுடையனாய்(ப் பகையினை)த் தாக்கும்படி விரைந்து சென்றான்.

கு :—இராமன், வரைபொடிபட, மரம் ஒடிவுற, நிலமகள் உலைய, சடசட எனும் ஒலிதழைப்ப முடுகினன் என முடியும். பொடிபடுதல் - சிதர்ந்து தூளாதல். மாமரம் என்புழி மா என்பது பெருமையெனும் பொருளுடைய உரிச்சொல்லாகும். உலைதல் - (இராமனது விரைந்த நடையினைப் பொறுக்கலாற்றாது) நடுக்கமுறுதல். ஊங்கு - பக்கம். சடசட - ஒலிக்குறிப்பு. தழைத்தல் - செறிதல்; மிகுதல். தாக்குமா - தாக்குமாறு. முடுகுதல் - விரைதல். வெங்கால் - கடுங்காற்று; சண்ட மாருதம். காலின் - காற்றைவிட. மும்மையான் - மும்முடங்கு வேக முடையான். மும்மை - மூன்று மடங்கு. (81)

3723. ஒருங்குயர்ந் துலகின்மே லூழிப் பேர்ச்சியுள்
கருங்கடல் வருவதே யனைய காட்சித்தன்
பெருந்துணைத் தம்முனை நோக்கிப் பின்னவன்
வருந்தலை வருந்தலை வள்ளி யோயெனா.

ஒருங்கு உயர்ந்து, உலகின்மேல், ஊழிப் பேர்ச்சியுள்
கருங்கடல் வருவதே அனைய காட்சித் தன்
பெருந் துணைத் தம்முனை நோக்கிப் பின்னவன்,
"வருந்தலை, வருந்தலை, வள்ளியோய் !" எனா.

பொ :—ஊழிமாற்றமாகிய யுகமுடிவிலே கரியகடலானது நிலத்தின் மீது ஒருசேரக் கிளர்ந்தெழுந்து வந்தாற்போன்ற தோற்றத்தையுடைய தன் பெருந் துணைவனாகிய தமையனைப் பார்த்துத் தம்பி, "வள்ளன்மையுடையோனே, வருந்தற்க, வருந்தற்க" என்று கூறி.

கு :—பேர்ச்சி - பெயர்தல் ; மாறுதல். தன்னைச் சார்ந்தோரைத் தீநெறி விலக்கி நன்னெறியிற் செலுத்தும் துணைவனாதலால் 'பெருந்

துணைத் தம்முன்' என்றார். தம்முன் - தமையன்; இராமன். பின்னவன் - தம்பி; இலக்குவன். வருந்தலை, வருந்தலை அடுக்கு. தன்னைச் சார்ந்தோர்க்கு இடையூறென்றுற்றவிடத்துத் தன்னுயிரையும் வழங்கும் வள்ளன்மையுடையோன் ஆதலின் அவனை 'வள்ளியோய்' என அழைத்தான் இலக்குவன். எனா என்னும் வினையெச்சம் அடுத்த செய்யுளில் 'கூறுவான்' என்னும் வினைகொண்டு முடியும். (82)

3724. வந்தனெ னடியனேன் வருந்தல் வாழிநி
னந்தமி லுள்ளமென் றறியக் கூறுவான்
சந்தமென் றளிர்புரை சரணஞ் சார்ந்தனன்
சிந்தின நயனம்வந் தனைய செய்கையான்.

"வந்தனென் அடியனேன்; வருந்தல், வாழி! நின்
அந்தம் இல் உள்ளம்" என்று அறியக் கூறுவான்,
சந்த மென் தளிர்புரை சரணம் சார்ந்தனன்;
சிந்தின நயனம் வந்து அனைய செய்கையான்.

பொ:—(இராமனது) இழந்த கண் மீண்டும் (தனக்குரிய இடத்தைத் தானே தேடிச்) சேர்ந்தாலொத்த செயலையுடையவனாய், 'அடியேன் இதோ வந்துவிட்டேன்; சிதைவிலாத நின் திருவுள்ளம் வருந்தற்க; வாழ்க' என்று (தான் காலந் தாழ்த்தமைக்குரிய காரணத்தினை) விளங்கச் சொல்பவன், அழகும் மென்மையும் வாய்ந்த தளிர்போலும் (இராமனுடைய) திருவடிகளைச் சார்ந்து வணங்கினான்.

கு:—சிந்தின நயனம் வந்தனைய செய்கையான் என்றது, இலக்குவனை. பொருள்களைக் காணுதற்குக் கருவியாகிய கண் சிதறிவிழ, அதனை யிழந்தோன் அதனைத் தேடியெடுத்து அமைத்துக் கொள்ளுதற்கியலாத நிலையில், சிதறிய அக் கண் தானே மீண்டும் அவன் முகத்தைத் தேடியடைந்தாற்போன்று, இராமனுக்குக் கண்ணெனச் சிறந்தானாகிய இலக்குவன், பிரிந்து சென்றவன், தன்னை யிழந்து அல்லற்படும் தமையனது துயர்நீங்கத் தானே வந்து சேர்ந்தானென்பதாம். இனி, சிந்தின நயனம் வந்தனைய செய்கையான் என்றது இராமனை யெனக்கொண்டு, 'போனகண் மறுபடி வந்தாற்போன்ற செய்கையுடையவனானான்' எனப் பொருள் கூறி அடுத்த செய்யுளுடன் இயைத்துரைப்பாருமுளர். இப்பொருட்கு வருதல் என்றது வரப்பெறுதலை. (83)

**3725.** ஊற்றுறு கண்ணினீ ரொழுக நின்றவ
னேற்றிளங் கன்றினைப் பிரிவுற் றேங்கிநின்
றூற்றல தாற்றுவ தரிதி னெய்திடப்
பாற்றுறும் பனிமுலை யாவின் பான்மையான்.

ஊற்று உறு கண்ணின் நீர் ஒழுக நின்றவன்,
ஏற்று இளங்கன்றினைப் பிரிவுற்று, ஏங்கிநின்று
ஆற்றலது, அரற்றுவது, அரிதின் எய்திட,
பால்துறும் பனிமுலை ஆவின் பான்மையான்.

பொ :—(நீர் சுரக்கும்) ஊற்றினை யொத்துப் பொருந்திய கண்களினின்றும் நீர் (தாரைதாரையாய்) ஒழுகும்படி நின்றவனாகிய இராமன், ஆண்மையும் இளமையும் பொருந்திய கன்றினைப் பிரிதலுற்றமையால் ஆற்றாமையுடையதாய்க் கதறுவது, (தன் கன்று) அரிய முயற்சியினால் தானே வந்து சேர (அதுகண்டு) பால் நெருங்கிப் பிலிற்றும் குளிர்ந்த மடியினையுடைய பசுவின் தன்மையினையுடையனாயினான்.

கு :—நின்றவன் ஆவின்பான்மையான் ஆயினான் என ஆக்கச் சொற்கொடுத்து முடிக்க. 'ஆக்கவினைக் குறிப்பு ஆக்கமின் றியலா' (நன்னூல். 346) என்பது விதி. ஏறு - ஆண். அரற்றுவது, பெயர். துறுமுதல் - பலவிடத்தும் பரவியிருந்த பொருள் ஒருங்கே, நெருங்கி வெளிப்படுதல். பனி - குளிர்ச்சி. (84)

**3726.** தழுவினன் பன்முறை தாரைக் கண்ணினீர்
கழுவின னாண்டவன் கனக மேனியை
வழுவினை யாமென மனக்கொ டேங்கினே
னெழுவென மலையென வியைந்த தோளினாய்.

தழுவினன் பல்முறை; தாரைக் கண்ணின் நீர்
கழுவினன், ஆண்டு அவன் கனக மேனியை;
"வழுவினையாம் என மனக்கொடு ஏங்கினேன்;
எழுஎன மலை என இயைந்த தோளினாய்!"

பொ :—(இராமன், இலக்குவனைப்) பலமுறை தழுவிக் கொண்டு அவ்விடத்தே அவனது பொன்மேனியைத் தன் கண்ணினீர்த் தாரையாற் கழுவினவனாய், "கணைய மரம் எனவும் மலை எனவும் சொல்லும்படி திரண்டுயர்ந்த தோள்களையுடையவனே! நீ (என்

னைத் தனித்து வருந்தும்படி செய்து) தவறினாய் என என் மனத்திற் கொண்டு (இதுகாறும்) வருந்தினேன்.''

கு :—இதுவும் அடுத்த செய்யுளும் ஒரு தொடர். தனது பிரிவி னால் எல்லையற்ற துயரில் அழுந்திய இராமனை இலக்குவன் விரைந்து வந்து பணிந்த நிலையில், இராமன் கண்களினின்றும் தாரை தாரை யாய் ஒழுகிய கண்ணீர் இலக்குவனது பொன் மேனியைக் கழுவியது போல் உடம்பினை நனைத்துவிட்ட தென்பார், 'ஆண்டு அவன் கனக மேனியைத் தாரைக் கண்ணினீர் கழுவினன்' என்றார். கண்ணினீர்த் தாரையாற் கழுவினன் என மூன்றாமுருபு விரித்துரைக்க. கனகம் - பொன். வழுவுதல் - தப்புதல்; தவறுதல். எழு - கணைய மரம். இலக்குவனுடைய தோள்களின் திரட்சிக்குக் கணையமரமும், உயர்ச் சிக்கு மலையும் உவமையாயின. (85)

3727. என்னையங் கெய்திய தியம்பு வாயென
வன்னவ னஃதெலா மறியக் கூறலு
மின்னலு முவகையு மிரண்டு மெய்தினான்
தன்னலா தொருபொரு டனக்கு மேலிலான்.

"என்னை அங்கு எய்தியது? இயம்புவாய்" என,
அன்னவன் அஃது எலாம் அறியக் கூறலும்,
இன்னலும், உவகையும், இரண்டும் எய்தினான்;
தன்னலாது ஒருபொருள் தனக்குமேல் இலான்.

பொ:—"(எழுவென மலையென இயைந்ததோளினாய்!) நீ சென்ற அவ்விடத்து நேர்ந்த இடையூறு யாது? அதனைக் கூறுவாயாக" எனக் கூற(க் கேட்ட) அவ் இலக்குவன் அந்நிகழ்ச்சி முழுவதனையும் விளங்கச்சொல்லிய அளவில், (எல்லா வுலகத்திற்கும் எவ்வுயிர்க்கும்) தன்னையன்றித் தனக்கு மேலாக ஒரு பொருளையில்லாத தனி முதல்வனாகிய இராமன், துன்பமும் மகிழ்ச்சியும் ஆகிய இரண்டி னையும் ஒருங்கே பெற்றான்.

கு :—அஃது என்றது, அயோமுகி தன்னை மாயத்தாற் கவர்ந்து செல்லத் தான் அவளை வென்று மீண்டதனை. அறியக் கூறல் - விளங்கச் சொல்லுதல். ஒரு பொருள் - (உயிர்கள்தொறும் உயிரல் பொருள்கள்தோறும் நீக்கமறக் கலந்து) ஒன்றாயுள்ள முழுமுதற் கடவுள். தன்னலா தொருபொருள் தனக்கு மேல் இலான் என்றது, எல்லார்க்குந் தானே தலைவனாதலன்றித் தனக்கு மேலாக ஒரு தலைவனை யில்லாதவனாய் உயர்வற வுயர்ந்த தனி முதல்வன் என்ப

தாம். எனவே தனக்குவமை யில்லாதானுகிய முழுமுதற் கடவுளே இராமனுக அவதரித்தான் என வலியுறுத்தவாறு. ஒன்றை விரும்பு தற்கும் வெறுத்தற்கும் ஏதுவாகிய இன்ப துன்பங்கள் இறைவ னுக்குத் தன்னியல்பில் இல்லேயாயினும், தன்னே அன்பினுல் வழிபடு மியல்பினராகிய அடியார்திறத்துத் தான் கொண்ட எல்லேயற்ற பேரருளின் காரணமாக, இறைவனுக்கும் இன்னலும் உவகையும் உளவாயின என்பார், 'தன்னலா தொருபொருள் தனக்கு மேல் இலான், இன்னலும் உவகையும் இரண்டும் எய்தினன்' என்ருர் ஆசிரியர். 'இன்பமும் துன்பமும் இல்லானே உள்ளானே, அன்பருக்கு அன்பனே' (திருவாசகம் - சிவபுராணம்) என வரும் மணிமொழிப் பொருள் இங்குச் சிந்தித் துணரத்தக்கதாகும். (86)

3728. ஆய்வுறு பெருங்கட லகத்து ளாயவன்
பாய்திரை வருதொறும் பரியற் பாலனே
தீவினேப் பிறவிவெஞ் சிறையிற் பட்டயாம்
நோயுறு துயரென நுடங்க னேன்மையோ.

"ஆய்வுறு பெருங்கடல் அகத்துள் ஆயவன்,
பாய்திரை வருதொறும் பரியற் பாலனே?
தீவினேப் பிறவி வெஞ்சிறையிற் பட்டயாம்,
நோய், உறுதுயர் என நுடங்கல் நோன்மையோ ?"

பொ :—"ஆராய்தற்குரிய (ஆழமும் அகலமுமாகிய) பேரெல்லே யினேயுடைய கடல் நடுவே சென்றவன், தாவி மேலோங்கும் அலேகள் வருந்தோறும் அவற்றைக் கண்டு அஞ்சி வருந்தும் முறைமையன் ஆவனே? (ஆகான்); அதுபோல, தீவினேப்பயனுகிய கொடுமை மிக்க பிறவியென்னும் சிறையில் அகப்பட்ட யாம் நோயென்றும் துயரமென்றும் எண்ணித் தளர்தல் வலியுடைமை யாகுமோ? (ஆகாது)."

கு :—உலகத்துக் கடலின் ஆழமும் அகலமும் அதன்கணுள்ள பொருள்களும் இவையென உள்ளவாறு நேரே சென்று முற்றிலும் அளந்து கண்டார் ஒருவருமின்மையின் மக்களால் மேலும் மேலும் ஆராய்ந்து காண்டற்குரிய பேரெல்லேயினேயும் அரும் பொருள் களேயும் ஒருங்கே பெற்றுள்ள கடல் என்பார், 'ஆய்வுறு பெருங்கடல்' என்ருர். பாய்திரை - தாவி மேலோங்கி வரும் அலே. பரியல் - இரங்கி வருந்துதல். நோய் - உடம்பைப் பற்றிய பிணி. துயர் - உள்ளத்தைப் பற்றிய துன்பம். நுடங்கல் - தளர்தல். நோன்மை - (துன்பங்களேத் தாங்கிக்கொள்ளும்) வன்மை. ஓகாரம் இரண்டிடத் தும் எதிர்மறை. (87)

3729. மூவகை யுலகமு மமரர் மூவரும்
மேவரும் பகையெனக் காக மேல்வரி
னேவரே கடப்பவ ரெம்பி நீயுளே
யாவதே வலியினி யரணும் வேண்டுமோ.

"மூவகை, உலகமும், அமரர் மூவரும்
மேவ அரும் பகை எனக்கு ஆக மேல்வரின்,
ஏவரே கடப்பவர்? எம்பி! நீ உளே
ஆவதே வலி; இனி, அரணும் வேண்டுமோ?"

பொ:—"மூன்று வகை உலகங்களில் உள்ளாரும் (அவ்வுலகங்களைப் படைத்தளித்தழிக்கும்) கடவுளர் மூவரும், கிட்டுதற்கரிய பகையாக என்மேற் படையெடுத்து வந்தாலும் என் தம்பியாகிய நீ எனக்குத் துணையாக உள்ளாய்; (ஆதலால்) என்னை வெல்வார் யாருளர்? (ஒருவருமில்லை); எம்பியாகிய நீ என்னோடு உள்ளாய் ஆதலே எனக்கு வலியுடைமையாகும்; இனி, (மாற்றாரை வெல்லுதற்கு நின்னையன்றி) வேறு அரண்களும் வேண்டப்படுவனவோ?" (ஒன்றும் வேண்டா என்பதாம்.)

கு:—மூவகையுலகம் - மேல், கீழ், நடு என மூன்று வகைப்பட்ட உலகங்கள்; இங்கு ஆகுபெயராய் அவ்வுலகங்களில் வாழ்வோரைக் குறித்தது. அமரர் மூவர் - அயன், அரி, அரன் என்னும் மும்மூர்த்திகள். வாழ்க்கையில் எவராலும் முயன்று பெறுதற்கியலாத உடன் பிறப்பாளனாகிய நீ, எனக்குத் துணையாகக் கிடைத்துள்ளாய் ஆதலின், இனி என்மேல் எத்தகைய பெரும் பகை வந்தாலும் அவற்றையெல்லாம் வென்றழிக்கும் பெருவலியுடையவனாயினேன் என்பான், 'ஏவரே கடப்பவர்? எம்பி நீயுளே; ஆவதே வலி' என்றான். கடத்தல் - வெல்லுதல். பகைவராலுளவாம் அச்சங்களை யெல்லாம் அறவே போக்கவல்ல ஆற்றல் மிக்கோனாகிய நின்னைத் தம்பியாகப் பெற்றுள்ள எனக்கு, அஞ்சி யொதுங்குதற்குரிய அரணாகிய பாதுகாப்பெதுவும் வேண்டுவதில்லை யென்பான், 'அரணும் வேண்டுமோ?' என்றான். ஓகாரம் எதிர்மறை. "திண்பொருள் எய்தலாகுந் தெவ்வரைச் செருக்கலாகும், நண்பொடு பெண்டிர் மக்கள் யாவையு நண்ணலாகும், ஒண்பொரு ளாவதையா உடன்பிறப் பாக்கலாகா, எம்பியை யீண்டுப் பெற்றேன் என்னெனக் கரியதென்றான்" (சீவக - 1760) என வரும் சிந்தாமணிச் செய்யுள் இங்கு ஒப்புநோக்கியுணரத்தக்கதாகும். (88)

3730. பிரிபவர் யாவரும் பிரிக பேரிடர்
வருவன யாவையும் வருக வார்கழற்
செருவலி வீரநிற் றீரு மல்லது
பருவர லென்வயிற் பயிலற் பாலதோ.

"பிரிபவர் யாவரும் பிரிக; பேர் இடர்
வருவன யாவையும் வருக; வார்கழல்
செருவலி வீர! நின் தீரும் அல்லது
பருவரல் என்வயிற் பயிலற் பாலதோ?"

பொ:—"நீண்ட வீரக் கழலையணிந்த போர்வன்மை மிக்க வீரனே! என்னை விட்டுப் பிரிந்து செல்வாரனைவரும் பிரிவாராக; பெரிய இடையூறுகளாக வருவனவெல்லாம் வரக்கடவனவாகுக; (அவையெல்லாம்) ஒருவனாகிய நின்னாலேயே நீங்குவனவன்றி (அவற்றான் வரும்) துன்பம் என்பால் தங்குந் தன்மையதோ?" (தங்காது என்பதாம்).

கு:—எத்தகைய இடையூறுகளையும் அஞ்சாது தனித்து நின்று விரைந்தகற்றவல்ல போர்வலிமிக்க பெருவீரனாகிய நின்னைத் தம்பியாகப் பெற்ற யான் துன்புறுதல் என்பது என்றுமில்லை என இராமன் இலக்குவனை நோக்கிக் கூறினான். பருவரல் - துன்பம். பயிலல் - பொருந்தித் தங்குதல். ஓகாரம் எதிர்மறை. (89)

3731. வன்றொழில் வீரபோர் வலிய ரக்கியை
வென்றுபோர் மீண்டனெ னெனவி ளம்பினாய்
புன்றொழி லனையவள் புகன்ற சீற்றத்தாற்
கொன்றிலை போலுமாற் கூறுவா யென்றான்.

"வன்தொழில் வீர! 'போர்வலி அரக்கியை
வென்று போர் மீண்டனென்' என விளம்பினாய்;
புன்தொழில் அனையவள் புகன்ற சீற்றத்தால்
கொன்றிலை போலுமால்? கூறுவாய்" என்றான்.

பொ:—"வன்மைமிக்க போர்த் தொழிலினையுடைய வீரனே! 'போருடற்றும் இயல்பினளாகிய வலிய அரக்கியை (அயோமுகியை)ப் போரில் வென்று மீண்டேன்' எனக் கூறினாய்; இழிதொழிலினையுடையாளாகிய அவள் விரும்பிச் செய்த வெகுளிக்குக் காரணமாகிய தீங்கினைக் கண்டும் அவளைக் கொல்லாது விட்டுவிட்டாய் போலும்? அதனை (விளங்க)ச் சொல்வாயாக" என்றான்.

கு :—'அரக்கியைப் போரில் வென்று மீண்டேன்' என இலக்குவன் இராமனிடம் கூறவே, அவளைப் பெண்ணென நினைந்து கொல்லாது விட்டமையைக் குறிப்பினாலுணர்ந்த இராமன், இலக்குவனை நோக்கி 'நினக்குத் தீமை புரிந்த கொடியாளாகிய அரக்கியைக் கொல்லாது விட்டனைபோலும். உயிர்கட்குத் தீமையே புரிந்துழலும் அவளை ஒறுத்து நீக்கியது எங்ஙனம்? என வினவினான். புன்தொழில் அனையவள் - இழிதொழிலை யுடையாளாகிய அவள்; இழிதொழில்களுக்கெல்லாம் தாயாகியவள் (நிலைக்களமானவள்) என்றலும் பொருந்தும். புன்மை-சிறுமை; காமம். புகன்ற-விரும்பிச் செய்த. புகற்சி - விருப்பம். சீற்றம் என்றது, இலக்குவனுக்குச் சீற்றம் உண்டாகும் முறையில் அவள் இயற்றிய தீங்கினை. அஃதாவது காமங்காரணமாக அவனை வலிதிற் கவர்ந்து சென்றமை. (90)

3732. துளைபடு மூக்கொடு செவிது மித்துகத்
தளைவயி னகிலொடு தடிந்து நீக்கிய
அளவையிற் பூசலிட் டரற்றி னாளென
இளையவன் விளம்பிநின் றிருகை கூப்பினான்.

"துளைபடு மூக்கொடு செவி துமித்து உகத்
தளைவயின் நகிலொடு தடிந்து நீக்கிய
அளவையில், பூசலிட்டு அரற்றினாள்" என
இளையவன், விளம்பி நின்று இருகை கூப்பினான்.

பொ :—(அதுகேட்ட) இளையோனாகிய இலக்குவன், "துளையமைந்த மூக்குடன் செவியையும் அரிந்து (அவை) சிந்தும்படி கச்சணிந்த தனத்தினையும் துணித்து (என்னைப் பற்றிய பிணிப்பினின்றும் அவ்வரக்கியைப் பெயர்த்து) நீக்கிய அளவில் அவள் கூக்குரலிட்டுக் கதறினாள்" என்று கூறி நின்று இரு கைகளையுங் கூப்பி (இராமனை) வணங்கினான்.

கு :—அயோமுகியின் வஞ்சனையாகிய மாயச் செய்கையாற் பிணிக்கப்பட்டு அவளது மார்பொடு கையின் அடங்கியவனாகிய இலக்குவன், அரக்கியின் பிணிப்பினை யுதறித் தள்ளித் தன்னை விடுவித்துக் கொள்ளும் முயற்சியால் அவளுடைய மூக்கு, காது, கொங்கை என்பவற்றைத் தன் கை வாளால் அரிந்து ஒறுத்தானாக, அந்நிலையில் அயோமுகி தன் கைப்பிணிப்பிலுள்ள இலக்குவனைக் கைவிட்டுப் பெருங் கூக்குரலிட்டு அரற்றி நீங்கினாள் என்பது இதனாற் புலனாம். தளை - கச்சு. (91)

3733. தொல்லிரு டனைக்கொலத் தொடர்கின் ருளையும்
கொல்லலை நாசியைக் கொய்து நீக்கினுய்
வல்லைநீ மனுமுதன் மரபி னேயெனப்
புல்லின னுவகையிற் பொருமி விம்முவான்.

'தொல் இருள், தனைக் கொ(ல்)லத் தொடர்கின் ருளையும்,
கொல்லலை, நாசியைக் கொய்து நீக்கினுய்;
வல்லை நீ; மனுமுதல் மரபினேய்!' எனப்
புல்லினன்; உவகையின் பொருமி விம்முவான்.

பொ:—(இலக்குவன் கூறியவற்றைக் கேட்டு) மகிழ்ச்சி மிகுதியாற் பொருமி விம்முதலுற்ற இராமன், (இலக்குவனை நோக்கி) 'மனு வேந்தனை முதல்வனுகப் பெற்று வரும் நன்மரபிற் பிறந்தவனே! முதிர்ந்த இருளிலே நின்னைக் கொல்லத் தொடர்கின்றவளாகிய அரக்கியையும் கொல்லாதவனுய், அவளது மூக்கையரிந்து (ஒறுத்துத்) துரத்திவிட்டாய். (ஆதலால் நின் குடிப்பிறப்புக்கு ஏற்ப ஒழுகுந் திறத்தில்) நீ பெரிதும் வல்லமையுடையாய்' எனக் கூறி இறுகத் தழுவிக்கொண்டான்.

கு:—இருட்பொழுதிலே நின்னைக் கொல்லத் தொடர்கின்ற கொடியவளையும் பெண்ணென நினைத்துக் கொல்லாமல் ஒறுத்து நீக்கிய நின் பெருந்தகைமை நீ பிறந்த மனு மரபிற்கு ஏற்ற நின்னுடைய ஆற்றல் வன்மையினை இனிது புலப்படுத்தியது என்பான், 'தனைக்கொ(ல்)லத் தொடர்கின்ருளையும் கொல்லலை...... நீக்கினுய், வல்லை நீ' என்ருன்.

"துண்ணெனும் வினைத்தொழில் தொடங்கியுளளேனும்
பெண்ணென மனத்திடை பெருந்தகை நினைந்தான்"
(பால - தாடகை - 54)

என இராமனது நினைவாகக் கம்பர் கூறும் கருத்து இங்கு நினைவு கூரத்தக்கதாகும். 'தொல்லிருள்' என்புழித் தொன்மை முதிர்ச்சியைக் குறித்தது; முதிர்ந்து செறிந்த இருள் என்பதாம். தனை - நினை; முன்னிலையிற் படர்க்கை வந்த இடவழுவமைதி. "செருமாவுகைக்குஞ் சேரலன் காண்க, பண்பா லியாழ்பயில் பாணபத்திரன், தன்போல் என்பால் அன்பன், தன்பால் காண்பது கருதிப் போந்தனன்" என்னும் திருமுகப் பாசுரத்துள், 'தன்' என்னும் சொல் 'நின்' என்னும் பொருளில் ஆளப்பெற்றிருத்தல் காணலாம். பொருமி விம்முதல் - இன்ப துன்பம் காரணமாக உடம்பிலே உயிர்ப்பு மிக்கு உள்ளத்திலே உணர்ச்சி மீதூர அவ்வுணர்வினைச் சொல்லால் வெளியிட முடியாது தத்தளித்தல். (92)

3734. பேரருந் துயரிறை பேர்ந்து ளோரென
வீரனுந் தம்பியும் விடிவு நோக்குவார்
வாருண நினைந்தனர் வான நீருண்டு
தாரணி தாங்கிய கிரியிற் றங்கினர்.

பேர் அருந்துயர் இறை பேர்ந்துளோர் என,
வீரனும் தம்பியும் விடிவு நோக்குவார்,
வாருணம் நினைந்தனர், வானநீர் உண்டு,
தாரணி தாங்கிய கிரியில் தங்கினர்.

பொ:—வீரனும் தம்பியும் ஆகிய இருவரும் பேர்த்துக் களைதற்கு அரிய பெரிய துன்பத்தினின்றும் சிறிது நீங்கியவர்கள் என்னும்படி (எப்பொழுது இரவு புலரும் எனப்) பொழுது விடிதலை எதிர்பார்த் திருப்பவர்கள், வருணமந்திரத்தைத் தியானித்தவர்களாய் வான நீரைப் பருகிப் பூமியைத் தாங்கிய இயல்பினதாகிய மலையொன்றில் தங்கியிருந்தார்கள்.

கு:—பேர் அருந்துயர் - பேர்த்துக் களைதற்கு அரிய பெருந் துன்பம். 'பேராவிடர்' (கம்பர் - ஆரணிய. அயோமுகி 69) என்றமை காண்க, இறை - சிறிது. வீரன் - இராமன். தம்பி - இலக்குவன். வாருணம் – வருணனுக்குரியது; நினைந்தனர் என்ற வினையினால் வருணமந்திரம் எனப் பொருள் கொள்ளப்பட்டது. மலையைக் குறித்து வழங்கும் பெயர்களுள் 'பூதரம்' என்ற பெயரின் சொற் பொருள் விரித்துரைப்பார், 'தாரணி தாங்கிய கிரி' என்றார். பூதரம் - பூமியைத் தரித்து (தாங்கி) நிற்பது. (93)

3735. கல்லதர் வெள்ளிடைக் கானி னுண்மணற்
பல்லவ மலர்கொடு படுத்த பாயலின்
எல்லையி றுயரினோ டிருந்து சாய்ந்தனன்
மெல்லடி யிளையவன் வருட வீரனே.

கல் அதர் வெள்ளிடைக் கானின் நுண்மணல்,
பல்லவம் மலர் கொடு படுத்த பாயலின்,
எல்லை இல் துயரினோடு இருந்து சாய்ந்தனன்;
மெல் அடி, இளையவன் வருட, வீரனே.

பொ:—பருக்கைக் கற்கள் நிரம்பிய வழியினையும் வெறு வெளி யாகிய இடத்தினையும் உடைய காட்டின் கண்ணே, நுண்ணிய மணற் பரப்பிலே தளிர்களையும் மலர்களையும் கொண்டு அமைத்த படுக்கை

யில், வீரனுகிய இராமன் அளவற்ற பெருந் துயரத்துடன் அமர்ந் திருந்து, (தன்) மெல்லிய பாதங்களை (வழி நடந்த வருத்தந்தீர) இளையோனுகிய இலக்குவன் பிடித்துத் தடவப் பள்ளி கொண்டனன்.

கு :—அதர் - வழி. வெள்ளிடை - மரஞ் செடி கொடி முதலியன முளைக்காத வெற்றிடம். பல்லவ மலர்கொடு - பல்லவமும் மலரும் கொண்டு ; உம்மைத் தொகை. பல்லவம் - தளிர். படுத்த - அமைத்த. சாய்தல் - படுத்தல், 'மெல்லடி இளையவன் வருட' என்றது, சீதை யின் மெல்லிய தளிர்க்கைகளால் வருடத்தகுவனவாகிய இராம னுடைய மெல்லிய பாதங்கள், அவள் பிரிந்தமையால் இளையோ னுகிய இலக்குவன் கைகளால் வருடப் பெற்றன என்னுங் குறிப்பின தாகும். (94)

**3736.** மயிலியல் பிரிந்தபின் மான நோயினுல்
அயில்வில ஞெருபொரு ளவல மெய்தலால்
துயில்வில னென்பது சொல்லற் பாலதோ
உயிர்நெடி துயிர்ப்பிடை யூச லாடுவான்.

மயில் இயல் பிரிந்தபின் மான நோயினுல்,
அயில்விலன் ஒருபொருள்; அவலம் எய்தலால்,
துயில்விலன் என்பது, சொல்லற் பாலதோ ?
உயிர், நெடிது உயிர்ப்பிடை, ஊசலாடுவான்.

பொ :—(இராமன்) மயிலின் சாயல் போலும் மென்மைத் தன்மை யுடையாளாகிய சீதையைப் பிரிந்த பின்னர் (த் தனக்கு ஏற்பட்ட) தாழ்நிலையாகிய துன்பத்தினுல் ஒன்றையும் (உணவாக) உட்கொண் டானல்லன் ; அவலித்தற்குரிய பெருந்துயரம் அடைந்தமையால் (சிறிதும்) உறங்கினுனல்லன் என்னும் இத்துன்ப நிலை சொல்லால் வெளியிட்டுரைக்குந் தன்மையதோ ? நெட்டுயிர்ப்பாகிய பெருமூச்சி னிடையே உயிரானது (அகத்ததோ, புறத்ததோ என்னும்படி அங்கு மிங்கும்) ஊசலாடும் துயர்நிலையினனுயினுன்.

கு :—மயிலியல் - மயில்போலும் சாயலினையுடையாள்; சீதை. மான நோய் - தன்னிலையிற் ருழ்வு வந்தமையால் உளதாகிய மனக் கவலை. மானநோயினுல் ஒரு பொருள் அயில்விலன் எனவும், நெடிது உயிர்ப்பிடை உயிர் ஊசலாடுவான் எனவும் இயையும். நெடிதுயிர்ப்பு - பெருமூச்சு. அயில்வு - உண்ணுதல். ஒரு பொருளும் அயில்விலன் என உம்மை வருவித்துரைக்க. (95)

சீதையின் பிரிவாற்ருது இராமன் வருந்துதல்

3737. மானவண் மெய்யிறை மறக்க லாமையின்
ஆனதோ வன்றெனி னரக்கர் மாயமோ
கானக முழுவதுங் கண்ணி னேக்குங்கால்
சானகி யுருவெனத் தோன்றுந் தன்மையே.

'மானவள் மெய் இறை மறக்கலாமையின்
ஆனதோ? அன்று எனின், அரக்கர் மாயமோ?
கானகம் முழுவதும், கண்ணின் நோக்குங்கால்
சானகி உரு எனத் தோன்றும் தன்மையே!

பொ :—இக்காடு முழுவதும் கண்களாற் (கூர்ந்து) பார்க்கும் பொழுது சனகன் மகளாகிய சீதையின் உருவாகவே காணப்படும் இத்தன்மை, மான்போலும் எழிலுடையாளாகிய அச்சீதையின் வடிவத்தினை (என்னுள்ளம்) சிறிதும் மறக்க இயலாமையால் உண்டாகிய உருவெளித் தோற்றமோ? அஃதன்றென்ருல் (பகைவராகிய) அரக்கர் இயற்றிய வஞ்சனையோ? (இவற்றுள் எதுவென அறியப் பெற்றிலேன்).

கு :—இது முதல் ஐந்து பாடல்கள் இராமன் கூற்ருக அமைந்துள்ளன. கானகம் முழுவதும் சானகியுருவெனத் தோன்றுந் தன்மை, மானவள்மெய் மறக்கலாமையின் ஆனதோ? அன்றெனின் அரக்கர் மாயமோ? என இயைத்துப் பொருள் கொள்க. மானவள் - மான்போலும் அவள்; பெருமையையுடைய அவள் எனினும் பொருந்தும். மெய் - வடிவம். இறை - சிறிது. மறக்கலாமை - மறக்க கில்லாமை. இன்னுயிர்ச் சீதையை இடைவிடாது எண்ணி வருந்தும் இராமன் கண்களுக்கு அக்காடு முழுவதும் சீதையின் உருவாகவே தோன்றியது என்பதாம். (96)

3738. கருங்குழற் சேயரிக் கண்ணி கற்பினேர்
அருங்கல மருங்குவந் திருப்ப வாசையால்
ஒருங்குறத் தழுவுவெ னூறு காண்கிலேன்
மருங்குல்போ லானதோ வடிவு மெல்லவே.

கருங்குழல் சேயரிக் கண்ணி, கற்பினேர்
அருங்கலம், மருங்கு வந்து இருப்ப, ஆசையால்
ஒருங்கு உறத் தழுவுவென்; ஊறு காண்கிலேன்;
மருங்குல்போல் ஆனதோ வடிவும்? மெல்லவே.

பொ :—கரிய கூந்தலையும் செவ்வரி பரந்த கண்களையும் உடைய வளும் கற்புடைய மாதர்க்கு அருமை வாய்ந்த அணிகலமாகத் திகழ் பவளும் ஆகிய சீதை, என் அருகில் வந்து அமர்ந்திருக்கவும், (பிரிந் தவள் வரப் பெற்றேன் என்னும்) பெருவிருப்பால் அவளை ஒருசேர இறுகத் தழுவுவேனாகிய யான், அவள் வடிவின் பரிசவுணர்வினை அறியப்பெற்றிலேன். (எனவே) அவளது வடிவமும் இடையினைப் போன்று மெல்ல மெல்ல(த் தேய்ந்து) இல்லையாகி விட்டதோ?

கு :—கருங்குழலையுடைய சேயரிக்கண்ணி என உருபு விரித் துரைக்க. அருங்கலம் - அருமை வாய்ந்த ஆபரணம். 'பொன்னி னும் மணியினும் முத்தினும் அத்துணை, நேர் வருங்குரைய கலம்' என்பது குறிஞ்சிப் பாட்டு. அருங்கலம் என்பது அருங்கலம் போல் வாள் என உவம ஆகுபெயராய்ச் சீதையைக் குறித்தது. மருங்குல்- இடை., 'மருங்கிலா நங்கை' (கம்பர் - பால - 601) ஆகிய அவ ளுக்கு இப்பொழுது வடிவும் மெல்ல மெல்லத் தேய்ந்து இல்லையா யிற்றோ என்பான், 'மருங்குல் போலானதோ வடிவும் மெல்லவே' என்றான். "நங்கை, மென்மருங்குல்போல் வேறுள வங்கமும் மெலிந்தாள்" (சுந்தர - காட்சிப் - 3) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். (97)

3739. புண்டரி கப்புது மலரிற் றேன்பொதி
தொண்டையஞ் சேயொளி துவர்த்த வாயமு
துண்டனெ னீண்டவ ளுழைய ளல்லளால்
கண்டுயி லின்றியுங் கனவுண் டாகுமோ.

'புண்டரிகப் புதுமலரில் தேன் பொதி
தொண்டை அம் சேயொளி துவர்த்த வாய் அமுது
உண்டனென்; ஈண்டு அவள் உழையள் அல்லளால்;
கண் துயில் இன்றியும் கனவு உண்டாகுமோ?'

பொ :—அன்றலர்ந்த செந்தாமரையாகிய புதிய மலரின் தேனைத் தன்னிடத்தே கொண்ட கொவ்வைப் பழம் போலும் செவ்வொளி யமைந்த பவளவாயினிடத்தே ஊறும் அமுதத்தைப் பருகினேன்; (இங்ஙனம் எனது நுகர்ச்சிக்குப் பொருளாகிய) அவள் இவ்விடத்தே என் அருகில் உருவோடு உள்ளவள் அல்லளாயினாள்; கண்கள் துயிலின்றி விழித்திருக்கும் நிலையிலும் (இவ்வாறு) கனவு உண்டாதல் கூடுமோ?

கு :—புண்டரிகம் - தாமரை. புதுமலர் - அப்பொழுது அலர்ந்த மலர். தாமரை மலர் சீதையின் முகத்திற்கும் தொண்டைக்கனி அவளது வாய்க்கும் உவமை. துவர்த்த என்னும் பெயரெச்சம் வாய்க்கு அடைமொழி. துவர்த்த - பவளத்தின் தன்மை வாய்ந்த. துவர் - பவளம், ஈண்டு அதன் தன்மை; என்றது செந்நிறத்தை. உழையள் அல்லள் - பக்கத்தில் உள்ளாள் அல்லள். அவள் உழையள் அல்லள் ஆயினமையால், தான் வாயமுது உண்டமை நனவு நிலையில் அன்றெனவும், கனவாயின், கனவென்பது உறக்க நிலையில் தோன்றுவதன்றி இவ்வாறு விழிப்பு நிலையில் தோன்றுவதில்லையே யெனவும் இராமன் சீதையின் பிரிவாற்ருமையாற் பெரிதும் வருந்தினுன் என்பதாம். (98)

**3740.** மண்ணினும் வானினு மற்றை மூன்றினும்
எண்ணினு நெடியதா யீரு மீட்டத்தால்
தண்ணறுங் கருங்குழற் சனகன் மாமகள்
கண்ணினு நெடியதோ கொடிய கங்குலே.

மண்ணினும், வானினும், மற்றை மூன்றினும்,
எண்ணினும், நெடியதாய், ஈரும் ஈட்டத்தால்,
தண் நறுங் கருங்குழல் சனகன் மா மகள்
கண்ணினும் நெடியதோ? கொடிய கங்குலே!'

பொ :—நிலத்தைக் காட்டிலும் விசும்பைக் காட்டிலும் ஏனைய நீர், தீ, காற்று என்னும் மூன்றைக் காட்டிலும் எண்ணத்தின் எல்லையைக் காட்டிலும் நெடுமையுடையதாய் வருத்தும் வலிமைத் திறத்தால் கொடுமை வாய்ந்த இரவுப் பொழுதானது, குளிர்ச்சியும் நறுமணமும் பொருந்திய கரிய கூந்தலையுடைய சானகியின் கண்ணைக் காட்டிலும் நீட்சியுடையதாமோ? (ஆகாது)

கு :—மண், வான், நீர், தீ, காற்று என்னும் ஐம்பெரும் பூதங்களும் முறையே அகலம், உயர்ச்சி, ஆழம், வன்மை, வெம்மை ஆகிய இத்தன்மைகளாற் கடத்தற்கரியனவாய் நீண்டு தோன்றுமாறு போலவும், எண்ணத்தின் நினைவுகள் எல்லையற்றனவாய் மேன்மேல் விரிந்து நீளுமாறு போலவும் அன்றைய கங்குற்பொழுதும் (உருவெளித் தோற்றத்திற் புலனுய) சீதையின் கண்ணும் நெடுமையுடையனவாய்த் தன்னை வருத்தின என இராமன் வருந்தினன். "நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று, நீரினும் ஆரளவின்றே" (குறுந்தொகை-3) எனவும், "நீர்மிகிற் சிறையு மில்லை தீமிகின், மன்னுயிர் நிழற்றும் நிழலு மில்லை, வளிமிகின் வலியுமில்லை"

(புறம் - 51) எனவும் வரும் சங்கச் செய்யுட்கள் ஐம்பெரும் பூதங்களின் பேராற்றலை விரித்துரைப்பன. ஐம்பெரும் பூதங்களுக்குரிய அவ்வாற்றல்கள் அனைத்தையும் பெற்று நினைப்பினும் நெடியவாய் நீண்டு வருத்தும் கொடுமையினைக் கங்குற் பொழுதும் சீதையின் கண்ணும் ஒப்பவுடையனவாயினும், கங்குலைக் காட்டிலும் நெடிது நின்று வருத்தும் திறம் சீதையின் கண்ணுக்கேயுரியதெனப் புலப்படுத்துவான், 'சனகன் மாமகள் கண்ணினும் நெடியதோ கொடிய கங்குலே' என்றான். மண் - நிலம். வான் - ஆகாயம். மற்றை மூன்றாவன நீர், தீ, காற்று என்பன. எண் - எண்ணம்; நினைப்பின் எல்லை. ஈர்தல் - பிளத்தல்; வருத்துதல். ஈட்டம் - வலிமை. 'சனகன் மாமகள்' என்னுந் தொடர், சானகி என்னும் பெயரளவாய் நின்றது. 'மண்ணினும் வானினும் மற்றை மூன்றினும் எண்ணினும் நெடியவன்' (யுத்த - இரணிய - 71) எனவரும் தொடர் இப்பாடலின் முதலிரண்டடிகளோடு ஒப்புநோக்கத்தக்கது. (99)

3741. அப்புடை யலங்குமீ னமரு மார்கலி
உப்புடை யிந்துவென் றுதித்த வூழித்தீ
வெப்புடை விரிகதிர் வெதுப்ப மெய்யெலாம்
கொப்புளம் பொடித்ததோ கொதிக்கும் வானமே.

'அப்புடை அலங்குமீன் அமரும் ஆர்கலி
உப்புடை இந்து என்று உதித்த ஊழித்தீ
வெப்புடை விரிகதிர் வெதுப்ப, மெய்யெலாம்
கொப்புளம் பொடித்ததோ, கொதிக்கும் வானமே?

பொ :—நீரையுடையதும் ஒளியுடன் பிறழும் மீன்கள் தங்கப் பெற்றதும் ஆகிய கடலின் கண்ணே இனிமையுடைய திங்கள் என்று சொல்லப் பெற்றுத் தோன்றிய ஊழிக் காலத்து நெருப்பானது, வெம்மையுடையவாய் விரிந்த கதிர்களாற் சுடுதலால், கொதிப்படைந்த வானம் தன் உடம்பு முழுதும் (விண்மீன்கள் என்னும்) கொப்புளங்கள் தோன்றப் பெற்றதோ?

கு :—அப்பு - நீர். அப்புடை ஆர்கலி, அலங்கு மீன் அமரும் ஆர்கலி எனத் தனித்தனி இயையும். ஆர்கலி - கடல். அலங்குதல்- ஒளியுடன் அசைதல். உப்பு - இனிமை. (திருக்குறள் 802, 1328). உப்பு உடை எனப் பிரிக்காமல் உப் - புடை எனப் பிரித்து (கடலின்) நடுவிடத்தே எனப் பொருள் கொள்வாருமுளர். இந்து-சந்திரன். இது சொல்லளவில் திங்கள் என வழங்கப்படுவதன்றி இதன் தன்மையினைக் கூர்ந்து நோக்குவார்க்குப் பொருள் வகையினால்

இஃது ஊழித் தீயேயாம் என்பான் ‘ இந்துவென்று உதித்த ஊழித்தீ ’ என்றான்.

‘ செப்பிளங் கொங்கைமீர் திங்கட் சுடர்பட்டுக்
கொப்புளங் கொண்ட குளிர்வானை - இப்பொழுது
மீன்பொதிந்து நின்ற விசும்பென்ப தென்கொலோ
தேன்பொதிந்த வாயாற் றெரிந்து’

எனவரும் நளவெண்பா இங்கு ஒப்புநோக்கியுணரத் தக்கதாகும், (100)

**3742.** இன்னன வின்னன பன்னி யீடழி
மன்னவர் மன்னவன் மதிம யங்கினான்
அன்னது கண்டன னல்கி னானெனத்
துன்னிய செங்கதிர்ச் செல்வன் றோன்றினான்.

இன்னன இன்னன பன்னி, ஈடு அழி
மன்னவர் மன்னவன், மதி மயங்கினான் ;
அன்னது கண்டனன், அல்கினான் எனத்
துன்னிய செங்கதிர்ச் செல்வன் தோன்றினான்.

பொ:—இத்தன்மையவாகிய வருத்த மிகுதியைப் புலப்படுத்துஞ் சொற்களைப் பலமுறை சொல்லித் தன் வன்மை குறையப்பெறும் அரசர்க்கரசனாகிய இராமன், அறிவு கலங்கினான். (அந்நிலையில்) நெருங்கிய சிவந்த கிரணங்களையுடைய சூரியன், அத்துயரத்தைக் கண்டவனாய்(த் தன்குல மதலையாகிய இராமன்) மெலிந்து வருந்தினான் என்று எண்ணி (அவனது துயர் தணித்தல் வேண்டி உதயமலையில் வந்து) தோன்றினான்.

கு:—அல்குதல் - சுருங்குதல் ; மெலிதல். தன்னியல்பில் தோன்றிய கதிரவனைத் தன் குலத்திற் பிறந்த இராமனது துயர் நீக்கி அவனுக்கு ஆறுதலளிக்கத் தோன்றியவனாகக் குறித்தது, தற்குறிப்பேற்ற அணியாகும். (101)

அயோமுகிப் படலம் முற்றிற்று

# 10. கவந்தன் வதைப் படலம்

கவந்தனை இராம இலக்குவர் வாளால் வதைத்த நிகழ்ச்சியைக் கூறும் பகுதி ஆதலின், இது கவந்தன் வதைப் படலம் என்று பெயர் பெறுகின்றது. கவந்தப் படலம், கவந்தன் படலம், கவந்த வதைப் படலம், கவந்தன் மோட்சப் படலம் என்ற பெயர்களும் சிற்சில ஏடுகளில் இப்பகுதிக்குப் பெயராகக் காணப்படுகின்றன. தலை, வயிற்றுக்குள் அடங்கிக் கவந்தம்போலக் காணப்பட்டமையால் கவந்தன் என்று இவ்வரக்கன் பெயர் பெற்ருன். கவந்தம் - தலையற்று இயங்குவது.

இராம இலக்குவர் சீதையைத் தேடிச் செல்லுங்கால் ஒரு நாள் நண்பகலில் கவந்தன் தங்கியுள்ள காட்டை அடைகின்ருர்கள். கவந்தன், தன் வழக்கம்போல் இரண்டு கைகளையும் நீட்டி அக் கைக்குள் அகப்பட்ட எல்லா உயிர்களையும் தன் வயிற்றிலுள்ள வாயில் தள்ளி விழுங்குங்கால் தன் கைக்குள் இராம இலக்குவர் இருப்பதைக் கண்டு, 'என் பசி தீர்க்க வினையினுல் வந்த நீங்கள் யார்?' என்று வினவி அவர்களையும் விழுங்க முயன்ருனுக, இராம இலக்குவர் சிறிது கலங்கிப் பின் துணிந்து தம் கை வாள்களால் அக் கவந்தனுடைய இரு தோள்களையும் வெட்டி வீழ்த்துகின்ருர்கள். இராமன் கைதீண்டிய புண்ணியத்தால் கவந்தன், சாபத்தால் வந்து வாய்த்த தன் கோரமான அரக்க வடிவம் நீங்கி, ஒளிவீசும் பழைய தெய்வ வடிவைப் பெற்று விண்ணில் உயர்ந்து நின்று இராமனைப் பலவகையாகத் தோத்திரம் செய்கின்ருன். பின், இராம இலக்குவர்க்கு அண்மையில் வந்து நின்று, தன் முற்பிறப்பின் வரலாறு கூறிப் பின்னர், இராம இலக்குவர் இனிச் செய்ய வேண்டுவது நல்ல துணையைச் சேர்த்துக் கொள்ளுதலேயாம் என்பதை வற்புறுத்திச் சபரியின் ஆசிரமத்திற்குச் சென்று சபரிகூறும் நெறியில் சென்று சுக்கிரீவனை நட்புக்கொண்டு சீதையைத் தேடிக் காணுமாறு கூறி விடைபெற்றுச் செல்லுகின்ருன் என்பது இப்படலத்தில் கூறப்படுகின்றது.

## கம்பர் வான்மீகத்தோடு வேறுபடும் இடங்கள்

1. வான்மீகத்தில் 'இராம இலக்குவர் கவந்தன் வனத்தை அடையும்போது இலக்குவன் தன் இடத்தோள் துடிப்பதைக் கண்டு, வரப்போகும் தீங்கினை யுய்த்துணர்ந்து, இராமனுக்குக் கூறி விழிப்பாக இருக்குமாறு வேண்டிக் கொண்டான்' என்றுள்ளது. கம்பர் இதைக் கூறவில்லை.

2. கவந்தன் கைகளால் தள்ளப்பட்டு நெருங்கும்போது இராம இலக்குவர், கூப்பிடு தொலேவில் மலைபோன்ற கோர உருவத்துடன் கவந்தன் இருப்பதைக் காண்கின்றனர். துணிவும் வலிமையுமிக்க இராமன் அவ்வுருவத்தைக் கண்டு அஞ்சாமல் இருந்தான்; இலக்குவன் தன் இளமைத் தன்மையாலும் துணிவின்மையாலும் அஞ்சி வருந்தினுன். அவ்வருத்த மிகுதியால் இராமனை நோக்கி, 'வலியோய்! அரக்கன் கையில் அகப்பட்டு வருந்தும் என்னைப்பார்; யான் தனித்த வாழ்க்கையேன் ஆதலின், என்னை இக்கவந்தனுக்குப் பலிகொடுத்துவிட்டு நீ நலமுடன் ஓடிப்போய்விடு! விரைவில் நீ சீதையை யடைவாய் என்று எனக்குத் தோன்றுகின்றது. தந்தைக்குரியதாய் வழிவழிவந்த அரசை மேற்கொண்டு அயோத்தியை ஆண்டுகொண்டு எப்போதும் என்னை நினைத்துக் கொள்வாய்' என்று கூறியதாக வான்மீகத்தில் உள்ளது.

கம்பர், இலக்குவன் கூறிய இக்கருத்தைக் கூறவில்லை. இராமனே இத்தகைய கருத்தைக் கூறியதாக அமைத்துள்ளார். 'இலக்குவ! சீதையும் பிரிந்தாள்; தந்தையும் இறந்தான்; இவ்விரு நிகழ்ச்சியாலும் உளதாம் பெரும்பழி சுமந்து உலகில் உழல யான் விரும்பவில்லை. இந்தப் பூதத்திற்கு உணவாகின்றேன்; நீ இங்கிருந்து நலமுடன் சென்றுவிடு' என இராமன் கூறுகின்ருன். அது கேட்ட இலக்குவன், 'சீதையை மீட்க முடியாமல் இராமன் இறந்தான் என்ற பழி உண்டாகாதா? இறப்பதாயின் உனக்குமுன் யானே இறத்தல் வேண்டும். அது என் அன்னையின் கட்டளையாகும்? இப் பூதத்தை அழிக்க இயலாது போயினன்றே நாம் இதற்கு இரையாக வேண்டும்? நம் கூரிய வாளால் இதன் பெரிய கைகளை வெட்டி விடலாம்; துன்பத்தைத் துற! என்று கூறி முன் சென்ருன்; அவ்வாறே இராமனும் முன்செல்ல, இருவரும் ஒரு நிலையினராகக் கவந்தனை நெருங்கி, அவன் விழுங்க முயலும் நிலையில், அவன் கைகளை வெட்டி வீழ்த்தினர் என்பர் கம்பர். இராமன் இவ்வாறு கூறியதாக அமைத்ததனுல் அவன் பழிநாணும் தன்மையையும் சீதையைப் பிரிந்ததாலாய அவன் பெருந்துயரையும் புலப்படுத்தியதாகவும் ஆயிற்று. இது கருதித்தான் கம்பர் இங்ஙனம் மாற்றி அமைத்தார் போலும்.

3. கவந்தன் கைகள் தம்மை நெருக்குவதை யறிந்த இராம இலக்குவர், கூப்பிடு தொலைவில் கவந்தன் வடிவத்தையே கண்டு தெளிந்தார்கள்; என்று வான்மீகம் கூறவும் கம்பர் அங்ஙனம் கூருமல், அக்கைகள் நெருக்குவதைப்பற்றிப் பலவகையான எண்ணங்கள் இராம இலக்குவர் உள்ளத்தில் எழுந்ததாகச் சித்திரிக்கின்ருர். அது மிகவும் பொருத்தமாகத் தோன்றுகின்றது. முதலில்

இராமன், அரக்கர் சேனேயே வந்து தம்மை வளைந்து கொள்வ தாகவே கருதி இலக்குவனுக்குக் கூறுகின்ருன் ; 'இராவணனும் இவ்வெல்லைக்குள் தான் இருத்தல் வேண்டும். தேடியலேயும் துன்பம் தீர்ந்தது' என்று மகிழ்கின்ருன். இலக்குவன் சிந்தித்துப் பார்த்து இராமன் கருத்துப் பொருத்தமானது அன்று என்பதை நிறுவு கின்ருன். முரசொலியும் சங்கொலியும் இல்லாமையால் அரக்கர் சேனே அன்று என்று மறுத்துவிட்டு, 'பாற்கடல் கடை கயிருக அமைந்த வாசுகி என்னும் பாம்போ, அன்றி வேருெரு பாம்போ வாலுடன் தலேயினல் வளைத்துக் கொள்வதுபோலிருக்கின்றது என்று கூறுகின்ருன். காணுத புதுப் பொருளைக் கண்டவர்கள் உள்ளத்தில் பலவகையான நினைவுகள் எழுதல் இயல்பு என்பதைக் கம்பர் புலப்படுத்துகின்ருர்.

4. வான்மீகத்தில்: கவந்தன் கைகளை இழந்தவுடன் இராம இலக்குவரைப் பார்த்து நீவிர் யார்? என்று வினவுகின்ருன். இலக் குவன், தம் வரலாற்றைச் சுருக்கிக் கூறிவிட்டு, நீ யார்? என்று கவந்தனைக் கேட்க, அவன் தன் வரலாற்றை விரிவாகக் கூறு கின்ருன்.

"யான் தநு என்பவன் மகன். சூரியனைப் போன்ற ஒளிமிக்க உடம்பையுடையனுக இருந்தேன். பிரமனை நோக்கித் தவஞ்செய்து நெடிய ஆயுளைப் பெற்றேன். இவற்ருல் செருக்குற்று அஞ்சத்தக்க அரக்க வடிவந்தாங்கி முனிவரை அச்சுறுத்தி அதனுல் மகிழ்ச்சியுற்று வந்தேன். ஒருநாள் தூலசிரசு என்ற முனிவனை அவ்வாறே அச் சுறுத்தியபோது அம்முனிவன் உண்மை உணர்ந்து சினந்து, 'இந்தக் கோரவடிவமே உனக்கு நிலேப்பதாக' எனச் சபித்தான். 'என் தீய செயலால் பெற்ற இச்சாபம் நீங்குநாள் எந்நாளோ? என்று பணிந்து கேட்க, 'இராமன் வாளால் உன் கைகளை வெட்டி யுன்னைத் தகனம் செய்யுங்கால் உன் பழைய வடிவத்தைப் பெறுவாய்' என்று முனிவன் கூறினன். நெடிய ஆயுளும் பெரிய உடம்பும் இருப்பதால் இந்திரனை எதிர்த்தேன். அவன் வச்சிரப் படையால் என் தலேயையும் கால் களையும் உடம்பினுள் அழுத்திவிட்டான். 'இவ்வாறு என்னை வருத்து வதினும் கொன்றுவிடு' என்று கூறினேன். பிரமன் கொடுத்த ஆயுள் உள்ளது; கொல்ல இயலாது; என்ருன். அங்ஙனமாயின் யான் தலேயும் கையும் காலுமிழந்து எப்படி வாழ்வது? என்று கேட் டேன். ஒரு யோசனை நீளும் இரண்டு கைகளைக் கொடுத்து, இக் கைகளால் உயிர்களை வளைத்துக் கொன்று தின்று வாழ்க என்று கூறி வயிற்றிடை வாய் வைத்தான். 'இந்த உடம்பு நீங்கி எப்போது பழைய உடம்பு பெறுவேன்? என்று கேட்டபோது, இராமன் உன் கைகளை வெட்டியபோது நல்லுடம்பு பெறுவாய்' என்று இந்திரன் கூறினன்.

முனிவன் சாபத்தால் அரக்க உடம்பும் இந்திரன் சினத்தால் கவந்த வடிவமும் பெற்ற யான் நும் வரவை எதிர்நோக்கி யிருந்தேன். இன்று வந்து எனக்கு நன்மை செய்தீர்கள்; என் உடம்பை நெருப்பிலிட்டுத் தகனஞ் செய்யுங்கள். யான் பழைய வடிவத்தைப் பெறுவேன். பெற்றபின் உமக்குச் சிறந்த ஆலோசனை கூறி அன்பனையும் காட்டுவேன் என்றான். பிரிவுத்துயரால் வருந்தியுள்ள இராமன், அவன் சொல்கேட்டு மகிழ்ந்து, நின் உடம்பைப் பெரும் பள்ளத்தில் தள்ளி யானை முரித்த உலர்ந்த மரங்களைக் கொணர்ந்து இட்டுத் தகனம் செய்கின்றோம். சீதை எங்கே யிருக்கின்றாள்? அறிந்திருந்தால் சொல்" என்று கூறினான். கவந்தன், இப்பொழுது எனக்கு நல்ல ஞானம் இல்லை. பழைய உடம்பைப் பெற்றால் நல்ல ஞானம் உண்டாகும் அப்போது சீதையை யெடுத்துச் சென்ற அரக்கனை அறிந்த ஒருவனை உமக்குக் காட்டுவேன். அவன் உமக்குச் சீதையைத் தேடித் தருவான். என்னை முன்னர்த் தகனம் செய்யுங்கள்' என்று வேண்டினான். அவன் விரும்பியவாறு இராம இலக்குவர் தகனம் செய்தார்கள். ஈம விறகு நன்கு எரியும்போது அந்தச் சிதையைத் தள்ளிக்கொண்டு புகையில்லாத நெருப்புப் போன்ற ஒளி மிக்க தூய உடம்பும் ஆடையணிகளும் மலர் மாலையும் உடையனாய் உயரக் கிளம்பினான். அன்னங்கள் பூட்டிய ஒளியுள்ள ஒரு விமானத்தில் நின்று கொண்டு இராமனை நோக்கி,

"இராம, துன்ப நிலையிலுள்ள ஒருவன் துன்பநிலையிலுள்ள மற்றொருவனை நண்பனாகப் பெறுகின்றான். ஆதலால் உன்னைப் போன்று துன்பமுற்றுள்ள சுக்கிரீவனை நண்பனாகக் கொள். உன் முயற்சி பயனுடையதாகும். நல்ல எண்ணமுள்ளவனும் வீரமிக்க படைப் பெருக்கமுடையவனுமாகிய சுக்கிரீவன், 'ரிசியமூகம் என்ற மலையில் நான்கு வானரரோடு தங்கியுள்ளான். அவனை அணுகித் தழல் சான்றாக அவனொடு நட்புப் பூண்டு அவன் எதிர்பார்க்கும் உதவியையும் செய்க. அவன் தன் பெரிய சேனையை யனுப்பிச் சீதை எங்கிருப்பினும் கொணர்ந்து தருமாறு செய்வான்' என்று கூறி விடைபெற்றுச் சென்றான் என்றுளது.

கம்பர், கவந்தன் வரலாற்றை இவ்வளவு விரிவாகக் கூறாமல் தநு எனும் பெயரினேன்; கந்தருவன்; சாபத்தால் இக்கடைப்படு பிறவியை யடைந்தேன். நும் கை தீண்டியதால் பழைய உடம்பு பெற்றேன் என்று கூறியதாகச் சுருக்கியமைத்துள்ளார். இராம இலக்குவர் கைப்பட்டவுடனே தெய்வ வடிவம் அவனுக்கு வந்ததாகவும் வானத்தில் நின்று தோத்திரங்கள் பல செய்து முடிவில் இராம இலக்குவர் எதிரில் நின்று தன் வரலாறு கூறிச் சுக்கிரீவனை நட்புக் கொள்ளுமாறும் சபரியைத் தலைப்பட்டு அவள் கூறிய வழியில்

சுக்கிரீவனை அடையுமாறும் சொல்லி விடைபெற்றுச் சென்றதாகவும் கம்பர் சிறிது மாற்றி அமைத்துள்ளார்.

தநு என்பவன் மகன் என வான்மீகி கூறக் கம்பர், 'தநு எனும் நாமத்தேன்' என்று கூறியதாக அமைத்தது தநுவின் மகன் தானும் தநு என்றே பெயர் பெற்ற உண்மையை அறிந்து கூறியதாகலாம். 'நன்னன் சேய் நன்னன்' எனப் பெயர் பெறுதலைக் காண்கின்றோமன்றோ? இராமனுடைய கையின் பரிசத்தால் கவந்தன் பழைய வடிவம் பெற்றான் என்பது இராமனுக்குப் பெருமை தருவதாக இருத்தலால், கவந்தனுடம்பைத் தகனம் செய்த பின் அரக்க வடிவம் நீங்கி அவன் பழைய உடம்பு பெற்றான்' என்ற பகுதியைக் கம்பர் கூறவில்லை போலும். 'சாபத்தால் இக்கடைப்படு பிறவியுற்றேன்' என்று மட்டும் கூறி, அச்சாபத்திற்குக் காரணமான செயல்களைக் கூறாதது, இக்கதைத் தொடர்பிற்கு அவ்வளவு இன்றியமையாதன அல்ல என்ற கருத்தாற் போலும். கவந்தன் இராமனைத் தோத்திரம் செய்த பகுதி வான்மீகத்தில் இல்லாதது; கம்பர் தாமே படைத்துக் கொண்டு மொழிந்ததேயாம். தன் சாபத்தை நீக்கித் தெய்வவுடம்பு நல்கிய இராமன் உதவியை நினைந்தும் அவன் தெய்வத் தன்மையை உணர்ந்தும் கவந்தன் இராமனைத் தோத்திரம் செய்ததாகக் கூறிய கம்பர் அமைப்புப் பொருத்தமுடையதாய்க் கவந்தன் நன்றி மறவாத் தன்மையைக் காட்டுவதாய் உள்ளது.

வான்மீகத்தில் பம்பைப் பொய்கையைப் பற்றிய சிறப்புகளைக் கவந்தன் கூறுவதாக உள்ளது. கம்பர் அப்பொய்கையின் சிறப்பைக் கிட்கிந்தா காண்டத்தில் இராம இலக்குவரே நேரில் காண்பதாக அமைத்துக் காட்டுகின்றார். பம்பைப் படலம் என்றே அப்பகுதிக்குப் பெயரமைத்துள்ளார்.

பம்பைக் கரையில் மலர்கள் வாடாமலிருக்கும். மதங்க முனிவரின் மாணவர்கள் தம் குருவுக்காகப் பழங்களைச் சுமந்து செல்லுங்கால் அவர்களுடம்பில் வடிந்த வியர்வைத் துளிகளே அவர்கள் தவத்தால் வாடா மலர்களாகக் காட்சியளிக்கின்றன என்பதும், ரிசியமூக மலையில் உறங்குவோர் காணும் கனவுகளை விழித்தவுடன் நனவாகப் பெறுவார்கள்; ஆனால் கொடியவர்கள் அம்மலையில் சென்று உறங்கினால் உறங்கும்போதே அரக்கரால் கொல்லப்படுவார்கள் என்பதும் கவந்தன் கூறியதாக வான்மீகத்தில் உள்ளது. கம்பர் அந்நிகழ்ச்சிகளைப் புலப்படுத்தவில்லை.

## படலப் பொருட் சிறப்பு

கம்பர், அழகுமிக்க பொருள்களை மேலும் சிறப்பித்துக் காட்டுவதில் வல்லவர். அதுபோலவே அழகில்லாத கோர உருவத்தைப்

பற்றிக் கூறும்போதும் அக் கோர உருவத்தை மேலும் சிறப்பித்துக் காட்டுவதிலும் மிக வல்லவராவர். கவந்தன் வடிவம், காண்பார் அருவருக்கத் தக்கது ; கோரமானது. வாய் இருக்க வேண்டிய இடத்தில் இல்லாது வயிற்றிடையில் இருப்பதே கோரக் காட்சிதான் ; அதற்கு மேலும் அவ்வாயிலுள்ள பற்கள் ஒவ்வொன்றுக்கும் இடைவெளி இரு காத தொலைவு இருப்பதாக உயர்வு நவிற்சியாகக் கூறி அவன் வடிவத்தை மேலும் கொடுமை மிக்கதாகக் காட்டியிருத்தல் காணலாம்,

"எயிற்றினுக் கிடையிரு காத மீண்டிய
வயிற்றிடை வாயெனு மகரவேலையான்"

என்கின்ருர். மகரமீன்கள் உலாவத்தக்க பெரிய கடல்போல அவன் வாய் வயிற்றில் விரிந்து காணப்படுகின்றதாம். அவ்வயிறு பாவிகள் தங்கியுள்ள கொடிய நரகத்தையும் கொடுமையற்ற தென்று இகழ்ந்து சிரிக்கத்தக்கபடி கொடுமை மிக்கதாக உள்ளதாம்.

கவந்தனுடைய நீண்ட கைகளின் தோற்றத்தை விளக்குங்கால் பாற்கடல் கடைந்த மந்தரமலையாகிய மத்தினைச் சுற்றிய வாசுகி என்னும் பாம்பு அம்மலையில் இருபுறமும் நீண்டு கிடந்ததுபோலப் பெரிய தோற்றமுடைய அக்கவந்தன் உடம்பைச் சார்ந்து இருபுறமும் அவன் கைகள் நீண்டு கிடப்பதாக உவமை கூறி விளக்குகின்ருர்.

கவந்தன் வாயின் இருபுறத்தும் வளைந்து வெண்மையாக விளங்கும் கோரப் பற்களை உவமை முகத்தால் விளக்க நினைக்கின்ருர். "முழுவெண் திங்களை இரண்டு கூறு இட்டென விலங்கெயிற்றினன்" என்று கூறுகின்ருர். வெண்மை நிறத்தானும் வளைந்த தோற்றத்தாலும் கோரப்பல் இரண்டும் முழுமதியை இரண்டாக்கி வைத்ததுபோலவே வாயின் இருபுறத்தும் காணப்படுகின்றனவாம். இது விகார வுவமை எனப்படும். இவ்வுவமை சாலச்சிறப்புடையதாய் அவன் கோரப்பற்களின் இயல்பை நன்கு விளக்குகின்றது.

இதற்கு மேலும் இவ்வுவமையில் கம்பர் ஒரு சிறந்த கற்பனையைச் சேர்த்து விளக்கியுள்ளார். முழுமதி இங்கு வருதற்கும் அது இருகூருதற்கும் கற்பனையால் காரணம் புலப்படுத்துகின்ருர். கவந்தன் கைகள் இரண்டும் பாம்பு போன்றிருந்தன என்பதை முன்னமே கூறியுள்ளாரன்ருே ? முழுமதி விண் வழியே சென்று கொண்டிருந்ததாக, இடையே கவந்தன் கைகள் புரண்டு வருவதைப் பார்த்துத் தன்னை விழுங்கப் பாம்பு புரண்டு வருவதாக மயங்கி நினைத்தது ; அப்பாம்புக்குத் தப்பிப் பிழைக்க ஒரு பாதுகாவலான இடத்தை அடையவேண்டும் என விரைந்தது ; கவந்தன் உடம்பை ஒரு மலையாகவும் அவன் வாயைப் பெரிய குகையாகவும் மயங்கி நினைந்து

அவன் வாயுள் புகுந்தது ; அதைக் கடித்து அம்முழுமதியை இரண்டு துண்டாக்கினன் கவந்தன். அவ்விரண்டு துண்டமே அவன் வாயில் இருபுறமும் பற்களாகக் காணப்படுகின்றன என்பது கம்பரின் சிறந்த கற்பனை. இக்கற்பனை எவ்வளவு அழகுடையதாக விளங்குகின்றது. மயக்க அணியும் ஏதுத் தற்குறிப்பேற்றமும் கலந்து புலமையுள்ளத் திற்கு நல்விருந்தாய் அமைந்துள்ளதைக் காணலாம். பாம்பின் வாய்க்குத் தப்பக் கருதிய முழுமதி, அச்சத்தால் மதிகெட்டு அரக்கன் வாயில் அகப்பட்டுச் சிதைவுற்றது என்ற கற்பனை நகைச்சுவை மிக்க தாகவும் விளங்குதல் காணலாம். அக்கற்பனைப் பாடல்.

புரண்டுபாம் பிடைவர வெருவிப் புக்குறை
யரண்டனை நாடியோ ரருவி மால்வரை
முரண்டொகு முழைநுழை முழு வெண்டிங்களை
யிரண்டுகூ றிட்டென விலங்கெ யிற்றினன்.

என்பதாகும். பாம்பின் வாயில் அகப்படும் கொடுமையினும் கவந்தன் வாய்ப்பட்ட துன்பம் பெரிதாகும் என்பதும் இதனல் விளங்குதல் காணலாம்.

கோர உருவும் கொடுஞ் செயலுமுடைய கவந்தன் இராமன் கைதீண்டப் பெற்றமையால் எழில்மிக்க ஒளியுருவத்தை யடைந்து, நல்ல ஞானமுங் கைவரப் பெற்று, இராமன் தெய்வ நிலையை யுணர்ந்து துதிக்கின்ற பகுதி உருக்கமிக்கதாக உள்ளது. இறைவ னுடைய அளக்கலாகா இயல்புகளை நன்கு விளக்குவதாக அமைந்துளது.

மாண்பாலுலகை வயிற்றெளித்து வாங்குதியால்
ஆண்பாலோ பெண்பாலோ வப்பாலோ வெப்பாலோ ?

எனக் கவந்தன் காரணங்காட்டி வினவுகின்ற வின நகைச்சுவை நிறைந்ததாய் இறைவனது கடந்த நிலையை விளக்குதல் காணலாம்.

# 10. கவந்தன் வதைப் படலம்

இராம இலக்குவர் விடியலில் புறப்பட்டுப் போதல்

3743. நிலம்பொறை யீதென நிமிர்ந்த கற்பினள்
நலம்பொறை கூர்தரு மயிலை நாடிய
வலம்புறு பறவையு மழுவ வாமெனப்
புலம்புறு விடியலிற் கடிது போயினர்.

நிலம் 'பொறை ஈது!' என நிமிர்ந்த கற்பினள்,
நலம் பொறை கூர்தரு மயிலை நாடிய
அலம்புறு பறவையும் அழுவவாம் எனப்
புலம்புறு விடியலில் கடிது போயினர்.

பொ :—நிலமகளும் 'பொறுமை யென்பது இதுவேயாகும்' என்று புகழும்படி உயர்ந்த பொறுமைக் குணம் மிக்கிருக்கிற மயில் போன்ற சாயலையுடைய கற்பையுடையவளான சீதையைத் தேடும் பொருட்டு, (துயிலெழுந்து அங்குமிங்கும்) அலைதலைக் கொண்ட பறவைகளும் அழுகின்றன என்று சொல்லும்படி ஒலி செய்கிற விடியற் காலத்தில் (இராம இலக்குவர்) விரைந்து சென்றார்கள்.

கு :—பொறுமைக்குப் பெயர் வாய்ந்த பூமகளும் போற்றும்படியான பொறை நலம் மிக்குடையவள் சீதை என்பது முதலிரண்டு அடிகளாற் கூறப்பட்டது. காலையில் எழுந்து இயல்பாகவே ஒலிக்கின்ற பறவைகளை இராம இலக்குவரின் துன்பத்துக்கு இரங்கி அழுவபோல ஒலித்தன எனத் தற்குறிப்பேற்றமாகக் கூறினர். இராம இலக்குவர் என்னும் எழுவாய் வருவித்துரைக்கப்பட்டது. (1)

கவந்தன் வனத்தைச் சேர்தல்

3744. ஐயைந் தடுத்த யோசனையி
★ னிரட்டி யடவி புடைபடுத்த
வையந் திரிந்தார் கதிரவனும்
வானி னுப்பண் வந்துற்று

னெய்யுஞ் சிலைக்கை யிருவருஞ்சென்
றிருந்தே நீட்டி யெவ்வுயிருங்
கையின் வளைத்து வயிற்றடக்குங்
கவந்தன் வனத்தின் கண்ணுற்றார்.

ஐ ஐந்து அடுத்த யோசனையின்
இரட்டி, அடவி புடைபடுத்த
வையம் திரிந்தார்; கதிரவனும்
வானின் நாப்பண் வந்துற்றான்;
எய்யும் சிலைக்கை இருவரும் சென்று,
இருந்தே நீட்டிஎவ் உயிரும்
கையின் வளைத்து வயிற்று அடக்கும்
கவந்தன் வனத்தின்கண் உற்றார்.

பொ :—(அம்பு) எய்தற்குரிய வில்லையேந்திய கைகளையுடைய (இராமஇலக்குவர்) இருவரும் ஐம்பது யோசனை தூரம் காடுகளாற் சூழப்பட்ட இடத்தில் திரிந்தவர்களாகிச் சென்று, (ஓரிடத்தில்) இருந்தபடியே (தனது கைகளை) நெடுந்தூரம் நீளச் செலுத்தி எல்லா உயிரினங்களையும் கைகளாற் சுற்றிச் சேர்த்துக் கொண்டு வந்து தன் வயிற்றை நிறைத்துக் கொள்ளும் கீவந்தன் என்னும் அரக்கனது காட்டினிடத்தில் சேர்ந்தனர்; (அவ்வளவில்) வெயிலவனும் வானத்தின் நடுவில் (உச்சியில்) வந்து சேர்ந்தான்.

கு ;—ஐயைந்து - இருபத்தைந்து; அதன் இரட்டி - ஐம்பது. "வழங்கு முயிரனைத்தும் வாரிவாய்ப் பெய்து, விழுங்குங் கவந்தன்" என்பது நூற்றெட்டுத் திருப்பதி யந்தாதி. கவந்தனுக்கு வயிற்றிலேயே வாயும் இருந்ததால், வாய்ப்பெய்து என்னாது 'வயிற்றடக்கும்' என்றார். இருவரும் திரிந்தாராய்ச் சென்று உற்றார் என இயையும். (2)

கவந்தன் கைக்குள் புக்க பொருள்களின் இயல்பு 3745-3747

3745. எறுப்பினங் கடையுற யானை யேமுதல்
★ உறுப்புடை யுயிரெலா முலைந்து சாய்ந்தன
வெறிப்புறு நோக்கின வெருவு கின்றன
பறிப்பரு வலையிடைப் பட்ட பான்மைய.

எறும்பு இனம் கடையுற, யானையே முதல்
உறுப்புடை உயிர் எலாம் உலைந்து சாய்ந்தன;

வெறிப்புறு நோக்கின, வெருவுகின்றன ;
பறிப்பு அரு வலையிடைப் பட்ட பான்மைய.

பொ :—(கவந்தன் கைகளை நீட்டி நெருக்கியபோது அங்கு அகப்பட்ட) யானை முதலாக எறும்பின் இனம் இறுதியாகவுள்ள உடம்பு படைத்த எல்லா உயிர்களும் வருந்தித் தளர்ந்தனவாயும், மருண்ட பார்வையினவாயும், அஞ்சுகின்றனவாயும், நீக்கமுடியாத வலையிற் சிக்கிக் கொண்ட தன்மையனவாயும்.

கு :—உயிரெலாம் சாய்ந்தனவாயும் நோக்கினவாயும் வெருவுகின்றனவாயும் பான்மையவாயும் மயங்குவனவற்றின் இயல்பு நோக்கினுர் என வரும் செய்யுளில் முடியும். எறும்பு இனம் என்றது மென்றெுடர் மொழியில் சில வேற்றுமையில் தம்மின வன்றுடர் ஆகும் என்ற விதியால் 'எறுப்பினம்' எனவாயது. (3)

3746. மரபுளி நிறுத்திலன் புரக்கு மாண்பில
னுரனில னொருவனுட் டுயிர்கள் போல்வன
வெருவுவ சிந்துவ குவிவ விம்மலோ
டிரிவன மயங்குவ வியல்பு நோக்கினுர்.

மரபுளி நிறுத்திலன், புரக்கும் மாண்பு இலன்
உரன் இலன் ஒருவன் நாட்டு உயிர்கள் போல்வன,
வெருவுவ, சிந்துவ, குவிவ, விம்மலோடு
இரிவன, மயங்குவ இயல்பு நோக்கினுர்.

பொ :—வழிமுறைப்படி (குடிகளை) நிலைபெறச் செய்யாதவனும், அரசாளும் மாட்சிமையற்றவனும், திறமையில்லாதவனுமாகிய ஓர் அரசனது நாட்டிலுள்ள (வருந்தி வாழும்) மக்களைப் போன்றனவாய், நடுங்குகின்றனவாயும், சிதறிப் போவனவாயும், திரள்கின்றனவாயும், ஏக்கத்தோடு ஓடுகின்றனவாயும், (செய்வதறியாமல்) திகைக்கின்றனவற்றின் தன்மைகளை (இராம இலக்குவர்) பார்த்தார்கள்.

கு :—அரசன் செங்கோலனுயின் குடிகளை மரபு அறிந்து வரிசையில் நிறுத்தி அவர்கட்கு வேண்டுவ நல்கிக் காப்பாற்றிப் பகைவரால் நலியவுருது தான் அப்பகைவரை நலிவுசெய்வான். கொடுங்கோலனுயின் அவ்வியல்பிற்கு மாறுபட்டவனுய்த் தன்கீழ் வாழ் குடிகள் விம்மி வெருவி இரியுமாறு துன்புறுத்துவான் என்க. கொடுங்கோலரசன் நாட்டுக் குடிகள் போலக் கவந்தன் கைக்குள் அகப்பட்ட

உயிர்கள் வெருவி இரிவனவாய் மயங்கின என்றவாறு. மயங்குவன வற்றின் இயல்பு நோக்கினர் என்க. மயங்குவ என்பது வினையாலணையும் பெயர். (4)

3747. மால்வரை யுருண்டன வருவ மாமரம்
கால்பறிந் திறுவன கான யாறுகள்
மேலுள திசையொடு வெளிக ளாவன
சூன்முதிர் மேகங்கள் சுருண்டு வீழ்வன.

மால்வரை உருண்டன வருவ, மாமரம்
கால் பறிந்து இறுவன, கான யாறுகள்
மேல் உள திசையொடு வெளிகள் ஆவன,
சூல் முதிர் மேகங்கள் சுருண்டு வீழ்வன.

பொ :—பெரிய மலைகளும் உருண்டு வந்தன ; பெரிய மரங்களும் மூட்டோடு சாய்ந்து அழிந்தன ; காட்டாறுகள் ஓடின இடங்களும் மற்றும் மேலுள்ள திசையிடங்களும் மட்ட வெளிகளாயின ; கருவுற்ற மேகங்களும் துவண்டு கீழே விழுந்தன; (இவ்வாறான தன்மைகளையும் இராம இலக்குவர் பார்த்தார்கள்.)

கு :—கவந்தன் கைகளுக்குள் அகப்பட்டனவாதலின், பெரிய மலைகளும் உருண்டு வருவனவாயின, பெரிய மரங்களும் வேர் அற்று வீழ்வனவாயின; கானயாறுகள் ஓடிய இடங்களும் மேகங்கள் உலாவிய இடங்களும் வெட்ட வெளிகளாயின. ஆறுகள் அவன் கைக்குள் புகுதலாலும் மேகங்கள் சுருண்டு வீழ்தலாலும் அவ்விடங்கள் வெளிகளாயின. (5)

## இராம இலக்குவர் கவந்தன் கைக்குள் புகுதல் 3748-3749

3748. நாற்றிசைப் பரவையு மிறுதி நாளுறக்
காற்றிசைத் தெழவெழுந் துலகைக் கால்பரந்
தேற்றிசைத் துயர்ந்துவந் திடுங்கு கின்றன
போற்றிசைச் சுற்றிய கரத்துப் புக்குளார்.

நால் திசைப் பரவையும், இறுதி நாள் உறக்
காற்று இசைத்து எழ எழுந்து, உலகைக் கால்பரந்து
ஏற்று இசைத்து உயர்ந்து வந்து இடுங்குகின்றன
போல், திசைச் சுற்றிய கரத்துப் புக்குளார்.

பொ :—ஊழியின் முடிவு ஏற்படும் பொழுது, ஊழிக்காற்று பேரொலியுடன் வீசி எழ, நான்கு திக்குகளிலுள்ள கடல்களெல்லாம் பொங்கிப் பரவி உலகத்தை மூடுவதாய் ஆரவாரத்தோடு தொடர்ந்து வந்து நெருங்குகின்றவை போன்று, திக்குக்களை வளைத்த (அக்கவந்தனது) கைகளினிடையிலே (இராம இலக்குவர்) அகப்பட்டவரானார்கள்.

கு :—இடுங்குதல் - நெருங்குதல். கவந்தனுடைய கைகளின் நீளம் புலப்படத் திசைச் சுற்றிய கரத்து என்றும், அக்கைகளுக்குள் அடங்காது செல்ல வேறு நெறியின்மை புலப்படப் புக்குளார் என்றும் கூறினர். அவர் தம் விருப்பமின்றியே கவந்தன் கைக்குள் புக நேர்ந்தது. (6)

3749. தேமொழி திறத்தினா லரக்கர் சேனைவந்
தேமுற வளைந்ததென் றுவகை யெய்தினர்
நேமிமால் வரையென நெருக்கு கின்றதே
யாமென லாயகைம் மதிட்கு ளாயினர்.

தேமொழி திறத்தினால், அரக்கர் சேனை வந்து
ஏமுற வளைந்தது என்று உவகை எய்தினர் ;
நேமி மால் வரை என நெருக்குகின்றதே
ஆம் எனல் ஆய கைம் மதிட்குள் ஆயினர்.

பொ :—சக்கரவாளம் என்னும் பெரிய மலையைப்போல் நெருக்குகின்றது என்னும்படியான (கவந்தனது) கைகளாகிய மதிட்குள் சிக்கிக் கொண்டவர்களான இராம இலக்குவர், தேன் போன்ற இனிய பேச்சையுடைய சீதையின் கற்பினால் அரக்கர்களுடைய படை துன்புறத் தாமே வந்து நம்மை வளைந்து கொண்டது என்று நினைத்து மகிழ்ச்சி கொண்டார்கள்.

கு :—தேமொழி, அன்மொழித் தொகையாய்ச் சீதையையுணர்த்தியது. திறம் - கற்பு. ‘தீதிலாவடமீனின் திறமிவள்திறம்’ (சிலம்பு - மங்கல வாழ்த்து. 27) என்புழியும் இச்சொல் இப்பொருளதாதல் காணலாம். ‘நாம் தேடிச் சென்ற அரக்கர் சேனை தானே வந்து துன்புறுமாறு அகப்பட்டுக் கொண்டது’ என்று எண்ணி மகிழ்ந்தார்கள் என்க. ஏம் - துன்பம். ‘ஏமுறுகிளவி’ (தொல் - பொருள்-146) என்புழியும் இப்பொருள்படுதல் காணலாம். தம்மெதிர்ப்பட்ட அரக்கர் சேனை துன்புற்றழிதல் தப்பாது என்ற கருத்தால் ‘ஏமுற வளைந்தது’ என்று எண்ணினர். சீதையின் கற்பே அவ்வரக்கர் சேனையை இவ்வாறு நம்மை வளைந்து கொண்டு வருந்தியழியுமாறு செய்தது

என்பார், 'தேமொழி திறத்தினல்......வளைந்தது' என்ருர். கவந்தன் கைகளின் பருமைக்கும் நீளத்திற்கும் வளைவிற்கும் நேமிமால் வரை உவமை. கைம்மதிள் உருவகம். (7)

மகிழ்ச்சியால் இராமன் இலக்குவனுக்குக் கூறுவது

3750. இளவலை நோக்கின னிராம னேழையை
யுளைவுசெ யிராவண னுறையு மூருமிவ்
வளவைய தாகுத லறிதி யையநங்
கிளர்பெருந் துயரமுங் கீண்ட தாமென்ருன்.

இளவலை நோக்கினன் இராமன், "ஏழையை
உளைவு செய் இராவணன் உறையும் ஊரும் இவ்
அளவையது ஆகுதல் அறிதி, ஐய! நம்
கிளர் பெருந் துயரமும் கீண்டதுஆம்" என்ருன்.

பொ :—இராமன், தம்பியாகிய இலக்குவனைப் பார்த்து, "ஐய! (அரக்கர் சேனை நம்மைச் சூழ்ந்துள்ளதாதலால்) சீதையை வருத்துகின்ற இராவணன் இருக்கும் ஊரும் இவ்விடத்திலுள்ளது என்பதை அறிவாயாக; (அதனுல்) வளர்ந்து பெருகுகிற நமது மிக்க துன்பமும் ஒழிந்ததாகும்" என்று கூறினன்.

கு :—சீதையையும் அவளைக் கவர்ந்த இராவணனையும் தேடித் திரிய வேண்டாது அவ்வரக்கர் சேனையே வந்து வளைந்துகொண்டமையாலும் அவ்விராவணனூரும் அண்மையில் இருத்தலாலும், அவர்களை அழித்துச் சீதையை மீட்டல் இனி எளிது என்னும் கருத்தால் "நம்கிளர் பெருந்துயரமும் கீண்டதாம்" என இராமன் கூறினன். ஏழை என்றது, சீதையை. இயல்பாகவே வலிமை குறைந்த சீதையை வருத்தமுறச் செய்த இராவணன் தகவின்மை தோன்ற, 'ஏழையை யுளைவு செய் இராவணன்' என்ருன். உளைவு - வருத்தம். தனக்கு மேலொரு துயரம் இல்லை யென்னலாம்படி எல்லை வரையில் கிளர்ந்தோங்கிய துயரம் என்பான், 'கிளர்பெருந்துயரம்' என்ருன். மனையாளை மாற்ருன் கொள்ளுதலினும் மேலாக ஆடவர்க்குப் பெருந்துயரம் இன்மையறிக. கீண்டது - ஒழிந்தது. (8)

இலக்குவன் சொல் 3751-3752

3751. முற்றிய வரக்கர்த முழங்கு தானையே
லெற்றிய முரசொலி யேங்குஞ் சங்கிசை

பெற்றில தாகலிற் பிறிதொன் ருமெனச்
சொற்றன னிளையவன் ருெழுது முன்னின்ருன்.

"முற்றிய அரக்கர்தம் முழங்கு தானையேல்,
எற்றிய முரசு ஒலி, ஏங்கும் சங்கு இசை
பெற்றிலது, ஆகலின், பிறிது ஒன்று ஆம்" எனச்
சொற்றனன் இளையவன், தொழுது முன் நின்ருன்.

பொ :—தம்பியாகிய இலக்குவன் (இராமன்) முன்ஞல் வணங்கி நின்றவனுய், "(நம்மை வளைந்த இது) சூழ்ந்துள்ள அரக்கர்களது ஒலிக்கின்ற படையாயிருக்குமாஞல், அடிக்கப்பட்ட முரசங்களின் முழக்கமும் சங்குகளின் ஓசையும் ஒலிக்கும்; (இது அவ்வோசைகளைப்) பெற்றிராதபடியிஞல் வேருென்றேயாகும்" என்று சொல்லலாஞன்.

கு :—இளையவன் தொழுது முன்னின்ருனய், 'தானையேல் முரசொலியும் சங்கிசையும் ஏங்கும்; அவ்வோசை பெற்றிலதாகலின் பிறிதொன்ரும்' எனச் சொற்றனன் என இயையும். ஏங்கும் - ஒலிக்கும். கரன் முதலாயோர் சேனை தம்மை வளைந்தபோது அச்சேனையில் முரசொலியும் சங்கொலியும் ஒலிக்கக் கேட்டுப் பழகியவஞதலின், சேனையன்று என்பதை நிறுவ, அவ்வொலியின்மையைக் காரணமாகக் கூறினன். போர் முரசொலிக்க வருதலே வீரர்க்கு இயல்பாதலும் அறிக. சீதையைப் பிரிந்த திகைப்பால் இராமன் கூறும் மொழி துணிவு பொருந்தியதாக அமையாமையும், இலக்குவன் கூறுவதே பொருத்தமாதலும் இங்கு நினைதல் வேண்டும். பிறிதொன்று ஆவது யாது என்பதை வருஞ் செய்யுளில் விவரிக்கின்ருன், (9)

3752. தெள்ளிய வமுதெழத் தேவர் வாங்கிய
வெள்ளெயிற் றரவந்தான் வேருேர் நாகந்தான்
றள்ளரு வாலொடுந் தலையி ஞல்வளைத்
துள்ளுறக் கவர்வதே யொக்கு மூழியாய்.

"தெள்ளிய அமுது எழத் தேவர் வாங்கிய
வெள் எயிற்று அரவம்தான்? வேறு ஓர் நாகம்தான்?
தள்ளரு வாலொடும் தலையிஞல் வளைத்து
உள் உறக் கவர்வதே ஒக்கும், ஊழியாய்!"

பொ :—"ஊழிக்காலத்தும் அழியாது நிலை நிற்பவனே!, தெளிவான அமிழ்தம் உண்டாகும்படி, தேவர்கள் (மந்திரமலையிற் சுற்றி)

இழுத்த வெள்ளைப் பற்களையுடைய (வாசுகியென்னும்) பாம்பு தானோ? (அல்லது) பிறிதொரு பாம்புதானோ? தள்ள முடியாத வாலோடு தலையையும் சேர்த்து வளைத்து (நாம்) உள்ளே அடங்கும்படி பற்றுகின்றது போலும்!"

கு:—'என்று இவை விளம்பிய' என வரும் செய்யுளோடு இயைக்க. தேவர் வாங்கிய வெள்ளெயிற்றரவம் என்றது வாசுகி என்னும் பாம்பினை. கவந்தனுடைய இருகைகளும் ஒன்று சேர்ந்து வளைத்துக் கொண்டதற்கு உவமையாக வாலொடுந் தலையினால் வளைத்துள்ளுறக்கவர்வதைக் கூறினான். இராமன் உயிர்க்கு இறுதி வருமோ என்ற எண்ணத்தானாதலின் இலக்குவன், இராமனை ஊழியாய்! என்று விளித்தான். ஊழியிறுதிவரை வாழவேண்டும் என்பது அவன் உட்கோளாதலை அவன் விளியுணர்த்தும். கண்ணகியின் கனன்ற கோலத்தைக் கண்ணுற் கண்ட வாயிற்காவலன், பாண்டியனுக்கு இறுதி வந்தது என்று எண்ணிய அச்சத்தால், "வாழி! யெங் கொற்கை வேந்தே வாழி! தென்னம் பொருப்பிற்றலைவ வாழி! செழிய வாழி! தென்னவ வாழி! பழியொடு படராப் பஞ்சவ வாழி;" (சிலம்பு. வழக்குரை 30-3) என வாழி என்ற சொல்லை அறுமுறை கூறியதும் இங்கு நினைவு கூர்தல் வேண்டும். (10)

## கவந்தன் தோற்றம்

**3753.** என்றிவை விளம்பிய விளவல் வாசகம்
நன்றென நினைந்தனன் நடந்த நாயக
னொன்றிரண் டியோசனை யுள்புக் கோங்கரு
னின்றென விருந்தவக் கவந்த னேர்சென்றார்.

என்று இவை விளம்பிய இளவல் வாசகம்
நன்று என நினைந்தனன், நடந்த நாயகன்;
ஒன்று இரண்டு யோசனை உள்புக்கு, ஓங்கல்தான்
நின்றென இருந்த அக் கவந்தன் நேர் சென்றார்.

பொ:—என்று இவ்வாறு கூறிய தம்பியினது கூற்றை முன் செல்லும் இராமன் பொருத்தமாய் இருக்கும் என்று எண்ணினான்; (அவ்வாறு சென்ற இராம இலக்குவர்) இரண்டு யோசனை தூரம் உள்ளே சென்று, மலை நின்றாற்போல இருந்த அந்தக் கவந்தனது எதிரில் போனார்கள்.

கு:—ஒன்றிரண்டு - ஓரிரண்டு: பண்புத்தொகை. நாயகன் நினைந்தனன்; என இயையும். ஓங்கல் - மலை; காரணப் பெயர்.

கவந்தனுடைய இருந்த கோலமே நின்ற மலையின் உயர்ச்சியை யொக்கும் என்பார், 'ஓங்கல்தான் நின்றென விருந்தவக்கவந்தன்' என்ருர். முரண்தொடை. இருந் தவக் கவந்தன் எனப் பிரித்தும் பொருள் கொள்ளுமாறு இத்தொடர் அமைந்து, அவர்கள் கவந்தன் நேர் சென்றமைக்குக் காரணம் புலப்படுத்துவதாதலும் காணலாம். பின், "புண்ணியம் பயக்கின்றுழி யரியதெப் பொருளே" (40) எனக் கூறுவதால் கவந்தன் இருந் தவமுடையனுதல் பெறப்படும். அத்தவமில்லையேல் இராமன் கை தீண்டப் பெறுதலும் பழைய தெய்வ வடிவம் எய்துதலும் கவந்தனுக்கு வாய்க்குமோ? என்பதும் நினைக்க. இருந்தவம் - பெருந்தவம். இவ்வாறு இரு பொருள்படக் கூட்டிப் பிரித்தலை 'யோக விபாகம்' என்னும் நூற்புணர்ப்பு என்பர் சேனுவரையர். 'இருந்த அக்கவந்தன்'; 'இருந் தவக் கவந்தன்' என்க. தான் கருதியதையே பெரிதென நினையாமல் 'இளவல் வாசகம் நன்றென நினைந்தமையே இராமனது நாயகத்தன்மையை விளக்கும் என்ற கருத்தால் இராமனை இங்கு 'நாயகன்' என்ற பெயராற் கூறினர். (11)

### கண்ணும் வாயும்

3754. வெயிற்சுட ரிரண்டினை மேரு மால்வரை
குயிற்றிய தாமெனக் கொதிக்குங் கண்ணின
னெயிற்றிடைக் கிடையிரு காத மீண்டிய
வயிற்றிடை வாயெனு மகர வேலையான்.

வெயில் சுடர் இரண்டினை மேருமால் வரை
குயிற்றியது ஆம் எனக் கொதிக்கும் கண்ணினன்,
எயிற்று இடைக்கு இடை இரு காதம் ஈண்டிய
வயிற்றிடை வாய் எனும் மகர வேலையான்.

பொ :—வெப்பம் பொருந்திய இரு சூரியரைப் பெரிய மேருமலை தன்பாற் பதிக்கப் பெற்றதென்னும்படி கொதிக்கின்றகண்களையுடையவனும், பற்கள் ஒவ்வொன்றுக்கும் இடையிலே இரண்டு காததூரம் பொருந்தப் பெற்றதும், வயிற்றின் நடுவில் உள்ளதுமான வாய் என்று சொல்லப்பெறும் சுருமீன்கள் நிறைந்த கடலை யுடையவனும்.

கு :—கவந்தனுடைய உடம்பிற்கு மேருமலையும் அவன் கண்களுக்கு வெயிற்சுடர் இரண்டும் உவமை. சூரியன் என்பது புலப்பட 'வெயிற் சுடர்' என்ருர். ஒரு காலத்து ஓரிடத்து இரு சூரியர் இருத்தல் இயல்பன்று; விகார உவமையாதலின் இல் பொருளைக்

கூறுதலும் இயையாதன கூறுதலும் பொருந்துவதே யாம். கோபத்தால் நெருப்பைக் கக்கும் கண்ணுகலின் 'கொதிக்கும் கண்ணினன்' என்ருர். இருகாத மீண்டிய வாய், வயிற்றிடை வாய் எனக் கூட்டுக. வாயெனும் வேலையான் என்பது உருவகம். மகரம் வேலைக்கு அடை. 'எயிற்றிடைக்கிடையிருகாதம் ஈண்டிய வாய்' என்றமையால் அவ் வாயின் அகலமும் கோரத் தோற்றமும் புலப்படுத்தியவாறு. (12)

## கைகளின் நீட்சி

3755. ஈண்டிய புலவரோ டவுண ரிந்துவைத்
தீண்டிய நெடுவரைத் தெய்வ மத்தினைப்
பூண்டுயர் வடமிரு புடையும் வாங்கலின்
நீண்டன கிடந்தென நிமிர்ந்த கையினுன்.

ஈண்டிய புலவரோடு அவுணர், இந்துவைத்
தீண்டிய நெடுவரைத் தெய்வ மத்தினைப்
பூண்டு உயர் வடம் இருபுடையும் வாங்கலின்,
நீண்டன கிடந்தென நிமிர்ந்த கையினுன்.

பொ :—கூடிய தேவர்களும் அசுரர்களும் சந்திரனை அடை தூணுகக்கொண்டு பொருந்திய பெரிய மந்தரமலையாகிய தெய்வத் தன்மையுள்ள மத்தைச் சுற்றிப் பெரிய (வாசுகியென்னும் பாம்பாகிய) கயிற்றை இரண்டு பக்கங்களிலும் இழுத்துக் கடைதலினுல் (இரு முனைகளும்) நீண்டனவாய்க் கிடந்தன என்று சொல்லும்படியாக நீளமான கைகளையுடையவனும்.

கு :—புலவர் என்றது இங்குத் தேவரை. இந்து - சந்திரன். மத்தின் மேற்பகுதி பொருந்துதற்குரிய அடைதூணுகச் சந்திரனைக் கொண்டாராதலின், 'இந்துவைத் தீண்டிய......மத்தினை' என்ருர். கவந்தன் உடம்பிற்கு மந்தரமலையும் அவன் கைகளுக்கு வாசுகியாகிய வடமும் பருமையானும் நீட்சியானும் உவமையாயின. 'ஈண்டிய' என்றது, அவுணர்க்கும் இயையும். புலவரோடவுணர் வடமிரு புடையும் வாங்கலின் என இயையும். மண்டலமிட்டுக் கிடத்தலே ராம்பின் இயல்பாதலின், அது நீண்டிருத்தற்குக் காரணம் கூறுவாராய், 'வாங்கலின் நீண்டன கிடந்தென' என்று கூறி நிமிர்ந்த கைகட்குப் பொருந்த உவமை கூறினர். இதனுல், கவந்தனின் கைகளின் நீளத்தைப் புலப்படுத்தியவாறு. (13)

### மூக்கும் நாக்கும்

3756. தொகைக்கனற் கருமகன் றுருத்தித் தூம்பெனப்
புகைக்கொடி கனலொடு பொடிக்கு மூக்கினன்
பகைத்தகை நெடுங்கடல் பருகும் பாவகன்
சிகைக்கொழுந் திதுவெனத் திருகு நாவினன்.

தொகைக் கனல் கருமகன் துருத்தித் தூம்பு எனப்
புகைக்கொடி கனலொடு பொடிக்கும் மூக்கினன்
பகைத் தகை நெடுங்கடல் பருகும் பாவகன்
சிகைக் கொழுந்து இது எனத் திருகு நாவினன்.

பொ :—கொல்லனுடைய மிக்க நெருப்பையுடைய உலைக்களத் திலேயுள்ள துருத்தியின் துளைபோல நெருப்பையும் (அதற்குக்) கொடியாயுள்ள புகையையும் வெளிப்படுத்தும் மூக்கையுடையவனும், பகைமைத் தன்மையுடைய பெரிய கடல் நீரைக் குடிக்கும் வடவைத் தீயின் சுவாலைக் கொழுந்து என்று சொல்லும்படி சுழன்றுகொண் டிருக்கும் நாக்கையுடையவனும்.

கு :—தொகைக்கனல் - உலைக்களம்: பண்புத்தொகையன்மொழி. கருமகன் - இரும்பு வேலை செய்யும் கொல்லன். தீயினது கொடி யாகப் புகையினைக் கூறுவது மரபு. தீயும் நீரும் மாறுனவை யாதலின் பகைத்தகை என்றார். மனத்திலுள்ள சினக்குறிப்பிற் கேற்பக் கவந்தன் மூக்கில் நெருப்பும் புகையும் உயிர்க்குந்தோறும் தோன்றுகின்றமைக்குப் பொருத்தமான உவமையாகத் துருத்தித் தூம்பு அமைந்திருத்தல் காண்க. உலைக்களத்தை யடுத்திருத்தலின் துருத்தித்தூம்பு கனலையும் புகையையும் தோற்றுவித்தல் இயல் பாதல் காணலாம். பொடித்தல் - தோற்றுவித்தல். பாவகன் என்றது இங்கு வடவைக் கனலை. சினக்குறிப்பினல் அக்கவந்தன் நாவும் கடல் நீரையுண்ணும் வெப்பமுடையதாக இருந்தது என்பது இதனல் புலப்படுத்தியவாறு. நாவின் நிறமும் செயலும் இவ்வுவமையால் புலனும். (14)

### கோரப் பற்கள்

3757. புரண்டுபாம் பிடைவர வெருவிப் புக்குறை
யரண்டனை நாடியோ ரருவி மால்வரை
முரண்டொகு முழைநுழை முழுவெண் டிங்களை
யிரண்டுகூ றிட்டென விலங்கெ யிற்றினன்.

புரண்டு பாம்பு இடைவர வெருவிப்புக்கு உறை
அரண் தனை நாடி ஓர் அருவி மால்வரை
முரண் தொகு முழைநுழை முழுவெண் திங்களை
இரண்டு கூறு இட்டென இலங்கு எயிற்றினன்.

பொ :—(இராகு என்னும்) பாம்பு புரண்டு தன்னிடத்து வருவதனால் அஞ்சிப் புகுந்து தங்குதற்குரிய பாதுகாப்புள்ள இடத்தைத் தேடினதாய் அருவியோடு கூடிய ஒரு பெரிய மலையிடத்து வலிமையுற்ற குகையுள் நுழைந்த வெண்மையான முழுமதியை இரண்டு பகுதியாகத் துண்டித்து வைத்தது போன்று விளங்குகிற கோரப் பற்களை யுடையவனும்.

கு :—கவந்தனது கைக்குப் பாம்பும் உடலுக்கு மலையும், வாய்க்குக் குகையும், கோரப்பற்களுக்குக் கூறிட்ட சந்திரனும் உவமை. முழுமதியைக் கூறு செய்து பதித்தாற்போன்ற கோரப் போற்களை யுடையவன்: என விகார உவமை கூற வந்தவர், அம் முழுமதி இவன் வாயில் வருதற்கும் தற்குறிப்பேற்றமாகக் காரணங் கூறியவாறு. புரண்டுவரும் கவந்தன் கைகளைத் தன்னை விழுங்கவரும் பாம்பாகக் கருதி வெருவி அதன் வாயில் நின்றும் தப்பித்துக்கொள்ள நினைந்த முழுமதி, அக்கவந்தன் வாயினையே மலைக்குகையென மருண்டு நுழைந்ததாக அவன் அம்மதியினைக் கடித்து இரண்டுகூறு செய்ததுபோல வெளுத்தும் வளைந்தும் உள்ள கோரப்பற்கள் என்க. (15)

## உடம்பின் இயல்பு

3758. ஓதநீர் மண்ணிவை முதல வோதிய
பூதமோ ரைந்தினிற் பொருந்திற் றன்றியே
வேதநூல் வரன்முறை விதிக்கு மைம்பெரும்
பாதகந் திரண்டுயிர் படைத்த பண்பினன்.

ஓதம் நீர் மண் இவை முதல ஓதிய
பூதம் ஓர் ஐந்தினில் பொருந்திற்று அன்றியே,
வேதநூல் வரன்முறை விதிக்கும் ஐம் பெரும்
பாதகம் திரண்டு உயிர் படைத்த பண்பினன்.

பொ :—குளிர்ந்த நீரும் நிலமும் (என்ற) இவை முதலியனவாகச் சொல்லப்பட்ட ஒப்பற்ற ஐந்து பூதங்களாலும் (அவனது உடல்) படைக்கப்பட்டதல்லாமல், வேத நூல்களில் முறைப்படி கூறப்பட்ட

ஐந்து பெரிய பாதகங்களும் ஒன்று சேர்ந்து (உடலாகி) உயிர்பெற்ற தன்மையையுடையவனும்.

கு :—பஞ்சமகா பாதகங்கள் என்று வடமொழியிற் கூறப்படுவனவற்றை ஐம்பெரும் பாதகம் என்றார். அவையாவன :—பொய், கொலை, களவு, குடி, பிறர்மனை நயத்தல். ஐம்பெரும் பூதங்களின் கலப்பானியன்ற உலகத்து உயிர்களின் உடம்புகள் போலாது கவந்தன் உடம்பு ஐம்பெரும் பாதகத்தானியன்றது என அவன் இயல்பு கருதி வேறுபடுத்திக் கூறியவாறு. வேற்றுமையணி. 'படைத்த பண்பினன்' என்றது, படைத்தாற்போன்ற பண்பினை யுடையவன் என்றவாறு. பஞ்சமா பாதங்களைச் செய்தலையே தன் பண்பாகக் கொண்டவன் என்பார், அவற்றையே உடம்பாகக் கொண்டவன் என்றார். (16)

## செவியும் வயிறும்

**3759.** வெய்யவெங் கதிர்களை விழுங்கும் வெவ்வராச்
செய்தொழி லிலதுயில் செவியின் றொள்ளையான்
பொய்கிளர் வன்மையிற் புரியும் புன்மையோர்
வைகுறு நரகையு நகும்வ யிற்றினன்.

வெய்ய வெங் கதிர்களை விழுங்கும் வெவ் அராச்
செய் தொழில் இல துயில் செவியின் தொள்ளையான்,
பொய் கிளர் வன்மையில் பிரியும் புன்மையோர்
வைகுறும் நரகையும் நகும் வயிற்றினன்.

பொ :—வெப்பமுடைய கிரணங்களையுடைய சூரியனையும், விரும்பத்தக்க கிரணங்களையுடைய சந்திரனையும், விழுங்கும் கொடிய இராகு, கேது என்னும் பாம்புகள், செய்வதற்கு வேலை இல்லாதபோது, தூங்குதற்குரிய செவித் தொளைகளையுடையவனும், மிகுந்தெழுகின்ற கொடுமையால் பொய் முதலிய தீய செயல்களைச் செய்கிற கீழ்மக்கள் சென்றழுந்தும் நரகத்தையும் சிரித்து ஏளனம் செய்யும் கொடிய வயிற்றை யுடையவனும்.

கு :—வெய்யகதிர், வெங்கதிர் என்று கூட்டி ஞாயிற்றையும் திங்களையும் கொள்க. கவந்தனின் செவித் தொளைகள் இராகு கேதுக்கள் உறைவதற்குத் தக்க இடமா யிருந்தன என்றவாறு. "ஆந்தை பாந்தி யிருப்பத் துரிஞ்சில்புக்கு அங்குமிங்கு முலாவுஞ் செவியன" (கலிங்கத்துப். 140) என்பது ஒப்பு நோக்கத்தகும். அவன் வயிறு நரகக் குழியையும்விடக் கொடியதாயிருந்ததால் 'நரகையும் நகும்' என்றார். (17)

வாய்

3760. முற்றிய வுயிரெலா முருங்க வாரித்தான்
பற்றிய கரத்தினன் பணைத்த பண்ணையிற்
றுற்றிய புகுதருந் தோற்றத் தால்யமன்
கொற்றவாய் தற்செயல் குறித்த வாயினன்.

முற்றிய உயிர் எலாம் முருங்க வாரித்தான்
பற்றிய கரத்தினன், பணைத்த பண்ணையில்
துற்றிய புகுதரும் தோற்றத்தால், யமன்
கொற்ற வாய்தல் செயல் குறித்த வாயினன்.

பொ:—சுற்றி வளைத்த உயிர்ப் பிராணிகளை யெல்லாம் அழியக் கைகளால் வாரியெடுத்து உண்ணப் பெருந் தொகுதியாக (அவை) புகுகின்ற காட்சியால், யமனது வன்மையுடைய கோட்டைவாயிலின் செயலையொத்த வாயை யுடையவனும்.

கு:—முருங்க - அழிய. பண்ணை - தொகுதி. துற்றுதல் - உண்ணுதல். வருந்தித் துன்புறுதற்காக உயிர்கள் யமபுரியின் வாயிலை யடைதல்போல் உயிர்ப் பிராணிகள் கவந்தன் வாயினுட் புகுந்தன என்றவாறு. முன்னர் அவன் வயிற்றை நரகமாகக் கூறியதும் நோக்குக. (18)

உடம்பு

3761. ஓலமார் கடலென முழங்கு மோதையான்
ஆலமே யெனவிருண் டழன்ற வாக்கையா
னீலமா னேமியிற் றலையை நீக்கிய
காலநே மியைப்பொருங் கவந்தக் காட்சியான்,

ஓலம் ஆர் கடல் என முழங்கும் ஓதையான்,
ஆலமே என இருண்டு அழன்ற ஆக்கையான்,
நீலமால், நேமியின் தலையை நீக்கிய
கால நேமியைப் பொரும் கவந்தக் காட்சியான்.

பொ:—ஆரவாரம் மிகுந்த கடலைப்போல ஒலிக்கும் பேரிரைச்சல் உடையவனும், ஆலகால நஞ்சமே யென்னும்படி கறுத்துக் கொதிக்கின்ற உடலையுடையவனும், நீல நிறமுடைய திருமால் சக்கரப்படையால் தலையை யறுத்துத் தள்ளப்பெற்ற காலநேமி யென்னும் அசுரன் உடலையொத்த பெரிய கவந்தமான தோற்றத்தையுடையவனும்.

கு:—உழன்ற - கொதித்த. காலநேமி என்பவன் இரணியனின் மகன். நூறு தலைகளையும் நூறு கைகளையுமுடையவன். தன் தகப்

பனைக்கொன்ற திருமாலுடன் போரில் எதிர்த்தான். திருமாலின் சக்கரம் அவன் தலைகளையும் கைகளையும் அறுத்தெறிந்தது. பின்னும் அவன் கவந்தவடிவில் எதிர்ந்து நிற்கவும் கருடன் தன் மார்பால் தள்ளி வீழ்த்தினுன் என்பது வரலாறு. (19)

### இருவரும் நோக்குதல்

3762. தாக்கிய தணப்பில்கா லெறியத் தன்னுடை
மேக்குயர் கொடுமுடி யிழந்த மேருநேர்
ஆக்கையி னிருந்தவன் றன்னை யவ்வழி
நோக்கின ரிருவரு நுணங்கு கேள்வியார்.

தாக்கிய தணப்புஇல் கால் எறியத் தன்னுடை
மேக்கு உயர் கொடுமுடி இழந்த மேரு நேர்
ஆக்கையின் இருந்தவன் தன்னை அவ்வழி
நோக்கினர் இருவரும், நுணங்கு கேள்வியார்.

பொ :—தடை செய்ய முடியாத பெருங்காற்று மோதி வீசியதால் தன்னுடைய மேலே உயர்ந்து விளங்கிய சிகரங்களை இழந்த மேரு மலையை யொத்த உடம்போடு இருந்தவனுகிய கவந்தனை நுட்பமான நூற்கேள்விகளையுடையவர்களான இராம இலக்குவர் இருவரும் அவ் விடத்துப் பார்த்தார்கள்.

கு :—முன்னொரு காலத்தில் காற்றுக் கடவுளுக்கும் ஆதிசேடன் என்னும் பாம்பிற்கும் தங்கள் வலிமையைப் பற்றி விவாதம் ஏற்பட்டுப் பரீட்சிக்கத் தொடங்கினர். மேரு மலையின் சிகரங்களைக் காற்று மோதித் தள்ள வேண்டும் என்றும் அவ்வாறு தள்ளவிடாது ஆதிசேடன் தடுத்துக் காக்க வேண்டும் என்றும் சூள்செய்து கொண்டனர். அவ்வாறே ஆதிசேடன் தனது ஆயிரம் படங்களாலும் மேரு மலையின் ஆயிரம் சிகரங்களையும் கவித்துக் கொண்டு காக்கவும், காற்று தன் வலிமையால் அம்மலைச் சிகரங்களில் மூன்றைப் பெயர்த்துக் கொண்டு போய்த் தள்ளியது.

கவந்தனது தலையற்ற வுடலுக்குச் சிகரங்களை யிழந்த மேரு உவமை. (20)

### வாயைப் பார்த்து ஐயுறல்

3763. நீர்புகு நெடுங்கட லடங்கு நேமிசூழ்
பார்புகு நெடும்பகு வாயைப் பார்த்தனர்
சூர்புக லரியதோ ரரக்கர் தொன்மதில்
ஊர்புகு வாயிலோ விதுவென் றுன்னினர்.

நீர் புகும் நெடுங்கடல் அடங்கும் நேமி சூழ்
பார் புகும் நெடும் பகுவாயைப் பார்த்தனர் ;
"சூர் புகல் அரியது ஓர் அரக்கர் தொல் மதில்
ஊர்புகு வாயிலோ இது ?" என்று உன்னினர்.

பொ :—ஆறுகளின் நீர் முழுதும் புகுதற்கிடமான பெரிய கடல்கள் உள்ளடங்கப்பெற்ற சக்கரவாள மலையினல் சூழப்பட்ட பூமியே நுழையும்படியான நீண்ட பிளந்த வாயைப் பார்த்து (அவ் விருவரும்) "இது கொடுந் தெய்வமும் புகுதற்கருமையான அரக்கர் களுடைய ஊரின் பழையதொரு கோட்டை வாயிலோ ?" என்று நினைத்தார்கள்.

கு :—சூர் - தீண்டி வருத்தும் கொடுந் தெய்வம். சூர்புகலரிய தோர் வாயில் என இயையும். மதில்வாயில் என்க. இதனல் கவந்தன் வாயின் அகலம் புலப்படுத்தப்பெற்றது. (21)

இராம இலக்குவர் உரையாடல் 3764-3778

3764. அவ்வழி யிளையவ னமர்ந்து நோக்கியே
வெவ்விய தொருபெரும் பூதம் வில்வலாய்
வவ்விய தன்கையின் வளைத்து வாய்ப்பெயும்
செய்வதெ னிவணெனச் செம்மல் சொல்லுவான்.

அவ்வழி இளையவன் அமர்ந்து நோக்கியே
"வெவ்வியது, ஒரு பெரும் பூதம், வில்வலாய் !
வவ்விய தன் கையின் வளைத்து வாய்ப்பெயும் ;
செய்வதுஎன் இவண்?" எனச் செம்மல் சொல்லுவான்.

பொ :—அப்பொழுது தம்பியாகிய இலக்குவன் உற்றுப் பார்த்து, "விற்றொழிலில் வல்லவனே ! கொடிதாகிய ஒரு பெரிய பூதமானது தன் கைகளால் வளைத்து அகப்பட்டனவற்றை வாயில் போகட்டுக் கொண்டிருக்கிறது ; இப்பொழுது நாம் செய்யக் கூடியது யாது ?" என்று கேட்கவும், இராமன் மறுமொழி கூறுபவனனன்.

கு :—இவண் செய்வதென் ? என்று இயையும். இவண் என்பது காலத்தை யுணர்த்தியது; செம்மல் - தலைவன் ; இராமன். (22)

3765. பாரிட மேயிது பரவை சுற்றுறும்
பாரிட மரிதெனப் பரந்த மெய்யது

பாரிடம் வலம்வரப் பரந்த கையது
பாரிடந் தெடுத்தமா வனைய பாழியாய்.

“பாரிடமே இது, பரவை சுற்றுறும்
பார் இடம் அரிது எனப் பரந்த மெய்யது,
பார்! இடம் வலம் வரப் பரந்த கையது,
பார் இடந்து எடுத்த மா அனைய பாழியாய்!”

பொ:—“பூமியைக் (கோட்டாற்) குத்தி யெடுத்துக் கொணர்ந்த வராக மூர்த்தியை யொத்த வலிமையுள்ளவனே! கடலாற் சூழப்பட்ட பூமியின் இடமும் போதாது என்னும்படி விரிந்துள்ள உடம்பையுடையது; இடப்பக்கத்திலும் வலப்பக்கத்திலும் பொருந்திய நீண்ட கைகளை யுடையது; (ஆதலால்) இது பூதமேதான், (நீ) காண்பாயாக.”

கு:—பாரிடம் - பூதம். மா என்றது, பூவராகத்தை. பாழியாய்! பாரிடமேயிது பார்; என இயையும். இச்செய்யுளின் நான்கடியினும் முதற்சீர் ஒத்து இருத்தலின், யமகம் எனப்படும். மெய்யும் கையும் பருத்தும் நீண்டும் இருத்தலால் அது பூதமே என இராமன் துணிந்து கூறியவாறு. (23)

3766. தோகையும் பிரிந்தன ளெந்தை துஞ்சினன்
வேகவெம் பழிசுமந் துழல வேண்டலே
னாகலின் யானினி யிதனுக் காமிட
மேகுதி யீண்டுநின் றிளவலே யென்றான்.

“தோகையும் பிரிந்தனள், எந்தை துஞ்சினன்,
வேக வெம்பழி சுமந்து உழல வேண்டலேன்;
ஆகலின், யான், இனி, இதனுக்கு ஆமிடம்;
ஏகுதி ஈண்டு நின்று, இளவலே!” என்றான்.

பொ:—“தம்பி! மயில் போன்றவளான சீதையும் பிரிந்தாள்; தந்தை முறையான சடாயுவும் (அவள் பொருட்டு) இறந்து விட்டான்; மனக்கலக்கத்தை யளிக்கும் கொடிய பழியைத் தாங்கிக் கொண்டு அலைய நான் விரும்பவில்லை; ஆதலால் இப்பொழுது இந்தப் பூதத்திற்கு நான் இரையாவேன்; நீ இவ்விடம் விட்டு (ஊருக்குத்) திரும்பிச் செல்வாயாக” என்றான்.

கு:—வேகம் - மனக்கலக்கம். “வேகங்கெடுத்தாண்ட வேந்தனடி வெல்க” (திருவாசகம் - 1 - 6.) ஆமிடம் - உணவு. “எனக்கா

மிடமாய் வருவாய் கொல்" (கடருவு படலம்-67) எனப் பின்னும் வருதல் காணலாம். எந்தை என்றது இங்குச் சடாயுவை. 'மாற்ருனல் மனைவியும் தந்தையும் கொள்ளவும் கொல்லவும் பட்டமையால் வந்த பழியின் மிகுதி தோன்றச் சுமந்து' என்ருன். (24)

3767. ஈன்றவ ரிடர்ப்பட வெம்பி துன்புறச்
சான்றவர் துயருறப் பழிக்குச் சார்வுமாய்த்
தோன்றவல் லேனுயிர் துறந்த போதலா
லூன்றிய பெரும்பழி துடைக்க வொண்ணுமோ.

"ஈன்றவர் இடர்ப்பட, எம்பி துன்புறச்
சான்றவர் துயருறப் பழிக்குச் சார்வுமாய்த்
தோன்ற வல்லேன் உயிர் துறந்தபோது அலால்,
ஊன்றிய பெரும்பழி துடைக்க ஒண்ணுமோ ?"

பொ :—"பெற்ருேர்கள் வருத்தப்படவும், என் தம்பியாகிய பரதன் துன்பப்படவும், வசிட்டர் முதலான பெரியோர் வருந்தவும், வசைகளுக்குப் பற்றுக் கோடுமாய் வாழவல்லேனுகிய யான் என் உயிரை விட்டபோதல்லாமல், நிலைபெற்ற இப்பெரும் பழியை நீக்குதல் கூடுமோ ?"

கு :—'பெரும் பழி' என்றது சீதையை மீட்கமாட்டாமையை. ஈன்றவர் என்றது தாயரை. எம்பி என்றது பரதனை. சான்றவர் என்றது அயோத்தியில் உள்ள வசிட்டன் முதலியோரை. ஊன்றுதல் - நிலைபெறுதல். ஓகாரவினு ஒண்ணுமையுணர்த்திற்று. உயிர் துறந்தபோதுதான் ஊன்றிய பெரும்பழி துடைக்கலாம் என்றவாறு. 'உயிர் நீப்பர் மானம் வரின்' (குறள் - 969) என்பதும் நினைக்க. (25)

3768. இல்லியல் புடையநீ ரளித்த வின்சொலாம்
வல்லியவ் வரக்கர்தம் மனையு ளாளெனச்
சொல்லினென் மலையெனச் சுமந்த தூணியென்
வில்லினென் செல்வெனே மிதிலை வேந்தன்பால்.

"'இல் இயல்புடைய நீர் அளித்த இன்சொல் ஆம்
வல்லி அவ் அரக்கர்தம் மனை உளாள்' எனச்
சொல்லினென், மலை எனச் சுமந்த தூணியென்,
வில்லினென், செல்வெனே மிதிலை வேந்தன்பால் ?"

பொ :—“மிதிலை நகரத்து மன்னனான சனகனிடத்தில் ‘நீர் (எனக்கு மணம் செய்து) கொடுத்த இல்லற வாழ்க்கைக்கு உரிய தன்மையையுடைய இனிய சொற்களையுடையவளான பூங்கொடி போன்ற சீதை அந்த அரக்கர்களுடைய வீட்டில் இருக்கிறாள்’ என்று சொல்லியவனாய், மலைபோலத் தாங்கப்பட்ட அம்பறாத் தூணியை யுடையேனாகியும், வில்லையுடையேனாகியும் போவேனோ?”

கு :—சொல்லினென், தூணியென், வில்லினென் என்ற முற்றெச்சங்கள் செல்வெனோ என்ற வினைகொண்டு முடிந்தன. மலை யெனச் சுமந்த வில்லினென் எனவும் இயைக்க. மலைபோன்ற வில் லும் தூணியும் உடையார், மனையாளைக் கொண்டு சென்ற மாற்றா னைக் கொல்லுதல் செய்வாரன்றி, நீரளித்த வல்லி அரக்கர்தம் மனை யுளாளெனச் சொல்லுதல் செய்யாராகலின், சொல்லினென், சுமந்த தூணியென், வில்லினென் செல்வெனோ? என்றான். செல்லேன் என்றவாறு. பகையழித்தற்குக் கருவியாகாமல் தோளுக்குப் பாரமாயின என்பான், ‘சுமந்த தூணியென் வில்லினென்’ என் றான். இன்ன அரக்கன் மனையென்றும் குறிக்காது, மடிமிகுதி புலப்பட ‘அவ்வரக்கர்தம் மனையுளாள்’ எனச் சுட்டியொழிந்தவாறு. (26)

**3769.** தளையவிழ் கோதையைத் தாங்க லாற்றல
னிளைபுரந் தளித்தன்மே லிவர்ந்த காதல
னுளனென வுரைத்தலி னும்ப ரானென
விளைதனன் றுதலின் விளித னன்றென்றான்.

“‘தளை அவிழ் கோதையைத் தாங்கல் ஆற்றலன்,
இளை புரந்து அளித்தல் மேல் இவர்ந்த காதலன்
உளன்’ என உரைத்தலின், ‘உம்பரான்’ என
விளைதல் நன்று ஆதலின், விளிதல் நன்று” என்றான்.

பொ :—‘(இதழ்) முறுக்கு அவிழ்ந்து மலர்ந்த பூமாலையை யணிந்த வளான சீதையைக் காப்பாற்ற முடியாதவன், பூமியைக் காத்து ஆட்சி புரிவதன்மேல் ஆசையுடையவனாய் இருக்கின்றான்’ என்று (பிறரால் ஏளனமாகக்) கூறப்படுவதைவிட, (இராமன்) மேலுலகத் தில் உள்ளான் (இறந்தான்) என்று சொல்லப் பெறுதல் நல்லது; ஆகையினால் இறந்து விடுவதே நல்லது” என்றும் கூறினான்,

கு :—இளை - பூமி; “இளையெனுந் திருவையேந்தினான்” (அயோத்தியா காண்டம் - கிளைகண்டு நீங்குபடலம் - 119) தன் மனைக்குரிய மகளைத் தாங்குமாற்றலற்றவன் மாநில மகளைத் தாங்க

விழைவது எள்ளற்குரிய இழிசெயல் என்பது புலப்படுத்தியவாறு. ஆற்றலன் - ஆற்றுதவன். இவர்ந்த காதலன் - பொருந்திய காத லுடையவன். சீதையைப் பிரிந்த பின்னும் உயிர் வாழ்ந்தால் பதினன்காண்டு கழிந்தபின் அயோத்தி சென்று அரசாளவே, இராமன் உயிர்வாழ்கின்றுன் என உலகம் கொள்ளும் ஆதலின் இங்ஙனம் கூறினுன். தன்னுற்றலுக்கு அப்பாற்பட்ட ஒன்றை விரும்பி வாழ்கின்றுன் என்ற பழிபடு சொல்லினும், சீதையைப் பிரிந்து தரியாது உயிர் பிரிந்தான் என்பது புகழ்ச் சொல்லாதலின் உம்பரான் என விளேதல் நன்று, என்றுன். (27)

**3770.** ஆண்டா னின்னன பன்னிட
★ வையற் கிளவீர
னீண்டியா னுன்பின் னேகிய
பின்னிவ் விடர்வந்து
மூண்டான் முன்னே யாருயி
ரோடு முடியாதே
மீண்டே போதற் காமெனி
னன்றென் வினேயென்றுன்.

ஆண்டான் இன்னன பன்னிட, ஐயற்கு இள வீரன்,
"ஈண்டு யான் உன்பின் ஏகியபின், இவ் இடர் வந்து
மூண்டால், முன்னே ஆர் உயிரோடும் முடியாதே
மீண்டே போதற்கு ஆம் எனின் நன்று என்வினே" என்றுன்.

பொ:—(யாவர்க்கும்) தலேவனுன இராமன் இச்சொற்களேச் சொன்னவுடனே, அவ்விராமனுக்குத் தம்பியாகிய இலக்குவன், "இவ்வனத்தில் யான் உன்பின் வந்த பிறகு, இப்படிப்பட்ட பெருந் துன்பம் (உனக்கு) நேரிட்டதென்றுல், (உனக்கு) முன்னே (நான்) இறவாமல், அருமையான உயிருடன் திரும்பிச் செல்வதற்கு முடியு மானுல், எனது செயல் மிக அழகாய் இருக்கும்" என்று (நொந்து) கூறினுன்.

கு:—'நன்றென் வினே' என்றது குறிப்புச் சொல்; கற்கறித்து, 'நன்றட்டாய்' என்றதுபோல. ஆண்டான் கூறலாகாச் சொல் என் பது தோன்ற 'ஆண்டான் இன்னன பன்னிட' என்றுர். நடையில் பின்னும் படையில் முன்னும் செல்லவே வந்த யான், உயிரொடு முடி யாது மீண்டு போதல் நன்றன்று என்று புலப்படுத்தியவாறு.

'உறினுயி ரஞ்சா மறவ ரிறைவன், செறினும்சீர் குன்றலிலர்' (குறள் - 778) என்ற மறவர் இயல்பு இலக்குவன் கூற்றில் இலங்குதல் காணலாம். (28)

3771. என்று னென்னுப் பின்னு
மிசைப்பா னிடர்தன்னை
வென்று ரன்றே வீரர்க
ளாவார் விரவாரின்
தன்றுய் தந்தை தம்மு
னெனுந்தன் மையர்முன்னே
பொன்று னென்று னீங்குவ
தன்ரே புகழம்மா.

என்ருன் என்னுப் பின்னும் இசைப்பான், "இடர்தன்னை
வென்ருர் அன்றே வீரர்கள் ஆவார்? விரவாரின்,
தன்தாய் தந்தை தம்முன் எனும் தன்மையர் முன்னே
பொன்ருன் என்ருல், நீங்குவது அன்ரே புகழ் அம்மா?"

பொ:—என்று கூறிய இலக்குவன், "துன்பத்தை வென்றவர்களல்லவா வீரர்கள் ஆவார்?" என்று சொல்லி மேலும் சொல்லுவான், "தனது தாயும் தகப்பனும் அண்ணனும் என்ற இத்தன்மையோர்க்குப் பகைவர்களால் (துன்பம் நேர்ந்துழி அவர்களுக்கு) முன்னே தான் அப்பகைவரால் இறக்கவில்லை என்ருல் புகழ் நீங்கிவிடும் அல்லவா?"

கு:—அம்மா வியப்பிடைச் சொல். இடர்தன்னை வெல்லுதலாவது இடர்ப்பட்டு வருந்தாது அவ்விடருக்குக் காரணமாயதை அழித்தல். விரவாரின் பொன்ருன் என்ருல் என இயையும். இரு முதுகுரவர்க்கும் தம் முன்னுக்கும் பகைவரால் அழிவு வருமாயின் அக்குரவர் அழிவதற்கு முன் அப்பகைவரால் இளவல் இறப்பதே புகழ்க்குக் காரணம் என்பதும், அங்ஙனம் இறவாமை பழிக்குக் காரணம் என்பதும் புலப்படுத்தியவாறு. முன்னே என்பது கால முன். (29)

3772. மானே யன்னா டன்னொடு
தம்முன் வரையாரும்
கானே வைகக் கண்டுயில்
கொள்ளா தயல்காத்தற்
கானு னென்னே யென்றவர்
முன்னே யவரின்றித்
தானே வந்தா னென்றலின்
வேறோர் தவறுண்டோ.

"'மானே அன்னாள் தன்னொடு தம்முன் வரை ஆரும்
கானே வைகக் கண் துயில் கொள்ளாது அயல் காத்தற்கு
ஆனான், என்னே!' என்றவர் முன்னே, 'அவர் இன்றித்
தானே வந்தான்' என்றலின் வேறு ஓர் தவறு உண்டோ?"

பொ :—"'மான் போன்ற கண்ணையுடைய பெண்ணாகிய சீதையோடு தனது அண்ணனை இராமன் மலைகள் நிறைந்த காட்டில் வாழ, (இலக்குவன்) கண்ணுறங்காது பக்கத்திலிருந்து (அவர்களைக்) காப்பவனானான்; என்ன ஆச்சரியம்!' என்று கூறிப் புகழ்ந்தவர் முன்னே, 'அந்த அண்ணனும் அண்ணியும் இல்லாமல் தான் மாத்திரம் (உயிருடன் திரும்பி) வந்தான்' என்று (இகழ்ந்து) சொல்லப் பெறுதலினும் (எனக்கு) வேறு ஒரு குற்றமுள்ளதோ?"

கு :—"அல்லையாண்டமைந்த மேனி| அழகனு மவளுந்துஞ்ச, வில்லையூன்றிய கையோடும் வெய்துயிர்ப்போடும் வீரன்,......கண்கணீர் சொரியக் கங்குல் எல்லை காண்பளவும் நின்றான் இமைப்பிலன் நயனம்" (2432) எனக் குகன் பரதனுக்குக் கூறியது காண்க. (30)

3773. என்றா யுன்முன் னேவிய
யாவு மிசையின்னல்
பின்றா தெய்திப் பேரிசை
யாளற் கழிவுண்டேற்
பொன்றா முன்னம் பொன்றுதி
யென்றா ளுரைபொய்யா
நின்றா லன்றோ நிற்பது
வாய்மை நிலையம்மா.

"என்தாய், 'உன்முன் ஏவிய யாவும் இசை; இன்னல்
பின்ருது எய்திப் பேர் இசையாளற்கு அழிவு உண்டேல்,
பொன்று முன்னம் பொன்றுதி' என்ருள்; உரை பொய்யா
நின்ருல் அன்ருே நிற்பது வாய்மை நிலே அம்மா?"

பொ:—"எனது தாய் (சுமித்திரை என்னே நோக்கி) 'உனது அண்ணனை இராமன் கட்டளேயிட்டவற்றை யெல்லாம் ஏற்றுச் செய்வாயாக; (அவனுக்கு ஏதாவது துன்பம் வரின்) அத்துன்பத் தைப் பின் வாங்காமல் (நீயும்) அடைந்து, பெரும்புகழையுடைய அவ் விராமன் உயிர்க்குத் தீங்கு ஏற்படுவதாயிருந்தால், அவன் இறப்ப தற்கு முன்னே நீ இறந்துவிடுக' என்று கட்டளேயிட்டுள்ளாள்; அச்சொல் தவருதபடி நான் நிலே நின்ருல் அல்லவோ (எனது) சத்தியம் நிலே நிற்பதாகும்?"

கு:—அம்மா, அசை. "மன்னுந் நகர்க்கே யிவன் வந்திடின்வா அதன்றேல் முன்னமுடி" (1842) எனச் சுமித்திரை முன் சொன்னது நினேக்க. முன்னேச் செய்யுளில் இளவலின் கடமையை யுணர்த்திய இலக்குவன் இச்செய்யுளால் தன் அன்னேயின் கட்டளேயும் அதுவே யென்பதை யுணர்த்தித் தாய் சொல் துறந்தொரு வாய்மையுமில்லே என்பதை நிறுவுகின்ருன். பொய்யாது என்பது ஈறுகெட்டுப் பொய்யா நின்ருலன்ருே' என நின்றது. வாய்மை நிலே நிற்பது என இயையும். (31)

இதன்பின் 53-ஆம் ஏட்டில் பின்வரும் மிகைப்பாடல் உள்ளது.

3772 (a) காவாய் என்பாற் றன்னேயரான்கை விடவல்லேன்
வேவா நின்றே நிற்கவிவ் வெய்யோற் கிணையாவார்
நீவா வென்ன வன்னது கண்டும் அயர்கில்லேன்
போவேன் யானே எவ்வுல கோவென் புகலம்மா.

3774. எற்பெற் ருளும் யானு
மெனேத்தோர் வகையாலு
நிற்பெற் ருட்கு நிற்கு
நினேப்புப் பிழையாமல்
நற்பொற் ருேளாய் நல்லவர்
பேண நனிநிற்குஞ்
சொற் பெற்ருேமற் ருருயிர்
பேணித் துறவேமால்.

"என் பெற்றளும் யானும் எனைத்துளர் வகையாலும்
நின் பெற்றட்கும் நிற்கும் நினைப்புப் பிழையாமல்,
நல் பொன் தோளாய்! நல்லவர் பேண நனி நிற்கும்
சொல் பெற்றேம்; மற்று ஆர்உயிர் பேணித் துறவேமால்."

பொ:—"அழகிய பொன்னாலாகிய நகையணிந்த தோள்களையுடையவனே! என்னைப் பெற்ற தாயாகிய சுமித்திரையும் யானும், உன்னைப் பெற்ற தாயாகிய கௌசலைக்கும் உனக்கும் உங்கள் கருத்துக்கு எவ்வகையிலும் மாறுபடாமல் நடந்து நல்லோர் விரும்புமாறு நன்றய் நிலைபெற்றிருப்பதான புகழை அடைந்துவிட்டோம்; இனி (அதற்கு) மாருக (எங்களுடைய) அருமையான உயிரைப் பாதுகாக்க விரும்பி, (உங்களை) விட்டு விலகமாட்டோம்."

கு:—பிழையாமல் நடந்து நனிநிற்கும் சொற்பெற்றேம் என ஒரு சொல் வருவித்து முடிக்க. சொற்படி நடத்தலினும் பிறர் கருத்துப் பிழையாமல் நடத்தல் அரிது ஆகலின், 'நினைப்புப் பிழையாமல்' என அதனை யெடுத்தோதினன். ஆதாரமாகிய உலகமுள்ள அளவும் ஆதேயமாகிய புகழ் பொன்றது நிற்குமாதலின், 'நனிநிற்கும் சொல்' என அப்புகழ்ச் சொல்லைச் சிறப்பித்தான். "ஒன்ற வுலகத்துயர்ந்த புகழல்லாற், பொன்றது நிற்ப தொன்றில்" (குறள்-233) என்றது காண்க. 'மற்று' பிறிது என்னும் பொருளில் வந்தது. என்றும் நிலைபெற்ற புகழைப் பெற்ற யாங்கள் இப்பொழுது அதற்கு மாருக நடந்து பின்னும் செல்வதாய உயிரைப் பாதுகாத்துக் கொண்டு உம்மைத் துறந்து செல்லோம்' என்று இலக்குவன் உறுதி கூறியவாறு. இதனல் இலக்குவனுக்கும் சுமித்திரைக்கும் உள்ள மன வொற்றுமையும் உறுதியும் அறியலாம். பின்னும் செல்வதாய உயிர் என்பான், 'ஆருயிர்' என இகழ்ச்சிக் குறிப்பாற் கூறினன். (32)

**3775.** ஓதுங் காலப் பல்பொருண்
முற்றுற் றெருவாத
வேதஞ் சொல்லுந் தேவரும்
வீயுங் கடைவீயாய்
மாதங் கந்தின் றுய்ந்திவ்
வனத்தின் றலைவாழும்
பூதங் கொல்லப் பொன்றுதி
போலும் பொருளுண்டோ.

"ஓதும் கால், அப்பல் பொருள் முற்றுற்று, ஒருவாத
வேதம் சொல்லும் தேவரும் வீயும் கடை வீயாய்;
மாதங்கம் தின்று உய்ந்து இவ் வனத்தின் தலை வாழும்
பூதம் கொல்லப் பொன்றுதி போலும்? பொருள் உண்டோ?"

பொ :—சொல்லுமிடத்து, அந்தப் பலவகையான பொருள்களும் முடிவடைந்து, என்றும் நீங்காத வேதங்கள் புகழ்ந்து கூறுகிற தேவர்களும் இறந்து போகின்ற ஊழி முடிவுக் காலத்திலும் அழிவடையாத நீ, யானை முதலிய பிராணிகளை யெல்லாம் தின்று உயிர் பிழைத்து இந்த வனத்தில் வாழ்கிற ஒரு பூதத்தால் கொல்லப்பட்டு நீ இறப்பாய் போலும்? (அவ்வாறு கூறுவதில்) உண்மை இருக்க முடியுமா?" (உண்மையாகாது என்றபடி).

கு :—ஊழிதோறூழி உலவாதிருக்கும் ஒருவன் ஒரு பூதத்தால் கொல்லப்படுவான் என்பது உண்மையாக மாட்டாது என்றவாறு. தேவர் ஆகம அளவையானன்றிக் காட்சியளவைக்கு எட்டாதவராகலின் அவரை 'வேதம் சொல்லும் தேவர்' என்றார். சாவா மருந்தாகிய அமுதமுண்டு மரணமிலாப் பெருவாழ்வெய்தியவர் என்ற சிறப்புத் தோன்ற, தேவரும் என உயர்வு சிறப்பும்மை கொடுத்துக் கூறினான். மாதங்கம் - யானை; இனம்பற்றி ஏனையுயிர்களும் கொள்க. இராமனுடைய தெய்வ நிலை நினைந்து இங்ஙனம் கூறினான். (33)

3776. கேட்டார் கொள்ளார் கண்டவர்
பேணார் கிளர்போரில்
தோட்டார் கோதைச் சோர்குழ
றன்னைத் துவளாமல்
மீட்டா னென்னும் பேரிசை
கொள்ளான் செருவெல்ல
மாட்டான் மாண்டா னென்றலின்
மேலும் வசையுண்டோ.

"கேட்டார் கொள்ளார், கண்டவர் பேணார், 'கிளர் போரில்
தோட்டார் கோதைச் சோர் குழல் தன்னைத் துவளாமல்
மீட்டான் என்னும் பேர் இசை கொள்ளான் செருவெல்ல
மாட்டான் மாண்டான்' என்றலின் மேலும் வசை உண்டோ?"

பொ :—"(இதனைச் சொல்லக்) கேட்டவர்கள் (தக்கது என்று) ஏற்றுக் கொள்ளமாட்டார்கள்; பார்த்தவர்களும் ஒப்புக்கொள்ளமாட்

டார்கள் ; 'இதழ்கள் நிறைந்த பூமாலையைச் சூடிய தாழ்ந்த கூந்தலையுடைய சீதையை வருந்தவிடாமல் பொங்கியெழும் போரினால் மீட்டுக் கொண்டான் என்று பாராட்டிக் கூறும் பெரும் புகழைக் கொள்ளாதவனும், போரில் வெல்ல முடியாதவனும் இறந்தான்' என்று சொல்லப்படுவதைக் காட்டிலும் பெரிய பழி வேறு உளதோ?" (இல்லை என்றபடி)

கு :—"உயிர் துறந்த போதலால் ஊன்றிய பெரும்பழி துடைக்க வொண்ணுமோ?" (3767) என இராமன் கூறியதை மறுத்து, "செரு வெல்ல மாட்டான் மாண்டான் என்றலின்மேலும் வசையுண்டோ? எனக் கூறி, உயிர்துறத்தல், பழிதுடைத்தற்கு மாறாகப் பெரும் பழி விளைக்கும் செயலாம் என்பதை இலக்குவன் நிறுவியவாறு. இசை கொள்ளான்......மாண்டான் என்றலின் மேலும் வசையுண்டோ" என்றது, "வசையென்ப வையத்தார்க் கெல்லாம் இசையென்னும் எச்சம் பெறாஅ விடின்" (குறள் - 238) என்ற குறளைத் தழுவியதாக அமைந்துள்ளமை காணலாம். நேரில் கண்டவர்களும் பிற்காலத்தும் பிறிதோரிடத்தும் கேட்டவர்களும் தக்கது என்று ஒத்துக்கொள்ளாத செயலையோ நீ செய்யப் போகின்றாய்? என இராமன் கருத்தை மாற்ற முயன்றவாறு. (34)

**3777.** தணிக்குந் தன்மைத் தன்றெனி
னன்றித் தகைவாளால்
கணிக்குந் தன்மைத் தன்று
விடத்திற் கனல்பூதம்
பிணிக்குங் கையும் பெய்பில
வாயும் பிழையாமல்
துணிக்கும் வண்ணம் காணுதி
துன்பந் துறவென்றான்.

"தணிக்கும் தன்மைத்து அன்று
எனின் அன்று, இத்தகைவாளால்;
கணிக்கும் தன்மைத்து அன்று,
விடத்தின் கனல் பூதம்
பிணிக்கும் கையும், பெய்
பில வாயும் பிழையாமல்
துணிக்கும் வண்ணம் காணுதி;
துன்பம் துற" என்றான்.

பொ :—" நஞ்சுபோலக் கொதிக்கின்ற இந்தப் பூதம் (ஒரு பொருளாக) எண்ணத்தக்கதன்று ; இந்த மேம்பட்ட வாளினுல் அடக்கும் தன்மையுடையது அன்று என்னலாமோ எனின், அத்தகையதுமன்று ; (நம்மை) வளைத்துக்கொண்டிருக்கின்ற இதன் கைகளையும், (உயிரினங்களை) வாரியிடுகிற பாதாளக் கிடங்கு போன்ற வாயையும் தவருமல் வெட்டித் தள்ளும் விதத்தை (இப்பொழுது) பார்ப்பாயாக. கவலையை விடு" என்று கூறினுன்.

கு :—விடத்திற் கனல் பூதம் கணிக்கும் தன்மைத்தன்று, இத்தகை வாளால் தணிக்கும் தன்மைத்து அன்று எனின் அன்று ; ஆதலால், கையும் வாயும் துணிக்கும் வண்ணம் காணுதி என இயையும். இனி, விடத்திற் கனல்பூதம் இத்தகைவாளால் தணிக்கும் தன்மைத்தன்று எனின், இறக்கவேண்டும் என்ற (நின் கருத்து) நன்றே. ஆயின், அது அவ்வாறு மதிக்கத்தக்க வலிய தன்மையுடையதும் அன்று ; என்று பொருள் கூறலுமாம். பிணித்தல் இங்கு வளைத்தலையுணர்த்தியது. கணித்தல் - மதித்தல். (35)

**3778.** என்னு முன்னே செல்லு
மிளங்கோ விளையோற்கு
முன்னே செல்லு முன்னவ
னன்னு னினுமுந்துந்
தன்னே ரில்லாத் தம்பி
தடுப்பார் பிறரில்லை
யன்னே கண்டா ரும்பரும்
வெய்துற் றழுதாரால்.

என்னு, முன்னே செல்லும் இளங்கோ ; இளையோற்கு
முன்னே செல்லும் முன்னவன் ; அன்னுனினும் முந்தும்
தன்நேர் இல்லாத் தம்பி ; தடுப்பார் பிறர் இல்லை ;
அன்னே! கண்டார் உம்பரும், வெய்துற்று அழுதாரால்.

பொ:—என்று (அவ்வாறு) கூறி, இளையவனுகிய இலக்குவன் (பூதத்தை நோக்கி) முன்னே சென்ருன் ; தம்பிக்கு முன்னுலே மூத்தவனுன இராமன் செல்லலுற்ருன் ; தனக்கு ஒப்பு யாரும் இல்லாதவனுன தம்பி அவனேயும் முந்திக்கொண்டு சென்ருன் ; (அவர்கள் இருவரையும்) தடுக்கக்கூடியவர்களாய் வேறு யாரும் (அங்கு) இல்லை ; அந்தோ ! அதனைப் பார்த்துக் கொண்டிருந்த தேவர்களும் துன்பமடைந்து புலம்பினுர்கள்.

கு :—ஆல் : அசை. முன்னவன் என்றது மூத்தவனாகிய இராமனை. (36)

## யார் என்று வினவிய கவந்தனை வெகுண்டு நிற்றல்

3779. இனைய ராகிய விருவரு
★ முகத்திரு கண்போற்
கனையும் வார்கழல் வீரர்சென்
றணுகலுங் கவந்தன்
வினையி னெய்தினிர் யாவர்கொ
லாமென்று வினவ
நினையு நெஞ்சின ரிமைத்தில
ருருத்தனர் நின்றார்.

இனையர் ஆகிய இருவரும், முகத்துஇரு கண்போல்,
கனையும் வார்கழல் வீரர் சென்று அணுகலும், கவந்தன்,
"வினையின் எய்தினிர் யாவர் கொலாம்?" என்று வினவ,
நினையும் நெஞ்சினர், இமைத்திலர், உருத்தனர், நின்றார்.

பொ :—(ஒருவரையொருவர் முந்துங் கருத்தினராய் விரைகின்ற) இத்தன்மையராகிய, ஒலிக்கின்ற நீண்ட கழலையணிந்த வீரர்களாகிய இராம இலக்குவர் இருவரும், முகத்துள்ள இருகண் பார்வை (ஒரு பொருளைக் காணுங்கால் இணைந்து சென்று பற்றுதல்) போல இணைந்து சென்று அவனை அணுகுதலும், கவந்தன் "உயிரிழக்கும் தீவினையுண்மையால் என்னை வந்தடைந்த நீங்கள் யார்?" என்று கேட்க, ஓரரக்கனை நெருங்குகின்றோம் என்று முன்னமே நினைந்த நெஞ்சினராதலின் (அவன் குரலைக் கேட்டு) அஞ்சி இமைத்தலும் செய்யாதவர்களாய் வெகுண்டு நின்றார்கள்.

கு :—இனையராகிய வீரரிருவரும் என இயையும். இருவரும் ஒத்த வலியினர் ஆதலின், ஒருவரை ஒருவர் முந்த விரைந்தும், ஒத்த விரைவினராகவே சென்றனர் என்பார், 'முகத்திருகண்போல் சென்றணுகலும்' என்றார். ஒருமுகத்துள்ள இருகண்பார்வை ஒரு பொருள் மேற் செல்லுங்கால் முன்னும்பின்னும் செல்வதின்றி இணைந்தே செல்வதுபோல் இராம இலக்குவர் ஒரு நிகரான விரைவோடு இணைந்தே சென்றனர் என்பது கருத்து. 'வினையினெய்தினிர்' என்பது, என் நல்வினையால் எனக்கு உணவாக எய்தினீர் என்ற பொருளும் தரும்; பின்விளைவை நினையுங்கால் அச்சொல்லே, என் சாபம் தீர்தற்குரிய நல்வினையால் எய்தினிர் என்ற உண்மைப்

பொருளேயும் தருதல் காணலாம். தன்னே யடைந்தவர்களேக் கவந்தன் தின்னும் நினேவினனே யெனினும் அவர்கள் அழகைக் கண்டு ஈடுபாடு கொண்டு இவ்வழகுடைய குமரர் யாரென அறிய விழைந்தவனுய், 'யாவர் கொலாம்' என்று இரக்கத்தோடு வினவலானுன். இத்துணையழகும் சிறிது நேரத்தில் தன் வயிற்றுக்குள் மறையப் போகின்றதே என்ற ஏக்கத்தை அக்கொடியவனுக்கும் உண்டாக்கிவிட்டது அவர்கள் பேரழகு. 'நினேயும் நெஞ்சினர்' என்பதற்கு, 'அவனே அழிக்க நினேயும் நெஞ்சினர்' என்று பொருள் கூறலுமாம். இமைத்தலும் தோல்வியாதலின் அவன் இடிபோன்ற குரலேக் கேட்டும் அஞ்சி இமைத்தல் செய்திலர் என்றவாறு. விழித்த கண் வேல் கொண்டெறிய வழித்திமைப்பின், ஓட்டன்ரோ வன்கணவர்க்கு. (குறள்-775) என்பது இங்கு நினேத்தற்குரியது. உருத்தல் - கோபித்தல். இமைத்தல் செய்யாமையோடு வெகுண்டும் பார்த்தனர் என அவர் வீரத்தை விளக்கியவாறு. (37)

## கவந்தன் இருதோள்களே இருவரும் அரிதல்

**3780.** அழிந்து ளாரல ரிகழ்ந்தன
ரென்னேயென் றழன்ருன்
பொழிந்த கோபத்தன் புதுப்பொறி
மயிர்ப்புறம் பொடிப்ப
விழுங்கு வேனென விரைதலும்
விண்ணுற வீர
ரெழுந்த தோள்களே வாள்களா
லரிந்தன ரிட்டார்.

" அழிந்துளார் அலர்; இகழ்ந்தனர் என்னே" என்று அழன்ருன்;
பொழிந்த கோபத்தன்; பொறிக்கனல் விழிதொறும் பொடிப்ப,
" விழுங்குவேன்" என விரைதலும், விண் உற, வீரர்,
எழுந்த தோள்களே வாள்களால் அரிந்தனர், இட்டார்.

பொ :—என்னேக் கண்டு மனங் கலங்குதலும் செய்திலர்; அதற்குமேலும் என்னே இகழ்ந்து வெகுளுதலும் செய்கின்ருர்கள்; என்று மனம் வெதும்பி மிக்கெழுந்த கோபத்தனுய் அக்கோபத்தால் புதிய தீப்பொறிகள் மயிர்க்கால் தோறும் தோன்ற "இவர்களே விழுங்கிடுவேன்" என்று ஆத்திரப்படுதலும், இராம இலக்குவராகிய வீரர்கள், விண்ணளாவ எழுந்து ஓங்கியுள்ள அவன் தோள்கள் இரண்டையும் தம் வாள்களால் அரிந்து தள்ளினுர்கள்.

கு :—வீரர்களின் கண்கள் தன் குரல் கேட்டும் அஞ்சி இமையாமை கண்டு, அழிந்துளார் அலர் என்றும், அவர்கள் உருத்தமை கண்டு இகழ்ந்தனர் என்னை என்றும் கவந்தன் வழியளவையால் உணர்த்தான், என்க. தன்னை எளியனாக இகழ்ந்தமையால்தான் அவர் உருத்தனர் என்பது கவந்தன் கருத்து. அழலுதல் மனம் வெதும்புதல். கோபம் பொங்கி வழிந்தது என்பார், 'பொழிந்த கோபத்தன்' என்றார். இதுகாறும் தன்னை அஞ்சாது வெகுண்டாரைக் கண்டறியாதவன் கவந்தனாதலின் என்றுமில்லாத வகையில் பெருஞ்சினம் கொண்டமையால் அவன் உடம்பில் தோன்றிய தீப்பொறிகளைப் புதுப்பொறி என்றார். உள்ளத்தில் தோன்றிய சின அனல் புறத்தே தோன்றுதற்கு வழி மயிர்க்கால்களேயாதலின், பொறிமயிர்ப்புறம் பொடிப்ப என்றார். பொடித்தல் - வெளிப்படுதல். விரைதல் - ஆத்திரப்படுதல். விண்ணுற எழுந்த தோள்களை என இயையும்; தோள்களின் உயர்ச்சி புலப்படுத்தியவாறு. இட்டார், துணைவினை. அரிந்தார்கள் என்பதே கருத்து. (38)

### கவந்தன் கைகளற்ற தோற்றம்

**3781.** கைக ளற்றுவெங் குருதியா
றொழுக்கிய கவந்தன்
மெய்யின் மேற்கொடு கிழக்குறப்
பெருநதி விரவும்
சைய மாநெடுந் தாழ்வரைத்
தனிவரை தன்னோ
டைய நீங்கிய பேரெழி
லுவமைய னானான்.

கைகள் அற்று, வெங்குருதி ஆறு ஒழுகிய கவந்தன்,
மெய்யின், மேற்கொடு கிழக்குறப் பெருநதி விரவும்,
சைய மா நெடுந் தாழ்வரைத் தனிவரை தன்னோடு
ஐயம் நீங்கிய பேர் எழில் உவமையன் ஆனான்.

பொ :—கைகள் இரண்டும் அறுபட்டமையால் வெப்பமான குருதி வெள்ளத்தைப் பெருக்குகின்ற உடம்பையுடைய கவந்தன். மேற்றிசையிலும் கிழக்குத் திசையிலும் சென்று பாயும் பெரிய ஆறுகளைத் தன் இருபாலும் பொருந்தப் பெற்றுள்ள சையம் என்கின்ற பெரிய நெடிய தாழ்வரைகளோடு கூடிய ஒப்பற்ற மலையோடு, ஐயத்திற்கு இடமில்லாமல் மிக்க அழகு வாய்ந்த ஒப்புமையுடையவனானான்.

கு :—அற்று, என்பது காரணத்தின்கண் வந்த வினையெச்சம்; மழை பெய்து நெல் விளைந்தது என்பதுபோல. உடம்பிலிருந்து வெளிப்படுங்கால் குருதி வெப்பமுடையதாதல் இயல்பு ஆதலின் 'வெங்குருதி' என்ருர். மெய்யின் ஒழுக்கிய கவந்தன் என்க. வடக்கு நோக்கியிருந்த கவந்தன் உடம்பிற்குச் சையமலை உவமை. கிழக்கினும் மேற்கினும் இருந்த அவன் தோள் அறுபட்ட இடத்தில் ஒழுகும் குருதிப் பெருக்கிற்கு அம்மலையிலிருந்து மேற்கிலும் கிழக்கிலும் தோன்றியோடும் ஆறுகள் உவமை. முன், வடிவால் மட்டும் சையமலையை யொத்திருந்த கவந்தன், கைகள் அறுபட்ட இப்போது, மேற்கொடு கிழக்குற ஆறுகளை ஒழுக்குதலாலும் ஒப்புமையுடையனுய் முழுதுமொத்தலின் 'ஐயம் நீங்கிய பேரெழில் உவமையனுனன்' என்ருர். ஐயம் நீங்கிய உவமை; பேரெழில் உவமை என்க. முற்றுவமை வாய்த்த அருமை தோன்ற இங்ஙனம் புகழ்ந்து கூறியவாறு. சையம், காவிரியாறு தோன்றும் ஒரு மலை. (39)

### கவந்தன் பழைய தெய்வ உருவம் பெறல்

3782. ஆளு நாயக னங்கையிற்
றீண்டிய வதனுல்
மூளுஞ் சாபத்தின் முந்திய
தீவினை முடித்தான்
தோளும் வாங்கிய தோமுடை
யாக்கையைத் துறவா
நீள நீங்கிய பறவையின்
விண்ணுற நிமிர்ந்தான்.

ஆளும் நாயகன் அங்கையில் தீண்டிய அதனுல்,
மூளும் சாபத்தின் முந்திய தீவினை முடித்தான்;
தோளும் வாங்கிய தோமுடை யாக்கையைத் துறவா,
நீளம் நீங்கிய பறவையின் விண் உற நிமிர்ந்தான்.

பொ :—எல்லா உயிரையும் காக்கின்ற திருமாலின் அமிசமான இராமன் தன் அழகிய கையில் தீண்டப் பெற்ற அதனுல், தனக்கு நேர்ந்த சாபமாகிய முன்னைய தீவினை நீங்கப் பெற்ற கவந்தன் தோள்களும் நீங்கப்பெற்ற குற்றமுடைய கோரமான உடம்பை விடுத்து, கூடு நீங்கிப் புறப்பட்ட பறவையைப்போல விண்ணில் எழில் உருவத்தோடு எழுந்து தோன்றினுன்.

கு :—ஆளுதல், காத்தல் என்னும் பொருளது. என்னை ஆளும் நாயகன் என்ற கருத்தால் கவி கூறியதாகக் கொள்ளலுமாம். சாபத் தீவினை என இயையும். சாபத்தின் என்புழி அத்தும் இன்னும் தவிர் வழிச் சாரியைகள். முடித்தான், வினைப்பெயர். முடித்தவனாகிய கவந்தன் யாக்கையைத் துறவா, நிமிர்ந்தான் என இயையும். தலை யின்மையேயன்றித் தோளும் வாங்கிய யாக்கை என்க. உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மை. தோம் - குற்றம்; அழகில்லாத கோரமான உடம்பு என்றவாறு. நீளம் - பறவைக்கூடு. உடம்பைத் துறந்து உயர்ந்தெழுந்த கவந்தனுக்கு நீளம் நீங்கிய பறவை உவமை. "குடம்பை தனித் தொழியப்புட்பறந்தற்றே" (குறள்-338) "சேக்கை மரனொழியச் சேணீங்கு புட்போல யாக்கை தமர்க்கொழிய நீத்து" (நாலடியார் - 30) என்பன இங்கு ஒப்பு நோக்கத் தகுவன. கவந்தன் தனு என்ற பெயருடைய கந்தருவனாக இருந்தவன். தூலசிரசு என்ற முனிவர் சாபத்தால் அரக்கன் ஆனான் என்பது பின் அறியலாம். (40)

**3783.** விண்ணி னின்றவன் விரிஞ்சனே
முதலினர் யார்க்கும்
கண்ணி னின்றவ னிவனெனக்
கருத்துற வுணர்ந்தான்
எண்ணி லன்னவன் குணங்களை
வாய்திறந் திசைத்தான்
புண்ணி யம்பயக் கின்றுழி
யரியதெப் பொருளே.

விண்ணில் நின்றவன், "விரிஞ்சனே முதலினர் யார்க்கும்
கண்ணில் நின்றவன் இவன்" எனக் கருத்துற உணர்ந்தான்,
எண்இல் அன்னவன் குணங்களை வாய்திறந்து, இசைத்தான்,
புண்ணியம் பயக்கின்றுழி அரியது எப்பொருளே ?

பொ :—உடம்பைத் துறந்து விண்ணில் நின்றவனாகிய கவந்தன் பிரமனே முதலிய தேவர்க்கும் மற்றை எல்லோர்க்கும் கண்ணைவிட் டகலாது நின்று அருள் செய்யும் கடவுளே இவ்விராமன் என மனத் தில் பொருந்த உணர்ந்தவனாய், அப்பெருமானுடைய எண்ணிக்கை யில்லாத குணங்களை வாய்திறந்து பாடித் துதித்தான்; ஒருவனுக்குப் புண்ணியம் பயனளிக்கும்போது அரிதாவது எப்பொருள்தான் ? (ஒரு பொருளும் அரிதன்று).

கு :—பெரும் பாவியாகிய அரக்கன். இறைவன் குணங்களைக் கூறித் துதிக்க எங்குக் கற்றான் ? என்று தோன்றும் ஐயத்தைப் புண்ணியம் பயக்கின்றுழி யரியதெப் பொருளே ? என வேற்றுப் பொருள் வைப்பால் நீக்கித் தெளிவித்தவாறு. புண்ணியப் பயனால் தேவ வுடம்பு பெற்றதோடன்றி இறைவன் பெருமையை யுணர்ந்து துதிக்கவும் கவந்தன் வல்லவனானான் என்றவாறு. விரிஞ்சனே முதலினர் யார்க்கும் என்றும், யார்க்கும் என்றும் யோகவிபாகத்தால் கூட்டிப் பிரிக்க. விரிஞ்சனே முதலினர் யார்க்கும் என்றது தேவரை ; யார்க்கும் என்றது மக்களை. கண்ணில் நின்றவன் என்றது, தேவர்க்கும் மக்களுக்கும் கண்ணில் நின்று அருள் செய்பவன் என்றவாறு. "கண்ணகத்தே நின்று களிதருதேனே'' (திருவாசகம். திருப்பள்ளி யெழுச்சி-9) என மணிவாசகர் இறைவனை விளித்திருத்தலும் காண்க. "யாதினும் உயர்ந்தோர் தன்னை யாவர்க்கும் கண்ணன் என்றே ஓதிய பெயர்க்குத் தானே உறுபொருள் உணர்த்தி விட்டான்'' (பால-1153) என்று முன் கூறியதும் நினைக்க. 'காண்பார்க்குங் காணப்படு பொருட்குங் கண்ணாகி' (கவந்தப் - 44) என்பர் பின்னும். இனிக் கண்ணைப்போலச் சிறந்து நின்று உதவுபவன் எனவும், யார்க்கும் கருத்தில் நின்றவன் எனவும் பொருள் கூறலும் ஆம். கண்ணினின்றவனே இவன் ; என ஏகாரம் விரிக்க. உணர்ந்தானாய் இசைத்தான் என முற்றெச்சமாக்கி முடிக்க. அன்னவன் எண்ணில் குணங்களை என இயையும். இங்குப் புண்ணியம் என்றது இராமன் கைதீண்டப் பெற்றதை. அப்புண்ணியப் பயனால் பல்லூழி முயன்று பெறுதற்குரிய ஞானத்தையும் எளிதில் கடிதில் கைவரப் பெற்றான் என்றவாறு. அரியதெப் பொருளே ? என்ற வினா எப்பொருளும் அரியதன்று என்பதை யுணர்த்த வந்தது. மனத்தில் நினைத்தது மட்டும் அன்றி வாய் திறந்து அவன் குணங்களைச் சொல்லியும் துதித்தான் என்பார், வாய் திறந்து இசைத்தான்' என்றார். வாய் திறந்து என வேண்டாது கூறினார் ; அவன் வாய் அச்செயலில் பயிலாமை தோற்றுவிக்க வேண்டி. இசையோடு பாடினான் என்ற கருத்தைத் தோற்றுவிக்க 'இசைத்தான்' என்றார். (41)

## இராமனைத் துதித்தல் 3784-3792

**3784.** ஈன்றவனோ வெப்பொருளு
மெல்லைதீர் நல்லறத்தின்
சான்றவனோ தேவர்
தவத்தின் தனிப்பயனோ

மூன்று கவடாய்
முளைத்தெழுந்த மூலமோ
தோன்றி யருவினையேன்
சாபத்துயர் துடைத்தாய்.

"ஈன்றவனோ எப்பொருளும்? எல்லைதீர் நல்அறத்தின்
சான்றவனோ? தேவர் தவத்தின் தனிப்பயனோ?
மூன்று கவடாய் முளைத்து எழுந்த மூலமோ?
தோன்றி, அருவினையேன் சாபத் துயர் துடைத்தாய்!"

பொ :—"எளியனாய் என் முன் வந்து தோன்றித் தீர்திறனில்லாத் தீவினையேனுடைய சாபத்தாலாய துயர்மிக்க உடம்பைப் போக்கினவனே! உன்னை எல்லாப் பொருளையும் படைத்தவன் என்பேனா? எல்லையில்லாத நல்ல தருமத்திற்கு எடுத்துக் காட்டு என்பேனா? தேவர்கள் செய்த தவத்தின் ஒப்பற்ற பயனாக வந்து அவதரித்தவன் என்பேனா? அயன், அரி, அரன் என்ற மூன்று கிளைகளாய் முளைத்த மூலப் பரம்பொருள் என்பேனா?"

கு :—கவந்தன் அரக்க உடம்பு நீங்கித் தேவவுடம்பு பெற்று நின்று, இராமன் தனக்குமுன் எளிதின் வந்து தோன்றி அருள் செய்த அருமை நினைந்து அவனைப் புகழ்ந்து துதிக்கின்றான். உலகப் படைப்பிற்குரிய பிரமனை உந்திக் கமலத்தில் தோற்றுவித்தவனாதலின், எப்பொருளும் ஈன்றவனாகவும், அறக்கடலாய் நின்று பாவத்தைத் தேய்ப்பவனாகலின், நல்லறத்தின் சான்றவனாகவும், தேவர் செய்த தவத்தின் பயனாய் இவ்வுலகில் இராமனாய்த் தோன்றினவனாதலின், தேவர் தவத்தின் தனிப்பயனாகவும், மும்மூர்த்திகளுக்கும் மூலப்பொருளாய் நிற்பவனாதலின் மூலமாகவும் இருப்பவன் திருமாலே என்ற கருத்தால் இங்ஙனம் புகழ்கின்றான். இங்குக் கூறிய பல தன்மைகளையும் உடைய நின்னை எப்பெயரால் அழைப்பது? என இராமனை வினவி அவன் அளப்பருந் தன்மையை வியந்தவாறு. சான்று என்பது இங்கு எடுத்துக்காட்டு என்னும் பொருளது. நல்லறத்தின் சான்றவன் - நல்ல தருமத்தில் நிறைவுடையவன் அல்லது, தருமத்தில் மிக்கவன் எனப் பொருள் கூறலுமாம். இனி, ஈன்றவன் என்பது பிரமனையும், நல்லறத்தின் சான்றவன் என்றது காத்தல் தொழிலாகிய நல்லறத்தைச் செய்கின்ற திருமாலையும், தேவர் தவத்தின் தனிப்பயன் என்றது தவவேடத்தவனாகிய உருத்திரனையும் குறித்ததாகக் கொள்ளவும் இடமுண்டு. அருவினையேன் - தீர்தற்கரிய கொடிய தீவினையுடையேன். சாபத்துயர் என்றது, சாபத்தாலாய துயர்மிக்க உடம்பை. முன் அவ்வரக்கவுடம்பையே தானெனக் கருதி அவ்வுடம்பாய்

இயைந்து நின்று களித்திருந்தவன், அவ்வுடம்பு நீங்கித் தேவனனவுடன், அவ்வுடம்பைத் துயர் என இழித்துக் கூறினன். (42)

**3785.** மூலமே யில்லா முதல்வனே நீமுயலும்
கோலமோ யார்க்குந் தெரிவரிய கொள்கைத்தா
லாலமோ வாலி னடையோ வடைக்கிடந்த
பாலனோ வேலைப் பரப்போ பகராயே.

"மூலமே இல்லா முதல்வனே! நீ முயலும்
கோலமோ, யார்க்கும் தெரிவு அரிய கொள்கைத்தால்;
ஆலமோ? ஆலின் அடையோ? அடைக்கிடந்த
பாலனோ? வேலைப் பரப்போ? பகராயே!"

பொ:—"நினக்கு ஒரு மூலமே இல்லாத மூலகாரணனே! நீ நினைத்து மேற்கொள்ளும் வடிவமோ எத்தகையோர்க்கும் தெரிந்து கொள்ள முடியாத தன்மையதாக உள்ளது; (பேரூழியிறுதியில் நீ கொண்ட கோலம்) ஆலமரமோ? அல்லது அந்த ஆலமரத்தின் இலையோ? அல்லது, அந்த இலையில் கிடந்த பாலனோ? அல்லது அந்த ஆலமரத்திற்கு இடனாக இருந்த கடற்பரப்போ? சொல்லுவாயாக."

கு:—மேல் மும்மூர்த்திக்கும் மூலமாய் நின்றவன் இராமன் எனப் புகழ்ந்தவன், இங்கு மூலமேயில்லா முதல்வன் எனப் புகழ்கின்றான். எல்லாப் பொருட்குந் தானே முதல்வன் ஆவதன்றித் தனக்கு மேல் இலாதவன் என அவன் தனிமுதன்மையை-உயர்வறவுயர் நலமுடைமையை விளக்கியவாறு. முயலுதல் என்றது இங்கு அவன் விரும்பி நினைத்தலை யுணர்த்தியது. கோலம் - வடிவம். கொள்கை இங்குத் தன்மை என்னும் பொருளது. பிரளய வெள்ளத்தில் திருமால் ஓராலிலையில் பாலனாய்க் கண்வளர்வான் என்ற நிகழ்ச்சியை மனத்திற்கொண்டு இங்ஙனம் வினவுகின்றான். "பண்டுமின்று மேலுமாயோர் பாலனாகி ஞாலமேழ் உண்டு மண்டி யாலிலைத் துயின்ற வாதி தேவனே" (நாலாயிரம். திருச்சந்த விருத்தம்-22.) என்றது காண்க. ஆலிலையில் கண் துயின்ற பாலனாக மட்டுமா நீ அன்று கோலங்கொண்டாய்? ஆலமரமும், இலையும், ஆல் நின்ற கடற்பரப்பும் நின் வடிவங்கள் அல்லவோ? என்று வினவியவாறு. இவ்வினாவால் அவை யெல்லாமுமாய்க் கோலங்கொண்டவன் திருமாலே என்பது விளங்கவைத்தவாறு. அடை - இலை. பகராய், முன்னிலை ஏவல்வினை. ஆதாரமும் ஆதேயமுமாய் நிற்பவன் அவனே என்பது இதனால் புலப்படுத்தினான். (43)

3786. காண்பார்க்குங் காணப்
படுபொருட்குங் கண்ணுகிப்
பூண்பாய்போ னிற்றியால்
யாதொன்றும் பூணுதாய்
மாண்பா லுலகை
வயிற்ருெளித்து வாங்குதியா
லாண்பாலோ பெண்பாலோ
வப்பாலோ வெப்பாலோ.

"காண்பார்க்கும் காணப் படு பொருட்கும் கண் ஆகிப்
பூண்பாய்போல் நிற்றியால், யாதுஒன்றும் பூணுதாய்!
மாண்பால் உலகை வயிற்று ஒளித்து வாங்குதியால்;
ஆண்பாலோ? பெண்பாலோ? அப்பாலோ? எப்பாலோ?"

பொ :—"எப்பொருளிலும் ஒரு சிறிதும் பற்றுப் பூணுத நீ, பொருள்களைக் காணும் ஆற்றலுள்ள அறிவுடைய உயிர்கட்குக் காட்டும் கண் ஆகியும், காணப்படும் பொருளாக மட்டும் உள்ள அறிவுஇல் பொருள்கட்கு அவற்றைத் தாங்கி நிற்கும் இடமாகியும், அவ்விருவகைப் பொருள்களிடத்தும் பற்றுப் பூண்பவனைப் போலப் பிரியாது நிற்கின்ருய்; அஃதன்றியும், நின் மாண்புடைமையால் பிரளயகாலத்து உலகத்தை வயிற்றில் ஒளித்து வைத்திருந்து பின் வெளிப்படுத்துகின்ருய்; இத்தகைய செயலையுடையநீ ஆண்பாலா? அன்றிப் பெண்பாலா? அவ்விரண்டும் அல்லாத அலிப்பாலா? எந்தப் பாலில் சேர்வாய்?"

கு :—அறிவுடைப் பொருள்கட்கும் அறிவில் பொருள்கட்கும் உதவியாக இருப்பவன் என்பான், 'காண்பார்க்கும் காணப்படு பொருட்டும் கண்ணுகி' என்ருன். காண்பார் என்றது அறிவுடைப் பொருள்களை; தலைமைபற்றி உயர்திணை மேல்வைத்து ஓதினுரேனும் சித்துப் பொருள் எல்லாவற்றையும் கொள்க. காணப்படு பொருளாக மட்டும் நின்று, அறியும் ஆற்றலில்லாத நிலம், மலை, நீர், நெருப்புப் போன்ற பொருள்களையே இங்குக் காணப்படு பொருள் என்ருன். 'காண்பார்க்குக் கண்ணுகி' என்றது, அறியும் பொருள்கட்கு அறிவாகி நின்று உதவி என்றவாறு. 'காணுங் கண்ணுக்குக் காட்டும் உளம்போல், காண உள்ளத்தைக் கண்டு காட்டலின்' (சிவஞான போதம். சூ-11) என்றதும் 'காண்பாரார் கண்ணுதலாய்க் காட்டாக் காலே' (திருநாவுக்கரசு தேவா-6-95.3) என்றதும் காண்க. கண், அறிவும் இடமுமாகிய இருபொருளும்பட இரட்டுற மொழிதலாய் நின்று, காணப்படு பொருட்கு ஆதாரமாய் – இடமாய் நின்று உதவி

என்றும் பொருள்பட்டது. இறைவன், பூமியை அரவாகிச் சுமந்தும், அவ்வரவுக்கும் ஆதாரமாய் ஆமையாகி நின்று தாங்கியும் உதவுகின்ருன் என்பது புராண மரபு. எல்லாப் பொருளேயும் பற்றி நின்றே பற்றற்ற இறைவன் நீ என்பான், 'பூண்பாய்போல் நிற்றியால் யாதொன்றும் பூணுதாய்' என்ருன். "தோய்ந்தும் பொருளனைத்தும் தோயாது நின்ற சுடரே" (சரபங்கன் பிறப்பு நீங்கு - 27) என்ற இந்திரன் துதியும் காண்க. உலகை வயிற்ருெளித்து வாங்கும் தன்மை பெண்பாலுக்குரிய செயலன்றே? புருடோத்தமனுகிய நீ, அச்செயலேச் செய்தலால் பெண்பாலோ? என்று வினவுவான், ஆண்பாலோ பெண்பாலோ? அலிப்பாலோ? எப்பாலோ என எல்லாப் பாலேயும் உடன் கூறி வினவினுன். அப்பாலோ என்றது; முன்கூறிய இரண்டுமல்லாத அலிப்பாலே நெஞ்சறி சுட்டாய் நின்று உணர்த்தியது. அலிப்பாலோ என்ற பாடம் இருப்பின் சிறக்கும். எப்பாலோ என்ற வினு, இறைவன் எப்பாலும் அல்லனுய் அப்பாற்பட்டவன் என்பதையுணர்த்தியது. "ஓர்பாலனுகி ஞாலமேழ் உண்டு மண்டி யாலிலேத் துயின்ற வாதி தேவனே" (திவ்வியப்-சந்த விருத்தம்-22) என்றதால் திருமால் உலகை வயிற்றடக்கிய செய்தியுணரலாம். எல்லாப் பொருள்களேயும் பிரியாது நின்று உதவும் தன்மை இதனுல் புலப்படுத்தினுன். (44)

3787. ஆதிப் பிரமனுநீ யாதிப் பரமனுநீ
ஆதி யெனும்பொருளுக் கப்பாலுண் டாகிலுநீ
சோதிச் சுடர்ப்பிழம்பு நீயென்று சொல்லுகின்ற
வேத முரைசெய்தால் வெள்காரோ வேறுள்ளார்.

"'ஆதிப் பிரமனும் நீ! ஆதிப் பரமனும் நீ!
ஆதி எனும் பொருளுக்கு அப்பால் உண்டாகிலும் நீ!
சோதிச் சுடர்ப் பிழம்பும் நீ' என்று சொல்லுகின்ற
வேதம் உரைசெய்தால் வெள்காரோ வேறுஉள்ளார்?"

பொ:—"பிரமாணமாக எல்லோராலும் சிறப்பித்துச் சொல்லப் படும் வேதம், 'உலகப் படைப்பிற்கு ஆதியாயுள்ள பிரமனும் நீயே; அந்தப் பிரமனுக்கும் ஆதியாய் உள்ள பரம்பொருளும் நீயே; ஆதி என்று சொல்லப்படும் பொருளுக்கு அப்பால் ஒரு பொருள் இருப்பினும் அப்பொருளும் நீயே; எல்லா ஒளிகளுக்கும் மேலான பேரொளித் திரளாக உள்ளவனும் நீயே' என்று சொன்னுல் அதைக் கேட்டு வேறு கடவுளராக உள்ளவர்கள் நாணமாட்டார்களோ?"

கு :—'வேதம் நீயென்று உரை செய்தால்' என இயையும். சொல்லுகின்ற வேதம் என்க. பிரமாணமாக எல்லோராலும் சிறப்பித்துச் சொல்லப்படுவது வேதமேயாகலின் அவ்வடையால் சிறப்பித்தார். உலகிற்கு ஆதியான பிரமன் திருமாலின் உந்திக் கமலத்தில் தோன்றியவன் ஆதலின் அக்காரண காரிய ஒற்றுமைபற்றி ஆதிப் பிரமனும் நீ என்ருன். ஆதிப் பரமனும் நீ என்பதைக் கேட்டவர்கள், அனுதிப் பரமன் வேறுளனே ? என ஐயுருமைப் பொருட்டு, '' ஆதி எனும் பொருளுக்கு அப்பாலுண்டாகிலுநீ '' என்றது வேதம். " முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருளே '' (திருவெம்பாவை. 9) என்றதும் இக்கருத்தினதேயாம். பிரமன் முதலிய எல்லாத் தெய்வங்களாகவும் நின்று அருள்செய்கின்றவன் திருமாலே எனச் சிறந்த வேதமே கூறுமாயின், தம்மையே முதற்றெய்வமாகக் கருதித் தருக்கியிருக்கின்ற பிரமன் முதலிய தேவர்கள் நாணமுறுவரே ! எனப் பரிந்து கூறுவான்போலத் திருமாலின் பெருமையை வேதநெறியான் விளக்கியவாறு. "ஆதியாதி யாதிநீயொ ரண்டமாதி யாதலால், சோதியாத சோதி நீ " (திருச்சந்த விருத்தம்-34) என்ற திருமழிசைப் பிரானின் கருத்தை விளக்குவதாக இப் பகுதியமைந்திருத்தல் காணலாம். மூன்று ஆதிகளையும் இச்செய்யுளில் விளக்கியிருக்கின்ருர். வெள்குதல் - நாணுதல். (45)

**3788.** எண்டிசையுந் திண்சுவரா வேழேழ் நிலைவகுத்த
வண்டப் பெருங்கோயிற் கெல்லா மழகுடைய
மண்டலங்கண் மூன்றின்மே னின்று மலராத
புண்டரிக மொட்டின் பொகுட்டே புரையம்மா.

" எண்திசையும் திண்சுவரா, ஏழ் ஏழ் நிலை வகுத்த
அண்டப் பெருங் கோயிற்கு எல்லாம் அழகு உடைய
மண்டலங்கள் மூன்றின்மேல் நின்று, மலராத
புண்டரிக மொட்டின் பொகுட்டே புரை ; அம்மா !"

பொ :—"எட்டுத் திசைகளும் திண்மையான சுவராகக் கீழ் ஏழுலகமும் மேலேழுலகமுமாகிய பதினுன்கு அடுக்குகளை வகுத்துச் செய்த அண்டமாகிய பெரிய கோயிலுக்கெல்லாம் அழகுடைய சந்திர மண்டலம், சூரிய மண்டலம், நட்சத்திர மண்டலம் என்ற மூன்று மண்டலங்களுக்குமேல் நின்று, மலர்தல் செய்யாத நின் உந்தித் தாமரை அரும்பின்உள்ளிருந்த சிறிய கொட்டையே யன்ருே இடமாக இருந்தது? என்னே வியப்பு.

கு :—ஆலமரத்தின் பெருமையைக் கண்டு அது அடங்கியிருந்த ஆலின் விதைச் சிறுமையை நினைந்து இச்சிறிய விதையிலன்றோ இத்தகைய பெரிய ஆலமரம் அடங்கியிருந்தது? என்று வியப்பார்போலப், பதினாலுலகங்களையுடைய இவ்வண்டத்தின் பெருமையைக் கண்டு, இவ்வண்டப் பெருங்கோயில் முழுமையும், திருமாலின் உந்திக் கமலம் மலராது அரும்பாக இருந்த ஆதிக் காலத்தில் அம்மொட்டினுள்ளிருக்கும் சிறிய விதையில் தானே அடங்கியிருந்தது என்று கூறி வியந்து, முன் "ஆதியெனும் பொருட்கு அப்பாலுண்டாயினு நீ" என்றதை விளக்கியவாறு. பொகுட்டே பெருங்கோயிற்கெல்லாம் புரை என இயையும். புரை - இடம். 'இல்லது வாராது' என்ற நியதியின்படி உந்திக் கமலம் மலர்ந்தபின் மலர்ந்த அண்டம் அக்கமலம் மொட்டா யிருந்த ஆதிக்காலத்தும் நுண்ணிதாய் அம்மொட்டிற்குள் அமைந் திருந்தமை யுணரலாம். அம்மா, வியப்பிடைச் சொல். திருமால் தங்கியுள்ள பரமபதம் உள்ள இடத்தைப் புலப்படுத்த 'மண்டலங்கள் மூன்றின்மேல் நின்று' என்றார். விரிந்து குவிந்த பின்னும் மலராமை நிகழலாமாதலின். மலராத என்றதால் மொட்டு என்பது தெள்ளிதின் விளங்காமை கருதி, மலராத புண்டரிக மொட்டு என்றார். "அத் திசைமுகனோடு உந்திக்கமலம் விரிந்தால் விரியும் உகக்கடையில் முந்திக்குவியில் உடனே குவியும் இம்மூதண்டமே" (திருவரங்கத்து மாலை 19) என்பதால், உந்திக்கமலம் விரியும்போது விரியும் உலகம், அக்கமலம் மலராது மொட்டாயிருந்த நிலையில் இல்லையோ? என்ற ஐயத்தைப் போக்கிப், பிரமன் தோன்றாத ஆதிக்காலத்தும் உந்திக்கமலம் மொட்டாயிருந்த நிலையிலும் அம்மொட்டினுள் அடங்கியே யிருந்தது என்று புலப்படுத்திய வாறுமாயிற்று. "மாநிலமியலா முதன்முறை யமையத்து, நாம வெள்ளத்து நடுவட்டோன்றிய, வாய்மொழி மகனொடு மலர்ந்த தாமரைப் பொகுட்டு நின் னேமி நிழலே" (பரிபாடல் 3: 91-94) எனக் கடுவ னிளவெயினனாரும் ஆதித் தோற்றத்தை யுணர்த்துதல் காணலாம். (46)

3789. மண்பா லமரர் வரம்பாருங் காணாத
வெண்பா லுயர்ந்த வெரியோங்கு நல்வேள்வி
யுண்பாய்நீ யூட்டுவாய் நீயிரண்டு மொக்கின்ற
பண்பா ரறிவார் பகராய் பரமேட்டி.

"மண்பால் அமரர் வரம்பு ஆரும் காணாத,
எண்பால் உயர்ந்த, எரிஓங்கு நல்வேள்வி

உண்பாய் நீ, ஊட்டுவாய் நீ ; இரண்டும் ஒக்கின்ற
பண்புஆர் அறிவார்? பகராய், பரமேட்டி!"

பொ: —"மேலான வேள்வி வடிவாக இருக்கும் பரனே ! பூதேவர் களாய அந்தணர் செய்கின்ற, யாரும் வரம்பு காணுத மதிப்பில் உயர்ந்த, எரி ஓங்கி வளர்கின்ற நல்ல வேள்வியில் அவியை உண்ப வனும் நீ, வேள்வித் தலைவனாக நின்று ஊட்டுபவனும் நீ, முரண் பட்ட இரண்டு தன்மைகளும் நின்பால் இவ்வாறு ஒத்த நிலையில் விளங்கும் பண்பை, யார் அறிபவர்? சொல்வாயாக."

கு :—மண்பால் அமரர் என்றது பூசுரர் எனப்படும் அந்தணரை. அரசர் வேள்வி செய்யுங்காலும் அந்தணர்களைக் கொண்டே செய்தல் மரபாதலின் மண்பாலமரர் செய் நல்வேள்வி என்ருர்; எண்-மதிப்பு. வரம்பு ஆரும் காணுத மதிப்பு என்க. எல்லையற்ற மதிப்புடையது வேள்வி என்றவாறு. மதிப்பில் உயர்ந்த வேள்வி; எரியோங்கு நல்வேள்வி என வேள்விக்கு அடையாக்குக. நெய்யைப் பெய்து, எரியை வளர்த்து, மந்திரம் கூறி அவி கொடுப்பதே வேள்வியாகலின் எரியோங்குதல் கூறினர். ஆபிசார யாகம் போன்ற தீயவேள்வியை விலக்க, நல்வேள்வி எனச் சிறப்பித்தார். வேள்வி என்றது ஆகுபெயராய் அதில் தரும் அவியை உணர்த்தியது. அவியை உண்கின்ற யூபமாகவும் அவியைக் கொடுக்கின்ற வேள்வியாசானாக வும் திருமாலே இருக்கின்ருன் என்றவாறு. "கேள்வியுட் கிளந்த ஆசானுரையும் படிநிலை வேள்வியுட் பற்றி யாடு கொளலும், திக ழொளி யொண்சுடர் வளப்பாடு கொளலும் நின்னுருபுடனுண்டி, பிறருடம்படுவாரா நின்னொடு புரைய அந்தணர் காணும் வரவு" (பரிபாடல். 2. 61-68) எனக் கீரந்தையார் கூறுமாறும், பரிமேலழகர் "வேள்விக்கிறைவனை ஆசான்" என்ருர்: தலைமை பற்றி. அவனுரை யாவது வேதத்துள் நான்காம் வேற்றுமையை யீருகவுடைய தெய்வப் பெயர்ச்சொல். அதனை வைதிகர் உத்தேசத் தியாகம் என்ப. அச்சொல்லே கடவுட்கு உருவென்பது சயிமினியாற் செய்யப்பட்ட வைதிக நூற்றுணிபாகலின் அதனை 'உருபு' என்றும், யூபமாவது மாயோனாகச் சொல்லப்படுதலால் பசுக்களைப் பிணித்துக் கொள் கின்ற அதனை 'உண்டி' என்றும், ஊன்கணார்க்குப் படிமையினும் அந்தணர்க்கு வேள்வித் தீயினும், யோகிகட்கு உள்ளத்தினும் ஞானி கட்கு எவ்விடத்தும் வெளிப்படுதலால் சுடர்வளப்பாடு கொளலை 'அத்தணர்காணும் வரவு' என்றும் கூறினர்" என அப்பகுதிக்கு உரை வரைந்திருத்தலும் இங்கு உளங்கொளத் தகுவனவாகும். இதனல் உண்பாய் நீ என்றது, வேள்வியூபமாய் நின்று வேள்விப் பசுவைப் பற்றிக் கொள்பவனும் திருமாலே என்றவாறு. வேள்வி ஆசான் உரையாக இருப்பவனும் திருமாலேயாதல் நோக்கி 'ஊட்டு

வாய் நீ' என்ருன். இந்த இரண்டு தன்மைகளும் திருமாலிடம் திகழ்தலை நுனித்து அறிவார் அரியராதலின் 'இரண்டு மொக்கின்ற பண்பா ரறிவார்' என்றும் கூறினுன். இட்டி - யாகம். சுடர்வளப் பாடு தன் திருமேனியாகக் கொள்பவன் திருமால் என்ற பொருளும் உடம்படுபுணர்த்தலால் தோற்றுவிக்க வேண்டி, மேலான வேள்வித் தீயாக இருப்பவனே என்ற பொருள் தோன்றப் 'பரமேட்டி' என்ற பெயரால் விளித்தான். பரமபதத்தில் உள்ள வனே! என்ற பொருள் இங்கு இயைபுடையதன்ருதல் கண்டு கொள்க. (47)

3790. நிற்கு நெடுநீத்த நீரின் முளைத்தெழுந்த
மொக்குளே போல முரணிற்ற வண்டங்க
ளொக்க வுயர்ந்துனுளே தோன்றி யொளிக்கின்ற
பக்க மறிதற் கெளிதோ பரம்பரனே.

" நிற்கும் நெடுநீத்த நீரில் முளைத்து எழுந்த
மொக்குளே போல, முரண் இற்ற அண்டங்கள்,
ஒக்க உயர்ந்து, உன்உளே தோன்றி ஒளிக்கின்ற
பக்கம் அறிதற்கு எளிதோ ? பரம்பரனே !"

பொ :—""மேலான பரம்பொருளே! நிலைத்து நிற்கின்ற நெடிய வெள்ளநீரில் தோன்றி எழுந்த மொக்குள் மீண்டும் அந்நீரில் ஒளித்தல் போலத் தோற்றமளிக்கும் அண்டங்கள் பலவும் உன் னிடத்தே தோன்றி ஒருமிக்க உயர்ந்து நின்று பின் உன்னுளே மறைகின்ற தன்மை ஒருவரால் அறிதற்கு எளிதாமோ? (ஆகாது காண்)"

கு :—ஓடும் நீரிலும் மொக்குள் தோன்றுவதுண்டு ஆயினும் நீலமேனி நெடியோனுகிய திருமாலுக்கு உவமையாக வேண்டி நிற்கு நெடுநீத்தநீர் கூறினுர். நிற்கும் நெடுநீத்தநீர் திருமாலுக்கும், மொக்குள் அண்டங்கட்கும் உவமை. ஒளிக்கின்ற என்ற பொரு ளடையால் உவமைக் கண்ணும் எழுந்த மொக்குள் அந்நீரில் ஒளித்தல் போல என வேண்டும் சொல் வருவித்துத் தொழிலுவமை யாக்குக. ஒக்க உயர்ந்து என்றது அண்டங்கள் பேருழிவரையில் ஒருமிக்க நிலைபெற்று நிற்றலை உணர்த்தியது. தோன்றி நின்று, மறையும் என அண்டங்களின் முத்தொழிலை யுணர்த்தினுன். உன்னுளே யொளிக்கின்ற எனப் பின்னும் கூட்டுக. நீரில் தோன்றிய மொக்குள் சிறிதுபோழ்து நின்று பின் அந்நீரில் மறைதல் போல, நின்பால் தோன்றிய அண்டங்கள் சிறிதுகாலம் நிலைபெற்று

நின்று பின் நின்னிடத்தே ஒடுங்குகின்ற தன்மையை யுய்த்துணர்ச்சி யால் அறிவதன்றி அவற்றின் தோற்ற நிலை ஒடுக்கங்கள் முழுமை யையும் நேரில் கண்டறிவார் ஒருவருமிலராதலின் அறிதற்கு எளிதோ? என்றான். பக்கம் இங்குத் தன்மை என்னும் பொருள் தந்தது. கவந்தன் இதனால் திருமால் இம்மண்ணண்டத்திற்குமட்டு மன்றி எல்லா வண்டங்கட்கும் முதற்காரணன் என்பதை யுணர்த்தி னான். (48)

**3791.** நின்செய்கை கண்டு
நினைந்தனவோ நீண்மறைக
ளுன்செய்கை யன்னவைதாஞ்
சொன்ன வொழுக்கினவோ
வென்செய்தேன் முன்ன
மறஞ்செய்கை யெய்தினர்
பின்செல்வ தில்லாப்
பெருஞ்செல்வ நீதந்தாய்.

நின் செய்கை கண்டு நினைந்தனவோ நீள் மறைகள்?
உன் செய்கை அன்னவைதாம் சொன்ன ஒழுக்கினவோ?
என் செய்தேன் முன்னம்? மறஞ்செய்கை எய்தினர்
பின் செல்வது இல்லாப் பெருஞ் செல்வம் நீதந்தாய்.

பொ :—"நீண்ட வேதங்கள் நின் செயல்களைக் கண்டு அச் செயல்களையே ஒழுக்கமாக உலகுக்குக் கூற நினைந்தனவோ? அல்லது, உன் செய்கைகள் தாம் அவ்வேதங்கள் சொன்ன ஒழுக்க நெறியில் நிகழ்கின்றனவோ? (அத்தகைய ஒழுக்கத்தில் சிறந்த நீ) பாவம் செய்தலையுடையவர்கள்பின் செல்லுதற்குரியதல்லாத சாப நீக்கமாகிய பெருஞ் செல்வத்தை எனக்குக் கொடுத்தாய்; இவ் வுதவிக்குக் காரணமாய் யான்முன் என்ன புண்ணியத்தைச் செய் தேன்? ஒன்றுஞ் செய்திலனே!

கு :—இதுகாறும் இராமனுடைய பரத்துவநிலையை நினைந்து துதித்தவன் இச்செய்யுளால் அவதார நிலையில் அவன் பெற்றுள்ள சிறப்பைப் புகழ்கின்றான். இராமன் ஒழுகலாறு வேதநெறியில் பிறழாது நிகழ்வதை யுணர்த்த, ஐய வாய்பாட்டால் கூறிச் சிறப் பிக்கின்றான். முற்கூறியதில் பிற்கூறியது வலியுடைத்து என்னும் அளவைநூல் முறைப்படி இரண்டாவதாகக் கூறியதே—இராமன் செய்கை வேதம் சொன்ன ஒழுக்கின என்பதே—உண்மையாகக்

கொள்ளத்தகுவது. 'ஏனைத்துள மறையவை யியம்பற்பாலன, பனைத்திரள் கரக்கரிப் பரதன் செய்கையே' (2507) எனப் பரதனைப் பற்றி இராமன் இலக்குவனுக்குக் கூறியதும் இக்கருத்தினதாதல் காணலாம். முன் செய்த புண்ணியமுடையார்க்கன்றிப் பாவச் செய்கையர்க்குச் சாபநீக்கமாகிய பெருஞ்செல்வம் வாய்க்காது என்பது புலப்படுத்த. 'மறஞ்செய்கை யெய்தினார்பின் செல்வதில்லாப் பெருஞ்செல்வம்' என்றான். பாவச் செய்கையே செய்து வந்த தனக்குச் சாபநீக்கமாகிய இப்பெருஞ்செல்வம் இராமன் பேரருளால் கிடைத்ததே என்பது கவந்தன் கருத்து. என் செய்தேன் முன்னம்? என்ற வினா, எப்புண்ணியத்தையும் செய்திலேனே! என்னுங் கருத்தினது. வேதம் சொன்ன ஒழுக்கத்தில் நிற்கின்ற நீ அந் நெறிக்கு மாறாகப் பாவிக்குச் சாபநீக்கத்தைக் கொடுத்தாயே! என இராமன் அருள்திறத்தை வியந்து பாராட்டியவாறு. (49)

**3792.** மாயப் பிறவி
மயனீக்கி மாசிலாக்
காயத்தை நல்கித்
துயரின் கரையேற்றிப்
பேயொத்தேன் பேதைப்
பிணக்கறுத்த வெம்பெருமான்
நாயொத்தே னென்ன
நலனிழைத்தே னானென்றான்.

"மாயப் பிறவி மயல் நீக்கி, மாசு இலாக்
காயத்தை நல்கித் துயரின் கரை ஏற்றிப்
பேய் ஒத்தேன் பேதைப் பிணக்கு அறுத்த எம்பெருமான்!
நாய் ஒத்தேன், என்ன நலன் இழைத்தேன் நான்?" என்றான்.

பொ :—"(வயிறு நிரப்புவதையே நோக்கமாகக் கொண்டமையால்) பேயைப் போன்ற என் வஞ்சகம் நிறைந்த அரக்கப் பிறவியையும் அதனாலாய மயக்கத்தையும் நீக்கி, அழுக்கில்லாத ஒளியுடைய தெய்வ உடம்பை அருளி, சாபத்தாலாய துயரக்கடலினின்று இன்பமாகிய கரையிலே ஏற்றி, என் அறியாமையாகிய மாறுபாட்டினையும் அறுத்தருளிய எம்பெருமானே! இழிந்த நாய் போன்றேனாகிய யான், நினக்கு என்ன நன்மையைச் செய்தேன்?" என்று கூறினான்.

கு :—மேல், இராமனுடைய ஒழுக்கத்தின் விழுப்பத்தையும், அவன் அருளின் சிறப்பையும் புகழ்ந்து கூறியவன், இச்செய்யுளால் அவன் தனக்குச் செய்த பேருதவிகளை அடுக்கிக் கூறிப் புகழ்கின்றான்.

பேயொத்தேனது மாயப் பிறவி என்க. மாயம் - வஞ்சனை. மயல் - மயக்கம்: பழுதையைப் பாம்பு என்று மயங்குவது போல்வது. மாசு - அழுக்கு. தெய்வ உடம்பின் இயல்பு புலப்படுத்த மாசிலாக்காயம் என்ருன். இதனுல் அரக்க உடம்பு மாசுடையது என்பதும் பெற வைத்தவாறு. கரை என்ற குறிப்பான், துயரமாகிய கடல் என்பதும், இன்பமாகிய கரை என்பதும், குறிப்புருவகங்களாகக் கொள்ளப் பெற்றன. பேதை - அறியாமை. பிணக்கு - மாறுபாடு. அறியாமை என்பது உயிரின் அறிவுக்கு மாறுபட்டதாய் அதனைத் துன்பத்தில் வீழ்த்துவதாகலின் 'பேதைப் பிணக்கு' என்ருன். சாபத்தால் அரக்க உடம்போடு வந்தேறிய மயக்கத்தை நீக்கியதோடு, முன் தெய்வ உடம்போடு இருந்த காலத்துத் தனக்கு இயல்பாக இருந்த அறியாமையையும் இராமன் போக்கியருளினுன் என்றவாறு. மாயப் பிறவியின் நீக்கம் மாசிலாக் காயத்தையும், துயரின் நீக்கம் இன்பத்தையும், அறியாமையின் நீக்கம் ஞானத்தையும் உண்டாக்கின என்பது கருத்து. இந்த ஞானத்தினுல் இராமனது பரத்துவநிலையை யுணர்தலும், அவன் குணங்களை வாய்திறந்து இசைத்தலும் அவனுக்குக் கைகூடின. கம்பரும், 'புண்ணியம் பயக்கின்றுழி யரியதெப் பொருளே' என்று முன் வியந்ததும் காண்க. தனக்குப் பேருதவி செய்த உரிமையும் உயர்வற வுயர்நலமுடைய அவன் தலைமையும் தோன்ற 'எம்பெருமான்!' என்றும், தன் தாழ்வு தோன்ற, 'நாயொத்தேன்' என்றும் கூறினுன். நாய்ப் பிறவி மிகவும் இழிந்தது என்பது சான்ருேர் கொள்கை. மணிவாசகர் தன்னை 'நாயேன்' எனவும் 'நாயினுங் கடையேன்' எனவும் திருவாசகத்தில் பல விடங்களிலும் கூறிக் கொள்ளுதல் காணலாம். எம்பெருமானுக்கு நலனிழைக்கும் தகுதியே யற்றவன் என்பதையும் கைம்மாறு கருதாது இத்துணைப் பேருதவியையும் நீ செய்தாய் என்பதையும் உணர்த்தியவாறு. 'என்ன நலனிழைத்தேன்' என்பதற்கு நின்னருளைப் பெற நான் என்ன புண்ணியம் செய்தேனே என வியந்து கூறியதாகவும் கொள்ளலாம். (50)

பணிந்துநின்ற கவந்தனை இராமன் காணுதல்

3793. என்ருங் கினிதியம்பி
யின்றறியக் கூறுவெனே
லொன்ருது தேவ
ருறுதிக் கெனவுன்னத்

தன்ருயைக் கண்ணுற்ற
கன்றனைய தன்மையனுய்
நின்ருனைக் கண்டா
னெறிநின்ருர் நேர்நின்ருன்.

என்றுஆங்கு இனிது இயம்பி "இன்று அறியக் கூறுவெனேல்
ஒன்ருது தேவர் உறுதிக்கு" என உன்னுத்
தன்தாயைக் கண்ணுற்ற கன்று அனைய தன்மையனுய்
நின்ருனைக் கண்டான், நெறிநின்ருர் நேர்நின்ருன்.

பொ :—என்று இனிதாக - மெல்லெனத் - துதிமொழிகளைச் சொல்லிவிட்டு, '' இன்று இவன் அறியுமாறு இவன் தெய்வ நிலையை வெளிப்படக் கூறுவேனுயின், அது "தேவரகசியம் வெளிப்படலாகாது" என்று தேவர் கொண்ட உறுதிப்பாட்டிற்குப் பொருந்தாது" என எண்ணித் தன் தாய்ப் பசுவைக் கண்ட கன்றினைப் போன்ற அன்புமிக்க தன்மையுடையவனுய் நின்ற கவந்தனை ஞான நெறியில் நின்ருர்க்கு நேரே வெளிப்பட்டு நின்று அருள் செய்பவனுகிய இராமன் கண்டான்.

கு :—ஆங்கு, அசை. 'இன்றறியக் கூறுவனேல் ஒன்ருது' எனப் பின் கூறுவதால், இனிதியம்பி என்றது, பிறர்க்குக் கேளாதவாறு மெல்லெனத் துதித்ததையுணர்த்தியது. இராவணனை அழிப்பது கருதித் தேவர்கள் தாம் கூடிச் செய்த முடிவை, 'யாரும் வெளிப்படுத்தலாகாது' எனத் தமக்குள் முடிவு 'செய்துகொண்டதைத் தேவவுடம்பு பெற்ற இவனும் நினைவு கூர்ந்து, இராமன் தெய்வ நிலையை அவன் அறியக் கூருது மெல்லென மொழிந்து மெய்ப்பாட்டால் அன்பு வெளிப்பட நெருங்கி நின்ருன் என்றவாறு. இவனும் தேவனுகலின் அவ்வுறுதிக்கு ஊறுபாடு நேராதவண்ணம் நடந்துகொண்டான் என்க. இந்திரன் இராமனைக் காண நேர்ந்தபோதும் சேய்மையிலிருந்தே அவன் பெருமைகளைப் பேசித் துதித்து விட்டு முடிவில், 'துன்னுதலிடருளது என நனிதுணிவான்......போனுன்' (சரபங்கர் பிறப்பு நீங்கு - 32) என இராமனை நெருங்கிப் பேசாமல் சென்ற நிகழ்ச்சியை இங்கு நினைவு கூர்தல் வேண்டும். பின் இவன் அவர்க்குக் கூறுவனவும், அவர்கள் தெய்வ நிலையைப் புலப்படுத்தாமல் மனிதத் தன்மையராகக் கருதிக் கூறினவாகவே அமைந்திருத்தல் காணலாம். கடவுளுக்கும் உயிர்க்கும் உள்ள தொடர்பு, தாய்க்கும் கன்றுக்கும் உள்ள அன்புத் தொடர்பு போன்றது ஆதலின், இராமனைக் கண்ணுற்று நின்ற கவந்தனுக்குத் 'தன் தாயைக் கண்ணுற்ற கன்றனைய தன்மையனுய் நின்ருன்' என உவமை கூறினர். நெறி நின்ருர் நேர் நின்ருன் என்றது இராமனை. அப்பெயரால் இங்குக்

கூறியது, முன் நெறி நின்று பழகிய கவந்தனுக்குமுன் பரம் பொருளாகக் காட்சி தந்த இயைபு கருதி. விண்ணில் உயர்ந்து நின்று துதித்து முடிந்தவுடன் இராமனை நெருங்கிப் பணிவுடன் நின்றான் என்பது கருத்து. (51)

## இலக்குவனுக்கு அவனைக்காட்டி ஆராய்க எனல்

**3794.** பாரா யிளையவனே
பட்டவிவன் வேறேயோர்
பேராளன் றானா
யொளியோங்கும் பெற்றியனாய்
நேரா காயத்தி
னிற்கின்றா னீயிவனை
யாரா யெனவவனும்
யார்கொலோ நீயென்றான்.

"பாராய் இளையவனே! பட்ட இவன், வேறே ஓர்
பேராளன் தானாய், ஒளி ஓங்கும் பெற்றியனாய்,
நேர் ஆகாயத்தில் நிற்கின்றான்; நீ, இவனை
ஆராய்!" என, அவனும் "ஆர்கொலோ நீ?" என்றான்.

பொ :—"தம்பீ! இதோபார்! நம்மால் இறந்துபட்ட இவன், வேறு ஒரு பெரியோனாய், ஒளிமிக்க தன்மையனாய் நமக்கெதிரே ஆகாயத்தில் நிற்கின்றான்; நீ, இவனை ஆராய்ந்து யார் என்று தெரிந்துகொள்;" என்று இராமன் சொல்ல, இலக்குவன், அத்தேவனைப் பார்த்து, "யார் நீ ?" என்று வினவினான்.

கு :—பேராளன் என்றது, தேவனாய் நின்றதை யுணர்த்தியவாறு. அவன் யார் என்பதை யுய்த்துணர்ச்சியால் உணர்ந்துள்ள, இராமன், தானே வினவுவது தக்கதன்று என்று இலக்குவனைக் கொண்டு வினவச் செய்தான். 'நெறிநின்றார் நேர்நின்றான்' என முன் இராமனுக்கும் பெயர் கூறியதும் இங்கு நினைக்க. ஆராய்தலாவது அவன் வரலாற்றைக் கேட்டறிதல். 'ஆர்' என்ற குறிப்பு வினைமுற்று இங்கு உயர்திணை ஆண்பாலை யுணர்த்தியது. 'கொல்' ஐயத்தின்கண் வந்த இடைச்சொல். ஓ, அசை; ஆர் என்பதே வினாவை யுணர்த்தினமையின் ஓ, வினாப் பொருளதன்று. இளையவனே பாராய் என்றமையால், இது இராமன் கூற்று என்பது விளங்கும். (52)

கவந்தன் தன் வரலாறு கூறுதல்

3795. சந்தப்பூ ணலங்கல் வீர
தனுவெனு நாமத் தேனோர்
கந்தர்ப்பன் சாபத் தாலிக்
கடைப்படு பிறவி கண்டேன்
வந்துற்றீர் மலர்க்கை தீண்ட
முன்னுடை வடிவம் பெற்றே
னெந்தைக்கு மெந்தை நீரே
யிசைப்பது கேண்மி னென்றான்.

*

" சந்தப்பூண் அலங்கல் வீர! தனு
எனும் நாமத்தேன் ஓர்
கந்தர்ப்பன்; சாபத்தால், இக்
கடைப்படு பிறவி கண்டேன்;
வந்து உற்றீர் மலர்க்கை தீண்ட,
முன் உடை வடிவம் பெற்றேன்;
எந்தைக்கும் எந்தை நீரே!
இசைப்பது கேண்மின்!" என்றான்.

பொ :—" அழகிய அணியாக மாலையை அணிந்துள்ள வீர! யான் தனு என்னும் பெயரையுடையேனாகிய ஒரு கந்தருவன்; (தூலசிரசு என்ற முனிவனது) சாபத்தால் இந்த இழிந்த அரக்கப் பிறவியைப் பெற நேர்ந்தது; இங்கு வந்து அடைந்த உமது மலர்போன்ற கை தீண்டுதலால், முன் யான் பெற்றிருந்த தேவ வடிவத்தைப் பெற்றேன்; (இழந்த தேவ உடம்பைப் பெறுதற்குக் காரணரானமையின்) என் தந்தையினும் சிறந்த தந்தை நீரேயாவிர்; யான் சொல்வதைக் கேளுங்கள்" என்று கூறத் தொடங்கினான்.

கு :—சந்தம் - அழகு. தவக்கோலமுடைய இராமனுக்குப் பொற் பூண் பொருந்தாமையின், பூணாக அலங்கலை அணிந்த வீர! எனப் பொருள் கூறப் பெற்றது. நாமத்தேனாகிய கந்தர்ப்பன் என இரு பெயரொட்டு ஆக்குக. தனித்தனி முடித்தலும் ஆம். சாபம் கொடுத் தவன் தூலசிரசு என்பது முதனூலால் அறிந்தது. மாண்ட அரக்க உடம்பைச் சுட்டிக்காட்டி, 'இக்கடைப் படுபிறவி' என்றான். அரக்கப் பிறவியாதலின் கடைப்பட்டதாயிற்று. கண்டேன் என்பது பெற நேர்ந்தது என்னும் பொருளது. வந்துற்றீரது மலர்க்கை என்க. 'உற்றீர்' வினைப் பெயர். யான் முன்னுடைய வடிவம், என்க. அன்றி முன் உடைந்த - நீங்கிய - வடிவம் எனலும் ஒன்று. இழந்த

தெய்வவடிவம் மீண்டும் பெறக் காரணராதலின் எந்தையினும் சிறந்தீர் என்பான், 'எந்தைக்கும் எந்தை நீரே' என்றான். எந்தைக்கும் என்புழி நான்கனுருபு உறழ்ச்சிப் பொருளது; உம்மை உயர்வு சிறப்பு. எந்தையினும் சிறந்த எந்தை என்றவாறு. நீரே என்புழி ஏகாரம் தேற்றம். (53)

துணை இன்றியமையாதது எனல் 3796-3797

3796. கணையுலாஞ் சிலையி னீரைக்
காக்குந ரில்லை யேனு
மிணையிலா டன்னை நாடற்
கேயன செய்தற் கேற்கும்
புணையிலா தவற்கு வேலை
போக்கரி தன்னதே போற்
றுணையிலா தவற்கு மின்றால்
பகைப்புலந் தொலைத்து நீக்கல்.

"கணை உலாம் சிலையினீரைக்
காக்குநர் இல்லை யேனும்,
இணை இலாள் தன்னை நாடற்கு,
ஏயன செய்தற்கு ஏற்கும்;
புணை இலாதவற்கு வேலை
போக்கு அரிது; அன்னதேபோல்,
துணை இலாதவற்கும், இன்றால்,
பகைப்புலம் தொலைத்து நீக்கல்."

பொ:—"அம்புகளைத் தொடுத்து எய்தற்குரிய வில்லை யேந்தியுள்ள உங்களைக் காத்தற்குரிய வலிய துணையாவார் யாரும் இல்லை என்பது உண்மையாயினும், ஒப்பற்ற கற்பினளாகிய சீதையைத் தேடுதற்கும் ஏவிய பணிகளைச் செய்தற்கும் துணை ஏற்புடையதே யாகும்; தெப்பம் இல்லாதவனுக்குக் கடலைக் கடந்து போதல் அரிதாகும்; அதுபோலவே துணை இல்லாதவனுக்கும் பகைவர் தேயத்தை அழித்து ஒழித்தல் இயலாதாகும்."

கு:—வளைத்த வில்லும் தொடுத்த அம்பும் உடையராய்ப் பகைவனைத் தேடுகின்ற நிலைமை புலப்பட 'கணையுலாஞ்சிலையினீரை' என்றான். உலாவுதல் பொருந்துதல் எனலுமாம். கூட்டொருவரையும் வேண்டாக் கொற்றவராய் வில்லேந்தியுள்ள நீர் பிறரைக் காப்ப

தன்றி நும்மைக் காக்கும் திறமுடைய துணைவர் பிறர் இலர் என்பது உண்மையாயினும், சீதையைத் தேடுதற்கும், ஏவிய செய்தற்கும் துணை ஏற்புடையதேயாம். எனத் துணை என்னும் சொல்லை முன்னும் கூட்டுக. பின் இரண்டடியும் எடுத்துக் காட்டுவமை. வேலை - கடல். "நெடுநீர் புணையின்றி நீந்துதல் இன்னா" (இன்னா நாற்பது – 4) என்பதை மனத்துட் கொண்டு 'புணையிலாதவற்கு வேலை போக்கரிது' என்றார். பகைப்புலம் - பகைவர் நாடு. நாடற்கும், செய்தற்கும் என உம்மை விரிக்க. இதனால், பகைப்புலம் தொலைத்து நீக்க வேண்டிய உமக்குத் துணை இன்றியமையாதது என்பதைத் தனு என்பவன் வற்புறுத்தியவாறு. (54)

**3797.** பழிப்பறு நிலைமை யாண்மை
பகர்வதென் பதும பீடத்
துழிப்பெருந் தகைமை சான்ற
வந்தண னுயிர்த்த வெல்லா
மழிப்பதற் கொருவ னான
வண்ணலு மறிதி ரன்றே
யொழிப்பருந் திறல்பல் பூத
கணத்தொடு முறையு முண்மை.

"பழிப்பு அறும் நிலைமை, ஆண்மை;
பகர்வது என்? பதும பீடத்து
உழிப் பெருந்தகைமை சான்ற
அந்தணன் உயிர்த்த எல்லாம்
அழிப்பதற்கு ஒருவனான
அண்ணலும், அறிதிர் அன்றே
ஒழிப்பு அரும்திறல் பல்பூத
கணத்தொடும் உறையும் உண்மை."

பொ :—"(பகைவெல்வோர், துணையோடு செல்லுதல்) பழிப்பற்ற நிலைமையும் ஆண்மையும் ஆகும் என்பது யாவரும் அறிந்த உண்மையாகலின், அதுபற்றி உமக்குச் சொல்வது எதற்கு? தாமரைத் தவிசின்கண் வீற்றிருக்கும் பெருந்தன்மை மிக்க பிரமன் படைத்த எல்லா உயிர்களையும் அழிப்பதற்கு உரிமை பூண்ட ஒப்பற்றவனான உருத்திரனும், அழிக்க முடியாத பெரிய திறமையுடைய பல பூதகணங்களோடு தங்கியிருக்கும் உண்மை நிகழ்ச்சியை நீவிரும் அறிவீரன்றோ ?"

கு :—மேலைச் செய்யுளில் கூறிய பகைவெல்வோர்க்குத் துணை வேண்டும் என்பது காரியகாலபக்கம் என்னும் அதிகாரத்தால் இங்கும் இயைதலின், பழிப்பறு நிலைமை, ஆண்மை; என்று மட்டும் கூறினர். பகையை அழிப்போர், துணையோடு இருத்தல், பழிப்பற்றது; ஆண்மையானது; என்றவாறு. நாம் பகையை வெல்லப் பிறர் துணையை நாடுதல் பழியன்றோ? ஆண்மைக் குறைவன்றோ? என அவர்கள் நினைக்கக் கூடுமே என்னும் நினைவினனாய் இங்ஙனம் கூறினான். அறிதிரன்றே என அவரறிந்த வரலாறு ஒன்றைக் கூறுகின்றானாகலின் உங்களுக்குக் கூறவேண்டுவது யாதுளது? என்பான், பகர்வதென்? என்றான். அந்தணன் என்றது பிரமனை. உயிர்த்தல் - தோற்றுவித்தல். முத்தொழிலில் அழித்தல் தொழிலுக்கே உரியவன் உருத்திரனாகவின் அவனை 'அழிப்பதற்கொருவனான அண்ணல்' என்றான். அழிக்குங் கடவுள் பூதங்களின் துணையைப் பெற்றழித்தல் கொண்டு அவனை, வலிமையற்றவன் எனப் பழிப்பாரும் ஆண்மையில் குறைந்தவன் என இழிப்பாரும் இலராதலின், நீங்கள் துணையை நாடுவதால் உங்கள் புகழுக்கும் ஆண்மைக்கும் குறையேற்படாது என எடுத்துக் காட்டால் விளக்கியவாறு. (55)

## வழி கூறுதல்

3798. ஆயது செய்கை யென்ப
தறத்துறை நெறியி னெண்ணித்
தீயவர்ச் சேர்க்கி லாது
செவ்வியோர்ச் சேர்த்துச் செய்த
ருயினு முயிர்க்கு நல்குஞ்
சவரியைத் தலைப்பட் டன்னா
ளேயதோர் நெறியி னெய்தி
யிரலையின் குன்ற மேறி.

"ஆயது செய்கை என்பது,
அறத்துறை நெறியின் எண்ணித்
தீயவர்ச் சேர்க்கிலாது,
செவ்வியோர்ச் சேர்த்துச் செய்தல்!
தாயினும் உயிர்க்கு நல்கும்
சவரியைத் தலைப்பட்டு, அன்னாள்
ஏயதோர் நெறியின் எய்தி,
இரலையின் குன்றம் ஏறி."

பொ :—“ துணையைப் பெறுதலாகிய அதுவே இனிச் செய்யத் தகும் செய்கை என்பதை அறநெறியில் கூறிய முறைப்படியும் ஆராய்ந்து பார்த்துப் பின் அத்துணையைப் பெறுங்கால் தீயவர்களைச் சேர்க்காமல், நல்லோரையே துணையாகச் சேர்த்துக்கொண்டு, மேல் செய்யவேண்டியதைச் செய்க. தாயைக் காட்டிலும் சிறந்த அன்பின ளாய் உயிர்கட்கு உதவுகின்ற சவரி என்பவளைச் சந்தித்து, அவள் ஏவுகின்ற ஒரு வழியிலே சென்று ருசியமூகம் என்னும் குன்றின்மேல் ஏறி.”

கு :—குளகம், தழுவி என வருஞ் செய்யுளில் இயையும். மேல் இரண்டு செய்யுளாலும் வற்புறுத்தியது துணையைப் பெறல் வேண் டும் என்பதே ஆதலின், இங்கு அதனையே ‘ஆயது’ எனச் சுட்டினன். ஆயதே செய்யத்தகும் செய்கையென்பதை யான் கூறியதால் மட் டும் கொள்ளாமல், அறநூல் நெறியின்படியும் எண்ணி மேற்கொள் ளுங்கள் என்றவாறு. ‘உறுப்பமைந்து ஊறஞ்சா வெல்படை வேந் தன் வெறுக்கையுள் எல்லாந் தலை.’' (குறள் - 761) என வேந்த னுக்கு எல்லாச் செல்வத்துள்ளும் வெல்படையுடைமையையே தலைமையான செல்வமாக அறநூலும் கூறியிருத்தல் காண்க. அறநூலாகிய திருக்குறளையே கம்பர் இங்கு அறத்துறை நெறி என்று கூறினர் போலும். நெறியினெண்ணி என்பது இடைநிலை விளக் காய்ப் பின் தீயவர்ச் சேர்க்கிலாது செவ்வியோர்ச் சேர்த்தற்கும் இயைந்து நட்பாராய்தலை யுணர்த்தி நின்றது. தீ நட்பு, கூடா நட்பு என்ற திருக்குறள் அதிகாரங்களை நினைந்து ‘ தீயவர்ச் சேர்க்கிலாது’ என்றும், நட்பு என்ற அதிகாரத்தை நினைந்து ‘செவ்வியோர்ச் சேர்த்து’ என்றும் கூறியதாகவும் கொள்ள இடமுண்டு. செவ்வி யோர் என்றது, குடிப்பிறந்து, தன்கட் பழிநாணுவாரை. “மருவுக மாசற்றார் கேண்மை யொன்றீத்து, மொருவுக வொப்பிலார் நட்பு” (குறள் - 800) என்பது இங்கு ஒப்புநோக்கத்தகும். சவரியின் பெருமை புலப்படுத்த, ‘ தாயினுமுயிர்க்கு நல்கும் சவரி ’ என்றான். தலைப்படுதல் - சந்தித்தல். இரலையின் குன்றம் என்றது, ருசிய மூகம் என்ற குன்றினை. மானின் முகம் போன்று காணப்படும் குன்றமாத லின் அப்பெயர் பெற்றது, இரலை - மான் ; ருசியம் என்பது மானைக் குறிக்கும் வடசொல். செய்தல் - செய்க ; வியங்கோள். தீயோர் என்றது வாலி போன்றவரையும் செவ்வியோர் என்றது அநுமான், சுக்கிரீவன் போன்றோரையும் குறித்துச் சொன்னதாகவும் கொள்ள லாம். வருஞ் செய்யுளால் இது புலப்படும். (56)

## சுக்கிரீவனைத் துணையாகக் கொள்க எனல்

3799. கதிரவன் சிறுவ னாய
கனகவா ணிறத்தி னானை
எதிருறத் தழுவி நட்பி
னினிதமர்ந் தவனி னீண்ட
வெதிர்பொரு தோளி னாளை
நாடுதல் விழுமி தென்றான்
அதிர்கழல் வீரர் தாமு
மன்னதே யமையு மென்றார்.

"கதிரவன் சிறுவன் ஆய
கனக வாள் நிறத்தினானை
எதிர்உறத் தழுவி நட்பின்
இனிது அமர்ந்து அவனின் நீண்ட
வெதிர் பொரு தோளினாளை
நாடுதல் விழுமிது" என்றான்;
அதிர்கழல் வீரர் தாமும்
அன்னதே அமையும் என்றார்.

பொ :—சூரியனுக்கு மகனாகிய பொன் போன்ற ஒளி பொருந்திய நிறத்தையுடைய சுக்கிரீவன் எதிர் வர அவனை நட்பால் தழுவிக் கொண்டு அங்குச் சில நாள் இனிதாகத் தங்கியிருந்து, பின் அச் சுக் கிரீவன் துணையால் நீண்ட மூங்கில் போன்ற தோளையுடைய சீதை யைத் தேடுதல் சிறந்தது" என்று கூறினான்; ஒலிக்கின்ற கழலணிந்த வீரராகிய இராம இலக்குவரும் "அதுவே பொருந்தும்" என்று ஏற்றுக் கொண்டனர்.

கு :—மேல் பொது வகையால் 'செவ்வியோர்ச் சேர்த்து' என்று கூறியவன், செவ்வியோர் என்றது சுக்கிரீவனையே என்பதை இங்குப் புலப்படுத்தி விட்டான். சூரியனே இராவண வதையின் பொருட்டுச் சுக்கிரீவனாகப் பிறந்துளான் என்றதைத் தனு அறிவானாயினும் தேவ ரகசியத்தை வெளிப்படுத்தல் தக்கதன்று என்ற கருத்தால் கூறாது அவன் நட்பினைத் தழுவுமாறு கூறினான். கதிரவன் சிறுவன் - கதிர வனுக்கு மகன். தழுவுதல், நட்புப் பூண்டமைக்கு அறிகுறியாகும். உள்ளத்துணர்ச்சியால் ஒத்தலே நட்பு ஆயினும், புறமாகிய உடம்பும் அவ்வுணர்ச்சியால் நெருங்கி ஒன்றுதல் உண்டு. பின் இராமனும் சுக்கிரீவனும் நட்புப் பூண்டு ஒருங்கு சேர்ந்திருந்த நிலைமையை, "கூட்டமொத்திருந்த வீரர் குறித்ததோர் பொருட்டு முன்னாள், ஈட்

டிய தவமும் பின்னர் முயற்சியும் இயைந்த தொத்தார்" (நட்புக் கோட் படலம் - 22) என விளக்குதலும் இங்கு நினைக்க. 'இனி தமர்ந்து' என்று இங்குக் குறித்தவாறே இராம இலக்குவர் மழைக் காலத்தில் நான்கு மாதம் வரை சுக்கிரீவன் நாட்டில் தங்கினமை காண்க. வெதிர் - மூங்கில். பொரு, உவம உருபு. தனக்கு ஒப்பா காது என வெதிரொடு போர் செய்கின்றது போன்று அழகுமிக்கு விளங்கும் தோள் எனலும் ஆம். தோளினுள் என்றது சீதையை. நாடுதல் - தேடுதல். அவனின் நாடுதல் என்க. சுக்கிரீவன் துணை யைக் கொண்டு சீதையைத் தேடுதல் தக்கது என்ற தனுவின் சொற் படியே பின் நிகழ்தல் காணலாம். தனுவின் யோசனை பொருத்த மாகக் காணப்பட்டமையால், 'வீரர்தாமும் அன்னதே அமையும்' என்று உடன்பட்டனர். இப்பாடலில் முதல் இரண்டடிகளில் கிட்கிந்தா காண்டமும், மூன்ருமடியில் சுந்தர காண்டமும் சுருங்க உணர்த்தியுள்ளமை காணலாம். (57)

## இராம இலக்குவர் மதங்கன் இருக்கை சேர்தல்

3800. ஆனபின் ரெழுது வாழ்த்தி
யந்தரத் தவனும் போனுன்
மானவக் குமரர் தாமு
மத்திசை வழிக்கொண் டேகிக்
கானமு மலையு நீங்கிக்
கங்குல்வந் திருத்த காலை
யானையி னிருக்கை யன்ன
மதங்கன திருக்கை சேர்ந்தார்.

ஆனபின் தொழுது, வாழ்த்தி, அந்தரத்து அவனும் போனுன்;
மானவக் குமரர்தாமும் அத்திசை வழிக் கொண்டு ஏகிக்,
கானமும் மலையும் நீங்கிக், கங்குல் வந்து இறுத்த காலை,
யானையின் இருக்கை அன்ன மதங்கனது இருக்கை சேர்ந்தார்.

பொ:—அதற்குப் பின்பு அவர்களை வணங்கி வாழ்த்தி விட்டு விண் வழியாக அத் தனுவும் எழுந்து போனுன்; மனுவின் குலத்தில் பிறந்த குமரராகிய இராம இலக்குவர் தாமும் அவன் கூறிய திசை யையே வழியாகக் கொண்டு சென்று காடும் மலையும் கடந்து இருள் வந்து தங்கிய மாலைப் போதில், யானைகள் மிக்கிருப்பதால் யானையின் இருப்பிடம் போன்ற மதங்க முனிவன் ஆசிரமமுள்ள வனத்தை யடைந்தார்கள்.

கு :—வைவச்சுவத மநுவின் குலத்துப் பிறந்தவராதலின் மானவக் குமரர் எனப் பெற்றார். அத்திசை என்றது, தனுவினால் சொல்லப்பட்ட திசையை; இது பண்டறி சுட்டு. காலே என்றது மாலேயை. மதங்கன் தங்கியிருந்த காட்டில் யானைகள் மிக்கிருந்தமையால் 'யானையினிருக்கையன்ன' எனத் தற்குறிப்பேற்றமாகக் கூறப்பெற்றது. மதங்கனதிருக்கை என்றது அவன் ஆசிரமத்தையும் ஆசிரமம் இருந்த காட்டையும் உணர்த்தும். யானையின் இருக்கையன்ன இருக்கை என்ற அடையால் இங்குக் காட்டைக் குறித்ததாகக் கொள்ளுதலே பொருத்தமுடையது. யானைகள் மிக்க இடத்தில் மதங்க முனிவர் இருந்தமையால் யானை மருத்துவ நூல் ஒன்று வடமொழியில் செய்துள்ளார் என்பர். (58)

## கவந்தன் வதைப் படலம் முற்றும்

# 11. சவரி பிறப்பு நீங்கு படலம்

இது சில சுவடிகளில் சவுரி பிறப்பு நீங்கு படலம் என்றும், சவரிப் படலம் என்றும், சவரி மோட்சப் படலம் என்றும் வரையப் பட்டுள்ளது. சவரி என்பவள் மதங்க முனிவருடைய மாணுக்கர் களுக்குத் தொண்டு புரிந்துகொண்டு தவம் செய்திருந்த ஒரு வேட்டுவப் பெண். தேன் கொணர்ந்து விற்கும் சபரர் என்னும் ஒருவகை இனத்தைச் சேர்ந்தவளாதலால் சவரி என்னப்பட்டாள். அவள் இராமனும் இலக்குவனும் மதங்காச்சிரமத்திற்கு எழுந்தருளப் போவதை முன்னமே அறிந்து எதிர்நோக்கி அங்குக் கிடைக்கும் நல்ல கனி வகைகளைச் சேர்த்து வைத்திருந்து அவ்விருவரும் வந்த வுடன் கண்டு களித்துச் சேவித்துச் சேமித்து வைத்திருந்த பழங் களைப் படைத்து விருந்தூட்டி மகிழச் செய்து, சுக்கிரீவன் இருக்கும் மலைக்குச் செல்லும் வழியை இராமனுக்குத் தெளிவுறத் தெரிவித்துப் பின் தன் உடலைக் களைந்து, பிறப்பை ஒழித்து முத்தி பெற்ருள். அவ்வரலாற்றைக் கூறும் பகுதி சவரி பிறப்பு நீங்கு படலம் என்னப் பட்டது. இது ஒன்பது செய்யுட்களாற் கூறப்படும்.

இதற்குத் தோற்றுவாய் முந்திய கவந்தன் வதைப் படலத் திலேயே காணலாம். "தாயினும் உயிர்க்கு நல்குஞ் சவரியைத் தலைப்பட் டன்னுள், ஏயதோர் நெறியினெய்தி இரலையின் குன்றம் ஏறி" அடையும்படியாகக் கவந்தன் இராமனுக்குக் கூறியுள்ளான். இதனல் ருசியமுகம் என்னும் இரலைக் குன்றுக்குச் செல்லும் வழி மிகக் கடினமானது என்பதும், அது சவரிக்கே நன்ருகத் தெரியும் என்பதும் விளங்கும். எல்லா உயிர்களிடத்தும் தாயன்பு செலுத்தும் சவரி இராமனிடத்தில் தலைசிறந்த அன்பு கொண்டிருந்தாள். அவள் இராமனை எந்தையே என்று அழைப்பதும், இராமன் அவளை அன்னையே என்று விளிப்பதும் இருவரிடையும் உள்ள அன்புத் தொடர்பை நன்கு புலப்படுத்தும். இப்படலத்தோடு ஆரணிய காண்டம் முற்றுப்பெறுகிறது.

# 11. சவரி பிறப்பு நீங்கு படலம்

3801. கண்ணிய தருதற் கொத்த
கற்பக தருவு மென்ன
உண்ணிய நல்குஞ் செல்வ
முறுநறுஞ் சோலை ஞால
மெண்ணிய வின்ப மன்றித்
துன்பங்க ளில்லை யான
புண்ணியம் புரிந்தோர் வைகுந்
துறக்கமே போன்ற தன்றே.

கண்ணிய தருதற்கு ஒத்த
கற்பக தருவும் என்ன,
உண்ணிய நல்கும் செல்வம்
உறுநறும் சோலை, ஞாலம்
எண்ணிய இன்பம் அன்றித்
துன்பங்கள் இல்லையான
புண்ணியம் புரிந்தோர் வைகும்
துறக்கமே போன்றது அன்று, ஏ!

பொ :—நினைத்தவைகளைக் கொடுக்கவல்ல கற்பகமரம் போல் உண்ணத்தக்கனவாய மலர் காய்கனி கிழங்குகளை அளிக்கவல்ல, வளம் நிறைந்த மணம் வீசும் (அந்த மதங்காச்சிரமத்தின்) பூஞ்சோலை யானது, உலகத்தார் கருதுகின்ற இன்பத்தைத் தவிர (மற்ற)த் துன்பங்களே யில்லாத, நல்வினை செய்தோர் சென்று தங்கும் சுவர்க்கமே போன்றதாகும்.

கு :—நினைத்தவற்றைப் பெறுதலாலும், கற்பகம் போன்ற மரங் களையுடைமையாலும், இன்பமன்றித் துன்பம் இல்லாததாலும், நல்வினையுடையோர் உறைதலாலும் துறக்கம் போன்றிருந்தது அச்சோலை என்றவாறு. தருவும் என்பதில் உம்மை இசைநிறை; அது எச்சப்பொருளில் வந்ததாகக் கொண்டு, சந்தானம், அரிசந்தனம், மந்தாரம், பாரிசாதம் என்பவற்றைக் கொள்ளலும் ஆம். (அன்று, ஏ : ஈற்றசைகள்). (1)

3802. அன்னதா மிருக்கை நண்ணி
யாண்டுநின் றளவில் காலந்
தன்னையே நினைந்து நோற்குஞ்
சவரியைத் தலைப்பட் டன்னுட்
கின்னுரை யருளித் தீதின்
றிருந்தனை போலு மென்றான்
முன்னிவற் கிதுவென் றெண்ண
லாவதோர் மூல மில்லான்.

அன்னது ஆம் இருக்கை நண்ணி,
ஆண்டு நின்று, அளவுஇல் காலம்
தன்னையே நினைந்து நோற்கும்
சவரியைத் தலைப்பட்டு, அன்னுட்கு
இன்உரை அருளித் "தீது இன்று
இருந்தனை போலும் ?" என்றான்,
முன் இவற்கு இது என்று எண்ணல்
ஆவது ஓர் மூலம் இல்லான்.

பொ :—இவனுக்குமுன் இப்பொருள் உள்ளதென்று எண்ணக் கூடிய ஒரு முதற்பொருள் இல்லாத இராமன், அப்படிப்பட்டதான இருப்பிடத்தை அடைந்து, அங்கே யிருந்துகொண்டு அளவற்ற காலமாக(ப் பரம்பொருளாகிய) தன்னையே சிந்தித்துத் தவம் செய்து கொண்டிருக்கின்ற சவரி யென்பவளைப் பார்த்து அவளுக்கு இனிமையான சொற்களைக் கூறி, "நீ துன்பமில்லாமல் இருக்கின்றாயா ?" என்று கேட்டான்.

கு :—இதனால் இராமனே எல்லாவற்றுக்கும் மூலமான பரம் பொருள் என்பது விளங்கும். சவரியைச் சந்தித்து இராமன் அவள் நலத்தை விசாரித்தான் என்றவாறு. போலும் : அசை. (2)

3803. ஆண்டவ ளன்பி னேத்தி
யழுதிழி யருவிக் கண்ணள்
மாண்டதென் மாயப் பாசம்
வந்தது வரம்பில் காலம்

பூண்டமா தவத்தின் செல்வம்
போயது பிறவி யென்பாள்
வேண்டிய கொணர்ந்து நல்க
விருந்துசெய் திருந்த வேலே.

ஆண்டு, அவள் அன்பின் ஏத்தி,
அழுதுஇழி அருவிக் கண்ணள்,
"மாண்டது என்மாயப் பாசம்!
வந்தது வரம்புஇல் காலம்
பூண்டமா தவத்தின் செல்வம்!
போயது பிறவி!" என்பாள்,
வேண்டிய கொணர்ந்து நல்க,
விருந்து செய்து இருந்த வேலே.

பொ:—அப்பொழுது அந்தச் சவரி (இராமனை) அன்போடு துதித்து (இன்பப்பெருக்கால்) அழுது அருவிபோல் நீரைச் சொரியும் கண்களையுடையவளாய், 'எனது மாயமான உலகப்பற்று நீங்கியது. எல்லையற்ற காலமாக நான் மேற்கொண்டிருந்த பெருந்தவத்தின் பலன் கைகூடி விட்டது; பிறப்பு ஒழிந்தது' என்று சொல்லி (உண்ணுவதற்கு) வேண்டியவற்றைக் கொண்டுவந்து கொடுக்கவும், (இராமனும் இலக்குவனும் அவ்) விருந்தை (விரும்பி) உண்டு இருந்த வேளையில்.

கு:—இது முதல் மூன்று கவிகள் குளகம். (3)

3804. ஈசனுங் கமலத் தோனு
மிமையவர் யாரு மெந்தை
வாசவன் ருனு மீண்டு
வந்தனர் மகிழ்ந்து நோக்கி
யாசறு தவத்திற் கெல்லே
யணுகிய திராமற் காய
பூசனை விரும்பி யெம்பாற்
போதுதி யென்று போனர்.

"ஈசனும், கமலத் தோனும், இமையவர் யாரும், எந்தை!
வாசவன் தானும் ஈண்டு வந்தனர், மகிழ்ந்து நோக்கி,
'ஆசுஅறு தவத்திற்கு எல்லே அணுகியது; இராமற்கு ஆய
பூசனை விரும்பி, எம்பால் போதுதி' என்று போனர்."

பொ :—"என் தந்தையே! சிவபிரானும், தாமரை மலரிலுள்ளவனை பிரமனும், தேவர்கள் யாவரும், இந்திரனும் இங்கு வந்து மகிழ்ச்சியுடன் (என்னைப்) பார்த்து, 'உனது குற்றமற்ற தவத்திற்குச் சித்திபெறுங்காலம் நெருங்கிவிட்ட து. (இங்கு வரவிருக்கும்) இராமனுக்கு உரிய வழிபாடுகளை உவந்து செய்துவிட்டு எமது உலகத்துக்கு வருவாயாக' என்று சொல்லிச் சென்றார்கள்."

கு :—மதங்கரின் மாணுக்கர்கள் இவ்வாறு கூறியதாக வான்மீகத்திற் கூறப்பட்டுள்ளது. இவ்வாறு தேவர்கள் வந்து கூறியதாக இல்லை. இவ்வாறே முன் சரபங்க முனிவரிடம் இந்திரன் வந்து சொன்னதாகவும் கூறப்பட்டுள்ளது. (4)

3805. இருந்தனெ னெந்தை நீயீண்
டெய்துதி யென்னுந் தன்மை
பொருந்திட வின்று தானென்
புண்ணியம் பூத்த தென்ற
வருந்தவத் தரசி தன்னை
யன்புற நோக்கி யெங்கள்
வருந்துறு துயரம் தீர்த்தா
யம்மனை வாழி யென்றான்.

"இருந்தனென், எந்தை! நீஈண்டு எய்துதி என்னும் தன்மை
பொருந்திட ; இன்றுதான் என் புண்ணியம் பூத்தது" என்ற
அருந் தவத்து அரசி தன்னை அன்புற நோக்கி, "எங்கள்
வருந்துறு துயரம் தீர்த்தாய், அம்மனை! வாழி!" என்றான்.

பொ :—"எனது தந்தையே! இங்கு நீ வரப்போகின்றாய் என்ற நிலைமை ஏற்பட (உன் வரவு நோக்கி) இருக்கலானேன் ; இன்றுதான் என் தவத்துப் புண்ணிய பலன் மலர்ந்து பயன் அளிப்பதாயிற்று" என்று கூறிய அருமையான தவச்செல்வியாகிய அச்சவரியை (இராமன்) அன்போடு பார்த்து "தாயே! எங்களுடைய வருத்தம் மிகுந்த வழிநடைத் துன்பத்தை (நீ செய்த அன்பு விருந்தால்) அகற்றினாய் ; வாழ்வாயாக!" என்று கூறினான்.

கு :—புண்ணியம் பூத்தது என்றது இங்கே, தவம் பலித்தது என்றவாறு. 'எங்கள்' என்று தன் தம்பியையும் உளப்படுத்திக் கூறினான் இராமன் என்க. (5)

இதன்பின் சில ஏட்டுச் சுவடிகளில் பின்வரும் பாடல் ஒன்று இடைச் செருகலாகக் காணப்படுகிறது:—

3805 (a) "மாங்கனி தாழையீன்ற வாழையின் கனிக ளோடும்
ஆங்கனி யாவதீதென் றருத்திநான் விரும்பி வைத்தேன்
பாங்கினி தமுதுசெய்யு மென்றனள் பரிவினல்கும்
தேங்கனி யினிதி னுண்டு திருவுள மகிழ்ந்தான் வீரன்."

(இதற்கு வேறு நூல்களில் யாதொரு ஆதாரமும் காணப்படவில்லை.)

3806. அனகனு மிளைய கோவு
மன்றவ ணுறைந்த பின்றை
வினையறு நோன்பி னாளு
மெய்ம்மையி னோக்கி வெய்ய
துனைபரித் தேரோன் மைந்த
னிருந்தவத் துளக்கில் குன்ற
நினைவரி தாயற் கொத்த
நெறியெலா நினைந்து சொன்னாள்.

அனகனும் இளைய கோவும்
அன்று அவண் உறைந்த பின்றை,
வினை அறு நோன்பினாளும்
மெய்ம்மையின் நோக்கி, வெய்ய
துனைபரித் தேரோன் மைந்தன்
இருந்தஅத் துளக்குஇல் குன்றம்
நினைவு அரிது ஆயற்குஒத்த
நெறிஎலாம் நினைந்து சொன்னாள்.

பொ:—குற்றமற்றவனான இராமனும் தம்பியாகிய இலக்குவனும் அன்றைக்கு அவ்விடத்தில் தங்கியிருந்த பிறகு, வினைப் பயன்கள் அழிதற்குக் காரணமான தவத்தையுடையவளான அச்சவரி (இராமனை) மெய்யன்போடு பார்த்து, வெப்பமுடையவனும் விரைந்து செல்லும் குதிரை கட்டிய தேருடையவனுமான சூரியனது மகனான சுக்கிரீவன் தங்கியிருந்த அந்த ருசியமுகம் என்னும் அசைவற்ற மலையின் நினைக்க முடியாததும் ஆராயத்தக்கதுமான வழி முழுவதையும் (மறவாமல்) நினைவிருத்திச் சொன்னாள்.

கு :—அன்றவணுறைந்த பின்றை என்றது, இராமன் அன்றைப்பொழுதை அங்கேயே தங்கிக் கழித்து மீண்டும் சீதையைத் தேடப் புறப்பட்டபொழுது என்றவாறு. சுக்கிரீவன் வாழும் மலையின்கண் உள்ள வழிகள் கொடுமை மிக்கனவாதலின் அவற்றைத் தப்பாமல் நினைவுபடுத்தித் தெளிய எடுத்துச் சொன்னாள் என்றவாறு. இச்செய்தி வான்மீகத்தில் இல்லை. அங்குக் கவந்தன் இவற்றைக் கூறியதாக வுள்ளது. (6)

3807. வீட்டினுக் கமைவ தான
மெய்ந்நெறி வெளியிற் றாகக்
காட்டுறு மறிஞ ரென்ன
வன்னவள் கழறிற் றெல்லாங்
கேட்டன னென்ப மன்னோ
கேள்வியாற் செவிகண் முற்றுந்
தோட்டவ ருணர்வி னுண்ணு
மமுதத்தின் சுவையாய் நின்றான்.

வீட்டினுக்கு அமைவது ஆன
மெய்ந்நெறி வெளியிற்று ஆகக்
காட்டுறும் அறிஞர் என்ன,
அன்னவள் கழறிற்று எல்லாம்
கேட்டனன் என்ப மன்னோ,
கேள்வியால் செவிகள் முற்றும்
தோட்டவர் உணர்வின் உண்ணும்
அமுதத்தின் சுவையாய் நின்றான்.

பொ :—கேள்விகளினால் (தங்கள்) காதுகள் முழுதும் துளைக்கப்பட்டவர்களாகிய பெரியோர் (தங்கள்) அறிவினால் நுகர்கிற அமிழ்தத்தின் சுவையாயிருக்கின்றவனான இராமன், முத்தியுலகத்திற்குப் போவதற்கு உரியதான உண்மை வழியை வெளிப்படையாகத் தெரிவிக்கின்ற அறிவுடையோர் போல, அந்தச் சவரி கூறியவற்றையெல்லாம் (கூர்ந்து)கேட்டான்.

கு :—ஒரு நற்குருவானவர் தமது மாணாக்கனுக்கு முத்தி நெறியைப் போதிப்பதுபோல், சுக்கிரீவன் வாழும் மலைக்குச் செல்லும் நெறியைச் சவரி இராமனுக்கு எடுத்து உரைக்கவும், அதனை அவன் கருத்தூன்றிக் கேட்டுத் தெரிந்துகொண்டான் என்றவாறு. "கேட்பினுங் கேளாத் தகையவே கேள்வியால், தோட்கப் படாத செவி"

என்ற திருக்குறளும், "கேள்வியாவது, கேட்கப்படும் நூற்பொருள் களைக் கற்றறிந்தார் கூறக் கேட்டல்;" "மனத்தின்கண் நூற் பொருள் நுழைதற்கு வழியாக்கலின், கேள்வியைக் கருவியாக்கிக் கூறினர்; பழைய துளை துளையன்று என்பதாம்" என்ற பரிமேலழக ரின் உரை விளக்கங்களும் ஈண்டு நினைக்கத்தகும். இப்பெரிய ஞாலம் பருகுகின்ற இராமனது பரக்கும் தொல்புகழமுதுக்கும் அவ் விராமனே சுவையாயும் இருக்கின்றான் என்பதைப் பெரியோ ரிடத்துக் கேட்டறிந்த நுண்ணறிவுடையவரே தங்கள் தத்துவ ஞானத்தினுல் அப்பரம் பொருளான இராமனைப் பலபடியாலும் இன்பமுற அனுபவிப்பார் என்ற உண்மை இங்கு எடுத்துக் கூறப்பட்டது. (என்ப, மன், ஓ: அசைகள்.) (7)

3808. பின்னவ ளுழந்து பெற்ற
யோகத்தின் பெற்றி யாலே
தன்னுட றுறந்து வானந்
தனிமையி னினிது சார்ந்தா
ளன்னது கண்ட வீர
ரதிசய மளவின் றெய்திப்
பொன்னடிக் கழல்க ளார்ப்பப்
புகன்றமா நெறியிற் போனர்.

பின், அவள் உழந்து பெற்ற யோகத்தின் பெற்றியாலே
தன் உடல் துறந்து, வானம் தனிமையின் இனிது சார்ந்தாள்;
அன்னது கண்ட வீரர் அதிசயம் அளவு இன்று எய்திப்
பொன் அடிக் கழல்கள் ஆர்ப்பப் புகன்ற மா நெறியில் போனர்.

பொ :—பிறகு அந்தச் சவரி (முன்னர்) வருந்தியடைந்திருந்த தவத்தின் பயனுலே தனது உடம்பை விட்டு மேலுலகைத் தனியாக இன்பமுற அடைந்தாள்; அந்தச் செயலைப் பார்த்து நின்ற இராம இலக்குவர் மட்டுக்கடங்காத வியப்படைந்தவர்களாகி, தங்கள் கால் களிற் கட்டிய பொன்னுலான வீரக் கழல்கள் ஒலிக்கும்படி, (சவரியாற்) கூறப்பட்ட பெரிய (காட்டு) வழியிற் போனர்கள்.

கு :—இராமஇலக்குவர்க்குச் செய்யவேண்டிய அதிதிபூசையைக் குறைவறச் செய்து முடித்தபின் அவர்களின் இசைவு பெற்று நெருப் பில் உடலைத் துறந்து சவரி தன் யோக வலிமையால் முத்தியடைந் தாள் என்று வான்மீகத்திற் கூறப்பட்டுள்ளது. (8)

3809. தண்ணெனுங் கானுங் குன்று
நதிகளுந் தவிரப் போனார்
மண்ணிடை வைக ரேறும்
வரம்பிலா மாக்க ளாடக்
கண்ணிய வினைக ளென்னுங்
கட்டழல் கதுவ லாலே
புண்ணிய முருகிற் றன்ன
பம்பையாம் பொய்கை புக்கார்.

தண் எனும் கானும் குன்றும் நதிகளும் தவிரப் போனார்,
மண்ணிடை வைகல் தோறும் வரம்பு இலா மாக்கள் ஆடக்
கண்ணிய வினைகள் என்னும் கட்டழல் கதுவலாலே
புண்ணியம் உருகிற்று அன்ன பம்பை ஆம் பொய்கை புக்கார்.

பொ :—குளிர்ந்துள்ள காடுகளும் மலைகளும் ஆறுகளும் நீங்கும்படி (அவற்றைக் கடந்து) சென்றவர்களாகிய இராமஇலக்குவர், நாடோறும் உலகிலுள்ள கணக்கற்ற மக்கள் வந்து நீராடுதலினால் (அவர்களிடத்துப்) பொருந்தியுள்ள தீவினைகளாகிய பெருந் தீ வெதுப்புதலினாலே புண்ணியம் உருகினதுபோலத் தோன்றுகிற பம்பை என்னும் நீர் நிலையை அடைந்தார்கள்.

கு :—பொய்கை - மனிதராலன்றி இயற்கையாயமைந்த ஒரு நீர் நிலை. பம்பைப் பொய்கையில் நீராடுதல் புண்ணியம் என்று கருதப் பட்டதால் நாள்தோறும் ஏராளமான மக்கள் வந்து அதன்கண் நீராடுவர். அவ்விதம் நீராடுவோரின் பாவத் தீயால் புண்ணியம் உருகி அங்கு நீராய்ப் பெருகியது என இங்குத் தற்குறிப்பேற்றமாகக் கூறப்பட்டது. (9)

சவரி பிறப்பு நீங்கு படலம் முற்றிற்று

ஆரணிய காண்டம் முற்றுப் பெற்றது.

# ஒப்பு நோக்கப்பெற்ற சுவடிகளும், அச்சுப்பிரதிகளும் அவற்றின் குறியீடுகளும்

| குறி யீடு | சுவடி பெற்ற இடம் | சுவடி எண் | குறிப்பு |
|---|---|---|---|
| 1 | தஞ்சை சரஸ்வதி மகால் | 367-8 | |
| 2 | ,, | 369 | |
| 3 | ,, | 370 | |
| 4 | ,, | 371 | |
| *5 | ,, | 372 | |
| 8 | ,, | 378 | |
| 12 | மதுரைத் தமிழ்ச் சங்கம் | 30 | |
| 13 | ,, | 42 | |
| 15 | , | 471 | |
| 16 | ,, | 472 | |
| 17 | ,, | 672 | |
| 18 | ,, | 677 | |
| 19 | திரு. தெய்வசிகாமணிக் கவுண்டர், ஈரோடு. | | |
| 20 | ,, | | |
| 21 | ,, | | |
| 22 | ,, | | |
| 23 | அண்ணுமலைப் பல்கலைக் கழகம் | T.R.D.L. 1150 | |
| 24 | திரு. C. கணேசையர், யாழ்ப்பாணம். | | |
| 25 | திரு. தெய்வசிகாமணிக் கவுண்டர், ஈரோடு. | | சடாயுகாண் படலம் 31-ஆம் பாடல் வரை உள்ளது. |
| 26 | மதுரைத் தமிழ்ச் சங்கம் | 27 | |
| 27 | ,, | 28 | |

* 6, 7, 9-11, 14, 32-38, 48, 50, 51, 54-ஆம் பிரதிகளில் ஆரணிய காண்டம் இல்லை.

| குறி யீடு | சுவடி பெற்ற இடம் | சுவடி எண் | குறிப்பு |
|---|---|---|---|
| 28 | மதுரைத் தமிழ்ச் சங்கம் | 33 | |
| 29 | ,, | 41 | |
| 30 | ,, | 540 | |
| 31 | அரசாங்கக் கையெழுத்துப் புத்தகசாலை, சென்னை. | 514 | |
| 39 | மதுரைத் தமிழ்ச் சங்கம் | 40 | |
| 40 | • | | ஆழ்வார் திரிநகரி பிரதிகளின் படி பெரியன் ஸ்ரீநிவாசையங் கார் பதிப்பித்தது 1942. |
| 41 | | | வை. மு. கோபாலகிருஷ்ண மாசாரியர்உரைப்பதிப்பு.1955 |
| 42 | | | கவித்தலம் துரைசாமி மூப்பனர் பதிப்பு 1888. |
| 43 | அண்ணுமலைப் பல்கலைக் கழகம் | T.R.D.L. 1147 | |
| 44 | ,, | T.R.D.L. 1148 | |
| 45 | | | உ. வே. சாமிநாதையர் நூல் நிலையப் பதிப்பு, அடையாறு. |
| 46 | | | பூமகள் விலாசம் பதிப்பு 1928 |
| 47 | அண்ணுமலைப் பல்கலைக் கழகம் | | |
| 49 | ,, | T.R.D.L. 1149 | |
| 52 | | | மலிவுப் பதிப்பு (எஸ். ராஜம் வெளியிட்டது) 1958. |
| 53 | மதுரைத் தமிழ்ச் சங்கம் | 38 | |
| 55 | | | திரு. வேங்கடாசல முதலியார் பதிப்பு 1845. |
| 56 | திரு. சாத்தான் குட்டிப் பிள்ளை அவர்கள், தெங்கம்புதூர். | | |

## குறிப்பு

இப்பதிப்பில் மூலத்தில் எடுத்துக்கொண்ட பாடங்கள், செய்யுட்களின் தொடரெண் முறைப்படி அடிமுறையாகவும் சீர்முறையாகவும் தடித்த முதலெழுத்தோடு முன்னே காட்டப்பெற்றுள்ளன. அவற்றோடு வேறுபட்ட பாடங்கள் அவற்றின்பின் முறையே சேர்க்கப்பெற்றுள்ளன. பாடங்களின் பின்னே குறிக்கப்பட்டுள்ள எண்கள், அப்பாடங்கள் உள்ள சுவடிகளின் குறியீடுகள். 40, 41. 45 என்ற எண்கள், அக்குறியீடுள்ள அச்சுப்புத்தகங்களிலுள்ள மூலபாடங்களுக்கும், அப்புத்தகங்களில் பிரதிபேதங்களாகக் காட்டப்பட்ட பாடங்களுக்கும் உரியன. '46—' என்னும் குறியீடு, 46 என்னும் எண் இட்டுக்காட்டிய அச்சுப்புத்தகத்தோடு ஒத்த பாடம் உடைய ஏடுகளின் எண்களையும் குறிக்கும். பிழைபட்ட பாடங்களும் அவற்றைக் காட்டும் சுவடிகளின் எண்களும், சிதைந்த சுவடிகளின் எண்களும் விரிவஞ்சிக் குறிக்கப்படவில்லை.

# 3. ஆரணிய காண்டம்

## பாட வேறுபாடு

### 7. மாரீசன் வதைப் படலம்

**3164**

I இரைத்தநெடும்; 1–5, 8, 12, 13, 15–20, 22–24, 26–29, 40, 41, 43–45, 47, 49, 52, 56.
இரைக்குநெடும்; 46—
படையரக்கர்; 1–5, 8, 12, 15, 16, 19, 20, 22–24, 27–29, 31, 43–45, 49, 52–54.
பணியரக்கர்; 46—
கடலரக்கர்; 13, 17, 18, 40, 45, 56.
மறந்தனள்போர்; 12, 17, 19, 22, 41, 45, 52.
மறந்தனள்போல்; 46—
மறந்தாள்போல்; 15, 23, 28, 43, 49.
மறந்தனள்போய்; 29.

II மனங்கவற்ற; 46—
மனங்கனற்ற; 19, 22, 29.

III பேரகழித்; 46—
சூழிலங்கைத்; 45.
திருநகரில்; 15, 16, 19, 22, 24, 26, 28, 29, 44, 45.
திண்ணகரில்; 46—
தன்மை; 46—
செய்தி; 45.

IV சூர்ப்பணகை; 46—
சூர்ப்பனகை; 44.
சூர்ப்பனகி; 2–4, 12, 17, 18, 20, 23, 43, 53, 54, 56.
மன்னோ; 46—
அன்றே; 1, 2, 8, 26, 29, 44, 45.

**3165**

I நிற்பனவும்; 46
நிறைகிடந்த; 45.
நின்றனவும்; 1–5, 8, 12, 13, 15–20, 22–24, 26–29, 31, 39–41, 43–45, 47, 49, 53, 54, 56.
நடப்பனவும்; 46—
நடந்தனவும்; 1, 2, 8, 16.
கடந்தனவும்; 45.
கிடந்தனவும்; 3–5, 15, 26–28, 31, 39, 44, 45, 47.
செல்வனவும்; 45.
திரிந்தனவும்; 12, 17–20, 22–24, 29, 40, 41, 43, 45, 49, 53, 54, 56.
முதலாய; 45.
நெறியினீந்த; 46—
நெறியினீத்த; 5, 20.
நெறியினீய்ந்த; 16, 18, 19, 22, 24, 43–45, 49, 53, 54, 56.
நெறியிலீந்த; 12, 17.

II நான்முகற்கும்; 46—
நான்முகற்கு; 4, 26, 28.

வகுப்பரிது; 46—
வகுப்பரிய; 1–5, 8, 12, 15–20, 22–24, 26–29, 31, 39–41, 43–45, 47, 49, 53, 54, 56.
வகுப்பரிதாய்; 45.

நுனிப்பதொரு; 46—
நுனிப்பதரு; 41, 45.
நுனிப்பதோர்; 54.
நுனிப்பரிய; 3, 16, 45, 47.
நுனித்ததொழில்; 45.
குணிப்பதொரு; 24, 45.

வரம்பிலாற்றல்; 46—
வரம்பிலாத; 13, 15, 17, 18, 23, 24, 28, 40, 41, 43–45, 56.
வரம்பிலாதால்; 5, 27, 49.
வரம்பிலாதான்; 45.
வரம்பில்லாத; 26.

III வகையுழந்த; 46—
வகையுழந்து; 54.
வகையிழைத்த; 13, 15, 17–19, 22–24, 26, 28, 29, 40, 41, 43–45, 52, 56.
வகையுளுற்றும்; 45.
வகைபுகழ்ந்த; 49.

தருமமென; 46—
கருமமென; 27, 49.
உளத்தினிடை; 45.

நினைந்தவெலாம்; 46—
நினைந்ததெலாம்; 1, 2, 4, 8, 12, 19, 22, 24, 26, 28, 29, 41, 43, 44, 53.
நினைந்ததெல்லாம்; 3, 17,18, 20, 23, 40, 47, 49, 56.
நினைத்ததெல்லாம்; 15, 45.
உரைத்தவெலாம்; 45.

IV புலனெலாம்; 46—
புலனெல்லாம்; 20, 49.

தெரிப்பதொரு; 46—
தெரித்ததொரு; 45.
தெரிந்ததொரு; 1–5, 8, 12, 13, 16–18, 20, 22–24, 27, 29, 31, 39–41, 43, 47, 49, 54. 56.
தெரிந்தொருவு; 53.
தரித்ததொரு; 26, 44.
திரித்ததொரு; 15, 28.

மண்டபமதனில்; 46—
மண்டபமருங்கு; 15, 28.
மண்டபமென்னும்; 26, 44, 45, 54.
மண்டபந்தன்னில்; 1–5, 8, 12, 16, 19, 24, 27, 47, 53.
மண்டபத்தினிழல்; 40, 41.
மண்டபத்தினயல்; 17.
மண்டபத்து நிழல்; 18.

பொலிய; 46—
பொதுவின்; 26, 44, 45.
பொருப்பின்; 45, 54.

## 3165 (a)

II முதலாம்; 52—
முதலா; 45.

## 3166

I புலியினதள்; 46—
புலியதளின்; 45.

பொன்னுடை புனைந்தானும்; 46—
பொன்னுடையுடையானும்; 45.

பூவினுனும்; 46—
பூவிலானும்; 1–5, 8, 20, 24, 27, 44, 45, 47, 53.
பூவுளானும்; 31, 39.
பூவுளோனும்; 12, 16.

II நலியும்வலத்தாரல்லர்; 46—
நலியும்வரத்தாரல்லர்; 45.
நலியுமனத்தாரல்லர்; 45.
நலியவலத்தாரல்லர்; 5.
நலியவலித்தாரல்லர்; 27.

தேவரினிங்கியாவரினி; 46—
தேவரினில்யாவரினி; 28.
தேவரிலிங்கினியாவர்; 43, 49.
தேவரிலிங்கியாவரினி; 1–5, 8, 13, 16–20, 22, 23, 26, 27, 29, 44, 45, 47, 53, 56.

அவரென்னில்யாவரினி; 24, 45, 54.

நாட்டலாவார்; 46—
நாட்டவல்லார்; 12, 19, 20, 22, 23, 29, 43, 45, 49, 52, 56.

III மெலியுமிடை; 46—
மெலியுமிடைத்; 49.

வேயிளந்தோள்; 46—
வேயினந்தோள்; 1, 8.
வேய்பொருதோள்; 45.

IV வலியநெடும்; 46—
வலியினெடும்; 1, 2, 8, 45.

வயங்கமன்னே; 46—
வயங்குவானே; 23, 43, 49.

## 3167

I பண்டலங்கு; 46—
பண்டலங்கல்; 2, 3, 5, 15,16, 20, 24, 27, 28, 30, 31, 39, 41, 47, 54, 55, 57.
பண்டுநெடும்; 45.
வண்டலங்கல்; 1, 4, 8, 12, 19, 22, 23, 26, 29, 43–45, 53.
வண்டலங்கள்; 49.
வண்டலங்கு; 17, 18, 41, 45, 52, 56.

திசைக்களிற்றின்; 46—
திசைசுமக்கும்; 45.
திசையானே; 20.
திசையின்மிசைக்; 54.
திசையின்வயக்; 5, 15, 16, 27, 28, 30, 31, 39, 47.
நுகர்திசைய; 1, 8.
நுகர்திசையின்; 26, 44, 45.
நுதற்கிசைய; 4, 53.
நுதற்றிசைய; 17, 18, 40, 41, 45, 52, 56.
நுதற்றிசையின்; 12, 19, 22, 23, 29, 43, 45, 49.

பணைமருப்பினிணையொடியப்; 46—
களிற்றினிணைமருப்பொடியப்; 5, 15, 16, 27, 28, 54.
திசைக்களிற்றின்மருப்பொடியப்; 13, 44.
வயக்களிற்றின்பணையொடியப்; 20.
வயக்களிற்றின்மருப்பொடியப்; 1, 4, 8, 12, 17–19, 22, 23, 26, 29, 40, 41, 43, 45, 49, 52, 53, 56.

படர்ந்தபொற்றோள்; 46—
படர்ந்ததிண்டோள்; 1, 2, 8, 13, 15, 24, 26, 28, 44, 45.
அடர்த்தபொற்றோள்; 12, 17–19, 22, 23, 29, 40, 43, 45, 49, 56.

II வீங்கியோங்குதய; 46—
வீங்கிப்பொங்குதய; 22, 29.

விளங்கமீதில்; 46—
விளங்கிமீதில்; 1, 2, 8, 18.
விளங்குமீதில்; 4, 23, 26, 43.
விளங்கக்காதில்; 45.

III குண்டலங்கள்; 46—
குண்டலங்கொள்; 47.

இரவிகொழும்; 46—
இரவிகொடும்; 15, 17, 18, 26, 28, 41, 43–45, 49, 56.
இரவிநெடும்; 19, 22, 29.

IV பொலிந்தவென; 46—
பொலிந்ததென; 5, 12, 13, 16–18, 27, 29, 40, 41, 43, 45, 49, 56.
பொலிவவென; 1, 2, 8.

வயங்கமன்னே; 46—
வயங்குமன்னே; 19, 22, 23, 27, 29, 43, 56.
வயங்கமாதோ; 26, 44, 45.
வயங்குமாதோ; 24, 45.

## 3168

I முழுமணிகள்; 46—
முழுமணியின்; 1–5, 8, 12, 13, 15, 16, 19, 20, 23, 24, 26–28, 31, 39, 43–45, 47, 49, 53, 54.

முழுமதியின்; 17, 18, 22, 29, 40, 41, 56.

வயங்கொளியின்தொகை வழங்க; 46—
வயங்கொளியின்தொகை விளங்க; 12.
வயங்கொளியின்தொகை வழங்கி; 45.

வயிரக்குன்றத்; 46—
வயிரத்தூணில்; 45.

II விடவரவின்; 46—
விடவரவில்; 5, 12, 27, 43, 49.

III புடைதயங்க; 46—
புடைதயங்கு; 1–4, 8, 16, 20, 31, 39, 47, 53.

நாமநீரிலங்கையிற்ருன்; 46—
நாமநீரிலங்கையிற்றன்; 45.
நாமநீரிலங்கையின்கண்;13, 17, 18, 40, 41, 56.
நாரநீரிலங்கையிற்ருன்; 1–5, 8, 12, 16, 19, 20, 22, 24, 27, 29, 43, 45, 47, 49.

நலங்கவிட்ட; 45, 52.
வாரியிட்ட; 46—
வசமாயிட்ட; 45.

IV கிடந்தநெடும்; 46—
கிடந்ததொரு; 16.
கடந்தநெடும்; 22.
கொடுஞ்சிறையில்; 45.

சிறையன்ன; 46—
சிறையனய; 13, 15, 17, 18, 28, 40, 41, 54, 56.
கிடந்தனய; 45.

நிறையாரங்குலவ; 46—
நிறையாரங்குலாவ; 23, 43.
நிலையாரங்குலவ; 18.
நிலவாரங்குலவ; 45.
மணியாரங்குலவ; 16.

### 3168 (a)

I பரப்பினிடைப்; 52—
பரப்பினிடை; 45.

III சோதிதளைத்து; 52—
சோதிதிளைத்து; 45.

### 3169

I ஆய்வரும்; 46—
ஆயரும்; 22, 29.

ஆதியோர்; 46—
ஆதியர்; 1, 2, 8, 26, 45, 49.

II நாயகர்; 46—
நாயகன்; 13, 27, 43, 45.
நாயக; 5, 16, 45.

நளிர்மணி; 46—
நளிமணி; 16, 19, 22, 28, 45.

நண்ணலால்; 46—
நக்கலால்; 5, 27, 28, 45, 54.

III தேய்வுறத்தேய்வுறப்; 46—
தேய்வறத்தேய்வறப்; 53.

பெயர்ந்து; 46—
பெயர்ந்தும்; 24, 28, 45.

IV பொலன்கழல்; 46—
பொலங்கழல்; 47.

அடிநின்ருர்ப்பவே; 46—
அடிநின்ருர்க்கவே; 45.
அணிநின்ருர்ப்பவே; 54.
அவணின்ருர்ப்பவே; 20.
அயனின்ருர்ப்பவே; 1–5, 8, 12, 13, 15, 16, 23, 26, 28, 31, 39, 43–45, 49, 53.

### 3170

I உலகினும்; 46—
உலகினின்; 45.

முதல்வர்; 46—
முதல; 1, 2, 8, 45.

முந்தையோர்; 46—
முந்தையார்; 49.

II ஓவலருதவிய; 46—
ஓவிலருதவிய; 1, 2, 4, 8, 12, 16, 18, 26, 45, 53.
ஓய்விலருதவிய; 3, 24, 29, 45, 47.

